

# சாமவேத சங்கிதை

## பூர்வார்ச்சிகம்

## சாயண பாடியம்

காசிவாசி உயர்திரு.

**சிவானந்த யதீந்திர சுவாமிகளவர்களால்**

மொழி பெயர்க்கப்பட்டது.

மொழி பெயர்ப்பாசிரியரின் பதவுரையும்,
குறிப்புரையும் அடங்கியது.

திருவொற்றியூரான் அடிமை என்னும்

சென்னை

**த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால்**

பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

யுவ ஸூ கார்த்திகைத் திங்கள்.

**1935.**

உ

# இப்புத்தகத்தில் அடங்கியவைகள்.

உ

## சாமவேதத்தின்

20. மந்திரங்களின் அட்டவணை
21. காண்ட அட்டவணை

(நூல்)

22. ஆக்கினேய காண்டம்
23. ஐந்திர காண்டம்
24. பவமான காண்டம்
25. ஆரண்ய காண்டம்
26 மகாநாம்நியார்ச்சிகம்.




சாமவேதமூர்த்தி.

नीलोत्पलदलाभासः सामवेदो हयाननः ।

अक्षमालान्वितो दक्षे वामे कम्बुधरः स्मृतः ॥




வேத மொழிபெயர்ப்பாசிரியர்.

वेदानां द्राविड भाष्य कर्त्तारः वेद वेदाङ्ग पारगाः,

काशि निवासि श्री १०८, शिवानन्द यतीन्द्र स्वामिनः

SOLDEN & CO., MADRAS.

உ

சிவ குகமயம்.

செந்திநாயகன் றுணை.

வேத மொழிபெயர்ப்பாசிரியர்

# காசிவாசி - ஸ்ரீமத் சிவானந்த யதீந்திர சுவாமிக ளவர்கள்

# சரித்திரச் சுருக்கம்.

இது ஸ்ரீ சு. அ. இராமசுவாமி அவர்களால் இயற்றப்பெற்றது.

திங்கள் செஞ்சடை சேர்த்திடு தம்பிரா னருளினாற் செழித்தே
யங்கண் மாவுல கத்தினி லண்டர்த மூலகென வவிரு
மெங்கண் மாபுகழ்ப் பாரத கண்டமா மினியநல் லுலகிற்
பொங்கு சோழமண் டலவள மோதுதல் புலவர்க்கு மரிதால். (1)

வெண்மை யாகிய நிறமுடை மேதகு முகிற்குழாம் விரைந்து
தண்மை யோடுபன் னலமுடைச் சாகர நீரினை யள்ளி
யுண்மை சேருல கிற்குநல் லுதவியை நெஞ்சினி லுன்னித்
திண்மை யாகிய குடகுமா மலையெனுஞ் சிலைதனைச் சேர்ந்து. (2)

தூய தாம்பர ஞானநற் பொருளெனத் தொல்லுல கோர்க
ளாய நின்றிடு மண்ணலை மஞ்சன மாட்டுதல் கடுப்ப
மேய வம்மலை தன்னிலே யமலைகண் மிகவுமே யோங்க
வேய தண்புனல் சிந்திட வந்தநல் லினியபே ரமிழ்தம். (3)

ஒன்ற தாய்த்திரண் டொருதிருக் காவிரிப் பெயர்தனை யுற்று
நின்ற மாவுல கிதுபெரு நீள்வள மடைந்திட நினைத்து
வென்ற மாபுலன் விரதிய ராதியோர் விரும்பியே மகிழ
நன்ற தாய்வரு நதியெனுங் காவிரி வளந்தனை நாடில். (4)

பொருந்து மந்நதி யாகிய பூவையாங் காவிரிப் பாவை
திருந்து மிவ்வுல கத்துள சீருடைத் தன்றிரு மக்க
ளருந்து பேரமு தாகிய வற்புத நீரெனு மமிழ்தை
விருந்தெ னும்படி விளங்கிட வெங்கணுந் தேக்கியே விரைந்து. (5)

## வேறு.

ஏயதிருத் தேவார மியம்புமொரு நூற்றினுட
னாயவொரு தொண்ணூறு மடைவாகப் பெற்றுநலை
மேயதிருச் சோழ மண்டலமா மேதினியி
னேயமுடன் சென்றங்கு நீரைப் பாப்பியரோ. (6)

புனஞ் டெனப்புகழ்ந்து புலவர்களும் போற்றிசெய
வனநா டெனநவின்றே யறிஞர்களும் வாழ்த்திடநற்
கனமா கியபெருமை கருதி யளித்ததற்பி
னனமேந் தியகரத்தோ டழகு மிளிர்ந்திடவே. (7)

நாடு செழிப்படைய நகரஞ் சிறப்படைய
வீடுதனை விரும்பும் விரகர் களிப்படைய
வோடித்தன் னயகனு மூவரிதனைச் சேர்ந்து
கூடிக் களிக்கின்ற கொழுஞ்சோழ வளநாடு. (8)

மண்ணிற் பிறந்தார்கண் மறித்தும் பிறவாம
னண்ணப் பெருவீடு நனியளிக்கு மாரூரு
மண்ண னடராச னனுதினமு நடஞ்செய்ய
நண்ணு புகழ்த்தில்லை நகருமுடைப் பெருநாடு. (9)

கோழிக் கொடிக்குமரன் கூறுமவ தாரமெனும்
வாழி திருஞான வள்ளல் திருச் சம்பந்த
ஞழிப் பெரும்புவியி லடைந்து வளர்ந்ததிருக்
காழிப் பதிதனையுங் கண்கண்ட புகழ்நாடு. (10)

கறுத்து விளங்குதிருக் கண்டமுடைச் சிவனுருக்
கறுத்துக் கறிசமைத்தே யரியதிருக் குழந்தைதனைப்
பொறுத்துப் படைத்தளித்துப் புகழைமிகப் பெற்றதிருச்
சிறுத்தொண்ட ரெனுமரிய சிவபத்தர் வருநாடு. (11)

தாவிலர சாட்சிமிகத் தான்பிழையாய்ப் போகுமென
வாவினொரு கன்றிற்கா வருமையுடைக் கான்முளையை
வீவா யெனவாழி விட்டமனு நீதியெனுங்
கோவினர சாட்சிதனைக் கொண்டநல நாடு. (12)

சுந்தரனென் றேதுமொரு தொண்ட னியம்பியநற்
செந்தமிழின் பாவிற்காச் செப்புநிசிப் போதினிலே
யிந்தணிந்த வீச னியம்பு பாவைமனை
யந்தூது வந்தநல வரிய திருநாடு. (13)

## வேறு.

கந்தப் பொழில்கண் மிகமலிந்து கவினுற் றிலமை பெற்றதெனு
மிந்தத் திருநா டிதனிடையே யிலங்கு மறைகள் போற்றிமிக
வந்தச் சிவனுர் தனதருளை யடைந்து மகிழ்ந்த பெருமையுடை
யந்த மறைசை நகர்ப்பெருமை யறைதற் கியாவர் வல்லாரே. (14)

ஆதி சேது வென்றெடுத்தே யறையும் பெருமை மிகவுடைய
சோதி சேது வீதாகுஞ் சொலுமப் பாலே பலநூலு
மோதும் பெற்றி தனையுடைய வுயர்ந்த மறைகள் போற்றியபின்
பாதி மறைசைப் போதனைப் பாரின் மிசையே பகருவரால். (15)

செப்பு புகழா ரப்பாவர் தெரிசித் தேத்த வெப்படியுந்
தப்பில் கபாடந் திறக்கவெனத் தரணி புகழுந் தேவார
மொப்பில் பெருமை யுடையதா யுரைக்கத் திறந்த பெருமையுட
னப்பாற் காழிச் சம்பந்த னடைத்த சீரு மிங்குளதால். (16)

மன்னும் புகழ்சேர் மதுரைநகர் மாறன் சமண னாகினு
னின்னே யீங்கு போந்தெமது வின்னல் தன்னைக் களையென்று
மன்னன் றேவி விடுத்த தொண்டர் மாசில் புகழ்சேர் சீகாழி
மன்னன் றன்னைக் கண்டுகுறை வலிந்து கூறுந் தலமுமிதால். (17)

கூடன் மேவுங் குழகனெனுங் கொற்றச் சோம சுந்தரன்ற
னாட லெல்லா மிகவிரித்து வழகு மிகவே செய்யுடனாற்
பாடல் செய்த பரஞ்சோதி முனிவ னென்னும் பரந்தபுகழ்
சூடல் செய்த புலவனவன் றோன்றுந் தலமு மீதாமால். (18)

குறைத வில்லாப் புகழிங்ஙன் கூறற் கரிதா யெந்நாளு
நிறைத லோடு நின்றிடுமிந் நீண்ட மறைசைப் பெருமைதனைப்
பறைத வியார்க்கு மரிதாகும் பாரின் மிசையே மிகச்சிறந்தோ
ருறைத றானு மீண்டென்று வுரைத்த லென்று முண்மையரோ. (19)

## வேறு.

இப்பெரும் புகழ்க ளெல்லா மிலங்குமிம் மறைசை யென்னு
மொப்பிலாத் தலத்தின் பாங்க ரொளிர்வதா முயர்ச்சி யாய
வெப்பெரு நலங்க டாமு மினிதொளிர் பெருமை வாய்ந்து
செப்பிடு மாயக் காரன் புலமெனுஞ் சீரூர் தானே. (20)

மொழிந்தவிவ் வாயக் காரன் புலமெனு மூதூர் தன்னிற்
பழந்தமிழ் வாண ரென்று பாரெலாங் கூற நிற்க
மொழிந்திடு மூவேந் தர்தம் முதற்குடி தன்னிற் றோன்றி
யிழந்திடா தவர்த மக்கு வினியபே ரரசு தந்த. (21)

வீரரென் றுரைக்க நிற்கும் விறன்மிகு குடியா மிக்தைச்
சீரிய வறிஞர் தாமுஞ் செப்புவர் சிறப்ப தாக
வாரியர் பகுப்பாற் றோன்ற வகமுடை யார்க ளென்று
பூரிய மிவர்க ளின்றேற் போனது தெரியா தன்றே. (22)

இங்கிவர் குலமே யிந்திர குலமென விசைப்பர் மேலோ
ரெங்கிவர் பெருமை தன்னை யானெடுத் தியம்ப லாகுஞ்
சங்கநா றம்மைப் பார்ப்பிற் சதுருடை யறிஞர் தாமுந்
துங்கமாய்க் கூறி யுள்ள தொடர்பெலா மறிய லாமால். (23)

உரைத்தவிப் பெருமை மிக்க வுயர்பெருங் குடியிற் றானு
நரைத்தவெள் விடையி லேறு நலமலி சிவனார் பாத
முரைத்திடு மொருவன் வந்தா னுலகின ரவன்றன் பேரா
யருத்தியாய்ச் சாமித் தேவ ரென்றுதா னறைகு வாரால். (24)

புனனு டெனப்புகழ்ந்து புலவர்களும் போற்றிசெய
வனநா டெனநவின்றே யறிஞர்களும் வாழ்த்திடநற்
கனமா கியபெருமை கருதி யளித்ததற்பி
னனமேந் தியகரத்தோ டழகு மிளிர்ந்திடவே. (7)

நாடு செழிப்படைய நகரஞ் சிறப்படைய
வீடுதனை விரும்பும் விரகர் களிப்படைய
வோடித்தன் ஞயகனு மூவரிதனைச் சேர்ந்து
கூடிக் களிக்கின்ற கொழுஞ்சோழ வளநாடு. (8)

மண்ணிற் பிறந்தார்கண் மறித்தும் பிறவாம
னண்ணப் பெருவீடு நனியளிக்கு மாரூரு
மண்ண னடராச னனுதினமு நடஞ்செய்ய
நண்ணு புகழ்த்தில்லை நகருமுடைப் பெருநாடு. (9)

கோழிக் கொடிக்குமரன் கூறுமவ தாரமெனும்
வாழி திருஞான வள்ளல் திருச் சம்பந்த
ஞழிப் பெரும்புவியி லடைந்து வளர்ந்ததிருக்
காழிப் பதிதனையுங் கண்கண்ட புகழ்நாடு. (10)

கறுத்து விளங்குதிருக் கண்டமுடைச் சிவனுருக்
கறுத்துக் கறிசமைத்தே யரியதிருக் குழந்தைதனைப்
பொறுத்துப் படைத்தளித்துப் புகழைமிகப் பெற்றதிருச
சிறுத்தொண்ட ரெனுமரிய சிவபத்தர் வருநாடு. (11)

தாவிலா சாட்சிமிகத் தான்பிழையாய்ப் போகுமென
வாவினொரு கன்றிற்கா வருமையுடைக் கான்முளையை
வீவா யெனவாழி விட்டமனு நீதியெனுங்
கோவினா சாட்சிதனைக் கொண்டநல நாடு. (12)

சுந்தரனென் றோதுமொரு தொண்ட னியம்பியநற்
செந்தமிழின் பாவிற்காச் செப்புநிசிப் போதினிலே
யிந்தணிந்த வீச னியம்பு பரவைமனை
யந்தூது வந்தநல வரிய திருநாடு. (13)

## வேறு.

கந்தப் பொழில்கண் மிகமலிந்து கவினுற் றலைமை பெற்றதெனு
மிந்தத் திருநா டிதனிடையே யிலங்கு மறைகள் போற்றிமிக
வந்தச் சிவனார் தனதருளை யடைந்து மகிழ்ந்த பெருமையுடை
யந்த மறைசை நகர்ப்பெருமை யறைதற் கியாவர் வல்லாரே. (14)

ஆதி சேது வென்றெடுத்தே யறையும் பெருமை மிகவுடைய
சோதி சேது வீதாகுஞ் சொலுமப் பாலே பலநூலு
மோதும் பெற்றி தனையுடைய வுயர்ந்த மறைகள் போற்றியபின்
பாதி மறைசைப் பேரதனைப் பாரின் மிசையே பகருவரால். (15)

செப்பு புகழா ரப்பரவர் தெரிசித் தேத்த வெப்படியுந்
தப்பில் கபாடந் திறக்கவெனத் தாணி புகழுந் தேவார
மொப்பில் பெருமை யுடையதா யுரைக்கத் திறந்த பெருமையுட
னப்பாற் காழிச் சம்பந்த னடைத்த சீரு மிங்குளதால். (16)

மன்னும் புகழ்சேர் மதுரைநகர் மாறன் சமண ரூகினு
னின்னே யீங்கு போந்தெமது வின்னல் தன்னைக் களையென்று
மன்னன் றேவி விடுத்த தொண்டர் மாசில் புகழ்சேர் சீகாழி
மன்னன் றன்னைக் கண்டுகுறை வலிந்து கூறுந் தலமுமிதால். (17)

கூடன் மேவுங் குழகனெனுங் கொற்றச் சோம சுந்தரன்ற
ளுட லெல்லா மிகவிரித்து வழகு மிகவே செய்யுடனூற்
பாடல் செய்த பாஞ்சோதி முனிவ னென்னும் பரந்தபுகழ்
சூடல் செய்த புலவனவன் றோன்றுந் தலமு மீதாமால். (18)

குறைத வில்லாப் புகழிங்ஙன் கூறற் கரிதா யெந்நாளு
நிறைத லோடு நின்றிடுமிந் நீண்ட மறைசைப் பெருமைதனைப்
பறைத வியார்க்கு மரிதாகும் பாரின் மிசையே மிகச்சிறந்தோ
ருறைத ரூனு மீண்டென்று வுரைத்த லென்று முண்மையரோ. (19)

## வேறு.

இப்பெரும் புகழ்க ளெல்லா மிலங்குமிம் மறைசை யென்னு
மொப்பிலாத் தலத்தின் பாங்க ரொளிர்வதா முயர்ச்சி யாய
வெப்பெரு நலங்க டாமு மினிதொளிர் பெருமை வாய்ந்து
செப்பிடு மாயக் காரன் புலமெனுஞ் சீரூர் தானே. (20)

மொழிந்தவிவ் வாயக் காரன் புலமெனு மூதூர் தன்னிற்
பழந்தமிழ் வாண ரென்று பாரெலாங் கூறு நிற்க
மொழிந்திடு மூவேந் தர்தம் முதற்குடி தன்னிற் றோன்றி
யிழந்திடா தவர்த மக்கு வினியபே ராசு தந்த. (21)

வீரரென் றுரைக்க நிற்கும் விறன்மிகு குடியா மிஃதைச்
சீரிய வறிஞர் தாமுஞ் செப்புவர் சிறப்ப தாக
வாரியர் பகுப்பாற் றோன்று வகமுடை யார்க ளென்று
பூரிய மிவர்க ளின்றேற் போனது தெரியா தன்றே. (22)

இங்கிவர் குலமே யிந்திர குலமென விசைப்பர் மேலோ
ரெங்கிவர் பெருமை தன்னை யாரெடுத் தியம்ப லாகுஞ்
சங்கநூ றம்மைப் பார்ப்பிற் சதுருடை யறிஞர் தாமுந்
துங்கமாய்க் கூறி யுள்ள தொடர்பெலா மறிய லாமால். (23)

உரைத்தவிப் பெருமை மிக்க வுயர்பெருங் குடியிற் றூனு
நரைத்தவெள் விடையி லேறு நலமலி சிவனூர் பாத
முரைத்திடு மொருவன் வந்தா னுலகின ரவன்றன் பேரா
யருத்தியாய்ச் சாமித் தேவ ரென்றுதா னறைகு வாரால். (24)

சாமியென் றுரைக்கு மந்தச் சற்குண வான்ற னக்குக்
காமிய வில்வாழ்க் கைக்குக் காரிகை யொருத்தி வந்தாள்
பூமியிற் சிறந்து வாழும் பூவையர்க் கரசி போல்வா
ணேமிகொ ளீசன் றேவி நேரென வழகான் மிக்காள். (25)

இன்னவ டானு நாளு மியம்பிடும் வார்த்தை யெல்லாங்
கன்னலே யென்னு மாறு கழறிடுஞ் சிறப்பு வாய்ந்தோ
ளன்னதாந் தன்மை யாலே யவள்பெறு நாமந் தானு
மன்னிடு மதுரம் மாளென் காரண மாயிற் றன்றே. (26)

நம்மையா ளிறைவன் பாத நாண்மலர் தனையும் போற்றி
யம்மனைக் கிழத்தி யோடு மாகுமில் வாழ்க்கை தன்னை
யிம்மியுங் கோணு தென்று மியல்புட னியற்றிக் கொண்டு
செம்மையா யுலகோர் போற்றச் சீருடன் வாழ்ந்து நின்றான். (27)

மதுரம்மா ளென்னு மந்த மாதுடன் வாழு நாளில்
விதுவணி யீச னார்தம் விளங்கிடு கருணை யாலே
புதல்வரோ ரைவர் வந்தார் புத்திரச் செல்வ மாக
மதுமொழி வாய்ந்தி ரண்டு மங்கையர் தாமும் வந்தார். (28)

பின்னரச் சாமி யென்னும் பெரியவன் பேணியே தான்
முன்னர்செய் தவத்தி னாலு முத்தமிழ் நாட்டோர் செய்த
மன்னிய தருமத் தாலு மைந்தன்றா னொருவன் வந்தா
னன்னவன் றன்னைக் கண்டே யனைவரு முவகை பூத்தார். (29)

இறுதியில் வந்த பால னிலங்கிடு வகையைக் கண்டு
செறிதலா மன்பி னோடு சீர்பெற வளர்த்துப் பின்ன
ருறுதியாங் கல்வி தன்னை யுதவென வுபாத்தி தன்பாற்
குறுகிடச் செய்திட் டார்கள் குமானுஞ் சின்னா டன்னில். (30)

பள்ளியிற் பயிலும் வித்தை பாங்குடன் கற்று மேலோ
ரெள்ளிடு நடத்தை யில்லா தினிதுட னிருக்குங் காலை
யொள்ளிய வறிவான் மிகவு முயர்ந்திடு மிராமை யப்பேர்
கொள்ளொரு துறவோ னந்தக் குமானைக் கொண்டு சென்றான். (31)

தமர்தனை விட்டுச் சென்று தவநெறி யோர்பாற் சேர்ந்த
குமரனப் பெரியோன் பாலுங் கூறிடு மறிஞர் பாலுந்
தமிழ்மொழி நூல்க டம்மைச் சண்முக னருளால் யாருஞ்
சமமிலை யென்னக் கற்றுத் தமிழ்மொழி யறிஞ னானான். (32)

## வேறு.

கலைகடனின் மிகச்சிறந்த கவனமுடை யின்னவன்றான் கருதிப் பின்னர்
மலைமகளை யொருபாகம் வைத்தருளுஞ் சிவபெருமான் வயங்கி யோங்க
வலைமகடன் னருள்காட்டு மரும்பதியா மகிலத்திற் சிறப்பு வாய்ந்து
குலைமிருத்துத் தெங்காடக் குயில்பாடுங் கோயிலூர் குறுகி னானே. (33)

ஆங்கணுள திருமடத்தி லற்புதசிற் கோலமுட னவிர்ந்து நின்று
வோங்கிநெற் கருணை தனி லுலகமதி லொருவனென வுயர்ந்து நாளும்
வீங்கியபொற் புகழோடு விளங்குதிரு வீரசே கரனென் றேத்தும்
பாங்குபெறு மொருஞான பண்டிதனும் பெரியோனைப் பணிந்து கண்டு. (34)

பேர்படைத்த வன்னவன்றன் பெற்றிமிக்க திருவடியைப் பெரிது போற்றிச்
சீர்படைத்த செகதலத்திற் பேரருள்சேர் மகிமைதனிற் சிறந்து மேலாங்
கார்படைத்த திருவருளோய்! கழனல்கி யருள்கவெனக் கசிந்து போற்றி
யேர்படைத்த வவன்றனை யினிதுபணிந் துருகியே யெழுந்து நின்றான். (35)

நின்றவனைத் தன்னிருகண் ணிறைந்தபெருங் கருணைமிக நிலவப் பார்த்து
நன்றஞ்சே லுன்பிறவி நலிந்திடயா நல்கிடுவோ மருந்த தான
வொன்றென்று கூறியவ னுறுபிறப்பாம் பெருநோயை யொழிக்க நாளும்
வென்றபுகழ் வித்தையெலாம் விளங்கவவற் கினிமையுடன் விரித்திட் டானால். (36)

உய்வதற்காம் வழியான வொப்பில்பெரு நூலெல்லா மோர்ந்த பின்னர்ச்
சைவமுத னூல்களையுஞ் சாற்றுமியல் பறிந்திடவே சதுராய்க் கற்றுத்
தெய்வமெனுங் கந்தனது சேவடியு மெக்காலுஞ் சிந்தை கொண்டு
பொய்வருமிவ் வுலகடையப் புரிகரும மெல்லாமும் போக்கி னானால். (37)

பின்னரவன் றென்மொழியைப் பீடுபெற நன்கியாம் பெரிது கற்றோ
முன்னுபுகழ் வடமொழியு மோர்ந்திடுத னல்லதென வுளத்திற் கொண்டு
மன்னுபுகழ்க் குருநாதன் மலரடியைப் போற்றியந்த வகையுங் கூறி
யன்னவன்ற னுத்திரவு பெற்றிந்த வகிலத்திற் பெருமை வாய்ந்த. (38)

காசியெனும் பெரும்பதியைக் கருத்தினுட னெய்தியங்குக் காணு நின்ற
மாசில்புகழ் விசுவநா தப்பெருமான் மலரடியை மகிழ்ந்து போற்றித்
தேசுடைஞா னனந்தத் தேசிகன்பாற் றிகழ்மகிமை வாய்ந்த தான
வேசலிலாப் புகழ்தருநல் லிலிங்கசந் நியாசத்தை யினிது பெற்று. (39)

செம்மைமிகு தன்னுடைய சிறந்தமதி நலத்தாலே சின்னா டன்னி
லம்மொழியி லிருந்திட்ட வருமைமிகு நூலெல்லா மருத்தி யோடு
மிம்மைக்கு மறுமைக்கு மெம்மைக்கு மினிதாகு மென்று போற்றிக்
கொம்மையுடன் விரைவினிலே கொண்டிட்டா னொருசிறிதுங் குறைவில் லாமல்.

தென்மொழியி னிலக்கணமுஞ் செப்புபிற நூல்களையுந் தேர்ந்த தானு
நன்மையருள் சித்தாந்த நன்னூலும் வேதாந்த ஞான நூலுந்
தன்மையுடன் கற்றவையிற் றாணிதனி லொளிருகிற தகுதி யானும்
வன்மையுடை யிருமொழியும் வல்லனென வுலகமதில் வந்திட் டானால். (41)

## வேறு.

நல்வழி தன்னையே நாடி நாளுந்தான்
கல்வியை யிங்ஙனங் கனிந்து கற்றவன்
பல்வழி கல்வியைப் பயன்ப டுத்தினன்
சொல்வழி யிவனிடந் தோய்ந்துகற் றார்பலர். (42)

காதலைக் கல்வியிற் காட்டி ஞர்தமை
யோதலைச் செய்ம்மினென் றுரைத்துக் கல்வியை
யீதலைச் செய்தவ ரினிதி லங்கவே
மாதரு மத்தினை மகியிற் செய்திட்டான். (43)

தன்குரு நாதனுக் தாவின் மாபுகழ்
நன்கமை வீரமா ஞான தேசிகன்
பொன்புக ழோடிரும் புவியில் வாழ்ந்ததை
யின்புட னெங்குமே யினிது கேட்டரோ. (44)

பாரமர் மக்கடாம் பயனை நாடியே
யாரண மாமென வரிது போற்றிட
வீரமா தவனது விறற்பு ராணமாய்ச்
சீரமை கவியினிற் செய்து வைத்தனன். (45)

பற்பல நூல்கடாம் பாரிற் செய்தவ
னிற்பதோ ரிடமென நிலையி லாமலே
பற்பல விடங்களும் படர்ந்து சென்றவண்
தற்பதி லாசையைக் காட்டி னுர்க்கெலாம். (46)

எழுமையு மின்பரு ளினிய வித்தையைக்
கெழுமிய வன்புடன் கேட்க வீந்துதான்
விழுமிய நற்புகழ் விளங்கு சென்னையை
முழுமுத லருளினுன் முடிவி லுற்றனன். (47)

சென்னைமா நகர்தனைச் சேர்ந்த மாதவன்
முன்னையூ ழென்பது முனைந்து கூட்டலா
லன்னையா மென்றுதா னரும் போற்றிட
வுன்னிடு தண்ணளி யுயர்ந்து நிற்பவன். (48)

முத்தவா னந்தனு முதல்வன் சொற்படி
யித்தரை தன்னிலே யினிது நாகர
மெத்தவும் பரவியே விளங்கு மாறுதான்
வித்தியா சாலையை விரைந்து கண்டவன். (49)

அராமதி சூடிடு மண்ணற் போற்றுவோன்
றராமலி கீர்த்தியான் றரணி யோரெலாம்
இராமசா மியென வியம்பு மாறுதான்
வருமொரு வள்ளலு மகிழ்ந்து கண்டனன். (50)

கண்டவன் றன்னையக் கருணை யாளன்றுன்
மண்டிய வன்புடன் மதித்துப் போற்றியே
மிண்டிய மாபுகழ் விளங்கு வேதத்தைக்
கண்டிடு செந்தமிழ்க் கலையி லென்னவே. (51)

செங்கல்வ ராயன்றன் சிறந்த தோட்டத்திற்
கங்கலில் வேண்டிய கடனெ லாமளித்
திங்கிருந் தப்பணி யியற்று வாயென
வங்கவன் றங்கியே வமர்ந்து நின்றரோ. (52)

தவப்பிர காசத்திற் றனக்கு நேரிலாச்
சிவப்பிர காசனுர் சிறந்த காதையை
நவப்பொலி வோங்கிட நன்கு செய்துமே
வுவப்புட னிந்தமா வுலகிற் கீந்தனன். (53)

வச்சிர சூசிகை வாய்ந்த பேர்கொளு
மெச்சுப நிடதமும் விரைந்து செந்தமி
ழுச்சியாம் பாஷையி லொளிரப் பேர்த்ததை
யச்சினி லிட்டுல கிற்க ளித்தனன். (54)

சங்கர மாதவன் சரிதந் தன்னையு
மிங்கித மாய்மொழி யினிது பேர்த்ததை
யெங்குமே யோங்கிட இராம சாமிப்பேர்
தங்கியோ னுதவியா லச்சிற் சார்த்தினுன். (55)

வேறு.

இப்படிப் பலவா நூல்க ளினிதுட னியற்றிக் கொண்டே
யொப்பிலாப் புகழ்சே ரீச னுலகினர்க் களித்து வைத்த
செப்பரு மகிமை வாய்ந்த சிறப்புடை வேதந் தன்னைத்
தப்பறத் தமிழி லேதான் றகவுடன் மொழிபெ யர்த்தான். (56)

காழியில் வந்திட் டோனுங் கவின்பெறு மொருவ னோடு
மாழியிற் கல்லே தெப்ப மாய்க்கரை வந்திட் டோன்றான்
யாழினைப் பழித்த சொல்லி யாரது நாத னை
வாழியவ் வீசன் றன்னை வளமுடன் காண்க வென்று. (57)

மறைகளாற் சாத்தப் பட்ட மாண்பமை கபாடந் தன்னைத்
திறந்திடச் செய்த தான சீர்கெழு செயலே போலம்
மறைப்பொரு ளானைக் காண்பான் மாபுகழ் வேதந் தன்னைச்
சிறந்தநல் விராம னோடுஞ் சேர்ந்துமே திறந்திட் டானல். (58)

வேதமே தமிழி லிந்நாள் விளங்கிட வந்த தாலே
பூதல முள்ளோர் வேதப் பொருடனை யறிந்து நாளும்
வேதத்தைத் தந்தாட் கொண்ட விமலனும் பெருமை வாய்ந்த
மாதுமை யீச னுர்தம் மலரடி வழுத்து வாரால். (59)

கடல்புடை சூழு மிந்தக் காசினி தன்னி லோங்கு
மடைவுள வேத நூலை யனைவரு மறித லாலே
விடையிவர் சிவனுர் செய்ய விழுமிய தன்மை யெல்லாந்
தடையிலா தறிந்து நல்ல தனிச்சிறப் பெய்து வாரால். (60)

*கலியையா யிரத்தி னேடு கழறுமுப் பத்தா ருண்டின்*
*மலிபுகழ் வயங்கு சாம மறைதனை வெளியாச் செய்தா*
*ஹெலிகடல் சூழு மிந்த வுலகினிற் சிவானந் தப்போர்*
*பொலிவுடன் பெற்ற ஞான புங்கவன் றூனு மாதோ.* (61)

*வேதத்தைத் தமிழிற் செய்த வித்தக ஞகி நிற்கும்*
*போதமார் சிவானந் தப்பேர் பூண்டவ னினிது வாழி*
*நாதனு மொற்றி யானை நனிபணி இராமன் வாழி*
*மாதுமை யீச னிந்த மகிதல மெல்லாம் வாழி.* (62)

வேத மொழிபெயர்ப்பாசிரியரின் சரித்திரச் சுருக்கம்

*முற்றிற்று.*





திருவொற்றியூரான் அடிமை

சென்னை த. ப. இராமசாமிப்பிள்ளையவர்கள்.

श्री बन्धकपुरेश्वरपादपद्मबद्धचित्तभक्तः

श्री. त. प. रामस्वामि नामालंकृत महाशयः, मद्रपुरि.

உ

சிவகுகமயம்.

செந்திநாயகன் றுணை.

வேதத்தை மொழிபெயர்க்கச்செய்து வெளியிட்ட

## ஸ்ரீமான் த. ப. இராமசாமிப் பிள்ளையவர்கள்

# சரித்திரச் சுருக்கம்.

---

இது ஸ்ரீ சு. அ. இராமசுவாமி அவர்களால் இயற்றப்பெற்றது.

---

குஞ்சர வானனக் குருந்தை யீன்றருள்
செஞ்சடை வானவன் சிறந்து மேவலா
லஞ்சக தலத்தினி லழகு மிக்கது
விஞ்சிய புகழ்மிக விளங்கி நாளுந்தான். 1

பன்ன லந்திகழ் பரத கண்டத்திற்
கன்ன லம்மொழிக் கன்னி மாதர்கண்
மன்னி வாழ்தலான் மகிமை யோங்கிடு
மன்னன் சோழன்சீர் மாசில் நாடரோ. 2

இந்த நாட்டினி லிலங்கு வளனெலா
முந்தி நான்சில மொழிந்தன போகவே
யந்த மின்றியே யாகிடு மாட்சியிற்
பிந்தி நின்றதிற் சிற்சில பேசுவேன். 3

செக்கர் மேனியஞ் சிவபி ரான்றனை
மிக்க வேபுகழ் மேன்மை வாய்ந்துத
மொக்க யாருமிவ் வுலகி லில்லெனத்
தக்க மாதவர் தழைத்த நாடிதே. 4

குண்டைநெற் குவையெலாங் கூறு பூதங்கண்
மண்டியே நம்பிக்கு வாரிச் சேர்த்திடப்
பண்டிட மாயதிப் பரந்த நாட்டிடைக்
கண்டிட லாகுமாற் கமலை யென்றரோ. 5

ஈசற்கா நெல்தனை யெடுத்து மாந்திய
நேசமார் சுற்றத்தை நினைத்தி டாமலா
வேசமாய் வாளினல் வீசிக் கொன்றிடு
மாசில்கோட் புலியவர் வாழ்ந்த நாடிதே. 6

மாறனூர் யாகத்தின் மலைகொள் வில்லிதான்
கூறிடும் வேதத்தைக் குக்க லாக்கியே
பேறுடைத் தேவர்கள் பின்றொ டார்ந்திட
வீறுடன் வந்ததும் விளம்பிந் நாட்டரோ. 7

சோழன்ற னாட்டது தொல்சி றப்பெலா
மாழி சேர்புண லளவின் மிக்கது
வாழியம் மாட்சியை வருத்துக் கூறிடிற்
பாழியம் புராணமாய்ப் படர்ந்து போகுமால். 8

## வேறு.

இந்நல நாட்டினிடை யிலங்குமெழி றனிற்சிறந்தே
யந்தமுள பதியொன்று வமைந்துநனி விளங்கிடுமா
லுந்துபுக ழுலகோர்க ளுரைப்பரதன் பேரதனைத்
தந்தியுரிக் கடவுளுறை தஞ்சைநக ரெனப்புகழ்ந்தே. 9

தஞ்சனெனு மசுரனவன் றழைத்திருந்த தன்மையினாற்
றஞ்சாவூ ரெனுநாமந் தரணிதனிற் றனவிரு
மிஞ்சுபுக ழிந்நகரின் மேன்மையெலாங் கூறுதற்கு
வஞ்சுவனாற் பணிகளுடை யரசனவன் றானுமரோ. 10

விரிந்தபுகழ்த் தஞ்சையுடன் விளங்குமொரு தலமாகும்
பரந்தசிறப் பதனாலே பாருறைவோ ரநுதினமுஞ்
சொரிந்துமலர் பணிந்தேத்தத் துங்கமதிக் கடவுளுறை
கருந்திட்டைக் குடியென்னுங் கனமிருந்த பதியதுவும். 11

பணியணிவோ னுமையோடு பரிந்தமரு மித்தலமே
மணிமுத்த நதியென்னும் வடவாறோர் புடைசெல்ல
வணிமிக்க விண்ணாறு மடுத்தொருபாற் செலுமிதன்சீ
ரெணிமிக்க வியம்புதரு னெவர்க்குமரி தாகிடுமால். 12

சந்திரசூ ரியர்க்கிருந்த சாபமதுந் தானகலக்
கந்தவே டந்தையவன் கருணைதனைப் புரிந்ததுவு
மந்தமினற் புகழோடு மவிர்ந்துநனி விளம்பவரு
மிந்நல தலமேயென் றியம்புவரா லறிந்தோர்கள். 13

கலிகாலச் சோழனவன் கருங்குட்ட வியாதியின்
னலியுங்காற் றுருவாச நற்றவன்று னுங்கடைந்து
பலிகாவ லன்புரியப் பரிந்துமிகப் புகழ்ந்துநினை
நலிகொடு நோய்தானகல நடப்பாய் கரந்தையென. 14

பின்னர்சிவ னருளாலே பேசுகலி காலனவன்
கன்னன்மொழி யுமையோடுங் கண்ணுதலார் தானமர்ந்த
வுன்னுபுகழ்ச் சமிவனமென் றுயர்ந்தபெரு மித்தலத்தை
யின்னலது தானகல வினிதுவந்து பொருந்தியரோ. 15

பிரகாா யகியோடு பெரிதமர்ந்து தானருளூ
மூாகபணி யணிந்தோன்ற னுயரடியைப் போற்றிசெய்து
வருகொடுநோ யகன்றிடவே மகிழ்ச்சியெனுங் கடல்படிந்து
கருவேல வனமழித்துக் கருதுதிட்டைத் தானெழித்து. 16

அருந்ததியி னுடன்வசிட்ட னமர்ந்தருளு மிப்பதியிற்
பொருந்துதிருப் பணிகண்மிகப் புரிந்தருளுந் தன்மையினு
லிருந்தவரும் விரும்புமிந்த வினியபுகழ்ப் பெரும்பதியைக்
கருந்திட்டைக் குடியென்று வுலகோர்கள் கழறுவரால். 17

இக்குடியிற் புகழேந்தி யினிதுபிறந் திலங்கியுள
வக்குடியாஞ் சோழியவெள் ளாளருடை யருங்குடியின்
மிக்கபுகழ் மேன்மைதனை மேதகவே பெற்றவனும்
பக்குவர்கள் கூறுபுகழ்ப் பஞ்சநதத் தனிப்பெயரோன். 18

அன்னுன்றன் மனைக்கிழத்தி யாயமைந்த காரிகைதான்
மின்னேவென் னிடையுடையாண் மெல்லியர்க்குப் பூஷணமாம்
பொன்னுமச் செந்திருவைப் புறங்கண்ட விவடனக்குச்
சொன்னூர்க டிருப்பெயர்தான் சுந்தரத்தம் மாளென்றே. 19

இலங்குசிலை வில்லியின்ற னிருபாதப் போததனைக்
கலங்கவிலா தெக்காலுங் கருத்ததனி விருத்திமிகத்
துலங்கிடுநற் புகழுடைய சுதனையரு ளெனப்போற்றி
மலங்கவிலா தெப்பொழுது மனமதனிற் கொண்டிவர்கள். 20

இல்லறமா நல்லறத்தை யினிமையுட னடத்திடுங்கா
லல்லலறப் பாவையொன்றை யளித்தருளி யதன்பின்ன
ரெல்லவன்போற் புகழதனி னிலங்குமொரு மைந்தனைத்தா
னல்லவர்க்குச் சிவபெருமா னல்கியருள் செய்தனனல். 21

தோன்றுமிந்தக் கான்முளையாந் தோன்றலுக்குத் திருப்பெயர்தா
னீன்றவர்கள் இராமனென வினிமையுடன் சூட்டிமதித்
தான்றநல கல்விதனை யடைந்தவனு மிளிர்ந்திடவே
சான்றவர்தம் பால்விட்டுச் சதுராக வளர்த்தார்கள். 22

## வேறு.

பின்னர்த் தம்பி யொருவ னேடு பிறந்த நல்ல தங்கையு
மின்னும் வானி லொளிரு கின்ற மேன்மை கொண்ட மாமதி
யென்னு மாறு வளர்ந்து மிக்க வினிதி னேடு மேவுகால்
சென்னை யென்னு மூரை நாடிச் சேர்ந்தி ராம சாமிதான். 23

கயிலை யாளி கழல்க டன்னைக் கருத்தி லன்பொ டிருத்தியே
முயல லாகும் வழிக டன்னின் முயன்று வாழ்க்கைக் காகிடும்
பயனை யீயும் பொருள்க டன்னைப் பாரி வீச னருளதாஞ்
செயலி னலே சேர்த்து நன்கு சிறந்த செல்வ மெய்தியே

இல்ல றத்திற் காகு மில்லா ளின்ன ளென்று வள்ளுவர்
சொல்லி வைத்த விலக்க ணத்தைச் சொந்த மென்னக் கொண்டவோர்
நல்ல ளாமீ னாம்பா ளென்னு நங்கை தன்னை நாடியே
பல்லி யங்க ளார்ப்ப மன்றல் பண்பி னோடு கொண்டவன். 25

வெண்ணை தன்னை யுரலி லேறி விருப்பி னோடு கொண்டருள்
கண்ண னிந்த வுலகு தன்னிற் கருணை யோடு வந்ததா
லெண்ண நின்ற நன்னா ளென்னு மினிய நல்ல வோரையிற்
றிண்ண மாகச் சிவகு மார னென்னுஞ் சேயைப் பெற்றவன். 26

கருணை தன்னில் வானி லுள்ள கார்க டம்மை வெல்லுவா
னருளை நாடி யண்ண றன்க ணன்பு தன்னைச் செய்வதி
லுருகு கின்ற வுறவர் கூட்ட மகல மாக வோட்டுவான்
பெருகு மின்னோன் பத்தி தன்னைப் பேச யாருங் கூடுமோ. 27

பூசை யாதி செய்வ தோடு புராரி தொண்டர் தம்மையு
நேச மாகப் போற்றி நின்று நீளு மன்பி னோடுதா
னாசை யாக வன்ன மூட்டி யகங்க ளிக்கு நெஞ்சினான்
பேச லாகு மோவி வன்றன் பெற்றி தன்னை முற்றுமே. 28

தன்னை யாயு தத்தி னாலே தாக்கு கின்ற போதினு
மன்னு மீசர் பாத மீது வைத்த மிக்க வாஞ்சையோ
டுன்னு மந்தத் தீய ருக்கு வொன்றுந் தீமை செய்கிலா
னென்ன வென்று செப்ப லாகு மிவன்றன் கருணை தன்னையே. 29

அருந்த வத்தா லடைந்த சேய்க ளந்த நாடு போதினும்
பெருந்த வத்தோர் போற்று மொற்றி பெரிது நாடிச் செல்லுமா
றிருந்த வின்னோன் பெற்றி நாடி லிந்த நாளிற் றிங்களூ
ரிருந்த வந்தப் பூதி யென்றி யம்ப வென்ன சங்கையே. 30

திங்க ளூரப் பூதி போன்று செய்ய வொற்றி யூரில்வாழ்
மங்கை பங்க னாமந் தன்னை மறந்தி டாதெப் பொருளினுந்
தங்கு மாறு சாற்று கின்ற தன்மை வாய்ந்த சீரினா
னெங்கு நாமி வன்றன் சீரை யெடுத்துக் கூற லாவதே. 31

மாது பாகர்ப் போற்று கின்ற மாண்பி னாலு மகிமைசேர்
சாது சங்கப் பத்தி யாலுஞ் சாற்று கின்ற மாட்சியி
லோது தொண்டர் புராண நூலி லுரைக்கு மாறு பத்தினோ
டேது வான மூவ ரோடு மெண்ண லாகு நான்கதாய். 32

வேத நூலி னந்த மேய விழுப்ப மிக்க பொருளையுங்
காத லோடு கண்ட நல்ல காட்சி யாள னிவனைநா
மோது மிந்தக் கலியு கத்திற் சனக னென்ன வுரைத்திடி
லேது மீதிற் கோதுவென்ப தெள்ளி னளவு மில்லையே. 33

## வேறு.

உய்யநல் வழியா தென்னி லுயர்திரு வொற்றி யூர்வாழ்
செய்யநற் சிவன்றன் பாதம் புணையெனச் சிந்தை கொண்டு
மையலாம் வாழ்க்கை தன்னை மதித்திடா தெந்தநாளுஞ்
செய்யநன் மலர்க ளேவிச் சிரம்பணிந் தேத்து வானல். 34

ஆதிமா புரிய தென்னு மரும்பெரு மொற்றி யூராண்
மாதுமை யிடத்திற் கொண்ட மலைவளை வில்லி பொற்று
ளேதெதெப் படியா ஞலு மேத்துதன் மறக்கி லாதா
ஞதனை நன்கு கண்ட நல்லவ னிவனே யாமால். 35

உரமச னந்தி மாயோ னுரைத்திடு மயனின் னோர்க்குச்
சிரமலி கங்கை யாளன் சிறப்புட னடனக் காட்சி
தரவரு மகிமை யுள்ள தனித்தல மென்று கொண்டு
பெருந்திருப் பணிக ளெல்லாம் பெரிதுமே புரிகு வானல். 36

சந்திர ஞதி சேஷன் சாற்றுவா சுகியி னோடு
வந்தவான் மீகி தானும் வண்புகழ் வீடே யெய்தத்
தந்ததித் தலமே யாகுந் தரும்பணி யாருஞ் செய்தா
லந்தமில் வீடே யாமென் றரும்பணி புரியா நிற்போன். 37

வேணியின் மதியை வைத்த விமலனித் தலத்தி லேதான்
பாணினி யென்று நாமம் பகர்ந்திடு மொருவன் வேண்ட
வாணியாம் வேதந் தன்னை யன்புட னருளிச் செய்து
வேணவா செய்கென் றிட்டான் வியாகர ணத்தைத் தானும். 38

வானக முள்ள வைந்து வளம்பெறு தருக்க டாமுந்
தானமர் வரங்க ளெல்லாந் தருதியென் றொருவற் போற்றி
மானமர் கரத்தோன் றன்பான் மகிழ்ச்சியோ டடைந்த சீருந்
தானவிர் தலமு மீதே தாணியி லாகு மாலோ. 39

பொதியநல் வரையின் மேவும் புகழ்மிகு குறுமு னிக்கு
விதுவணி யீச னிந்த விறற்றிரு வொற்றி யூரின்
மதுமொழி யுமையி னோடு மணம்புரிந் திட்ட நல்ல
புதுமணக் கோலந் தன்னைப் புலப்படக் காட்டி ஞனல். 40

கன்னியோ டுறையு மிந்தக் கடவுளாந் தியாக னென்னும்
பன்னகா பரணன் பாதப் பனிமலர் தன்னை நாளும்
பன்னுமாந் தாதா வென்போன் பன்னியோ டடைந்து போற்றி
நன்னரா மிளமை தன்னை நல்கிடப் பெற்றிட் டானல். 41

மறையவ ரிருவ ரிந்த மாதலத் தியாகன் றன்மே
லறைவட மொழிச்சு லோக மமைத்துவந் திடவே நல்ல
நிறைமிகு மாணிக் கத்தை நினைத்தவா கொடுத்த தாலே
யறைகுவர் தியாக ரென்ன வகிலத்தோர் நாளுந் தானே. 42

சமயநற் குரவ ரீந்த சதுர்மிகு தேவா ரங்க
ளமைவுடன் கொண்ட தன்றி யருட்பிர காச ரென்னு
நமதுநல் விராம லிங்க நற்றவன் புகழ்ந்து பாடுங்
குமைவிலாப் பாக்கண் மிக்கக் கொண்டதிப் பதியே யாமால். 43

மட்டினற் புகழ்சேர் தாயு மானவர் தம்மா னன்கு
பட்டினத் தடியைப் போலப் பாரெலாந் துறந்தோ ரில்லென்
றொட்டிய வன்பி னோடு முவைத்திட நின்றோன் றானுங்
கிட்டியே சமாதி யாகக் கிளர்ந்தது மொற்றி தானால். 44

தொண்டைமான் பணிக டன்னைத் தோமறச் செய்த விந்த
மண்டிய புகழ்சே ரூரில் வடிவுடை மாதோ டோங்கு
மண்டர்நா யகற்கு மேலா மரும்பணி மிகவு மேதான்
கண்டிடு சிறப்பு வாய்ந்தோன் கனத்தையார் கழற வல்லார். 45

## வேறு.

இனிதுசிவ னெழுந்தருளு மிப்பதியும் வேறுபல விடங்க டாமு
நனிதெரிந்து திருப்பணியை நடத்திமிகப் பெருமைதனை நன்கு பெற்று
னனிதெரிவீ ரத்தலங்க ணடாரசர் கோயிலுடன் நமது சைவத்
தனிமகிமைச் சுந்தரர்க்குச் சிவபெருமான் றடியதனைத் தந்தாட் கொண்ட. 46

பெருமைமிகு வெண்பாக்கப் பெருந்தலமே முதலான பீடு சான்ற
வருமைமிகு மிடங்களுமா மற்றுமினி வருங்கால மநேகஞ் செய்வா
னொருமையினி லெழுமையையு மொழித்திட்ட விவன்றனது வுயர்ச்சி மிக்கக்
குருமைதனை யெடுத்துரைத்தல் குவலயத்தி லெவர்க்குமரி தாகு மாலோ. 47

இங்குயா முரைத்தவிந்த வெழிற்புகழ்க ளெல்லாமுந் தனதாய்க் கொண்ட
புங்கமுடை இராமன் முக்தாநந்த வடிகளெனும் புனிதன் கூறப்
பங்கமினற் றமிழுலகில் வடமொழியாஞ் சமஸ்கிருதம் பரவு மாறு
திங்களணி திருவொற்றி யூரான்றன் றிருப்பெயரே திகழச் சூட்டி. 48

வடமொழிக்கல் லூரியொன்று வளம்பெறவே நிறுவியங்கு வந்து சேர்ந்த
திடமுடைய துறவிகட்குஞ் சிறுவர்கட்கும் வேண்டுவன திருந்தச் செய்தே
யிடமுதலாம் வசதியெலா மினிதமைத்துத் தாதையென வியம்பக் காத்துக்
கடமையுட னவரையந்தக் கலைதனிலே பயிற்றுகின்ற கருணை யாளன். 49

ஓங்குபுக ழிச்செல்வ னிவ்வண்ண முரைத்திடற்கு மெண்ணு தான
பாங்குபெறு தருமமெலாம் பாரதனிற் செய்துமிகப் பரவு காலை
தேங்குபுகழ் வடமொழியிற் றேர்ச்சிமிகப் பெற்றசிவா னந்த னென்னும்
வீங்குபுகழ்த் துறவியிந்தச் சென்னைதனில் விரவிடவே யினிது கண்டு. 50

முன்னரந்தச் சிவாநந்த முனிவரனை யுபசரித்து முனைந்து போற்றிக்
கன்னன்மொழி யுமைபாகன் காசினியோர்க் கருள்வேதக் காட்சி நூலை
மன்னுபுகழ் நந்தமிழின் மொழிபெயர்த்தே யருள்கவென மகிழ்ந்து கூறிப்
பன்னு மவற் கெலாநலமும் பரிவினுடன் செய்துமிகப் பண்பு செய்தான். 51

அங்கவன்கூ றியபடியே யண்ணலருள் வேதத்தை யன்பி னோடு
பங்கமினற் றமிழ்மொழியிற் பான்மைபெற மொழிபெயர்க்கும் பருவந் தன்னிற்
சங்கரமா தவன்சரிதந் தன்னைமொழி பெயர்த்துளதாய்ச் சாற்றக் கேட்டே
யிங்கதனை யச்சேற்றி யித்தமிழ்நாட் டினிலினிது விளங்கச் செய்தான். 52

நாதனருள் வேதமது நாளுமொழி பெயர்த்துவர நன்கு கூடி
யேதமற வச்சுவா கனமேற்றி யெல்லோரு மினிது காண
வோதுமிந்தத் தமிழுலகி லுலவிவா லாயிற்று வுவப்பி னோடே
போதமருள் வேதமிந்தப் புவியதனி லென்ஞான்றும் பொலிந்து வாழி. 53

வேதத்தைத் தமிழதனில் விளங்கிடவே கொண்டுவந்த வெற்றி மிக்க
நாதனெனும் இராமசா மிப்பிள்ளை நானிலத்தில் நாளும் வாழி
யீதைமொழி பெயர்த்தளித்த சிவானந்த யதீந்திர னினிது வாழி
மாதுமையைப் பாகமுடை மாதேவ னோடுலகம் வாழி மாதோ. 54

பதிப்பித்து வெளியிட்ட த. ப. இராமசாமிப் பிள்ளையவர்களின்
சரித்திரச் சுருக்கம்
முற்றிற்று.



ஓம்

வேதாகம ஞானவிநோதாய நம:.

# சாமவேத மொழிபெயர்ப்பு

## முன்னுரை.

ஈண்டு, கடவுள் என்னுஞ் சொல், எல்லாவற்றையும் கடந்தவன், அல்லது செலுத்துகின்றவன் என்னும் பொருளை யுணர்த்தலின் அக்கடவுள், இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே' என்ற சுருதி வாக்கியத்தைத் தழுவி, இவன் அவன், இவ்வுருவுடையான் அவ்வுருவுடையான், இத்தன்மையன் அத்தன்மையன், என்பன முதலியவற்றால் எடுத்துக் காட்டொணாது நிறைந்து நின்ற அறிவுருவானவன் என்பது, சமயம், சாதி, குலம், என்பன முதலிய கட்டுப்பாடுகளைக் கடந்து உண்மையை யுற்று நோக்குவோர்க்கெல்லாம் ஒப்ப முடிந்ததாம். இதுவே கடவுளுக்கு இயைந்த மதமுமாம்.

அக்கடவுள், நம்மனோர்க்குக் கண்கூடாகாதவனெனினும், அதாவது அருவனா யிருக்கின்றானெனினும் தனது அருட்சத்தி வலியால், அருவாய்க் காணப்படாத பசுவின்பால், முலைப்பால், கண்ணீர் முதலியவைகள் உருவாய் வெளிப்பட்டுத் தோன்றுமாறு அன்பின் பெருக்கே நிமித்தமாய் அருட்டிருமேனி கொண்டெழுந்தருளுவன், என்பது வேண்டாதவர்களுக்கும் முடிவில் வலிய வேண்டற்பால தொன்றாம்.

மற்றும், அக் கடவுள், தமது சத்தியால் பல்வகை நிமித்தங்களைக் கொண்டேனும், நோாகவேனும், உலகை, ஆக்கி, அளித்து, அழித்து, மறைத்து, அருளுவன் என்பதும் முடிவில் உடன்படற்பாலதாம்.

அவ்வாறு தோன்றிய வுலகமும், சொல்லும், பொருளுமென இருகூறுள்ளதாமென்ப. அவற்றினும், சொல் வடிவாய் நிற்பது சத்தியென்றும், பொருள் வடிவாய் நிற்பது சிவனென்றும் சுருதிகள் முழங்குகின்றன. அதினும், ஆன்றோர் சொற் பிரபஞ்சமே சிறந்ததாமென்பர்.

இங்ஙனம் பொருள் வடிவாகிய சிவன், அருகன், புத்தன், அல்லா, ஏசு, அரி, அரன் என்பது முதலிய பல்வகைப் பெயரை யேற்றுப் பல்வகைச் சமயத்தவர்களும் வழக்கிட்டுக்கொண்டு வழிபடுமாறு நிற்கின்றனன்.

4 A

இவ்வாறே, சொல் வடிவாகிய சத்தியும், இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதமாகவும், சம்சார தரிசனம், தத்துவாவபோதம், சமத்தான பராமரிசம், வித்தியாப் பிரபோதம் எனவும், திரிபிடகம் எனவும், கொரான் எனவும், பைபிள் எனவும், கிரந்த சாய்பு எனவும் பெயர்பெற்றுப் பல்வகைச் சமயத்தவரும் தத்தமது வேதமெனக் கொண்டு போற்றுமாறு நிற்கின்றது என்பதில் ஐயமில்லை. இவ்வாறு பல்வகைப்பட்ட பெயர்களை யுடைய வேதங்கள் முடிவில் ஒரு பொருளையே கூறுவனவாமாயினும் இடையில் மாறுபட்ட பொருள்களைக் கூறுவனவாகின்றன. அதுவும், சிற்றறிவுடையார்களின் நோக்கினாலாமென்க.

இத்தகைய நூல்களனைத்தும் கடவுளின் அருளினாலேயே எழுந்தன. ஆனால், சிலர் அவ் வேதம் நித்தியமாய் அநாதியாய் உள்ளதென்பர். சிலரோ, நேரே பரமேசுரன் அருளியதென்பர். சிலர் கடவுளின் அருள் பெற்றுக் கடவுள் நிலையை யடைந்தவர்களால் அருளப்பட்டதென்பர். மற்றும், பலர் பலவாறு கொள்வர். கொள்ளினும் அனைவரும் பொதுவாகச் சத்தியத்தைக் கூறுவதே வேதம் என்று அன்பு பாராட்டி வருகின்றனர் என்பதில் எவருக்கும் யாண்டும் எப்போதும் இழுக்கொன்றும் இல்லை.

மற்றோ, வேதந் தோன்றிய விஷயத்திலோ, பல்வகை விவாதங்களுண்டு. ஏனெனின்? அவ் விஷயத்தில் அபிமானம்பற்றிப் பலவகைப் புனைந்துரைகள் காணப்படுகின்றனவாதலின் என்க.

அற்றாகலினன்றே,

'இடப தேவரின் அருளால் எமது வேதம் வெளிப்பட்டது' என்று கூறுகின்றனர் ஒரு சாரார்.

'எமது வேதத்தை, எமது கடவுள் புறா வடிவங்கொண்டு உபதேசித்தருளினர்' என்பர் மற்றொரு சாரார்.

மற்றொரு சாரார், 'எமது வேதம், சீனாய் மலையில் எமது கடவுள் மேகமாய் நின்று ஒரு பெரியாருக்கு உபதேசித்தருளியது என்றும், பின்னர், 'கடவுள் வடிவாகிய புறாவால் ஞான நீராட்டப்பெற்ற ஒரு பெரியாரால் பலவகையாய் விரிக்கப்பட்டது' என்றுங் கூறுவர்.

தெய்வப் புலமையால் வெளிவந்தது எமது வேதம் என்பர் மற்றொரு வகையார்.

அருளால் வந்த அருட் பதிகங்களே எமது வேதம் என்பர் இன்னுமொரு சாரார்.

ஆரியர்களோ, 'பரமேசுரனுடைய மூச்சுக்காற்றுப்போல் வெளிப்பட்டது வேதம்' அது அநாதியாகிய சுயம்பு என்றும்,

சூரியன், அக்கினி முதலியோர்கள் அவ் வேதத்தை விளங்கச் செய்தார்களென்றும்,

வேதம் இருடிகளா லியற்றப்பட்டதல்ல, மற்றோ, இருடிகளால் கண்டு பிடிக்கப் பெற்றதென்றும்,

முன்னர் இந்திரனுனவன் விருத்திரனை மூன்றுமுறை கொல்ல விரும்பினன், அப்போது விருத்திரன் பயந்துகொண்டு, 'என்னுடைய வன்மைக்குக் காரணமாகிய மூன்று வேதத்தையும் நினக்குத் தருகிறேன்' என்று கொடுத்தனன் என்றும், இதுவே அனைவராலுங் கொள்ளற்பாலது என்றுங் கூறுகின்றனர்.

இனி, வேதம் எத்தன்மைத்தாகவேனும் இருக்குக. அஃதிலெமக்கோர் வழக்குமின்று. மற்றோ, அவ் வேதங் கூறுகின்ற பொருள்கள் எத்தன்மைகளை யுடையவைகள்? என்று மக்கள் அனைவரும் உணர வேண்டுவது இன்றியமையாததா மென்பதே எமது கருத்து. அவ் வேதம் நம்மனோர்க்கும் இனியவற்றைக் கூறுமெனின், யாமும் அதுவே உண்மையெனக் கொண்டொழுகி வரல்வேண்டு மென்பதில் விவாதம் இல்லை.

மற்றும், ஈண்டு ஒரு நூலானது உண்மையைக் கூறுவிடின், அது பரமேசுரனலோ, அல்லது பெரியாராலோ இயற்றப்பட்டதாமெனினும், பல நூல்களும் எடுத்துப் போற்றுவதாமெனினும், எங்கும் புகழ் பெற்றிருப்பதாமெனினும், அளவிட முடியாததாமெனினும், மற்றும், பலவகை நிமித்தங்களாமெனினும், அந் நூலானது அனைவராலுங் கொள்ளத் தக்கதாமென்பதும், ஏனைய நூல்கள் தள்ளத்தக்கன வென்பதும் பேரறிவாளரின் கொள்கையன்று. மற்றோ, எல்லா வுயிர்களுக்கும் உறுதிப் பயனைக் கூறலாகிய உண்மை கூறலானே ஒரு நூல் அனைவராலுங் கொள்ளற்பாலதா மென்பதே பேரறிவாளரின் கொள்கையாம். இதுவே முறையாம். இதுவே எமது கொள்கையுமா மென்க.

இனி, புக்கண மன்னனையும், வித்தியாரண்ய முனீசுரரையும் திருவருள் கூட்டி வைத்தது போன்று, சென்னையம் பதியின்கண்ணே த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களின், திருவொற்றியூரான் வடமொழிப் பள்ளியில் தலைமை வகித்துள்ள முக்தானந்த சுவாமிகள், அன்பு காரணமாய் என்னையும், ஷை பிள்ளை யவர்களையும் ஒன்று கூட்டிவைக்க, அப்போது திருவொற்றியூர் தியாகராசப் பெருமான் ஷை பிள்ளை யவர்களின் திருவுள்ளத்திலிருந்து "வேதம் வெளிவரில் அறத்துறை கடந்து மறத்துறை நடக்கும் மாக்களனைவரும், நன்னெறி யுய்வதற்கு ஏதுவாகிய மறைப்பொருளனைத்தையும்

உணர்ந்து, மறை முதல்வனை மறவாமல் அடைந்துய்வர்'' என்பதை அறிவுறுத்தருள, அவ்வாறே வடமொழியிலுள்ள வேதங்களைத் தமிழ் மொழியில் மொழி பெயர்த்து உலகில் பரப்பல் வேண்டுமென்று பிள்ளை யவர்களும் பேரன்புடன் வற்புறுத்தி என்னைக் கேட்டுக்கொள்ளவும், அங்கு மற்றுமுள்ள பெரியார்களும் அவ்வாறே செயல்வேண்டுமென்று ஆசிர்வாதஞ் செய்தார்கள்.

இங்ஙனமே, எமதுள்ளத்தில் ஒரு விளக்காய்த் திகழும் எமது முருகப் பெருமானர் திருவருளும், இதுவும் தமிழுலகிற் கொரு பெரும் பணி யென்று என்னை உற்சாகப்படுத்தி யருளவும், யாம் வேதங்களை மொழி பெயர்க்கப் புகுந்தனம். புகுந்து, கடலைக் கையால் நீந்தல் போன்று பலவகையான வேதபாடியங்களையும், ஆங்கில மொழி பெயர்ப்புகளையும் ஆராய்ந்து, இனிது நோக்குங்கால், மகீதரர், உவட்டர், இராவணன் முதலியோர்களாற் செய்யப்பட்ட வேதபாடியங்களும், தயானந்த சரசுவதியார் செய்த பாடியங்களும், ஒருவாறு காலத்திற்கேற்பவும், சமயக்கொள்கைகட்கு ஒப்பவும் பொருத்தமுடையவைகளேயா மாயினும், சாயணர் பாடியமே, எல்லாவற்றினுஞ் சிறந்து விளங்குவதானும், பேரறிவாளர்களால் அதுவே கைக்கொள்ளத் தக்கதாமாதலானும், நான்கு வேதங்கட்கும் முடிவுற்றிருத்தலானும், பலவகைக் கொள்கைக்கும் இனிது நோக்கில் இடங் கொடுப்பதற்குரியதா மாதலானும், அச் சாயணபாடியத்தைத் தழுவியே இச் சாமவேதத்தை மொழி பெயர்த்துள்ளேம். எமது அறிவிற் கெட்டியவாறு அந்நுவயமும், பதவுரையும், ஆங்கிலத்தாரின் குறிப்பும், பாடபேதங்களும் எழுதி யிருக்கின்றோம்.

ஸ்டீவன்ஸ் என்னும் பாதிரியார் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த சாமவேத மூலத்தை, சாயணபாடியத்துடன் ஒத்திட்டுப்பார்த்து என்னோடிருந்து உசாவி அவ் வாங்கில மொழி பெயர்ப்பின் கருத்துக்களை இதிற் குறிப்பிடுமாறு உதவி புரிந்த டாக்டர் ராசா பகதூர் நாயகர் அவர்கட்கு மிகவும் நன்றி செலுத்துகின்றோம்.

தொடக்கத்திலிருந்து முடிவுவரை வடமொழிப் பகுதியின் புரூப் பார்த்து உதவிய மீமாம்சை சிரோமணி, அ. கோபால் மேனன் அவர்கட்கும் நன்றி செலுத்துகின்றோம்.

மற்றுப், வேதங்களுள் இருக்கு வேதமே முதலாவதாயிருக்க, ஈண்டுச் சாமவேதத்தை முதலில் மொழி பெயர்க்கப் புகுந்ததென்னையோ வெனின்? அதைக் கூறுதும்:—'' இருக்கு வேதமானது மற்றைய வேதங்கட்கும் காரணமானதாலும், இவ் வேதத்திலுள்ள மந்திரங்களை பெரும்பாலும் மற்றைய வேதங்களில் வருவதாலும், ஆராதனைக்குரியதா மாதலானும், மிதுதியா யிருத்தலானும் இருக்கு வேதமே முதலாவதாகும்'' என்பர் சிலர்.

"வேதங்கள் பெரும்பான்மை வேள்விகளையே விரித்துக் கூறுதலால் வேள்வியின் வடிவம் முடிவுபெற்ற பின்னரே மற்றைய வேதங்கட்குப் பிரயோகஞ் செய்தல் செல்லுதலானும், அத்தகைய வேள்வியை அங்கத்துடனும், உபாங்கத்துடனும் எடுத்துக் கூறும் வகையாலும், 'அநுட்டான முறையில் எசுர் வேதமே முதலாவதாம்' என்று கொண்டு சாயணரும் முன்னர் இதற்கே பாடிய மியற்றியுள்ளதாலும், எசுர் வேதமே முதலாவதாம்" என்பர் சிலர்.

ஆயினும், மற்ற வேதங்களிற் கூறியுள்ள தேவதைகள், வேள்விகள், வேள்விக்குரிய சாதனங்கள் முதலிய அனைத்தையும் துதிப்பது இச் சாமவேதமேயாம். அப்படிப் போற்றுவிடின் ஆராதனை முதலியவைகள் பயனற்றவைகளா மாதலின் பொற்பூடணங்கட்கு மாணிக்கம் பதித்தல்போன்று பிறவற்றினும் சிறப்புற்றதாகித் துதி வடிவமாகவே இச் சாமவேதம் இருத்தலின் இதுவே முதலாவதாகும்; இவ்வகையில் இதனை முதலாவ தென்பதில் யாதொரு இழுக்குமில்லை யென்க.

அற்றாகலினன்றே பகவற்கீதை யென்னும் பிரபல சுருதியின்கண் கண்ணபிரானும்,

"வேதாநாம் சாமவேதோஸ்மி" அதாவது, "வேதங்களுக்குள் சாமவேதம் யானு யிருக்கின்றேன்" என்று திருவாய்மலர்ந்தருளியுள்ளார். இவ்வாறே எல்லா நூல்களும் "பரமேசுரன் சாம கானப்பிரியன்" என்று முழங்குகின்றன. இதைச் சாமவேத ருத்திரியிற் காண்க.

இதைத் தழுவியன்றோ சிவத்தொண்டில் வன்றொண்டராய் விளங்கும் நமது த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களும் சாமவேதத்தையே முன்னர் மொழி பெயர்க்க வேண்டுமென்று எம்மைக் கேட்டுக்கொண்டதூஉமென்க.

மேற் கூறியுள்ள வகைகளைக் கொண்டு யாம் சாமவேதத்தை முதலாவதாக மொழி பெயர்த்துள்ளோம். மேலும் எசுர் வேத முதலியவைகளையும் மொழி பெயர்க்க வேண்டுமென்னும் ஊக்கம் எமக்கும் பிள்ளையவர்களுக்கும் முன்னினும் மிகுதியாயிருத்தலின் அவ்வாறே திருவருளுங் கூட்டிவைக்குமென்று நம்புகின்றோம்.

ஆரிய வேதங்களைத் தமிழில் மொழி பெயர்க்கில் தமிழுலகத்திற்கு எவ்வாற்றால் பயனுமெனிலோ? வேதப் பொருளை உள்ளவாறுணர்ந்து உய்தலே பெரும் பயனுமென்க.

மற்றும், வேதப் பொருளை யுள்ளவாறு காணல் மகரிஷிகளுக்கும் மிகவும் அரியதாமாதலின் 'நீ உள்ளவாறு காணல் எவ்வாறும்' எனின்? அஃதுண்மை. ஆனால் முன்னோர்கள் பலரும் வேதத்திற்குப் பொருளுணர்ந்து, பாடிய முதலியவற்றை இயற்றியுள்ளாராதலின் அதைத் தழுவியே யாமும் இயன்றவரை தமிழில் பொருளெழுதுதல் ஒருவாறு கூடுமென்றே துணிந்து எழுதியுள்ளோம்.

அங்ஙனமாயினும், வேதங்களிலுள்ள சொற்களுக்குப் பொருள் கூறல் மிகவரிதாம் என்பது தேற்றம். என்னை? வேதத்திலுள்ள சொற்களும் பொருளும் மிக மறைந்து கிடத்தலின் என்க.

வேதத்திலுள்ள சொற்களுக்கு உள்ளவாறே பொருள் கூறமுடியா; ஏனெனில்? இலக்கண வழுவாய சொற்கள் மிகுதியாய் வழங்கப்பட்டிருத்தலின் என்க. அற்றாகலினன்றே வேதங்களுக்கு அரிய பெரிய பொருளைக் கண்டுபிடித்த நிருக்த நூற்காரராகிய யாஸ்கமுனிவரும், "இவ்வேதத்திலுள்ள சொற்களுக்கும் பொருள் கோடல் மிக வரியதாமாயினும், சொல் பொது வாதலின் பொருளுடையன" எனவும், "இதிற்சில சொற்களுக்குப் பொருள் கூறல் முடியவில்லை தேடினுங் கிடைக்கவில்லை; அது எனது பிழையல்ல. மற்றோ, வேதங்களில் அத்தன்மைய சொற்கள் வழங்கப்பட்டிருத்தலின்" எனவுங் கூறியுள்ளார். இதனால், சொல்லினும் பொருளினும் வழுஉக்கள் வரின் ஒரு தலையாய் அவை எமது குற்றமே யென்று கொள்வதற்கிடமில்லை யென்பது முணர்க.

மற்றும் தமிழுலகிற்கும், ஆரிய வேதங்கட்கும் உள்ள சம்பந்தத்தை, "தமிழும் ஆரிய மறையும்" என்ற இந்நூல் உபோற்காதத்திற் காண்க. இதனால் ஆரியமுஞ் செந்தமிழும், ஆரியரும் தமிழரும், நீண்ட நாளாய்க் கலப்புற்றிருத்தல் நூல் வழக்கானும் உலக வழக்கானும் பெறப்பட்டதா மென்றுணர்க.

ஈண்டு, நமது, த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்கள், சிவாலயங்க ளியற்றல், முக்கரணங்களாலும் சிவனை வழிபடல், சிவனடியார்களிடத்துப் பேரன்பு வைத்தல், அறிஞரைப் போற்றல், சமயம் வளர்த்தல், கல்விப் பள்ளி அமைத்தல், சுற்றத்தைப் பேணல் முதலிய பல்வகை அறங்களை இனிது நடத்தி வருவதுடன், தமிழ் மக்கள் மீதிருந்த பேரன்பால் வேதத்தையும் நந்தமிழ்நாடு உள்ளவாறறிந்து உய்யவேண்டுமென்ற ஊக்கத்துடன், வேத மொழிபெயர்ப்பு என்னும் இவ்வரிய பெரிய திருப்பணியைச் செய்ய முன்வந்து, அதற்கு வேண்டிய இடம் பொருள் ஏவலை இனிதளித்து முற்றுபாறு செய்த நன்றியைத் தமிழுலகம் என்றும் மறக்காதென்று நம்புகின்றோம்.

பிள்ளை யவர்களைப்போல் நந்தமிழ் நாட்டில் அறிவாளரும், திருவாளரும், கொடையாளரும், அன்புடையாரும், சிலரேனும் இருப்பரேல், தமிழ் நாடும், தமிழும், சமரச நன்னிலையும், சைவநெறியும், மற்றுமுள்ள நற்றுறைகளும் முன்னேறி வருமென்பதில் ஐயமு முண்டோ? இனிமேலாவது, நமது தமிழ் நாட்டிலுள்ள கன தனவான்கள் பெரு மனத்துடன் பொது நலத்தில் ஈடுபடுமாறு திருவருள் கூட்டிவைக்குமென்று நம்புகின்றோம்.

மேலும், பிள்ளை யவர்கள், ஆயிரக்கணக்கான தனங்களைச் செலவிட்டுப் பதிப்பித்து இச் சாமவேதத்தைத் தமிழுலகெங்கும் பரவுமாறு நன்கொடையாய் வழங்கிய வள்ளற்றன்மைதான் என்னே! என்னே!! மேலும் இவ்வாறே அரிய பெரிய திருப்பணிகளில் சிறிதும் ஊக்கங் குறையாததுடன் உற்சாக மிகுதியாமாறு செய்து பிள்ளை யவர்களின் பேரறங்கள் தழைத்தோங்க வேண்டுமென்று திருவொற்றியூரான் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

இங்ஙனம்:

வேத மொழிபெயர்ப்பாசிரியர்,

காசிவாசி - சிவானந்த யதீந்திர சுவாமிகள்.



ஓம்

# சாமவேத
## மொழி பெயர்ப்பின்
# உபோற்காதம்.

---

## வேதம் என்பதின் பொருள்.

காட்சியாலுங் கருதலாலும் உணரப்படாத வுபாயத்தை யுணர்த்துவது வேதம் என்பர். இதனானே, அலௌகிக வுபாயத்தை வேண்டுவோன் அதிகாரி என்பதும்; உபகாரஞ் செய்தல் செய்யப்படல் சம்பந்தம் என்பதும்; அலௌகிக வுபாயம் விஷயம் என்பதும்; அதன் ஞானம் பயன் என்பதும் பெற்றாம்.

மற்றும், வேதம் என்னும் பகுபதமானது பலவகையாய்ப் பொருள் தருகின்றது. அது வருமாறு:—

உ—அ—ஈ, என்னும் மூன்றெழுத்துக்களுஞ் சேர்ந்து, 'வே' என நிற்கின்றன. இது, அநேக உயிரெழுத்துக்களின் புணர்ச்சியாலானமையின், உயிர் மெய்யெழுத்துக்களை இனிமையாய் ஒலிக்கின்ற தன்மைபற்றி வேதத்தின் மந்திர பாகத்தைக் குறிக்கின்றது.

'தம்' (தம்) என்னுஞ் சொல், தா (தா) தானம் என்னும் பொருள் கொண்ட வடமொழிப் பகுதியிலிருந்து எழுந்ததா மாதலின், தானஞ் செய்தலையே (ஈகையையே) மேற்கொண்ட வேள்வி முதலிய கருமங்களைக் குறிக்கின்றமையின், இது வேதத்தின் பிராமண பாகத்தை யறிவுறுத்துகின்றது.

ஈண்டு, வேதத்தின் மந்திரபாகம் மூலம் போன்றிருப்பதாம். பிராமண பாகமோ அதன் உரை வடிவாயுள்ளதாம்.

மற்றும், 'வேதம்' என்பதனானே, அது, இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என நான்கு வகைத்தா மென்பதும் பெறப்படுகின்றது.

அஃதாமாறு:—உ-அ-ஈ-தம், என நின்று, வ-ஈ-தம், எனப் புணருமிடத்து, வ-வாக்கின், ஈ-அழகை, தம்-அறிவுறுத்துதல் எனப்

பொருள் தரலின், அவ் வாக்கின் அழகும், அடி, தளை, எதுகை, மோனை, முதலியவைகளாலாய பாட்டுக்களாலன்றி அமையாதாம்; அத்தகைய பதிகங்கள் பொதுவாக எல்லா வேதங்களினு மிருப்பினும், இருக்கு வேத முழுதும் அவ்வாருன திருப்பதிகங்களால் அமைக்கப் பெற்றிருத்தலின் ஈண்டு இருக்கு வேதம் என்பது இதனுல் கொள்ளக்கிடந்தமை காண்க.

அவ்வாறே, வேதமென்னுஞ் சொல்லை, வ, இ - தம், எனப் பிரித்தலுங் கூடுமாதலின், ஈண்டு, வ - அமுதம் (நீர்), இ - இச்சை, தம் - அறுத்தல், எனப் பொருள் தரலின், இப்பொருள் இயைந்தவிடத்து, நீரை விரும்புகின்ற கொடி செடிகளை யறுத்தல் என்பது திரண்ட பொருளாமாதலானும், எசுர் வேதத் தொடக்கத்திலும், 'ஊஷெஸ்வா' 'புரசங் கொம்பே! உன்னை வெட்டுகின்றேன்' என்று கூறப்பட்டிருத்தலினுனும் அதையே குறிப்பாகக்கொண்டு அமைந்துள்ள எசுர் வேதமும் இதனுல் கொள்ளக்கிடந்தமை யுணர்க.

அங்ஙனமே, வேதம் என்னும் அச் சொல்லையே, வ, இ - தம், எனப் பிரிக்குந் தருணத்தில், வ - அமுதம் அதாவது சோமம், இ - இலக்குமி, தம் - தனத்தை யளித்தல் என்பதும் பொருளாமாதலின், சோமரசமாகிய அவிப்பொருளை அருப்பணஞ் செய்தலையே மேற்கொண்ட சாமவேதமுங் கொள்ளற்பாலதா மென்பதும் அறிக.

இஃதொப்பவே, வ, இ, தம் என்பதற்கு, வ - வன்மை யுடையானுக்கு, இ - இலக்குமியாகிய வெற்றியை, த - கொடுத்தற்குரியது என்பதும் பொருளாமாதலின், பகைவரை வெல்லுவதற்கு உபாயங் கூறுகின்ற அதர்வண வேதமும் இதனுல் கொள்ளுதற்குரித்தாய் நின்றமை காண்க

இனி, வேதம் என்னுஞ் சொல்லே சைவப் பொருளையு முணர்த்துகின்றதென்பது மறிக. அஃதெவ்வாற்றுலா மெனின்னே? தெரிக்குதும்:— வ, இ - தம், எனப் பிரித்து, வ - வலிமிகுந்த மலையின்கண், இ - இச்சையுடையவன். அதாவது எவன் மலையின்கண் இச்சை யுடையானே, அவன் சிவனு மென்பதாயிற்று. த - பயனை யளிக்கின்றவன், அதாவது சிவனை வழிபடலால் பயன் பெறல் என்னும் பொருள் திரண்டதா மாதலின் இப்பொருளே வேதத்தின் கருத்தெனக் கொள்ளலால் சைவத்தையே மேற்கொண்டது வேதம் என்பதாயிற்று.

மற்றும், வேதம் என்னும் சொல்லே சத்தி மதத்தின் பொருளையுமுணர்த்துகின்றது. அஃதெவ்வாறு மெனின்? அதையும் தெரிப்பாம்:— வ - இ - தம், என்னும் எழுத்துக்களுக்குள், வ - இராகுவின், இ - இச்சை, அதாவது அமுதம் உண்ணல் வேண்டுமென்னும் இராகுவிற் கெழுந்த

விருப்பை, த - கெடுத்தவர் விஷ்ணுவாவர். அவரைக் கூறுகின்றதால் விஷ்ணுவாகிய சத்தியையே விதந்தோதுவது வேதம் எனப் பொருள்படலால் சத்தியையே மேற்கொண்டெழுந்தது வேதம் என்பதாயிற்று.

அஃதன்றியும், காணபத்தியம், கணபதியின் சம்பந்தத்தையும் கூறுகின்றது என்பதும் வேதம் என்னுஞ் சொல்லிற்குப் பொருளாம். என்னை? வ, இ - தம், என்பதில், வ - மங்களம், இ - இலக்குமி, தம் - இவ்விரண்டையுங் கொடுக்கின்றவன் கணேசனேயாவன். யாண்டும் தடையைப் போக்குகின்றவனாதலின் அவனுடைய தடை நீங்காவழி, திருவும், மங்களமும் இகழாதாமாதலி னென்க. இவ்வாற்றால் விக்கினத்தைப் போக்கு மிறைவனைக் கூறுகின்றது வேதம் என்றாகவே காணபத்திய மென்னும் பொருளுங் கொள்ளக்கிடந்தமை யூகித்துணர்க.

இதுபோன்றே, வேதம் என்னுஞ் சொல்லே சௌர மதத்தையும் (சூரிய வுபாசனையையும்) அறிவுறுத்துவதாம்; என்னை? வ - இ - த, என்பவற்றில், வ - வலியை வேண்டுவோர்க்கு, இ - இலக்குமியாகிய ஆற்றலை, த - கொடுக்கின்றவன் சூரியனேயாவன். சூரியனுடைய வெயில் படாதேனின் எல்லா வுயிர்களும் வலியொழிந்து அழிந்துவிடுமாதலின், அத்தகைய சூரியனையே மேற்கொண்டது வேதம் என்னும் பொருளும் கொள்ளக்கிடந்தமை காண்க.

மற்றும், வேதம் என்பதனானே, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தங்கள் நான்கையும் பயப்பது வேதமே யென்பதும் பெறப்படுதல் காண்க.

அஃதாமாறு:—வேதம் என்பதை, வ - ஈ, இ - தம், எனவும் பிரிக்க முடியுமாதலின், வ - அமுதம் அதாவது சுவர்க்கம். அதைத் தரும் தருமமாம். ஈ - இலக்குமி அதாவது பொருள். இ - இச்சை அதாவது காமம். த - கெடல் அதாவது பந்தமறல் விடுபடல் வீடு என்னுமிவைகளும் பொருள்படுமாதலின், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தங்கள் நான்கையுந் தருவதே வேதம் என்பதாம்.

மற்றும், வித், ஞானே என்னும் வடமொழிப் பகுதியிலிருந்து வந்தது வேதம் என்னுஞ் சொல்லாதலின் எல்லாவற்றையும் அறிவுறுத்துவது வேதம் என்பதும் பொருளாமென்றுணர்க.

வேதம் என்பது ஒரு பெயர்ச்சொல்லன்று; மற்றென்னின்? வித், என்னும் பகுதியாற்றோன்றி உணர்வுப் பொருளுடையதெனப்பட்டு ஒலியுவின் மேற்றாய் ஒரு நூலெனப்படுகின்றதாம்.

வேதம் என்பதே தமிழில் மறை யென வழங்கப்படுகின்றது. இதை, வேய்தல், மறைத்தல் என்பது பற்றி மறை யெனப்படுகின்றது என்ப.

உற்று நோக்கின் பொருள்களை மறைத்து வைத்திருத்தலின் மறை யென்பது ஒருவாறு பொருந்துமென்பது காண்க. ஈண்டு மறைத்துக் கூறல் என்பது ஒரு பெரும் பொருளாகிய பரமேசுரனைப் பல சிறு தேவதை களாகக் கொண்டது போன்று கூறுதலாம்.

அற்றாகலினன்றே, மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியரும், 'நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் நான் மறை யென்றார்' என்று கூறியுள்ளார்.

அல்லது, மக்கட் கெட்டாது மறைந்து கிடக்கின்ற பொருள்களை யெல் லாம் அறிவுறுத்தலின் மறை யெனினும் அமையும்.

மற்றும், இது இருக்கு, சுருதி, மறை, எழுதாக்கிளவி, ஆதிநூல், சாகை, ஆரணம், ஒத்து எனவும் வழங்கப்பெறும்.

மறை யென்பது வினைச் சொல் ஏவலில் வரின் 'மறைத்துவை' அல் லது 'ஒளித்திரு' எனப் பொருள்படும்.

பெயர்ச் சொல்லெனின்? 'மறைவாயுள்ள பொருளனைத்தையுங் கூறு வது' எனப் பொருள் தரும். புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திர மெனப்படும் என்ப.

வேதம் என்பதின் பொருளியல் முற்றிற்று.

---

## வேதப் பாகுபாட்டியல்.

வேதம் என்பது ஒன்றேயாம். இது, மந்திரம், பிராமணம், என்னும் இருவகைப் பகுதியை யுடையது. இதிலுள்ள மந்திரபாகமே சங்கிதை யென்று கூறப்படும்.

இதுபற்றியே சைமினி முனிவரும்,

"தச்சோதகேஷு மந்த்ராக்யா"

"அவ்விதிகளில் மந்திரமெனப் பெயர்"

அதாவது வேள்வியின் வடிவத்தை (வேள்விக்குரிய பொருள், தேவதை என்னும் இரண்டையும்) அறிவுறுத்துமிடத்து மந்திரமாகும் என்றருளி யுள்ளார்.

இனி, விதித்த பொருளை யுணர்த்துவது மந்திரமாமெனின்? அது பொருந்தாது, என்னை? "வசந்த காலத்தில் கபிஞ்சலப் பறவைகளைக் கொல்க" என்பதும் விதியாமெனல் வருதலின் என்க.

மனனத்திற்குரியது மந்திரமெனினும் இழுக்காகும், என்னை? பிராமண பாகத்திலும் அதிவியாத்திக் குற்றந் தங்கலின் என்க.

முன்னிலை படர்க்கை என்னும் இடங்களில், செய்வாயாக செய்குக என்றாற்போல வியங்கோள் வினைமுற்றாய் வரல் மந்திரமெனலும் பொருந்தாது; அது ஒன்றற்கொன்று அதிவியாத்திக் குற்றமுடையதாமாதலின் என்க.

அற்றேல், மந்திரத்திற் கியல்பு யாதெனின்? தனது உறுப்பு வலியாற் பொருளுணர்த்துவது மந்திரமாம். இதுவே யௌகிகசத்தமெனப்படும். இவ்வியல்பே சைமினி மதத்தர்களுக்கும் ஒத்ததாமாதலின் இதுவே மேற் காட்டிய இயல்பையு முடையதாம். வேள்விக்குரிய, பொருளையும், தேவதையையும் நினைப்பூட்டுவது மந்திரம் என்பது திரண்ட பொருள்.

இதுபற்றியே, 'மந்திரத்தாலேயே நினைத்துக்கொள்ளத் தக்கது' என்று விதிக்கின்றதூஉமென்க. அதாவது, வேள்விக்குரிய, பொருளையும், தேவதையையும், வேத மந்திரங்களாலேயே நினைத்துக் கொள்ளல் வேண்டும் ஏனைய உலக வகையால் அறிந்துகொள்ளல் கூடாது என்பதாம்.

இவ்வியல்பும்,

"புரோகித அக்கினியைப் போற்றுகின்றேன்."

"புரசமரக் கொம்பே! உன்னை வெட்டுகின்றேன்"

"அக்கினியே! நீ அவியை யுண்ண வருவாயாக" என்பது முதலிய மந்திரங்களில் பொருந்துமாறுணர்ந்து கொள்க.

சங்கிதை யென்பதும்,

பதப்பிரகிருதி:,

வர்ணாநாம் ஏகப்ராண யோக:,

பர: சந்நிகர்ஷ:, என்பது முதலிய இயல்புகளை யுடையதாம்.

ஈண்டு, யாஸ்க முனிவர்,

"தேவதைகட்கருகில் அன்போடு இருடிகளாற் செயப்படுகின்ற துதிகளே மந்திரங்கள் ஆம்" என்று கூறியுள்ளார் என்பதும் உணரற்பாலதாம்.

மற்றும், இம் மந்திரம், விதி வாதம், அர்த்த வாதம், யாச்ஞை, ஆசி, துதி, ப்ரைஷம், ப்ரவஹ்லிகா, ப்ரஸ்நம், வியாகரணம், தருக்கம், பூர்வ

விருத்தாநு கீர்த்தனம், அவதாரணம், உபநிடதம் எனப், பதின்மூன்று வகைத்தென்பர் உவட்டர்; இவை கவனிக்கத் தக்கன.

பிராமணம் என்பது, ஏது, திட்டாந்தம் முதலியவைகளில் ஒன்றை யுடைய வாக்கியமாமெனின்? மந்திரத்திலும் அதிவியாத்தி வருதலின் அது பொருந்தாது. கருவிகளையே மிகுதியாகக் கூறுவது பிராமண மென்பதும் அமையாது. என்னை? பிராமணன் பாடுகின்ற மந்திரத்தில் அதிவியாத்தி யாதலின் என்க. இதி, என்னுஞ் சொல்லை மிகுதியாக வுடையது பிராமணம் எனினும் பொருந்தாது; இத்தன்மைய மந்திரத்திலும் அதிவியாத்தியா மாதலி னென்க. கதையாயுள்ளது பிராமண மெனிலோ? அதுவும் பொருந் தாது. எமன், எமனுடைய மனைவி என்னு மிருவரின் விவாதமாய் வரும் மந்திர பாகங்களில் அதிவியாத்திக் குற்றம் வருதலின் என்க.

மற்றும், பிராமணம் என்பதற்கு இழுக்கிலாத இயல்புதான் எதுவெ னிலோ? மந்திர பாகத்தின் சேடமே பிராமணம் என்பதேயாம். இதுவே பல்வகை யியல்புகளினும் இயைந்து கிடப்பதும், குற்றமற்றதுமாமென்பது காண்க.

இதுபற்றியே, சைமினி முனிவரும் "சேஷே ப்ராமண சப்த: என்று கூறியுள்ளார்.

மற்றும், வினியோகமாவது மந்திரமாம், விதி, துதி முதலியவைகளை மேற்கொண்டது பிராமணமாம் என்பாருமுளர்.

மற்றும், இத்தகைய மந்திரம், பிராமணம், என்னும் இரண்டு பாகமுஞ் சேர்ந்துள்ளதே வேதமாம்.

அற்றாகலினன்றே ஆபத்தம்பரும்,

"மந்திரம் பிராமணம் வேதமெனப்படும்" என்றருளி யுள்ளார்.

'சில உபநிடதம், மந்திரமாம், சில உபநிடதம், பிராமணமாம்; ஆத லின் உபநிடதங்களும் இவற்றுள் அடங்கும். மந்திர பாகங்களே வேத மெனப்படும். அதனாலேயே, மந்திர பாகங்கள் வெளிப்பட்டபோது வேதம் மூன்றெனக் கொள்ளப்பட்டது. பின்னர் கல்ப சூத்திரங்கள் தோன்றியது முதற்கொண்டே பிராமண பாகங்களும் வேதமெனப் பெயர் பெற்றன' என் பர் ஒரு சாரார்.

மற்றும், வேதமானது, கருமபாகை, உபாசனாபாகை, ஞானபாகை என மூவகையான பிரிவுகளை யுடையதாம். இவற்றையே, கருமகாண்டம், பக்தி காண்டம், அல்லது தைவத காண்டம், ஞான காண்டமென்பர்.

பக்தி காண்டத்தையும் கரும காண்டத்துளடக்கி கருமபாகை, ஞான பாகை என, இருவகைப் பிரிவுடையதென்பாருமுளர்.

அற்றாகலினன்றே, சேந்தன் திவாகரமும்,

"ஞான பாகையும் கரும பாகையும்
ஆயிரு பாற்பொருள் வேத நூற்கே" என்று கூறுகின்றது.

ஆரணம் என்பது ஞானபாகத்திற்கே சிறப்புப் பெயராம். உபநிடதம் வேதத்தின் உட் பொருள் நுட்பம் என்பதாம்.

மற்றும், இத்தகைய வேதம், இருக்கு, எசுர், சாமம், அதர்வணம், என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம்.

அவற்றுள், இருக்கானது மூன்று நான்கு பாதங்களைக் கொண்ட காயத்திரி முதலிய சந்தப் பதிகங்களாலாயதாம்.

இதுபற்றியே சைமினிமுனிவரும்,

"தெஷாஊ மூத்ராயஉவெஶெந வாஉவவூவஸூா"

பொருள் வயத்தால் யாண்டுப் பாதங்கள் வகுக்கப்படுகின்றனவோ, அவைகட்கு இருக்கு என்னும் பெயர் என்றார்.

இவ்விருக்கு வேதம், இருபத்தொரு சாகைகளை யுடையது. சௌனகரின் மதத்தைத் தழுவில், சாகல, வாழ்க்கல, ஆசுவலாயன, சாங்கியாயன, மாண்டுக, ஐதரேய, கௌபீதகி, சைகிர, பைங்க என்பது முதலிய சாகைகளை யுடையதாம்.

மற்றும், இவ்விருக்கு மந்திரமானது பரோட்சம், அபரோட்சம், அத்தியான்மிகம் என மூவகைத்தாம்.

சாமம் என்பது, சா - அவ்விருக்குவேதச் சந்தப் பதிகமே, அமம் - கீதமாய்ப் பாடப் பெறுவது. அதாவது இருக்கு மந்திரத்தைக் கீதத்துடன் சேர்த்துப் பாடும்போது சாமமெனப்படுகின்றது என்பது பொருள்.

அற்றாகலினன்றே, சைமினிமுனிவரும்,

"மீதிஷு ஸாஊவவூா" "கீதத்துடன் சேர்ந்த மந்திரங்கள் சாமமென வழங்கப்படுகின்றது" என்று கூறியுள்ளார்.

இச்சாமவேதம் ஆயிரஞ் சாகைகளை யுடையது. இதனுடைய பேதங்களைச் சாமவேத ருத்திரீய முகவுரையிலும், சாமவேத சாகை என்னும் இவ்வுபோற்காதத்திலுங் காண்க.

இருக்கு, சாமம் என்னுமிரண்டினும் வேறாய் பிரஸ்லிஷ்ட எழுத்துக்களாய மந்திரத் தொகுதியே எசுர் வேதமாம்.

அதுபற்றியே, சைமினிமுனிவரும்,

"ஶேஷெ யஜுஃஶப்தஃ" "எஞ்சியதில் எசுரின் இயல்பு" (காண்க) என்றருளியுள்ளார். இவ்வேதம் நூற்றொரு சாகைகளை யுடையதாம்.

மற்றும், 'சாக' என்பது முதலிய பன்னிரண்டு சாகைகளையுமுடையதென்பார் சிலர்.

இம் மூன்று வேதத்தினும் வேறாய், போரையும் அதற்குரிய படைகளின் மந்திரங்களையும் மிகுதியாய் கூறுகின்றது அதர்வண வேதமாம். இது, ஒன்பது அல்லது பதினைந்து சாகைகளை யுடையதாம்.

மேற்கூறியவாற்றால் வேதவியாசர் வேதத்தை நான்காகப் பிரித்தனர் என்ப.

இனி, வேதத்தை வியாசமுனிவர் நான்காய் வகுப்பதன் முன்னமே, வேறு பெயர்கொண்டு நான்காய் வழங்கப்பட்டிருந்த தென்பதுமொன்று.

இதுபற்றியன்றோ, திவாகர முதலிய தமிழ் நிகண்டுகளும்,

"இருக்கு முதல் வேதம் பௌடிக மெனப்படும்" எனவும்,

'இரண்டாம் வேதம் தைத்திரிய மென்ப' எனவும்,

'மூன்றாவது சாமம் கீதனடைசாரும்' எனவும்,

"நான்காம் வேதம் அதர்வண மென்ப" எனவும் கூறுகின்றன.

மற்றும், மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியரும், தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கு உரை கூறப் புகுந்தவிடத்து, "நான்கு கூறுமாய் மறைந்த பொருளுடைமையான் நான்மறை யென்றார்; அவை, தைத்திரியமும், பௌடிகமும், தலவகாரமும், சாம வேதமுமாம். இனி, இருக்கு, எசுவும், சாமமும், அதர்வணமு மென்பாருமுளர். அது பொருந்தாது; இவர் இந்நூல் செய்த பின்னர் வேதவியாசர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தா ராதலின்" என்று கூறியுள்ளார்.

ஈண்டு, முன்னர் நான்கு வகையாக வேதம் இருக்கில், "நான்கு கூறாக இவற்றைச் செய்தார்" என்னும் நச்சினார்க்கினியர் உரையும் முரணும்; என்னை? முன்னர் நான்காய் உள்ளதை நான்காய் வகுத்தல் பயனற்றதா மாதலினென்க.

அங்ஙனமாயினும், முன்னர் நால்வகை யெனப்பட்டு ஒழுங்குற இல்லா ததை அப் பெயர்களுக்கியைய, இருக்கு, எசுர், சாமம் என்னும் பெயர் களால் இனிய முறையில் வகுத்தாரெனின் அவ்வுரை பொருந்துமாறுணர்க.

ஈண்டு, இராம்பிரான் காலத்திற்கு முன்னுள்ள கபாடபுரத்தைக் கடல் கொண்ட பின்னர் உத்தர மதுரை தோன்றிய காலத்தில், சந்தனுவின் மனைவி பரிமளகந்திக்குப் பிறந்தவர் வியாசர். பாரதத்திற் கூறிய சமதக்கினி முனி வரின் மகனும், பரசுராமருக்கு உடன் பிறந்தாருமாகிய திரணதூமாக்கினி முனிவராகிய தொல்காப்பியனார் அவ் வியாசருக்கு முற்பட்டவ ரென்ப துணர்க.

மற்றும், நாலாயிரப் பிரபந்தம் பெரிய திருமொழியில்,

"சந்தோகா பௌழியா தைத்திரியா சாமவேதியனே" என்று காணப் படு முறைக்கும், நச்சினார்க்கினியர் முறைக்கும், திவாகரம் முதலிய நூல்களி லுள்ள முறைக்கும் ஒன்றற்கொன்று மாறுபாடு காணப்படுதலானும், உப நிடதங்களுக்குரிய பெயரும் அதில் இருத்தலின் உபநிடதமோ, என ஐயப் படுமாறு இருத்தலானும், பௌஷியம் என்பது பூஷா தேவதையை மேற் கொண்ட இருக்கு வேத மெனவும், தைத்திரியம் என்பது அவ் வுபநிட தத்தை அடக்கிக்கொண்டு நிற்கும் எசுர்வேதம் எனவும், ஒருவகையாய்ப் பொருள் கொள்ளினும் அப்பெயருக்குரிய பொருள் இனிது அமையாமை யானும், அப் பெயர்கள் மிக இனியன வன்று.

இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் பெயர்களோ, வேள்வி யைப் போற்றுவது, வேள்விக்கிரியைக் கூறுவது, வேள்வியைத் துதித்துப் பாடுவது போர்புரிதல் என முறையே பிரித்துப் பொருள் கொள்ளுமிடத்து அவ் வேதங்கள் கூறும் பொருளுக்கியைந்தவைகளாமெனத் தோற்றலின் வியாசர் வகுத்த முறையே சிறப்புற்றதாமென ஈண்டு கொள்ளப்பட்டது. மற்றும், பேரறிவாளர் இதை யூகித்துணர்ந்து கொள்வாராக.

அப்பு தத்துவத்தின் குணங்கள் நான்கிலிருந்துண்டானவைகளே நான்கு வேதம். மற்றும், வேதம் என்பது நான்கு மகா வாக்கியங்கள்தான் என்றருளியுள்ளார் இராமலிங்க சுவாமிகளும்,

வேதப் பாகுபாட்டியல் முற்றிற்று.

---

# வேத மோதுமியல்.

இனி சங்கிதை யென்பதும், நிர்ப்புஜ சங்கிதை, ப்ரத்ரண சங்கிதை என ஓதும் வகையின் வேறுபாட்டால் இருவகைத்தாம்.

முதலாவதோ, மூலத்திலுள்ளவாறே ஓதுதலாம். அஃதாமாறு:— 'அக்கினிமீளே புரோஹிதம்' என்றற்றொடக்கத்து மந்திரத்தை அவ்வாறே ஓசை யெழ ஓதலாம்.

இம் மூல மந்திரத்தை விகிருதமாய் ஓதுவது 'ப்ரத்ருண' சங்கிதையாம்.

இது, பத சங்கிதை, கிரம சங்கிதை, ஜடா சங்கிதை, கன சங்கிதை, என்பது முதலியனவாகப் பலவகைப்படும்.

அஃதாமாறு:—

"அக்கினிமீளே புரோஹிதம் யக்ஞஸ்ய தேவம் ருத்விஜம்" என்பது இருக்கு வேதத்தின் முதலாவது மந்திரமாம்.

இது

## (1) பத சங்கிதை.

அக்கினிம், ஈளே, புரோஹிதம், யக்ஞஸ்ய, தேவம், ருத்விஜம், என்றிவ்வாறு சொற்களின் புணர்ச்சி, முடிவு முதலியவைகளை யுணர்ந்து ஓதுதல் பத சங்கிதை யெனப்படும்.

## (2) கிரம சங்கிதை.

அக்கினிம் ஈளே, ஈளே புரோஹிதம், புரோகிதம் யக்ஞஸ்ய, யக்ஞஸ்ய தேவம், தேவம் ருத்விஜம், என்றிவ்வாறு ஓதல் கிரமசங்கிதை யெனப்படும்.

## (3) சடா சங்கிதை.

அக்கினிம் ஈளே, ஈளே அக்கினிம், அக்கினிம் ஈளே, ஈளே புரோஹிதம், புரோஹிதம் ஈளே, ஈளே புரோஹிதம், புரோஹிதம் யக்ஞஸ்ய, யக்ஞஸ்ய புரோஹிதம், புரோஹிதம் யக்ஞஸ்ய, யக்ஞஸ்ய தேவம், தேவம் யக்ஞஸ்ய, யக்ஞஸ்ய தேவம், தேவம் ருத்விஜம், தேவம், தேவம் ருத்விஜம், என்றிவ்வாறு ஓதுதல் சடா சங்கிதை யெனப்படும்.

## (4) கன சங்கிதை.

அக்கினிம் ஈளே, ஈளே அக்கினிம், அக்கினிம் ஈளே புரோஹிதம் புரோஹிதம் ஈளே அக்கினிம், அக்கினிம் ஈளே புரோஹிதம் ஈளே புரோஹிதம் யக்ஞஸ்ய புரோஹிதம் தேவம் தேவம் யக்ஞஸ்ய யக்ஞஸ்ய புரோஹிதம் புரோஹிதம் யக்ஞஸ்ய தேவம் யக்ஞஸ்ய யக்ஞஸ்ய தேவம் ருத்விஜம் ருத்விஜம் தேவம் யக்ஞஸ்ய யக்ஞஸ்ய தேவம் ருத்விஜம், என்றிவ்வாறு ஓதுதல் கன சங்கிதை யெனப்படும்.

மற்றும், மாலா, சிகா, தவஜம், தண்டம், ரதம் முதலிய வேறுபாட்டால் மறை யோதுமுறை பலவகைப்படுமென் றுணர்க.

வேத மோதுமியல் முற்றிற்று.

---

# சாமவேதப் பாகுபாட்டியல்.

இச் சாமவேத சங்கிதையானது, பூர்வார்ச்சிகம், உத்தரார்ச்சிகம் என இருவகைத்தாம்.

இவற்றுள் பூர்வார்ச்சிகமானது, ஆக்கினேய காண்டம், ஐந்திர காண்டம், பவமான காண்டம், ஆரண்ய காண்டம், மகாநாம்நி யார்ச்கிகம் என ஐந்து பிரிவுகளை யுடையது.

மகாநாம்நி யார்ச்சிகம் என்பதைச் சேர்க்காமல் பூர்வார்ச்சிகம் முடிவு பெறுகின்றதென்பாரு முளர்.

இவை, காண்டங்களென்றும் பருவங்களென்றும் வழங்கப்படுகின்றன.

இவ்வார்ச்சிகத்தைச் சந்த ஆர்ச்சிகம் என்பாருமுளர்.

இவ்வார்ச்சிகம் மற்றுமொரு வகையால்,

| | | |
|---|---|---|
| ஆக்கினேயம், | திருஷ்டுப், | ஆருணம், |
| பகுஸாமி, | அநுஷ்டுப், | சுக்கிரியம், |
| ஏகஸாமி, | இந்திரபுச்சம், | மகாநாம்நி. |
| பிருகதி, | பவமானம், | |

என்னும் ஊக தந்திரங்களையு முடையதாம். இவைகள் பிருகிருதி தந்திரங்கள் என வழங்கப்படுகின்றன. மற்றும்,

| | | |
|---|---|---|
| ஆக்கினேய காண்டம் | கண்டம் | 12 |
| பகுஸாமி | ,, | 6 |
| ஏகஸாமி காண்டம் | ,, | 6 |
| பிருகதி காண்டம் | ,, | 8 |
| திருஷ்டுப் | ,, | 3 |
| அநுஷ்டுப் | ,, | 4 |
| இந்திரபுச்சம் | ,, | 9 |
| பவமானம் | ,, | 11 |
| ஆருணம் | ,, | 3 |
| முதற்பாதி | ,, | 7 |
| இரண்டாம்பாதி | ,, | 7 |
| மூன்றும்பாதி | ,, | 8 |
| சுக்கிரியம் | ,, | 3 |
| | ஆக பிரகிருதியின் கண்டங்கள் | 87 |

இவற்றிலுள்ள சாமங்களின் எண்கள் 1446

உத்தரார்ச்சிகமும்

| | | |
|---|---|---|
| 29 | சாமங்களைக் கொண்ட | தசராத்திரம். |
| 41 | ,, | சம்வத்சரம் |
| 23 | ,, | ஐகாஹம் |
| 28 | ,, | அஹீனம் |
| 14 | ,, | சத்திரம் |
| 19 | ,, | பிராயச்சித்தம் |
| 53 | ,, | க்ஷுத்திரம் |

என்னும் பிரிவுகளை யுட்கொண்ட ஊஹ தந்திரங்களை யுடையதாம். இதுவே இரகசிய தந்திர மெனப்படுகின்றது.

ஈண்டு, ஆக்கினேய காண்டத்திலிருந்து பவமான காண்டம் வரை, வைதிக கருமங்கட்கு உபயோகமான தந்திரங்களிலுள்ள ஸாமங்கள், ஏனைய சாம மந்திரங்களுடன் சேர்ந்து மூன்று பங்காய் ஊஹ சாமங்கள் என வழங்கப்படுகின்றன.

ஆருணத்திலும் சுக்கிரியத்திலுமுள்ள வைதிக காரியத்திற்கு உபயோகமான சாமங்கள், ஏனைய சாமங்களோடு சேர்ந்து மூன்று பங்காய் இரகசிய சாமங்கள் என வழங்கப்படுகின்றன.

கண்டங்களிலுள்ள சாமங்கள் பலவகை எண்களை யுடையன.

ஊஹ தந்திரங்களிலுள்ள ஒவ்வொரு கண்டங்களும் முறையே இருபது சாமங்களுடன் கூடியவைகள். இவ்வாறே, தசராத்திரம், சம்வத்சரம் முதலியவற்றிலுள்ள கண்டங்களு மிருக்கின்றன.

இரகசிய தந்திரத்திலுள்ள கண்டங்கள் ஒவ்வொன்றும் முறையே பத்துச் சாமங்களை யுடையன. ஊஹத்தில் இருபது சாமங்களையுடைய கண்டங்கள், 48. சாமங்கள், 960.

இரகசிய தந்திரத்தில் பத்துச் சாமங்களையுடைய தசகங்கள் (பத்துகள்) 20. சாமங்கள், 200. பிரகிருதி சாமங்கள் பூர்வார்ச்சிகத்திலிருந்து வந்தவைகள். ஊஹ சாமங்களும், இரகசிய சாமங்களும், உத்தரார்ச்சிகத்திலிருந்து வந்தவைகள்.

ஈண்டு, ஆக்கினேய மென்பது அக்கினி தேவதையை மேற்கொண்டதாம். ஐந்திர மென்பது இந்திர தேவதையை மேற்கொண்டதாம்.

இவ் வைந்திர காண்டமானது, ஆக்கினேய காண்டத்திலுள்ள, பகுசாமி, ஏகசாமி, பிருகதி, திருஷ்டுப், அநுஷ்டுப், இந்திரபுச்சம் என்பன முதலியவற்றிற்குப் பின்னர் ஓதுவதாகும்.

பவமானம் என்பது சோமத்தை மேற்கொண்டதாம்.

ஆருணம் என்பது அருணனால் வெளியாக்கப்பட்டதாம்.

சுக்கிரியம் என்பது சுக்கிரனு லாக்கப்பட்டதாம்.

இருக்குகள் கீதத்துடன் ஓதுங்கால் சாமங்க ளெனப்படுகின்றன. பூர் வார்ச்சிகத்திலுள்ள இருக்குகள் பிருகிருதிகளென வழங்கப்படுகின்றன.

உத்தரார்ச்சிகத்திலுள்ள இருக்குகள் ஊஹங்கள் எனவும், இரகசியங்க ளெனவும் வழங்கப்படுகின்றன.

பொதுவாக உத்தரார்ச்சிகத்தில் மூன்று மந்திரங்கள் சேர்ந்து ஒரு இருக்கெனப்படுகின்றன. இதிலுள்ள முதலாவது மந்திரம் பூர்வத்திலுள்ள தாம். இவ்வாறுன சாமப்பதிக மஞ்சரிகள் பெரும்பான்மை பிரகிருதி சாமங் கள் போன்றே இருக்கின்றன.

மகா நாம்நியார்ச்சிகத்திலுள்ள மந்திரங்கள் 'சக்வரி' யென வழங்கப்படு கின்றன.

உத்தரார்ச்சிகம் இருபத்தொரு அத்தியாயங்களை யுடையது.

இம் மந்திரங்கள் அவைகளைக் கண்டவராகிய இருடிகளின் பெயரால் வழங்கப்பட்டு வருகின்றன.

இச் சங்கிதையிலுள்ள மந்திரங்களின் தொகை, 1549 என்பர் சிலர்.

1472, என்பர் ஒரு சாரார்.

இப்போது இங்குக் காணப்படுகின்றவைகளோ, 1873.

இவற்றுள், 78 மந்திரங்களைத் தவிர்த்து மற்றவைகள் இருக்கு முதலிய வேதங்களிலுள்ளவைகளே; இவ் வெழுபத்தெட்டும் புதிய கீதப் பாட்டுகள்.

மற்றுஞ் சிலர் "75 தவிர்த்து ஏனையவை இருக்கிலுள்ளவைகள் ; இவ் வெழுபத்தைந்தும் புதிது" என்பர்.

மற்றும், மொத்த இருக்குகள், 1810. இவற்றுள் முற்பாதியில் உள்ளவை, 585 என்பர் சிலர்.

இந் நூலிலோ, 650 காணப்படுகின்றன.

மற்றும், பிற்பாதியிலுள்ளன, 1225 என்பர் சிலர்.

ஈண்டோ, இத் தொகையே காணப்படுகின்றது. மகாநாம்நி யார்ச்சி கத்தைப் பூர்வார்ச்சிகத்தில் சேர்க்காவிடில் ஒருவாறு ஒத்திருக்கின்றது.

பெரும்பான்மை முற்பாதியிலுள்ள மந்திரங்களே பிற்பாதியிலும் வந்திருக்கின்றன.

அவற்றுள் இரண்டு மந்திரங்கள், மூன்று முறையும், ஒன்பது மந்திரங்கள் இரு முறையும், இரண்டாம் பாதியில் முற்பாதி மந்திரங்கள் மறித்தும் மறித்தும் வந்திருக்கின்றன.

இருக்கு வேதத்தின் எட்டாம் மண்டலத்திலிருந்து பெரும்பான்மை மந்திரங்கள் வந்திருக்கின்றன.

இருக்கு வேதமந்திரங்களை நோக்கப் பழைமைகளாய்ச் சில மந்திரங்கள் இச் சாமவேதத்தி லிருக்கின்றன; ஆதலின் சாமவேதம் பழைமையானதெனவும் யூகிக்க இடமுண்டு.

அல்லது, சாம வேதம் இருக்கு வேதத்திற்குப் பிற்பட்டதென்றும் சொல்லலாம், ஏனெனில்? அதிலிருக்குமாறே இதுவும் இருத்தலின் என்க.

பல தேசங்களிலும் கீதங்களைப்பற்றிப் பலவகையான பாட பேதங்களுண்டு.

வேத மந்திரங்கள், வியாகரண (வடமொழி யிலக்கண) த்திற்கு அடங்காமையினானும், இலக்கண வழூஉச் சொற்கள் மிகுதியா யிருத்தலானும் வியாகரணந் தோன்றியதன் முன்னரேயே வேதம் உள்ளதென்பது புலப்படுகின்றது.

சாம வேதத்தின் சங்கிதை (மந்திர) பாகத்தின் பரிசேடமாகிய பிராமணம் என்பது,

| | | |
|---|---|---|
| 26 | பிரபாடகங்களையுடைய | பிரௌடப் பிராமணம் |
| 5 | ,, | ஷட்விம்சப் பிராமணம் |
| 5 | ,, | சாமவிதானப் பிராமணம் |
| 3 | ,, | ஆர்ஷேயப் பிராமணம் |
| 5 | ,, | தேவதாத்தியாயப் பிராமணம் |
| 10 | ,, | சாந்தோக்கிய பிராமணம் |
| 5 | ,, | சங்கிதோபநிடதப் பிராமணம் |

என்னும் வேறுபாடுகளை யுடையதாம். அவற்றுள் ஆறு கண்டங்களையுடைய முதலாவது படலத்தையும், மூன்று கண்டங்களையுடைய இரண்டாம் படலத்தையு முடைய வம்சப் பிராமணமானது எண்வகைத்தாம்.

இவற்றுள் பிரௌடப் பிராமணத்தை, மகாப் பிராமணம் என்றும், பஞ்சவிம்சப் பிராமணத்தைத் தாட்டியப் பிராமணம் என்றும் வழங்குவர்.

இவற்றுள், சாந்தோக்கிய வுபநிடதப் பிராமணமானது, பத்து வகையான உட்பிரிவுகளை யுடையது. அவற்றுள், திருமணஞ் செய்தல், இல்லறம்

நடாத்தல் முதலியவைகட்கு ஓதவேண்டிய மந்திரங்கள், மூ
பிரிவுகளினு மிருக்கின்றன; இது மந்திர காண்டமெனப்படும்.

ஏனைய எட்டுப் பிரிவுகளும் சாந்தோக்கியமென வழங்கப்படுகி

வம்சப் பிராமணமானது, பல்வகையான சாமவேத
எண்ணிறந்த இருடிகளின் பரம்பரைகளையுங் கூறுகின்றதாகுமிய
சில வருமாறு:—

ராணாயனி, சாத்தியமுக்கினி, துர்வாசர்கள், பாகுரி, கௌண்டி, கௌல்க்குலவி, ஔபமந்யியர்கள், தாலர், கார்க்கிய சார்வணி, வர்ஷகண்யர், குதுமி, சாலிஹோத்திரர், சைமினி, என்னு மிப்பதின்மூவரும் சாமவேதத்திற்கு ஆசிரியர்கள்.

சடி, பால்லவி, காலபவி, தண்டி, விருக், விருஷாணர், ருருகர், அகஸ்தியர், பத்கசிரர், குகதர் என்பவர்கள் சாமவேதத்தின் பேருரையாளர்கள்.

சர்வதத்தன் என்பவன் முதலாகப் பிரமன் ஈறுகவுள்ள பலவகையான சாமவேத உரையாசிரியர்களும் அதிற் கூறப்பட்டிருக்கின்றனர்.

அவர்களுள் பிரமன் முதலாவது ஆசிரியனாகக் கூறப்பட்டிருக்கின்றான்.

இவர்களுள் அறுவகையான தேவர்களைத்த விர்த்து ஏனைய ஐம்பத்தைந்து ஆசிரியர்களும் வம்சப் பிராமணத்தை நோக்க ஆயிரக் கணக்கான வருடங்களுக்கு முன்னர் இருந்தவர்களென்றே கொள்ளற்பாலார்.

அவற்றுள் முற்பாதியிலுள்ளவர்களின் பெயர்கள் வருமாறு:—சர்வதத்தகாரியர், சந்திரபூதித்ராகியாயணர், திராத ஏழுமதர், நிகலபார்ணவல்கியர், சந்தோகமாககிஜர், மித்ரவர்ச்ச தௌலங்காயனர், சுப்ரதீத ஔலுந்தியர், பிருகற்பதி குப்த சாயஸ்தியர், பவத்ராத சாயஸ்தியர், குஸ்துக சார்க்கராக்ஷியர், சிரவணதத்த கௌஹலர், சுசாரத சாலங்காயனர், ஊர்ஜயந்நௌபமந்யர், பாநும நௌபமந்யியர், ஆனந்தச்சாந்தனயனர், சாம்பார்க்கராக்ஷியர், காம்போஜ சௌபமந்யியர், மந்திரகார சௌங்காயனர், சுவாதி ரௌகாக்ஷியர், சுசிரவ வார்ஷகண்யர், பிராதரந்ஹகௌஹலர், கேதுவாத்யர், மித்திரவிந்த கோகலர், சுநீத கபாடவர், சுதேம சாண்டில்யாயனர், அம்சுத்தானசய்யர், அமாவாஸ்ய சாண்டில்யாயனர், ராதோ கௌதமர், சம்வர்க்கஜித் மகாயனர், அதிதந்வ சௌனகர், மசக கார்க்கியர், திரக கார்க்கியர், வாசிட்ட சைகதாநேயர், சாகதா ஸோபாடிதாயனர், விசட்சண தாண்டியர், கர்த்தபமுக தாண்டியாயனர், உதர சாண்டில்யர், அதிதந்வ சௌநகர், மசக கார்க்கியர், திரகோ கார்க்கியர், வாசிஷ்ட சைகதாநேயர், வாசிட்ட ஆரோஹண்ய ராஜந்யர், சுமந்த பப்ரவ கௌதமர், சூஷோ வாகுநேய பாரத்துவாசர், தரால்

ளனசர், துதி இந்திரோத சௌநகர், இந்திரோத சௌனகர், வாதாவதர், நிட்குரோதபாயசான்யர், பிரதிதி தேவதாசர், ..சாவசாயனர், சுரவர், அக்கினிபூ கசியபர், இந்திரபூ கசியபர், மித் ..யபர் விபண்டவ கசியபர், ரிஷியசிருங்க கசியப்பர், கசியபர், அக் வாயு, மிருத்தியு, பிரசாபதி, பிரமன் என்னும் அறுபது ..ளி.

இரண்டாம் பாதியிலுள்ளவர்களின் பெயர் வருமாறு:— நயனர், அரிய மபூதிகாலவர், பத்ரசர்மா, கௌசிகர், புஷ்யயசா, ஔதும்பர், சங்கர கௌதமர், அர்யமராதோ கோபிலர், பூஷமித்ரோ காபிலர், அசுவமித்ர கௌபிலர், வச்சமித்ர கௌபிலர், மூல மித்திர கௌபிலர், பிருகத்வசு கௌபிலர், கோபிலா, ராதகௌதமர் எனப் பதினைந்து பேர்களாவர்.

இவர்களுள் முன்னிருப்பவர்கள் பின் வருபவர்களுக்கு முறையாய் வித்தையைக் கற்பித்த பிதாவெனப்படுகின்றவர்கள்.

ஈண்டுச் சாயணர் முதலியோர்கள் எல்லா மந்திரங்கட்கும் பரமேஷ்டி, சுயம்பு என வழங்கப்பெறுகின்ற பிரமனே இருடி யென்கின்றனர். மற்றும் இவ்வாறே சுருதி மிருதிகளுங் கூறுகின்றன என்பது காண்க.

இச் சாமவேதத்திற்கு இரண்டு வகையான அநுக்கிரமணிகைகள் இருக்கின்றன; இவ் விரண்டுஞ் சேர்ந்தது ஆர்ஷேய பிராமண மெனப்படுகின்றது. இதுவும் பரிசேஷத்திற் சேர்ந்ததேயாம்.

முதலாவது பரிசேஷம், பதினெண் வகைத்து; அது பெரும்பாலும் ஜெர்மனியில் இருக்கிறதாகத் தெரிகிறது.

இரண்டாவது பரிசேஷம் 'கிரது சங்கிரகம்' என வழங்கப்படுகின்றது.

மூன்றாவது 'விநியோக சங்கிரகம்.'

நான்காவது 'சோமோத்பத்தி.'

ஐந்தாவது 'ஆர்ச்சிகம்' ஆறாவது 'விஷயசூசி.'

மற்றும், இச் சாமவேதத்திற்கு, மூன்று சிரௌத சூத்திரங்களும்; பஞ்சவிம்சம் பிராமணத்தின் உரை வடிவாக ஒரு சூத்திரமும் இருக்கின்றன.

மற்றும், இருக்கு மந்திரங்களைச் சாமங்களாக மாற்றுவதன் பொருட்டு ஐந்து சூத்திரங்க ளிருக்கின்றன.

கிருகிய சூத்திரமொன்றும் இருக்கின்றது.

மற்றும், பல்வகையாகச் சாமவேதத்தின் வழி நூல்களாகவும், சார்பு நூல்களாகவும் ஆயிரக்கணக்கான நூல்களிருக்கின்றன.

சாமவேதப் பாகுபாட்டியல் முற்றிற்று.

# சாமவேதச் சாகையியல்.

ஈண்டுச் சாகைகள் என்பன, மகாபாரதத்திற்குள்ள பதினெண் பருவங்களைப் போன்றனவன்று; மற்றோ, இராமாயணம் ஒன்றே, கம்ப ராமாயணம், துளசி ராமாயணம், அத்தியான்ம ராமாயணம் என்பன முதலிய சாகைகளாகப் பிரிந்தது போன்று, சைமினி முனிவர் முதலிய பல்லாயிரம் பேர்களால் ஆயிரக்கணக்கான சாகைகளாய் வேறுபாட்டை யடைந்திருக்கின்றன. இதனால் ஒவ்வொரு சாகைகளை யோதின போதிலும் சாமவேதத்தையே முழுதும் ஓதியதாகு மென்பதும் பெறப்பட்டமை காண்க. மற்றைய வேதங்களின் சாகைகளும் இவ்வாறேயாம்.

சாமவேதத்தின் சாகைகளைப்பற்றி ஒரு நூல், 'பிரதிசாகை' என்னும் பெயரால் புட்ப மகரிஷியாற் செய்யப்பட்டிருக்கின்றது.

சாமவேதத்தின் சாகைகள் ஆயிரங்களாம். ஆனால் அவற்றுள் பெரும்பான்மை தொலைந்தன. இப்போது சில சாகைகளே உலாவுகின்றன.

அற்றாகலினன்றே, அதர்வண வேதத்தின் பரிசேஷமாகிய "சரணவ்யூகம்" என்னும் நூலில்,

"தத்ர ஸாமவேதஸ்ய ஶாகா ஸஹஸ்ராணி ।
அநத்யாயேஷ்வதீயாநா: ஸர்வே தே ஶக்ரேண விநிஹதா:"

"சாமவேதத்தின் சாகைகள் ஆயிரக் கணக்காய் இருந்தன, அவை, வேதமோதத்தகாத காலத்தில் ஓதியதால், இந்திரனால் முழுதும் நாசமடைந்தன" எனவும், அவ்வற்றுள் தொலையா தொழிந்தன சிலவே விளங்குகின்றன. அவையாவன:—ராணாயனீய, சாத்தியமுக்ரம், கலாப, மகா கலாப, கௌதும, லாங்கலிக என்பவைகளாம் அவற்றுள்ளும், கௌதும சாகையானது, சாராயணீய, வாதராயணீய, வைததிருத, பிராசீனதைஜஸ, அநிட்டக என்னும் பேதத்தால் அறுவகைத்து எனவும் கூறப்பட்டிருக்கின்றது.

ஆனால், வாசற்பத்தியம், பிருகத் அபிதானம், சப்த கல்பத்துருமம் முதலியவைகளில் கூறியுள்ளதற்கும் இதற்கும் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

அவைகளாவன:— ஆசுராயணீயா:, வாசுராயணீயா:, வார்த்தாந்தவேயா:, ப்ராஞ்சலா:, ருக்வர்ணபேதா:, ப்ராசீனயோக்யா:, ஞானயோக்யா:, ராணாயனீயா:, என்பனவாம்.

இவற்றுள், ராணயனீயா: என்பது, சாட்டியாயனீயா:, சாவாயனீயா:, சாட்டிய முக்கிரியா: ; பாராயணீயா:, சாத்வலா:, சாத்யதபாவா:, மௌத்கலா:, கல்வலா:, மகாகல்வலா:, கௌதுமா:, சைமினீயா:, என்னும் பேதங்களை யுடையதாகும்.

இதை, விஷ்ணு புராணம் மற்றொருவகையாய்க் கூறுகின்றது.

அதாவது:—சாமவேத மென்னுமொரு மரத்தின் கிளைகளை, வியாசமுனிவரின் மாணாக்கராகிய சைமினி முனியானவர் கீழ்க்கண்டவாறு முறையாய் வகுத்தனர். சுமந்துவின் புத்திரர்களான சுகர்மர், சுமந்து என்னுமிருவரும் ஒரு சாகையை யோதினர். சுகர்மர் ஆயிரக்கணக்கான சங்கிதைகளைப் பிரித்தனர். அவருக்கு, இரண்யநாபி, கௌசல்யர், பௌஷ்யஞ்சி, லோகாட்சி, குதுமி, குழீதி, லாங்கலி, என்பவர்கள் மாணாக்கர்கள். இவர்கள் உதீச்ய சாமகர்கள் என வழங்கப்படுவார்கள். மற்றும், இரண்யநாபி என்பவர்க்கு ஐவர் மாணாக்கர்களுளர்; அவர்கள் பிராச்சிய சாமகர்கள் எனப்படுவார்கள். மற்றும், இரண்யநாபி என்பவருக்குக் கிருதியென்பவர் ஒருவர் மாணாக்கராவர். அவர் தமது மாணாக்கர்களுக்கு இருபத்து நான்கு சங்கிதைகளை உபதேசஞ் செய்தனர். அவருடைய மாணாக்கர் முதலியோர்கள் சாமவேதத்திற்கு அநேகம் சாகைகளைப் பிரித்தனர். இவைகள் உபசாகைகள் எனவும் வழங்கப்படுகின்றன என்பதாம். பாகவத முதலிய புராணங்களில் மற்றொருவகையாய்ச் சாகையின் வேறுபாடுகள் கூறப்பட்டிருக்கின்றன. இதனால் வியாச முனிவரின் காலத்திற்குப்பின் பல்வகைச் சாகைகள் அவருடைய மாணாக்கர்களால் புதிது புதிதாய் வகுக்கப்பட்டிருக்கலா மெனப் புலப்படுகின்றது.

மற்றும், பாணினி முனிவரின் வியாகரணத்திலுள்ள பைலாதி கணத்தில் 'ராணி' என்னும் சொல் சந்ததிப் பொருளில் வருங்கால் 'ராணயனி' என்றாகின்றது. ராணயனி என்பவர் ஒரு சாகையை யுண்டாக்கினவராவர். இதுபோன்றே, தௌலாதி, யாஸ்காதி, கோபவனாதி என்பன முதலிய கணங்களை வகுத்ததுகொண்டு யூகித்து நோக்கில் இத்தகைய வேத சாகைகளை வகுத்தவர்களின் பெயரால் அது வகுக்கப்பட் டிருக்கலாமென்றுந் தோன்றுகின்றது.

இப்போது பாரத நாட்டில் விளங்குகின்ற சாகைகள், கௌதும சாகை, சைமினீய சாகை, ராணயனீய சாகை என்னும் மூன்று சாகைகளேயாம்.

இவற்றுள்ளும், குர்ச்சர தேசத்தில் கௌதும சாகையும், கர்ணடக தேசத்தில் சைமினீய சாகையும், மாராஷ்டிர தேசத்தில் ராணயனீய சாகையும் உலாவுகின்றன.

மற்றும், கௌதும சாகையே, காசி முதலிய பல தேசங்களிலுமுள்ள குர்ச்சரர், ஸ்ரீமாலியர், நாகரர் முதலியோர்களிடத்தும், வங்க தேசத்திலுள்ளார்களிடத்தும் மிகுதியாய்க் காணப்படுகின்றது.

இக் கௌதும சாகையைத் தழுவிய சங்கிதைகள், ஷட்விம்சப் பிராமணம், தாண்டியப் பிராமணம், சாமவிதானப் பிராமணம் என்பன முதலிய அநேக வகை நூல்களாகின்றன.

அன்றியும், சாந்தோக்கிய வுபநிடதம், மசக கல்ப சூத்திரம், லாட்டியாயன சுரௌத சூத்திரம், கோபில கிருகிய சூத்திரம் முதலியவைகளும் அதைச் சேர்ந்தவைகளாகின்றன.

அதைத் தவிர்த்தும், ராணுபணீய சாகை இப்போது மாராஷ்டிர தேசத்தில் மிகுதியாய் வழங்கப்பட்டு வருகின்றது. இதுவே, இராமேச்சுரம் வரையிலுள்ள மறையவர்களிடத்தும் பெரும்பான்மையும் வழங்கப்பட்டு வருகின்றது.

இவர்கட்கு, சுரௌத சூத்திரம், கிருகிய சூத்திர முதலியவைகளும் உடன்பாடுண்டு.

த்ராகியாயன கிருகிய சூத்திரமும், காதிர கிருகிய சூத்திரமும் இவர்கட்கு உடன்பாடு.

கௌதும சாகையைத் தழுவிய கர்ணடக தேசத்தவர்கள் சிலரேயாவர்.

இச் சாகையின் பிரிவு, சைமினி சாகை, சைமினிப் பிராமணம், சைமினி சுரௌத சூத்திரம், சைமினி கிருகிய சூத்திரம் முதலியனவாம். இவை இவ்வாறு அநேக வகைகளாகின்றன.

இதுபற்றியே, வியாகரண மா பாடியகாரரும், 'சாம மறை ஆயிரங் கிளைகளை யுடையது' என்று கூறியுள்ளார்.

இச் சாகைகளின் விஷயங்கள், பிரஸ்லேஷம், விஸ்லேஷம், விருத்த, அவிருத்த, கதம், அகதம், உச்சம், நீசம், கிருஷ்டம், அகிருஷ்டம், சங்கிருஷ்ட முதலியவைகளாகின்றன.

யாஸ்க முனிவரும், இவ்வாறு 'வேதங்களின் சாகைகள் சிதைந்தொழிந்தமையினுனே, நிருத்தம் முதலிய வேதாங்கங்கள் எம்மால் செய்ய நேர்ந்தன' என்று கூறியுள்ளார்.

அற்றுகலினன்றே, வேத மந்திரமும், "ஸ்தோமம் ஜநயாமி நவ்யம்" புதிய துதி மஞ்சரியைச் செய்கின்றேன்' என்று கூறுகின்றது.

மற்றும், பிருகதாரணியமும்,

அபிஹிந ரிஷேர்வச:, "இருடியின் வாக்கைக் கேட்டிலேயோ" என்று கூறுகின்றது.

பிரசாபதியே, வேதத்திற் கூறியுள்ள உருவ நாமங்களை வகுத்தவராவர்.

இதுபற்றியே பதஞ்சலி மகரிஷியும், பாணினி, அத்-1, பாதம்-1, 25 வது சூத்திரத்திற்குப் பாடிய மியற்றுங்கால்,

"வேத மியற்றினர் இன்னவரெனக் காணப்படாவிடினும் வேதம் நித்தியமெனல் அமையாது" என்றருளி யுள்ளார்.

ஈண்டு ஒலியானது நித்தியமாமெனினும், 'பல்வகைச் சொற் கூட்டங்களாய வேதத் தொகுதி நித்தியமாதல் யாங்ஙனம்'? என்பது பதஞ்சலியின் கருத்தாமெனல் புலப்படுகின்றது.

இச் சாமவேதம் நாலாயிரம் வியூகங்களை யுடையதாம்.

சாமவேதத்தின் சாகையியல்
முற்றிற்று.

---

# சாமவேத கானவியல்.

ஓம் என்பதை நீட்டிக் கூறின் ஒரு விதமாகிய சுரம் உண்டாகின்றது. இதுபற்றியே சாந்தோக்கிய வுபநிடதமும் இதை விரித்துக் கூறுகின்றது. கண்ணபிரானும் ஆங்கிரசரிடத்தில் சங்கீத வித்தையைப் பயின்றவர் எனவும், கண்ணபிரான் 'சாலிக்யம்' என்பதோர் சங்கீதத்தை வெளிப்படுத்தியுள்ளார். அது 'யாதவர்கட்கு இனிது தெரியும்' எனவும் உபநிடதமுரைக்கின்றது. பீஷ்மருடைய உடல் விழுங்கால் சாமவேத கீதஞ் செய்ததாக சாந்திபருவம் 16-வது சுலோகங் கூறுகின்றது.

ஈண்டு, "வேத மந்திரங்கள் கானத்துடன் கூடியே துதிக்கப்படுகின்றன; இன்றேல், பிழையுற்றன" என சைமினி முனிவர் தெளிவாய்க் கூறியிருத்தலின், சங்கீதமும் வேள்வி யநுட்டானத்திற்கு வலிவையுண்டாக்கலின் கீதத்தால் சமத்காரஞ் செய்யப்பெற்ற இருக்கு வேத மந்திரங்களாலேயே துதி செய்தல் இனிது அமையுமாதலின் இருக்கு வேத மந்திரங்களை, சுரங்களுடன் கூடியவைகளாய்ச் செய்தலே சங்கீதத்தின் பிரத்தியட்சபயனும். ஆதலின் சங்கீதமும் ஒருவகையான சமத்கார கருமமே யென்பது காண்க. இப்பொருளே சாமம் என்னும் சொல்லானும் நன்கு விளங்குகின்றது.

அற்ருகலினன்றே சாங்தோக்கிய வுபநிடதமும், "சாமத்திற்கு யாது கதி? சுரம்" என்றற் ரெடக்கத்து மந்திரங்களாலும் இதைக் கூறுகின்றது.

அங்ஙனமே, 'அர்த்தைகத்வாத் விகல்ப:' என்னும் சைமினியின் சூத்திர பாடியத்தில் சபர சுவாமிகளும் "சாமவேதத்தில் சகத்திரம் கீதி யுபாயங்கள்" என்று கூறியுள்ளார்.

இனி, மார்பு, கழுத்து, தலை என்னும் மூன்றிடத்திலுமிருந்து ஒலியெழுகின்றது. இம் மூன்றையும், காலைத் தீயோம்பல், கடும்பகற் றீயோம்பல், மாலைத் தீயோம்பல் போன்றே எண்ணல் வேண்டும். இந்த மூன்றிடங்களில் எழுவகைச் சுரங்களுந் தோன்றுகின்றன.

சுரங்கள் ஏழு, கிராமம் மூன்று, மூர்ச்சனை இருபத்தொன்று, தானங்கள் நாற்பத்தொன்பதாம். இவைகள் ஒன்று கூடி ஒரு சுரமண்டில மெனப்படுகின்றன.

இவற்றுள், ஷட்சம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்னுமிவைகளே எழுவகைச் சுரங்கள். ஷட்சம், மத்தியமம் காந்தாரம் என்னுமிவைகள் கிராமங்க ளெனப்படுகின்றன.

இவற்றுள் ஷட்சக்கிராமத்தில் பதினன்கு தானங்களும், மத்தியமக் கிராமத்தில் இருபது தானங்களும், காந்தாரக் கிராமத்தில் இருபது தானங்களுமாகின்றன.

மூர்ச்சையானது, ரிஷி, பித்திரு, தெய்வம் என்னும் பேதத்தால் தனித்தனி எழுவகையாகின்றது. இதில், நந்தீ, விசாலா, சுமுகீ, சித்திரா, சித்திரவதீ, சுகா, பலா என்னு மிவ்வேழும் தேவமூர்ச்சனைகளாகின்றன,

ஆப்யாயனீ, விசுவபிருதா, சந்திரா, ஹேமா, கபர்த்தினீ, மைத்திரீ பார்ஹதீ, ஹ்ருஷ்யகா, ரசனீ, என்னு மிவ்வேழும் ரிஷி மூர்ச்சனைகளாகின்றன.

தேவ, பித்திரு, ரிஷி என்னும் மூர்ச்சனைகளை, கந்தருவர், வேள்வி, மனிதர் என்பவர்கள் முறையாய்ப் பின் பற்றுபவர்களாகின்றனர். உலகம் பற்றிய மூர்ச்சனைகள் ரிஷி மூர்ச்சனைகள் என்று வழங்கப்படுகின்றன.

ஷட்சத்தால் தேவரும், ரிஷபத்தால் ரிஷிகளும், காந்தாரத்தால் பிதிர்க்களும், மத்தியமத்தால் கந்தருவரும், பஞ்சமத்தால் எல்லா மக்களும், நிஷாதத்தால் வேள்வியும், தைவதத்தால் ஏனைய வுயிர்களும் களிப்படைகின்றன.

கானத்திற்கு, ரத்தம், பூர்ணம், அலங்கிருதம், பிரசன்னம், வியக்தம், விகிருஷ்டம், சலக்ஷம், சமம், சுகுமாரம், மதுரம் என்னுமிவைகள் பத்துக் குணங்களாகின்றன.

ஸ்ரமானது, உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம், பிரசிதம், நிகாதம், என ஐவகைத்தாம்.

சாமவேத சங்கிதையிலே, உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம் என்னும் மூன்றேயுள்ளன.

நா, அண்ணம் முதலியவைகளின் மேற்புறத் தெழுவது உதாத்தமாம். அது, 'ஆயே' என்பது போன்றதாம். நா, அண்ணம் முதலியவற்றின் கீழ்ப்புறத்திலிருந்தெழுவது அநுதாத்தமாம். அது 'அர்வாங்' என்பது போன்றதாம். இவ்விரண்டு வகையும்பற்றி யெழுவது சுவரிதமாம்.

ஈண்டு, உதாத்தத்தில் நிஷாதமும் காந்தாரமும்; அநுதாத்தத்தில் ரிஷபமும் தைவதமும்; சுவரிதத்தில் ஷட்சம் மத்தியம் பஞ்சமம் என்பவைகளு மிருக்கின்றன. இதன் விரிவை நாரதீய முதலிய கான நூலிற் காண்க.

ஈண்டு, நிஷாதம் கிருஷ்டம், தைவதம் பிரதமம், பஞ்சமம் துவிதீயம், மத்தியமம் திருதீயம், காந்தாரம் சதுர்த்தம், ரிஷபம் மந்திரம், ஷட்சம் அதிவாசிரயம் என வழங்கப்படுகின்றன.

கிருஷ்டம்—11. பிரதமம்—1. துவிதீயம்—2. திருதீயம்—3. சதுர்த்தம்—4. மந்திரம்—5. அதிசுவார்யம்—6. பரிசுவார்யம்—156. என்பன சுரத்தின் எண்கள்.

மற்றும்,—பிரேங்கணம். O துவிமாத்திரம். ப தீப்தம். Λ ஆயதை. * கருணை என்னுமிவைகளும் இவற்றின் குறிகளாகின்றன.

அகாரம்—அபிகிதம், நகாரம்—நமனம், விகாரம்—விநதம் எனவும் வழங்கப்படுகின்றன.

சந்தம், அதிச்சந்தம், விச்சந்தம் என மூவகைத்தாம்.

| அவற்றுள், காயத்திரிக்கு | — சந்த | — எழுத்துக்கள் | — 24 |
|---|---|---|---|
| உஷ்ணிக் | ,, | ,, | 28 |
| அநுஷ்டுப் | ,, | ,, | 32 |
| பிருகதி | ,, | ,, | 36 |
| பங்க்தி | ,, | ,, | 40 |

| | | | |
|---|---|---|---|
| திருஷ்டுப் — | சந்த — | எழுத்துக்கள் — | 44 |
| சகதி | ,, | ,, | 48 |
| அதிசகதி | ,, | ,, | 52 |
| சாக்வரி | ,, | ,, | 56 |
| அதிசக்வரி | ,, | ,, | 60 |
| அஷ்டி | ,, | ,, | 64 |
| அத்யஷ்டி | ,, | ,, | 68 |
| திருதி | ,, | ,, | 72 |
| அதிதிருதி | ,, | ,, | 76 |

இவைகள் சந்தங்களின் எழுத்துக்களாகின்றன.

ஈண்டுச் சாமவேத கானமானது, கேயகான மென்றும், ஆரணிய கான மென்றும் இருவகைத்து.

இதில் மக்கட் கூட்டத்திலிருந்து பாடுவது கேயகானமாம். இது இல்லற இயலுக்குரியதாம்.

துறவி, மோட்ச வேட்கையாளர் முதலியோர்கள் தவநெறியிற் காலங் கழித்தல் வேண்டுமென ஆரணியத்திலிருந்து பாடுவது ஆரணிய கான மாம்.

'சாம வேதத்தின் சந்த ஆர்ச்சிக மென்னும் முதலாவது ஆர்ச்சிக மானது இருவகைக் கானங்களையு முடையது' என்பர் சிலர்.

சிலர் 'கேய கானம் ஒன்றையே யுடையது' என்பர்.

சுரங்களும் ஏனைய வேதங்களி லுள்ளவற்றினும் சாமவேதப் பிராம ணங்களிற் கூறப்பட்டுள்ளவைகள் வேறுபாடுடையவைக ளாகின்றன.

மற்றும், ஏனைய வேதங்களிலுள்ள சுரங்கட்கும், சாம வேதத்திலுள்ள சுரங்கட்கும் மாறுபாடு காணப்படுகின்றன. இவ் வேறுபாடு விளங்குமாறு ஒரு மந்திரத்தை மாத்திரம் எடுத்துக்காட்டாகத் தெரிவிப்பாம்:—

அக்கினிம் தூதம் வ்ருணீமஹே ஹோதாரம் விசுவ வேதஸம்,

அஸ்ய யக்ஞஸ்ய சுக்ரதும்.

என்னும் இம் மந்திரம் இருக்கு வேதத்தில் வருங்கால் இவ்வோசையுடன் எளிதாய் இவ்வாறே உச்சரிக்கத்தக்கதாம்.

இம்மந்திரமே சாமவேதத்தில் வரும்போது,

3 2 3 1 2 3 2 3 1 2
அக்கினிம் தூதம் வ்ருணீமஹே ஹோதாரம் விஸ்வ வேதஸம்,

3 2 3 1 2 3 1 2
அஸ்ய யக்ஞஸ்ய சுக்ர தும்.

என்றிவ்வாறு சந்தங்களை ஏற்றே வருகின்றது.

ஈண்டுச் சாமவேதத்தில், 1—2—3—என்னும் எண்கள் முறையே, உதாத்தம், அநுதாத்தம், சுரிதம் என்னும் சுரங்களைக் குறிக்கின்றன.

மற்றும், ரி, க, ம, ப, த, நி, ஸ, என்னும் ஏழு சுரங்களும் சாமவேதத்தில், ம, க, ரி, ஸ, த, நி, ப என வழங்கப்படுகின்றன. இவை நாரத சிட்சையிற் கூறப்பட்டிருப்பனவாம். மற்றும் இவைகளின் பேதங்களைச் சாம வேத கீதத்தை யுணர்ந்த பெரியார்பால் கேட்டுணர்க.

சாமவேத கானவியல்

முற்றிற்று.

---

## தேவதை யியல்.

ஈண்டு, யாஸ்கமுனிவர், "எதை விரும்பி எத்தேவதையை 'இவர் இறைவர்' எனக் கருதி இருடியானவர் துதிக்கின்றாரோ அம்மந்திரத்திற்கு அவரே தேவதையாவர்" என்று கூறியுள்ளார். அத் தேவதைகள்; தன்மை, முன்னிலை, படர்க்கைச் சொற்களாற் கூறத்தக்கதான, அத்தியான்மம், அபரோட்சம், பரோட்சம் என மூவகைகளாகின்றன.

இவற்றுள், மண்ணுலகம், விண்ணுலகம், சுவர்க்கம் என்னும் மூன்றிடங்களிலுமுள்ள ஒளிமண்டிலங்கள், மண்ணிற்கு அக்கினி தேவதை யென்றும், விண்ணிற்கு மின்னல் இந்திர தேவதை யென்றும், சுவர்க்கத்திற்குச் சூரிய தேவதை யென்றுங் கொள்ளப்பட்டிருக்கின்றன என்ப.

இவற்றுள், அக்கினியானது, இந்திர னென்றும், சோம னென்றும், வருண னென்றும், மழை யென்றும், ரிது வென்றும் ஈண்டு விதந்து கூறப்படுகின்றது.

மற்றும், வைதீகர்களால் தனது வீட்டில் எப்போதும் வளர்த்துக்கொண்டிருக்கின்ற அக்கினி கார்ஹபத்திய அக்கினி யெனப்படும்.

பின்னர், இவ்வக்கினியிலிருந்து தக்ஷிணாக்கினி என்பது உண்டாகின்றது. அதாவது தென்திசைக்கண் நிறுவப்படுகின்ற அக்கினியாம். ஓமஞ் செய்தற்குரிய ஆகவநீயாக்கினி யென்னும் கீழ்த் திசையிலுள்ள அக்கினியும் கார்ஹபத்திய மென்னும் அவ்வக்கினியிலிருந்தே கொண்டு வரப்படுகின்றது. மற்றும், மின்னல், சூரியன், பலாச மரம், என்னும் மூன்றினுமிருந்துண்டான அக்கினிகளும் இம்மூன்றிடத்துஞ் சேர்க்கப்படுகின்றன. மகரிஷிகளும் ஆரியர்களும் அக்கினியையே தெய்வமாக வழிபட்டு வந்தார்களெனத் தெரிகின்றது. பாரீசிகர்களுக்கும் அக்கினியே தெய்வமாம்.

எல்லா வுலகத்திலும், எம்மதத்திலும், எவ்விடத்திலும் எல்லாராலும் அக்கினியே வழிபடப் பெறுகின்றது. ஒவ்வொரு வேதங்களும் தொடக்கத்திலே அக்கினியையே துதிக்கின்றன.

தேவர்கள் யாகஞ் செய்வதற்குச் சமித்துக்களைத் தேடும்போது இராக்கதர்கள் தேவர்கள்போல் வடிவுடையவராய் அவருட் கலந்துகொண்டு அவரை நிந்தித்தனர். பின்னர் ஒருவருக்கொருவர் போரிட்டனர். அப்போது, ஒருவருக்கொருவர், 'நீ ஏன் இவ்வணஞ் சொன்னாய், நான் அவ்வாறு சொல்லவில்லை' என்றிவ்வாறு கலகமுண்டாகும்போது அக்கினி மாத்திரம் ஒன்றும் பேசாதிருந்ததாலும், பிறர் சொன்னதைக் கேட்காததாலும், அது தொட்டு அக்கினியையே பெரிய தெய்வம் என தேவர்கள் வணங்கத் தலைப்பட்டனர், என்று 3—4—3—1—8. சதபதப் பிராமணங் கூறுகின்றது.

ஈண்டு, ஐவகைத்தீ, மூவகைத்தீ எனப்படும் இருவகைக் கடவுள் தீக்களும் வெளிப்படுவதற்குக் காரணமாகிய அரசமரத்தையும், அக் கடவுளுக்கு ஆசனமாகிய சமிவிருக்ஷ முதலாகிய மரங்களையும், உலகிலுள்ள தீ, மனையாளோடு இல்லத்தில் ஓம்புந் தீயாகிய ஔபாசனத்தீ எனும் இத்தீக்களைப்போன்று அவியாமல் விளங்கும் சோதி விருக்ஷத்தையும், சமைத்தற்குரிய தீயைப் போன்று வேண்டுங்கால் தீ தோன்றுதற்குரிய ஏனைய மரங்களையும், வேள்விக்கு இன்றியமையாது வேண்டப்படும் சோமக் கொடி முதலிய பிறவற்றையுமுடையதால் மலையை வேள்விக்கு உவமையாகச் சொல்லலாம்.

தீக் கடவுளானவர், அச்சுவ வுருவங்கொண்டு அதன்பால் ஒளித்தலால் அரசமரம் அச்சுவத்த மெனப்பட்டது.

இவ்வாறே, தீக்கடைக் கோலாலெழுகின்ற அக்கினியானது, காருக பத்தியம், ஆகவனீயம், தக்கிணாபனம் என மூவகைப்படும். இவற்றோடு சப்பியமும் ஆவசத்தியமுங் கூடில் ஐந்தீயெனப்படும்.

குறிப்பு :— அச்சுவம்—குதிரை.

குறிப்பு :— சப்யம்—சபையிலுள் தீ. ஆவசத்தியம்—உண்டி முதலியன செய்யுந் தீ.

தீக்கடவுள் புகுந்தொளித்தமையால் அரசமரமும், வெள்ளிக்கு இடமென வேதம் புகழ்தலால் அத்திமரமும், சுவர்க்கத்திலிருந்து மண்ணுலகத்திற்கு வந்தமையால் புரசமரசமும், தீக் கடவுளின் கோபத்தைத் தணித்தலால் சமிவிருக்ஷமும், மேக சம்பந்தத்தால் ஒளி தங்கலால் இடிவீழ்மரமும், யாகத்தலைவனாகிய மாயோனிருப்பிடமாதலின் தாமரையிலையும் அக்கினி தேவனுக்கு ஆசனமாகக் கொள்ளப்படுகின்றன.

மற்றும், இவ்வக்கினியே உருத்திர னென்றும், கடோபநிடதத்தில் நாசிகேது என்னும் அக்கினியைப் போதிப்பது போன்று, பரமான்மாவென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

ஆனால், தீயை அபிமானித்துள்ள அக்கினி தேவதையே தீ யென்பதற்கும், அதுவே அருட்பெருஞ் சோதியாகிய பரமான்மா என்பதற்கும், வேதம், உபநிடதம் முதலிய எல்லா நூல்களும் இடங்கொடுக்கு மென்பதும் ஈண்டு உணரற்பாலது.

அங்ஙனமே, அக்கினி, சோமன், வருணன், பூஷா, பிருகற்பதி, பர்வதம், குச்சம், விஷ்ணு, வாயு முதலிய பெயர்களால் இந்திரன் வழங்கப்படுகின்றான்.

மற்றும், 'இந்திரிய மிந்திர லிங்கம்' என்றற்றொடக்கத்துப் பாணினி முனிவரின் சூத்திரத்தாலும், 'சமே இந்திரோ மேதயாஸ்பிருணோது' 'சந்த மிந்திரமித்யாசக்ஷதே' என்பது முதலிய உபநிடத வாக்கியங்களாலும் பரமான்மா வெனப்படுகின்றவனும் இவ்விந்திரனே யாவன் என்பதுங் காண்க.

அகலிகையை மணந்து விருத்திரனைக் கொல்லுதல் முதலிய செய்கைகளையுடையவனான வான நாட்டரசனும் இவ் விந்திரனே யாவன்.

இந்திரோ மாயாபி: புருரூப மீயதே, என்றபடி சகுணம், நிர்க்குணம் என்னும் இருவகையாகக் கொள்வதற்கும் தக்க பிரமாணங்க ளிருக்கின்றன என்பது முணர்க.

சந்திரன், வாயு, சம்வச்சரம், என்பது முதலிய பெயர்களால் சூரியன் வழங்கப்படுகின்றான்.

காயத்திரி மந்திரத்திலுள்ள 'சவிதா' என்பது சகுணமாகிய சூரிய தேவதையையும், நிர்க்குணமாகிய பரமான்மாவையும் உணர்த்துவது போன்று இவ் வக்கினியையும் இருவகையாகக் கொள்வதற்கும் பிரமாணங்கள் இருக்கின்றன வென்பது மறிக.

ஈண்டு, பல்லாயிரம் மக்கள் கூடிய இராச்சியத்தை ஒரு இராச்சியம் என்பதுபோன்று வியவகாரத்தில் பல்வகைத் தேவதைகளைக் கொண்டு, முடிவில் எல்லாம் ஒரே தெய்வமென்று கொள்வதில் இழுக்கொன்று மில்லை. இதுவே நான்கு வேதங்கட்கும் பாடியமியற்றிய சாயணரின் கருத்தா மென்பது அவருடைய பாடியத்தை உற்று நோக்கின் தெற்றென விளங்கும். இஃதுணராதார் 'சாயணர் ஆரியமதத்தைக் கட்டிவிட்டா ரென்றும், சாயணரின் பாடியம் குருடன் கையிலுள்ள ஒரு கோல் போன்றது என்றும்' பலவாறு சிலர் குழறுவர்.

ஈண்டு அதில் ஒன்றைமாத்திரம் எடுத்துக் காட்டுவாம் :—

விருத்திரன் என்பது 'மேகம்' எனக் கூறுகின்றார் நிருத்தகாரர். இதிகாசர், 'ஒரு அசுரன்' என்பர். 'பாவம்' என்பர் மற்றொருவர். இன்னுமொரு சாரார் 'இருள்' என்பர், மற்றும் இவ்வாறே பலவகையாம் என்பதை யூகித்துணர்க.

மற்றும், இதை வாயுவினாற் சூழப்பட்ட இந்திரனென்னும் மின்னலொளியால் நீர் கொதிப்புண்டாகுமிடத்து மழையாய் விழுகின்றதென்றும், இந்திரன் வச்சிராயுதத்தால் மேகத்தைப் புடைக்கும்போது மழையுண்டாகின்ற தென்றும், மேகமாகிய மடுவின்கண் விருத்திரனாற் கட்டிவைத்திருந்த பசு வென்னும் நீரை இந்திரன் அவிழ்த்து விட்டனனென்றும் மற்றும் பலவாறாகவும் மொழிப.

ஈண்டு, நீர், ஒளி என்னு மிவ்விரண்டின் சேர்க்கையாலேயே மழையுண்டாகின்றதென்பதும், இதையே யுத்தமென வழங்குவர் என்பதும் உற்று நோக்கத்தக்கன; இவ்வனைத்தையுங் கூறுகின்றனர் சாயணர் என்பதாம்.

சோமம், என்பது இருக்கு வேதம் ஒன்பதாம் மண்டிலத்தில் பலவகையாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

இச் சோமமும் சந்திரனும் ஒன்றென்று தோன்றுகின்றது. மற்றும், 10—15—13. வது சூக்தம் இவ்விரண்டும் வேறென்றுங் கூறுகின்றது. ஆனால் சோமக் கொடிக்குள்ள குணங்களனைத்தும் சந்திரனிடத்தும் இருக்கின்றன.

"இச் சோமமானது, ஸ்ரீவை சோமம்" "ராஜாவை சோமம்" "சோமாவை பிரசாபதி:" என்றற் றொடக்கத்து நூற்றுக்கணக்கான வேத மந்திரங்களாற் கூறப்பெற்றதும், வேள்விக்கு முக்கியமானதும், இச் சாமவேதத்தில் பெரும்பான்மை துதிக்கப் பெற்றதுமாம்.

மற்றும், உபநிடதங்களிலும் மற்றைய நூல்களிலும் இச் சோமமே பரமான்மாவெனக் கூறப்படுகின்றது.

மற்றும், இச் சாமவேதத்திலும் பரமேசுரனுகவும் அது துதிக்கப்படு கின்றது. உற்று நோக்கின் ஆன்மா வெனப்படும் இச் சோமம் வேதாந்தி கள் கொள்ளும் அத்துவிதீயப் பிரமமென்றுந் தோன்றுகின்றது.

மற்றும், நூல்களில் இச் சோமமே, இந்திரன், அக்கினி முதலிய தேவதைகளாகவுங் கூறப்படுகின்றது. சோமமே படைப்புத் தொழிலைச் செய்கின்றதென்றும் பிரளயத்தில் மிஞ்சி நிற்கின்றதென்றுங் கூறப்படு கின்றது.

சாந்தோக்கிய உபநிடதத்தில் சோமம் என்பது பிராணனெனக் கூறப் பட்டிருக்கின்றது. மற்றும் பல உபநிடதங்களும் அப்படியே கூறுகின்றன.

மற்றும், சோம மென்பது ஒரு கொடி யெனவும், இது மலையின் உச்சி யிலும், சிந்து முதலிய நதிகளிலும், குருக்ஷேத்திரத்தைச் சார்ந்த 'சர்யண வதி' யென்னும் நதியிலும் உண்டாகின்றதெனவும் வேத முதலிய நூல் கள் கூறுகின்றன.

மற்றும், சோமமானது விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்கு வந்ததாக இருக்கு வேதத்தின் 9—61—10 வது, மந்திரங் கூறுகின்றது.

இச் சோமம், வானுலகத்திற்கு 'ஒரு குழந்தை' யெனவும் அழைக்கப் பெறுகின்றது. இன்னும், சந்திரன் எனவும் வழங்கப்படுகின்றது.

மற்றும், அசுரர்களின் ஆசிரியர்களான, சண்டன், மர்க்கன் என்னும் இருவரும், தேவர்கள் அசுரர்களிடத்துப் போர் புரிந்து தோல்வியடைந்தமை யால் வேள்வி செய்யத் தொடங்கும்போது அங்கு, 'சுகமந்தி' என்னும் பாத்திரத்திலிருந்த சோமரசத்தை யருந்துவதற்கு அசுரர்கள் வந்தார்கள் என்றும், பின்னர் அவர்களை வெளியே தள்ளி விட்டார்கள்' என்றும் தைத் திரீய சங்கிதை 6—4—10 வது மந்திரங் கூறுகின்றது.

அன்றியும், பிரசாபதியானவர் முன்னர்ச் சோமத்தை யுண்டாக்கிய பின்னர் மூன்று வேதங்களையு முண்டாக்கினர். அச் சோமம் தனது உள்ளங் கையில் மூன்று வேதங்களையும் மறைத்துக்கொள்ள, பிரசாபதியின் மகளா கிய சாவித்திரி யென்னும் ஒரு பெண்ணை மணந்து கொள்ளுவதற்குச் சோமம் உடன்படாததால், பிரசாபதியானவர் 'சதாகரம்' என்னுமொரு பச்சிலையைக் கொண்டு வந்து தனது மகளிடத்திற் கொடுத்து 'இதை நெற்றி யிற் பொட்டிட்டுக்கொண்டு செல்வையேல், சோமம் உன்பால் மோகிக்கும்' என்றுகூற, அங்ஙனமே அவள் செல்ல, அவளைக் கண்டு சோமம் மோக மடையுங்கால். அவள், 'சோம! நீ கைக்குள் வைத்திருக்கின்றது யாது'? என்று வினவ, இது மூன்று வேதமாமெனக் கூற, அப்போது அவற்றைச்

சாவித்திரி பெற்றுக்கொண்டனள். பின்னர் சீதாசாவித்திரி யென்னும் அப் பெண்ணைச் சோமம் மணந்து கொண்டது என்று தைத்திரீயப் பிராமணங் கூறுகின்றது.

இருடிகள், கந்தருவ உலகத்திலுள்ள சோமக் கொடியானது இங்கு எவ்வாறு வந்து சேருமென்று ஆராய்ந்து பார்த்து, கந்தருவர் பெண்பாலிடத்து மிக மையல் பூண்டவ ராதலின், கலைமகளையே காயத்திரி முதலிய சந்த வடிவங்களாய் அனுப்பினர். கலைமகளுங் கெருடனுய்ச் சென்று சோமக் கொடியைக் கொண்டுவந்தனள் வருங்கால் 'விச்வா வசு' என்னுமொரு கந்தருவன் வலிந்து அதைக் கொண்டுபோய்த் தன்னிடம் மூன்று தினம் வைத்துக் கொண்டனன்; பின்னர், ஒரு பெண்ணைக் கொடுத்து அதை வாங்கிக் கொண்டனர், என்றும்,

மற்றும், பறவை வடிவாய்க் கால்களா லிறுகப் பிடித்துக்கொண்டு சோமத்தைக் கொண்டு வந்ததால் அப் பறவையின் ஒரு சிறகு ஒடிந்து விழுந்தது அதுவே பர்ண விருட்சம் (புரசமரம்) என்றும், அல்லது சோமக் கொடியின் இலை யொன்று கீழே விழுந்து அதுவே புரசமர மாயிற்றென்றும்,

மூக்கால் கொத்திக்கொண்டு வந்தமையின் சோமரச முழுதையும் கருடன் வாயால் இழுத்துக் குடித்து விட்டனன்; பின்னர் வேட்போர்களால் மந்திரங்களைக்கொண்டு ரசம் உண்டாக்கப்பட்டது என்றும்,

சோமரசத்தை யருந்துவதில் கலக முண்டானபோது, முதலாவது இந்திரன் அருந்தல் வேண்டுமென்றும், பின்னர் வாயு, மித்திரா வருணர்கள் அருந்தல் வேண்டுமென்றும் தீர்மான மாயிற்றென்றும்,

"ஈசானிய திசையில் அசுரர்கள் தோல்வி யடைந்தமையின் அத்திசையே சோமத்தைக் கொண்டு வருவதற்கு உரியது என்றும்" ஐதரேயப் பிராமணம் முதலிய பல சுருதிகளுங் கூறுகின்றன.

இருக்கு வேதத்தில், சோமக் கொடியின் கிழங்கு கூறப்பட்டிருக்கின்றது, மற்றும் அதில், "அக் கொடிக்குப் பதினைந்து இலைகளிருக்கின்றனவென்றும் அக் கொடியும், நீரில் மிதப்பது, மரத்தில் தொங்குவது, பூமியில் முளைப்பதென மூவகைத்தென்றும். மற்றும், அதன் வகைகள் இருபத்து நான்கு என்றும்" பல்வகையான கதைகளும் வேறுபாடுகளும் உண்டு.

தேவதை யியல்

முற்றிற்று.

---

## சோம யாகத்தின் சுருக்கம்.

ஈண்டு, அக்கினிஷ்டோமம், அத்யக்கினிஷ்டோமம், உக்தியம், ஷோடசீ, அதிராத்ரம், அப்தோர்யாமம், என்னும் அறுவகைச் சோம யாகங்களுக்கும் பொதுவாய் அக்கினிஷ்டோமம் என்று பெயர்.

வேள்வித் தலைவன், சோம யாகஞ் செய்யக் கருதிச் சிலரைக் குறித்து அதற்கு உதவி செய்யுமாறு கேட்டுக்கொண்டு அவர்கள் சம்மதிக்கில் முன்னர் ஒருவனைத் தன்னிடம் அவர்களை அழைத்து வருமாறு அனுப்பல் வேண்டும், அவன் 'சோமப் பிரவாகன்' எனப்படுவன்.

இவ்வாறு யாகத்திற்கு அநுகூலர்களாக வேண்டுமென்று பிறரைக் கேட்டுக்கொள்வதற்கு 'வரணம்' என்று பெயர். இருத்துவிக்குகள் (வேட்போர்கள்) பதினாறு பேர்களாவார்கள். இவர்களுள் நான்கு நான்கு பேர்கள் ஒரு கண மெனப்படுவர். அவர்களில் அத்துவர்யு, ஹோதா, பிரமா, உத்காதா என்போர்கள் தலைமை பூண்டவர்கள். முதல் மூவரும் தர்சபூரண மாச இஷ்டியில் கிரியைகள் செய்ததுபோன்றே செய்து கொண்டிருப்பவர்கள். உத்காதா என்பவன் சோமரசத்தை ஹோமஞ் செய்வதன் முன்னர் சாம கானஞ் செய்பவன்.

| | | | |
|---|---|---|---|
| அத்துவர்யு, | பிரதிபிரஸ்தாதா, | நேஷ்டா, | உந்நேதா, |
| ஹோதா, | மைத்திராவருண, | அச்சாவாகன், | கிராவஸ்துத், |
| பிரமன், | பிராமணச்சம்ஸி, | ஆங்கினீந்திரன், | போதா, |
| உத்காதா, | பிரஸ்தோதா, | பிரதிஹர்த்தா, | சுப்ரமண்யன். |

என்பவர்கள் வேள்வி யாற்றுகின்றவர்கள்.

சோமக் கொடியைக் கொண்டு வந்து, நைவேத்தியஞ் செய்வது முதற்கொண்டுள்ள பதினாறு உபசாரங்களையும் நாடோறுஞ் செய்தல் வேண்டும். அவையாவன:—முன்னர் பிராயணீயா இஷ்டி யென்னும் அதிதி தேவியாரைப் பூசை செய்தல், பின்னர் சோமக்கிரயம் அதாவது ஒரு வயதுள்ளதும், பூனைக் கண்ணுடையதும், சிவப்பு நிறமுடையதுமாகிய பசுங் கன்றைக் கொடுத்துச் சோமத்தை விலைக்கு வாங்கல், பின்னர் ஆதித்யா இஷ்டி, அதாவது சோமக் கொடியை அதிதியாகப் பாவித்துப் பூசை செய்தல், பின் பிரவர்க்கியம், அதாவது யாகத்திற்கு ஒரு தலையைப் போன்றதாம். அதுவோ, மூன்று வகையான மண்ணைக் கொண்டுவந்து அவற்றுடன் வெள்ளாட்டின் மயிரையுங் கலந்து முக் கலசங்களை அடுக்கிவைத்தது போன்று ஒரு கலசஞ் செய்து அதின்மேல் (இது மகாவீரம்) நெய்யைப்பூசி வேத மந்திரங்களைச் சொல்லிக்கொண்டு சுட்டு, நெய், பசுவின்பால், வெள்ளாட்டுப் பால் மூன்றையும் அக்கலசத்தில் வார்த்துக் கொதிக்கவைத்து (இது கர்மம்) ஆகுதி செய்தல்.

உபஸத்யாகம் விரோதிகளை வெல்வதன் பொருட்டு நெய்யை ஆகுதி செய்தல்.

பின்னர்ச் செய்வது அக்கினிஷோமீய பசுயாகம் எனப்படும். அதாவது ஒரு வெள்ளாட்டுக் கடாவைப் புரசமரக் கொம்பாகிய யூபத்தில் கட்டி, இச்சிமரத்தின் கொம்பால் அதைத் தொடல் முதலிய அநேக கருமங்களைச் செய்து ஆக்கினீந்திரன் என்பவன் சாமித்திர சாலை என்னுமிடத்திற்கு (கடாவைக் கொல்லுமிடத்திற்கு)க் கொண்டு போய், தலை மேற்கும், கால்கள் வடக்காகவும் வைக்க, வேள்வித் தலைவன் கொல்லும்படி சொன்னவுடன் கொல்லுகின்றான். அப்போது வேள்வித் தலைவன், கடாவே! நீ கொல்லப் படவில்லை துன்பமற்ற சுகமயமாகிய இடத்திற்குச் சூரியன் உன்னைக் கொண்டு போவான் என்னும் பொருள் கொண்ட மந்திரத்தைச் சொல்லுகின்றான்.

இவ்வாறு பசு என்னும் அக் கடாவை வாய்மூடிக் கொன்று அதன் ஈரலின் பக்கத்திலுள்ள ஒருவிதமான மெல்லிய சவ்வை எடுத்து ஒரு முள்ளில் வைத்து ஓமத் தீயில் காய்ச்சி ஆகுதி செய்தல், இது அக்கினி சோமம் என்பவர்களின் ஆராதனையாம்; இதை 'வபா ஹோமம்' என்பர்.

பின்னர், சவனீய பசு யாகம் என்பது, சோம யாகத்தில் மூவகைத்து அதாவது, காலைச் சவனம், மத்தியான சவனம், மூன்றாவது சவனம் என்பதாம்.

இதில் பசு யாகத்தில் ஈரல் பை. (வபை) இது காலையில் ஓமஞ் செய்யப்படுகின்றது. பசுவின் அங்கங்கள் மூன்றாவது சவனத்திலும் ஓமஞ் செய்யப்படுகின்றன, மற்றிரண்டும் புரோடாசத்தால் ஓமஞ் செய்யப்படுவன. இது சவனீய புரோடாச யாக மெனப்படும்.

பின் சோமத்திற்குச் சரு என்னும் பொங்கல் அன்னஞ் செய்து ஆகுதி செய்தல்.

பின் பலவகைக் கருமங்களைச் செய்து சோமக்கொடியை இடித்துப் பிழிந்து ஆகுதி செய்தல். இவ்வாறு சோமயாகத்திற்கு அநேக வகையான அங்க யாகங்களுண்டு அவைகளைப் பிறவிடத்திற் காண்க.

மற்றும், வாயு, விஷ்ணு, வருணன், யமன், அசுவினி குமாரர்கள். அதிதிதேவி, சரஸ்வதி, யமுனை நதி, அக்கினியின் மனைவி, உடன் பிறந்தாள் ரிபு, கருடன், பாத்திரங்களான தேவிகள் என்பவர்களும் ஈண்டுத் தேவர்களென வழங்கப்படுகின்றனர்.

மற்றும், உஷாக்கால தேவதை எண்ணிறந்த வகையாய் விதந்து கூறப்பட்டிருக்கின்றது. பிருகற்பதிசவனம், அந்தணருக்கும்; இராச சூயமும், அசுவமேதமும் அரசருக்கும்; சோம யாகம் வணிகருக்கும்; உரித்தென்ப.

ஈண்டு ரிஷிகள் என்பது வேதமந்திரத்தைக் கண்டொழுகிய தீர்க்க தரிசிகளெனப்படுவார்கள்.

வேதங்களை யியற்றியவர் ரிஷிகளேயாவர்; ஏனெனின்? அவர்கள் பெயரைக்கொண்டு மந்திரங்கள் வழங்கப்படுதலின் என்பர் ஒரு சாரார்.

சோம யாகத்தின் சுருக்கம்

முற்றிற்று.

---

# தமிழும் ஆரிய வேதமும்.

ஈண்டு, பொங்கர் நாடு, ஒளி நாடு, தென்பாண்டி நாடு, குட்ட நாடு, குட நாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழி நாடு, மலை நாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு, என்னும் செந்தமிழ் நாட்டிலுள்ள பேரறிவாளர்களும் பேரருளாளரும் ஏனையோரும் வடமொழி மறையைப் போற்றுகின்றார்களென்பது முணர்க அது வருமாறு:—

தொல்காப்பியம்.

அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலு
முளவென மொழிப விசையொடு சிவணிய
நரம்பின் மறைய வென்மனார் புலவர்.

......................................புணர்ச்சிவாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப.

உயர்ந்தோர்க்குரிய ஓத்தி னான.

வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது. எனவும்,

வீரசோழிய வுரை.

வடமொழிச் சந்தம் இருபா னாறெ‌ன

இருவித சந்த மிவற்றோன் றெழுத்தா லிலங்குமற்றை
யொருவித மாத்திரை யாலே யொளிருமிது
பொருவரி தாகிய வாரியத் துண்டு பொதியமென்னும்
அருவரை மாதவன் கூறுந் தமிழுக் கருகமன்றே.

வடசொல் செய்யு ளீட்டச் சொல்லே. எனவும்,

அப்பர் தேவாரம்.

"சாமுண்டி சாம வேதங் கூத்தொடும் பாட வைத்தார்"

"ஆதியிற் பிரம னார்தாம் அர்ச்சித்தா ரடியி ணைக்கீழ்
ஓதிய வேத நாவர் உணருமா றுணர்த்த லுற்றார்"

"பாடினார் சாம வேதம் பைம்பொழிற் பழனை மேயார்"

"சந்தோகம் சாமமோதும் வாயானை" எனவும்,

சுந்தரர் தேவாரம்.

"சாம வேதம் பெரிது முவப்பானை"

"சாம வேதனைத் தன்னொப் பிலாதானை"

"குறிகொள் பாடலி னின்னிசை" எனவும்,

சம்பந்தர் தேவாரம்.

"தயங்கு சோதி சாம வேதர்"

"சாம வேதமோர் கீத மோதிய தசமுகன் பரவுநாம தேயமுடையர்"

"சாகை யாயிர முடையர் சாம மோதுவ துடையர்"

"தென்சொல் விஞ்சமர் வடசொற் றிசைமொழி யெழில்நரம் பெடுத்து,
துஞ்சு நெஞ்சிருள் தூங்கத் தொழுதொல் புகலூர்" எனவும்,

"பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்று
மலராய் வழிபாடு செய்யா மறைக் காடா"

"எரி பெருக்கு வரவ்வெரியீசன
துருமருக்கமாவ துணர்கிலார்"

"இருக்கு நான்மறை யீசனையே தொழுங் கருத்தினை நினைப்பார்கள்"
எனவும்,

திருமந்திரம்.

"வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதி வீடு பெற்றாரே" எனவும்,

சிலப்பதிகாரம்.

"ஓதிய வேதத் தொளியுறி னல்லது போதார்" எனவும்,

நீலகண்ட பாடியம்.

"வேதோபி சிவாகம:" "வேதமுஞ் சிவாகமமே"
ஸ்ரீ ருத்திரத்தை யோதினவர் உருத்திரபசுபதி நாயனார். எனவும்,

பெரிய புராணம்.

"தேவரு மெழுதவொணு மறையைத் தமிழ்செய்து திருப்பதிகம் மூவரும்" எனவும்,

அருமறைகள் திருக்காப்புச் செய்துவைத்த அக்கதவம், திருப்புள் ளிருக்குவேளூர்.

திருவாசகம்.

"வேதங்க ளையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே"
"பண்டாய நான்மறைக டாமறியா வெம்பெருமான்"
"அருமறையின் நான்கோல மிட் டரற்று மப்பனே"
"அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச் சொல்லினுற் றுதிக்கும்
சுருதி செந்தமி ழாக்கிய மொழியர்"

"தொகுத்தவ னருமறை அங்கம் ஆகமம்
வகுத்தவன் நினைத்தனை வேதங்குன்றுத் தில்லைச் சிற்றம்பலம்" எனவும்,

வேதாரணிய புராணம்.

"வீரிய சத்தியாவும் வீந்தனம் மீள நின்னால்
ஆரிய மாகி" எனவும்,

திருவாதவூரர் புராணம்.

"பங்கயச் செங்கரம் நான்கும்
வேத புத்தகமு மமுதமும் தன்விழி மணிவடமும்" எனவும்,

சீவக சிந்தாமணி.

"மாமலர்த் தெரியலான் மணிமிடற் றிடைக்கிடந்த
சாம கீத மற்று மொன்று சாமி நன்கு பாடினன்"
"நரம்புறு தெள்விளி நவின்ற நான்மறை" எனவும்,

சிலப்பதிகாரம்.

"நான்மறை மரபிற் றீமுறை யொருபால்
முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி" எனவும்,

மணிமேகலை.

"சார்பிற் றோன்று வாரண வேதக்
காதி யந்த மில்லையது நெறியெனும்" எனவும்,

திருவள்ளுவர் மாலை.

"செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே" எனவும்,

நீலகேசி.

"நாத்திக மல்லது சொல்லலையாயின் முனுள் பயந்த
சாத்திர மாவது வேதமன்றோ வதுதான் சுயம்பு" எனவும்,

கந்தர் கலி வெண்பா.

"பாமேவு தெய்வப் பழமறையும்"

"ஏடகத் தெழுதா வேதச் சிரத்திருக் குமிவன்"

"நின்னிலை நிகழ்த்தாது மறைத்துக் கூறியதாகுமாதலின்
நேரினர் மறையெனச் செப்பினர் தாமே" எனவும்,

சகலாகம பண்டிதரின் நூல்.

"மறைக ளீசன்சொல்"

"ஆரண மாகமங்க ளருளின் னுருவுகொண்டு" எனவும்,

நற்கீரர் கோபப்பிரசாதமுடையரின் நூல்.

"ஆரியப் புத்தகப்பேய் கொண்டு புலம்புற்று"

திருமுருகாற்றுப்படை.

ஒருமுகம்,

"மந்திர விதியின் மரபுளி வழாஅது
அந்தணர் வேள்வி யோர்க்குமே" எனவும்,

சிவஞான பாடியம்.

"வேதம் நித்தனுகிய பரமசிவனுற் கூறப்பட்டமையினானும், இறுதிக் காலத்துப் பரமசிவனிடத்திலொடுங்கிப் படைப்புக் காலத்திற் றோன்றுமாதலானும் நித்தியமென உபசரித்துக் கூறப்பட்டது" எனவும்,

திருவிளையாடற் புராணம்.

"ஈட்டிய சாம மாயிர முகத்தா னிமிர்ந்தது வடதிசை முகத்தில்,
பிரணவ முதித்த தவனிடை வேதம் பிறந்தது" எனவும்,

புறநானூறு.

"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி" எனவும்,

சிறு பாணாற்றுப்படை.

"அருமறை நாவி னந்தணர்க் காயினும்" எனவும்,

பெரும் பாணாற்றுப்படை.

"வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாள ருறைபதி சேப்பின்" எனவும்,

பட்டினப்பாலை.

"நான்மறையோர் புகழ்பரப்பியும்" எனவும்,

நான்மணிக்கடிகை.

"மறையறிப அந்தண் புலவர்" எனவும்;

ஆசாரக் கோவை.

"வான்முறை யான்வந்த நான்மறை யாளரை" எனவும்,

ஒட்டக்கூத்த இராமாயணம்.

"தேன்றிக ழிதழி யான்றன் திருச்செவி சார நின்கை
தான்றிகழ் வீணை யாகப் பாடுதி சாம மென்றார்"

"பன்னருஞ் சாம கீதம் பரிவுடன் பாட லுற்றான்"

"மனுநூறும் வேதமவை யோரா யிரமும்
விளங்குங் கலையுந் தசக்கிரீவ னோதை"

"முன்கையில் நரம்பு வெட்டி முன்னிருக் கிசைகள் பாட" எனவும்,

பெரிய திருமொழி.

"பண்டைநான் மறையும் வேள்வியுங் கேள்விப் பதங்களின் பொருளுந் தானும்"

"சந்தோகா பௌழியா தைத்திரியா சாம வேதியனே நெடுமாலே" எனவும்,

இன்னும் பிறநூல்களிலும் இப்படியே வருவனவற்றைக் காண்க.

இச் சாமவேதத்தில் காணப்படுகின்ற இருடிகளைத் தவிர்த்து மற்றொரு முறையாகவும் இதற்கு இருடிகள் காணப்படுகின்றார்கள்.

உபோற்காதம் மிக விரியுமென்றஞ்சிச் சுருக்கினோம். நுண்ணிய மதியுடையோர் இவ்வாறே யூகித்துணர்ந்துகொள்வாராக.

---

## தமிழ் மறையியல்.

ஈண்டு, அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றையே பயனாகக் கொண்ட தமிழ்மறைகள் உள்ளன; அவை, தென்றமிழ் நாட்டைக் கடல் கொள்ளுவதற்கு முற்காலத்தே நிலவியிருந்தன. அவைகளே தொல்காப்பியப் பாயிரத்தில் விதந்தோதப்பெற்றன.

அற்றாகலினன்றே, 'பல்யாகசாலை முதுகுடுமி' என்னும் தமிழ் வேந்தனைக் கூறும் புறநானூற்றுச் செய்யுளும்,

'நான்மறை முதல்வர் சுற்ற மாக' என்று கூறுகின்றது.

ஈண்டு, முதுகுடுமி மன்னன், வடமொழி மறையை வகுத்த வியாசர் காலத்திற்கு நெடுநாள் முன் வாழ்ந்தவன் என்பதனால் ஆண்டெடுத்துக் கூறியது, தமிழ் மறைகளே யென்பது உணரற்பாலது.

மற்றும், கல்லாலடிக்கீழ் சொல்லாமற் சொன்ன வேதம் நால்வரின் பக்குவத்திறம்பற்றி நான்காயிற்று. தமிழ் நூல்களில் ஆரிய நான்மறை யென்றெடுத்துப் புகழ்ந்திருத்தலோ, சிவனது வழிபாட்டைச் செவ்வனே கூறும் தமிழ்மறை, ஆரியமறை யென்றே வழங்கப்பட்டு வந்தமையாலென்க. இவ்வாற்றால் புருடப்பேறு நான்கையுங் கூறும் தமிழ்மறைகள் தமிழில் நான்கு உண்டென்பது அநுமானித்து அறியப்படுமென்பர் செந்தமிழ் நாட்டுக் கவிஞர் சிலர்.

உபோற்காதம் முற்றிற்று.

---

# சாயணர் சரித்திரச் சுருக்கம்.

வித்தியாரண்ய சுவாமிகளென்றும், சாயணர் என்றும் அழைக்கப்படும் இம் மாதவர், ஆந்தர தேச மென்னும் தெலுங்கு நாட்டில் வறியதோர் அந்தண குலத்தில் அவதரித்து, வறுமையாற் பல இடுக்கணை யடைந்து மனம் நொந்து இளமையிலேயே செல்வனுதல் வேண்டுமென்னும் பேரவாக் கொண்டு கல்வி பயின்று வந்தனர். அவருக்கு அவ்வெண்ணம் விரைவிற் கைகூடாமையின், திருமகளையும், கலைமகளையுங் குறித்துத் தவஞ் செய்யக் கருதிக் காட்டிற் சென்று அங்குத் திரிந்துகொண்டிருக்குங்கால், ஒரு நாள் அரசனுடைய மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த 'புக்கணன்' என்னு மொருவனைக் கண்டு, அவனிடத்தில் தனது வருத்தத்தை யெடுத்துக்கூற, அதைக் கேட்ட புக்கணன் இரக்கமுற்று தினந்தோறும் வேண்டிய பாலைத் தருவதாக வாக்களித்தனன். அதற்கு வித்தியாரண்ய சுவாமிகள் அரசனுக்குரிய பாலை யான் அருந்தல் கூடுமோ, என்றனர். அதற்கவன் ஐய! அரசனுக்கு வேண்டிய பால் குறைவிலாதிருக்கின்றது வீணே யொழுகிப்

போகின்ற பாலில் சிறிது தங்கட்குக் கொடுப்பதலால் யாதொரு இழுக்கு மில்லை. மற்றும், அது அரசனுக்கும் புண்ணியத்தையே வளர்க்கும் என்றனன். அதற்குச் சாயணரும் அவ்வாறியைந்து கொண்டு பலநாள் தவஞ் செய்து வருங்கால் புக்கணன் வாக்களித்தபடியே நாடோறும் பால் கொடுத்து வந்தனன். அதை யருந்திகொண்டே எண்ணியவாறு பயனை யெய்துவேமென்னும் ஊக்கத்துடன் இடையறாது தவஞ்செய்து வந்தனர். அக்கால் புக்கணனிடத்தில் அவர் பேரன்புடையவராயினர்.

இவ்வாறு நெடுங்காலங் கழித்த பின்னர் கலைமகளும், திருமகளும் புக்கணனிடத்திற்றோன்றி "மாதவன் கருத்து இப்பிறப்பில் நிறைவேறாது" என்று கூறியருளினர்.

பின்னர், புக்கணன் அச் செய்தியை மாதவர்க்குணர்த்த அவர் அதைக் கேட்டு மனத் தளர்ச்சியடையாது முன்போலவே, விடாமல் தவத்தையே செய்துவந்து இறுதியில் மனவெறுப்படைந்து சிகை பூணூல் முதலியவற்றை நீத்து துறவி வேடம் பூண்டனர்.

அதைக்கண்ட நாமகளும், பூமகளும் அருளால் வெளிப்பட்டு; மாதவ! உனக்கு வேண்டியது யாது? என வினவியருள; அதற்கு மாதவர் 'இப்போது யான் துறவியாதலின் கலைமகளின் அருளொன்றையே வேண்டுகின்றேன்; திருமகளின் அநுக்கிரகத்தை வேண்டேன்; புக்கணன் உங்களுடைய திருவருளை யடைவதற்கு நிமித்தனா யிருந்ததால், திருமகளின் அருள் அவனுக்கு உண்டாதல் வேண்டும் என்றனர். அவர்கள் அங்ஙனமே யாகுக என்று அநுக்கிரகித்து மறைந்தனர்.

இவ்வாறு நிகழ்ந்த சில நாட்களுக்குப் பின்னர், அத்தினாபுரத்து மன்னன் மாண்டுவிட மந்திரிகள் பட்டத்து யானையை அலங்கரித்து அபிடேக கலசத்தை அதன் கையிற் கொடுத்து ஒரு அரசனைப் பார்த்துக்கொண்டு வருமாறு பரிசனங்களுடன் விடுத்தனர். அது பல நாடுகளைக் கடந்து புக்கணனிருந்த நாட்டை யடைந்து அங்கு அவன் வீட்டில் நித்திரையிலிருந்த அப் புக்கணனை யடைந்து தன்பாலுள்ள கங்கை நீரை அவன்மேற் சொரிந்தது உடனே புக்கணன் துணுக்குற்றெழுந்தனன்; எழுந்தவுடன் அந்த யானை அவன் கழுத்திலொரு மாலையைச் சூட்டித் தன் முதுகின்மேலுள்ள தவிசின் மேலேற்றிக்கொண்டு போய் அரசனாகச் செய்தது.

பின்னர், சிலநாட் கழித்து மாதவாசாரியர், முன்னர் புக்கணன் தன்பால் வைத்த அன்பானது இப்போது அரசனா யிருக்கும்போதும் அவன்பால் இருக்குமோ, என நிதானித்தற்பொருட்டு அவனிடத்துச் செல்ல, அம் மன்னனும் ஒற்றரால் இவர் வரவை யறிந்து முன்னினும் மிகுந்த அன்பும், வணக்கமும் அடக்கமு முடையனாய் நடந்து எதிர்கொண்டு வந்து இவரைத்

தழுவிக் கொண்டாடி இவரையே தனக்கு மிகப் பிரியராகக்கொண்டு எல்லாக் காரியங்களையும் இவருடைய கருத்திற்கியைய உசாவிக்கொண்டே நடத்தி வருவானாயினன்.

அவ்வாறிருக்குங்கால் ஒரு தினம் புக்கண அரசன் மாதவரை நோக்கி, 'ஐய! உமது பெயருங் கீர்த்தியும், இவ்வுலகில் யாண்டும் நிலைபெற்றுலவுமாறும், எனக்குப் பின்வரும் இளவரசர்கட்கும் பயன் கொடுக்கும் பொருட்டும் நீர் சில நூல்கள் செய்தருளல் வேண்டும்' என்று வேண்டிக்கொள்ள அதற்கு மாதவரும் அங்ஙனமே செய்வாமென்று கூறிவிட்டு அது முதற்கொண்டு நூல்கள் செய்யத்தொடங்கினர்! தொடங்கி பஞ்சதசி, வேதபாடியம், வையாசிக நியாயமாலை, சைமினீய அதிகரணமாலை, சீவன்முத்தி விவேகம், அநுபூதிப் பிரகாசிகை, தாதுவிருத்தி, சங்கர திக்குவிசயம், மாதவ நிதானம், சூத சங்கிதை யுரை, பராசர மாதவீயம் என்பது முதற்கொண்டு எண்ணிறந்த நூல்களையும் பாடியங்களையும் இயற்றியருளினர். இவர் அவ்வாறு செய்திலரேல் வைதிக சமய நூல்கள் கெட்டொழிந்து அம்மதமும் மிகக் குன்றியதாய் இருக்கும். இவர் சங்கர விலாசம் என்னும் ஒரு நூலும் நாற்பதாயிரஞ் சுலோகங்களை யுடையதாகச் செய்திருக்கின்றனர்.

இவர், பம்பை நதிக்கரையில் உள்ள வித்தியா நகரத்தில் அரசு புரிந்திருந்த ஹரிஹர ராயர் காலத்தவர். இற்றைக்குச் சுமார் ஐந்நூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்றோன்றியவர் எனத் தெரிகிறது.

இவருடைய தந்தையார் 'மாயணர்' என்பவராவர். மற்றும், இவருடைய சகோதரரே சாயணர் என்பர் சிலர்.

இவ் வித்தியாரணிய சுவாமிகளையே மாதவரென்றும், சாயணரென்றும் வழங்குகின்றனர். மற்றும், 'புக்கண ராசன், இவ்வித்தியாரணிய முனிவரொடு சாயணர் முதலிய இருபத்து நான்கு வடமொழிக் கவிஞர்களை வைத்துக்கொண்டு பற்பல நூல்களை இயற்றி மாதவர் பெயராலேயே வெளியிட்டனர்' என்பர் சிலர்.

'மாதவாசாரியரே வேதங்கட்குப் பாடியஞ் செய்துள்ளார்' என்பதே பெரும்பான்மை வழங்கப்பட்டு வருகின்றது.

பாடியத்தை நோக்கிலோ, பலர் குழுமியே செய்துள்ளார் என்பது புலப்படுகின்றது.

எவ்வாறிருப்பினும் சாயண பாடியமே மேல்நாட்டறிஞர்களாலும், இந்நாட்டுப் பேரறிஞர்களாலும் போற்றப்பட்டு வருகின்றது என்பதைக் காண்க.

மற்றும், இவர், விசிட்டாத்துவித மதத்திலுள்ள ஒரு பேராசிரியருடன் விவாதஞ் செய்து தோல்வி யடைந்த காலத்தில், அதைக்கண்ட தேசிகர் என்னும் வடகலையை நிறுவிய வைணவப் பெருந்தகையார் ஒருவர்,

சுலோகம்:

அஸிநா தத்த்வமஸிநா பரஜீவ ப்ரபேதிநா ।
வித்யாரண்யம் மஹாரண்யம் அக்ஷோப்யமுநிரச்சிநத் ॥

"தத்துவமசியாகிய வாளால் எல்லாச் சமய நூல்களையும் வெட்டுவதும், தான் ஒன்றினுலேயும் வெட்டப்படாததுமாகிய வித்தியாரண்யத்தை (கல்விக் காட்டை) ஒரு முனிவர் வெட்டினர்" என்று கூறி யிருக்கின்றனர் என்ப.

இவர் எல்லா நூல்களிலும் சர்வ சுதந்தரர். இவர் நான்கு வேதங்கட்கும் பாடிய மியற்றப் புகுந்து பொருளை நோக்கி முன்னர் எசுர் வேதத்திற்கே பாடிய மியற்றியுள்ளார் என்பதுணர்க.

இவருடைய சரிதை உண்மையாய்த் தெரியவில்லை, தெரிந்து அளிக்கின் மறுபதிப்பில் பதிப்பிக்கப்பெறும்.

சாயணர் சரித்திரச் சுருக்கம்

முற்றிற்று.



உ



பதினொரு

## உருத்திர கீதப் பாடல்கள்

என்னும்

# சாமவேத உருத்திரீயமும்

பேராசிரியருடைய பாடியத்தைத் தழுவி

வேத மொழிபெயர்ப்பாசிரியர்

காசிவாசி

சிவானந்த யதீந்திர சுவாமிகள் எழுதிய

## விருத்தியுரையும்.



ஓ

உருத்திராய நம:

# சாமவேத உருத்திரீய சங்கிதை

## உபோற்காதம்.

ஈண்டு, கைவல்யம், சாபாலம் என்பது முதலிய உபநிடதங்களில், முத்திக்கு ஒரு நெறியதாமெனவும், அந்தணர் முதலியோர்களைக் கொன்ற பாதக முதலியவைகளைப் போக்குவதெனவும் கூறப்பட்டிருக்கின்றதும், மற்றும், எல்லாப் பாவங்கட்கும் பிராயச்சித்தமானதென்று தருமநூல்களாற் கூறப் பெற்றதும், மிகப் புநிதமுடையதென்று காந்தம் முதலிய புராணங்களனைத்தும் இனிதெடுத்துப் போற்றுகின்றதுமாகிய, "சத உருத்ரீயம்" எனப் பெயர்பெறும் ஸ்ரீ உருத்திராத்தியாயமே அனைவராலும் ஓதற்பாலதாம். அதனாலேயே உருத்திரன்பால் பேரன்புண்டாதலும் இனிது கூடும். அன்றியும், பட்டபாஸ்கரர், அபிநவ சங்கரர் முதலியோர்களாற் செய்யப்பெற்றுள்ள உருத்திராத்தியாய பாடியங்களும் இப்பொருளையே தெளிவாய்க் கூறி யிருக்கின்றன. இவ்வாற்றால், எசுர் வேதத்திலுள்ளதும், யாண்டும் புகழப்பெற்றதும், பண்டைக்காலந்தொட்டு வழக்கத்தில் வந்துகொண்டிருப்பதும், ஸ்ரீ உருத்திரனைச் சிறப்பாக வியந்தோதுகின்றதுமாகிய உருத்திராத்தியாயத்தை ஓதுவதுகொண்டே, இச் சாமவேத உருத்திராத்தியாயத்தை ஓதுதலால் வரும் பயனும் ஒருதலையாகப் பெறப்படுமாதலின், இச் சாமவேத உருத்திரீய மந்திரங்களை ஓதுதலும், செபித்தலும் பயனற்றவைகளல்லவோ வெனின்?

நன்று கூறினாய், பிரமாணங்களின் ஆற்றலைக்கொண்டு, இவ்விரு வகை உருத்திரங்களுள் ஒன்று உருத்திரப் பிரீதிக்குக் காரணமாமென்றேனும், அல்லது இருவகை உருத்திரங்களும் ஒன்றுகூடியே உருத்திரப் பிரீதிக்குக் காரணமாமென்றேனும் இனிது துணியப்படுதலின், இச் சாமவேத உருத்திரீயத்தை ஓதலும், செபித்தலும் பயனுடையவைகளே யெனப் பெறப்படுதலின் பயனற்றன என்பது யாங்ஙனம்?

அற்றாகவினன்றே, "நெற்களாலேனும், கோதுமைகளாலேனும் வேட்க" என்றற்றொடக்கத்துச் சுருதி வாக்கியங்களைக்கொண்டு, நெற்களேனும், அல்லது கோதுமைகளேனும் வேள்வியின் சாதனமானதூஉம் என்க. இவ்வாற்றால் இருவகை உருத்திரங்களையும் விரும்புவோர்க்கேனும்,

அல்லது, இரண்டனுள் ஒன்றையே விரும்புவோர்க்கேனும், இச் சாமவேத உருத்திரமும் உண்மையாக வேண்டற்பாலதேயாமாதலின், இதன் பொருளை விரித்துக் கூறுதலும் பெரும்பயனுடையதா மென்பதூங் காண்க.

உண்மையை நோக்கினால், உருத்திரனாகிய பரமேசுரன், சாமகானப் பிரியன் ஆதலின் எசுர் வேதத்திலுள்ள சத உருத்திரத்தை, ஓதுதலையுஞ் செபித்தலையும் நோக்க, இச்சாமவேத உருத்திரத்தை யோதல் முதலியவை களே பரமேசுரனது பேரன்பிற்குச் சிறந்த காரணங்களாமென உடன் படலே இயைபுடைத்தாமென்பது ஈண்டு உணரற்பாலதாம்.

இதுபற்றியே, கந்த புராணத்திற் கூறியுள்ள சகத்திர நாமங்களுக்குள் ளும், 'சாமப்பிரியாய நம:' ஸாமப்ரியாய நம:, என்று கூறப்பட்டிருக்கின் றது. இதனால் சாமப்பிரியன் என்னும் ஒரு திருநாமமும் பரமேசுரனுக் குள்ளதென்பதும், அவ்விறைவன் சாமவேத கீதத்தில் மிகப்பிரியன் என் பதும் தெள்ளிதிற் பெறப்பட்டமை காண்க.

அஃதன்றியும், மகாபாரதத்தும், உபமந்யு முனிவர் வரலாற்றைக் கூறத் தொடங்கி உபமந்யு முனிவர்க்குச் சிவ சாட்சாத் காரத்தை (சிவன் வெளிப்பட்டதை)க் கூறுந் தருணத்தில்,

"ரதந்தர ப்ரஹ்மா ஸ்தவந்ஸ்தாஸ்யந்நீலகண்ட ரதந்தரம் ஸம்ஸ்துதஸ் ।
ஜ்யேஷ்ட ஸாமநா ச தேவேசம் ஜகௌ நாராயண: ஸ்தவந்:"

"பிரமன், நாராயணன் என்னும் இருவராலும் 'ரதந்தர' (ரதந்தர) என்று தொடங்கியுள்ளதும், 'ஜ்யேஷ்ட' (ஜ்யேஷ்ட) என்று தொடங்கியுள் ளதுமாகிய சாமவேத கீதத்தால் பரமேசுரன் துதிக்கப்பெற்றனன்" என்று கூறியிருத்தலையும் உற்று நோக்குக.

இனி, இச்சாமவேத உருத்திரத்திலுள்ள பதினொரு மந்திரங்களுள், சில ஆர்ச்சிகங்களெனப்படும், சில ஸ்தௌபிகங்கள் எனப்படும். அதாவது, இருக்காலானது ஆர்ச்சிக மெனப்படும். அது இருக்கு மந்திரத்திற்குள்ள எழுத்துக்களைக்கொண்டே முடிந்து நிற்பதாம். மற்றும், ஸ்தோத்திரத் தாலானது ஸ்தௌபிகமெனப்படும். அது தோத்திரப்பதிகங்கட்குள்ள எழுத்துக்களால் முடிவு பெற்று நிற்பதாம்.

மற்றும், கேவலார்ச்சிகமெனவும், கேவல ஸ்தௌபிகமெனவும், ஆர்ச்சி கார்ச்சிக ஸ்தௌபிகம் எனவும் மூவகைப்படும். இவற்றுள், 'ஆவோ ராஜா' என்றற்றொடக்கத்து, முதலாவதாகிய சாமவேத உருத்திர மந்திரம் கேவ

லார்ச்சிகமாம். 'தேவவிரதம்' எனப்படும் மூன்று மந்திரங்களும் கேவல ஸ்தௌபிகங்களெனப்படும். இவ்விரண்டற்கும் இடையிலுள்ள மந்திரங்கள் ஏழும் 'ஆம்சிகார்ச்சிக ஸ்தௌபிகங்கள்' எனப்படும்.

இனி ஸ்தோபமும், (கீதமும்) பொருளுடைய தெனவும், பொருளிலாத தெனவும் இருதிறப்படும். அவற்றுள், பொருளுடையதோ, 'ஈயிவதா ஊ ரூஜ்ஜ ஷொஹம்' என்றல் தொடக்கத்ததாம். பொருளிலாததும், ஹா, உ, ஹா, உ-ஹா, என்பது முதலியனவாம்.

அற்றேலஃதாருக. ஈண்டுப் பொருளுடைய தெனப்படுவதோ, இருக் கேயாம். அதன் பொருள் அதற்குள்ள பாடியத்தானே நன்கு விளங்கும், பொருளிலாததற்கு உரை கூறலோ, பயனிலாததாமெனின்? அற்றன்று, ஆங்காங்குக் கூறிய பொருள்களை ஒருங்கே திரட்டிக் கூறுதலானும், இருடி, சந்தம், தேவதை என்பது முதலியவற்றை ஈண்டெடுத்துக் காட்டுதலானும், சாமவேத சங்கிதையில் பொதுவாய்க் கூறியுள்ள பரமேசுரனுடைய மகிமையைச் சிறப்பா யெடுத்து நன்கு காட்டுதலானும், 'அதிகாரிகள் இருடி முதலிய விடயங்களை யுணரற்பாலார்' என ஆர்ஷேயப் பிராமண மென்னுஞ் சுருதியிற் கூறியுள்ளவாறே இதை விரித்துக் கூறுதலும் பயனு மென்பது கொள்ளக்கிடந்தமை காண்க.

அற்றேல், சாமவேதத்தில் உருத்திரனைக் கூறுகின்ற மந்திரங்கள் வெளிப்படையாய்க் காணப்படாமையின் அவைகட்கு உரை கூறப்புகல் யாண்டையதெனின்?

நன்று கூறினுய், சாமவேதம் பொதுவாக ஈசுர துதியாமாயினும் சிறப் பாகவும் அதை வெளியாக்குதும் காண்பாயாக.

சாமவேதத்திலுள்ள, 'ஆவோராஜா' என்றற்றொடக்கத்துப் பதினொரு மந்திரங்களே உருத்திரனைக் கூற வெழுந்தவைகளாதலால் "உருத்திர சங் கிதை" எனப் பெயர்பெறுகின்றன.

அற்றாகலினன்றே, சாமவேதப் பிராமண மென்னுஞ் சுருதியிலும், "ஆவொ ராஜா, தவொவமு, ஆஜ்ய தொஹாநி, தெவவ்ரதாநி வெஷா ராஉ்த்ராஉ ஸம்ஹிதா தைதாம் ப்ரயுஞ்ஜந் ராஉ்த்ரம் ப்ரீணாதி" எனவுங் கூறியிருக்கின்றது. அதாவது, ஆவோராஜா என்றற்றொடக்கத்ததும், தத்வோ வர்க்கமும், ஆஜ்யதோஹங்களும், தேவ விரதங்களும், உருத்திரசங் கிதை யெனப்படுகின்றன; இந்த இரௌத்திரீய சங்கிதையை நன்கு ஓதி உருத்திரனுக்கு அன்பு செய்யற்பாலது என்பதாம்.

இம் மந்திரத்திலுள்ள 'ரௌத்திரி' என்னுஞ் சொல், உருத்திரனுக்கு இது ரௌத்திரி எனப் பொருள்படுமெனிலோ? அவ்வாறு கோடற்குப் பிரமாணம் இல்லை யென்க. அல்லது, உருத்திரன் என்னுஞ் சொல் விருத்தலின் 'ரௌத்திரி' என்னலாமெனின்ே? அஃதும் அமையாது. என்னை? அங்ஙனமாகுமேல்? 'உருத்திரீயம்' என்றுதல் வேண்டும் ஆதலினென்க. மற்றும், இவ்வாறே ஏனைய வகையாலும் இனிது பொருந்தாமையின் "இந்த ரௌத்திரி சங்கிதையை நன்கு ஓதி உருத்திரனுக்கு அன்பு செய்யற்பாலதாம்" என்றலே இயைபுடைத்தாம். இதனால் உருத்திரனுக்கு அன்பு செய்வதற்குக் காரணமாகிய பிரயோக மென்னுங் கரும சம்பந்தமுடையது 'ரௌத்திரி' யென்னுஞ் சொல் என்பது பெற்றும்.

இனி, 'ரௌத்திரி சங்கிதையை நன்கு ஓதி' என்றமையால், வாக்கால் வாழ்த்துதலாகிய வழிபாடே கொள்ளற்பாலதாமாயினும், ஏண்டு முக்கரணங்களாற் செய்யப்படும் ஈசுரவழிபாடும் கொள்ளற்பாலதாம். என்னை? 'நன்கு ஓதி' என்பதால் இப்பொருள் கொள்ளக் கிடக்கின்றமையினென்க. இதனானே சாம மறையை இனிது உணர்ந்தார்க்கும், உருத்திரன்பாற் செய்யும் அன்பிற்குக் காரணமாகிய முக்கிய வழிபாடுஞ் செய்யற்பாலதாமென்பது பெறப்பட்டது. பெறவே உணராததை யறிவுறுத்தலின் இஃது ஒரு விதியாமென்பதும் ஒருவாற்றுற் பெறப்பட்டதென்பது முணர்க.

அற்றேலஃதாகுக. இது விதியாயின் 'முத்தி வேட்கையாளன் தீயோம்புக' என்பது முதலிய விதியானது துன்பெலா மகன்ற இன்பமயமாகிய முத்தியைக் குறித்தெழுந்ததாம். அஃதொழித்து, இதற்கு உருத்திரன்பாற் செய்யுமன்பைக் குறியாகக் கொள்ளினும் பொருந்தாது, என்னை? உருத்திரன்பாற் செய்யும் அன்பானது, புருடார்த்தங்களுள் ஒன்றினுமடங்காமையினென்க.

நன்று கூறினுய். உருத்திரன்பாற் செய்யப்படும் அன்புளதேல் முத்தியும், மற்றும், விரும்பிய அனைத்தும் ஒருங்கே அடைதல் கூடுமாதலின் உருத்திரன்பாற் செலுத்தும் அன்பே சிறந்த புருடார்த்தமா மென்பது அனைவருக்கும் ஒப்ப முடிந்ததாமென்றுணர்வாயாக. இவ்வாற்றுல், 'இவ்வுருத்திர சங்கிதையை இனிது ஓதுவதால் உருத்திரனுடைய அன்பை யுண்டாக்குக' என இஃதோர் விதியாயினமைக்கு இழுக்கொன்றுமில்லை.

இதுபற்றியே, சிவபுராணமும்,

நவா தஷ்ரு ஸ்கிகிஞிஉவி ஊுஃஹம் வாஂஸ்வஃ வவஉதாயஞெ
வீாஂஸுயஞெ வவஉதாஃ। ஶிவ ப்ுஸாஉ யஹுநா ஊஜுயெவது

கெவஞு௴ । நிரு ஹாநு~ரு ஹெ ஶக்தீ: வவ-ஃதாஜெஶூ ஹைஃ நழ । வைவ
ஊதீநி ஸிஂஹாநி வஹுஸாஃஸ்ஹ் விநாகிந: । “கிஷ ஊ~ஞு-ஃஹஂ ந௫ணாஂ
ஞொகெ வஹுஸாதெ வாவ-ஃதி வதள ”

“ஈசன்பால் அன்பிருக்கில் அரியதொன்று மில்லை ; அணுவும் மலையாகும், மலையும் அணுவாகும், சிவனருள் பெற்றார் தம் ஆணை மாத்திரத்தால் அநுக்கிரகித்தல், நிக்கிரகித்தல், மலையைப் பிளத்தல் என்னும் இவை முதலியன, மலைமகள் கொழுநனாகிய அப்பரசிவனது அருளின் குறிகளாகின்றன” என்று சிவ புராணமுங் கூறுகின்றது. இது போன்ற வாக்கியங்கள் புராணங்களில் ஆயிரக்கணக்கானவைகள் கொள்ளக்கிடக்கின்றன வென்பதூஉங் காண்க.

இதனாலன்றோ, வேதவியாசரும்,

‘வ஌ஃத உவவத்தே:’, ‘பயன் இவனிலிருந்து அடையப்படுதலின்’ என்று சூத்திரமுஞ் செய்துள்ளார்.

அங்ஙனமே,

“ஃ கஃஃ வஹுஷூஂ ஹஞதீ வ~ர~ஷாஸாய் நஃ௫தெ,” “ஒருவனை ஆதாரமாகக் கொள்ளாமல் அழிந்துபோன கருமம் எவ்வாறு பயன்றரும் ?” என்று புட்பதந்தப் பெருமானார் திருவாய் மலர்ந்தருளிய சிவமகிம்நத்தோத்திரம் என்னும் பிரபல சுருதியுங் கூறுகின்றது.

இங்ஙனம் கூறிப்போந்தவாற்றால் இச் சாமவேத உருத்திரீயமும், எசுர்வேத உருத்திராத்தியாயமாகிய சதஉருத்திரீயத்தைப்போன்று பரமேசுரன்பால் அன்பு செலுத்துவோர்க்கு, ஓதற்பாலதும், செபிக்கற்பாலதுமாமென்பது பெறப்பட்டது.

இதுகொண்டே இதற்கு, அதிகாரியும் பரமேசுரன்பால் அன்பு செலுத்தும் வேட்கையுடையானே என்பதும் தானே பெறப்பட்டமை காண்க.

உபோற்காதம்

முற்றும்.

---

# சாமவேத உருத்திரீய சங்கிதை

## (அவதாரிகை)

---

ஈண்டுச் சாமவேத சங்கிதையின் முற்பாதியானது, ஆக்கினேயபருவம், ஐந்திரபருவம், பவமான பருவம் என மூன்று பருவங்களை யுடையதாம். அவற்றில், ஆக்கினேய பருவத்தில், "ஆவோ ராஜானமத்வரஸ்ய ருத்ரம்" என்றற்றொடக்கத்து இருக்கு, முதலாவது மந்திரமாக இருத்தலானும், ஆண்டு அக்கினியையே உருத்திரனெனக் கூறப்பட்டிருத்தலானும், ஏனைய பாடியகாரரும் அவ்வாறே உடன்பட்டிருத்தலானும், மற்றும், எசுர் வேத சங்கிதை முதற் காண்டத்திலும், தேவர்கட்கும் அசுரர்கட்கும் சம்வாதங் கூறப் புகுந்து, "ஸோ(அ)ரோதீத் யத(அ)ரோதீத் தத்ருத்ரஸ்ய ருத்ரத்வம்" 'அக்கினி அழுதது அதனால் உருத்திரத்தன்மை யடைந்தது' எனக் கூறப்பட்டிருத்தலானும் 'உருத்திரன்' என்பதற்கு ஈண்டு அக்கினியே கொள்ளற்பாலதா மாலோவெனின்; அற்றன்று, என்னை? உபக்கிரமநியாயம் என்னும் வழக்குப்பற்றி, தொடங்கும்போது உருத்திரன் என்று தொடங்கிய சாரத்தைக்கொண்டு அக்கினி என்பதற்கு உருத்திரன் எனக் கொள்ளலே இயைபுடைத்தாமாதலினென்க.

அற்றாகலினன்றே, வாயு சங்கிதையில்,

> கிம் தஸ்ய ஸாதநைரந்யை: ஸம்ஜிதை ஸ்யஜ்ஞ ஸம்ஸ்ருஜ |
> ராஜா யஜ்ஞஸ்வாமிநஸ்த்யக்த்வா ந ருத்ரம் ஸம்பூஜ்யதே த்வயா ||

வேள்விக்கு இறைவன் உருத்திரனே மாதலின் அவ்வுருத்திரனை நீ பூசியாதொழித்து ஏனைய தேவர்களை வேள்வியின்கண் பூசித்தலால் வரும் பயன் யாது கொல்? (பயன் இல்லை யென்பதாம்) எனக் கூறப்பட்டிருக்கின்றது.

மற்றும், பலவகைச் சுருதி வாக்கியங்களானும், பின் வரும் பதினொரு மந்திரங்களும் உருத்திரனையே கூறும் மந்திரங்களென உறுதிப்படலானும், இப்பதினொரு மந்திரங்களே உருத்திர சங்கிதை எனப்படுகின்றன. அவற்றுள், ஈண்டுப் பதினொரு உருத்திரர்கள் போன்றே பதினொரு மந்திரங்களாகி இயைபு பெற்று நிற்றல் மிக வியக்கற்பாலதாம்.

## மந்திரம் 1.

२ ३ १ २ ३ १ २ ३ १ २२ ३ २ ३

आवो राजानमध्वरस्य रुद्रं होतारं सत्ययजं रोदस्योः ।

३ २ १ २ २ ३ १ ३ २ ३ १ २ ३ १ २

अग्निं पुरा तनयित्नोरचित्ताद्धिरण्यरूपमवसे कृणुध्वम् ॥

ஆவோ ராஜாநமத்4வரஸ்ய ருத்3ரம் ஹோதாரம் ஸத்யயஜம் ரோத3ஸ்யோ: ।

அக்3நிம் புரா தநயித்நோரசித்தாத்3தி4ரண்யரூபமவஸே க்ருணுத்4வம் ॥

### கீதப்பாடல்-1.

४१५ २२ ४ ३२ ३ २ ३४५ १ २२ १ २ २

आवो राजा । नमध्व । रस्यरुद्राम् । हो । ता । राम् । सत्ययजा३म् ।

२३ ४ ५ २ १ १ ३ २ ३ ४ ५ १ २ १ २ १

रोदसीयोः । अग्निम्पू । रा । तनयि । त्नो रचित्तात् । हिरण्य । रू । पा३मव ।

२ २ ४

सा ३–४–३ यि । का२णुं । ध्वा६५६म् ।

ஈண்டுச் சாமம் என்பது, ஸா = அவ்விருக்கு மந்திரமே, அமம் = கீதப் பாடலானதாம், எனவே இருக்கு வேதத்தில், அடி, தளை, முதலியவற்றுலாக்கப்பெற்ற சந்தப் பதிகங்களே சங்கீதத்துடன் சேருங்கால் சாமகீதமாகின்றது என்பது பெற்றும்.

அவற்றுள் இருக்கு வேதப் பதிகங்கள் கீதத்துடன் சேருங்கால், எழுத்து மிகல், திரிதல், அளபெடையேற்றல் முதலிய பல வேறுபாடுகளையடைகின்றன. ஒரு பதிகமே, இரண்டு, அல்லது மூன்று, நான்கு பதிகங்களாக ஆதலுமுண்டு. அவற்றுள், இம் முதல் மந்திரமோ, இருக்கு வேதத்திலும் ஒருபதிகமே, சாம வேதத்தினும் ஒன்றேயாமென்பதுணர்க.

இறப்பதன் முன்னரே பரமேசுரனை வழிபட வேண்டுமென ஒரு இருடியானவர் தமது புதல்வர்கட்கு அறிவுறுத்தும் முறையாக ஈசனிடத்து அன்புசெய்ய வேண்டுமென்னும் பொருளை மேற்கொண்டெழுந்தது இம் முதலாவது மந்திரமாகும்

மற்றும், இது, இருக்கு வேதம்-நான்காம் மண்டலம்-ஆறுஞ் சூக்தத்தின் முதல் மந்திரமாம் இதுவே சாம வேதத்தின் முதல் ஆர்ச்சிகம், ஆக்கி

னேய காண்ட (பருவ)ம் ஆறும் பத்து, ஆறுங்கண்டம் ஏழாம் மந்திர முமாம்.

மந்திரத்தின் பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे पुत्राः!) | (ஹெ வ-ுத்ராஃ!) | எமது புதல்வர்களே! நீவிர், |
| वः | வஃ | உங்களை, |
| अवसे | ஶவஸெ | பாதுகாத்துக்கொள்ளுதற் பொருட்டு, |
| अध्वरस्य | ஶய்வுரஸ்ய | வேள்விக்கு |
| राजानं | ராஜாநம் | வேந்தனும், |
| होतारं | ஹொதாரம் | பயனை யளிக்கின்றவனும், அல்லது ஆராதிக்கப் பெறுவோனும், அல்லது அழைத்தற் குரியானும், |
| रोदस्योः | ரொதஸ்யொஃ | வானுலக மண்ணுலக மிரண்டிற்கும் |
| सत्ययजं | ஸத்யயஜம் | அன்னங் கொடுக்கின்றவனும், உண்மையில் நிறைந்திருக்கின்றவனும், அல்லது உண்மையால் போற்றப் பெறுகின்றவனும், |
| हिरण्यरूपं | ஹிரண்யரூபம் | பொன்னார் திருமேனியனும், |
| अग्निं | ஶக்நிம் | அக்கினியி லிருக்கின்றவனுமாகிய |
| रुद्रं | ருத்ரம் | உருத்தி (பரமேசு) ரனை, |
| तनयित्नोः इव | தநயித்நொஃ இவ | மேகம்போன்று நிலையின்றி வரும் |
| अचित्तात्पुरा | ஶசித்தாத்புரா | 'சித்தங் கெடுதல்' என்னும் மரணத்திற்கு முன்னர் |
| आकृणुध्वम् | ஆக்ருணுத்வம் | உம்மிடத்து அருள்நோக்குடையனைச் செய்துகொள்வீர்களாக. |

விருத்தி யுரை.

வாமதேவர் ரிஷியாவர். இதுபற்றியே மிருதியும்,

"வாமதெவ ரிஷிஸ்தாஸாம் ஜ்ஞேய இத்யாஹ ஶௌநகஃ" "அவைகட்கு 'வாமதேவர் இருடியென்று உணரற்பாலது' எனக் கூறுகின்றார் சௌனக முனிவர்" எனக் கூறுகின்றது.

அல்லது, தேவதைகளே இருடிகளாவார்கள் எனப்படுதலின், இம் மந்திரத்திற்குரிய தேவதை உருத்திரராதலின் உருத்திரரே இருடியாவர் என்பதுமாம். இதனாலன்றோ, வேத பாடியகாரராகிய பட்டபாஸ்கரரும்,

“ தெவ ஊவவா ஊாநொவதூஷி: ஈ-ஸெ உாவா ” “ சாம மறை, மந் திரங்கட்குத் தேவர்களே இருடியாவர் அல்லது உருத்திரரே இருடியாவர் ” என்று கூறியுள்ளார்.

ஈண்டு, “ ஊ ரு வாஅூாதெ்ரூஷா தெவதா ” ‘ மந்திரத்தின் வாச்சியப் பொருளே தேவதையாம் ’ என்று நிருத்தமுங் கூறுகின்றது. இதனால், இம் மந்திரத்திலுள்ள ‘ உருத்திரன் ’ என்னுஞ் சொற்குப் பொருளாகிய பரமே சுரனே தேவதையாவன் என்க. சந்தம் திருஷ்டுப் என்பதுணர்க.

அற்றேல் அஃதாகுக. இம்மந்திரத்தில் உள்ள “ ஊூ்ம் வ-ஊாதந யிதெூா: ” என்னும் வாக்கியத்தில் ‘ அக்கினி என்னுஞ் சொல்லுமிருத்தலி னானும், இது ஆக்கினேய காண்டத்தின் மந்திரமாதலானும், யாண்டும் வேள்விகளில் அக்கினியே முக்கியமாகக் கொள்ளப்படலானும், அந்தணர் முதலியோர்கட்கு அக்கினியே முக்கியமாகிய தெய்வமாதலானும், அதன் பொருளாகிய அக்கினியைத் தேவதையாகக் கொள்ளாதொழித்து வலிந்து கொள்ளும் பொருளாகிய உருத்திரனை மாத்திரம் தேவதை யெனக் கொள் ளல் எவ்வாற்றாலாமெனின் ?

நன்று கூறினாய், அஃதாமாறு காட்டுதும்:—

इन्द्र मित्रं वरुणमग्नि माहुरथो दिव्यः सुपर्णो गरुत्मान् ॥

“ இந்திரனையும், மித்திரனையும், வருணனையும் அக்கினி யென்று சொல்லுகின்றார்கள் ” என இருக்குவேதம்-1-164-46-வது மந்திரங் கூறு கின்றது. மற்றும்,

तदेवाग्निस्तदादित्यस्त द्वायुस्तदु चन्द्रमाः ॥

“ அதுவே அக்கினியாம், அதுவே ஆதித்தனும், அதுவே வாயுவாம், அதுவே சந்திரனும், ” என எசுர் வேதம், 322-1-வது மந்திரமுங் கூறு கின்றது. மற்றும்,

ब्रह्माग्निः ॥

‘ பிரமமே அக்கினி ’ என்று சத-பிரமாணம்1-42-12-வது மந்திரமுங் கூறுகின்றது. மற்றும்,

अयं वा अग्निः प्रजाश्च प्रजापतिश्च ॥

இவ்வக்கினியே பிரசைகளும் பிரசாபதியுமாம், என 6-1-2-42-வது மந்திரமுங் கூறுகின்றது. மற்றும்,

आत्मा वा अग्निः ॥

ஆன்மாவே அக்கினியாம், என-1-2-2-3-வது மந்திரமுங் கூறுகின்றது.

அஃதன்றியும்,

एतमेके वदन्त्यग्निं मनुमन्ये प्रजापतिम् ॥

"இதைச் சிலர் அக்கினி என்கின்றார்கள், மநுவாகிய யான் பிரசாபதி யென்று எண்ணுகின்றேன்" என, மநு, அத்தியாயம் 12. சுலோக 122-வது அக்கினியே பரமேசுரனென்றே ஐயந்திரிபின்றிக் கூறுகின்றது.

அஃதல்லாமலும்,

"வெதாஸ்ஸா உஹிதயதீஹ ஹ ரா உ உஜ்ிம் ஸா ஶேகும் பபஙண உாவெதி"

"வேதங்கள் அக்கினியாகிய உன்னையே உருத்திரனென்று சொல்லுகின்றன; (ஆதலின்) உன்னையே சரணடைகின்றேன்" என வாயு புராணத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும்,

"வஹ்ஞுஜ்ிம் உஹா ஜெவம் தயா ஜெவம் உஹெஶ்வரம்"

'அக்கினியை மகாதேவனென்றும், மகேசுரனென்றுஞ் சொல்கின்றார்கள்' என மகாபாரதம் அநுசாசன பருவத்திலும் கூறியிருக்கின்றதும் இங்குணர்தற்பாலது.

மற்றும், இவ்வாறே பலவிதமான பிரமாணங்களையும் கூரிய மதியுடையார் யூகித்துக்கொள்வாராக.

இவ்வாறாகிய வழி எமது புதல்வர்களே! நீவிர், (பரமேசுரனாகிய) உருத்திரனை அருள் நோக்குடையராய்ச் செய்து கொள்வீர்களாக என இயைத்துக்கொள்க. அதாவது துதித்தல், வணங்கல், அருச்சித்தல் முதலிய திருப்பணிகளால் உம்மிடத்து அவ்வுருத்திரனுக்கு அருள் நோக்குண்டாமாறு செய்து அப்பரமேசுரனை உமது அன்பு வயப்பட்டோனாகச் செய்து கொள்வீர்களாக என்பதாம்.

'ஈண்டு இவ்வாறு செய்தல் யாது பயனைக் கருதியோ?' என்பதற்கு 'உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுதற் பொருட்டு' எனல் உத்தரங் கூறிய வாறும்.

ஈண்டுப் 'பாதுகாத்தல்' என்பது வேண்டாதவைகளை விலக்கலும், நோய், வறுமை, மூப்பு, இறப்பு முதலியவற்றால் வரும் துன்பங்களைப் போக்கலுமாமென்றுணர்க.

இவ்வண்ணமாகும் பாதுகாப்பை முன்னிட்டு உருத்திரனாகிய பரமே சுரனுக்கு, நம்மிடத்து அருள் நோக்குண்டாமாறு அன்பு செய்வீர்களாக என்பது திரண்டபொருள்.

உருத்திரன் என்பது வடமொழியில் 'ருத்ர:' என்பதாம். அச் சொல், ரு=துன்பத்தை, த்ர:=போக்குகின்றவன், அல்லது, ரு=துன்பத் தின் காரணங்களை, த்ர:=போக்குகின்றவன் என விரிக்கப் பெறுதலின், கார ணப் பெயர்பற்றியும், துன்பங்களையும் அதன் நிமித்தங்களையும் ஒருங்கே யொழிக்கின்றவன் பரமேசுரனேயாதலின் உருத்திரன் என்னுஞ்சொல் பர மேசுரவாசகமே யல்லாது பிறவாசகம் அன்றாமென்பதுங் கொள்ளக்கிடக் கின்றது.

அற்றாகலினன்றே, வாயு சங்கிதையும்,

"ருக் து:கம் து:கஹேதும் வா தத் த்ராவயதி ந: ப்ரபு: |
ருத்ர இத்யுச்யதே தஸ்மாச் சிவ: பரம காரணம்"

"ருகாரம் துன்பங்கள், அல்லது துன்ப காரணங்கள் அவற்றைத் தொலைக்கின்றவன் எமது பரமேசுரனாகிய உருத்திரனெனப்படுகின்றான் ஆதலின் சிவனே மேலான காரணன்" என்று இப்பொருளையே வலியுறுத்து கின்றது.

அஃதன்றியும், இலக்கண வகையால் நோக்குமிடத்தும், ரு-த்ர:, என் னும் இரண்டு வடமொழிப்பகுதிகளும் பிருஷோதராதி கணத்திலுள்ள வைகளாமாதலின், "தொண்டாது அமங்களத்தை நீக்குதல்" என்னும் பொருளே கொள்ளக்கிடத்தலின் இலக்கண முறையானும் மேற் கூறிய பொருளுக்கோர் இடையூறுமின்மை யுணர்க.

அல்லது, 'ருத்ர:' என்பதை இடுகுறிப் பெயராமெனக் கொள்ளி னும் சிறிதும் இழுக்கின்றாம். என்னை? அச்சொல் கறுத்த கண்டன், என் பது முதலிய சகுணப் பிரமமாகிய பரமேசுரனையே யறிவுறுத்தலினென்க.

இதுபற்றியே "ஸ்தாணு ருத்ர உமாபதி:" என அமரகோசமும் கோஷிக்கின்றது.

மற்றும், சுவேதாசுவதர வுபநிடதமும்,

'𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌧𑌿𑌕𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌃'

"எவன், தேவர்கட்கு முதல்வனாய் நிற்கின்றவன் உலகைக் கடந்தவன் உருத்திரன் மகரிஷி" என்று கூறுகின்றது.

அவ்வாறே, அவ்வுபநிடத வுரையும், "𑌰𑍁𑌦𑍍𑌦𑍁𑌃𑌖𑌂 𑌭𑌵𑌤𑌾𑌂 𑌦𑍍𑌰𑌾𑌵𑌯𑌾𑌮𑌿 𑌰𑍁𑌦𑍍𑌰 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌦𑍇𑌵𑌾𑌃", "ருத் என்னுந் துன்பங்களைப் போக்கலால் தங்களைப் பாதுகாக்கின்றேன் ஆதலின் ருத்திர என்பது வெளிப்படை" என்று கூறுகின்றது.

அல்லது, "𑌰𑍋𑌦𑍇𑌰𑍍𑌣𑌿𑌲𑍁𑌕𑍍𑌚" என்னும் வடமொழிப் பாணினி இலக்கண சூத்திரத்தால் ரோதனம் (அழுகை) என்பதே பொருளாமெனக் கொள்ளினும் இழுக்கின்றாம் என்னை? "𑌰𑍋𑌦𑌯𑌤𑌿 𑌸𑌂𑌹𑌾𑌰𑌕𑌾𑌲𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿" 'பிரளயகாலத்தின் உயிர்களனைத்தையும் அழுமாறு அழிக்கின்றவன்' என்பதே பொருளாய் முடிந்து மேற்கூறிய பொருளையே வலியுறுத்துகின்றமையினென்க.

அற்றேலஃதாகுக. இங்ஙனங் கூறியவாற்றால் அக்கினியும் உருத்திரனும் ஒன்றுமென்பதே துணியப்படுதலின் முன்னர்க் கூறியவாறே அக்கினி அழுததை உருத்திரன் அழுதான் என்று கொள்ளின் வருமிழுக் கென்னை கொல்? அற்றன்று. ஆண்டு அஃது இயையாமையினென்க. அஃதாமாறு:—முன்னொருகால் தேவர்கள் அசுரர்களை வென்றும் கொன்றும் அவர்களுடைய தனங்களனைத்தையுங் கவர்ந்து அக்கினி தேவன்பால் வைத்து, அக்கினியே! நீ, இவற்றைப் பாதுகாத்துப் பின்னர் எமக்குக் கொடுத்தல் வேண்டும் என்று உறுதி செய்துவிட்டு, முன்போல் போர் முதலியவற்றை முடித்துக்கொண்டு, தேவர்கள் அக்கினியின்பால் வந்து முன்னர் நாங்கள் நின்னிடத்தில் வைத்த தனங்களை எமக்குக் கொடுப்பாயாக என்று அக்கினியைக் கேட்க, அவற்றைக் கொடுக்க மனமிலாதிருக்க அதைக் கண்ட தேவர்கள் அக்கினியை வற்புறுத்தியபோது அக்கினி அழுதது அதுவே வெள்ளியாயிற்று; ஆதலின் தீயை யோம்புங்கால் வெள்ளியைத் தானஞ் செய்யில் அழல் நேரிடும் என்னும் கதை வேதத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் ஆண்டு, அக்கினி யென்பது ஐவகைப் பூதங்களுள்

ஒன்ருகிய அக்கினியே யன்றி அனைத்திற்குங் காரணமாகிய உருத்திரன் அன்றெனபது உற்று நோக்குவோர்க்கே தெற்றென விளங்கும், மதப்பேய் கொண்டு மாறுகூறுவோர்க்கு மருந்தென்னை ?

இவையனைத்தையும் கருத்தில் அடக்கிக்கொண்டன்றே, நேரே சுருதியும், பிராணனை உருத்திரன் எனல் எவ்வாறு மென்றாசங்கித்துக் கொண்டு;

"வ்ராணவாவ ரு-ரா ஷதெஷிதம் ஷவ-ஃம் ஜொ஼யஜீதி" என்றற்றொடக்கத்து மந்திரத்தில் விடை கூறுமுகத்தால் இப்பொருளை இனிது விளக்குகின்றது என்பது ஈண்டு உற்று நோக்கத்தக்கதொன்றும்.

'வேள்விக்கு வேந்தன் என்பது' வேள்விகளனைத்திற்கும் இறைவனுயிருக்கின்றவன் என்பதாம்.

அற்றேல்? வேள்விகட்கெல்லாம் இறைவனுந் தன்மை உருத்திரன் பாற் பொருந்தல் எவ்வாற்றுலாமெனின் ? வேள்விகளில் அளிக்கின்ற அவிகளை (தேவ வுணவுகளை) இப் பரமேசுரனே யருந்துகின்றவனுதலின் இனிது பொருந்துமென்க.

அங்ஙனமாயினும், வேள்விகளனைத்திலும் ஒவ்வொரு வேள்விக்கும் ஒவ்வொரு தேவதையும் சிறந்ததாய் நின்று அவிகளை யேற்குமெனில், பரமேசுரனே உண்கின்றுனெனல் முற்றும் முரணுமெனிலோ ? அற்றன்று; ஆசங்கித்தது ஒருபுடை உண்மையாமாயினும் அவிகளை யுண்ணுகின்ற பல வகையான தேவர்களனைவரும் முடிவில் பரமேசுரன் வடிவர்களேயாதலின் அவனொருவனே உண்கின்றுன் என்றதற்கு இழுக்கொன்றுமில்லை யென்பதுணர்ந்து கொள்க.

மற்றும், உண்மையில் உற்றுநோக்குங்கால் வேள்விகளனைத்திலும் அவிகளை யுண்கின்றவனும், வணக்கம் முதலிய வழிபாடுகளை ஏற்றுக்கொள்கின்றவனும் பரமேசுரனே யென்பது அனைவருக்கும் உடன்பாடற்பாலதாமென்பது தேற்றம்.

இதைத் தழுவியன்றே மிருதியும்,

"ஊஹம் ஹி ஷவ-ஃ யஜ்ஞாநாம் ஹொக்தா஡ வ்ரஹு஼ செவ஡" 'வேள்விகளனைத்திலும் கொடுக்கின்ற அவிகளை உண்கின்றவனும், இறைவனும் யானகவே யிருக்கின்றேன்' என்று கூறுகின்றது.

"வட்டக்குண்டத்தி லெரிவளர்த்தோம்பி மறைபயில்வார், அட்டுக் கொண்டுண்பதறிந்தோமே" என்னும் திருமறை வாக்கியங்களும் ஈண்டு கொள்ளற்பாலன என்பது பெற்றாம்.

வணக்கம் முதலியவைகள் ஏனைய தேவர்களைக் குறித்துச் செய்ய வேண்டுமென்பது சுருதிகளிற் கூறப்பட்டிருப்பினும், பரமேசுரனே வணக்கத்தை ஏற்றுக்கொள்ளுதற் குரியானென்பதும், பிற தேவதைகள் ஏற்றுக் கொள்ளற்குத் தக்கார்கள் அல்லரென்பதும் மேற்கூறிய வகையாற் பொருந்துமாறுணர்க.

இப்பொருளையே, பழையோர்களான பேராசிரியர்களுள்ளும் மிகப், பழையோரான தெய்வத்திருவருள் திறம்பழுத்த அரதத்த சிவாசாரியரும்,

"நைவா உவலா ந ஹுஒிம் வி நா தாஸூ௫ர ஷீ தா உ நமு௦ ந ஷி கஸூிீஷெ"

"வணக்கத்திற்கு வரம்பு நிலமாகிய பரமேசுரனாகிய நினைத்தவிர்த்து அத் தேவர்களுள் ஒருவர்க்கேனும் அவ் வணக்கத்தைப் பெற்றுக்கொள்ள ஆற்றலில்லை, வேந்தன் திருமுடியைத் திருடியவனொருவன் அம்முடியைத் தனது தலையில் அணிந்துகொள்ள முடியாதவன் ஆவனன்றோ, அது போன்று" என்று தாமியற்றிய சுருதி சூத்திமாலையிற் கூறியுள்ளார்.

இதுபற்றியே நாட்டிய நூலும், "வச்சிரமுத்திரையால் இந்திரனையும், பத்மினிமுத்திரையால் பிரமனையும், சங்கினிமுத்திரையால் விஷ்ணுவையும், உருத்திர பரமேசுரனைத் தலை மேல் கைகுவித்தலாகிய வணக்கத்தாலும் பாவித்தல் வேண்டும்" என்று கூறுகின்றதென்க.

இவ்வாற்றால், இந்திரன் முதலிய தேவர்களைப் பிரியப்படுத்தும் பொருட்டுச் செய்யப்படுகின்ற கருமங்களும் பரமேசுரனையே பிரியப்படுத்துவனவாய் முடிதலால் உருத்திர பரமேசுரனே வேள்விக் கருமங்களிற் கொடுக்கப்படும் அவிகளை யருந்தி, வணக்கம் முதலிய வழிபாடுகளால் மகிழ்ந்து, பயனைக் கொடுக்கும் இறைவன் என்பது இனிது பெறப்பட்டமை காண்க.

மற்றும், இது போன்றே புராணங்களும்,

யயைவ வஸுவஸ்ராஜெ: ஸ்ரீசதீா ஸ்ரீதொ ஹவெதிதா ।
தயைவ ஸவஷ ஸம்ஸ்ரீதீா ஸ்ரீதொ ஹவதி ஶங்கர: ॥

"புத்திர பௌத்திரர்கள் பிரியமடைதலால் பிதா பிரியமடைவது போன்று, தேவர்கள் அனைவரும் பிரியமடைதலால் சங்கராகிய பரமேசுரர் இனிது பிரீதி யடைகின்றனர்" என்று கூறுகின்றன.

ஈண்டு, வேள்வி முதலியன 'அபூர்வமாகிய புண்ணிய வாயிலாகப் பயனை யளிக்கின்றன' என்னும் ஒரு சாராரின் உடன்பாட்டையும் நன்கு உற்று நோக்கின் புண்ணியமாகிய அவ் வபூர்வமும் பரமேசுரனுடைய அருளே யன்றி வேறில்லை யென்பதும் உணரற்பாலதாம்.

ஈண்டு "வேள்விகட்கெல்லாம் இறைவனுதற்றன்மையாவது, வேள்விப் பயனை யளிப்பதில் சுவதந்திரமும், மாறுபடில் அதைச் சிட்சித்தலுமாம்; இப் பொருளே தக்கனுடைய வேள்வியில் பல தேவர்களிருந்தும் பரமேசுரனது அம்சமாகிய வீரபத்திரரால் அவ்வேள்வி நாசமாக்கப்பட்டது, பின்பு அவர் மானாக ஓடியும் வேள்வியைக் கெடுத்தனர்" என்பதும், மற்றும், சிவபுராணம், பாகவதம் முதலிய புராணங்களால் சில கதைகளைக்கொண்டு நன்கெடுத்துப் போதிக்கப்பட்டிருக்கின்றது.

மற்றும், இப்பொருளையே தைத்திரீய சுருதியும்,

"[Grantha script text]"

"உருத்திரனைத் தவிர்த்துத் தேவர்கள் வேள்வி செய்தனர், அவ் வேள்வியை உருத்திரன் நாசப்படுத்தினன்" என்று கூறுகின்றது.

அஃதன்றியும், இப்பொருளை இனிது விளக்குதற்பொருட்டே ஈண்டு, (ஹோதாரம்) 'பயனை யளிக்கின்றவனும்' அல்லது 'ஆராதிக்கப்பெறு வோனும்' என விதந்து கூறப்பட்டதூஉமென்க.

எவ்வாற்றால் அப்பொருள் விளக்கமானதாமெனின்? கூறுதும்:— 'ஹோதாரம்' என்னும் வடமொழிச் சொல்லில் உள்ள, ஹு, என்னும் பகுதிக்கு, ஈதல், உண்ணல், என்னும் இருபொருளும் உள்ளதால், அதற்கு வடமொழி யிலக்கணத்தைத் தழுவி, பயனை யளிக்கின்ற உருத்திரனை யெனக் கொள்ளப்பட்டிருத்தலி னென்க.

அல்லது 'ஹோதாரம்' என்பதற்கு ஆராதிக்கப்பெறுவோனை எனப் பொருள் கொள்ளினும் இழுக்கின்றாம். என்னை? "விஷ்ணு ருபாம்ஸு யஷ்டவ்ய:" என்றாற்போல 'ஹோதவ்யம்' எனவாகி ஆராதிக்கத்தக்கோனை எனப் பெற்று எல்லா வேள்விகளினும் இறைஞ்சுதற்குரிய பரமேசுரனை என்னும் பொருளே கொள்ளக்கிடத்தலின் என்க.

உண்மையிலோ 'ஹோதார:' என்னும் சொல் 'ஹ்வயதே' (அழை) என்னும் வடமொழிப் பகுதியிற் பிறந்ததாம்.

அற்றுகலினன்றே ஐதரேயப் பிராமணமென்னுஞ் சுருதியும் இவ்வாறே கூறுகின்றது.

ஈண்டு 'ஹோதவ்யம்' எனக் கொள்ளுமிடத்து 'அழைத்தற்குரியானை' எனப் பொருள்கோடலே தகுதியாம். என்னை? அனைவருந் துன்புறுமிடங்களில் உருத்திர பரமேசுரனே அழைப்பதற்குரியான் ஆதலினென்க.

இதையே "ஆதரித் தழைத்தா லதர்துவே யென்றருளாயே" என்று கூறுகின்றது திருமறையும், பயனை யளிக்கின்றவனை என்றதோ, பட்டபாஸ்கரரின் பாடியத்தைத் தழுவிக் கூறியதாமென்றுணர்க.

'அன்னங் கொடுக்கின்றவனும்' என்பது. இருவித வுலகிற்கும் உணவுப் பொருள்களை யளிக்கின்றவனை யென்பதாம். என்னை? 'யஜ' என்னும் வடமொழிச் சொல், "தேவாராதனை, சங்கதி, கரணம், தானம்" என்னும் பொருள்களையுடையதாம் ஆதலின் 'அன்னத்தைத் தானஞ் செய்கின்றவன்' என்னும் பொருளும் பொருந்துமென்று கொள்ளலாமென்க.

அல்லது, மூலத்தில் சத்திய யஜனை என்பது சத்தியமான அதாவது பலவகையான ஆராதனையை யுடையானை எனினுமாம்.

அல்லது, உண்மை கூறலாகிய ஆராதனையை யுடையானை என்பதாம். இதனால் எய்தருஞ் சிவமன்றி மற்றொன்றை யிசைத்தல் பொய்யென்பது பெற்றாம்.

இது பற்றியே சுருதியும்,

"ஸத்யேந தபஸா யொநு பஶ்யதி" "சத்தியமாகிய தவத்தினால் இப்பரமான்மாவை எவன் காண்கின்றானோ" என்று கூறுகின்றது. இவ்வாறே கண்ணபிரானும்,

"ஸத்யஶௌசார்ஜவத்யாகைஸ்தபஸா நியமேந ச"

'உண்மை, தூய்மை, ஆராமை, விடல், நியமம் என்பவற்றால் யான் பூசிக்கப் பெறுகின்றேன்' என்றருளிச் செய்துள்ளார்.

அல்லது, சத்தியம் என்பது என்றுமுள்ள தனது சத்தை அதாவது வடிவத்தை வானுலக மண்ணுலகங்களில் நிறைந்திருக்குமாறு செய்கின்றவனை யென்பதாம்.

அற்றுகலினன்றே "ஈஶாவாஸ்ய மிதம் ஸர்வம்" என்றெழுந்த ஈசாவாஸ்ய உபநிடத முதலிய நூல்களனைத்தும் இப்பொருளையே முழங்குகின்றன.

இவ்வாறே, காளிதாசரென்னுங் கவிச்சக்கரவர்த்தியாரும்,

"வெடாணெஷு யமாஹு ரெக வுருஷம் வ்யாவ்யூஸ்தி தம் ரொடிவீ"

"மறை முடிகளில் கூறப்பட்டுள்ள ஒரு பரமான்மாவானது வானுலக மண்ணுலகங்களில் நிறைந்து நிற்கின்றது" என்று கூறியுள்ளார் என்பதும் காண்க.

'பொன்னார் திருமேனியனும்' என்பது, பொன் போன்ற திருமேனியை யுடையவன் என்பதாம்.

இப்பொருளையே சுருதிகளும்,

"நமொ ஹிரண்யபாஹவெ ஹிரண்யவணாய ஹிரண்யரூவாய ஹிரண்யவதயெ ஸம்பிகாவதயெ உமாவதயெ வஶுவதயெ நமொ நமः"

"பொற்றோளுடையானுக்கு வணக்கம், பொன்னிறமுடையானுக்கு வணக்கம், பொன் வடிவுடையானுக்கு வணக்கம், பொன்னுக்குத் தலைவன் பொருட்டு வணக்கம், அம்பிகையின் தலைவனுக்கு வணக்கம், உமையின் இறைவனுக்கு வணக்கம், பசுக்களுக்குப் பதியானவனுக்கு நமஸ்காரம்" எனவும்.

"ய ஊஷொணுரா தித்யெ ஹிரண்யः வுருஷொ ஷ்ருஶ்யதெ ஹிரண்ய ஶ்மஶ்ரு ஹிரண்ய கெஶ"

"சூரியனுக்குள் பொன்மயமான தாடிகளை யுடையவனும், பொன்மயமான மயிர்களை யுடையவனும், பொன்மயனுமாகிய ஒரு பரமபுருடன் காணப்படுகின்றான்" எனவும், மற்றும் ஆயிரக்கணக்கான வகையாகவும் கூறுகின்றன.

மற்றும், மிருதிகளும்,

"தப்த ஹெமநிகாயாஸம் ஶிதிகண்டம் த்ரிலொசநம்"

"உருக்கிய பொன்போன்ற திருமேனியை யுடையவனை, காளகண்டனை, முக்கண்ணனை" எனவும்,

" ஐமுமெெக கவூ உ௱ஜவஷூ உ௱த கநக நிஹமு "

" கல்பந்துருமத்தின் வேரானவன் உருக்கிய பொன்போன்றவன் " எனவும், மற்றும் பலவகையாகவும் கூறுகின்றன.

அக்கினியிலிருக்கின்றவனும், அக்கினியின்கண் இருக்கின்றவனே யெனக் கோடலு மியைபுடைத்தாம் ஆதலினென்க. என்னை? சுருதி மிருதிகளில் அவ்வாறே கூறப்பட்டிருத்தலினென்க.

அவற்றில் சிலவருமாறு :—

" யொ ரு௱ெஜா ஊஜௌ பொ ஊவூ௱ ய ஒஷயீஷ௱ யொ உஜௌ திஷூஜௌருனுவெ ய உஜௌநஃ வெஷயவஹூா ஜுஸீமு யொ உஜௌஉனுவெ யஉயதி "

"யாதொரு உருத்திர பரமேசுரன் அக்கினியில் இருக்கின்றானோ, நீரின் கண்ணும், கொடி செடிகளிலும் இருக்கின்றானோ, எவ்வுருத்திரன் அக்கினியி லிருந்துகொண் டிருக்கின்றானோ, எவ் வுருத்திரனை அக்கினி அறிய வில்லையோ, எவ்வுருத்திரனுக்கு அக்கினியே திருமேனியோ, எவ்வுருத்திரன் அக்கினிக்குள்ளிருந்துகொண்டு அதை ஏவுகின்றானோ" என்பதாம்.

மற்றும், " ஊஜௌ திஷூதி விவ௱ாணாமு "

" அந்தணர்களுக்கு அக்கினியிலிருக்கின்றான் " என்பதுமாம்.

மற்றும் பலவகையாகவுங் கூறுகின்றன என்பது ஆண்டாண்டு உணரற்பாலது.

ஈண்டு, உருத்திர பரமேசுரன் அக்கினியாகிய திருமேனியை யுடையானெனவும், அக்கினியைச் செலுத்துவோனெனவும் கூறப்பட்டிருத்தலின், 'யாண்டும் தேகத்தைக் கொள்ளுங்கால் தேகியே கொள்ளப்படுகின்றான்' என்பது நியாயமாமென்பது முணரற்பாலது. இதனால் பரமேசுரனுடைய திருமேனியாகிய அக்கினியைக் கொள்ளுமிடத்து அவ்வுடம்பை யுடைய உருத்திர பரமேசுரனையே கொள்ளக்கிடக்கின்றமை காண்க.

அன்றியும், அக்கினி யென்பதே உருத்திர பரமேசுரனை யறிவுறுத்துஞ் சொல்லாம்; ஆதலின், அக்கினி என்பதன் பொருள் நேரே உருத்திர பரமேசுரனேயாகின்றான்; மற்றையன் அல்லன்.

இதுபற்றியே சுருதிகளும்,

" ஸ வஸ விஷ௱ஃ ஸ வ௱ாணாஃ ஸ காமொஜௌ அஉ௱ா "

"அவனே விஷ்ணு, அவனே பிராணன், அவனே காலன், அவனே அக்கினி, அவனே சந்திரன்" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் பரமேசுரனே அக்கினி யெனக் கூறுகின்றன. இதனால் அக்கினி யென்னுஞ் சொற்பொருள் உருத்திர பரமேசுரனே என்பது பெற்றாம்.

அல்லது, அக்கினி என்னுஞ் சொல், அக்ரே=மேல், நயதி=கொண்டு போகின்றவன் என விரித்துப் பொருள் கொள்ளினும், சோமரசத்தை யருந்தியவர்களை மேற்பதவியை யடையுமாறு செய்கின்றவனும் உருத்திர பரமேசுரனே யாவன்; ஆதலின், அக்கினி யென்பது உருத்திர பரமேசுரனுக்கு ஒரு சிறந்த காரணப் பெயரா மென்பது ஈண்டு உணரற்பாலது.

அல்லது அகி, (அகி,) என்னும் பிராப்திப் பொருளைக் கொண்டு நகாரத்தைக் கெடுக்குமிடத்து எங்கும் நிறைந்து நிற்கின்றவன் எனப்படுதலின் உருத்திர பரமேசுரனே கொள்ளப்படுவன் என்பதும் உணர்க. இத்தகைய சொல்லமைவுக்கும் வடமொழியிலக்கணம் இடங்கொடுக்கின்றதென்பதுங் காணத்தக்கது. இதை வடமொழிப் பாடியத்திற் காண்க.

மற்றும், சருவ கதத்தன்மை எனப்படும் எங்கும் நிறைதற் றன்மையானது ஒன்று கொள்ளப்படவே ஏனைய சருவக்ஞத்தன்மை முதலிய எண்குணங்களும், அக்கினி யென்னுஞ் சொல்லானே குறிப்பிக்கப் பெற்றன என்பதை யூகித்துக்கொள்க.

அல்லது, பரமேசுரனுடைய, அட்ட மங்கள மூர்த்தங்களில், அக்கினியும் ஒரு மூர்த்தமாமாதலின், ஈண்டு அக்கினி அபிமானியாகிய மூர்த்தியையே அக்கினி யென்னுஞ் சொல் தெரிவிக்கின்றதெனினும் சிறிதும் முரணின்றென்பது முணர்க.

இது பற்றியே சிவபுராணமும்,

"வஹ்நிரஞ்ஜஹமஹிஷ்வம் ஸ்ராவஹ் தெஜொ மயீ ஶுஹா।
ஶனீர் ஶுஷமயீ ரௌத்ரீஜாஷிதா கொர ஶஷவிணீ"

"ஒளிப்பிழம்பானதும், மங்களமானதும், உருத்திர மயமானதும், கோரவடிவமுமாகிய உருத்திரனுடைய மூர்த்தியானது உலகின்கண் உள்ளும் புறம்பும் நிறைந்து நிற்கின்றது" எனக் கூறுகின்றது.

மற்றும், எல்லாமுணர்ந்தவராகிய வியாசபகவானும் தாமியற்றியருளிய பிரமசூத்திரமென்னும் சாரீரகமீமாஞ்சை (ஆராய்ச்சி) யின்கண்,

" ஸவிசாமி வ்யவதெஶஷு விஶெஷா நாமதிஹ்யாம "

"சிறப்பாலும் இயைபாலும் அபிமானி என்னும் வழக்கும் உண்டு" அதாவது ஒருபொருளைக் கொள்ளுமிடத்து அதனுடைய விசேடத்தாலும் இயைபாலும் அதனுடைய அபிமானியுங் கொள்ளப்படும் என்பதாம். எனவே, ஈண்டு அக்கினி தேவதையைக் கொள்ளில் மேற்கூறிய புராண வாக்கியத்திற்கு முரண்படுமாதலின் அவ்வக்கினியைத் தனக்கோர் மூர்த்த (வடிவ) மாய்க்கொண்டு அதில் அபிமானம் வைத்துள்ள உருத்திர பரமேசுரனே கொள்ளத்தக்கான் என்பது தாமேபோதரும்,

மந்திரத்தின் பிண்டப்பொழிப்பு வருமாறு :—

'வேண்டுவதை யீவான்' என்னும் வேள்விகட்கெல்லாம் வேந்தனும், வேள்வியால் ஆராதிக்கப்பெறுகின்றவனும், உண்மை யுரைப்பதிற் பிரிய முடையானும், புவனங்களனைத்திலும் நிறைந்திருக்கின்றவனும், வானுலக மண்ணுலகங்களின் போகப்பொருளை யளிக்கின்றவனும், பொன்னார் திருமேனியனும், அக்கினிக்குள்ளிருந்து செலுத்துகின்றவனும், வழிபடுவோரை மேற்பதத்திற் சேர்க்கின்றவனும், அனைத்திற்கும் அதிட்டானனும், சருவக்ஞனும், பவத்துன்பைப் போக்குகின்றவனும், என்றுமுள்ளவனும், மற்றும் பலவகை மங்கள குணங்களோடு கூடியவனுமாகிய உருத்திர பரமேசுரனை, எமது புதல்வர்களே! நீவிர், அருள்நோக்குடையவனாகச் செய்து கொள்வீர்களாக என்பதாம்.

'மேகம்போன்று நிலையற்ற மரணத்தின் முன்னர்' என்பது. எமது பிதாவே! பரமேசுர வழிபாடு அனைவரானும் செய்யற்பாலதாமென்பது உண்மையேயாம். அவ்வாறே யாமுஞ் செய்கின்றோம். ஆனால் இதனுள் ஒன்றுளது. அஃதென்னையெனின் ?

வேதமானது,

" ஶதாயுஃ வை புருஷஃ "

' நூறுவயதுடையவன் மனிதன் ' என்று கூறியிருத்தலின் மனிதர்க்கு வயது நூறுமென்பதில் ஐயமில்லை. இதில் தொண்ணூறுவயது சென்ற பின்னர் அவ் வழிபாடு செய்யில் மிக நலமாம். நீவிர் எம்மை இப்போதே வழிபாடு செய்தல்வேண்டுமென விரைவுப்படுத்தல் என்னை எனின் ? அதற்கு,

இருடி, தமது புதல்வரை நோக்கிக் கூறுகின்றார்:—புதல்வர்களே! நீவிர், இவ்வண்ணம் ஆசங்கை செய்யாதீர்கள். ஏனெனின்? இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்றெண்ணவோ திடமில்லை யாதலின் என்க. ஆயுள் இவ்வளவே யென்று உறுதி கூறலும், இறக்குங்கால மீதுதா னென்று தெரிந்து சொல்லலும் யாவர்க்கும் மிக அரிதாமாதலின் இனிது வாழுங்காலத்திலேயே இறைவனை வழிபடல் வேண்டுமென்றுணர்வீர்களாக. இது தமது மக்களை யுடன்படுத்துவார் போன்று உலகிற்குக் கூறுகின்றார் என்பது காண்க.

'சித்தங்கெடல்' என்றதால் சித்தத்தை உபலக்கணமாகக்கொண்ட இந்திரியங்களனைத்துங் கெட்டொழிதலாகிய இறத்தல் கொள்ளப்பட்டது.

ஈண்டு, 'நானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்'

எனவும்,

" மரண வேதனை யாவரால் அறியலா மயங்கி யைம்புலன் அந்தக்
கரணம் யாவைம் கலங்கிட வருந்துயர் கடவு ளேயறி கிற்பான்"

எனவுங் கூறிப் போந்தவாறே,

மற்றும், எண்ணிறந்த பெரியார்களும், நூல்களும் மிகப் பயந்து முறை யிடுகின்ற இறப்பினால் வருந் துன்பத்தை உற்று நோக்கின் மனமுருகாதாரும் உளரோ? இலர் என்பதாம்.

மரணம் வருங்காலம் நியம மன்றுமோ வென்பதற்கு, 'கணப்போதே னும் நிலைத்திருக்குமென்று எண்ணவுங் கூடாததாய் மேகத்தைப்போன்று நியமமின்றி வரும்' எனக் கூறினர் என்பது.

இதுபற்றியே,

"இறக்குங் காலத்தைத் தெய்வமு முணராதெனின் மக்களெவ்வாறு ணர்வர்" என்னும் வழக்குச் சொல்லும் நிகழ்கின்றது.

இவ்வாற்றால், இனிது வாழும்போதே மக்களாய்ப் பிறந்த அனைவரும் பரமேசுரனையே வழிபடல் வேண்டு மென்பதும், அவ்வண்ணம் வழிபாடு செய்தல் அனைவருக்கும் எளிதாமென்பதும் பெறப்பட்டன. எளிதாதலும் 'யாவர்க்குமா மிறைவர்க் கொருபச்சிலை' என்றாற்போல எளிய சாதனங்களைக் கொண்டே செய்யற்பாலதா மாதலினென்க. அவ்வழிபாடே வேண்டியவற் றை யடைவித்தல், வேண்டாதவற்றை விலக்கல் என்னும் பாதுகாப்பிற்குச் சிறந்த சாதனமாமென்பது முணர்க.

இக்கருத்தைக் கொண்டே கந்த புராணம் மலயாசல கண்டமும்,

"யாவஹ்நாயாதி ஊரணம் யாவஹ்நாக்ூஊதெ ஜரா ।
யாவஹெ்ந்ரிய வெகஷ்யூம் தாவத்பூஜய ஶங்கரழ்"

"மரணம் எதுவரையில் வரவில்லேயோ, எதுவரையில் கிழத்தன்மை வரவில்லேயோ, எதுவரை புலன்கள் கெடவில்லேயோ, அதுவரையும் சங்கரனைப் பூசிப்பாயாக" என்று கூறுகின்றது.

மற்றும்,

"ஷ்ரஹ்ஹணஃ ஷ்ரஷி கத்ர்த்ஷ்வம் விஷ்ணோஃ ஊநவஹத்நழ் ।
ஊந்ஷ்ரஷூ ஷ்ஷமஜ ராஜ்யக்ஷ்வம் ஶிவ வூஜாவியெஃ ஹஷ்ழ்"

"பிரமன் உலகைப் படைப்பதும், விஷ்ணு உலகைக் காப்பதும், இந்திரன் சுவர்க்கத்தை ஆள்வதும், சிவபூசையின் பயனும்" எனச் சிவபூசையின் பயனை யெடுத்துக்கூறி, சிவபூசை பண்ணல் வேண்டுமென்பதையே வற்புறுத்துகின்றது.

அங்ஙனமே, பிரமோத்தரகாண்டமும்,

"வத்ர ஊதெ்ரண ஷஞுஷெ யொ ஊஹாதி நிஜஃ வஃழ் ।
ஊஹொ ஶஶஂஷ்ரு வூஜாயா ஊஹாத்ஷூம் விஷ்யாவஹழ்"

"ஒரு பச்சிலேயால் பிரியமடைந்த ஈசுரன் தனது பதத்தை யளித்தருள்கின்றான். ஐய! பரமேசுரனுடைய பூசையின் மான்மியம் வியப்பாயிருக்கின்றது" என்று கூறுகின்றது.

அவ்வாறே பாரதமும்,

"யாவஹ்ஶாஂக ஶகலாஊஷ்வஷ ஊஷஷி
நஃ வீர்யதெ வஶுவதிஹஃமவாந் ஊஹெஶஃ ।
தாவஜ்ஜராஊரண ஜந்ம ஶதாஹி வாதெ
ஃஃஃவாநி தெஹவிஹிதாநி ஷஊஷஹாஷி"

'இளம்பிறை சூடிய மௌலியனும், பசுபதியும், பகவானுமாகிய மகேசுரன் எதுகாறும் பிரியமடைந்திலனோ, அதுகாறும் நூற்றுக்கணக்கான மூப்பிறப்புக்களில் அடிபட்டு உடம்பால் உண்டாகின்ற துன்பங்களைப் பொறுத்துக்கொள்வேன்" என்று கூறுகின்றது. இது உபமன்யு முனிவர்

சரிதமென்றுணர்க. இதுபற்றியே, மகான் அப்பைய தீக்ஷிதரவர்களும், வெள்ளெருக்கம்பூ முதலியவைகளால் உனது திருவடியைப் பூசிக்குந்தன்மை யொன்றை எனக்கருள் செய்வையேல், அதனால் முத்தியென்பது தானே வரும் என்றனர்.

மற்றும், இவ்வாறே அளவற்றுள்ள பிரமாணங்களை யூகித்துணர்க என்பதாம். (1)

விருத்தியுரை முற்றும்.

---

முதல் மந்திரம் முற்றிற்று.

---

## இரண்டாம் மந்திரம்.

இம்மந்திரம் இருக்குப் பதிகத்திற்கு ஒரு பதிகமாகவும், சாமகீதத்தில் நான்காகவும் உள்ளதாம்.

### இருக்கு மந்திரம் 2.

१ २     ३ १र २र   ३ १ २ १ २
तद्वो गाय सुते सचा पुरुहूताय सत्वने ।
२उ ३   २   ३ १ २
शं यद्गवे न शाकिने ॥ २ ॥

தத்³வோ கா³ய ஸுதே ஸசா பு³ருஹூதாய ஸத்வநே |
ஶம் யத்³க³வே ந ஶாகிநே ||

### கீத மந்திரம் 2.

५ र   ४ ५    १ ^    ३ २   ३    ५ १   २र २२   १ २
तद्वो होवा । गायार । सुता ईसार३४चा पुरु हूताय सात्वा ।
  १     २ २ ^   ३    ५    १ ^ ३    ५ २र
नारयि । शयत् । हा । औ३हायि । गार३४वायि । नारशार३४औ हो वा ।
२   १   १२ १ १
ए३ । किनेर३४५ ॥

### கீத மந்திரம் 3.

५ र र २ १ ३ ३र २ १ ३
तद्वो गया । सुतायि सचा३ । पुरु२३हूता३४ । हा हो३ । यासा
^३ . ५ २ १ - - १ ५
त्वा२३४नायि । श यद्वा२३वे । न शौ२ । हौ२ । हुवो२३४ । वा ।
४ ५
का५यिनो६हायि ॥

### கீத மந்திரம் 4.

५ र र र ५ २ र १र र२ १ २र२र १ ७
तद्वो गाय सुते सचा६ए । युु पु हूताय सत्वने । पुरु हूता । या सत्वा
२ ४५ २ ^३ ५ १ ४ २^ ५
ना इ । शयत् । गौवा ओ वा । ना शा । का । ईनो हायि ।

### கீத மந்திரம் 5.

५ र र र ५ २ र १र १ २
तद्वो गाय सुते सचा ए । पुरुहूताय सत्वना ई । शं यद्वा वे । ऐ हो
२ १ १ ३ ५र र ३ र२
आ ईही । नशा का ईना औ होवा । ई हा उ ॥

*இந் நான்கும் தத்வோவர்க்கம் எனப்படுகின்றன.*

*இவற்றிற்கு மூலகாரணமாகிய இரண்டாவது மந்திரத்தின்*

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे स्तोतार: !) | (ஹே ஸ்தோதார:) | (துதிப்போர்களே !) |
| व: | வ: | நீவிர் |
| सुते | ஸுதே | புத்திரப்பேறு முதலிய பயனை யடைவதற்கு, |
| पुरुहूताय | புருஹூதாய | பல பெரியோர்களால் அழைத்தற்கும் பூசித்தற்கும் உரியானும், |
| सत्वने | ஸத்வநே | ஈகையில் பேராற்றலுடையானும், |
| शाकिने | ஶாகிநே | சாகரத்தை யுண்டாக்கிய இருடியால் மகிமையை உணரப் பெற்றவனும், |
| इन्द्राय | இந்த்ராய | இந்திர வடிவங் கொண்டுள்ளவனுமாகிய பரமேசுரன் பொருட்டு, |

| | | |
|---|---|---|
| गवे न | ஜவெ _ந | பசுவிற்குப் புதிய கன்றுனது களிப்புண்டாக்குவது போன்று |
| यत् शं | யக் ஶ௱௦ | யாதொரு சங்கீதம் களிப்பை யுண்டாக்குகின்றதோ, |
| तत् | _தக் | அச் சங்கீதத்தை, |
| सचा | ஸ ஆா | கூடியுள்ளவராய், |
| गाय | ஜாய | பாடுவீர்களாக. |

விருத்தியுரை.

இம்மந்திரத்திற்கு, சம்யு, வார்ஹஸ்பத்தியர் ரிஷிகள் ஆவர். இச் சாமகீதத்திற்கோ, உருத்திரர், மிருக்யுர் ரிஷியாவர். வடமொழிச் சந்தம் காயத்திரி.

தேவதை, இந்திரனுடைய திருமேனி கொண்டு நிற்கும் உருத்திரனே யாவன்.

" துதியாளர்களே! நீவிர், இந்திரனென்னும் உருத்திர பரமேசுரனைப் பாடுவீர்களாக என்பது " இம்மந்திரத்தின் கருப்பொருளாம்.

ஈண்டுக் ' கூடிக்கொண்டு ' என்பதால், பாடுவோர், துதிப்போர் முதலிய அனைவரும் ஒருங்கே குழுமி நின்று பாடுவீர்களாக என்பது பெற்றும்.

" இந்திரன் வடிவங் கொண்டுள்ள இவ் வுருத்திர பரமேசுரன் பொருட்டு என்பது " எவன் பொருட்டுப் பாடவேண்டும்? என்னும் வினவிற்கு விடை கூறியவாறும்.

எவ் வண்ணத்தனுகிய இந்திரன் என்றறிய விரும்புமிடத்து * புருகூதன் எனப்பட்டது. அதாவது பல பெரியோர்களால் பல பெயரைக்கொண்டு அழைத்தற்குரியான் என்பதாம்.

இவ்வாறு இந்திரனைப் பல பெயர் கொண்டு அழைத்தலாலன்றே, சுப்ரமணியரை அழைக்குங்கால் இந்திர! வருக, ஹரிவ! வருக என்றற்றொடக்கத்து மந்திரங்களால் வேள்வி செய்கின்ற பல்லோர்களும் அழைக்கின்றூர்கள் என்பது காண்க.

மற்றும், இக் கருத்துக்கொண்டே உபநிடதமும்,

" ஊ௫ெ ா ஊயாஹிः வ௱௱௱வ ௦௱௦யதெ " " இந்திரனென்னும் பரமான்மா மாயைகளால் பலவகை யுருவங்களைக்கொண்டனர் " என்று கூறுகின்றது.

---

* புரு - பல பெயர்களால், ஹூத: - அழைக்கப் பெறுகின்றவன்.

ஈண்டு " ஒருநாமம் ஒருருவ மொன்று மிலார்க்கு ஆயிரம் திருநாமம் " என்று பல சுருதிகளும் கூறுகின்றதையும் உணர்க.

மற்றும், இந்திரன் என்னுஞ் சொல் ஐசுவரியமுடையான் என்னும் பொருளையே வலியாலும் இனிதுணர்த்துகின்றது என்பதுங் காண்க. அதுவும் மேலே வெளியாம்.

அற்றேல் புருகூதன், புரந்தரன் என நிகண்டிற் கூறியிருத்தல் என்னையோ வெனின்? அஃதும் இடுகுறிப் பெயரால் அமைதலினென்க.

" ஈகையில் பேராற்றலுடையான் என்பது " இப் பொருள் கொண்ட 'ஸத்வன்' என்னும் வட சொல்லிலுள்ள 'ஷணு' என்னும் பகுதியின் பொருள் ஈதலாமாதலின் தன்னை வழிபடுகின்றவருக்கு வேண்டியவற்றை அளிக்கின்ற பெரும் வன்மையை யுடையவன் என்பது பெறப்பட்டமை காண்க.

" சாகரத்தை யுண்டாக்கிய இருடியாலுணரப்பெற்ற மகிமையை யுடையவன் என்பது " இப்பொருளைத்தரும் 'சாகினே' என்னும் வடமொழிச் சொல் எல்லாம்வல்லான் என்னும் பொருளைத் தருவதுடன் சாகரத்தை யுண்டாக்கிய 'மங்கணகர்' என்னும் முனிவரால் அறியப்பெற்ற பெரும் மகிமையை யுடையவன் உருத்திர பரமேசுரன் என்பதையும் அறிவுறுத்து கின்றதனுலென்றுணர்க.

இப்பொருள் பெறல் யாண்டையதெனின்? அஃதாமாறு தெரிவிக்குதும்;—

முன்னர் 'மங்கணகர்' என்னுமொரு இருடி யிருந்தனர்; அவர் தமது திருக்கரத்தில் ஒரு தருப்பையின் நுனியால் அடிக்க, அக் கையிலிருந்து ஏழுகடலுந் தோன்றின; அதைக்கண்ட அவர் பாடிக்கொண்டே ஆடத் தொடங்கினர்; அதைக்கொண்டு உலகனைத்தும் ஆடத்தொடங்கின. அப்போது, உருத்திர பரமேசுரன் தோன்றி அவ்வெழு கடலையும் ஒரு பனித் துளிபோனத் தனது திருக்கரத்தில் அடக்கிக்கொண்டருளினர்; உடனே அம்மகரிஷியானவர், உருத்திரபரமேசுரனுடைய மகிமையை யுணர்ந்தவராய் எல்லாம்வல்ல இறைவ! நீயே, தேவர்கட்கெல்லாம் தேவனுகின்றாய், என்று பலவகையாகப் பரமேசுரனைத் துதித்தனர் என்னுமிக்கதை பாரதம் உத்தராத்தியாயத்திற் கூறியிருப்பதென்பதாம்.

"யாதொரு சங்கீதம் களிப்பை யுண்டாக்குகின்றதோ அச் சங்கீதத்தை" என்பது, எவ்விதமாகிய சங்கீதத்தை யென்பதற்கு விடை கூறப்படுகின்றது.

'பசுவிற்குப் புதியகன்றுனது களிப்புண்டாக்குவதுபோன்று' என்பது, எதைப்போன்று களிப்புண்டாக்கத்தக்க சங்கீதத்தை? என்பதற்கு விடை கூறலாம்.

ஈண்டு, பசுவிற்குப் புதிய பசும்புல் களிப்புண்டாக்குமாறு என்னும் பொருந்துமாயினும் அக்கால் இளம்புல் கொடுக்கின்ற களிப்பிலும் மிகுந்த களிப்பைப் புதிய இளங்கன்றே கொடுத்தலின் அதையே உவமையாகக் கூறப்பட்டதென்க.

மற்றும், உருத்திரபரமேசுரன் என்னது இந்திரன் வடிவங்கொண்டுள்ள உருத்திரபரமேசுரன் என்றல், இத்தோத்திரம் உச்சிப்போதிற் செய்கின்ற வேள்வியில் இந்திரனுடைய குணங்களைப் புகழ்ந்து போற்றுதல் கொண்டு இந்திரனுடைய தோத்திரமென்பதும் இனிது பெறப்படினும், அவ்வண்ணங் கொள்வார் கருத்திற்கு முற்றும் முரணுகாது அதையும் உடன்படல்போன்றே கூறியதென்பதாமெனக் கண்டுகொள்க.

அஃதன்றியும், இந்திரன் என்னுஞ்சொல் பெயரானும், பொருளானும் உருத்திரபரமேசுரனையே தெரிவிப்பதாமாயினும் இடம்நோக்கி இந்திரன் என்னும் ஒருவனைக்கொண்டு அவனுக்கு அதிட்டானமாகிய உருத்திரபரமேசுரன் கொள்ளப்பெற்றனன். இதுபோன்று நேரே உருத்திரபரமேசுரனை யுணர்த்தாத சொற்களின் பொருளான ஏனைய தேவர்களை மேற்கொண்டெழுந்த மந்திரங்களும் முடிவில் பரமேசுரனிடத்திலேயே இனிது அமைகின்றன என்பது ஈண்டு உற்றுநோக்கத்தக்கது.

இதுபற்றி யன்றோ,

ஈசுரன் என்ற சொற்குப் பொருளாகிய கண்ணபிரானும்,

"யெவ்யந்யதெவதா ஹக்தா யஜஙெ ஶ்ரஐயாநி்தாஃ ।
தெவி ஊரெவ கௌஞெய யஜஞ்ய வியிவ-வெ-ூகழ ॥"

"அருச்சுன! அன்போடு ஏனைய தேவர்களை ஆராதிக்கின்ற பக்தர்களும், விதியைத் தழுவாது என்னையே யாராதிக்கின்றுர்கள்" என்று திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

அங்ஙனமே, இருக்குவேதம் 1-164-169-வது மந்திரமும்,

इन्द्रं मित्रं वरुणं अग्निमाहुः ॥

"பரமேசுரனை, இந்திரன், மித்திரன், வருணன், அக்கினி என்று கூறுகின்றுர்கள்" என்று கூறுகின்றது.

மற்றும், வாசநேய சுருதியும்,

**एकैकं देवं एतस्यैव साविसृष्टिरेष उह्येवसर्वे देवाः ॥**

"எல்லாத் தேவர்களும் இப்பரமேசுரனிடத்திற் றோன்றியவர்களே யாவர்கள்" என்று கூறுகின்றது.

இதனாலன்றோ, நான்கு மறைகட்கும் நற்பாடியங்கண்ட சயணாசிரியரும், ஆங்காங்கு இந்திரன் முதலிய தேவர்கள் சுருதியில் பலர் அழைக்கப் பெறுவரேனும் பரமேசுரன் ஒருவனே அவ்வத் தேவர்கள் வடிவனாய் நிற்றலின் சிறிதும் மாறுபாடில்லை யென்றார்.

இதுபற்றியே கந்தபுராணமும்,

> ஙாநி சிவெஷவாகௗாநி ஸ்ராஹணா வெஷவித்தஉாঃ |
> ஈ-ஷஂ உ௱ுகிஷம் ஸஉாஸ்ரித்ய ஶிவெ வஈஉகாஈணெ,
> வயஷவஸ்ஸி ॥

மறையை நன்குணர்ந்த அந்தணப் பெரியோர்களே! "சில மறைமொழிகள் உருத்திரபரமேசுரனிடத்தில் முடிவுறுகின்றன அதாவது உருத்திரமூர்த்தியைக்கொண்டு முடிகின்றன" என்று கூறுகின்றது.

மற்றும்,

"ஸ்ரகிவாஷ்ஷ் உஹாடெவெ ஸ்ஷிதஸ்ஸவஷாஸ- உ௱ுகிஷஷ-" கூறப்பெற்ற மகாதேவர் எல்லாமூர்த்திகளிலும் இருக்கின்றனர்" எனவுங் கூறுகின்றது.

இவ்வாற்றால், நீண்ட கழுத்தன், அகன்ற மார்பன், பெருந்தோளன் என்பது முதலிய வாக்கியங்கள் அத்தகைய திருமேனியை யுடைய இராமபிரானையே குறிப்பதுபோன்று இந்திரனைப் புகழ்தலும் உருத்திரபரமேசுரனையே குறிக்கின்றது என்பது திரண்டபொருள்.

இனி, "இச்சாமவேத உருத்திரியை நன்கு ஓதி உருத்திரனுக் கன்பு செய்வானாக" எனக் கூறிப்போந்த சாமவேதப் பிரமணம் என்னும் பிரபல சுருதியின் வலியால் இம்மந்திரங்கள் நேரே உருத்திரபரமேசுரனையே துதிக்கின்றன என்று கோடலே மிகவும் பொருத்தமுடையதா மென்றுணர்க.

என்னை? "ஐந்த்ர்யா கார்ஹபத்ய முபதிஷ்டதே" "இந்திரன் மந்திரத்தால் காருகபத்தியமென்னும் அக்கினியைத் தாபிக்குக" என்னும் வேதவிதியில், இந்திரன் என்னுஞ்சொல் இருந்தும் ஆண்டு இந்திரன் என்ற சொல் ஐசுவரியத்தை மேற்கொண்டதாமாதலின் அவ்வக்கினியை வளர்ப்ப தற்கே இம்மந்திரம் சாதனமாயிற்று என்பதனாலென்க.

அற்றேலஃதாகுக? மறைகளிற் கூறப்பட்ட சொற்களுக்கெல்லாம் நியமமாய் ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொரு பொருள் கொள்ளல்வேண் டாமோ வெனின்? இஃதுண்மை. அங்ஙனமாயினும் பிராமணம் என்னும் வேதபாகத்திற்கே அவ்வண்ணமென்பதும் மந்திரமென்னும் வேதபாகத் திற்கு அவ்வண்ணம் இல்லையெனலுமே உடன்பாடாதலின் என்க.

இதுபற்றியே அப்பய்ய தீக்ஷிதரும்,

"ச்ருதிஷ்வபிமத அனேக வொயஷ்வேவ
மந்த்ர ஸங்காயமுக்கம் வ்யவஸ்தாவஷ"

"வேதம் போதிக்கின்ற பல்வகைப் பொருள்களிலும் மந்திரபாகத்தில் ஒரேபொருள் என்பதை நிறுவி" என்று கூறியுள்ளார்.

ஈண்டு, 'ஸத்வன்' என்னும் வடமொழிச் சொற்கு அறிஞர்களால் தொழற்குரியான், அல்லது, அன்பர்களைப் பாதுகாக்கின்றவன் எனினும் பொருந்தும்.

அல்லது, சத்துவம், என்பது ஒருகுண மெனக்கொண்டு சத்துவ குணச் செய்கையையுடைய உருத்திரபரமேசுரன் எனினுமாம்.

இப் பொருளையே சுவேதாசுவதர வுபநிடதத்திலும்,

"ஸத்வஸ்யைஷ ப்ரவர்தக:"

"சத்துவகுணச் செயலுடையவனே யிவன்" என்று கூறியிருக்கின் றது.

அல்லது, சத்வம், என்றது பரமார்த்த மென்னுஞ் சத்தையாம். அதாவது முக்காலத்துங் கெடாத உண்மையாம், அத்தகைய சத்தை உடை யவன் என்பது மமையும்.

இதுபற்றியே, உண்மை வாக்கியமொன்றும்,

"அஸ்தி ஹாதி ப்ரியமேவம் நாமரூபஞ்ச பஞ்சகம் ।
ஆத்யத்ரயம் ப்ரஹ்மரூபம் ஜகத்ரூபம் ததோத்வயம்"

"இருத்தல், விளங்கல், பிரியம், உருவம், நாமம் என்னும் ஐவகைக் கூறுகளை யுடையது இவ்வுலகம்; இதில் முதலாவது மூன்று கூறுகளும் பரப்பிரமத்தின் கூறுகளாகின்றன. இரண்டாவதாகிய இரண்டு கூறும் உலகின் கூறுகளாகின்றன" என அறிவுறுத்துகின்றது.

இதைத் தழுவியே தொல்காப்பியனாரும்,

"நிலம் நீர் தீவளி விசும்போடைந்தும்,
கலந்த மயக்கம் உலக மாதலின்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

இவ்வாறே, திருமறையும்,

"பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதி,
பேய்த்தேர் முகக்குறும்" என்று கூறுகின்றது.

இது கொண்டன்றோ கந்த புராணமும்,

"யஸ்ய ஊாயாமதம் ஸத்வம் ஶரீரம் ஸ்யாத்தெஶா ம-ணஃ।
ஸம்ஹாராய த்ரிஉஙதீஃநாம் ஸ ஈ-உ ஸ்யாஜஆவஈஃ"

"எவனுக்கு மாயையின் சத்துவகுணம் திருமேனியோ, அவனே சம்மாரத்தின் பொருட்டுத் தமோகுணமுடைய உருத்திரனாய் மும்மூர்த்திகளில் ஒருவனாகின்றான்; பிறனலன்." என்று கூறுகின்றது.

இதையே "உள்ளே சத்துவகுணமுடையான் வெளியிலே தமோகுணமுடையான்" என்று சூதசங்கிதை முதலிய நூல்களுங் கூறுகின்றன.

இதனால் 'குணி உருத்திரனே தமோகுணமுடையான்' என்பாரின் கொள்கையும் பயனற்றதாயிற்றென்க. என்னை? வெம்பவக் கடலில் மூழ்கித் துன்புற்றலைந்த ஆன்ம கோடிகட்கு, களைப்பாறுதற்கோர் குளிர் நிழலென்னும் இன்ப மயமாகிய பரமேசுரன் உபசம்மாரத்தின் பொருட்டாகவே புண்ணுற மருந்து கொள்ளல் போன்று தமோகுணத்தைப் பெற்றுக் கொள்கின்றனன்; அவன் கருணைக் கடலாகிய அருட்டிருமேனியான் ஆதலினென்க.

இப்பொருளையே சிவபுராணமும்,

"நிதாநஜ்ஞஸ்ய ஹிஷஜொ ஈ-ணெ ஹிம்ஸா வ்ர யா-ஜ்ஞதஃ।
நகி கிஞ்சிதவி நைவரஃணஂம் வரணொவாத்ர வ்ரயொஜிகா"

நோயுற்றாரை வைத்தியன் (சுடுதல், அறுத்தல் முதலியவைகளால்) துன்புறுத்தினும் அவன் சிறிதும் கருணையற்ற பட்சபாதன் ஆகான், (என்னை?) இங்கு நோயைப் போக்குதற்கு அன்புடைமையே காரண

மாதலின்" (இது போன்றே பரமேசுரனுடைய நிக்கிரக, அநுக்கிரகங்களும் என்பது காண்க.) என்று கூறுகின்றது.

மற்றும், இத்தகையனாகிய பரமேசுரனே பரப்பிரமம் எனக் கொள்ளுங்கால், அது குணத்திற்கு அடங்கிய தென்பது பொருந்தாமையின், நித்திரை, சோம்பல் முதலிய தமோகுணத்தின் காரியங்கள் அவன்பால் உண்டெனலே அமையாமையின் என்க.

அஃதன்றியும், "சத்துவகுணத்தால் ஞானமும் சுகமும்" என்னும் மிருதியால், உருத்திர பரமேசுரன் இன்பமயன் என்பதற்கு நிமித்தங்களான சிவ, ம்ருட, சம்பு, சங்கர என்பது முதலிய திருநாமங்களாலும் பரமேசுரனே இன்பங் கொடுக்கின்றவன் என்பதும் தானே போதரும்.

சத்துவகுணத் திருமேனியான் என்னுமிது கொண்டே,

"ஈஶாநஸ்ஸர்வவித்யாநாம்"

'எல்லா வித்தைகட்கு மிறைவன்' எனவும்,

"ஈஶாநாத் ஜ்ஞாநமந்விச்சேத்"

"பரமேசுரனிடத்திலிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்க" எனவும் சுருதி கூறுகின்றபடி, இதனால் ஈசுரன் வித்தையை யளித்தருளுந் தன்மையன் என்பதும் பெறப்பட்டதென்க.

ஈண்டு, புருகூதன், என்பதற்குப் பலர்களால் பல பெயரிட்டு அழைக்கப் பெறுகின்றவன் என்றமையினானே, வழிபடுகின்ற அநேக அன்பர்களாலும் 'பரமேசுர! நினது தரிசனந் தந்தருளல் வேண்டும்' என்று வேண்டப்படுகின்றவன் என்பதுங் கொள்ளக்கிடந்தமை காண்க.

என்னை? 'ஹிரண்யகாரணீ' என்னும் வேத மந்திரத்தில் 'ஹ்வய' என்னும் அழைத்தலையே பொருளாகக்கொண்ட வடமொழிப் பகுதிக்கு வேண்டுகோளும் பொருளாமெனப் பாடியத்திலும் உரைக்கப்பட்டிருத்தலினென்க.

இதையே, பாரதத்தின் ஆரண்ய பருவமும்,

"ஏவம் ஸம்வ்யாஹ்ருதோ ராஜர்ஷிபி: கிம ஹார த"

'இவ்வாறு இராசரிஷிகளால் வேண்டப்பெற்ற உருத்திர பரமேசுரான்' என்று தொடங்கி,

" ஸஹஷா கொடிஸூ ரூ ஊாணாம் ஐஷீணாசஹூதஸ்ரீதா ।
• உயா வரூவடூதரூம் ஊஹஷா "

" கோடிக்கணக்கான இருடிகட்கு (சிவன்) முன் தோன்றினன், யானும் கண்குளிரக் கண்டேன்" என்று முடித்துக்கொண்டு இதை ஒரு சரித்திர வாயிலாகக் கூறுகின்றது.

இதனால் வழிபடுகின்றவர்கள் உருத்திரபரமேசுரனைத் தரிசிக்க வேண்டும் எனப் பிரார்த்திக்கின்றனர் என்பதும், வேண்டினவர்கட்கு அருவுருவாகிய பரமேசுரன், ஆவில் பால் போலும், எந்திழைபால் முலைப்பாலும், கண்ணீரும் போன்றும், அருளுருவாய்த் தோன்றியருளுவன் என்பதும் பெறப்பட்டமை காண்க.

மற்றும், ஈண்டுப் புதிய இளங்கன்று பசுவிற்குக் களிப்பை யுண்டாக்குவது போன்று உருத்திரபரமேசுரனுக்குக் களிப்பை யுண்டாக்கும் சங்கீதத்தைப் பாடுவீர்களாக என்றமையால், அதனோடு பேராற்றலுடையவன் என்பதையும் இயைத்து, சங்கீதத்திலும் பேராற்றலுடைய உருத்திரபரமேசுரனுக்குக் களிப்புண்டாக்கத்தக்க சங்கீதத்தைப் பாடுவீர்களாக என்பதுங் கொள்ளற்பாலதாம்.

இதனால், காந்தருவ வேதத்திற்குங் காரணனாகிய உருத்திரபரமேசுரன் ஒருவனே, சங்கீதத்தின் இன்சுவையை யுணர்ந்து அருள் செய்யவல்லான் என்பதுங் கொள்ளக்கிடந்த பொருளாயிற்றென்க.

அற்றாகவின்றே,

" வஶுவெத்தி ஶிஶுவெத்தி வெத்தி கா நரஸம் ஃணீ ।
ஸம்கீதரஸ ஆஸ்வாதம் ஶங்கரோ வெத்தி நா வரஃ "

" விலங்குகளும், குழந்தைகளும், பாம்புகளும் சங்கீதச் சுவையை யுணர்ந்து கொள்கின்றன, சங்கீதத்தின் வல்லுநத் தன்மையைச் சங்கரனொருவனே யறிகின்றான் பிறனல்லன் " என்னும் ஒரு பழமொழியும் யாண்டும் பரவுகின்றது.

அங்ஙனமே, யாக்ஞவல்கிய மிருதியும்,

" கீதிஜ்ஞோ யதி யொகென ந ஹ்ராப்நோதி வரம் வதம் ।
ரூஷஸ்யாநுசரோ ஹூத்வா தெநைவ ஸஹ மொதெ "

"சங்கீதத்தை யுணர்ந்தவன் பரமபதத்தை யடையமாட்டானேல், உருத்திரபரமேசுரனுடைய தொண்டனாய் அவனோடு கூடவே களிப்புறு கின்றான்" என்று கூறுகின்றது.

இவ்வாறே சூதசங்கிதையின் ஒரு கூறாகிய பிரமகீதையும்,

"ஸ்ரீதிஜ்ஞாநம் ஶிவப்ராப்தெ ஸாதநம் காரணம் ஹவெத் ।
ஸ்ரீதிஜ்ஞாநேந யோக: ஸ்யாத் யோகாதெவ ஶிவெைக்யதா"

"சங்கீத ஞானம் பரமேசுரனை யடைவதற்குக் காரணமாகும். சங் கீத வுணர்ச்சியால் யோக முண்டாகின்றது; யோகத்தினாலே சிவனோடு ஒன்றாகுந் தன்மை யுண்டாகும்" என்று கூறுகின்றது.

மற்றும், இவ்வாறே சிவபுராண முதலியவைகளும் கூறுகின்றன வென்றுணர்க.

ஈண்டு, உருத்திரபரமேசுரன் பல விடத்தில் நிமித்தம்பற்றி அருள் திருமேனிகொண்டு எழுந்தருளி யிருக்கினும் பேரன்புடன் ஒழுங்காகிய சங் கீதத்துடன் அவனது புகழைப் பாடுகின்ற இடத்திலேயே பேராதிருப்பன் என்பது உட்கிடை.

அதுபற்றியே பகவான் விஷ்ணு மூர்த்தியும்,

"மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி"

"யான் வைகுண்ட முதலிய விடங்களில் இருக்கமாட்டேன், மற் றெங்கிருப்பேன் எனின்; எனது அன்பர்கள் யாண்டுப் பாடுகின்றார்களோ ஆண்டு நிலையாயிருப்பேன்" என்றருளிச் செய்துள்ளார்.

ஈண்டு வடமொழியில், புத்திரன் என்னுமொரு பயனை மாத்திரங் கருதிப் பாடுவீர்களாக எனக் கூறியிருக்க, புத்திரன் முதலிய எல்லாப் பயன்களையு மடைதற்பொருட்டு என்றது எவ்வாற்றாலாமெனின்? தெரி விக்குதும்.

மக்கட்பேறொன்றே ஒருவன் அடையவேண்டிய எல்லாப் பயன் வடிவா கவும் இருத்தலினென்க.

இதுபற்றியே,

"ஆநந்தி ருபிணெகோயம் ஸுவ தஹ்யதி கஷ்யதெ"

"புத்திரனொருவனே ஆனந்தப் பிழம்பெனப்படுகின்றான்" என்னும் பழையார் வாக்கியமும் உலாவுகின்றது.

மற்றும், பாகவதமும்,

'பைங்குழவி மீது கொழுந்து விட்டோங்கும்' என்று கூறுகின்றது. இது கொண்டன்றோ தெய்வத் திருவருளால் வந்த பெருவேதமும்,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற" என்று கூறுகின்றது.

இம்மந்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—

புத்திரர்களே! நீவிரும், உமக்கு வேண்டிய பயன் முதலியவற்றை யடைதற் பொருட்டு, இந்திரனுடைய திருமேனி கொண்டெழுந்தருளுகின்றவனும், எல்லாப் பயன்களையும் அளிக்க வல்லானும், ஆன்றோர்களால் ஆராதிக்கத்தக்கோனும், அன்பர்களைப் பரிபாலிக்கின்றவனும், சத்துவ குணமாகிய அருள் திருமேனியை யுடையவனும், சத்துவகுணச் செயல்களை யுடையவனும், பிரம வித்தையை யளிக்கின்றவனும், பொது நோக்குடையானும், தொண்டர்களுடைய பரிதாபத்தைப் பொறுக்காதவனும், உலகிற் கொரு காரணனும், பரப்பிரம வடிவனுமாகிய உருத்திர பரமேசுரனுடைய அருள் சுரக்குமாறு, வேத வழக்கைப்பற்றிய சங்கீதத்தையேனும், அல்லது உலக வழக்கைப்பற்றிய சங்கீதத்தையேனும் இனிது பாடுவீர்களாக என்பதாம்.

## இரண்டாவது மந்திர விருத்தியுரை

முற்றிற்று.

---

சங்கீதத்தில் 3-4-5-வது மந்திரங்கள்
முடிந்தன.

---

மூலம்

## மூன்றாவது மந்திரம்.

சங்கீதத்தில் 6-7-8-வது மந்திரங்கள்.

இம்மந்திரம் இருக்கிலும் சாமத்திலும் ஒரு பதிகமாகவும் சங்கிதத்தில் மூன்று பதிகங்களாகவும் உள்ளது.

३ १२ ३ १ २३ १ २ ३ १ २ ३२३२उ ३२
मूर्द्धानं दिवो अरतिं पृथिव्या वैश्वानरमृत आजातमग्निम् ।
३ २ ३ २ ३१ २ ३ १ २ २३ ३ १२ ३ २
कविँ सम्राजमतिथिं जनानामासन्नः पात्रं जनयन्त देवाः ॥

மூர்தாநம் திவோ அரதிம் ப்ருதிவ்யா
வைஶ்வாநரம்ருத ஆஜாதமக்நிம் ।
கவிம் ஸம்ராஜமதிதிம் ஜநாநா
மாஸந்ந: பாத்ரம் ஜநயந்த தேவா: ॥

## கீத மந்திரம் 6.

२र ३ ४उ५ २२२१ २ १ ३ ४ ५ २२१२
आज्या दोहम् ॥ ३ ॥ मूर्द्धानं दाइ । वा३अर । तिं पृथिव्याः वैश्वा
२ १ र २२ ३ ४ ५ २ १ २ १ २ ३४र ५
नराम् । ऋत आ । जात मग्निम् । कविंछ सम्रा । जा३मति । थिं जनानाम् ।
२र १ २ १ २३ ४२५ २र
आसन्नः पा । त्रा३जनः । यंत देवाः । हा उ ॥

२र १र२ २र ३ ४ २र र १र२
आज्य दोहम् । २ । अज्य दो५३हा उ । वा ए । आज्य दोहम् । २ ।
२र उ १र ३ २र र
अज्य दोहम् । २ । ए । आज्यदोहा२३४५म् ॥ हा उ । ३ । हुम् ॥

## கீத மந்திரம் 7.

१२ २र र २र र १ २
चिदोहम् । ३ । मूर्द्धानं दाई । पूर्ववत् । हा उ । हुम् । चिदोहम् । २ ।
१ २ ३१ १११ २र
चिदो३हाउ । वा३ई२३४५ ॥ ६५ ॥ हा उ ॥ ३ ॥

## கீத மந்திரம் 8.

१२ २२१र २र १२
च्योहम् । ३ । मूर्द्धानं दाइ । पूर्ववत् । हा उ । ३ । च्योहम् ॥ २ ॥
५ २ २ १२
च्यो३हाउ । वा२ । ए३ । ऋतम् ॥

மூல இருக்கு மந்திரத்தின் பதவுரை.

| | | |
|---|---|---|
| दिवः मूर्द्धानं | திவ: மூர்தாநம் | தேவர்களுக்குள் மேம்பட்டோனும், அல்லது வானுலகைத் தாங்குகின்றவனும், |
| पृथिव्याः | ப்ருதிவ்யா: | மண்ணுலகத்தும் |
| अरतिं | அரதிம் | இறைவனாய் விளங்குகின்றவனும், |

| | | |
|---|---|---|
| वैश्वानरं | வெஶ்வா நரம் | எல்லா வுலகமாயுள்ளவனும், |
| ऋते | ஐதெ | வேள்வியில் |
| आजातं | ஞஜா தம் | அருள் திருமேனிகொண்டு எழுந் தருளுகின்றவனும், |
| अग्निं | ஐநிம் | அனைத்திற்குந் தலைவனும், |
| कविं | கவிம் | வரம்பிலா ஞானங்களை யுடையவனும், |
| सम्राजं | ஸமராஜம் | இயற்கைச் சோதி வடிவனும், |
| जनानां अतिथिं | ஜநாநாம் ஐதியிம் | அனைவராலும் அதிதிபோன்று போற்றத்தக்கானுமாகிய உருத்திர பரமேசுரனை, |
| देवाः | ஜெவாஃ | தேவர்கள் |
| नः आसन् पात्रं | நஃ ஞஸநு வாதும் | செபிக்கின்ற எம்முடைய மந்திரங்கட்கு விஷயம் ஆகுமாறு |
| आजनयन्त | ஞஜநயஞ | செய்கின்றார்கள். |

விருத்தி யுரை.

ஈண்டுப் பரத்துவாசர் ரிஷி. சாமத்தில் வைசுவாநராக்கினி. திருஷ்டுப், சந்தம். அக்கினியையே தனக்குத் திருமேனியாகக்கொண்ட சிறப்பு வடிவாலேனும், நேரே சொரூபமாந் தன்மையாலேனும் உருத்திர பரமேசுரனே தேவதை யாவன். இவ்விருவகைப் பட்சங்களும் முன்னர்க் கூறப்பட்டன ஆண்டுக் காண்க.

மூலத்தில் "மூர்த்தா" என்பது உடலுக்கு ஒரு தலையைப் போன்று தேவர்களுக்குள் சிறந்தோனாய் வான நாட்டைத் தாங்குகின்றவன் என்பது பொருள்.

இதுபற்றியே, சுருதியும்,

"உதஃ வ்ருஷாநம் ஜெவா உவஜீவஞி"

"முக்கியமாகிய இவ் வக்கினியைக்கொண்டு தேவர்கள் பிழைக்கின்றார்கள்" என்று கூறுகின்றது.

இதனாற் போந்த பொருள் என்னையோ வெனின்? தேவர்கள் இனிது வாழ்ந்து வருதல் அவிகளைக் கொண்டேயாம்; அத்தகைய அவிகளை யளித்தலும், அக்கினியின் வயமாமாதலின் அக்கினியே அமர நாட்டைத் தாங்குகின்றதென்பதும், தேவர்களுக்குள் தலைமையதா மென்பதுமாம். அக்கினியே உருத்திரன் பரமேசுரன் என்னும் பொருளாம் என்பதை முன்னர்க் கூறினும், அதை ஈண்டும் நினைத்துக்கொள்க.

"மண்ணுலகத்தும் இறைவனாய் விளங்குகின்றவனும்" என்பது மூலத்தில் இப் பொருளைத் தரும் வடமொழிச் சொல் 'அரதி' என்பதாமாதலின் என்க.

அச் சொல்லும்,

"அக்நி மூர்த்தா திவ: ககுத்" என்றற் றொடக்கத்து மற்றொரு மந்திரத்தில் இறைவன் என்னும் பொருள் தந்து நிற்றலின், ஈண்டும் 'அரதி' என்னுஞ் சொல் இறைவன் என்னும் பொருளையுந் தந்து நின்றதென்க. இறைவன் என்பவன் பரிபாலிப்பவனே யாவன்; ஆதலின் மண்ணுலகத்தைப் பரிபாலித்தற் பொருட்டு, காசி, சிதம்பரம், கமலாலயம் முதலிய தலங்களில் அருளுருக் கொண்டெழுந்து அருள் செய்கின்றவனும் உருத்திர பரமேசுரனே என்பது பெற்றும்.

மற்றும், மூலத்தில் வானுலகம், என்றதற்கு இடவாகு பெயரால் தேவர்களைக் கொள்ளப்பட்டது; என்னை? வானவர்க்கு மேலுலகமே வாழிடமா மாதலினென்க.

'மூர்த்தா' என்றது தலையாம் ஆதலின் சிறந்தவன் என்பதாயிற்று, ஆகவே தேவர்களுக்குள் சிறந்தவனும், மண்ணுலகிற்கு இறைவனும் உருத்திர பரமேசுரனே என்பது திரண்ட பொருள்.

அல்லது, வான நாட்டையும், மண்ணாட்டையும் தாங்குகின்றவன் உருத்திரபரமேசுரனே எனக்கொள்ளினும் அமையு மென்க.

அதுபற்றியே சுருதிகளும்,

"ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரசாஸனே கார்கி த்யாவாப்ருதிவ்யௌ வித்ருதே திஷ்டத:"

"நித்தியமாகிய இப் பரமான்மாவின் ஆணையால் வானுலக மண்ணுலகங்கள் தாங்கப்பெற்று நிற்கின்றன" எனவும்,

"ஏஷ ஸேதுர் விதரண ஏஷாம் லோகாநாம்"

"இவ் வுலகங்களைத் தாங்குகின்ற ஆதார வடிவானது இப்பரமான்மாவாகும்" எனவுங் கூறுகின்றன.

அல்லது, 'அரதி' என்னும் வடசொல்லை, ரதி - விருப்பம், அஃதில்லாதோன் அரதி யெனப்படுவன் எனப் பொருள் கொள்ளில் உருத்திரபரமேசுரன் முழு வைராக்கியத்தை யுடையவன் எனப் பொருள் கொள்ளினும் இனிதமையும் என்பதுங் காண்க.

இதனானே,

பகவான், என்னுஞ் சொல்லிலுள்ள பகம் - ஐசுவரியம் என்னுமிடத்து ஞானமும், வைராக்கியமும் பகம் என்பதற்குப் பொருளாக நூலாசிரியர் கூறியுள்ளார்.

அவ்வாறே பரமேசுரனுக்கு நிலையான பத்துவகைக் குணங்களைக் கொள்ளுங்காலும்,

"ஜ்ஞாந விராகமைஶ்வர்யம்"

'ஞானம் வைராக்கியம் ஐசுவரியம்' என்பது முதலிய அப் பத்துக் குணங்களிலும் வைராக்கியமும் கொள்ளப்பட்டிருக்கின்றதென்க.

'எல்லா வுலகமாயுள்ளவனும்' என்பது, வைசுவாநரன் என்பது வைசுவ - உலகனைத்துமுள்ள, நரன் - நர வடிவன், என விரிதலின் எல்லா வுயிர்களுமாய் நிற்பவன் என்பது பொருளாயிற்றென்பதாம்.

இவ்வாறே, வைசுவாநரன் என்பது உலகனைத்தையும் நியமிப்போன் என்னும் பொருளைத் தருமென்பது முணர்க.

அற்றாகலினன்றே வியாச சூத்திர பாடியமும்,

"ஆத்மாநம் வைஶ்வாநர உபாஸ்தே"

"ஆன்மாவை வைசுவாநரனென உபாசிக்கின்றான்" என்னுஞ் சுருதி வாக்கியத்திற்குப் பொருளுரைக்குங்கால், "வைசுவாநரன், என்னுஞ் சொல் எல்லா வடிவனுமாகிய பகவான் பரமேசுரனையே காரணப் பெயரானுங் காட்டுகின்றது" எனக் கூறுகின்றது.

அல்லது, வேள்விப் பொருள்தரும், 'ருதே' என்னும் வடமொழிச் சொல் சத்தியம் என்னும் பொருளையுந் தருவதாமாதலின், 'சத்தியமாகிய தனது வடிவில் நிலைத்திருக்கின்றவன்' எனப் பொருள் கொள்ளலும் உரியதேயாகும். ஈண்டு 'நிலைத்திருக்கின்றவன்' என்பது எஞ்சி நின்றதாய்க் கொள்ளற்பாலதாம்.

இதுபற்றியே, சுருதியும்,

ஸ "பகவ: கஸ்மிந் ப்ரதிஷ்டித: ?"

'பகவான் எதில் நிலைத்திருக்கின்றான்?' என வினவிக்கொண்டு, 'ஸ்வே மஹிம்நி' 'தனது மகிமையில் நிலைத்திருக்கின்றான்' என உத்தரமுரைக்கு முகத்தாற் கூறுகின்றது.

மற்றும், ஈண்டு எழுந்தருளுகின்றவன் என்பதை எல்லா வுலகமாய், என்பதுடன் இயைத்து 'எல்லா வுலகமாய் நிற்கின்றவன்' எனப் பொருள் கொள்ளினும் இனிது பொருந்துமாறுணர்க. என்னை ? பரமேசுரனே எல்லா வுலகமாய்த் தோன்றி நிற்கின்றானாதலின் அவனைத் தவிர்த்துச் சிறிதும் உண்மையிலின்றாமென்பது யாண்டும் ஒப்ப முடிந்ததாமாதலினென்க.

அற்றாகலினன்றே, சுருதிகளும்,

"ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய"

"அப்பரமான்மா பல்லுயிர்களாவோம் என்று திருவுளங் கொண்டது"
எனவும்,

"ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேய"
"அப்பரமான்மா பல்லுயிர்களாவோம்" என விரும்பிற்று எனவும்,

"ததாத்மாநம் ஸ்வயமகுருத"

"அப்பரமான்மா தன்னையே உலகமாய்ச் செய்தது" எனவும், மற்றும் பலவகையாகவுங் கூறுகின்றன.

அவ்வாறே 'உலகனைத்துமாணுய் நீயே' எனவும், "உலகேழெனத் திசை பத்தெனத் தான் ஒருவனுமே பலவாகி நின்றவா" எனவும், அருள் திருமறைகளும் முழங்குகின்றன என்பதும் ஈண்டுணரற்பாலது.

'ஸர்வோ வை ருத்ர:' "எல்லாம் உருத்திரனே யாவன்" என்னும் உண்மைச் சுருதியையும் ஈண்டுணர்ந்துகொள்க.

'வரம்பிலா ஞானங்களை யுடையவனும்' என்பது, முன்னர்க் கூறியவாறே பதினெண் வித்தைகட்கும் உருத்திர பரமேசுரனே காரணனாதலின் அவனே எல்லா ஞானங்களையு முடையவன் எனப்படுதலினென்க; இதனால், எல்லாமுணர்ந்தவன் என்பதுந் தாமே போதருமென்றுணர்க.

இதுபற்றியே, வியாசபகவானும்,

'சாஸ்த்ர யோனித்வாத்' 'சாத்திரங்கட்குக் காரணமாதலின்' எனச் சூத்திரமு மியற்றியருளினர். ஈண்டு, வாக்கு மனங்கட் கெட்டாத வேத முதலியவைகளைப் பரமேசுரன் செய்தனன் என்பதனானே அவன் எல்லா முணர்ந்தவன் என்பது கருத்து. என்னை ? 'ஒருவர் ஒரு நூலைச் செய்யின், அவருடைய உணர்வு அந்நூலினுள்ள அறிவினும் பேரறிவாகவே யிருத்தல் வேண்டும்' என்பது மகரிஷி பாணினி முனிவரிடத்துக் காணக் கிடத்தலி னென்றுணர்க. ஈண்டு விரிக்கிற் பெருகுமென விடுத்தாம்.

'இயற்கைச் சோதி வடிவனும்' என்பது, இப் பொருள்தரும் வடமொழிச் சொல்லாகிய 'ஸம்ராஜ:' என்பது, ஸம் - நன்கு, அதாவது இயற்கையாகவே, ராஜ: - விளங்குகின்றவன் என விரிக்கப்படுதலின் இப் பொருள் கொள்ளக்கிடந்ததாம்; இதனால் இயற்கைச் சோதியன் எனவே சுயஞ்சோதி வடிவன் என்பதும், பிற வொளிகளால் விளக்க முடியாதவன் என்பதும் பெறப்பட்டமை காண்க.

அல்லது,

'ராஜ:' என்னுஞ் சொல் விளங்குதலாகிய பொருளைத் தருவது போன்று ஐசுவரியங்களனைத்தையு முடைய தலைவன் என்னும் பொருளையுந் தருவதாமாதலின், அனைவருக்கும் உருத்திர பரமேசுரனே தலைவன் (இறைவன்) என்பதும் அமையும். இதை 'சேனைகட்கு ராஜன்' என்னுமிடத்துச் சேனைகட்குத் தலைவன் என்பதே வெளிப்படையா யிருத்தல் போன்று எனக் கண்டுகொள்க என்பதாம்.

அற்றாகலினன்றே, சுருதியும்,

"ஶரஂஶ்வராணாஂ ஶரஶொ உஹெஶ்வர:"

'ஈசுரர்களுக்கெல்லாம் ஈசுரன் பரமேசுரன்' என்று கூறுகின்றது.

'அனைவராலும் அதிதிபோன்று போற்றத்தக்கானும்' என்பது, தேவர், சுரர், மனிதர் முதலிய அனைவராலும் விருந்துபோன்று (நிலையின்றித் திடீரென வந்தவர்போன்று) ஆராதிக்கத்தக்கான் என்பதாம்.

அதிதியானவன், அந்தணன் முதலிய மேம்பட்டோனா யிருப்பினும், சண்டாளன் முதலிய தாழ்ந்தோனா யிருப்பினும் உண்ணுங்கால் வருவானேல், அவன் பூசிக்கத்தக்கான். அவனை யாராதிக்காவிடில் பெருந்தீமை விளையும்; பூசிக்கிலோ, பெரும்பயனை யடைவர் என்பதாம்.

இதுபற்றியே பல நீதி நூல்களும்,

"விெப்ரா வா யதி அஜ்ஞாெயா விப்ரஜ்ந: வி_தூவா_தக: ।
ெவெஶ்ெதெவெ _தஂ ஸஂப்ராப்தஸ்ெஸாஉதிதிஸ்ஸ்வ்ர்_கஂ ஸஂக்ரஉ: "

"அதிதியானவன் அந்தணனேயாயினும், சண்டாளனேயாயினும், அந்தணனைக் கொன்றவனா யிருப்பினும், தந்தையைக் கொன்றவனா யிருப்பினும், வைசுவதேவ மென்னும் (தேவர்கட்கு நிவேதித்துத் தான் உண்ணும்) காலத்தில் முன்பின் அறியாதவனாய் வருகின்ற அவ் வதிதியானவன் சுவர்க்கத்தை

யடையச் செய்கின்றவனே யாவன்; அதாவது அவனைப் பூசிக்கில் சுவர்க் கத்தை யடைதல் பயனும்" எனவும்,

"ஸ்வாகதே நாக்நய: ப்ரீதா ஆஸநேந ஶதக்ரது: ।
பிதர: பாதஶௌசேந அந்நாத்யேந ப்ரஜாபதி: ।
ஶயநேந ததா ப்ரஹ்மவிஷ்ணு மஹேஶ்வரா:"

"அதிதியானவன் வந்ததால் அக்கினிகள் பிரியமடைகின்றன. அவன் ஆசனத்தின்கண் அமர்ந்திருக்கில் இந்திரன் பிரியமடைகின்றான். அவனுடைய பாதங்களைக் கழுவியதால் பிதிர்க்கள் பிரியமடைகின்றனர். அவன் உண்டதால் பிரசாபதியானவர் பிரியமடைகின்றனர். அவன் உறங்கில் பிரமன், விஷ்ணு, மகேசுரர் பிரியமடைகின்றனர்" எனவும்,

"வயிஶ்ராந்தமவிஜ்ஞாத மர்திதம் க்ஷுத்பிபாஸிதம் ।
யோ ந ஸம்பூஜயேத் பக்த்யா தமாஹுர் ப்ரஹ்மகாதகம்"

"வழியில் களைப்புற்றவனும், தெரியாதவனும், பசி தாகங்களை யுடையவனுமாகிய அதிதியானவன் வரின், எவன் அவனை அன்போடு ஆராதிக்கவில்லையோ, அவன் அந்தணரைக் கொன்றவனாகின்றான்" எனவும் கூறுகின்றன என்பதாம்.

'தேவர்கள் செபிக்கின்ற மந்திரங்கட்கு விஷயம் ஆகுமாறு செய்கின்றார்கள்' என்பது.

ஈண்டு, "ஆஸக் பாத்திரம்" என்னும் வடமொழிச் சொல்லில், 'ஆஸ்யம்' என்பது வாயினாற் கூறப்படுகின்ற எழுத்துக்களாம்.

இதுபற்றியே,

"அஸ்யதே ந வர்ணா இத்யாஸ்யம்"

'அஸ்யம் என்னும் வாயால் உச்சரிக்கப்படுவதாமாதலின் ஆஸ்யம் எனப்படுகின்றது' என்றார் பதஞ்சலி மாமுனிவராகிய வியாகரண மாபாடியகாரரும். இவ்வாற்றால் ஆஸன் செபிக்கின்ற மந்திரம் என்பது பெற்றாம்.

செய்கின்றார்கள், என்றது 'ஆஜநயந்த' என்னும் வடமொழி வினைச் சொற்கு வடமொழி யிலக்கணத்தைத் தழுவிச் செபிக்கின்றார்கள் என்பதும் பொருளாமாதலின் என்க. இதன் முறையை ஆண்டுக் காண்க. இதனால் உருத்திர பரமேசுர மந்திரத்தைச் செபிக்கின்றார்கள் என்னும் பொருளுங் கொள்ளக்கிடந்தமை காண்க.

ஈண்டு உருத்திர செபமே எல்லாவற்றினும் சிறந்ததா மென்பதுண ரற்பாலது.

இதுபற்றியே பல நூல்களும்,

"ப்ரணவ: ஶதருத்ரீயம் த்வதா²ர்வஶிரஸ்ததா² ।
ஸ்வவேதஞ்ச ஜப: ப்ரோக்த: ஸ்வாத்⁴யாய இதி கீர்த்யதே"

"பிரணவம், சதருத்திரம், அதர்வசிரசு முதலியவைகளைச் செபித்தல், தனது மறையை ஓதுவதேயாகும் என்று சொல்லப்படும்" என்று கூறுகின்றன.

அங்ஙனமே கண்ணபிரானும்,

"யஜ்ஞாநாம் ஜப யஜ்ஞோஸ்மி"

"வேள்விகளுக்குள் செபவேள்வி யானாயிருக்கின்றேன்" என்றருளிச் செய்தனர். இதனால், வேள்விகளனைத்தினும் உருத்திர செபஞ் செய்தலாகிய வேள்வியே சிறப்புடைத்தென்பது பெற்றாம்.

இவ்வண்ணமே, கூறிப்போந்த சுருதி, மிருதி, புராணம் முதலியவற்றின் வாக்கியங்களால், அக்கினியையே தனக்கொரு திருமேனியாகக் கொண்டு, வானுலக மண்ணுலகங்களைத் தாங்குகின்றவனும், எல்லா வுலகமாய் நிற்கின்றவனும், மண்ணுலகத்தும் அன்பர்கட்கு அருள் திருமேனி கொண்டு அநுக்கிரகஞ் செய்கின்றவனும், கெடாத சத்தியத் தன்மையால் நிறைந்தவனும், எல்லாவற்றிற்கும் தலைமையா யிருக்கின்றவனும், வரம்பில்லாத ஞானம் முதலிய குணங்களை யுடையவனும், அதிதிபோன்று பேரன்புடன் போற்றத் தக்கானுமாகிய உருத்திர பரமேசுரனுடைய மந்திரங்களைத் தேவர்கள் செபிக்கின்றார்கள் என்பது இம்மந்திரத்தின் பிண்டப் பொழிப்பாம் என்பது காண்க.

இதுபற்றியே சுருதி மிருதிகளும்,

"அக்³நிர்வை தே³வாநாம் ப்ரத²மோ தே³வதாநாம் ।
அக்³நிமுகா² வை தே³வா: ப்ரீணாதி ।
அக்³நி: ஸர்வா தே³வதா:"

"தேவர்கட்கு முதன்மையானது அக்கினியேயாம். அக்கினி வாயிலாகவே தேவர்களனைவரும் பிரியமடைகின்றனர், அக்கினியே எல்லாத் தேவர்களாகும்" என்று கூறுகின்றன.

அற்றேலஃதாகுக, எல்லாத் தேவர்கட்குள்ளும் சிறந்தவர் உருத்திர பரமேசுரரே என்பதும், அவரிடத்து அன்பு செலுத்தலே, எல்லா வித மான பயன்களையுங் கொடுக்கும் என்பதும், அவ்வன்பு எல்லாருக்கும் ஒரு தலையாக வேண்டுமென்பதும், அது மிகவும் எளிதாய் முடியுமென்பதும், யாவரும் அறிந்திருக்கின்றனர். அவ்வண்ணஞ் செய்யாது ஏனைய புன்னெறி களிற் சென்றுழல்கின்றனரே அஃது என்னை யெனின்? கலியுகத்தில் பர மேசுரனிடத்து அன்பு செலுத்தல் முதலிய வழிபாடுகள் மக்களிடத்துக் காணப்படுகின்றனவாயினும் தேவர்களே பொறாமைகொண்டு அவற்றைக் கெடுத்துவிடுகின்றனர்; ஆதலின் அவை முடிந்து பயனை யளித்தற்கு வலி யற்றவைகளாகி ஒழிகின்றனவென்பது ஈண்டு உணரற்பாலது.

அற்றாகலினன்றே சிவ புராணமும்,

“தோக்ஷ்யே நஷ்யமாநாயாம் து:கவத் ஸ்யாத் க்ருஹமேதிந: ।
ததைவ ஜ்ஞாநவாந் விப்ரோ தேவாநாம் து:கதோ பவேத் ।
த்ரிவர்ஷாதேந விப்ரேண ப்ரவிஷ்டா ஹ்ருதயம் ந்ருணாம் ।
ததோ ந ஜாயதே பக்தி: மஹாதேவே ஹி தேஹிந: ।
தஸ்மாத் விவிக்ஷா நைவ ஜாயதே ஸர்வதேஹிநாம் ।
யதாகதஞ்சிஜ்ஜாதாபி க்ஷயே விக்நீஸ்யதே ந்ருணாம் ।
ஜாதம் வாபி சிவஜ்ஞாநம் ந விஸ்வாஸ்யம் பவத்யுத ”

“பால் கறக்கின்ற பசுவானது போய்விட்டால் இல்லறத்தானுக்குத் துன்பமுண்டாவது போன்று, ஞானமுடையவன், தேவர்கட்குப் பெருந் துன்பத்தைக் கொடுக்கின்றவனாகின்றான்; (என்னை? வேள்வியில் ஈயப் படும் அவியைத் தவிர மற்றொன்றும் அவர்கள் வாழ்வதற்கு வருவாய் இல் லாமையின் அவன் ஞானியாய்விடில் வேள்வியில் அவி கொடுக்கமாட்டான் என்னுங் கருத்தாலென்க.) ஆதலின், தேவர்கள் மனிதர்களின் உள்ளத்திற் புகுந்து கெடுக்கின்றனர்; அதனால் ஒருவர்க்கேனும் ஈசுரபக்தி யுண்டா கின்றதில்லை. சூலமேந்தியவன்பால் பத்தி செய்யவேண்டுமென்னும் விருப் பமே உண்டாவதில்லை. மக்கட்கு எவ்வாற்றாலேனும் பக்தி யுண்டாயினும் இடையில் கெட்டுவிடுகின்றது. சிவஞான முண்டானபோதும் அது விசு வாசஞ் செய்யத்தகாததாய் ஒழியும்” என்று கூறுகின்றது.

6-7-8-வது கீதப் பாடல்களின் விருத்தியுரை

முற்றும்.

எட்டுக் கீதப் பாடல்கள் முடிந்தன.

## கீத மந்திரம் 9.

இது கேவலம் கீதப்பாடலே யன்றி இருக்கு மந்திரமன்று.

अधिप तायि। मित्रपा तायि। क्षत्रप। तायि। स्वः पतायि। धनपता२इ। ना२माः। मन्युना वृत्रहा सूर्येण स्वराड्यज्ञेन मघवा दक्षिणास्य प्रियातनू राज्ञा विशंदाधार। वृषभस्त्वष्टा वृत्रेण शचीपतिरन्नेन गयः पृथिव्या सृणिकोग्निना विश्वं भूतम। भ्यभवो वायुना विश्वाः प्रजा अभ्यपावथा वषद् कारेणर्द्धं भाक्सोमेन सोमपाः समित्पा परमेष्ठी। ये देवा देवाः। दिविषदः। स्थतेभ्यो वो देवा देवेभ्यो नमः। ये देवा देवाः। अंतरिक्षसदः। स्थतेभ्यो वो देवा देवेभ्यो नमः। ये देवा देवाः। पृथिवीषदः। स्थतेभ्यो वो देवा देवेभ्यो नमः। यो देवा देवाः। अप्सुषदः। स्थतेभ्यो वो देवा देवेभ्यो नमः। यो देवा देवाः। दिक्षुसदः। स्थतेभ्यो वो देवा देवेभ्यो नमः। यो देवा देवाः। आशा सदः। स्थतेभ्यो वो देवा देवेभ्यो नमः। अवज्यामिव धन्वनो वित्ते मन्युमयामास मृडतान्न इह अस्मभ्यम्। इडा२३ भा। य इदं विश्वं भूतम। युयो३। आ उ। वा२३। ना२३४माः॥

ஒன்பதாவது கீதப் பாடலின் பதவுரை.

| | | |
|---|---|---|
| मित्रः पतिः | மித்ரः பதிः | (பரமேசுர! நீ) மித்திரனு (சூரியனு)க்கு இறைவனுகின்றாய். |
| क्षत्रः पतिः | க்ஷத்ரः பதிः | அரி, இந்திரன் என்பவர்களுக்கும் இறைவனுகின்றாய். |

| | | |
|---|---|---|
| स्वः पतिः | ஸ்ஸூ: வதி: | சுவர்க்கத்திற்கும் இறைவனாகின்றாய். |
| धनपतिः | ய_நவதி: | தனங்களுக்கும் தலைவனாகின்றாய். |
| मन्युना वृत्रहा | உந்யூநா வ்ருத்ரஹா | கோபத்தால் விருத்திரனைக் கொன்றவனும் ஆகின்றாய். |
| सूर्येण स्वराट् | ஸூர்யேண ஸ்வராட் | சூரிய வடிவாய் உலகை விளக்குகின்றவனாயிருக்கின்றாய். |
| यज्ञेन मघवा | யஜ்ஞேந மகவா | யாகத்தால் அதன் பயனை நுகரும் இந்திரனுமாயிருக்கின்றாய். |
| दक्षिणास्य प्रियातनूः | தக்ஷிணாஸ்ய ப்ரியா தநூ: | தக்ஷிணாமூர்த்தியாய் அன்பு செய்தற்குரியவனும் நீயாகின்றாய். |
| राज्ञा विशं दाधार | ராஜ்ஞா விஶம் தாதார | மற்றும், வேந்தன் வடிவால் குடிகளைத் தாங்குகின்றவனும் நீயாயிருக்கின்றாய். |
| वृषभः | வ்ருஷப: | விரும்பியவற்றைப் பொழிபவனும் நீயாயிருக்கின்றாய். |
| त्वष्टा | த்வஷ்டா | தீயர்களைத் தண்டிப்பவனும் நீயாயிருக்கின்றாய். |
| वृत्रेण शचीपतिः | வ்ருத்ரேண ஶசீபதி: | மறைத்தலால் விருத்திரனைக் கொல்லுந் தொழிற்குத் தலைவனும் நீயாகின்றாய். |
| अन्नेन गयः | அந்நேந கய: | அன்னங்களையுடைய இல்லறத்தானும் நீயாயிருக்கின்றாய். |
| पृथिव्या सृणिकः | ப்ருதிவ்யா ஸ்ருணிக: | மண் நாட்டைத் தன்வயமாகச் செய்கின்றவனும் நீயாயிருக்கின்றாய். |
| अग्निना विश्वं भूत-मभ्यभवः | அக்நிநா விஶ்வம் பூதமப்யபவ: | அக்கினிவடிவால் அனைவரையும் கட்டுப்படுத்தியவனும் நீயாயிருக்கின்றாய். |
| वायुना विश्वा प्रजा अभ्यभवथ | வாயுநா விஶ்வா ப்ரஜா அப்யபவத | வாயுவால் உயிர்களைப் பிழைக்கச் செய்கின்றவனும் நீயாயிருக்கின்றாய். |
| वषट्कारेणार्द्धभाक् | வஷட்காரேணார்த்தபாக் | வஷட்கார மந்திரத்தையுடைய யாகத்தால் அதன் பயனை அநுபவிப்பவனும் நீயாயிருக்கின்றாய். |
| समित्या परमेष्ठी | ஸமித்யா பரமேஷ்டீ | சபையில் விளங்கும் பிரமனும் நீயாயிருக்கின்றாய். |

| | | |
|---|---|---|
| ये देवा देवाः दिवि-षदः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | யே தேவா தேவா: திவிஷத: ஸ்த தே-ப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | சுவர்க்கத்தில் எந்த, தேவகணங்களும் உருத்திர கணங்களும் உண்டோ, அவைகட்கு வணக்கம். |
| अन्तरिक्षसदः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | அந்தரிக்ஷஸத: ஸ்த தேப்யோ வோ தேவா தேவே-ப்யோ நம: | வானிலுள்ள தேவர்கட்கும் உருத்திரகணங்கட்கும் வணக்கம். |
| पृथिवीषदः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | ப்ருதிவீஷத: ஸ்த தேப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | மண்ணிலுள்ள தேவகணங்கட்கும் உருத்திரகணங்களுக்கும் வணக்கம். |
| अप्सुषदः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | அப்ஸுஷத: ஸ்த தேப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | நீரிலுள்ள தேவர்கட்கும் உருத்திரகணங்கட்கும் வணக்கம். |
| दिक्षुसदः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | திக்ஷுஸத: ஸ்த தேப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | திக்குகளிலுள்ள தேவர்கட்கும் உருத்திரகணங்கட்கும் வணக்கம். |
| आशासदः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | ஆசாஸத: ஸ்த தேப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | பத்துத் திசைகளிலுமுள்ள தேவர்கட்கும் உருத்திரகணங்கட்கும் வணக்கம். |
| अवस्यामिव धन्वनो स्यतेभ्यो वो देवा देवेभ्यो नमः | அவஜ்யாமிவ தந்வநோ ஸ்த தேப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | தனுவில் நாணேற்றித் தளர்விப்பது போல் எங்கள் மேலுள்ள கோபத்தைப் பொறுத்தருளின தேவர்களுக்கு வணக்கம். |
| य इदं भूतमः स्थ तेभ्यो वो देवा देवेभ्यो नमः | ய இதம் பூதமஸ் ஸ்த தேப்யோ வோ தேவா தேவேப்யோ நம: | எவர் இந்த உலகைத் தோற்றுவித்தருளிய பரமேசரரோ, அவருக்கு வணக்கம். |

விருத்தி யுரை.

இவைகளின் சுர முதலியவைகளை வடமொழியிற் காண்க.

இருக்கு இல்லாததால் இதற்குச் சந்தம் இல்லை.

முன்னிரண்டு பாடல்களின் தேவதைகள் வைசுவ தேவர்கள் ஆவர். மூன்றாவது மந்திரத்திற்கு உருத்திரனவன், அல்லது பின்னிரண்டிற்கும் வைசுவ தேவர் ஆவர். முதலாவதற்கு உருத்திரனவன்.

ஈண்டு, முதலாவதாயுள்ள ' நம: ' என்னும் வரை, இடையிலுள்ளது ஓர் எசுராம். நினக்கு ஆகுக என்பது எஞ்சி நின்றது. ' அதிபதியா (இறைவன்) தற்றன்மை முதலிய குணங்களையுடைய உருத்திரனாகிய

பரமேசுரனே! உனக்கு (எனது) வணக்கம் ஆகுக; என இயைத்துக் கொள்க. ஈண்டு வணக்கம் என்பது வணங்குதற்குரியோன் மேம்பட்டோன் என்னும் உணர்ச்சி காரணமாய் வணங்குவோன் தாழ்ந்தோன் என்னு முணர்ச்சியுடன் செய்கின்ற ஒருவனுடைய அங்கங்களின் செய்கையேயாம்.

ஈண்டு 'இறைவன்' எனவே அனைவருக்கும் இறைவனுமென்பது கொள்ளக்கிடக்கின்றது.

இதுபற்றியே, சுதரிசனசாரியரும்,

'ஆயிரங் கிளைகளையுடைய சாமவேதத்திற் கூறப்பட்ட மகிமைகளை யுடையவன் சங்கரனேயாவன், மகிமைதங்கிய அக்குணங்களே தேவ விரத முதலியவைகளில் எண்ணப்படுகின்றன' என்று கூறியுள்ளார்.

மித்திரனு (சூரியனு)க்கும் நீயே இறைவனு யிருக்கின்றாய் என்பது,

(1) உருத்திர பரமேசுரனே எல்லாவற்றிற்கும் இறைவனு யிருக்கின் றான் என்றதை விரித்துக் காட்டத் தொடங்கி, அவனது பல்வகை நாமங்கள் தனித்தனியே கூறப்படுகின்றன. அவற்றுள், முதலாவது சூரியனுக்கும், உருத்திர பரமேசுரனே இறைவன் என்று கூறப்படுகின்றது என்பதாம்.

ஈண்டு, 'பதி' என்பது சுவாமியாகும். சுவாமி யெனவே ஈசுரன் என்பது பெறப்படுகின்றது. என்னை? 'பதி யீசுரன்' என்று அமர கோசங் கூறுதலின் என்க. இவ்வாற்றால், ஒப்பற்ற கீர்த்தியை யுடையவன் என் பது கருத்து. இதனால் உலகத்திலும், வேதத்திலும் மிகப் பிரசித்தியா யுள்ள சூரியனும், உருத்திர பரமேசுரனுடைய அநுக்கிரகத்தை யடைதற் குரியான் என்பது பெற்றாம்.

இதுபற்றியே, சுருதியும்,

"யெந ஸூய்யஃஸுவதி தெஜஸெஹாஃ"

"யாதொரு பரமேசுரனால் பேரொளியுடன் சூரியன் விளங்குகின்ற னனோ" என்று கூறுகின்றது.

அங்ஙனமே, மிருதியும்,

"யதாதிதூ உதம் தெஜொ ஜமஹாஸயதெஉவிழு"

"இரவியின்கண்ணுள்ள ஒளியாய் நின்று உலகத்தை விளக்குகின்றது எதுவோ, அது எனது ஒளியென்றுணர்வாயாக" என்று கூறுகின்றது.

மற்றும், உருத்திர பரமேசுரனுடைய அட்ட மங்கள மூர்த்தங்களுள் இரவியும் ஒரு சிறந்த மூர்த்தமா யிருக்கின்றதென்பதுமுணர்க.

இப்பொருளையே, சுருதியும்,

"யஃ ஸூர்யே திஷ்டந்"

"எவன் இரவியின்கண் இருந்துகொண்டு செலுத்துகின்றானோ" என்பதனால் வலியுறுத்துகின்றது.

அங்ஙனமே, புராணமும்,

"க்ஷ்மாம்போக்நி மருத்வ்யோம சந்த்ரார்க க்ஷேத்ரஜ்ஞாஷ்டக நிவாசகாஃ"

"நிலம் நீர் தீ வளி விண் மதி இரவி ஆன்மா" என்று நேரே இதையே விளக்குகின்றது.

இவ்வாற்றால் சூரியனுடைய மகிமையினாலேயே உலகம் விளங்குகின்றதென்பதும், அச் சூரியனும், பரமேசுரனுடைய திருமேனியேயாவன் என்பதும் தெளியப்பட்டது. மற்றும், தேகத்திற்கு இறைவன், தேகி யென்பதிற் சொல்லவேண்டுவ தென்னைகொல்? இது யாண்டும் மிக வெளிப்படையா மென்க.

அரிக்கும் இந்திரனுக்கு மிறைவன் என்பது,

ஈண்டு, மூலத்திலுள்ள 'க்ஷத்திரம்' என்னுஞ் சொல் விஷ்ணுவையும், இந்திரனையுங் குறிக்கின்றது. முன்னர் 'மித்திரன்' என்பதற்கு, சூரிய தேவனைக் கொண்டதால், ஈண்டுத் தேவர்களை கொள்ளற்பாலர் என்பதே தகுதியாமாதலினென்க. வடமொழி யிலக்கணவகையானும் இப்பொருள் பெறப்படுகின்றதென்பது முணர்க.

இதனாலன்றோ, சுருதியும்,

"இந்த்ரஶ்ச ஸம்ராட் விஷ்ணுர்வை தேவதா க்ஷத்ரம்"

"இந்திரனும் விஷ்ணுவும் க்ஷத்திரம் எனப்படுகின்றார்கள்" என்று கூறுகின்றது.

அங்ஙனமே புராணமும்,

"ந்ருபாணாம் தைவதம் விஷ்ணுர்தேவஶ்ச வாஸவஃ"

"அரசர்களின் தெய்வீகத்தன்மை, விஷ்ணுவும் இந்திரனுமாகின்றது" என்று கூறுகின்றது.

'சுவர்க்கத்திற்கும் இறைவன்' என்பது,

"யஞ ஓ:வெ ந ஸம்ஹிஞம் ந அ ரூஷுமனஞாரமு ।
ஊஹிரொவெஷாவ நீதஞ த்ஸ்வம் ஷு: வடிாஷமு"

"துன்பத்தோடு சேராததும், என்று முள்ளதும், சிறப்புடையதும் அனைவரும் விரும்பத்தக்கதுமாகிய இன்பமே சுவ: (சுவர்க்கம்) என்பதின் பொருள்" எனக் கூறப்பட்டிருத்தலானும்,

சுருதியும்,

"ஸுவரிதுவெள ஞெரகஃ"

"சுவ: என்பது ஒரு வுலகம்" என்று கூறுகின்றதாலும், சுவர்க்கம் என்னும் மூன்று முலகத்திற்கும், இன்பவடிவாகிய முத்திக்கும், பரமேசுரனே இறைவன் என்பது பெறப்படுகின்றதென்க.

'தனங்கட்கு இறைவன் என்பது' கண்டு, தனம் என்றதால் எல்லாப் புருடார்த்தங்களுங் கொள்ளக் கிடக்கின்றன. சுவ: பதி, தனபதி என்னும் இரண்டு சொற்களானும், இவ்வுலக, பரவுலக போக்கியப் பொருள்களுக்கும், இவ்வாறே, அதிபதி, என்றதனுனே தேவர், மனிதர் முதலியோர்களுக் கும் இறைவன் என்றதாயிற்று. இதனுல் மித்திரபதி, க்ஷேத்திரபதி, சுவ: பதி, தனபதி, என்னும் நான்கு சொற்களானும், தேவர், மனிதர் முதலிய எல்லாப் பிராணிகட்கும் இறைவன் என்பதும், புத்திரர், தனம் முதலிய உலகிலுள்ள போகப் பொருள்களுக்கும், பேரின்பத்திற்கும் உருத்திர பரமேசுரனே இறைவனுகின்றான் என்பதும் பெறப்பட்டமை காண்க.

இப்பொருளேயே, சாமமறைப் பாடல்களும்,

"வனஷொஞராதி த்ஹிரணஉயஃ வரஷொ"

"பொன் மயமாகிய இப்புருடன் இரவியினுள் காணப்படுகின்றான்" என்றற் றொடக்கத்து மந்திரங்களாற் கூறுகின்றன என்பதுணர்க.

இவ்வாற்றால் போக்தபொருள் யாதோவெனின்? கூறியவாங்கே தடை யிலாத ஐசுவரியங்களை யுடைய உருத்திரபரமேசுரனை, யான் வணங்குகின் றேன் என்பதாம்.

இனி, 'மித்திரன்' என்பவன் முதலியோர்கட்கு இறைவன் உருத்திர பரமேசுரனென்று மேற் கூறப்பட்டது. ஆண்டு, மித்திரன் என்னுஞ் சொல் 'ஞிமிதா' சிநேகம், என்னும் வடமொழிப் பகுதியிலிருந்து வந்ததா

மாதலின், இதனால் பேரன்புடைய அகத்தியர், கௌதமர், ததீசி, மார்க்கண்டர், உபமந்யு, பதஞ்சலி, வியாக்கிரபாதர் முதலிய பக்தர்கள் கொள்ளக்கிடக்கின்றனர்; கொள்ளவே, அன்பர்களை இனிது பரிபாலிக்கின்ற உருத்திர பரமேசுரனை வணங்குகின்றேன் எனப் பொருள் கொள்ளலும் ஈண்டு உரித்தாகு மென்பது காண்க.

அற்றேல்? உருத்திர பரமேசுரனே ஐந்தொழிலையும் நடத்துகின்றவனாதலின் பொதுவாகிய அத் தொழில்களுக்குள் காத்தற்றொழிலும் அடங்குமேனும், அன்பர்களை இனிது பாதுகாத்தலே உருத்திர பரமேசுரனது சிறப்புத் தொழிலா மென்றுணர்த்துதற் பொருட்டே ஈண்டு மித்திரன் முதலியோர்களைப் பாதுகாக்கின்றவன் எனக் கூறப்பட்டதென்றுணர்க.

அற்றாகலினன்றே புராணமும்,

"ஊக்த ரக்ஷணாயைவ ஊஊ ஸவஷூம் ஹி தெஷிதம ।
இதி ஜாநீத ஊக்தா வ்ராணெஹ்யாவி ஶரீயஸீ"

"யான் செய்கின்ற தொழிலனைத்தும் எனது அன்பரைப் பாதுகாத்தற்பொருட்டேயாம் என்றுணர்வாயாக; எனது அன்பன் எனது உயிரினுஞ் சிறந்தோனவன்." என்று கூறுகின்றது.

அல்லது, மித்திரன் என்பது, பன்னிரு சூரியர்களுள் ஒருவனவன் அவனுக்கு இறைவன், உருத்திர பரமேசுரனே முக்கியமாகிய சூரியனாகின்றான் என்பதாம். அங்ஙனமே, க்ஷத்திரபதி யென்னும் விஷ்ணுவுமாகின்றான்; சுவ: பதி யென்னும் இந்திரனுமாகின்றான்; தனபதி யென்னும் குபேரனுமாகின்றான் என்பதாம். இதனால் பரமேசுரனே எல்லாத் தேவர்களாகவு மிருக்கின்றான் என்பது கொள்ளக்கிடந்தமை காண்க.

இதுபற்றியே, ஏனைய சுருதிகளும்,

"ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்ர: ஸோக்ஷர: பரமஸ்ஸ்வராட் ।
ஸ ஏவ விஷ்ணுஸ்ஸ ப்ராண ஸ்ஸகாலோக்நிஸ்ஸ சந்த்ரமா:"

"அப்பரமான்மாவே, பிரமன், சிவன், இந்திரன், அக்கரம், பரமம், சுவராட், விஷ்ணு, பிராணன், காலன், அக்கினி, சந்திரன் முதலிய தேவர்கள் வடிவங்களாய் இருக்கின்றது." என்று கூறுகின்றன.

ஈண்டு "இந்திரன் முதலிய தேவர்கள் சுவர்க்க முதலியவற்றிற்கு இறைவராவர்" என்பது சுருதிகளிற் கூறப்பட்டிருப்பினும் அவர்கள் பரமேசுரனுடைய கூறுகளானதால் பரமேசுரன் வடிவர்களென்பதுங் கூடுமென்றுணர்க.

இதுபற்றியே, பாரதவாக்கும்,

“ ஸௌஹ்ராதிஷு அ தெவெஷு தஸைஶ்வர்யமு உபாஹூதெ ”

“ இந்திரன் முதலிய தேவர்களிடத்துள்ள ஐசுவரியமானது பரமேசுரனுடைய ஐசுவரியமேயாம் ” என்றெழுந்தது.

இவ்வாறு, எல்லாவற்றிற்கும் இறைவனாகவும், எல்லாவற்றையும் பாது காப்போனாகவும், எல்லா வடிவனாகவும் பரமேசுரன் துதிக்கப்பெற்றனன் என்பதுணர்க.

இனி, ‘ மந்யுநா ’ என்பது முதல் ‘ பரமேஷ்டி ’ என்பது ஈறாக, பல் வகை மகிமைகளை யுடையவனாக அப் பரமேசுரன் சிந்திக்கப்படுகின்றான்.

அவற்றுள், “ கோபத்தால் விருத்திராசுரனைக் கொன்றவனாய் இருக்கின்றாய் ” என்பது, ஈண்டு இருக்கின்றாய் என்பது எஞ்சி நின்றதாம்.

கோபம் என்னும் நிமித்தத்தால் எண்ணூற்றுப்பத்து விருத்திராசுரர்களைக் கொன்றனன் என்பதாம்.

இதுபற்றியே, சுருதிகளும்,

“ இந்திரோ விருத்திர மஹாந் ” எனவும்,

“ இந்த்ரோ தயீசோ அஸ்திபிர்வ்ருத்ராண்யப்ரதிஷ்குத: ஜகாந நவதீர்நவ ”

“ இந்திரன் ததீசியின் எலும்புகளால் எண்ணூற்றுப் பத்து விருத்திரர்களைக் கொன்றனன் ” எனவுங் கூறுகின்றன.

அற்றேலஃதாகுக. சுருதிகள், இந்திரன் விருத்திராசுரனைக் கொன்றனன் என்று முழங்குகின்றனவே யன்றி பரமேசுரன் கொன்றானெனக் கூற வில்லையே யெனின்? அப்படிக் கூறுவது உண்மையே ஆனால், தலவகார வுபநிடதமென்னும் கேநோப நிடதமும், “ தேவர்கள், யாமே வெற்றி கொண்டோமென இறுமாந்திருக்க, பரமேசுரன் இயக்க வடிவமாய் எழுந்தருளி எல்லாவற்றிற்கும் தானே காரணனென்றும், அவ் வெற்றியும் தன்னாலேயே ஆனது என்றும் அறிவுறுத்தருளினன் ” என்பதை இரண்டு கண்டங்களால் கூறுகின்றது. அதைப்போல் உருத்திர பரமேசுரனே விருத்திராசுரனைக் கொன்றனன் என்பதும், ஏனைய தேவர்கள் நிமித்தர்களாமென்பதுந் தெற்றென விளங்குமாறு காண்க.

அல்லது, ‘ மந்யுநா விருத்திரனைக் கொன்றனன் ’ என்பதை ‘ மந்யு ’ என்பதை ‘ சதமந்யு ’ என்பதில் ஒரு கூறெனக்கொண்டு, இந்திரனால் அதா’

வது இந்திரனாகிய காரணத்தைக்கொண்டு பரமேசுரன் விருத்திராசுரனைக் கொன்றனன் எனப் பொருள்கொள்ளினும், வடமொழி இலக்கண வகையாலும் இது இனிதமையுமென்பதுணர்க.

'அல்லது, மந்யுநா என்பது, வேள்வியால் எனவும், விருத்திரம் என்பது பாவத்தை யெனவுங் கொள்ளலாம், அதாவது யாகத்தால் பாவத்தைப் போக்கி யருளுகின்றவன் என்பது பொருள்.

இதுபற்றியே சுருதியும்,

" தெவயஜநாய வரதுராய ஹவாஸபாவஷ "

" தேவாராதனையா (யாகத்தா)ல் பாவத்தைத் தொலைத்தவர்களாவோமாக." எனக் கூறுகின்றது.

மற்றும்,

" ஹிஷா ஹிஷா அ ஹ தாநி ஹக்ஷா ஸவ உிம் ஜகத் ।
யஜெதெகம் விரூபாக்ஷம் ந ஸ பாபெந லிபயதெ "

" உயிர்களைக் கொன்றாகிலும், பயமுறுத்தியாகிலும், இவ் வுலகத்தை யழித்தாகிலும் விரூபாக்ஷராகிய பரமேசுரரை எவன் ஆராதிக்கின்றானோ, அவன் பாவமடையான் " எனவும்,

இன்னும்,

" யஜெஞ வாவ உவ நாஷதி "

" தருமத்தால் பாவங் கெடுகின்றது " எனவுங் கூறுகின்றது.

இதனாலன்றோ, பாரதமும்,

" பிநாகபாணிஸ்ஸவாந் ஸவபாவஹரோ ஹரः "

" பிநாகபாணியாகிய பகவான் பரமேசுரனே எல்லாப் பாவத்தையும் போக்குகின்ற அரனாகின்றான்." என்று கூறுகின்றது.

மற்றும், அதன் பாடியமும்,

நீ, மந்யுநா (கோபமாகிய) காரணத்தால், விருத்திரனைக் கொன்றவனாயிருக்கின்றாய்." என்று இப்பொருளையே வலியுறுத்துகின்றது.

உலகனைத்தையும் சூரிய வடிவால் விளக்குகின்றவனா யிருக்கின்றாய், என்பது, சுயம்பிரகாச வடிவனாயிருக்கின்றாய் என்பதாம்.

ஈண்டு, "யெந ஸூய்ய-ஐலவகி"

"எவனால் சூரியன் காய்கின்றான்" என்னுஞ் சுருதியால், பரமேசுரனுடைய அருளைப் பெற்றதாலேயே சூரியனுக்கும் விளக்குந்தன்மை யுள்ளதாமென்பது உணரற்பாலதாம்.

"யாகத்தால் அதனுடைய பயனை நுகர்கின்ற இந்திரனும் நீயாயிருக்கின்றாய்" என்பது, ஈண்டு 'மகவன்' என்னுஞ்சொல் 'மம்ஹதி' 'ஈகை' என்னும் வடமொழிப் பகுதியின்கண் பிறந்ததாமாதலின் யாகமாகிய சாதனத்தால் வேட்டோர்கட்குப் பயனை யளிக்கின்றவன் நீயாயிருக்கின்றாய் எனவும் பொருள்படுமாறுணர்க. இருக்குப் பாடியத்திலும், 'மகவன்' என்பதற்கு பயன் அளிக்கின்றவன் என்று கூறப்பட்டிருக்கின்றதென்க.

அல்லது, யாகமாகிய சாதனத்தால் இந்திரனாற் செய்யப்படும் மழை பெய்வித்தல் முதலிய காரியங்களைச் செய்கின்றவனும் நீயா யிருக்கின்றாய் எனினுமாம்.

இதுபற்றியே சுருதியும்,

"ஸயாதி ரு-ஸு வாய-ஸுதி"

பயத்தால் இந்திரனும் வாயுவும், என்று தொடங்கி "இந்திரனே மழை பெய்விப்பவன்" என்று கூறி முடிக்கின்றது.

தக்ஷிணாமூர்த்தியாய் அன்பு செய்தற்குரியானும் நீயாகின்றாய்' என்பது,

இப் பரமேசுரனுடைய தக்ஷிணா மூர்த்தமானது முத்தி விருப்புடையார்கட்கு மிக விரும்பற்பாலதாம். அதாவது பக்தி செய்வதற்குரியதாம். ஈண்டு முத்தி விருப்புடையார்களால் அன்பு செய்யற்பாலது என்று கூட்டிக் கொள்க.

இதுபற்றியே, வாயு சங்கிதையும்,

"அஜாதஇ ெஜெவெகம் உஷா ஜநநி ஸீரவஃ।

ரு-உ ஸெதிாஸெ வுவதஷெ ஸுஷாய-ஃம் உக்ஷிணம் உ-வழ"

"பிறப்புக்கட்குப் பயமடைந்தோர்கள் பிறப்பற்றவனுயுள்ள ஒருவன் நீயே யென்று உன்னையுணர்ந்துகொண்டு, உருத்திரனாகிய நினது தட்சிண முக மூர்த்தியை யடைகின்றனர்." என்று கூறுகின்றது.

அங்ஙனமே, சுவேதாசுவதர சுருதியும்,

"ருத்ர யத்தே தக்ஷிணம் முகம் தேந மாம் பாஹி"

"உருத்திர! உன்னுடைய தக்ஷிணமுகம் யாதொன்று இருக்கின்றதோ, அதனால் எம்மைப் பாதுகாப்பாயாக" என்று இப்பொருளேயே வலியுறுத்துகின்றது. இதனால் முத்தி விருப்புடையாரால் வழிபடற் குரியவன் உருத்திர பரமேசுரனே என்பதும் பெறப்பட்டமை காண்க.

அல்லது, பேரன்பிற்கு விஷயமானது இவ் வுருத்திர பரமேசுரனுடைய தாட்சண்ய முடையதென்னும் அருட்டிருமேனியே யென்பதுமாம். இதனால் கருணைக் கடலான் என ஈண்டு எடுத்துக்கொண்ட பரமேசுரனே உயிர்களிடத்துப் பேரன்புடையான் என்பதும் கொள்ளக் கிடந்தமை காண்க.

"வேந்தன் வடிவால் மக்களைத் தாங்குகின்றவன் நீயாயிருக்கின்றாய்" என்பது, அதாவது அரசர்களால் பிரசைகளைப் பரிபாலிக்கின்றவனும் உருத்திர பரமேசுரனே யாகின்றான் என்பதாம். இதனால் அரசனாய் நின்று தண்ட நீதி முறையில் ஆணை செலுத்துகின்ற தன்மையும் பரமேசுரனுடைய வயப்பட்டதேயாம் என்பதாயிற்று. அல்லது வழிபடுகின்றதை நோக்கிப் பயனை யளிக்கின்றவனும் நீயாயிருக்கின்றாய் என்பதாம்.

"அன்பர்கள் விரும்பியவற்றை நிறையப் பொழிகின்றவனும் நீயாயிருக்கின்றாய்" என்பது, ரிஷபம் என்னும் வடமொழிச் சொற்கு இவ்வாறே பொருள் கூறல்கொண்டு, ரிஷபக்கொடி, ரிஷபவாகனம் என்பது முதலியவைகளுக்கும் பொருள் கூறல் எளிதிற் கூடும் என்பதை பாரத வாக்கியத்தாலும் உணர்ந்துகொள்ளற்பாலதாம்.

'துஷ்டர்களைச் சிட்சிக்கின்றவனும் நீயாயிருக்கின்றாய்' என்பது,

ஈண்டு, துவஷ்டா என்னுஞ்சொல் விரைவுப் பொருள்கொண்ட வியாபகத்தன்மையை யறிவுறுத்துவதாமாயினும் 'துவக்ஷ' என்னும் வடமொழிப் பகுதியிலிருந்து வந்ததாமெனக் கொள்ளலின், ஈண்டு அப் பொருள் பொருந்தா தென்பதுணர்க.

மறைக்கின்ற நிமித்தத்தால் விருத்திராசுரனைக் கொல்லுதலாகிய தொழிலை யுடையவனும் நீயா யிருக்கின்றாய்" என்பது, ஈண்டு, "விருத்திரனைக் கொல்லுதலாகிய தொழிற்குத் தலைவன்" என்னும் பாடிய வாக்கியமும் உணரற்பாலதாம்,

அற்றாகலினன்றே, தைத்திரீய சுருதியும்,

"ஸ ஊமாஹொகாநு வ்ரஹொாஃயூசிாநு ஜொகாநவ்ரஹொா தூவ்ர
துஸ்ய வ்ரதுவமு"

"இவ் வுலகை மறைத்தலின் அவன் விருத்திரனெனப்படுகின்றான்" என விருத்திரன் என்பதற்கு காரணங் கூறும் வாயிலாய் இப் பொருளையே விளக்குகின்றது.

மற்றும், 'ஶசீ' (சசி,) என்பதும் கருமத்தை (செயலை)யே பொருளாக வுடையதென்பது நூல்களில் வெளிப்படையாம்.

இவ்வாற்றால் விருத்திராசுரன், உலகை இருள் மூடுமாறு செய்ததால் பரமேசுரன் அவனைக் கொன்றனன் என்பது பொருள்.

பிறவிடத்தும் இவ்வாறே கூறப்பட்டிருத்தலின், 'பசுபதி' என்பது போன்று 'சசிபதி' என்பதும் பரமேசுரனையே நன்கு அறிவுறுத்துவதாமென்பது காண்க.

"அன்னத்தையுடைய இல்லறத்தானாக இருக்கின்றனை" என்பது,

ஈண்டு, "ஜயொசு ஹஸூ: ஶிவெஹிாஃயூ வஶிவாஹி" என்னுமிடத்து 'கய:' என்பதற்கு, கிருகத்தன் என்பதே பொருளானதால், ஈண்டு இல்லறத்தான் எனக் கொள்ளப்பட்டது. இதனால் யாகத்திற்குரிய அன்ன முதலியவைகளும், ஈகை முதலியவைகளும், தன முதலியவைகளும் இல்லறத்தானுக்கு நிறைந்திருத்தலும், பரமேசுரனுடைய அருளாலேயே யென்பது பெறப்பட்டது.

"யானையை அங்குசத்தால் தன் வசப்படுத்துமாறு உலகைத் தன் வயமாயிருக்கச் செய்கின்றவனும் நீயாகின்றாய்" என்பது,

ஈண்டுப் பாடியத்திலும் இவ்வாறே பொருள் கூறப்பட்டுள்ளதென்றுணர்க.

பிருதிவி, (மண்) என்பது, மண்ணுலகிலுள்ள மக்கள்மேல் நின்றது. நல்லோர்களையும் தீயோர்களையும் புண்ணியத்தாலும், பாவத்தாலும், பரமேசுரன் செலுத்துகின்றானாதலின், அதாவது உயிர்களின், நன்மை தீமைகளுக்கியைய ஆட்டி வைக்கின்றவனாதலின் உலகனைத்தும் பரமேசுரனுடைய வசமேயாம் என்பதாம்.

இது பற்றியே, சுருதியும்.

" வ-ணஞு வ-ஞெ ந கஃணா ஹவதி வாவ: வாவெ-ந "

" நல்லோர் நற் கருமத்தாலும், தீயவர் தீய கருமத்தாலும் தோன்றுகின்றனர் " என்று கூறுகின்றது.

அங்ஙனமே மிருதியும்,

" ந உயா கெவஞெ-நாவி ந அ கெவஞு கஃணா ।
கஉ-ஒஸஹாயெ-ந "

" கருமமாத்திரத்தாலுமன்று, என்னால் மாத்திரமுமன்று, மற்றோ, கருமத்தைச் சகாயமாய்க் கொண்டதனாலே உலகமாக்கப்படுகின்றது." என்று கூறுகின்றது.

ஈண்டு, யானையை அடக்குவதற்குத் தோட்டியானது சாதனமாயிருத்தல் போன்று மக்களைத் தன்வயமாக்குதற்குப் புண்ணிய பாவங்களே கருவியாமென்பது காண்க. இதுவும், எல்லாம் வல்ல இறைவனுக்கு உபசாரமேயென்பது உணரப்பாலது.

" அக்கினியால் தேவர்களையும், மனிதர்களையும் கட்டுப்பட்டிருக்கின்றவர்களாய்ச் செய்கின்றாய் " என்பது,

'ஆகவனீயம்' என்பது முதலிய மூன்று அக்கினிகளாயிருந்து தேவர்கள் வாழ்வதற்குரிய, அன்னம், என்னும் கோதுமைமாப் பணியாரம் முதலிய தேவவுணவுகளைக் கொடுத்தல் அக்கினியின் ஆதீனமாமாதலின், தேவர்கள் அக்கினி வயப்பட்டவர்களென்றுணர்க.

மக்களோ, சமைத்தல், விளக்கல், சூடுண்டாக்கல் முதலியவைகளால் தீயின் அதீனமா யிருக்கின்றார்கள் என்பது வெளிப்படையேயாம்.

அல்லது, நெற்றிக் கண்ணிலுள்ள அக்கினியால் ஊழிக் காலத்தில் உலகனைத்தையும் இலயஞ் செய்து கொள்கின்றனை என்பதும் அமையுமென்க.

" காற்றால் புநிதமாக்கி உயிர்களனைத்தையும் பிழைத்திருக்குமாறு செய்கின்றாய் " என்பது,

வாயுவினால் மிகப் புநிதமுண்டாக்கி இனிது வாழுமாறு செய்தருள்கின்றாய் என்பது பொருள். இதனால் ஆன்மாவைப் பற்றிய பிராண சம்பந்த மின்றேல், உயிர் என்பதும் இன்றாம்; காற்றுப்படுதல் முதலியவைகளாற் புநிதமாதலென்பதும் இன்றாமென்க.

இதனால், அக்கினியும், வாயுவும், பரமேசுரனுடைய ஆணையைப் பெற்றுக்கொண்டு தத்தந் தொழிலைச் செய்கின்றவைகளாகின்றன என்பது ஈண்டுக் கொள்ளக்கிடந்தமை காண்க.

அற்றாகலினன்றே, சுருதிகளும்,

" 𑌭𑌯𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌸𑍍𑌤𑌪𑌤𑌿 "

" இவனது பயத்தால் அக்கினி எரிக்கின்றது " எனவும்,

" 𑌭𑍀𑌷𑌾𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾𑌤𑌃 𑌪𑌵𑌤𑌿 "

" இவனிடத்தில் பயத்தை யடைந்து வாயு சலிக்கின்றது " எனவும்,

" 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨 𑌨𑌾𑌪𑌾𑌨𑍇𑌨 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍋 𑌜𑍀𑌵𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌇𑌤𑌰𑍇𑌣 𑌤𑍁 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌤𑌾𑌵𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍌 "

" பிராணனாலும் அபானனாலும் மனிதர் ஒருவரும் பிழைத்திலர்; மற்றோ, இவ்விரண்டும் எவனைப் பற்றி நிற்கின்றனவோ, அவனால் பிழைத்திருக்கின்றனர்." எனவுங் கூறுகின்றன.

" வஷட்காரம், சுவதாகாரம் என்பது முதலிய பிரயோகங்களைக் கொண்ட யாகத்தால் அதனுடைய பயனை அநுபவிக்கின்றவனும் நீயாயிருக்கின்றாய் " என்பது,

வேள்வியாகிய சாதனத்தால் வேள்வித் தலைவனாய் விரும்பிய பயன்களை அநுபவிக்கின்றவன் உருத்திர பரமேசுரனே யன்றி வேறலன் என்பது பொருள்.

இதுபற்றியே சுருதியும்,

" 𑌕𑌤𑌰𑍋 𑌦𑍇𑌵𑍋 𑌹𑌵𑍍𑌯 [illegible] "

" இவர்களுள் எத்தேவர் பயனை நுகர்பவர் ?" என்றற்றொடக்கத்து மந்திரத்தில் இப்பொருளைக் கூறியிருக்கின்றது.

உண்மையை நோக்கிலோ, ' வஷட்காரம் ' என்னும் மந்திரத்தாற் குறிப்பிட்ட யாகமாகிய விஷ்ணுவைப் பாதித்திருமேனியாகக் கொண்டவன் என்பதே கொள்ளக் கிடக்கின்றது.

இதுபற்றியே சுருதியும்,

" 𑌯𑌜𑍍𑌞𑍋 𑌵𑍈 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 "

' யாகமே விஷ்ணு வெனப்படும் ' என்று கூறுகின்றது. இதனால், அரிகரமூர்த்தம் கொள்ளப் பெற்றமையுங் காண்க.

அல்லது, மூலத்திலுள்ள 'ஆர்த்தம்' என்னுஞ் சொல் 'சமீபம்' என்னும் பொருளையுந் தருவதாமாதலின் வேள்வித் தலைவனுக்கருகில் தேவதா வடிவாயிருந்து அநுபவிக்கின்றவன் என்பதும் அமையுமாறுணர்க.

"சோமயாகஞ் செய்தலால் சந்திரமண்டலத்திலிருந்து அப் போகங்களை யநுபவிப்பவனும் நீயாயிருக்கின்றாய்" என்பது,

இங்ஙனமே பாடியமுங் கூறுகின்றதென்பதுணர்க.

உண்மையிலோ, சோமத்தாற் குறிப்பிடப்பட்ட வைசுவதேவ யாகத்திற் கூடியுள்ள தேவர்களனைவரும் நீயாயிருக்கின்றாய் என்பதாம்.

சபையாற் குறிப்பிட்ட (பிரமனும்) இரணியகருப்பனும் நீயாயிருக்கின்றாய், என்பது,

ஈண்டு, ஸம், என்பது 'சபை' என அமரகோசங் கூறுதலானும், பரமேஷ்டி என்பது பிரமன் எனல் வெளிப்படையா மாதலானும் இது போந்த பொருளென்க.

இனி, "பாடியத்தில், பரமேட்டி என்பதற்கு, பத்தினியுடன் (மனையாளுடன்) உயர்ந்ததாகிய இல்லறத்தலைவனா யிருக்கின்றவனும் நீயே." என்று கூறப்பட்டிருக்கின்றது. அதாவது மனைவியுடன் கூடிய இல்லறம் என்பதனாற் குறிப்பிக்கப்பெற்ற, வேள்வியாற்றல், தானமிடல், ஓமஞ்செய்தல் முதலிய நற்கருமங்களில் வழுவாது இருப்பவனும் நீயாகின்றாய் என்பதாம். மனையாளுடன் கூடினவனுக்கே அதில் அதிகார மிருத்தலினென்பதுணர்க. இது வாழ்நாள் முழுதும் நற்கருமங்களையே செய்துகொண்டு வாழல் வேண்டுமென்பது எல்லா நூல்களுக்குங் கருத்தாமாதலி னென்க.

அற்றாகலினன்றே சுருதியும்,

"யாவஜ்ஜீவஃ ஹிஹொத்ரு ஜுஹுயாத்"

'வாழ்நாள் வரையும் எரியோம்புக' என்று கூறுகின்றது.

அங்ஙனமே, மாபாரதமும்,

"விஶெஷணெ க்ருஹஸ்தஸ்ய ஶெஷாஸ்த்ரய்"

"இல்லறத்தானே உயர்ந்தோன் மற்றைய மூவரும் அங்கத்தினர்கள்" என்று கூறுகின்றது.

இதுபற்றியே மநுமிருதியும்,

"அன்னையாரைப் பற்றிக்கொண்டே அனைத்துயிரும் வாழ்கின்றன, அது போன்று இல்லறத்தானைப் பற்றிக்கொண்டே ஏனைய ஆசிரமத்தினுள்ளவர்கள் பிழைக்கின்றார்கள்." என்று கூறுகின்றது.

கண்டு, தமிழ் மறையும்,

" துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கும்

இல்வாழ்வா னென்பான் துணை" என்பது முதலிய மந்திரங்களால் அறத்துப்பாலில் இல்லறத்தை யெடுத்துமிக விதந்தோதியுள்ளதும் உணரப்பாலதாம்.

அல்லது, 'ஸ்ரீஷ' என்பது ஞானமாமாதலின், உபாசனையால், பரமாகிய (மேலாகிய) பதத்தில் இருப்பவன் பரமேஷ்டி என்பதுமாம்.

அல்லது, இனிது உபதேசிக்குந் தன்மையால், பரம்=எல்லாத் தேவர்கட்கும் மேலாய் விளங்கிக்கொண்டிருக்கின்றவன், பரமேஷ்டி எனினு மமையும்.

அல்லது, பார்வதி தேவியாருடன், பரம்=மேலாகிய கைலாசத்தி லிருக்கின்றவன் பரமேஷ்டி என்பது மமையும்.

இனி, " யோ தேவா " என்பது முதற்கொண்டு நமஃ, என்பது ஈறாகிய ஆறு மந்திரங்களால், மூலகாரணனும், பிரம சொரூபனும், ஒருவனும், மற்றும் பல மகத்தாந் தன்மைகளை யுடையவனுமாகிய உருத்திர பரமேசுரனுடைய கூறுகளை யுடையவர்களான குணிருத்திரர்கள் வணங்கப்படுகின்றார்கள். அவ் வுருத்திரர்களும், ஆயிரக்கணக்கானவர்களாவார்கள்; அவர்களும் 'ஒருவனாகிய உருத்திர பரமேசுரனைப் போற்றிக்கொண்டு அவனுக்கருகில் புடைசூழ்ந்து நிற்கின்றவராய்க் கணங்கள் எனப்படுவார்கள் என்றுணர்க.

இதுபற்றியே, உருத்திராத்தியாயத்தின் முதலாம் அநுவாகத்தின் நடுவில்,

" யெ சஸ்ர ஸஷுநொஹம் தெஹ்யாகரஹுஃ ஊதி "

" உருத்திரன் கூறுகளையுடைய இக் கணங்களுக்கு வணக்கம் " எனவுங் கூறப்பட்டுள்ளது.

அற்றேலஃதாகுக? தேவர்கள் தேவனை வணங்கல் என்றது எவ்வாறுமெனின்? பரமேசுரன் தனது அருள்வலியால் கணக்கில்லாத உருத்திர கணங்களை யுண்டாக்கி, ஒவ்வொரு வுலகத்திற்கும் தலைவர்களாக்கி, அருளையும், மருளையுஞ்செய்து வருமாறு அவர்களை நியமித்திருத்தலின், அரசனைப், பிரசைகள் வணங்குமாறு வணங்குதல் கூடுமென்க.

இது கொண்டே சுருதியும்,

" யெ ரூஊா சயிஹமெதாம் ஸஹீநஹதயண ஃவெஷயிக்ஷ ஹவா சயி திவம் ரூஊா உவஸ்ரிதாஃ "

' மண்ணிலும், கடலிலும், விண்ணிலுந் தோன்றுகின்ற உருத்திரர்கள் ' என்றுந் தொடக்கத்து மந்திரங்களால் இப்பொருளையே கூறுகின்றது.

அங்ஙனமே, பாரதமாகிய இதிகாசமும்,

" ஶூலஹஸ்தா வஸுஹஸ்தா: ஸர்பாஸ்ய க்ருத கிரீடிந: "

" சூல மேந்திய கையர்கள், வாளேந்திய கரத்தர்கள், பாம்பென நீண்ட முடியினர் " என்றற் றொடக்கத்துச் சுலோகங்களால், இப் பிரமத கணங் களையே விதந்து கூறுகின்றது.

அவ்வாறே, துரோண பருவத்திலும்,

" தஸ்ய பாரிஷதா திவ்யா நாநாரூபா யஶா: ஸ்ம்ருதா: "

" அவ் விறைவனுடைய வானுலகப் பிரமத கணங்கள் பலவகையாவர் கள் " என்று கூறப்பட்டிருக்கின்றது.

மற்றும், இலிங்கபுராணம், கந்தபுராண முதலிய பல நூல்களிலும் உருத்திர பரமேசுரனுடைய பிரமத கணங்கள் பலவகையாய்க் கூறப்பட் டிருக்கின்றன வென்பதும் ஈண்டு உணரற்பாலதாம்.

தேவர்காள்! உருத்திர தேவதைகளே! நீங்கள், சுவர்க்கத்தில் இருக்கின்றவர்களாவீர்கள்; அத்தகையர்களான உங்கட்கு நமஸ்காரம்.

இவ்வாறே, வானுலகில் இருக்கின்றவர்களான தேவர்காள்! உங்கட்கு நமஸ்காரம். தண்ணீரில் இருக்கின்ற தேவர்காள்! உங்கட்கு நமஸ்காரம். பத்துத் திக்குகளிலும் இருக்கின்ற தேவர்களே! உங்கட்கு நமஸ்காரம். எட்டுத் திசைகளிலும் இருக்கின்ற தேவர்காள்! உங்கட்கு நமஸ்காரம்.

' தநுவில் நாணேற்றுவது போன்று உமது ஆணையைக் கடந்ததால் எங் களிடத்தெழுகின்ற உமது கோபத்தை, யாம் வணங்குதல் முதலியவற்றால் பொறுத்துக் கொள்ளுமாறு செய்கின்றோம் ' என்பது,

ஈண்டுப் பரமேசுரனது ஆணையாகிய வேத முதலியவற்றால் அறிவுறுத் தப்பட்டதைக் கடந்ததால், பரமேசுரனுக்குண்டாகும் கோபத்தை, அவனை வழிபடுதலாலன்றி ஏனைய வுபாயங்களால் அடக்க முடியாதென்பதால் அதை நீக்குதற்குப் பரமேசுரனையே இனிது வழிபடல் வேண்டுமென்று அறி வுறுத்தப்படுகின்றதென்பது முணர்க.

அற்றாகலினன்றே பகவானும்,

" ஶ்ருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞே யஸ்தாவுல்லங்க்ய வர்த்ததே ।
ஆஜ்ஞாச்சேதீ மம த்வேஷீ மத்பக்தோऽபி ந வைஷ்ணவ: "

" சுருதி மிருதிகள் எனது ஆணைகள்; அவைகளைக் கடந்து நடக்கின்ற வன் எவனோ, அவன் என்னால் வெறுக்கப்படுபவனும், கொல்லப்படுபவனு மாகின்றான். " என்றருளிச் செய்துள்ளார். ஈண்டு உயிர்களின் கருமங்களைத்

தழுவிக்கொண்டே நிக்கிரகாநுக்கிரகங்களைப் பரமேசுரன் செய்தலின் அவன் பொறுமை யுடையான் என்பதும் பொருந்தாதென்றுணர்க.

இதையே வியாசபகவானும் பிரமமீமாஞ்சையில் நன்கு விரித்திருக்கின்றனர்; அதை ஆண்டுக்காண்க. இதனால், உருத்திர பரமேசுரனைக் களிப்படைவிக்கில் இன்புறலாம், வருத்தமடைவிக்கில் துன்புறலாமென்பது தெற்றென விளங்குகின்றதென்பதைக் காண்க.

"யாதொரு உருத்திர பரமேசுரன் காணப்படுகின்ற இவ்வுலகனைத்தையும் உண்டாக்கியருளினனோ, அவனுக்கு நமஸ்காரம்" என்பது,

எல்லாமாய் எல்லாவற்றையும் ஆக்கி அளித்து அழித்துத் தனித்து நிற்கும் தனிப் பெருங்கருணை அருட்பெருஞ் சோதி பரப்பிரம சொரூபனாகிய பரமேசுரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஒன்பதாங் கீத மந்திர விருத்தியுரை
முற்றிற்று.

---

## கீத மந்திரம் 10.

१ २ १ २ १ २ १ २ १
अधिप । ताइ । मित्रपा । ताइ । क्षत्रपा । ताइ । स्वः पताइ ।
२ - १ २ १ २र २१र २ १ र२र १ २र र १
धनपता २ ॥ ना२माः । नम उत्ततिभ्यश्चोत्तन्वानेभ्यश्चनमोनीषंगिभ्यश्चोपवीति-
२ १ र ३ १ २र२ १ २ १ २ र १ २
भ्यश्च नमोस्त्रभ्यश्चप्र । ति दधानेभ्यश्च नमः । प्रविद्यभ्यश्च प्रत्याधिभ्यश्च
१२ १ २ र १ २ १ २ १र २ र१ २ १२ १ २ र
नमः त्सरभ्यश्चत्सारिभ्यश्च नमः श्रि । तेभ्यश्च श्रायिभ्यश्च नमस्तिष्ठभ्यश्चोप-
१ २ १ र २१र २ २र२ १ २१र२ १ २र १२ १र २
तिष्ठभ्यश्च नमो यतेच वियतेच नमः पथेच विपथायच । आवर्ज्यामिव
१ २र १ र २ १ २र १ र २ १ २ १ २ १ २ १
धन्वनो विते मन्युन्नयामसि मृडतान्न इह अस्मभ्यम । इडा२३ भा यइदं
र २ १ - ३ ५
विश्वं भूतम् । युयो३ । आउ । वा२ । ना२३४ माः ॥

இம் மந்திரமும் இருக்கன்று கேவலம் கீதமேயாம்.

மந்திரத்தின் பதவுரை.

| | | |
|---|---|---|
| नम उत्ततिभ्यश्च | நம உத்ததிப்யஶ்ச | உத்தரீய முடையார்கட்கும் வணக்கம். |
| उत्तन्वानेभ्यश्च | உத்தந்வாநேப்யஶ்ச | நாணேற்றிய தநுக்களையுடையார்கட்கும் வணக்கம். |
| नमो नीषंगिभ्यश्च | நமோ நீஷங்கிப்யஶ்ச | அம்பறாத்தூணியை யுடையவர்கட்கும் வணக்கம். |

| | | |
|---|---|---|
| उपवीतिभ्यश्च | உபவீதிப்யஶ்ச | பூணூல் உடையார்கட்கும் வணக்கம். |
| प्रतिधानेभ्यश्च नमः | ப்ரதிதாநேப்யஶ்ச நம: | குறிப்பில் பாணங்களை விடுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| प्रविध्यभ्यश्च नमः | ப்ரவித்யத்ப்யஶ்ச நம: | நன்றாக (உயிர்களை) க் கொல்லுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| प्रव्याधिभ्यश्च | ப்ரவ்யாதிப்யஶ்ச | கொல்லுமாறு படைகளை, நன்கு ஏவுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| नमः स्तरभ्यश्च | நம: ஸ்தரப்யஶ்ச | பவக்கடலைத் தாண்டுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| स्तारिभ्यश्च | ஸ்தாரிப்யஶ்ச | மக்களை, பவக்கடலினின்று கரையேற்றுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| नमः श्रितभ्यश्च | நம: ஶ்ரிதப்யஶ்ச | வழிபாடு செய்ய உரியவர்களுக்கும் வணக்கம். |
| श्रायिभ्यश्च नमः | ஶ்ராயிப்யஶ்ச நம: | பரமேசுரனை வழிபடுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| नमस्तिष्ठभ्यश्च | நமஸ்திஷ்டப்யஶ்ச | தனதான்மாவில் நிலைத்திருக்கின்றவர்களுக்கும் வணக்கம். |
| उपतिष्ठभ्यश्च नमः | உபதிஷ்டப்யஶ்ச நம: | தனது நிலை நழுவுமிடத்துப் பரமேசுரன் திருவடியில் நிலைத்திருக்கின்றவர்கட்கும் வணக்கம் |
| नमो यतेच | நமோ யதேச | அனைத்தையும் நியமிக்கின்ற உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம் |
| वि यथेच | வி யதேச | நியமிக்கின்ற ஏனைய தேவர்களையும் நியமிக்கின்ற உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमः पथेच | நம: பதேச | நன்னெறிகளை யுண்டாக்கிய பரமேசுரனுக்கு வணக்கம். |
| वि पथेच | வி பதேச | தீ நெறிகளைத் தோற்றி வைத்தருளிய பரமேசுரனுக்கு வணக்கம். |

## விருத்தி யுரை.

இம்மந்திரத்திலும், மேல்வரும் பதினோராவது மந்திரத்திலுமுள்ள பன்மைச் சொற்கள். குணி உருத்திரர்களைக் குறிப்பிடுகின்றன. அதாவது கணருத்திரர்களைப் பற்றியவைகள் என்பதாம். ஒருமைச் சொற்களோ, ஒருவனாகிய உருத்திர பரமேசுரனையே யறிவுறுத்துகின்றன வென்பதுணர்க. இவ்வாறே பிறவிடத்துங் காணப்படுதலினென்க.

இதில், நம: என்பது முதலிய ஒன்பதும், இடையிலுள்ள எசுருக்குப் பொதுவானவைகள். முதலாவது ஒரு எசுராம். முடிவிலுள்ளன நான்கு எசுர்க்கள். ஐந்தாவது மூன்று சாமங்கட்கும் பொதுவாம்.

ஈண்டு உத்தரீயமுடையார் என்பதற்கு, பிராணிகளைப் பரிபாலிப்பதன் பொருட்டு எழுந்து நிற்கின்ற திருமேனியையுடையவர் என்பர் சிலர்; ஆயினும் 'நம: உஷ்ணீஷிணே' "உத்தரீயமுடையோனுக்கு நமஸ்காரம்" எனப் பிற சுருதியுங் கூறுதலின் இதுவே ஈண்டைக்கியை புடையதாமென்பதுணர்க.

நாணேற்றிய தநுவைத் தாங்கினவர்கட்கும் வணக்கம், என்பது, பிநாகபாணிகளென்பதாம்.

அங்ஙனமே உருத்திராத்தியாயமும்,

"நம இஷுமத்ப்யோ தந்வாயிப்யஶ்ச"

"பாணத்தையுடையவர்கட்கும் தநுவையுடையவர்கட்கும் நமஸ்காரம்" என்று கூறுகின்றது.

"பூணூல் உடையவர்கட்கும் வணக்கம்" என்பது, உருத்திர பரமேசுரனுடைய கணங்கள் பலவகைப்பட்டவர்களாதலின் என்க.

தநுவில் பாணத்தைத் தொடுப்பவர்கட்கும், குறிப்பில் பாணத்தை விடுகின்றவர்கட்கும் வணக்கம் என்பது முதலியவைகளால், உருத்திர கணங்கள் போரிலும், படைகளிலும் மிக வல்லுநர்களென்பதும், யாண்டும் வெற்றியையே யுடையவர்களென்பதும் அறிவுறுத்தினமை காண்க.

"நன்கு கொல்லுமாறு ஆயுதங்களை ஏவுகின்றவர்களுக்கும், நன்கு கொல்லுகின்றவர்களுக்கும் வணக்கம் என்பது,

இதனால் பிரமத கண உருத்திரர்கள் மிக வல்லவர்களென்பதும், அவர்களுடைய ஆயுதங்களும், மிக வன்மையுடையன என்பதும் அறிவுறுத்தப்படுகின்றது.

பவக்கடலினின்று கரை யேறுகின்றவர்கட்கும் வணக்கம், உயிர்களைக் கரையேற்றுகின்றவர்கட்கும் வணக்கம், என்பது, இவ்வாற்றால் துஷ்டர்களை நிக்கிரகிக்கின்ற உருத்திர கணங்கட்கு வணக்கங் கூறப்பட்டவாறும்.

வழிபடத்தக்கவர்களான உருத்திர கணங்கட்கு வணக்கம், பரமேசுரனை வழிபடுகின்றவர்களான உருத்திர கணங்கட்கும் வணக்கம் என்பது,

தமதான்மாவின்கண் நிலையை யுடையவர்கட்கும் வணக்கம், மற்றும், தமது ஆன்மநிலை தவறுங்கால் பரமேசுரனுக்கு அருகிலிருந்து கொண்டிருப் பவர்கட்கும் வணக்கம் என்பதாம். அதாவது பரமேசுரனையே உள்ளத் திருத்துவான் மேற்கொண்டவர்கட்கும் நமஸ்காரம் என்பது பொருள். ஈண்டு இதுவே பாடியத்திற்கும் இயைந்த பொருளாமென்பதும், ஏனையவைகள் அல்லாதவைகளா மென்பது முணர்க.

நியமிப்பவனுக்கும், மற்றும், நியமஞ் செய்கின்ற தேவர்களையும் நிய மஞ் செய்கின்றவனுக்கும் வணக்கம், என்பது,

மேற்கூறியவாற்றால் உருத்திர கணங்களை வணங்கிக்கொண்டு, நேரே உருத்திர பரமேசுரன் இரண்டு வாக்கியங்களால் வணங்கப்படுகின்றான் என்பதாம்.

தாபர சங்கமப் பொருள்களைச் செலுத்துவோன் எனல் ஈண்டைக்கி யையாமை காண்க.

அங்ஙனமே துறவறத்தானாகவும், இல்லறத்தானாகவும் இருக்கின்ற வனுக்கும் வணக்கம் என்பதும், ஈண்டுப் பொருந்தாததாமென்க.

நன்னெறியையும், தீநெறியையும் உண்டாக்கினவனுக்கும் வணக்கம், என்பது,

ஈண்டு, உருத்திர பரமேசுரனே எல்லா வித்தைகட்குங் காரணனாத லின், அவனே முத்திக்குச் சாதனமாகிய வைதிக மார்க்கங்களையும், முத்தி நெறியலாத புன்னெறிகளையும் அருளியுள்ளான். இதுவும் மக்களின் நல் வினை தீவினைகளைத் தழுவி, முறையாய் பன்னாளில் முத்திநெறியிற் கூட்டு விக்கு மென்பது கருதி பரமேசுரனுடைய கருணைச் செயலேயாம் என்ப துணர்க.

விருத்தியுரை முற்றும்.

---

## பத்தாவது மந்திரம்

முற்றிற்று.

---

## பதிஞோராவது கீத மந்திரம்.

१ २ १ २ १ २ १ २ १
अधिप । ताइ । मित्रप । ताइ । क्षत्रप । ताइ । स्वः पताइ । धन-
२ - - १ २ र र२ १र २ र र१र २र र१र २
पता २ इ । ना २ माः । नमोन्नाय नमोन्नपतय एकाक्षाय चावपन्नादायच
११र १ २ १ २र १२र १ २ १र १२१ २र २१ १ २
नमोनमः । रुद्रायतीरसदे नमः स्थिराय स्थिरधन्वने नमः प्रतिपदायच पट-
१ र २ १२१ २ र १ र २ १ २र र१र २ र र१र १२
रिणेच नमस्त्रियंबकायच । कपर्दिनेच नम आश्रायेभ्यश्च प्रत्याश्रायेभ्यश्च
१ २ १र २ १र २ १ २१र२ ११र १२ १र २ १ २र
नमः क्रव्येभ्यश्च बिरिंफेभ्यश्च नमः संवृतेच विवृतेच । अवज्यामिव धन्वनो
१र २ १ २र १ र २ १ २ १ २ १ २ १
विते मन्युन्नयामसि मृडतान्न इह अस्मभ्यम । इडा २३ भा । य इदं विश्वं
र२ २ १ २ ५
भूतं । युयो ३ । आउ । वा २३ । ना २३४ माः ॥

### மந்திரத்தின் பதவுரை.

| | | |
|---|---|---|
| नमोऽन्नाय | நமோऽந்நாய | நிலனாகிய பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमोऽन्नपतयेच | நமோऽந்நபதயே ச | நிலத்திற்கு இறைவனாகிய பரமேசுரனுக்கும் வணக்கம். |
| एकाक्षायच नम: | ஏகாக்ஷாய ச நம: | ஒன்றாய் நிறைந்துள்ள பரமேசுரனுக்கு, அல்லது ஒன்றாகிய மனமுடைய பரமேசுரனுக்கு, அல்லது ஒன்றாகிய நெற்றிக் கண்ணை யுடைய பரமேசுரனுக்கு வணக்கம். |
| अवपन्नादायच नमः | அவபந்நாதாய ச நம: | உதிர் சருகை யுண்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमो रुद्राय च | நமோ ருத்ராய ச | அஞ்ஞானத்தை நீக்குகின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| तीरसदे नम: | தீரஸதே நம: | பவக்கடலின் கரை யென்னும் நித்திய முக்தியில் விளங்குகின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमस्थिराय च | நம ஸ்திராய ச | திடமாகிய பரமேசுரனுக்கு வணக்கம். |

| | | |
|---|---|---|
| स्थिरधन्वने | ஸ்தி²ரத⁴ந்வநே | வன்மை மலிந்த தநுவையுடைய பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमः प्रतिपदाय | நம: ப்ரதிபதா³ய | உயிர்களுக்கு அருகிலிருக்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| पटरिणे नमः | படரிணே நம: | உயிர்க் கூட்டங்களுள் நிறைந் திருக்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| त्रियंबकायच नमः | த்ரியம்ப³காய ச நம: | முக்கண்ணனுக்கு வணக்கம், |
| कपर्दिने नमः | கபர்தி³நே நம: | தெளிந்த கங்கைப் பெருக்கைச் சடையிற்றாங்கிய பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमः क्रूबेभ्यश्च | நம: க்ரூபே³ப்⁴யஶ்ச | பெரும் வன்மையை யுடைய பிரமத கணங்கட்கும் வணக்கம். |
| विरिंफेभ्यश्च | விரிம்பே²ப்⁴யஶ்ச | கொடிய வுயிர்களைக் கொல்லுகின்றவர்களுக்கும் வணக்கம். |
| नमः संवृतेच | நம: ஸம்வ்ருதே ச | மாயா சத்தியால் தனது திருமேனியை மறைத்துக்கொள்ளுகின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| विवृतेच | விவ்ருதே ச | அருட் சத்தியால் தனது திருமேனியை வெளிப்படுத்தியருள்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம் |

விருத்தியுரை.

"நிலனாகியவனுக்கும், நிலத்திற்கு இறைவனாகியவனுக்கும் வணக்கம்" என்பது,

ஈண்டு, அன்னமென்பது பூமியாம். அன்னத்திற்குப் பதி என்பது பூமிக்கு இறைவனென்பதாம். என்னை ? அன்னம் என்னுஞ்சொல் ஈண்டுப் பூமியை யுணர்த்தி நிற்றலினென்க.

இதுபற்றியே சுருதியும்,

"தத³ந்நமஸ்ருஜத"

"அன்னத்தை யுண்டாக்கி யருளினன்" என்றற் றொடக்கத்து வாக்கியத்தாலுணர்த்துகின்றது.

அங்ஙனமே,

'ப்ருதி²வ்யதி⁴கார' என்றற் றொடக்கத்துப் பிரம சூத்திரமுங் கூறுகின்றது என்பது காண்க.

அல்லது, அன்ன முதலிய எல்லாப் போக்கியப் பொருள்களுமாகிய பரமேசுரனுக்கு வணக்கம். அவற்றை யுண்கின்ற போக்தாவாகியவனுக்கும் வணக்கம் என்பதும் ஈண்டுப் பொருந்துமாறுணர்க.

ஒன்றாய் நிறைந்தவனுக்கு வணக்கம், என்பது,

வியாபகனும் ஒருவனுமுள்ள உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம் என்பது பொருள்.

பரமேசுரன் ஒருவனே என்பதும், அவன் யாண்டும் நிறைந்துள்ளவன் என்பதும் எல்லா நூல்களிலும் மிக வெளிப்படையாமாதலினென்க.

அற்றாகலினன்றே, சுருதியும்,

"𑌏𑌕 𑌏𑌵 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌨 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌯 𑌤𑌸𑍍𑌥𑍇 ।
𑌸𑌰𑍍𑌵 𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌸 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌶𑌿𑌵𑌃"

"உருத்திர பரமேசுரன் ஒருவனே இருவரலர். அவன் யாண்டும் நிறைந்தவன், பகவான் ஆதலின், சிவன் எல்லாவற்றுள்ளுங் கலந்து நிற்கின்றான்" என்று கூறுகின்றது.

கீத பாடியத்திலோ, வியாபகமாகிய திருவுளத்தை யுடையவன் என்பது பொருள். அதாவது நிறைந்ததாகிய ஒரு தெய்வீக மனதை யுடையவன் பரமேசுரன் என்றவாறாம்.

இதுபற்றியே, சுருதியும்,

"𑌮𑌨𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑍈𑌵𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌿𑌤𑌿"

"இப் பரமேசுரனுடைய மனம் தெய்வீக திருஷ்டியாம்" என்று கூறுகின்றது.

அற்றேல், நம்மனோர்களைப்போன்று புலன்களை வேண்டானோ வெனின்?

புலன்களை வேண்டாமலே அனைத்தையு முணர்கின்ற அருள் வலியானாதலின் புலன்களை வேண்டாமலே அனைத்தையு முணர்வன் என்க.

இதைத் தழுவியே சுருதியும்,

"𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸 𑌶𑍃𑌣𑍋𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌃"

"கண்ணின்றிப் பார்க்கின்றான், காதின்றிக் கேட்கின்றான்" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் இப் பொருளையே வெளியாய்த் தெரிவிக்கின்றது.

அல்லது, ஒன்றாகிய நெற்றிக்கண்ணை யுடையான் என்பதும் பொருந்து மென்றுணர்க.

'உதிர்ந்த சருகுகளை யுண்கின்ற பரமேசுனுக்கு வணக்கம்' என்பது, தவமும், பரமேசுரனுடைய பத்துக் குணங்களில் இதுவும் ஒன்று மாதலி னென்க.

இது பற்றியே, சுருதியிலும்,

"ஜ்ஞாநம் விராகமைஶ்வர்யம் தபஸ்ஸத்யம் க்ஷமாத்ருதி: ।
ஸ்ரஷ்ட்ருத்வமாத்மஸம்போதோ ஹ்யதிஷ்டாத்ருத்வமேவ ச"

"ஞானம், விராகம், ஐசுவரியம், தவம், சத்தியம், க்ஷமை, தைரியம், படைத்தல், ஆன்மஞானம், அதிட்டானத்தன்மை" என்பன, பரமேசுரனுடைய ஐசுவரிய குணங்கள் எனக் கூறப்பட்டிருக்கின்றன என்பது காண்க.

அங்ஙனமே வாயுசங்கிதையும்,

"அவ்யயாநி தைதாநி நித்யம் திஷ்டந்தி ஶங்கரே"

"கேடிலாத இக்குணங்கள் சங்கரனிடத்தில் என்றுமிருக்கின்றன" என்று கூறுகின்றது.

'அஞ்ஞானத்தைப் போக்குகின்றவனுக்கு வணக்கம்' என்பது, தனது ஆன்மானந்தத்தை மறைத்திருக்கின்ற அஞ்ஞானத்தைத் தனது சொரூப ஞானத்தாற் போக்கியருளி அவ்வானந்தத்தைக் கொடுக்கின்றவன் என்பதாம்.

அல்லது, ரௌதி=பேசல், தத்துவமசி, முதலிய மகாவாக்கியங்களை, த்ராவயதி=கொடுக்கின்றவன். அதாவது உபதேசிக்கின்றவன் உருத்திரன் என்பதுமாம்.

அல்லது, எப்போதும் அன்பர்களின் பவத்துன்பங்களைப் போக்குகின்றவன் என்றலுமமையும்.

ஈண்டு, உருத்திரனனவன் மரண காலத்தில் தாரகப்பிரம மந்திரத்தை யருளிச் செய்து அன்பர்களை முத்தியடைவிக்கின்றானென்பதும் உணரற் பாலது.

இதுபற்றியே, சாபாலோபநிடதமும்,

"ப்ராணேஷூத்க்ரமமாணேஷு ருத்ரஸ்தாரகம் ப்ரஹ்ம வ்யாசஷ்டே"

"பிராணன் நீங்குமிடத்து, உருத்திர பரமேசுரன் தாரக மந்திரத்தை உபதேசிக்கின்றான்" என்று கூறுகின்றது.

அற்றேலஃதாகுக ?

" மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநந்து மஹேச்வரம் "

" மாயையைப் பிரகிருதியென்றுணர்க, மாயையை யுடையவனை (மாயாவியை) மகேசுரனென்றுணர்க " என்ற சுருதி வாக்கியத்தைத் தழுவி, உருத்திர பரமேசுரனே அஞ்ஞானத்தை யுடையவனாதலின், அவன் அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை யளித்து இன்புறச் செய்வானெனல் முரணாகாதோவெனின் ? அற்றன்று, மூலப் பிரகிருதிக்கு இருவகைச் சத்திகளுள்ளன ; அவற்றுள், மறைக்கின்ற சத்தியை யுடைய பிரகிருதியே அஞ்ஞானமாம்; அதுவே மக்கட்கு உபாதி யெனப்படும். விட்சேபம், (உண்டாக்கும்) சத்தியையுடையதே மாயை யெனப்படும் ; அது ஈசுரனுக்கு உபாதியாம் ; என்றிவ்வாறு பிரித்துக்கொள்ளில் முரண் என்ப தெங்ஙனம் ?

' அஞ்ஞானமாகிய கடலின் கரையின்கண் விளங்குகின்ற உனக்கு வணக்கம் ' என்பது,

உருத்திர பரமேசுரன் நித்திய முத்தனாவனெனப் பல சுருதிகளும் முழங்குகின்றன வாதலின் என்பதுணர்க.

அற்றாகலினன்றே, கைவல்யோபநிடதமும்,

" உமாஸஹாயம் பரமேச்வரம் "

" உமையுடன் கூடிய பரமேசுரனை " என்று தொடங்கி,

" ஸமஸ்த ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் "

' அனைத்திற்குஞ் சாக்ஷியும், அஞ்ஞானத்தைக் கடந்து நிற்கின்றவனுமாகின்றான் ' என்று கூறி முடிக்கின்றது.

அல்லது, தமசு ஆறத்துவா மயமாகிய உலகனைத்திற்கும், பரம்=உன்மனைமுதலிய சகல உலகத்தையுங் கடந்த, சோம லோக மென்னும் பரமேசுரனுடைய வுலகத்தில் விளையாடுகின்றவன் என்பதுமாம்.

" நம: ஸ்திராய ஸ்திரதந்வநே "

" வல்லவனும், வலிமிகுந்த தநுவைபுடையவனுமாகிய பரமேசுரனுக்கு வணக்கம் " என்பது,

பகைவரை யடக்கும் முறையில் உறுதியுடையவனும், வலிமிகுந்த ஆயுதத்தை யுடையவனும் என்பது பொருள். பயமிலாதோன் என்பர் சிலர், அஃது இங்கு இயைபிலாததென்றுணர ற்பாலது.

பதவுரை.

| | | |
|---|---|---|
| सत्पते ! | ஸத்பதெ ! | நல்லோர்கட்கு நாதனாகிய அக்கினியே ! |
| नूनं | நூநம் | இப்பொழுது |
| कस्य ? | கஸ்ய ? | எவருடைய ? |
| परीगसि | வரீணஸி | வேள்வியில் |
| धियः | யியஃ | கருமங்களை |
| जिन्वसि | ஜிந்வஸி | விரும்புவாய், |
| ते गिरः | தெ ரிரஃ | உனது துதிகள் |
| यस्य | யஸ்ய | யாருடைய |
| गोषाता | ரொஷாதா | பசுலாபத்திற்காமோ, (அவர் கருமங்களை) |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—14. உசனு ரிஷி.

உண்மை மக்கட்குத் தலைவனாகிய அக்கினியே! நீ இப்பொழுது எவ்விதமாகிய மனிதருடைய வேள்வியின்கண் கருமங்களைப் பிரமத்திற் சேர்க்க விரும்புவா யெனின்? யாருடைய உனது துதிகள் பசுவின் லாபத்திற்கு உண்மையிலுரியனவாமோ, அவருடைய கருமங்களை விரும்புவா யென முடித்துக்கொள்க.

ஆகையால், நீ எங்கிருக்கின்றாய்? எங்கட்கிப்போது பசுவினிடத்து இச்சை யுண்டாகின்றது.

அல்லது உம் அக்கினியே! நீ இப்பொழுது யாருடைய கருமங்களை விரும்புவாய்? எவருடைய கருமங்களையும் விரும்பமாட்டா யென்பது பொருள். எங்களுடைய கருமங்களையே விரும்புவாய் என்பது கருத்து எனக் கொள்ளினுமமையும். (14)

குறிப்பு—ஈண்டு 'परीणसि' எனவும், 'सत्पते' எனவும், கீதமோதுவார் சொள்வர். 'परीगस:' எனவும், 'दंपते' எனவும், இருக்கோதுவார் கொள்வர்.

ஈண்டு அக்கினியே! எவருடைய மனதிற்குச் சுகங் கொடுப்பாய்? யாருடைய வாக்கு வேள்வியிற் றுதிப்பதாமோ, அவருக்கு என்றனர் மேனாட்டாசிரியர்.

மூன்றாங் கண்டம்

முற்றும்.

---

குறிப்பு.—இக்கண்டத்தில் ஆங்கிலேயப் பதிப்பில் மந்திரங்கள் 15 எனக் கொள்ளப்பட்டது. இதில் 13-ம் மந்திரத்தையே இரண்டு மந்திரங்களாக்கிப் பதினைந்தெனக்கொண்டிருப்பதன்றி மந்திரத்தில் மிகுதி குறைவு இன்று.

## நான்காங் கண்டம்.

சாயணர் முகவுரை.

'எக்னுமெக்னும்' என்றற்றொடக்கத்து மூன்று கண்டங்களில் அதாவது:—4, 5, 6 கண்டங்களில் 218 மந்திரங்கள் 'பிருகதீ' சந்தங்களை யுடையன. பின்னர்க் கூறும் மூன்று மந்திரங்களை நீக்கி, ஏனையவைகள் அக்கினியைத் தேவதையாக வுடையன.

அம்மூன்று மந்திரங்களாவன:—4-ம் கண்டத்தில், 8-ம் மந்திரம் இந்திரனைத் தேவதையாகவுடையது. 6-ம் கண்டத்தில் 2-ம் மந்திரம், பிரமணபதி, என்பதோர் தேவதையை யுடையது. 6-ம் கண்டத்தில் 3-ம் மந்திரம், பசுக்கட்டும் யூபத்தின்றுதி. ஏனைய தோத்திரங்கள் அக்கினியின் றுதிகளே.

'आग्नेया' என்னும் பகுபதக் குறிப்புப் பெயர் 'பிராணி' என்னும் நியாயத்தால் ஏன முன் 3-ம் கண்டம், 11-ம் மந்திரத்திற்கு உரை கூறுங்கால் கூறப்பட்டது. அப்போதப்போது முன்போல் இருடிகள் கூறப்படுவார்கள். (சாயணாசாரியனுகிய என்னல் என்பது எஞ்சி நின்றது.)

---

## நான்காவது கண்டம்.

### பிரபாடகம்—1. அத்தியாயம்—1.

பத்து மந்திரங்களாலானது.

#### மந்திரம் 1.

கீதம்—பரத்துவாச ரிஷி, உபஹவம், சிரேஷ்டகவம், யக்ஞாயக்ஞியம்.

३ १ २ ३१२ ३ १ २ ३ १२
35. यज्ञा यज्ञा वो अग्नये गिरा गिरा च दक्षसे ।
१ २ ३२ ३१२ ३ १२ ३ २ ३१ २ र
प्रप्र वय ममृतं जातवेदसं प्रियं मित्रं न शंसिषम् ॥ १ ॥

இருக்கு 6-48-1.

யஜ்ஞா யஜ்ஞா வொ அக்நயெ கிரா கிரா ச தக்ஷஸெ ।
ப்ரப்ர வய மம்ருதம் ஜாதவெதஸம் ப்ரியம் மித்ரம் ந ஶம்ஸிஷம் ॥

அந்வயம்.

(हे स्तोतारः), वः, यज्ञा यज्ञा, दक्षसे, अग्नये, गिरा गिरा, (स्तोत्रं कुरुत वयं, (अपि) जातवेदसं, अमृतं, मित्रं न प्रियं (तं) प्रप्रशंसिषम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे स्तोतारः !) | (ஹே ஸ்தோதாரः !) | (துதிப்போர்காள் !) |
| वः | வः | நீங்கள் |
| यज्ञा यज्ञा | யஜ்ஞா யஜ்ஞா | எல்லா வேள்விகளிலும் |
| दक्षसे | தக்ஷஸே | வளர்தற்பொருட்டு |
| गिरा गिरा | கிரா கிரா | தோத்திரமாகிய வாக்கால் |
| (स्तोत्रं कुरुत) | (ஸ்தோத்ரம் குருத) | (துதி செய்வீர்களாக) |
| वयं (अपि) | வயம் (அபி) | நாங்களும் |
| जातवेदसं | ஜாதவேதஸம் | உண்டாகிய பொருள்களையு முணர்வுகளையு முடையதும், |
| अमृतं | அம்ருதம் | இறவாததும், |
| मित्रं न | மித்ரம் ந | நண்பனை யொத்ததும் |
| प्रियं | ப்ரியம் | அநுகூலத்ததுமாகிய |
| तं | தம் | அதை (அவ்வக்கினியை) |
| प्रप्रशंसिषं | ப்ரப்ரஶம்ஸிஷம் | இனிது போற்றுகின்றோம். |

சாயண பாடியம்

கண்டம்.—4. இருக்கு—1. சம்யு ரிஷி.

ஏத்துவோர்களே! நீங்கள் வேள்விகளனைத்திலும் தழைத்தோங்குதற்கு, அக்கினியின்பொருட்டுத் தோத்திரமாகிய வாக்கியத்தால் துதி செய்வீர்களாக. ஈண்டுத் துதி செய்வீர்களாக என்றது எஞ்சி நின்றது. 'गिराच' என்பதிலுள்ள சகாரம். (உம்மை) மாற்றுப் பொருள் முறை. அதாவது, 'व;' நாங்கள் என்பதோடு கூட்டத்தக்கதாயிற்று. இவ்வாறாய வழி நாங்களும், என்றாயிற்று. ஆகவே நீங்களுந் தோத்திரம் பண்ணுவீர்களாக, நாங்களும் அவ் வக்கினியைப் போற்றுகின்றோம் என முடிந்தது. எவ்விதமாகிய அக்கினியை யெனின்? சாதலற்றதை, தோன்றும்பொருள்களை யுணர்வதை, அல்லது உளதாகிய மெய்யறிவுடையதை, அல்லது தோன்றிய தனமுடையதை, மற்றும் மித்திரனைப்போன்றதை, அனுகூலமானதைப் போற்றுகின்றோம் என்பதனோடு மேற்கூட்டிக்கொள்க. ஈண்டு 'प्र' என்பது இரட்டித்தது மந்திரபாதம் முடிவதற்காம் 'शंसिषं' என்னும் ஒருமை திரிந்து பன்மையாயிற்று 'प्रशंसामः' என. அதாவது துதிக்கின்றேன் என்றது துதிக்கின்றோம் என்றாயிற்று. அல்லது, நீ, என்றது. நாங்கள், என்

றுயிற்று. ஆகவே அக்கினியைப் பயனிலையாக்கி வினைச்சொற் கொண்டு 'வளர்தற் பொருட்டு' என்பதை வளரும் வினையாக்கி செயப்படுபொருள் குன்றியதெனக் கொண்டு, உம்மையை ஏல், எனக் கொள்ளுங்கால், துதிப் போய்! நீ வேள்வியின்கண் இவ் வக்கினியைத் தோத்திரத்தால் வளர்ப்பாயேல், நாங்களும் இறவாத தன்மை முதலிய குணம் வாய்ந்த அவ் வக்கினியைப் போற்றுகின்றோம், என்பது பொருளாம். இதுவும் அதற்கொவ்வுமென்க. (1)

## மந்திரம் 2.

கீதம்—கார்த்தயசம்.

१ १ २ ३ १ २ ३ २ २ ३ १ २

36. **पाहि नो अग्न एकया पाह्यु३त द्वितीयया ।**

३ २ ३ २ ३ १ २ ३ १ २३ १ २

**पाहि गीर्भि स्तिसृभि रूर्जांपते पाहि चतसृभिर्वसो ॥ २ ॥**

இருக்கு 8-60-8.

வாஹி நோ அக்ந ஏகயா வாஹ்யுத த்விதீயயா ।

வாஹி கீர்பி ஸ்திஸ்ருபி ரூர்ஜாம்வதே வாஹி சதஸ்ரு [பிர்வஸோ ॥

### அங்வயம்.

हे अग्ने!, एकया पाहि, उत द्वितीयया पाहि, हे ऊर्जांपते! तिसृभिः, गीर्भिः, पाहि, वसो चतसृभिः पाहि ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! नः | ஹே அக்நே! நः | அக்கினியே! எங்களை |
| एकया | ஏகயா | ஒருவாக்காற் |
| पाहि | வாஹி | காப்பாற்றுவாயாக |
| उत द्वितीयया | உத த்விதீயயா | மற்றும், இரண்டாம் வாக்காற் |
| पाहि | வாஹி | காப்பாற்றுவாயாக |
| हे ऊर्जांपते! | ஹே ஊர்ஜாம்வதே! | அன்னங்கட்கிறையே! |
| तिसृभिः गीर्भिः | திஸ்ருபிः கீர்பிः | மூன்று வாக்குகளாற் |
| पाहि | வாஹி | காப்பாற்றுவாயாக |
| वसो! | வஸோ! | அக்கினியே! |
| चतसृभिः | சதஸ்ருபிः | நான்கு வாக்குகளாற் |
| पाहि | வாஹி | காப்பாற்றுவாயாக. |

சாயண பாடியம்.

அக்கினியே! நீ எங்களை ஒரு வாக்கென்னும் இருக்குவேத வாக்காற் காப்பாற்றுவாயாக. மற்றும், இரண்டு வாக்குகளாகிய இருக்காற் (மந்திரத்தால்) காப்பாற்றுவாயாக. மூன்று வாக்குகளான தோத்திரங்களாற் பரிபாலிப்பாயாக. அன்னங்கட் கிறைவ! அக்கினியே! நான்கு வாக்குகளாற் (துதிகளாற்) காப்பாற்றுவாயாக என்பதாம்.

குறிப்புரை.

ஒன்றால் அதாவது :—ககர முதற்கொண்டு மகர மீறாயுள்ள 25 எழுத்துக்கள் முதலிய வடிவத்தால் என்பதாம். அல்லது அக்கரப்போடம் (எழுத்துக்கட்குக் காரணமாகிய வணுவொலி) என்பதனாற் காப்பாற்றுவாயாக. மற்றும் இரண்டாவதால் (அதாவது) யசுர் இலக்கணத்தோடு கூடியதால், ய, ர, ல, வ, என்னும் எழுத்துக்கள் மிகுதிப்பாட்டால், பதப்போடமாகிய வாக்கால் எங்களைப் பாதுகாப்பாயாக. ஆற்றலுக்கு அல்லது அன்னத்திற்கு இறைவ! இருக்கு, யசுர், சாமம் என்னு மிலக்கணத்தோடு கூடிய மந்திரங்களாய மும்மை ஒலி வகையால் स, ष, स, ह, என்னு மக்கரங்களை மிகுதியாகக் கொண்ட பதங்களால் அல்லது வாக்கியப் போட வடிவாகிய வாக்குகளால், எங்களை யிரட்சிப்பாயாக. காருகபத்திய அக்கினியே! நான்கால் இருக்கு, யசுர், சாம, இலக்கண மந்திரங்களான உயிரெழுத்துகள் மிகுந்துள்ள இருக்கால், அல்லது அகண்ட வாக்கியமாகிய போட வடிவ வாக்கால், எங்களைப் பரிபாலிப்பாயாக. நாங்கள் செய்த இவ் விலக்கணங்களோடு கூடிய தோத்திரங்களைக் கேட்டு, எங்களை யினிது பாதுகாப்பாயாக என்பது உட்கிடை.

அஃதன்றியும் ஒன்றால்—இருக்கால். இரண்டால்—யசுரால். மூன்றால் இருக்கு யசுர் சாமங்களால் எனவும், நான்கால்—இருக்கு, யசுர், சாம, இலக்கண, முதலியவைகளோடு கூடியதால் எனவும்,

பரிசம், சிறுபரிசம், அண்ணுப்பு, சிற்றண்ணுப்பு என்னும் பெயர்களுள்ள ககர முதல் மகரவீறு ஐந்து வருக்கங்களான 25 அக்கரங்கள், ய, ர, ல, வ என்பவைகள், स, ष, स, ह, என்பவைகள், உயிரெழுத்துக்களுள் மிகல், குறைதல் பற்றி நால் வகையாய்க் கூறியுள்ளன எனவும்,

அக்கரப்போடம், பதப்போடம், வாக்கியப்போடம், என்பவைகளையே நான்கு வகையாய்க் கொண்டுள்ளது என உரை கூறுவாருமுளர். (2)

குறிப்பு.—'वसो:' என்பதற்குத் தனமுள்ள அக்கினியே! என்பர் மேனாட்டு ஆங்கிலக் கவிஞர்.

## மந்திரம் 3.

கிதம்—பரத்துவாச ரிஷி பிர்ச்சிரி.

३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २

37. बृहद्भिरग्ने अर्चिभिः शुक्रेण देव शोचिषा ।

३ १ २ ३ १ २ ३ १ २

भरद्वाजे समिधानो यविष्ठ * रेवत्पावक दीदिहि ॥ ३ ॥

இருக்கு 6-48-7.

ப்ருஹத்பிரக்நே அர்சிபி: ஶுக்ரேண தேவ ஶோசிஷா ।
பரத்வாஜே ஸமிதாநோ யவிஷ்ட ரேவத்பாவக தீதிஹி ॥

அந்வயம்.

हे देव!, यविष्ठ!, पावक!, अग्ने!, शुक्रेण, शोचिषा, भरद्वाजे, समिधानः, त्वं, बृहद्भिः, अर्चिभिः रेवत्, (यथा स्यात् तथा) दीदिहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे देव! | ஹே தேவ! | ஈகை முதலிய குணங்களையுடையோய்! |
| यविष्ठ! | யவிஷ்ட! | கட்டிளமையோய்! |
| पावक! | பாவக! | பரிசுத்தப்படுத்துவோய்! |
| अग्ने! | அக்நே! | அக்கினியே! |
| शुक्रेण | ஶுக்ரேண | நிருமலமாகிய |
| शोचिषा | ஶோசிஷா | ஒளியால் |
| भरद्वाजे | பரத்வாஜே | பரத்துவாசரென்னும் எனது சகோதரரிடத்து |
| समिधानः | ஸமிதாந: | இனிது விளங்குபவனாகி |
| त्वं | த்வம் | நீ |
| बृहद्भिः अर्चिभिः | ப்ருஹத்பி: அர்சிபி: | பெரும்பிரகாசங்களால் |
| (नः) | (ந:) | எனக்காகத் |
| रेवत् | ரேவத் | தனமுடையானாய் |
| (यथास्यात् तथा) | (யதாஸ்யாத் ததா) | உள்ளவாறு |
| दीदिहि | தீதிஹி | விளங்குவாயாக. |

சாயணபாடியம்.

கண்டம்—4. இருக்கு—3. சம்பு அல்லது திருணபாணி ரிஷி.

கொடை முதலிய குணங்களையுடையோய்! இளமையோய்! சுத்தப் படுத்துவோய்! அக்கினியே! தெளிந்த பிரகாசத்தால், பரத்துவாசர் என்னும் எனது சகோதரிடத்தில் பேரொளியால் இனிது விளங்குகின்றவ

* रेवन्नः शुक्र दीदिहि द्युमत्पावक, என்பது இருக்கு.

ஞகி எனக்குத் திரவியமுடையதாந் தன்மை யெவ்வாறுமோ? அவ்வாறே விளங்கிக்கொண்டிருப்பாயாக.

மற்றும் ‘ रेवत् पावक’ எனக் கீதம் பாடுவோரும், ‘ रेवन्न शुक्र दीदिहि द्युमत् पावक’ என இருக்கோதுவாருங் கொள்வர். (3)

குறிப்பு.—ஈண்டுத் தனமென்றது வேள்விகட்கெல்லாமோர் தனமாகிய ஆவை, சம்யு, என்பவர் பரத்துவாச ரிஷிக்கு ஒத்ததோராசிரமத்தாரத்லின் சகோதராராவர், உண்மையில் உடன்பிறந்தாரல்லர் என்பர் சிலர்.

## மந்திரம் 4.

கீதம்—உரோராங்கிசருடையது.

१ २ ३ १ २ ३१२

38. **त्वे अग्ने स्वाहुत प्रियासः सन्तु सूरयः ।**

३ २ ३ २ ३ १ २ १ २ ३१

**यन्तारो ये मघवानो *जनानामूर्वं दयन्त गोनाम् ॥ ४ ॥**

இருக்கு 7-16-7.

𑌤𑍍𑌵𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇 𑌸𑍍𑌵𑌾𑌹𑍁𑌤 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑌃 𑌸𑌨𑍍𑌤𑍁 𑌸𑍂𑌰𑌯𑌃 ।
𑌯𑌨𑍍𑌤𑌾𑌰𑍋 𑌯𑍇 𑌮𑌘𑌵𑌾𑌨𑍋 𑌜𑌨𑌾𑌨𑌾𑌮𑍂𑌰𑍍𑌵𑌂 𑌦𑌯𑌨𑍍𑌤 𑌗𑍋𑌨𑌾𑌮𑍍 ॥

அந்வயம்.

**हे स्वाहुत, अग्ने!, त्वे, सूरयः, ये (च) मघवानो, यन्तारः, जनानां, गोनां च, दयन्तः, ते (च) प्रियासः सन्तु ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे स्वाहुत अग्ने!** | 𑌹𑍇 𑌸𑍍𑌵𑌾𑌹𑍁𑌤𑌾𑌗𑍍𑌨𑍇! | விதிப்படி ஓமம் பண்ணிய அக்கினியே! |
| **त्वे सूरयः** | 𑌤𑍍𑌵𑍇 𑌸𑍂𑌰𑌯𑌃 | உன்னைத் துதிப்போர்களாய அறிஞர்களும் |
| **ये च मघवानः** | 𑌯𑍇 𑌚 𑌮𑌘𑌵𑌾𑌨𑌃 | எவர்கள் தனமுடையார்களோ, |
| **यन्तारः** | 𑌯𑌨𑍍𑌤𑌾𑌰𑌃 | கொடையாளர்களோ, |
| **जनानां** | 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 | எம்மவர்கட்கு |
| **गोनां** | 𑌗𑍋𑌨𑌾𑌂 | கோக்களது |
| **ऊर्वं** | 𑌊𑌰𑍍𑌵𑌂 | சமூகத்தைக் |
| **दयन्त** | 𑌦𑌯𑌨𑍍𑌤 | கொடுக்கின்றார்களோ, |
| **ते (च)** | 𑌤𑍇 (𑌚) | அவர்களும் |
| **प्रियासः** | 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑌃 | (நினக்கு) அன்புடையராய் |
| **सन्तु** | 𑌸𑌨𑍍𑌤𑍁 | இருப்பார்களாக. |

* जनानामूर्वान्, என்பது இருக்கு.

## சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு 4. வசிட்ட ரிஷி.

அக்கினியே! வேள்வித் தலைவர்களால் விதிப்படி ஓமம் பண்ணப் பட்டோய்! உன்னைப் போற்றுவோர்கள் இன்புடையார்களாகுக. மற்றும், எவர்கள் தனமுடையார்களோ, பெருங் கொடையாளர்களோ, எங்களுடைய சமூகத்தையும், கோக்களின் சமூகத்தையும், எவர்கள் கொடுக்கின்றார்களோ, அவர்களும் உனதன்பர்களா யிருப்பார்களாக. (4)

குறிப்பு.—ஈண்டு உரையாசிரியர், ஓமம் பண்ணப்பட்டோய்! என இரண்டாம் முறையும் விளியாகவே உரை கூறியுள்ளார். அதை 'அக்கினியே! என்னும் விளிக்கே விசேடணமாக்கிக் கொள்ளினும் வழுவின்றாமென்பது காண்க. துதிக்கின்றவர்கள் பிரியமாவார்களாக, மற்றும் வேள்விச் சாமக்கிரியைகளைக் கொண்டு வருவார்களாக. தலைவன் கொடுக்கும் பசுமந்தைகளைப் பங்கிட்டுக் கொள்வார்களாக. 1200 கோக்கள் ஒரு அந்தணன் பாகம் என்பது பாடியம். 'சஹனம்' என்பதன் விரிவு என்பர் மேனாட்டாசிரியர்,

## மந்திரம் 5.

கீதம்—சாமதக்ன ரிஷி, மாண்டவம்

२ ३ १२ ३ १२ ३ १ २ ३१२

39. अग्ने जरित विंश्पति *स्तपानो देव रक्षसः ।

१ २ ३ १ २ ३२३ १ २ ३२

अप्रोषिवान् †गृहपते महाँ असि दिवस्पायु र्दुरोणयुः ॥ ५ ॥

இருக்கு 8-60-19.

அக்நே ஜரித விஶ்பதி ஸ்தபாநோ தேவ ரக்ஷஸ: ।

அப்ரோஷிவாந் க்ருஹபதே மஹாம் அஸி திவஸ்பாயுர்து3ரோ

[ணயு: ॥

அங்வயம்.

हे अग्ने देव! (त्वं) जरितः, विश्पतिः, रक्षसः, तपानः,

असि, दिवः, पायुः, दुरोणयुः, तादृशः (त्वं), महान्, असि ॥

---

* ते पानो † गृहपति என்பது இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने देव! (त्वं) | ஹே அக்நே தேவ! (த்வம்) | அக்கினிதேவ! நீ |
| जरितः | ஜரிதஃ | துதித்தற்குரியானும் |
| विश्पतिः | விஶ்பதிஃ | பிரசைகளைக்காப்பாற்றுவோனும் |
| रक्षसः | ரக்ஷஸஃ | இராக்கதர்களைத் |
| तपानः | தபாநஃ | தகிக்கச் செய்வோனுமாய் |
| असि | அஸி | இருக்கின்றாய். |
| हे गृहपते! | ஹே க்ருஹபதே! | வீட்டுக்கிறைவ! |
| त्वं | த்வம் | நீ |
| अप्रोषिवान् | அப்ரோஷிவாந் | வீட்டை விடாதவனாகி |
| महान् असि | மஹாந் அஸி | பூசிக்கத்தக்கோனாயிருக்கின்றாய். |
| दिवः | திவஃ | விண்ணுலகைக் |
| पायुः | பாயுஃ | காப்பாற்றுவோன் |
| दुरोणयुः | துரோணயுஃ | எஜமான் வீட்டிலென்றுமிருப்பவன் |
| तादृशः (त्वं) | தாத்ருஶஃ (த்வம்) | அப்படிப்பட்ட நீ |
| महान् असि | மஹாந் அஸி | மகானாயிருக்கின்றாய். |

## சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—4. பரத்துவாச ரிஷி.

அக்கினிதேவ! நீ போற்றத்தக்கோனாகவும், பிரசைகளை பாற்றுபவனாகவும், அசுரர்களைக் காய்பவனாகவுமிருக்கின்றாய். வே வன் வீட்டைக் காப்பாற்றுகின்ற அக்கினியே! நீ எஜமானன் வீ காது பெரிதும் பூசிக்கத்தக்கோனா யிருக்கின்றாய். வானுலகத்தை பவன், எசமானன் வீட்டிற் றொடர்ந்திருப்பவன். அதாவது :—இ திருப்பவன் என்பதாம். அத் தன்மைய நீ மகானாயிருக்கின்றாய். வயித்துக் கொள்க.

'तपानः, तापानः' எனவும், 'गृहपते, गृहपतिः' எனவும் பாட பேதங்களுண்டு.

குறிப்பு.—'போற்றத்தக்கோன்' என்பது முதலிய விசேடணங்களோடு கூடிய அக்கினியே! உன்னைத் துதிக்கின்றேன், எனக் கொள்வாரு முளர். துரோணம் - வீடு. அதைக் கொடுப்போன் துரோணயு:—'जरित:' என்னு மூல பதத்திற்கு எங்கள் துதியைத் தேவர்கட்குச் சொல்பவனும் எனக் கொ மேனாட்டாசிரியர்.

## மந்திரம் 6.

१ ३ १२ ३ १२ ३ १ २र

40. अग्ने विवस्वदुषसश्चित्रꣳ राधो अमर्त्य ।

२ ३ १ २ ३ २३ २ २ १ २ ३ १ २

आ दाशुषे जातवेदो वहा त्वमद्या देवाꣳ उषर्बुधः ॥ ६ ॥

இருக்கு 1-44-1.

அக்நே விவஸ்வ துஷஸஸ்சித்ரம் ராதோ அமர்த்ய ।
ஆ தாஶுஷே ஜாதவேதோ வஹா த்வமத்யா தேவாம் உஷர்புத: ॥

அங்வயம்

हे अमर्त्य! जातवेदः!, अग्ने! त्वं, उषसः, विवस्वत्, चित्रं,
राधः, दाशुषे, आ वह, (किञ्च) अद्य, उषर्बुधः, देवान्, आ वह ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अमर्त्य! | ஹே அமர்த்ய! | இறப்பிலாதோய்! |
| जातवेदः | ஜாதவேத: | தோன்றியவைகளை யுணர்ந்தோய்! |
| अग्ने! | அக்நே! | அக்கினியே! |
| त्वं | த்வம் | நீ |
| उषसः | உஷஸ: | உஷா தேவதையினின்று, |
| | விவஸ்வத் | விசேடமான இடத்தோடு கூடியதும், |
| | சித்ரம் | சித்திரமுடையதுமாகிய |
| | ராத: | திரவியத்தை |
| | தாஶுஷே | தொண்டனும் வேள்வித் தலைவனுக்குக் |
| | ஆவஹ | கொண்டு வருவாயாக |
| | கிஞ்ச | மற்றும் |
| | அத்ய | இப்பொழுது |
| उषर्बुधः | உஷர்புத: | விடியற்காலத்திலெழுந்துள்ள |
| देवान् | தேவாந் | தேவர்களை |
| आ वह | ஆ வஹ | அழைத்து வருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு 6. பிரஸ்கண்வ ரிஷி.

அக்கினியே! நீ உஷா தேவதையிடத்திலிருந்து, அவியைக் கொடுத்த[வனு]க்குத் தனங் கொண்டுவந்து சேர்ப்பாயாக. மரணமிலாதோய்!

உண்டானவைகளை யுணர்ந்தோய்! என்பன, அக்கினியைச் சிறப்பித்துக் கூறப்பெற்றன. எவ்விதமாகிய தனமெனின்? விசேடம் வாய்ந்த இருக்கை யுடையதும் பலவகைப்பட்டதுமாம். மற்றும், இந்த யாக தினத்தில் விடியற் காலத்தி லெழுந்திருக்கின்ற தேவர்களை வரவழைப்பாயாக.

குறிப்பு.—தோன்றுகின்ற பொருளை யுணர்ந்ததும், இறவாததுமாகிய அக்கினியே! இருணீக்கு முனது வடிவம் விசித்திரப் பிரகாசமாம், உஷத் காலத்தில் விழித்துள்ள ஏனைய தேவர்களை இப்பொழுது நீ அழைப்பாயாக. எசமானன் பொருட்டு எனக் கொள்வாரு முளர்.

உஷா தேவதைகளிரண்டுள்ளன. ஒன்று வாயு சக்தியையுடையதாதலின், மேகத்தில் நீரைத் தங்கச் செய்கின்றது. மற்றொன்று காந்தியைத் தாங்குதலால், இயற்கையாகவே சூரியன் சம்பந்தப்பட்டது. 'अद्य' என்பது வைதீகத்தால் 'अद्या' என நீண்டது.

## மந்திரம் 7.

கீதம்—கௌதமம்.

१ २ ३२ ३ २उ ३ १ २
41. त्वं नश्चित्र ऊत्या वसो राधांꣳसि चोदय ।
३ २ ३ १ २र ३ १२ ३ २ ३ २ ३ १ २र
अस्य रायस्त्वमग्ने रथीरसि विदा गाधं तुचे तु नः ॥ ७ ॥

இருக்கு 6-48-9.

த்வம் நஶ்சித்ர ஊத்யா வஸோ ராதாம்ஸி சோதய ।
அஸ்ய ராயஸ்த்வமக்னே ரதீரஸி விதா காதம் துசே து நஃ ॥

அந்வயம்.

हे वसो!, चित्रः त्वं, ऊत्या, नः राधांसि, चोदय, अस्य,
रायः, त्वं रथीः, असि, अपि च, नः, तुचे, गाधं तु विदा ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे वसो!** | ஹே வஸோ! | வியாபகவக்கினியே! |
| **चित्रः त्वं** | சித்ரஃ த்வம் | விசித்திரமாய்க்காணப்பட்ட நீ |
| **ऊत्या** | ஊத்யா | காப்பாற்றுவதுடன் |
| **नः** | நஃ | எங்கட்குத் |
| **राधांसि** | ராதாம்ஸி | தனங்களையும் |
| **चोदय** | சோதய | வரச் செய்வாயாக |
| **अस्यरायः** | அஸ்ய ராயஃ | இத்திரவியத்திற்கு |

| | | |
|---|---|---|
| त्वं | ത്വം | நீ |
| रथी असि | രഥീ അസി | நியமிப்போனுயிருக்கின்ருய் |
| (अपि च) | (അസി ച) | மற்றும் |
| नः | നഃ | எங்களுடைய |
| तुचे | തുചേ | புத்திரனுக்கு |
| गाधं तु | ഗാധം തു | கீர்த்தியை |
| विदाः | വിദാഃ | அடைவிப்பாயாக |

சாயண பாடியம்.

கண்டம்—4, இருக்கு—7. திருணபாணி ரிஷி.

வியாபகமாகிய அக்கினியே! விசித்திரமாகக் காணப்பட்ட நீ (எங்களைக்) காப்பாற்றுவதோடுகூட தனங்களையும் எங்கட்கு அனுப்புவாயாக. இவ்வுலகிற் காணப்பட்ட திரவியங்கட்கு நீயே, தலைவனு யிருக்கின்ருய். ஆகையால் எங்கட்குத் தனங்களை வரச்செய்வாயாக என்பது பொருள். மற்றும், எங்களுடைய பிதிர்க்கள் வீழாமைக்குக் காரணமாகிய புத்திரனுக்குப் பெருமையை விரைவிற் கொடுப்பாயாக. (7)

குறிப்பு.—'பிரதிஷ்டை' என்பதின் பொருளாகிய 'கீர்த்தியை' என்பது பாடியக்காரர் உடன்பாடு. பூமி முதலிய இடம் என்பது விவரணர் மதம்.

## மந்திரம் 8.

கீதம்—கௌதமம்.

२उ ३ १ २ ३ १ २ ३ २ ३ २
42. त्वमित् सप्रथा अस्यग्ने त्रातर्ऋतः कविः ।

२र ३ १ २ ३ १ २
त्वां विप्रासः समिधान दीदिव आ विवासन्ति वेधसः ॥ ८ ॥

இருக்கு 8-60-5.

ത്വമിത് സപ്രഥാ അസ്യഗ്നേ ത്രാതൃതഃ കവിഃ ।
ത്വാം വിപ്രാസഃ സമിധാന ദീദിവ ആ വിവാസന്തി വേധസഃ ॥

அந்வயம்.

अग्ने!, त्रातः, ऋतः, कविः, त्वमित्, सप्रथा, असि, (हे),
समिधान! दीदिवः! विप्रासः वेधसः त्वां, आविवा, सन्ति ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| अग्ने ! | அக்நே! | அக்கினியே! |
| त्रातः | த்ராத: | காப்பாற்றுவோனும் |
| ऋतः | ருத: | சத்தியவடிவனும் |
| कविः | கவி: | நீண்மதியுடையானும் (ஆகிய) |
| त्वमित् | த்வமித் | நீயே |
| सप्रथाः असि | ஸப்ரதா: அஸி | யாண்டும் பரவியுள்ளாய். |
| हे समिधान दीदिवः ! | ஹே ஸமிதாந தீதிவ:! | சுடர்மிகுந்த பிரகாசமாகிய அக்கினியே! |
| विप्रासः | விப்ராஸ: | பேரறிவாளர்களும் |
| वेयसः | வேதஸ: | போற்றுவோர்களும் |
| त्वां | த்வாம் | உன்னை |
| आ विवासन्ति | ஆ விவாஸந்தி | இனிது சேவித்துக்கொண்டிருக்கின்றார்கள். |

### சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—8. விரூப ரிஷி.

அக்கினியே! பரிபாலிப்போனும், சத்தியவடிவோனும், எல்லையில்லாவுணர்ச்சியுடையோனுமாகிய நீயே எவ்விடத்தும் வியாபித்துள்ளாய். சுடர் மிகுந்த சோதியாகிய அக்கினியே! மேதாவிகளும், எத்துவோர்களும், உன்னை யுள்ளவாறு வழிபடுகின்றார்கள். (8)

குறிப்பு.—மூலத்தில் 'त्वमित्' என்பதிலுள்ள 'इत्' என்பதற்கு, நீயேயெனத் தேற்றேகாரப்பொருள் கொண்டனர் இவ்வுரையாசிரியர். பாதம் (அடி) நிறைவாதற் பொருட்டென்பர் விவரணக்காரர். மற்றும் 'दीदिव' என்பதற்குப் பிரகாசமாகிய எனக்கொண்டார் பாடியக்காரர். தானமுடைய எனவுங் கொள்வர் சிலர்.

### மந்திரம் 9.

கீதம்—அக்கினி ரிஷி ஆயுள்.

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २
43. आनो अग्ने वयो वृधꣳ रयिं पावक शꣳस्यम् ।
१ २ ३ २३ १ २ ३ १ २
रास्वा च न उपमाते पुरुस्पृहꣳ सुनीती *सुयशस्तरम् ॥ ९ ॥

இருக்கு 8-60-11.

---

* स्वयशस्तरं, என்பது இருக்கு.

ஆ நோ அக்நே வயோவ்ருதம் ரயிம் பாவக ஶம்ஸ்யம் ।
ராஸ்வா ச ந உபமாதே புருஸ்ப்ருஹம் ஸுநீதீ ஸுயஶஸ்தரம் ॥

அந்வயம்.

हे पावक! अग्ने! वयो वृधं, शंस्यम्, रयिं, नः, आ,
हे उपमाते!, च नः सुनीती, पुरुस्पृहं, सुयशस्तरं, रास्वा ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पावक! | ஹே பாவக! | பரிசுத்தப்படுத்துவோய்! |
| अग्ने! | அக்நே! | அக்கினியே! (நீ) |
| वयो वृधं | வயோ வ்ருதம் | அன்னத்தை வளர்ப்பதும் |
| शंस्यं | ஶம்ஸ்யம் | போற்றத்தக்கதுமாகிய |
| रयिं | ரயிம் | தனத்தை |
| नः | நஃ | எங்கட்கு |
| आ (आभर) | ஆ (ஆபர) | நிறையவைப்பாயாக. |
| हे उपमाते! | ஹே உபமாதே! | எனதருகில் அளவோடு கெய்யேற்போய்! |
| नः | நஃ | எங்கட்கு |
| सुनीती | ஸுநீதீ | நல்ல துதியால் |
| पुरुस्पृहं | புருஸ்ப்ருஹம் | பல்லோர்களும் விரும்பத்தக்க |
| सुयशस्तरं | ஸுயஶஸ்தரம் | கீர்த்தியாகிய தனத்தையுங் |
| रास्वा | ராஸ்வா | கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—9. சுனச்சேப ரிஷி.

அக்கினியே! நிருமலத்தோய்! நீ அன்னத்தை விருத்திபண்ணுவதும், புகழத்தக்கதுமாகிய திரவியத்தை எங்கட்கு நிறையும்படி செய்வாயாக. நிறையும்படி செய்வாயாக என்பது எஞ்சிநின்றது. நிறையச் செய்துவிட்டு எமக்கருகில் அளவோடு கெய்யேற்குந் தன்மை வாய்ந்த அக்கினியே! எங்கட்கு நல்ல நீதியால் பலரும் விருப்பங்கொள்ளும் மிகப் பெருமையென்னுந் திரவியத்தையுங் கொடுப்பாயாக.

(9)

## மந்திரம் 10.

கீதம்—யாமம்.

२उ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २र

44. यो विश्वा दयते वसु होता मन्द्रो जनानाम् ।

३ ३१ २र ३ १ २ ३ १ २र २ ३१२

मधोर्न पात्रा प्रथमान्यस्मै प्रस्तोमा यं त्वग्नये ॥ १० ॥

இருக்கு 4-9-1.

𑌯𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 𑌦𑌯𑌤𑍇 𑌵𑌸𑍁 𑌹𑍋𑌤𑌾 𑌮𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌜𑌨𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌮𑌧𑍋𑌰𑍍𑌨 𑌪𑌾𑌤𑍍𑌰𑌾 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌨𑍍𑌯𑌸𑍍𑌮𑍈 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍋𑌮𑌾 𑌯𑌂 𑌤𑍍𑌵𑌗𑍍𑌨𑌯𑍇 ॥

அந்வயம்.

होता, मन्द्रः, यः विश्वा, वसु, जनानां, दयते, (तस्मै), अस्मै, अग्नये, मधोः, न, प्रथमानि, पात्राः, स्तोमाः, प्रयन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| होता | 𑌹𑍋𑌤𑌾 | வாஞோரை யழைப்பதும் |
| मन्द्रः | 𑌮𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 | களிப்பை யுண்டாக்குவதும் |
| यः | 𑌯𑌃 | எவ் வக்கினியோ, |
| विश्वा वसु | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 𑌵𑌸𑍁 | எல்லாத் தனங்களையும் |
| जनानां | 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 | சனங்கட்குக் |
| दयते | 𑌦𑌯𑌤𑍇 | கொடுக்கத்தக்கதுமாமோ |
| (तस्मै) अस्मै अग्नये | (𑌤𑌸𑍍𑌮𑍈) 𑌅𑌸𑍍𑌮𑍈 𑌅𑌗𑍍𑌨𑌯𑍇 | அத்தகைய இவ் வக்கினிக்கு |
| मधोः न | 𑌮𑌧𑍋𑌃 𑌨 | களிப்பைச் செய்வனபோன்று |
| प्रथमानि | 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌨𑌿 | முக்கியமான |
| पात्रा | 𑌪𑌾𑌤𑍍𑌰𑌾 • | பாத்திரங்கள் |
| स्तोमाः | 𑌸𑍍𑌤𑍋𑌮𑌾𑌃 | தோத்திரங்கள் |
| प्रयन्ति | 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑌿 | செல்கின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—10. சோபரி ரிஷி.

வாஞோரை யழைப்பதும், களிப்பைக் கொடுப்பதுமாகிய அக்கினி எல்லாத் தனங்களையுஞ் சனங்கட்குக் கொடுக்கின்றது. அத் தன்மைய இவ் வக்

கினியின் பொருட்டுக் களிப்பைத் தருஞ் சோமத்தைப் (சோமரசத்தைப்) போல், முக்கியமான பாத்திரங்களுந் தோத்திரங்களும் போகின்றன. (10)

. குறிப்பு.—मन्द्र: என்றதற்கு அனைவருந் தொழுத்தக்க தேவர்களை, அழைக்கின்ற அக்கினியே எனத், தேவர்கட்கு விசேடணமாகக் கொள்வர் மேனாட்டாசிரியர்

நான்காங் கண்டம்

முற்றும்.

## ஐந்தாவது கண்டம்.

## பிரபாடகம்—1, அத்தியாயம்—1, கண்டம்—5.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

கீதம்—கோதம ரிஷி, ஆக்கினேயம், மனூர்சியம்.

३ १ २ ३२ २र ३ १ २र३ १ २

45. **एना वो अग्निं नमसोर्जो नपात माहुवे ।**

३ १ २र ३ १ २ ३१ २र ३२ ३१२

**प्रियं चेतिष्ठ मरतिꣳ स्वध्वरं विश्वस्य दूत ममृतम् ॥ १ ॥**

இருக்கு 7-16-1.

ஏநா வொ அக்நிம் நமஸொர்ஜொ நபாத மாஹுவே ।
ப்ரியம் செதிஷ்ட மரதிம் ஸ்வத்வரம் விஶ்வஸ்ய தூத மம்ருதம் ॥

அங்வயம்.

ऊर्ज:: नपातं, प्रियं, चेतिष्ठं, अरतिं, स्वध्वरं, विश्वस्य, दूतं, अमृतं, अग्निं, एना नमसा, व:, आहुवे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| ऊर्ज: | ஊர்ஜ꞉ | ஆற்றலுக்குப் |
| नपातं | நபாதம் | புத்திரனும் |
| प्रियं | ப்ரியம் | அன்பனும் |
| चेतिष्ठं | சேதிஷ்டம் | மிக்குணர்வோனும் |
| अरतिं | அரதிம் | செல்வோன் அல்லது இறைவனும் |

| | | |
|---|---|---|
| स्वध्वरं | ஸுஅ்வரம் | இனியவேள்வியை யுடையோனும் |
| विश्वस्य | விஶ்வஸ்ய | அனைவர்களுடைய |
| दूतं | தூதம் | தூதுவனும் |
| अमृतं | அம்ருதம் | நித்தியனுமாகிய |
| अग्निं | அக்னிம் | அக்கினியை, |
| एना नमसा | ஏநா நமஸா | இத் தோத்திரத்தால் |
| वः | வ: | உங்கணிமித்தங் |
| आहुवे | ஆஹுவே | கூப்பிடுவோனுவேனுக. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—1. வாமதேவ ரிஷி.

தோத்திரத்தாற் போற்றுவோர்காள்! ஆற்றலுக்குப் புதல்வனும், அன்பனும், எம்மினு மிக்குணர்ந்தோனும், அல்லது வியப்புற உணர்ந்தோனும், அல்லது நன்குணர்விப்பவனும், செல்வோனும், அல்லது தலைவனும், அரிய வேள்வியுடையனும், எஜமானர் யாவருக்குந் தூதுவனும், நித்தியனும் ஆகிய அக்கினியைத் துதியால், உங்கட்காக வரவழைப்போனுவேனுக என்பதாம். ஈண்டு 'இதம்' என்னும் வடமொழிப்பதம் ஏன, ஏன வாகாததாமாயினும் சந்தம்பற்றி 'ஏனு' எனவானது. ஆகி, ஏனேன, (துதியால்) எனத் திரிந்தது. (1)

குறிப்பு.—'ஆற்றலுக்குப் புத்திரன் என்றது ஆற்றலாலே அரணிக்கட்டையினின்றும் (கடைதலால்) அக்கினி யுண்டாகின்றதாமாதலின். அன்னத்தினுடைய புத்திரனென்பாரு முளர். அன்னத்தால் ஆற்றலுண்டாகின்றது, ஆற்றலால் அக்கினி யுண்டாகின்றது, ஆதலின் அதுவும் பொருந்துமென்றுணர்க.

இம் மந்திரத்திற்கு வசிட்ட ரிஷி யென்பது ஆங்கிலப் பாடம். மற்றும் அன்னத்திற்குப் பௌத்திரனெனவும், அன்னத்தினின்று பிரமனும், பிரமனிலிருந்து அக்கினியும் உண்டாயிற்றெனவுங் கூறுகின்றது பாடியம் என்பர் மேனாட்டாசிரியர்.

## மந்திரம் 2.

கீதம்—கோதம ரிஷி, தைவராசம்.

२ ३ १२ ३ २३ २ ३ १ २
46. शेषे वनेषु मातृषु सं त्वा मर्तास इन्धते ।
३ १ ३ २ ३ २उ ३ १२
*अतन्द्रो हव्यं वहसि हविष्कृत आदिद्देवेषु राजसि ॥ २ ॥

இருக்கு 8-70-15.

* मात्रोः हव्यः, என்பது இருக்கு.

ஶேஷே வநேஷு மாத்ருஷு ஸம் த்வா மர்தாஸ இந்ததே ।
அதந்த்ரோ ஹவ்யம் வஹஸி ஹவிஷ்க்ருத ஆதித்தேவேஷு ராஜஸி ॥

அந்வயம்.

(हे अग्ने!) वनेषु, मातृषु, शेषे, मर्तासः, (तथा भूतं) त्वां समिन्धते,
(पश्चात्,) त्वं, अतन्द्रः, हविष्कृतः, हव्यं, वहसि, आदित्, देवेषु, राजसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अग्ने!** | ஹே அக்நே ! | அக்கினியே ! |
| **वनेषु** | வநேஷு | வனங்களில் |
| **मातृषु** | மாத்ருஷு | அன்னைகளிடத்துத் |
| **शेषे** | ஶேஷே | தூங்குகின்றாய். |
| **मर्तासः** | மர்தாஸ: | மனிதர்கள் |
| **(तथा भूतं)** | (தயா பூதம்) | (அவ்விதமாகிய) |
| **त्वां** | த்வாம் | உன்னை |
| **समिन्धते** | ஸமிந்ததே | வளர்க்கின்றார்கள். |
| **(पश्चात्)** | (பஶ்சாத்) | பின்னர் |
| **त्वं** | த்வம் | நீ |
| **अतन्द्रः** | அதந்த்ர: | சோம்பலற்றவனாய் |
| **हविष्कृतः** | ஹவிஷ்க்ருத: | எசமானனுடைய |
| **हव्यं** | ஹவ்யம் | அவியை |
| **वहसि** | வஹஸி | ஏற்றுக்கொள்கின்றாய். |
| **आदित्** | ஆதித் | பின்னர் |
| **देवेषु** | தேவேஷு | தேவர்களுக்குள் |
| **राजसि** | ராஜஸி | விளங்கிக்கொண்டிருக்கின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு 22. பார்க்க ரிஷி.

அக்கினியே ! வனங்களிலும், மாதாக்களிடத்திலும் இருக்கின்றாய் அங்ஙனமாகிய உன்னை அத்துவரியுக்கள் (எசுர் வேதமோதுபவர்கள்) கடைதலாலுண்டாக்கி வளரச் செய்கின்றார்கள். வளர்ந்த நீ பின்பு சோம்பலற்றோனாயிருந்து, எசமானனுடைய அவியைத் (தேவ உணவை) தேவர்க

ளின் பொருட்டு ஏற்றுக்கொள்கின்றாய். அதன் பின்னரே தேவர்கட்குள் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றாய். '**मातृषु**' எனவும், '**मात्रोः**' எனவும், '**हव्यं**' எனவும், '**हव्यः**' எனவும் பாடபேதம். (2)

**குறிப்பு.**—வனங்களில் தாவானல வடிவாய்க் குறிப்பற்று மிகத் தகிப்போனாயிருந்து ஈரமான தருக்களிலும், உலர்ந்த தருக்களிலும் வசிக்கின்றாய். அன்னைகளிடத்து என்றது - அரணிக் கட்டைகளிடத்து. அரணிக்கட்டைகளிரண்டையுங் கடைதலாலுண்டாதலின் அவைகளன்னைகளாயின. தேவர்களுக்குள் என்றது = இந்திரன் முதலியோர்களல்லர் மற்றோ? அவி கொடுக்குஞ் சில வேட்போர்களுக்குள் என்ப. மழையின் பொருட்டும், புத்திரனின் பொருட்டும், மனிதர்கள் அக்கினியை வளர்க்கின்றார்கள் என்பது மேனாட்டாசிரியர் கருத்தெனத் தோற்றுகின்றது.

## மந்திரம் 3.

கீதம்—கௌசிக ரிஷி காதினம்.

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ २
47. **अदर्शि गातु वित्तमो यस्मिन् व्रतान्यादधुः ।**
२ ३ २ ३ १ १र ३ १ २ ३ १ २ ३ १ २
**उपोषु जातमार्य्यस्य वर्धनमग्निं * नक्षन्तु नो गिरः ॥ ३ ॥**

இருக்கு 8-1103-1.

அத³ர்ஶி கா³து வித்தமோ யஸ்மிந் வ்ரதாந்யாத³து⁴: ।
உபோஷு ஜாதமார்ய்யஸ்ய வர்த⁴நமக்³நிம் நக்ஷந்து நோ கி³ர: ॥

அந்வயம்.

(यजमानाः) यस्मिन्, व्रतानि, आदधुः, गातुवित्तमः, (सः) अदर्शि, नो गिरः, सुजातं, आर्य्यस्य वर्धनम्, अग्निं. उपो, नक्षन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **(यजमानाः)** | (யஜமாநா:) | (வேள்வித் தலைவர்கள்) |
| **यस्मिन्** | யஸ்மிந் | எவ் வக்கினியில் |
| **व्रतानि** | வ்ரதாநி | கருமங்களைத் |
| **आदधुः** | ஆத³து⁴: | தாபித்திருக்கின்றார்களோ, |
| **गातुवित्तमः** | கா³துவித்தம: | நெறிகளை நன்குணர்ந்த |
| **(सः)** | (ஸ:) | (அவ் வக்கினி) |
| **अदर्शि** | அத³ர்ஶி | தோற்றுக. |

* नक्षन्त नो गिरः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| नो गिरः | நொ கிர: | எங்களுடைய துதி வாக்குகள், |
| सुजातं | ஸுஜாதம் | இனிது காணப்பட்டதும் |
| आर्य्यस्य | ஆர்ய்யஸ்ய | உத்தமருடைய |
| वर्धनं | வர்தநம் | வளர்ச்சிக்குக் காரணமுமாகிய |
| अग्निं | அக்நிம் | அக்கினியை |
| उपो नक्षन्तु | உபொ நக்ஷந்து | அருகிற் சென்றடைவனவாகுக. |

கண்டம்—5. இருக்கு—3. சௌபரிஷி.

எவ் வக்கினியினிடத்தில் வேள்வித் தலைவர்கள் கருமங்களை நிலை நாட்டியிருக்கின்றார்களோ, அவ் வக்கினி வெளிப்படுக. மற்றும், இனிது வெளிப்பட்டதும், உத்தம வருணத்தை விருத்தி செய்வதுமாகிய அவ் வக்கினியை, எங்களுடைய தோத்திர வடிவமான வாக்குகள் அருகிற்போய் அடைவனவாகுக. ஈண்டு, 'நக்ஷ' என்னும் வடமொழிப் பகுதி = அடைவு, என்னும் பொருளுடையதாம். (3)

குறிப்பு.—விரத முதலிய கருமங்களைத் தேவர்கள் எதனிடத்தில் வைத்திருக்கின்றனரோ, அவ் வக்கினி யெனப் பொருள் படுத்துகின்றார் மேனாட்டாசிரியரிற் சிலர்.

## மந்திரம் 4.

கீதம்—மனு ரிஷி வார்ஹதுக்தம்.

३ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ २

48. अग्निरुक्थे पुरोहितो ग्रावाणो बर्हिरध्वरे ।

३ १ २ १ ३ २ ३ १ २

ऋचायामि * मरुतो ब्रह्मणस्पते देवा अवो वरेण्यम् ॥ ४ ॥

இருக்கு 8-27-1.

அக்நிருக்தெ புரொஹிதொ க்ராவாணொ வர்ஹிரத்வரெ ।
ருசாயாமி மருதொ ப்ரஹ்மணஸ்பதெ தெவா அவொ வரெண்யம் ॥

அந்வயம்.

उक्थे, अध्वरे, अग्निः, ग्रावाणः, बर्हिः, पुरोहितः, हे मरुत!

हे ब्रह्मणस्पते! हे देवा! वरेण्यं, अवः, ऋचा, वः, ऋचा, वः, यामि ॥

---

* मरुतो ब्रह्मणस्पतिर्देवान्, என்பது இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| उक्थे अध्वरे | உக்தே² அத்⁴வரே | சஸ்த்ரம் என்னுந் தோத்திரஞ் செய்கின்ற வேள்வியில் |
| अग्निः | அக்³நி: | அக்கினியும் |
| ग्रावाणः | க்³ராவாண: | சோமரசந் தேடுவதற்குத் |
| बर्हिश्च | ப³ர்ஹிஸ்²ச | தருப்பையும் |
| पुरोहितः | புரோஹித: | முன்பு தாபிக்கப்பட்டிருக்கின்றன. |
| हे मरुतः ! | ஹே மருத: ! | வாயு தேவதைகாள் ! |
| हे ब्रह्मणस्पते ! | ஹே ப்³ரஹ்மணஸ்பதே ! | தோத்திரங் காப்போய் ! |
| हे देवाः ! | ஹே தே³வா: ! | தேவர்காள் ! உங்களை |
| वरेण्यं | வரேண்யம் | மேலாகப் பூசிக்குந்தன்மையைப் |
| अव | அவ | பாதுகாக்கவேண்டுமென்று |
| ऋचा | ருசா | துதிவாயிலாக |
| यामि | யாமி | (யான்) இரக்கின்றேன். |

## சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—4. மனு ரிஷி.

சஸ்த்ரம் என்னுமோர் தோத்திரவிசேடத்தைச் செய்யப்பட்டதும், கொல்லாமையையுடையதுமாகிய வேள்வியில், அதாவது வேள்விக்கு முன்னுள்ள உத்தர வேதிகையில் (திண்ணையில்) வேட்போர்களால் அக்கினி தாபிக்கப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே சோமந் தேடுவதன் பொருட்டுத் தருப்பையும் முன்பு தாபிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறு அநுகூல சாதனங்களிருக்குமிடத்து, நாற்பத்தொன்பதிமரான மருத்துக்காள்! தோத்திரத்தினுடைய பாதுகாப்பாளராகிய 'பிரமணப்பதி என்னுந் தேவ! பிரகாச முதலியகுணங்களோடுகூடிய இந்திரன் முதலிய தேவர்காள்! உங்களை மேம்பாடாய்ப் போற்றுந்தன்மையைப் பாதுகாப்பாற்றுதலையே மந்திரமாகிய தோத்திரத்தால் மனுவாகிய யான் ஏற்கின்றேன்.

மருத்துக்காள்! பிரமணப்பதியே! தேவர்காள்! என மும்முறையழைக்குந் தன்மையைச் சந்தமோதுவார் படிக்கின்றனர். மருத்துக்களை, பிரமணப் பதியை, தேவர்களை, என இரண்டாம் வேற்றுமையீறாகக்கொண்டு இருக்கோதுவார் படிக்கின்றனர். (4)

**குறிப்பு.**—சஸ்திரம் என்பது ஒரு வகைத் துதியின் பெயர். கொல்லாமையையுடைய தோத்திரமாகிய ஆயுத வடிவ இவ்வேள்வியின்கண், சோமரசஞ் சம்பாதிப்பதற்கு, அக்கினியுந் தருப்பையும், முன்னர்த் தாபிக்கப்பட்டிருக்கின்றன. நாற்பத்தொன்பதிமரான மருத்துக்களே! (வாயு தேவதைகளே) தோத்திரத்தைக்

காப்பாற்றும் 'பிரமணப்பதி' என்னுந் தேவதையே! மற்றும் ஏனைய தேவர்காள்! உங்களைத் தோத்திர வாக்கினால் இஃதொன்றே எம்மாலிரக்கப்படுகின்றது. இத் தன்மைய காப்பாற்றுகிய காரியஞ் செயற்பாலதாம் என்பதேயாம். அஃதென்னையோவெனின்? எவ் வாற்றாலும் முன்பிலிருக்கின்றவர்களான இத் தேவர்கள் பூசிக்கத்தக்கவர்களாகவே இருப்பார்களாக. அதாவது:—யாதொரு தோடவசத்தாலும் வெளிப்படாதவர்களாகுக என்பதாம், இது வுட்கிடை.

### மந்திரம். 5.

கீதம்—பௌருமீடம்.

२ १ २ ३ १ २३ १ १ ३ १२
49. अग्निमीडिष्वावसे गाथाभिः शीरशोचिषम् ।
३ २ ३ १ २ ३२उ ३ १ २ ३१२ ३ २
अग्निंꣳ राये पुरुमीढ श्रुतं नरोऽ*ग्निः सुदीतये छर्दिः ॥ ५ ॥

இருக்கு 8-71-14.

அக்ஞிமீளிஷ்வாவஸே காதாபி: ஶீரஶோசிஷம் ।
அக்ஞிம் ராயே புருமீள ஶ்ருதம் நரோऽக்ஞி: ஸுதீதயே சர்தி: ॥

அந்வயம்.

हे पुरुमीढ! (त्वं) शीरशोचिषं, अग्निं, राये, अवसे, गाथाभिः, ईडिष्व, श्रुतं, अग्निं, (अन्येऽपि), नरः, (स्तुवन्ति), तस्मात्, अग्निः, सुदीतये, छर्दिः (प्रयच्छतु) ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पुरुमीढ! | ஹே புருமீள! | புருமீட ரிஷியே! |
| (त्वं) | (த்வம்) | (நீ) |
| शीरशोचिषं | ஶீரஶோசிஷம் | தூங்கிய பிரகாசமுள்ள |
| अग्निं | அக்ஞிம் | அக்கினியை |
| राये | ராயே | தனத்திற்கும், |
| अवसे | அவஸே | காப்பின் பொருட்டும், |
| गाथाभिः | காதாபி: | மந்திர வாக்குகளால் |
| ईडिष्व | ஈளிஷ்வ | துதிப்பாயாக, |
| श्रुतं अग्निं | ஶ்ருதம் அக்ஞிம் | கீர்த்தி வாய்ந்த அக்கினியை |
| अन्येऽपि नरः | அந்யேऽபி நர: | ஏனைய மனிதர்களுந் |
| (स्तुवन्ति) | (ஸ்துவந்தி) | (துதிக்கின்றார்கள்) |

* अग्नि सुदीतये छर्दिः என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| (तस्मात्) | (தஸ்மாத்) | (ஆதலால்) |
| अग्निः सुदीतये | அக்நி: ஸுதீதயே | 'சுதீதி' யாகிய எனக்கு அக்கினி |
| छर्दिः | சர்தி: | வீட்டைக் |
| (प्रयच्छतु) | (ப்ரயச்சது) | (கொடுக்குக.) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—5. சுதீதி புருமீட ரிஷி.

புருமீட ரிஷியே! நீ (தன்னைக்) காப்பாற்றிக்கொள்ளுதற் பொருட்டு மந்திரவடிவ வாக்குகளால் அக்கினியைத் தோத்திரம் பண்ணுவாயாக.

எவ் வண்ணமாகிய அக்கினியை யெனின்! உள்ளடங்கிய பிரகாசமுடையதை. அங்ஙனமே திரவியத்தின் பொருட்டுந் துதிப்பாயாக. புகழ்பெற்ற இவ்வக்கினியை ஏனைய எசமானர்களும், தம் பொருட்டுத் துதிக்கின்றார்கள். ஆதலால் எமக்கு அக்கினி உன்னால் துதிக்கப்பட்டதாயிருந்து வீட்டைத் தருக, என்றிவ்வாறு சுதீதி யென்பவர் புருமீடர்க்குக் கூறு நின்றனர். 'अग्निं सुदीतये छर्दिः' எனக் கொள்வர் சந்தமோதுவார். 'अग्निः सुदीतये छर्दिः' என்று கொள்வர் இருக்குப் பாடகர் பலர். (5)

குறிப்பு.—'शीरशोचिषं' என்னும் மூலத்திற்கு—சீரம்—வியாபகம், சோசிஷம்—சோதி, எனக் கொண்டு 'வியாபகமாகிய சோதியை யுடையது' எனவும், அல்லது, சீரம், ஆசிரயிக்கத் தக்கது அது 'சாடராக்கினி வடிவமாய்ப் பற்றிக்கொண்டு நிற்கும் பிரகாசம்' எனவுங் கொள்வாரு முளர். பாடியக்காரரோ, சயனசுபாவம் என்று கொண்டனர்.

## மந்திரம் 6.

கீதம்—கார்ண சிரவசம், பிரகஸ்கண்வம்.

३ १ २ ३ १ २ ३ १२ ३ १ २
50. श्रुधि श्रुत्कर्ण वह्निभिर्देवैरग्ने सयावभिः ।
१ २ ३ १ २ ३ १ २३ १ २३ १२ ३२
* आसीदतु बर्हिषि मित्रो अर्यमाप्रातर्यावभिरध्वरे ॥ ६ ॥

இருக்கு 1-44-13.

ஶ்ருதி ஶ்ருத்கர்ண வஹ்நிபிர்தேவைரக்நே ஸயாவபி: ।
ஆஸீதது பர்ஹிஷி மித்ரோ அர்யமாப்ராதர்யாவபிரத்வரே ॥

* आसीदन्तु बर्हिषि मित्रो अर्यमा प्रातर्यावाणो अध्वरम्, என்பது இருக்கு.

அந்வயம்.

हे श्रुत्कर्ण, अग्ने ! (अस्मदीयं वचनं), श्रुधि, मित्रः, अर्यमा, देवैः, सयावभिः, वह्निभिः, अध्वरे, बर्हिषि, आसीदतु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे श्रुत्कर्ण अग्ने ! | ஹே ஶ்ருத்கர்ண அக்நே ! | கேட்குஞ் செவியுள்ள அக்கினியே ! |
| (अस्मदीयं वचनं) | (அஸ்மதீயம் வசநம்) | எமது வார்த்தையைக் |
| श्रुधि | ஶ்ருதி | கேட்பாயாக. |
| मित्रः | மித்ர: | மித்திரதேவரும், |
| अर्यमा | அர்யமா | அரியமாதேவரும், |
| देवैः | தேவை: | தேவர்களோடும், |
| सयावभिः | ஸயாவபி: | ஒத்த நடையுள்ள |
| वह्निभिः | வஹ்நிபி: | அக்கினிகளோடும், |
| अध्वरे | அத்வரே | வேள்வியின்கணுள்ள |
| बर्हिषि | பர்ஹிஷி | தருப்பையின்மீது |
| आसीदतु | ஆஸீதது | உட்காருவார்களாக, |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—6. பிரஸ்கண்வ ரிஷி.

கேட்குமாற்றலுள்ள இரு செவிகளோடு கூடிய அக்கினியே! எமது மொழியைக் கேட்பாயாக. மித்திர தேவர், அரியமா தேவர் என்னுமிருவர்களும், விடியற்காலத்தில் தேவாராதனைக்குச் செல்கின்ற ஏனைய தேவர்களோடும், ஆகவனீய அக்கினியாம் உனக்கொத்த நடையுடைய ஏனைய அக்கினிகளோடும். ஏனைய தேவர்களோடும் வேள்வி நிமித்தமாகிய தருப்பையின்மீது உட்காருவார்களாக.

'உட்காருதி தருப்பையில் மித்திர அரியமா விடியுங்காற் செல்பவர்களோடு' என்பர் சந்தமோதுவார். 'உட்காருவீர்களாக, தருப்பையில் மித்திர அரியமாக்கள் விடியும்போது செல்பவர்களுடன் வேள்விக்கண்' என்பர் இருக்கோதுவார். (இதில் ஒருமை பன்மைகளே வேறுபட்டன.)

## மந்திரம் 7.

கீதம்—தைவோதாசம்.

१ २र ३ २ ३२उ ३ २ ३ १ २
51. प्र दैवोदासो अग्निर्देव इन्द्रो न मज्मना ।
१ २ ३ १२ ३ १ २र ३ १ २र ३ १ २
अनुमातरं पृथिवीं विवावृते तस्थौ नाकस्य शर्मणि ॥ ७ ॥

ஒஂைவொ ஊஸொ அஂஃஂ ஐஂ ந ஃஜநா ।
அநுஂதரஂ வ்ரவிவாவ்ருதெ தஸ்ள நாகஸ்ய ஶஂணி ॥

அந்வயம்.

देवः, इन्द्रः, दैवो दासः, अग्निः, मातरं, अनु, प्रविवावृते, (दिवोदासः) (एनम्) मज्मना, आजुहाव, (तस्मात्) नाकस्य, शर्मणि, तस्थौ ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| देवः | தெவஃ | பிரகாசிப்பதும் |
| इन्द्रः | ஐஂ்ரஃ | ஐசுவரிய முடையதும் |
| दैवो दासः | தைவொ ஊஸஃ | தைவோதாசன் என்பவனுலழைக் கப்பட்டதுமாகிய |
| अग्निः | அஂஃ | அக்கினி |
| मातरं | ஊதரஂ | அன்னையைப் |
| अनुप्रविवावृते | அநுப்ரவிவாவ்ருதெ | இனிது ஏவுகின்றது |
| (दिवो दासः) | (திவொ ஊஸஃ) | (திவோதாச ரிஷி) |
| (एनं) | (ஏநஂ) | (இவ் வக்கினியை) |
| मज्मना | ஃஜநா | ஆற்றலோடு |
| आजुहाव | ஆஜுஹாவ | அழைத்தனர். |
| (तस्मात्) | (தஸ்ாத்) | (ஆதலின்) |
| नाकस्य | நாகஸ்ய | சுவர்க்க சம்பந்தமாகிய |
| शर्मणि | ஶஂணி | தனதிடத்தில் |
| तस्थौ | தஸ்ள | நிலைத்திருக்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—7. சௌபரி ரிஷி.

பிரகாசமானதும், மிகுந்த ஐசுவரியமுடையதும், திவோதாச கப்பட்டதுமாகிய அக்கினி, உலகனைத்தையுந் தாங்கலின் ... அப்பூமியைத் தேவர்கட்கு அவி தாங்கும்பொருட்டு நன்கு செலு... கின்றது. எக் காரணத்தால் இவ் வக்கினியைத் திவோதாசரிஷி ஆற்... டழைத்தாரோ, அக் காரணத்தாலே இவ் வக்கினி சுவர்க்க சம்பந்... தனது உறைவிடமென்னும் வீட்டின்கண் இருந்துகொண்டிருக்கி...

'अग्निर्देव इन्द्रः' எனவும், 'नाकस्य शर्मणः' எனவுங் கி...
'अग्निर्देवां अच्छ' எனவும், 'नाकस्य सा...वि' எனவும் ...

குறிப்பு.—தைவோதாசன் என்பவனால் அழைக்கப்பட்ட அக்கினியே சுவர்க்க லோகத்திலும் நிலைத்திருக்கின்றதென்பது பாடியக் கருத்து.

தைவோதாசன் என்றதால் மின்னற் சம்பந்தமாகிய அக்கினி கூறப்பட்டிருக்கிறது. அவ்வக்கினியும் ஆற்றலால் மேக முதலியவைகளைப் பிளந்துகொண்டு வந்துவிட்டது, அஃது இப்போது தனதிடத்தில் நிலைத்திருக்கின்றது என்று சொள்வர் மேனாட்டாசிரியர்.

## மந்திரம் 8.

கீதம்—சௌக்கிரதவம்.

२ ३ १ २र ३ १ २ ३ १ २ ३ १ २र
52. *अधज्मो अधवा दिवो बृहतो रोचना दधि ।
३ १ २ ३२२र ३२उ ३ १ २
अया वर्द्धस्व तन्वा गिरा ममा जाता सुक्रतो पृण ॥ ८ ॥

இருக்கு 8-1-18.

அயஜ்மோ அயவா திவோ ப்ருஹதோ ரோசநா தயி ।
அயா வர்த்ஸ்வ தந்வா கிரா மமா ஜாதா ஸுக்ரதோ ப்ருண ॥

அந்வயம்.

हे इन्द्र! अध, ज्मः, अधवा, दिवः, बृहतः, रोचनात्, अधि (आगत्य)
अयातन्वा (तथा) ममा, गिरा, वर्द्धस्व, हे सुक्रतो! जाता पृण ॥

பதவுரை.

इन्द्र!

| | |
|---|---|
| ஹே இந்த்ர! | ஐசுவரியமுள்ள அக்கினியே! |
| அத | இப்பொழுது |
| ஜ்ம: | பூமியினின்றும் |
| அயவா | அஃதன்றி |
| திவ: | அந்தரிக்ஷத்தினின்றும் |
| ப்ருஹத: | மகத்தாகிய |
| ரோசநாத் | நட்சத்திரப் பிரகாசத்தின்றும் (வருவாயாக) |
| (ஆகத்ய) | (வந்து) |
| அதி | அதினின்றும் |
| அயா | இந்த |
| தந்வா (தயா) | விரிந்த (அத்தன்மைய) |

*திருந்த பாடம்.

| | | |
|---|---|---|
| **मम गिरा** | ஊா கிரா | எனது துதியால் |
| **वर्द्धस्व** | வ ஃத ஸ்வ | விருத்தியடைவாயாக. |
| **हे सुक्रतो!** | ஹெ ஸு க்ரதொ ! | நற்கருமமுடைய இந்திர ! (நீ) |
| **जाता** | ஜாதா | சனங்களைத் |
| **पृण** | வ்ருண | திருப்தி பண்ணுவாயாக. |

சாயண பாடியம்

கண்டம்—5. இருக்கு—8. மேதா திதியும், மேத்தியா திதியும் ரிஷிகள்.

இந்திரனே ! (நீ) மக்கள் நடந்துகொண்டிருத்தலின் 'ஜ்மா என்றது பூமியாம். அப் பூமியினின்றும், மற்றும் அந்தரிட்சத்தினின்றும், பெரும் விளக்கமாகிய நக்ஷத்திரத்தினின்றும், அல்லது சுவர்க்கத்தினின்றும் இப்போது வந்து, அங்கிருந்துகொண்டு பரவிய எனது இத்தோத்திரத்தால் வளருவாயாக. நற்கருமமுடைய இந்திர ! எம்மவர்களை வேண்டிய பலன்களால் திருப்தி பண்ணுவிப்பாயாக. (8)

குறிப்பு.—'जाता' என்றதற்கு புத்திரன் எனக் கொண்டனர் ஆங்கிலம் மொழி பெயர்த்தவர். வேதிகையின் பரிமார்ச்சனத்தால், தேகமே அக்கினி வளர்வதற்கோர் சாதனமென்பது இவரதுடன்பாடு. துதியால் வளருமென்பதற்கோ, "துதிக்கப்பட்ட தேவதைகளை வளர்கின்றார்கள்" என்னுஞ்சுருதியே பிரமாணமாம்.

## மந்திரம் 9.

கீதம்—காண்வம்.

१२ ३२र ३१ २र ३२
53. **कायमानो वना त्वं यन्मातृ रजगन्नपः ।**
१ २र ३ १२ ३१२३ २ ३२उ ३ १२
**न तत्ते अग्ने प्रमृषे निवर्तनं यद्दूरे सन्नि*हाभुवः ॥ ९ ॥**

இருக்கு 3-9-2

காயமாநொ வநா த்வம் யந்மாத்ரூ ரஜகந்நப: ।
ந தத்தெ அக்நெ ப்ரம்ருஷெ நிவர்த்தநம் யத்தூரெ ஸந்நிஹா பு⁴வ:॥

அங்வயம்.

अग्ने! वना, (भक्षितुं), कायमानः, त्वं, यत्, (तानि विहाय), मातृः, अजगन्, तत्, ते, निवर्तनम्, (भवति) 'सन', प्रमृषे, यत्, दूरे, सन्, इहं, अभुवः ॥

* इदाभवः என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| **अग्ने!** | அக்நே! | அக்கினியே ! |
| **वना** | வநா | வனங்களைப் |
| **(भक्षितुं)** | (ஃக்ஷிதும்) | (புசிப்பதற்கு) |
| **कायमानः** | காயமாநஃ | விரும்பிய |
| **त्वं** | த்வம் | நீ |
| **(तानि विहाय)** | (தாநி விஹாய) | அவைகளை யொதுக்கிவிட்டு |
| **मातॄः** | மாத௄ஃ | மாதாவாகிய நீரில் |
| **अजगन्** | அஜகந் | மூழ்கிக்கிடக்கின்றாய். |
| **तत् ते निवर्तनं** | தத் தே நிவர்த்தநம் | அஃது னக்கு இயற்கையாயுள்ளதாந் தன்மை |
| **स नमृष्ये** | ந நம்ருஷ்யே | அதைப் பொறுக்கமாட்டேன். |
| **यत् दूरे सन्** | யத் தூரே ஸந் | எதனால் எனின்? தூரத்திலிருந்தும் (நீ) |
| **इह अभुवः** | இஹ அஃபுவஃ | இங்குண்டாகின்றாயோ, (அதனால்) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—9. விசுவாமித்திர ரிஷி.

அக்கினியே! ஆரண்யங்களை யுண்பதற்கு விரும்பிய நீ, யாது கருதி அவ் வாரண்யங்களை வேண்டாது, அன்னை வடிவாகிய அப்புவின்கண் போயிருக்கின்றனை? அதாவது:—சலத்தின்கண் பிரவேசமானதால் சாந்தனை இருக்கின்றாய் என்பதாம். ஆகையால் உனக்கு உண்மையாகிய இருப்பு அதன் கண்ணேயாம். ஆதலின், (அக்கினிக்கு) அழிவாந்தன்மை குறிக்கப்படுகின்றது. (யான்) அதைச்சகிக்கமாட்டேன். காரணம் என்னையெனின்! தூரத்தில் வெளிப்படாத் தன்மையோடிருக்கின்ற நீ இங்கு என்னுடைய அரணிக் கட்டைகளைக் கடைதலாற் கணப்போதில் எனக்கருகிலுண்டாகின்றாயாதலின். நீ தூரத்திலிருத்தல் எங்கட்குப் பிரியப்படா எனல் முடிந்த பொருள். (9)

குறிப்பு.—'इहा भुवः' எனவும், 'अभवः' எனவும், வடமொழிப்பாடம். அக்கினியே! சலத்திலிருந்தும், நீ அழிந்துபோகமாட்டாய். ஏனெனில்? எங்களிடத்தில் அரணிக்கட்டையிலுண்டாகின்றாயாதலின் என்பர் மேனாட்டறிஞர்.

## மந்திரம் 10.

கீதம்—மானவம்.

१ २र३ १२ ३ २ ३ १ २३ १ २
54. नित्वा मग्ने मनुर्दधे ज्योतिर्जनाय शश्वते ।
३२ ३ १२ ३१२ ३ १ २र३ १ २ ३ १२
दीदेथ कण्व ऋतजात उक्षितोयं नमस्यन्ति कृष्टयः ॥ १० ॥

இருக்கு 1-36-19.

𑌨𑌿𑌤𑍍𑌵𑌾 𑌮𑌗𑍍𑌨𑍇 𑌮𑌨𑍁𑌰𑍍𑌦𑌧𑍇 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌯 𑌶𑌶𑍍𑌵𑌤𑍇 ।
𑌦𑍀𑌦𑍇𑌥 𑌕𑌣𑍍𑌵 𑌋𑌤𑌜𑌾𑌤 𑌉𑌕𑍍𑌷𑌿𑌤𑍋𑌯𑌂 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍃𑌷𑍍𑌟𑌯𑌃 ॥

அந்வயம்.

हे अग्ने! मनुः, ज्योतिः, त्वां, शश्वते, निदधे, (त्वां), ऋतजातः,
उक्षितः (सन्) कण्वे, दीदेथ, यं, कृष्टयः, नमस्यन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | 𑌹𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇! | அக்கினியே! |
| मनुः | 𑌮𑌨𑍁𑌃 | பிரஜாபதியானவர் |
| ज्योतिः | 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 | பிரகாசமாகிய |
| त्वां | 𑌤𑍍𑌵𑌾𑌂 | உன்னை |
| शश्वते जनाय | 𑌶𑌶𑍍𑌵𑌤𑍇 𑌜𑌨𑌾𑌯 | பல்வகையாகிய எசமானன் பொருட்டுத் |
| निदधे | 𑌨𑌿𑌦𑌧𑍇 | தாபித்தனர். |
| (त्वं) | (𑌤𑍍𑌵𑌂) | (நீ) |
| ऋतजातः | 𑌋𑌤𑌜𑌾𑌤𑌃 | வேள்வியாலுண்டானவனும் |
| उक्षितः (सन्) | 𑌉𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 (𑌸𑌨𑍍) | அவியால் நிறைந்தவனுயுமிருந்து |
| कण्वे | 𑌕𑌣𑍍𑌵𑍇 | கண்ணுவன் என்னும் என்னிடத்தில் |
| दीदेथ | 𑌦𑍀𑌦𑍇𑌥 | விளங்கிக்கொண்டிருக்கின்றாய். |
| यं | 𑌯𑌂 | எவ் வக்கினியை |
| कृष्टयः | 𑌕𑍃𑌷𑍍𑌟𑌯𑌃 | மனிதர்கள் |
| नमस्यन्ति | 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | வணங்குகின்றார்களோ, (அத்தகைய நீ) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—10. கண்ணுவ ரிஷி.

அக்கினியே! பிரகாச வடிவமாகிய உன்னை அநேக விதமான எசமானர்கட்காகப் ‘பிரசாபதி’ என்னும் மனுவானவர் தேவாராதனை பண்ணுமிடத்தில் தாபித்தனர். அக்கினியே! நீ நிமித்த வடிவ வேள்வியா

லுண்டானவனுகவும், அவிகளால் (தேவ உணவுகளால்) திருப்தி யுள்ளவனு மாகவுமிருந்து, கண்ணுவ ரிஷியாகிய என்னிடத்தில் விளக்கமுடையவனுக விருக்கின்முய். எவ் வக்கினியை மக்கள் இறைஞ்சுகின்றூர்களோ, அத் தகைய நீ விளங்கிக்கொண்டிருக்கின்று யென்பதோடு மேலே அந்வயித்துக் கொள்க. (10)

குறிப்பு.—'शश्वते' என்னும் மூலபதம் அநேகம், என எண்ணின் பரியாயச் சொல்லாய் நின்றது.

## ஐந்தாவது கண்டம் முற்பாதி

முற்றும்.

---

## ஆருவது கண்டம்.

---

## பிரபாடகம்—1. அத்தியாயம்—1.

எட்டு மந்திரங்களாலானது.

---

### மந்திரம் 1.

கீதம்—அக்கினி ரிஷி திரவிணம்.

३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
55. देवो वो द्रविणोदाः पूर्णां * विवष्ट्वासिचम् ।
१ २ ३ २ ३१२ ३ १ २र ३ १ २
उद्वासिञ्चध्वमुपवा पृणध्वमादिद्वो देव ओहते ॥ १ ॥

இருக்கு 7-17-11.

தெவொ வொ த்ரவிணொதாஃ பூர்ணாம் விவஷ்ட்வாஸிசம் ।
உத்வாஸிஞ்சத்வமுபவா ப்ருணத்வமாதித்வொ தெவ ஓஹதெ ॥

அந்வயம்.

द्रविणोदाः, देवः, वः, पूर्णां, आसिचं, (च) (स्रुचं), विवष्टु, (अतः)
उत् सिञ्चध्वं, वा, उपपृणध्वं, वा, आदिद्, देवः, वः, ओहते ॥

---

* विवष्ट्यासिचम् , என்பது இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| द्रविणोदाः | த்ரவிணோதா: | தனங்கொடுப்பதாகிய |
| देवः | தேவ: | அக்கினி |
| वः | வ: | உங்களுடைய |
| पूर्णां | பூர்ணாம் | நெய் நிறைந்ததும், |
| आसिचं (च) | ஆஸிசம் (ச) | சோமரசத்தா னனையப்பட்டதும் ஆகிய |
| (स्रुचं) | (ஸ்ருசம்) | (அகப்பை விசேடத்தை) |
| विवष्टु | விவஷ்டு | விரும்புகின்றது |
| (अतः) | (அத:) | (இதனால்) |
| उत् सिञ्चध्वं | உத் ஸிஞ்சத்⁴வம் | நிறைப்பீர்களாக. அல்லது தெளிப்பீர்களாக. |
| उपपृणध्वं | உபப்ருணத்⁴வம் | கொடுப்பீர்களாக. |
| आदिद् | ஆதித் | அதன்பின்பே |
| देवः | தேவ: | அக்கினி |
| वः | வ: | உங்களைத் |
| ओहते | ஓஹதே | தழைக்கச்செய்யும். |

## சாயண பாடியம்.

**கண்டம்—6. இருக்கு—1. வசிட்ட ரிஷி.**

திரவியத்தைத் தருவதாகிய அக்கினி, அவியால் நிறையப்பட்டதும், சோமரசத்தால் நனையப்பட்டதுமாகிய சுருவை (ஆகுதி கொடுப்பதற்குக் கட்டையாற் செய்துள்ள முச்சாணளவு அகப்பை விசேடத்தை) விரும்புகின்றது. ஆதலின் சோமரசத்தால் இருக்கோதுவானுடைய அகப்பை விசேடத்தை நிறையச் செய்வீர்களாக. அக்கினிக்குச் சோமத்தைக் கொடுப்பீர்களாக. பின்னரே அக்கினி உங்களைத் தழைக்கச் செய்யும். (1)

**குறிப்பு:**—மூலத்தில் சோமத்தால் நிறைப்பீர்களாக, அல்லது தெளிப்பீர்களாக என்பதிலுள்ள 'அல்லது' என்னும் விகற்பப் பொருள் கொண்ட 'வா' என்னும் சொல் சேர்க்கைக்கண் வந்தது வரவே, சோமத்தாற் சுருவையும் நிறைப்பீர்களாக. சோமத்தையும் அக்கினிக்குக் கொடுப்பீர்களாக, என்னும் பொருளைத் தந்து நின்றது.

## மந்திரம் 2.

கீதம்—அக்கினி ரிஷி வார்ஹஸ்பத்தியம்.

२३ १२३ ३ २३क२र ३१ २
56. प्रैतु ब्रह्मणस्पतिः प्रदेव्येतु सूनृता ।
१ २ ३१ २र ३ १ २ ३ २ ३ १ २
अच्छा वीरं नर्य्यं पंक्तिराधसं देवा यज्ञं नयन्तु नः ॥ २ ॥

இருக்கு 1-40-3.

𑌪𑍍𑌰𑍈𑌤𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌪𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌦𑍇𑌵𑍍𑌯𑍇𑌤𑍁 𑌸𑍂𑌨𑍃𑌤𑌾 ।
𑌅𑌚𑍍𑌛𑌾 𑌵𑍀𑌰𑌂 𑌨𑌰𑍍𑌯𑍍𑌯𑌂 𑌪𑌂𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌧𑌸𑌂 𑌦𑍇𑌵𑌾 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌨𑌯𑌨𑍍𑌤𑍁 𑌨𑌃 ॥

### அந்வயம்.

ब्रह्मणस्पतिः, प्रैतु, सूनृता देवी, प्रैतु, देवाः, वीरं, प्रैतु (दूरे प्रेरयन्तु,) नर्य्यं, पंक्तिराधसं, (तं) यज्ञं, अच्छ, नः, नयन्तु ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| ब्रह्मणस्पतिः | 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌪𑌤𑌿𑌃 | அன்னத்திற்கிறைவன் |
| प्रैतु | 𑌪𑍍𑌰𑍈𑌤𑍁 | இனிது கிடைப்பானாக. |
| सूनृता देवी | 𑌸𑍂𑌨𑍃𑌤𑌾 𑌦𑍇𑌵𑍀 | இனிமை, மெய்மை வடிவாகிய வாக்குத் தேவியார் |
| प्रैतु | 𑌪𑍍𑌰𑍈𑌤𑍁 | கிடைப்பாராக. |
| देवाः | 𑌦𑍇𑌵𑌾𑌃 | தேவர்கள் |
| वीरं | 𑌵𑍀𑌰𑌂 | விரோதியை |
| प्रैतु (दूरे प्रेरयन्तु) | 𑌪𑍍𑌰𑍈𑌤𑍁 (𑌦𑍂𑌰𑍇 𑌪𑍍𑌰𑍇𑌰𑌯𑌨𑍍𑌤𑍁) | தூரத்தோட்டுவார்களாக. |
| नर्य्यं | 𑌨𑌰𑍍𑌯𑍍𑌯𑌂 | மனிதர்க்கினிதாகியதும் |
| पंक्तिराधसं | 𑌪𑌂𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌧𑌸𑌂 | வரிசையானிறைந்ததுமாகிய |
| (तं) यज्ञं | (𑌤𑌂) 𑌯𑌜𑍍𑌞𑌂 | (அவ்) வேள்வியை |
| अच्छ | 𑌅𑌚𑍍𑌛 | நேர்க்கமாய் |
| नः | 𑌨𑌃 | எங்களை |
| नयन्तु | 𑌨𑌯𑌨𑍍𑌤𑍁 | அடையச் செய்வார்களாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—2. கண்ணுவ ரிஷி.

அன்னத்திற்குத் தலைவனாகிய தேவன் எங்கட்குக் கிடைக்குக. அன்புண்மை வடிவாகிய சரசுவதி தேவியார் எங்கட்குக் கிடைப்பாராக. பிரம

ணப்பதி முதலிய தேவதைகள் சத்துருவை அடியோடு விலக்குவனவாகுக. மனிதர்கட்கு இனியதும் அவி வரிசைகளா னிரம்பியதுமாகிய அவ் வேள்வியை நோக்கமாய் எங்களை யடையுமாறு செய்வனவாகுக.

குறிப்பு:—பிரமணப்பதி = என்பது அன்னத்திற்குத் தலைமையாகியதோர் தேவதை. இதையே அக்கினியெனவும். தேவியை இதன் மனையாளெனவுங் கொள்வர் மேனாட்டாசிரியர். எவ்வேள்வியின்கண் முப்போதும் அவி கொடுக்கப்படுகின்றதோ? அஃது 'அவி வரிசை' எனப்படும். எவ் வேள்வியின்கண் முப்போதும் தென்புலத்தார்க்குரிய பொருளை ஆகுதி செய்யப்படுகின்றதோ? அது 'நராசம்சம்' எனப்படும். எவ் வேள்வியில் பசுவிற்காக, முப்போதும் எக்ஞம் பண்ணப்படுகின்றதோ? அது 'சவன வரிசை' எனப்படும். பந்தி (வரிசை) இவ்வாற்றால் மூவகை காண்க.

குறிப்பு:—வீரம் என்பதற்கு, வீரனைத் தரும் வேள்வி யெனவும், இவ் வேள்வி, பசுவின் (மறியின்) குடலிலோர் பாகத்தை யெடுத்து அவி கொடுக்கும் யாக மெனவும் மேனாட்டு மொழி பெயர்ப்புக் கூறுகின்றது.

### மந்திரம் 3.

கீதம்—வசிஷ்ட ரிஷி லிங்கம்.

३ २ ३ १ २ ३२३ १ २ ३ १ ३२३ २
57. ऊर्ध्व ऊषुण ऊतये तिष्ठा देवो न सविता ।
३ २ २र ३ १ २ ३ २३ १ २
ऊर्ध्वो वाजस्य सनिता यदञ्जिभिर्वाघद्भिर्विह्वयामहे ॥ ३ ॥

இருக்கு 1-36-13.

𑌊𑌰𑍍𑌧𑍍𑌵 𑌊𑌷𑍁𑌣 𑌊𑌤𑌯𑍇 𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 𑌦𑍇𑌵𑍋 𑌨 𑌸𑌵𑌿𑌤𑌾 ।
𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑍋 𑌵𑌾𑌜𑌸𑍍𑌯 𑌸𑌨𑌿𑌤𑌾 𑌯𑌦𑌞𑍍𑌜𑌿𑌭𑌿𑌰𑍍𑌵𑌾𑌘𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌹𑍍𑌵𑌯𑌾𑌮𑌹𑍇 ॥

அந்வயம்.

(हे यूप!,) वा, (यूपस्थिताग्ने,) नः, ऊतये, ऊर्ध्व तिष्ठा, सविता न, ऊर्ध्वः, वाजस्य, सनिता, (भविष्यसि,) यत्, अञ्जिभिः, वाघद्भिः (सह,) विह्वयामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे यूप!) | (𑌹𑍇 𑌯𑍂𑌪!) | வேள்விப் பசுக்கட்டுந் தறியே! |
| वा | வா | அல்லது |
| (यूपस्थिताग्ने!) | (𑌯𑍂𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌗𑍍𑌨𑍇!) | (வேள்வித் தம்பத்திலுள்ள அக்கினியே!) |
| नः | 𑌨𑌃 | எங்களைக் |
| ऊतये | 𑌊𑌤𑌯𑍇 | காப்பாற்றுதற்பொருட்டு |

| | | |
|---|---|---|
| ऊर्ध्व तिष्ठा | ஊர்த்வ திஷ்டா | உயரமாயிருப்பாயாக. |
| सविता न | ஸவிதா ந | சூரியன் போல் |
| ऊर्ध्वः | ஊர்த்வ: | உயரத்திலிருந்து |
| वाजस्य | வாஜஸ்ய | அன்னத்தைக் |
| सनिता | ஸநிதா | கொடுப்போனாய் |
| (भविष्यसि) | (பவிஷ்யஸி) | (இருப்பாயாக) |
| यत् | யத் | எக்காரணத்தால் என்னின்? |
| अञ्जिभिः | அஞ்ஜிபி: | பூசிப்பவர்களோடும் |
| वाघद्भिः (सह) | வாகத்பி: (ஸஹ) | ஏற்றுக்கொள்வோர்களோடும் |
| विह्वयामहे | விஹ்வயாமஹே | இனிதழைக்கின்றோம் (ஆதலின்). |

## சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—3. கண்ணுவ ரிஷி.

வேள்விமறி பிணிக்குந் தடியே! அல்லது அவ் வேள்வித் தடியிலுள்ள அக்கினியே! எங்களைப் பாதுகாக்கும் பொருட்டு உயர்ந்து நிற்பாயாக. சூரிய பகவான் வானில் உயர்ந்திருப்பதுபோன்று அன்னத்தைக் கொடுப்போனாய் உயரிய நிலையிலிருப்பாயாக. யாது நிமித்தத்தாலெனின்? வேள்வியால் பசுக்கட்டுக் தறிக்கு ஆராதனை செய்பவர்களோடும், வேள்வியை நடத்து கின்ற வேட்போர்களோடும், அன்னங் கொடுத்தற் பொருட்டு உன்னைச் சிறப்பித்து அழைக்கின்றோம். ஆகையால் அன்னத்தைக் கொடுப்போ னாகுவாயென மேலே அந்வயித்துக்கொள்க. (3)

## மந்திரம் 4.

கீதம்—வைஸ்பார்த்தனம்.

२३ ३१ २२ ३ २ ३ १ २ ३ १२

58. प्रयो * राये निनीषति मर्त्तो यस्ते वसो दाशत् ।

२ ३१ २ ३ २ ३ १ २ ३ १२

स वीरं धत्ते अग्न उक्थशंसिनं त्मना सहस्रपोषिणम् ॥ ४ ॥

இருக்கு 8-103-4.

ப்ரயோ ராயே நிநீஷதி மர்த்யோ யஸ்தே வஸோ தாஶத் |
ஸ வீரம் தத்தே அக்ந உக்தஶம்ஸிநம் த்மநா ஸஹஸ்ரபோஷிணம் ||

அந்வயம்.

हे वसो! अग्ने!, यः, राये, प्रनिनीषति, यः मर्त्तः, ते, दाशत्, सः, उक्थशंसिनं, त्मना, सहस्रपोषिणं, वीरं, धत्ते ॥

---

* प्रियं राये निनीसति, என்பது இருக்கு.

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वसो अग्ने ! | ஹெ வஸொ அமெ் ! | காருகபத்திய அக்கினியே ! |
| यः | யஃ | எவன் |
| राये | ராயெ | தனத்தின் பொருட்டு |
| प्रणिनीषति | ப்ரணி நீஷதி | நினக்குக்களிப்புண்டாக்க விரும்புகின்றனனோ ! |
| यः मर्तः | யஃ உதஃ | எம் மனிதன் |
| ते | தெ | உனக்கு |
| दाशत् | தாமத் | அவி கொடுக்கின்றானோ, |
| (सः) | (ஸஃ) | (அவன்) |
| उक्थशंसिनं | உகூமஂஸிநஂ | சாத்திரம் படிப்பவனும் |
| त्मना | தூநா | தன்னால் |
| सहस्रपोषिणं | ஸஹஸ்ரபொஷிணஂ | ஆயிர வரைக் காப்பவனுமாய |
| वीरं | வீரஂ | புத்திரனை |
| धत्ते | யெத்தெ | அடைகின்றான். |

### சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—4. சௌபரி ரிஷி.

'வாஸக' என்னுங் காருகபத்திய அக்கினியே! தனத்தின் பொருட்டு யார் உன்னைப் போற்றுகின்றாரோ, மற்றும், யார் நினக்குக் களிப்புண்டாக்க வேண்டுமென விரும்புகின்றாரோ, அம் மனிதர், நூலுணர்பவனும், ஆயிரவரைப் பரிபாலிக்கத்தக்க தனமுடையவனுமாகிய ஒரு புத்திரனை யடைகின்றார். (4)

குறிப்பு.—'प्रयो राये निनीषति' 'प्रियं राये निनीषति' எனவும் பாடபேதம். ஈண்டு 'उक्थशंसिनं' என்பதற்குத் தோத்திரமென்னும் ஆயுதமுடையானும், அதாவது தோத்திர வடிவ அத்திரத்தாற் சத்துருவைக் கொல்லுமாற்றலுடையானும் எனப் பாடியத்தில் கல்கத்தா பிரதியில் பாடபேதங் காணப்படுகின்றது. 'प्रणिनीषति' என்றதற்கு ஆராதனை வீட்டிலிருந்து வேள்விச்சாலைக்குக் கொண்டு போக விரும்புகின்ற மனிதர்; என்று பொருள் கூறுவாருமுளர்.

## மந்திரம் 5.

ரிதம்—ஏதவிராக்கிரம்.

१ २ ३ १ २३ २ ३ १ २ ३ १ २

59. प्रवो यह्वं पुरूणां विशां देवयतीनाम् ।

३ २ ३ २ ३ १ २ ३ २उ ३ २ ३ १२

अग्निꣳ सूक्तेभि *र्वचोभिर्वृणीमहे यꣳ समि†दन्यं इन्धते ॥ ५ ॥

இருக்கு 1-36-1.

ப்ரவொ யஹ்வம் புரூணாம் விஶாம் தெவயதீநாம் ।
அக்நிம் ஸூக்தெபி வசொபி வ்ருணீமஹெ யம் ஸமிதந்யம் [இந்தெத ॥

அந்வயம்.

(हे ऋत्विचः ! यजमानाः !) देवयतीनां, पुरूणां, विशां, वः (अनुग्रहाय) यह्वं अग्निं, सूक्तेभिः, वचोभिः, प्रवृणीमहे ! अन्ये, इत्, यं, समिन्धते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विचः!) | (ஹெ ருத்விசஃ!) | (வேட்போர்களே!) |
| (यजमानाः!) | (யஜமாநாஃ!) | (தலைவர்காள்!) |
| देवयतीनां | தெவயதீநாம் | தேவர்களைப் பூசிக்க விரும்பும் |
| पुरूणां | புரூணாம் | பலவகைப் |
| विशां | விஶாம் | பிரசைகளான |
| वः | வஃ | உங்கட்கு |
| (अनुग्रहाय) | (அநுக்ரஹாய) | அநுக்கிரகமாதற்பொருட்டு |
| यह्वं अग्निं | யஹ்வம் அக்நிம் | மகத்தாகிய அக்கினியை |
| सूक्तेभिः | ஸூக்தெபிஃ | நற்பாடல் வடிவ |
| वचोभिः | வசொபிஃ | வாக்கியங்களால் |
| प्रवृणीमहे | ப்ரவ்ருணீமஹெ | இனிது போற்றுகின்றோம். |
| अन्ये इत् | அந்யெ இத் | ஏனைய ரிஷிகளும் |
| यं | யம் | எவ்வக்கினியை |
| समिन्धते | ஸமிந்ததெ | நன்கு வளர்த்தனர்களோ? (அவ்வக்கினியை). |

ஸாயண பாஷ்யம்.

கண்டம்—6. இருக்கு—5. கண்ணுவ ரிஷி.

இருத்துவிக்குகாள்! எசமானர்காள்! தேவர்களை ஆராதிக்க விருப்பமுள்ள பலவிதப் பிரசைகளான உங்கட்கு அனுக்கிரகமாகுமாறு

* वचोभिरीमहे என்பது இருக்கு. † अन्यं, என்பது अन्ये, எனத் திரிந்தது.

மகத்தாகிய அக்கினியை இனிய பாக்கள் வடி
தோத்திரம் பண்ணுகின்றோம், மற்றைய ரிஷிகளுடைய ஜார!, त्वं,
நன்றாக வளர்த்தார்களோ? அவ் வக்கினியை யென மே
கொள்க. वचोभिर्वृणीमहे, अन्य इन्धतम्, எனச் சந்தமோதுவாரும் (धनं) यासिच॥
अन्य इच्छते, என இருக்கோதுவாருங் கொள்வர்.

குறிப்பு.—'प्रवृणीमहे' என்பதற்கு இரக்கின்றேன், எனக்கொண்டு 'திரவி யத்தை' என்பது எஞ்சி நின்றது எனவும் சில பிரதியில் பாடிய வேறு பாடு காணப் படுகின்றது. 'यह्वं' = மகத்து. 'इत्' என்பதற்கு, உவமையும், தே பொருளென்பர் சிலர்.

## மந்திரம் 6.

கீதம்—மகாரிஷி தோகம்.

३२३ २ ३ २ ३ २ ३ १ २र
60. **अयमग्निः सुवीर्य्यस्येशे हि सौभगस्य**
३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
**राय ईशे स्वपत्यस्य गोमत *ईशे वृ**

அயமக்நிஃ ஸுவீர்யஸ்யேஶே ஹி ஸௌபகஸ்ய
ராய ஈஶே ஸ்வபத்யஸ்ய கோமத ஈஶே வ்ருத்ரஹதாநாம் ॥

அந்வயம்.

**अयं, अग्निः, सुवीर्य्यस्य, ईशेहि, सौभगस्य, ईशे, रायः, ईशे, स्वपत्यस्य (च), ईशे, गोमतः ईशे, वृत्रहथानां ईशे ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **अयं अग्निः** | அயம் அக்நிஃ | இவ் வக்கினி |
| **सुवीर्य्यस्य** | ஸுவீர்யஸ்ய | பேராற்றலுடையானுக்கும் |
| **ईशेहि** | ஈஶேஹி | இறைவனாகின்றது. |
| **सौभगस्य** | ஸௌபகஸ்ய | நற்பாக்கியமுடையானுக்கும் |
| **ईशे** | ஈஶே | இறைவனாகின்றது. |
| **रायः** | ராயஃ | தனத்திற்கும் |
| **ईशे** | ஈஶே | இறைவனாகின்றது. |
| **स्वपत्यस्य (च)** | ஸ்வபத்யஸ்ய (ச) | நற்புத்திரனுக்கும் |
| **ईशे** | ஈஶே | இறைவனாகின்றது. |

* ईशे महः, என்பது இருக்கு.

...8 கோக்களுடையார்க்கும்
...ம்ப இறைவனுகின்றது.
வரத்ரூஹயா நா... விரோதியாகிய பாவநாசங்கட்கும்
...ம்ப இறைவனுகின்றது.

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—6. பிருஹதீசந்தம். இதனல் (இம் மந்திரத்தால்) 'ஆத்கிலர் துதிக்கின்றார்'. ஆராதித்தற்குரியதாந் தன்மையால் விர... சுட்டிக் காட்டப்படுகின்றது, 'இவ்வக்கினி யென்பது.

...! நீ நல்ல ஆற்றலுடையார்க்கும், பாக்கியமுடையார்க்கும் ...ல்லாவற்றிற்கும் 'ஆற்றல்' ஆரோக்கிய காரணமாத ...த்தை யுண்டுபண்ணலாலும் என்க.) அங்ஙனமே ...ாயுடையார்க்கும், நற்புத்திரர்களுக்கும், தனங்கட்கும் ...ிர, பசு, முதலியவைகளைக் குறித்துச் செய்யப்பட்ட ...வானுதல்பற்றி அதற்குச் சாமியாய் விளங்கலால் ...என்பதாம்). அவ் வாறே இத்தன்மை வாய்ந்த அக் ...வடிவ பாவநாசத்திற்கும் ஈசனுகின்றாய். கருமங்களை ...ா வெங்கட்கு, நினதனுக்கிரகத்தாற் பாவந் தொலை ...அதற்கும் நீயே இறைவனுகின்று பென்பதாம். (6)

குறிப்பு.—பண்டைக்காலத்தில் கோ முதலியவைகளே தனங்களாயிருந்தன. இக்காலத்திலோ, பசுக்காத்தல், தாழ்ந்தோர் தொழிலாமென வழக்குமாயிற்று. இதுவே தாழ்ந்த நிலைமைக்குங் காரணம்.

## மந்திரம் 7.

ீதம்—வசிட்ட ரிஷி சமந்தம், வருண ரிஷி சமந்தம்.

१ २ ३ १२३ १ २र ३२
61. त्वमग्ने गृहपतिस्त्वꣳ होता नो अध्वरे ।
१ २र ३ १२ ३ २ ३ १ २ ३ १ २
त्वं पोता विश्ववार प्रचेता *यक्षि यासि च वार्य्यम् ॥ ७ ॥

இருக்கு 7-16-5.

ஸ்வமக்நே க்ருஹபதிஸ்ஸ்வம் ஹோதா நோ அத்வரே ।
ஸ்வம் போதா விஸ்வவார ப்ரசேதா யக்ஷி யாஸிச வார்ய்யம் ॥

* यक्षि वेषिच, என்பது இருக்கு.

அந்வயம்.

हे अग्ने!, नः, अध्वरे, त्वं, गृहपतिः, त्वं, होता, हे विश्ववार!, त्वं, पोता, (अतः) प्रचेताः, (त्वं) वार्य्यं, हविः, यक्षि, (अस्माकं), (धनं) यासिच॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்நே ! | அக்கினியே ! |
| नः | நஃ | எங்களுடைய |
| अध्वरे | அத்வரே | வேள்வியில் |
| त्वं | த்வம் | நீ |
| गृहपतिः | க்ருஹபதிஃ | தலைவனாகின்றாய். |
| त्वं | த்வம் | நீ |
| होता | ஹோதா | அழைப்போனாகின்றாய். |
| हे विश्ववार! | ஹே விஶ்வவார ! | உலகந் தொழப்பட்டோய் ! |
| त्वं | த்வம் | நீ |
| पोता | போதா | போதாவெனும் பெயர்பூண்ட வேட்போனாகின்றாய். |
| (अतः) त्वं | (அதஃ) த்வம் | இதனால் நீ |
| प्रचेताः | ப்ரசேதாஃ | நுண்ணறிவாளன். |
| वार्य्यं (हविः) | வார்ய்யம் (ஹவிஃ) | போற்றத்தக்க அவியை |
| यक्षि | யக்ஷி | வேட்பாயாக. (கொடுப்பாயாக). |
| (धनं) | (தநம்) | தனத்தை |
| (अस्माकं) | (அஸ்மாகம்) | எங்கட்கு |
| यासि च | யாஸி ச | அடைவிப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—7. பிருஹதீ சந்தம், வசிட்ட ரிஷி.

அக்கினியே ! நீ எங்களுடைய வேள்வியில் தலைவனா யிருக்கின்றாய். யாவருமிறைஞ்சத்தக்க அக்கினியே ! நீயே போதா என்னும் நாமம் பூண்ட வேட்போனா யிருக்கின்றாய். இதனால் நீ மிக்க அறிவுள்ளவனாகையால் கொண்டாடத்தக்க அவியை (தேவ உணவை) வேட்பாயாக. எங்கட்குத் தனத்தையும் பெறுவிப்பாயாக. ‘यक्षे यासिच’, என்பர் சந்தமோதுவார், ‘यक्षि वेषिच’ என்பார் இருக்கோதுவார். (7)

குறிப்பு.—प्रापय என்றதற்குக் கேட்பாயாக எனவும், போதா = என்பதற்கு வேள்வியில் அவி கொடுக்கப் பக்குவஞ் செய்பவர் எனவும் ஆங்கில மொழி பெயர்ப்பு கூறுகின்றது.

## மந்திரம் 8.

கீதம்—வாம்ரவைகாநசம் ரிஷி ஆஞ்சிகம்.

१ २ ३१ २र ३१२
62. सखायस्त्वा ववृमहे देवं मर्त्तास ऊतये ।
३ १ २र ३१२ ३१ २ ३१२ ३१२
अपां नपातꣳ *सुभगꣳ सुदꣳससꣳ सुप्रतूर्तिमनेहसम् ॥ ८ ॥

இருக்கு 3-9-1.

𑌸𑌖𑌾𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌾 𑌵𑌵𑍃𑌮𑌹𑍇 𑌦𑍇𑌵𑌂 𑌮𑌰𑍍𑌤𑍍𑌤𑌾𑌸 𑌊𑌤𑌯𑍇 ।
𑌅𑌪𑌾𑌂 𑌨𑌪𑌾𑌤𑌂 𑌸𑍁𑌭𑌗𑌂 𑌸𑍁𑌦𑌂𑌸𑌸𑌂 𑌸𑍁𑌪𑍍𑌰𑌤𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑌨𑍇
[𑌹𑌸𑌮𑍍 ॥

### அந்வயம்.

(हे अग्ने!) सखायः, मर्त्तासः, (वयं), ऊतये, अपां, नपातं, सुभगं, सुदंससं, सुप्रतूर्तिं, अनेहसं देवं, (त्वां) ऊतये, ववृमहे ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे अग्ने!) | (𑌹𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇!) | அக்கினியே! |
| सखायः | 𑌸𑌖𑌾𑌯𑌃 | மித்திரர்களாய |
| मर्त्तासः | 𑌮𑌰𑍍𑌤𑍍𑌤𑌾𑌸𑌃 | மனிதர்கள் (அதாவது) |
| (वयं) | (𑌵𑌯𑌂) | வேள்வியாற்றும் நாங்கள் |
| अपां नपातं | 𑌅𑌪𑌾𑌂 𑌨𑌪𑌾𑌤𑌂 | நீரிற்குப் பௌத்திரனும் |
| सुभगं | 𑌸𑍁𑌭𑌗𑌂 | நல்ல தனமுள்ளவனும் |
| सुदंससं | 𑌸𑍁𑌦𑌂𑌸𑌸𑌂 | நற்கருமமுள்ளவனும் |
| सुप्रतूर्तिं | 𑌸𑍁𑌪𑍍𑌰𑌤𑍂𑌰𑍍𑌤𑌿𑌂 | இனிது அடையத்தக்கவனும் |
| अनेहसं | 𑌅𑌨𑍇𑌹𑌸𑌂 | பீடையற்றவனும் |
| (देवं) | (𑌦𑍇𑌵𑌂) | பிரகாசிப்பவனுமாகிய |
| त्वां | 𑌤𑍍𑌵𑌾𑌂 | உன்னை |
| ऊतये | 𑌊𑌤𑌯𑍇 | (எம்மைக்) காப்பாற்றுவதன் பொருட்டு |
| ववृमहे | 𑌵𑌵𑍃𑌮𑌹𑍇 | வேண்டிக்கொள்கின்றோம். |

### சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—11. விசுவாமித்திர ரிஷி.

அக்கினியே! சோமம், நெய் முதலிய தேவ உணவுகளை அன்போடளித்தலால் உதவி செய்பவனாதல் பற்றி, நட்புடைய மக்களான இருத்துவிக்

---

* सुभगं सुदीदिं, என்பது இருக்கு.

குகனென்னும் (வேட்போர்கள்) நாங்கள், சலத்தினுடைய பௌத்திரனும், சிறந்த திரவியமுடையவனும், நற்கருமமுடையவனும், கருமாநுட்டானம் பண்ணுவோர்களால் இனிதாக அடையப்படுவோனும், பீடையற்றவனும் ஆகிய உன்னை, எங்களைக் காப்பாற்றுமாறு கேட்டுக்கொள்ளுகின்றோம். (8)

குறிப்பு.—'अनेहसं' என்றதற்கு, கோபமற்றவன், பாவமற்றவன், சத்துருவை யொழிப்பவன் எனப் பொருள் கொள்ளப்பட்டிருக்கின்றது ஆங்கில மொழிபெயர்ப்பில். ஈண்டு நீரால் மரமுண்டாதலாலும், அம்மரக்கட்டையினின்று கடையப்பெற்று அக்கினி பிறத்தலாலும், நீரிற்குப் பௌத்திரன் எனப்பட்டது.

சாயணாசாரியரியற்றிய மாதவீயமென்னும் அர்த்தப் பிரகாச பாடியம்
சந்த வியாக்கியானம்

## முதலத்தியாயம், ஆறுவது கண்டம்

முற்றும்.

---

## ஏழாவது கண்டம்.

பத்து மந்திரங்களாலானது.

---

### மந்திரம் 1.

கீதம்—சுவாசுவம்.

१ २ ३ १ २ ३ १ २र ३ १ २
63. * आ जुहोता हविषा मर्जयध्वं नि होतारं गृहपतिं दधिध्वम् ।
३२ ३१ २र ३१२ ३१ २ ३ २ ३क २र
इडस्पदे नमसा रातहव्यꣳ सपर्यता यजतं पस्त्यानाम् ॥ १ ॥

சாமவேதம், காண்டம்—1, மந்திரம்—1.

ஆ ஜுஹோதா ஹவிஷா மர்ஜயத்வம் நி ஹோதாரம் க்ருஹபதிம் [ததித்வம் ।
இடஸ்பதே நமஸா ராதஹவ்யம் ஸபர்யதா யஜதம் பஸ்த்யாநாம் ॥

அந்வயம்.

(हे ऋत्विजः !) आ जुहोता, हविषा, मर्ज्जयध्वं, इडः पदे, होतारं, गृहपतिं, (अग्निं) निदधिध्वं (किञ्च) नमसा (युक्तं,) रातहव्यं, यजतं, पस्त्यानां, (मध्ये) सपर्यत ॥

---

* இருக்குவேத நம்பரிடாத மந்திரங்கள் சாமவேதத்திலுள்ள தனிமந்திரங்கள்.

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ऋत्विजः! | ஹெ ஜக்விஜ: ! | வேட்போர்காள் ! (நீவிர்) |
| आ जुहोता | ஆ ஜுஹொதா | அக்கினியை யழைப்பீர்களாக. |
| हविषा | ஹவிஷா | அவியால் |
| मर्जयध्वं | மஜ்ஜயத்வம் | களிப்புண்டாக்குவீர்களாக. |
| इडः पदे | இட: வதெ | உத்தர வேதிகையில் |
| होतारं | ஹொதாரம் | தேவர்களை யழைக்கின்ற |
| गृहपतिं | மருஹவதிம் | வீட்டிற்குத் தலைவனென்னும் |
| (अग्निं) | (அமிம்) | (அக்கினியைத்) |
| निदधिध्वं | நிஷயிய்வம் | தாபிப்பீர்களாக. |
| नमसा (युक्तं) | நமஸா (யுக்தம்) | வணக்கத்தைப் (பெற்றுக்கொள்வதும்) |
| रातहव्यं | ராதஹவ்யம் | அவியை ஏற்றுக்கொள்வதும் |
| पस्त्यानां (मध्ये) | வஸ்த்யாநாம் (மயெ்ஷ) | வேள்விச் சாலைகளின் (நடுவில்) |
| यजतं | யஜதம் | ஆராதிக்கத் தக்கதுமாகிய அக்கினிக்கு |
| सपर्यत | ஸவயஷத | நல்ல பணிவிடை செய்வீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—1. சியாவாசுவ ரிஷி, அல்லது, வாமதேவர் திருஷ்டுப்சந்தம்.

வேட்போர்களே! அக்கினியை அழைப்பீர்களாக. அன்றியும் தேவ உணவினால் மகிழ்விப்பீர்களாக. மற்றும், உத்தர வேதிகையில் (திண்ணையில்) தேவர்களை யழைப்பதும், வேள்விச் சாலையைப் பாதுகாப்பதுமாகிய அக்கினியை நன்றாகத் தாபிப்பீர்களாக. இன்னும், பணிதலைப் பெற்றுக் கொள்வதும், அல்லது அவியோடு கூடியதும், இதனானே அவி யேற்றுக் கொள்ளப்பட்டதும், வேள்வி மனையின் மத்தியிற் பூசிக்கத் தக்கதுமாகிய அக்கினிக்கு நன்றாகச் சேவை செய்வீர்களாக. (1)

குறிப்பு—மூலத்திலுள்ள **'नमसा'** என்பதற்கு, வணக்கத்தால் (தோத்திரத்தால்) தாபிப்பீர்களாக எனவும், அவியாற் பணி செய்வீர்களாக எனவும் பொருட்கூறியுள்ளார் ஆங்கில மொழி பெயர்ப்பாளர்.

இருத்துவிக்குகள் என்றதற்கு—எனது புத்திரர்கள் எனவும் **'पस्त्यानां'** வேள்விச் சாலைகளின் நடுவில் என்பதற்கு—தேவர்களுடைய வீடுகட்கு நடுவில் எனவுங் கொள்வார் சிலர்.

## ம ந் தி ர ம் 2.

கீதம்—இருது.

३ २उ　　३ १२　　३ २ ३ २उ　　३१२ ३ २ ३　१ २

64. **चित्र इच्छिशोस्तरुणस्य वक्षथो न यो मातरा वन्वेति धातवे ।**

३　१　　२र ३　१ २ ३ २ ३१२　३ १२र　३ २ १ २

**अनूधा * यदजीजन दधाचिदा ववक्ष त्सद्योमहि दूत्यश्चरन् ॥ २ ॥**

இருக்கு 14-111-1.

𑌚𑌿𑌤𑍍𑌰 𑌇𑌚𑍍𑌛𑌿𑌶𑍋𑌸𑍍𑌤𑌰𑍁𑌣𑌸𑍍𑌯 𑌵𑌕𑍍𑌷𑌥𑍋 𑌨 𑌯𑍋 𑌮𑌾𑌤𑌰𑌾 𑌵𑌨𑍍𑌵𑍇𑌤𑌿
[𑌧𑌾𑌤𑌵𑍇 ।

𑌅𑌨𑍂𑌧𑌾 𑌯𑌦𑌜𑍀𑌜𑌨 𑌦𑌧𑌾𑌚𑌿𑌦𑌾 𑌵𑌵𑌕𑍍𑌷 𑌤𑍍𑌸𑌦𑍍𑌯𑍋𑌮𑌹𑌿 𑌦𑍂𑌤𑍍𑌯𑌶𑍍𑌚𑌰𑌨𑍍 ॥

அந்வயம்.

शिशोः, तरुणस्य, (अग्नेः), वक्षथः, चित्र इत्, यः, मातरौ, धातवे, न अन्वेति, यद्, अनूधा, अजीजनत्, अधचित्, (असौ), सद्यः, महि, दूत्यं, चरन्, आववक्षत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **शिशोः** | 𑌶𑌿𑌶𑍋𑌃 | குழந்தையாகிய |
| **तरुणस्य (अग्नेः)** | 𑌤𑌰𑍁𑌣𑌸𑍍𑌯 (𑌅𑌗𑍍𑌨𑍇𑌃) | தருணப்பருவ (அவ் வக்கினியினுடைய) |
| **वक्षथः** | 𑌵𑌕𑍍𑌷𑌥𑌃 | மார்பில் அவி தாங்கல் |
| **चित्र इत्** | 𑌚𑌿𑌤𑍍𑌰 𑌇𑌤𑍍 | அற்புதமே. |
| **यः** | 𑌯𑌃 | எவ்வக்கினி |
| **मातरौ** | 𑌮𑌾𑌤𑌰𑍌 | வான், தரை என்னும் மாதாக்களிடத்து |
| **धातवे** | 𑌧𑌾𑌤𑌵𑍇 | முலை யுண்ணுவதற்குப் |
| **न अन्वेति** | 𑌨 𑌅𑌨𑍍𑌵𑍇𑌤𑌿 | போகிறதில்லை யென்பது |
| **यद् अनूधा** | 𑌯𑌦𑍍 𑌅𑌨𑍂𑌧𑌾 | முலைகளில்லாதனவாய் |
| **अजीजनत्** | 𑌅𑌜𑍀𑌜𑌨𑌤𑍍 | உண்டாக்கினவாமெனிலன்றோ, (பொருந்தும்) |
| **अध चित्** | 𑌅𑌧 𑌚𑌿𑌤𑍍 | தோன்றிய அச் சமயத்திலேயே |

---

* अप्येति धातवे, * यदजीजनत्, * अधाचन, * ववक्ष सद्या, என்பன இருக்கு.

| | | |
|---|---|---|
| (असौ) | (அஸள) | (இவ் வக்கினி) |
| महि दूत्यं चरन् | மஹி தூத்யம் சரந் | பெரிய தூதுத்தொழிலைச்செய்து கொண்டு |
| आंववक्षत् | ஆவவக்ஷத் | தேவர்கட்கு அவிகளைத் தாங்குகின்றது. |

## சாயணபாடியம்.

*கண்டம்—7. இருக்கு—2. வார்ஷ்டஹவ்யர் ரிஷி அல்லது வார்ஷஹவ்யர். ஜகதீ—சந்தம்.*

*குழந்தை வடிவாகியது கொண்டே தருணமாகிய அக்கினியினுடைய மார்பில் அவி தாங்குதல் அற்புதமேயாம். உண்டாகிய அக்கினியானது, எல்லாவற்றையுந் தோற்றுவிப்பனவான அல்லது, எல்லாவற்றிற்கும் அன்னை வடிவமான பூமி, அந்தரிட்சமென்னு மிரண்டினிடத்தும், அரணிக் கட்டைகளிடத்தும், முலை யுண்ணுவதற்குச் செல்கின்றதில்லை. (அவைகள்) முலைகளில்லாதனவாகி இவ் வக்கினியை யுண்டாக்கினவாமெனிலன்றோ, முலை குடிக்கப் போகின்றதில்லை என்னுமிது பொருந்தும். அவ்வாறுனதில்லை. மற்றோ, பூமி அந்தரிட்சமென்னுமிரண்டும் யாவருக்கும் உண்மையில் விரும்பியவைகளைக் கறக்கின்றனவாம். வேண்டியவைகளைத் தருகின்றன என்பது மது. அங்ஙனமிருந்தும் அதன்பாற் போகின்றதில்லை யென்க. ஆதலின் இவ் வக்கினியின் அவியேற்குந் தன்மையானது மிக வியக்கத்தக்கதேயாம். தோன்றிய பின்னரே, அப்பொழுதே, மிக விரைவில் என்பது மது. தூதுவனது தொழிலைச் செய்துகொண்டு தேவர்களை யுத்தேசித்து அவிகளை யேற்கின்றது.* (2)

**குறிப்பு** —ஈண்டுப் பாடியக்காரர், பூமி யந்தரிட்சங்களை மாதாவெனக் கொண்டனர். அரணிக் கட்டைகளை யன்னைகளெனக் கொள்வாருமுளர். அக்கினி முலைப் பாலுண்ணுவதன்றுமாயினும், அவ்விரண்டன்கண் தோன்றி வளர்கின்றதால் யாதேனு மோர்பொருளை முலை வடிவமாகக்கொண்டு பால் உண்ணுகின்றதென்பதே கொள்ளற்பாலதாம். அஃதின்றேல் வளர்தல் கூடாதென்க. தோன்றிய அக்கணத்திலேயே அவி தாங்குந் தொழிலை யேற்றுக்கொண்டு பிரயாணப்பட்டது. இவ் வக்கினிக்கு அன்னைகளிடத்து முலைப்பாலுண்ணுதலில் விருப்பமே காணப்படவில்லை. இஃதோர் வியப்பெனப் பாடியத்திற் கூறியுள்ளது. இதில் பிரயாணமும், முலை யுண்ணுமையும், உண்டாகிய பின்னர்ச் சிறிது காலத்திலமைந்ததாம் என்றுணர்க. பிறவாமெனிலோ, அதற்கு முலை யுண்ணுந் தன்மையே கணப்போதும் பொருந்தாதென்பது காண்க.

## மந்திரம் 3.

கீதம்—அக்கினியாமம், கௌத்சம்.

३२ ३ १२ ३१ २ ३ १२ ३१२३ १ २ ३ १२
65. इदं त एकं पर ऊ त एकं तृतीयेन ज्योतिषा संविशस्व ।
३ १२ ३ २ १२ ३ २ ३ १ २ ३ २ ३ १ २
*संवेशनस्तन्वे३चारुरेधि प्रियो देवानां परमे जनित्रे ॥ ३ ॥

இருக்கு 10-56-1.

𑌇𑌦𑌂 𑌤 𑌏𑌕𑌂 𑌪𑌰 𑌊 𑌤 𑌏𑌕𑌂 𑌤𑍃𑌤𑍀𑌯𑍇𑌨 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾 𑌸𑌂𑌵𑌿𑌶𑌸𑍍𑌵 ।

𑌸𑌂𑌵𑍇𑌶𑌨𑌸𑍍𑌤𑌨𑍍𑌵𑍇𑌚𑌾𑌰𑍁𑌰𑍇𑌧𑌿 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑍇 𑌜𑌨𑌿𑌤𑍍𑌰𑍇 ॥

### அங்வயம்

(हे मृत पुत्र!), ते, इदं, एकं, (तथा) परः ऊ, एकं, तृतीयेन ज्योतिषा, संविशस्व, तन्वे, चारु, भूत्वा, देवानां, परमे, जनित्रे प्रियः, संवेशनः, एधि॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे मृत पुत्र !) | (𑌹𑍇 𑌮𑍃𑌤 𑌪𑍁𑌤𑍍𑌰 !) | உயிர் நீங்கிய குழந்தாய் ! |
| ते इदं एकं | 𑌤𑍇 𑌇𑌦𑌂 𑌏𑌕𑌂 | உன்னுடைய ஒரு கூறு, சோதியாகிய இவ் வக்கனியாம். |
| (तथा) पर ऊ एकं | (𑌤𑌥𑌾) 𑌪𑌰 𑌊 𑌏𑌕𑌂 | அவ்வாறே மற்றொரு சோதியின் கூறு வாயுவாம். |
| तृतीयेन ज्योतिषा | 𑌤𑍃𑌤𑍀𑌯𑍇𑌨 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾 | மூன்றாவதாகிய உனதான்மாவென்னுஞ் சூரிய ஒளியோடு |
| संबिशस्व | 𑌸𑌂𑌵𑌿𑌶𑌸𑍍𑌵 | பிரவேசமாவாயாக. (கலப்பாயாக.) |
| तन्वे | 𑌤𑌨𑍍𑌵𑍇 | மறு பிறப்பின் பொருட்டு |
| चारुभूत्वा | 𑌚𑌾𑌰𑍁 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | மங்கலமாகி |
| देवानां परमे जनित्रे | 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑍇 𑌜𑌨𑌿𑌤𑍍𑌰𑍇 | தேவர்கட்கு மேலாகிய பிறப்பிடமாஞ் சூரியனிடத்தில் |
| प्रियः | 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | விரும்பப்படுபவனாய் |
| संवेशनः | 𑌸𑌂𑌵𑍇𑌶𑌨𑌃 | இனிது பிரவேசமாந்தன்மையை |
| एधि | 𑌏𑌧𑌿 | அடைவாயாக. |

---

* संवेशने तन्वः, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—3. விருகதுக்த ரிஷி, திருஷ்டுப் சந்தம்.

. இதனால் விருகதுக்தரென்பார் மாண்டுபோன 'வாசினம்' என்னுந் தனது புத்திரனுக்குக் கூறுகின்றார் :—

இறந்த மைந்த! உன்னுடைய இது ஒரு கூறாகும். (இச் சோதியாகிய அக்கினியென்பது) ஈண்டு இனிமேல் 'சோதியால்' எனக் கூறப்படுமாதலால் இது என்னுஞ் சுட்டால் சோதியே கூறப்படுகின்றது. ஆனதால், உனது தேகத்திலுள்ள அக்கினியின் கூறால் புறத்திலுள்ள அக்கினியை இனி தடைவாயாக. அவ்வாறே உனது மற்றோர் கூறு வாயுவெனப்படும். அந்தப் பிராண வாயுவாகிய கூறாலும் புறத்திலுள்ள வாயுவை யடைவாயாக. உடம்பின்கணுள்ள அக்கினி, பிராண வாய்வு என்னும் இரண்டும், புறத்திலுள்ள அக்கினி வாயுக்களிரண்டும் ஒன்றேயாமாதலின் என்பது (கருத்து). அவ்வாறே, மூன்றாவது சோதியாகவும், ஆதித்தனெனப்படும் பிரகாசமாயுள்ள உனதான்மாவாற் பிரவேசமாவாயாக. சூரியனிடத்துள்ள ஆன்மா, சைதன்யம், என்னுமிரண்டிற்கும் வேறுபாடிலாமையால் கூறெனல் பொருந்தும். மற்றும் "'எது நான், அது இது, எந்த இது, அது நான்' 'சூரிய உருவமே யுலகிற்கு" என்றற்றொடக்கத்துச் சுருதிகளால் ஆன்மாவிற்கு சூரியனோடு கலத்தல் கூடுமென்க. தனுவின் பொருட்டென்றது மீண்டு முடலை யெடுப்பதற்கென்பதாம். மங்கலமாய் அச் சூரியனிடத்திற் புகுவாயாக என்பது பொருள். எவ் வண்ணத்தன் நீ யெனின், அதனோடு பிரியப்படத்தக்கவன். எத்தன்மைய சூரியனிடத்திலெனின்? தேவர்கட்குச் சிறந்ததோர் பிறப்பிடமானதில். ஈண்டு "தேவர்கட்கு மேலாம் பிறப்பிடம் எவ் வாதித்தன்" என்னும் வேத வாக்கு (உணரற்பாலது). (3)

குறிப்பு.—இது—உனதோர் கூறாகிய சோதி,'மேம்பட்ட மின்னலாம். உன்னுடைய மற்றோர் கூறு சூரியனென்பதாம், மூன்றாங்கூறாகிய மண்ணிலுள்ள தீயின் கூறினால் பிரவேசமாவாயாக. எதிலெனின்? தேகத்திற் புகுந்து மங்கல வடிவமாகுவாய், என உரை கூறுவாருமுளர். ஈண்டுத் 'தேவர்கட்குப் பிரியப்படத் தக்கவன்' என்றது தோற்றப்பட்ட வேள்வி வடிவ கருமத்தில், அல்லது தோற்றம் தோற்றுவிப்பது, தரு முதலியவைகளில் எதன் தோற்றமோ? அது என, 'பிறப்பிடம்' என்பதற்குப் பொருள் சொள்வாருமுளர். இதுவே மேனாட்டார்க்கும் உடன்பாடாம்.

## மந்திரம் 4.

கீதம்—அக்கினி யெக்ஞசாரதி.

३२उ　३१२　३१२　३ १२　३ १ २　३१२
66. **इमꣳ स्तोममर्हते जातवेदसे रथमिव सम्महेमा मनीषया ।**
३ २ उ ३ १२　३ २ २र ३ १　२ र ३१ २र
**भद्राहि नः प्रमतिरस्य सꣳसद्यग्ने सख्ये मारिषाम वयं तव ॥४॥**

இருக்கு 1-94-1.

இமம் ஸ்தோமமர்ஹதே ஜாதவேதஸே ரதமிவ ஸம்மஹேமா மநீஷயா ।
பத்ராஹி ந: ப்ரமதிரஸ்ய ஸம்ஸத்யக்நே ஸக்யே மாரிஷாம வயம் தவ ॥

அந்வயம்.

अर्हते, जातवेदसे, मनीषया, इमं, स्तोमं, रथमिव, सम्महेमा, अस्याग्नेः, संसदि, नः, प्रमतिः, भद्रा हि, हे अग्ने!, तव, सख्ये, वयं, मारिषाम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **अर्हते !** | அர்ஹதே ! | ஆராதித்தற்குரியோய் ! |
| **जातवेदसे !** | ஜாதவேதஸே ! | தோற்றமான பிரக்ஞையையும் தனத்தையுமுடைய அக்கினியே! |
| **मनीषया** | மநீஷயா | கூரிய புத்தியால் |
| **इमं स्तोमं** | இமம் ஸ்தோமம் | இத் தோத்திரத்தை |
| **रथमिव** | ரதமிவ | இரதத்தைத் திருத்துவதுபோல் |
| **सम्महेमा** | ஸம்மஹேமா | நன்கு போற்றத்தக்க தாக்குகின்றோம். |
| **अस्याग्नेः** | அஸ்யாக்நே: | இவ் வக்கினியினுடைய |
| **संसति** | ஸம்ஸதி | பூசையில் |
| **नः** | ந: | எங்களுடைய |
| **प्रमतिः** | ப்ரமதி: | நற்புத்தி |
| **भद्राहि** | பத்ராஹி | மங்கலமாகியதேயாம். |
| **हे अग्ने !** | ஹே அக்நே ! | அக்கினியே ! |
| **तव सख्ये वयं** | தவ ஸக்யே வயம் | நாங்கள் உனது மித்திரர்களான விடத்துத் |
| **मारिषाम** | மாரிஷாம | துன்புறுத்தப்படாதவர்களாவோமாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—4. சகதீ சந்தம். குத்ச ரிஷி.

போற்றத்தக்கோய்! தோற்றமானவைகளை யுணர்கின்ற, அல்லது, தோன்றிய தனத்தையுடைய அக்கினியே! நுண்ணிய மதியால் இத் தோத்திரத்தை, இரதத்தைத் தச்சன் (தபதியானவன்) சீர்படுத்துமாறு இனிது போற்றத்தக்கதாக்குகின்றோம். இவ் வக்கினியினுடைய நல்ல ஆராதனையில் எங்களுடைய நற்புத்தி உண்மையாக ஆற்றலுடையதேயாம். இதனால் அத் தன்மைய புத்தியாற் செய்கின்றோ மென்பது பொருள். அக்கினியே! எங்கட்கு உன்னோடு நட்பாந்தன்மை யுள்ளவிடத்து நாங்கள் துன்பத்திற் படாதோர்களாவோமாக. எங்களைப் பாதுகாப்பாயாக என்பது பொருள். (4)

குறிப்பு.—இரதத்தை நடத்தும் புத்திபோன்ற மதியால் துதியை அடையச் செய்கின்றோம், நீ எங்களுடைய அவையில் நற்புத்தி முதலிய நலங்களைத் தருவோனாயிருக்கின்றாய், ஆதலின் உன்னைக் கெடுப்பதினால் வரும் பாவத்தையடையாம லிருப்போமாக என்பது கருத்தென்பார் மேனாட்டார்

## மந்திரம் 5.

கீதம்—வைசுவாநரம்.

३ १२ ३ १ २३१ २ ३ १ २ ३२३२उ ३ २ ३ २
67. **मूर्द्धानं दिवो अरतिं पृथिव्या वैश्वानरमृत आ जातमग्निम् ।**
३२ ३ २३ १२ ३ १ २ ३ २ ३ १२ ३ २
**कविँ सम्राजमतिथिं जनानामासन्नः पात्रं जनयन्त देवाः ॥ ५ ॥**

இருக்கு 6-7-1.

மூர்த்தாநம் திவோ அரதிம் ப்ருதிவ்யா வைச்வாநரம்ருத ஆஜாதமக்நிம்
கவிம் ஸம்ராஜமதிதிம் ஜநாநாமாஸந்ந: பாத்ரம் ஜநயந்த தேவா: ॥

அந்வயம்.

दिवः, मूर्द्धानं, पृथिव्याः, अरतिं, वैश्वानरं, ऋते, आजातं, कविं, जनानां, सम्राजं, अतिथिं, आसन्, पात्रं, अग्निं, नः (यज्ञे) देवाः, आजनयन्त ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| दिवः | திவ: | விண்ணுலகிற்குத் |
| मूर्द्धानं | மூர்த்தாநம் | தலைமையானதும் |
| पृथिव्याः | ப்ருதிவ்யா: | பூமியினின்று |
| अरतिं | அரதிம் | செல்வதும் |

| | | |
|---|---|---|
| वैश्वानरं | வைஶ்வா நரம் | உலகத்தைத் தொடர்ந்து நிற்பதும் |
| ऋते | ஐதெ | சத்தியத்திற்காக |
| आजातं | ஆஜாதம் | முதலிலுண்டானதும் |
| कविं | கவிம் | பெருநோக்குடையதும் |
| सम्राजं | ஸம்ராஜம் | மிக விளங்குகின்றதும் |
| जनानां | ஜநாநாம் | எஜமானர்களுடைய அவியை ஏற்கச் |
| अतिथिं | அதியிம் | செல்வதும் |
| आसन् | ஆஸநு | வாய் வடிவானதும் |
| पात्रं | வாத்ரம் | காப்பாற்றுவது மாகிய |
| अग्निं | அக்நிம் | அக்கினியை |
| नः यज्ञे | நঃ யஜ்ஞெ | எங்களுடைய வேள்வியில் |
| देवाः | தெவாঃ | வேட்போர்கள் |
| आ जनयन्त | ஆ ஜநயந்த | உண்டாக்கினார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—5. பரத்துவாச ரிஷி. திருஷ்டுப் சந்தம்.

வானுலகிற்குச் சிரம் போன்றதும், பரந்த பூமிக்குச் செல்வதும், அவியேற்றுச் செல்வதும், அல்லது, அடையத்தக்கதோரிறைவன் என்பதும், மக்களனைவரையுந் தொடர்ந்துள்ளதும், படைப்பின் முன்னர் சத்தியத்திற்கு உண்டானதும், நீண்ட பார்வையுடையதும், தூரதிருஷ்டியுடையதென்பதுமது. எசமானர்களுக்குள் நன்கு விளங்கப்பட்டதும், அவியேற்பதற்கு இடைவிடாது செல்வதும், அல்லது அதிதியைப்போல பூசித்தற்குரியதும், தேவர்கட்கு, 'வாய்' எனப்படுவதும், காப்பாற்றுவதும் அல்லது வாயாற் றுங்கப்பட்டதுமாகிய, இத்தன்மைய குணங்களோடு கூடிய வைசுவாநராக்கினியை எங்களுடைய வேள்வியில், போற்றப்பட்ட வேட்போர்கள் அல்லது தேவர்கள், அரணிக்கட்டையினின்று உண்டாக்கினார்கள் என்பதாம். (5)

குறிப்பு—சத்தியமென்றது உண்மை, அல்லது வேள்வி. மூலத்தில், (ரிதே) என்னும் ஏழாம் வேற்றுமை, நிமித்தப் பொருளினின்றது. நிற்குமிடத்து, சத்தியத்திற்கு எனப் பொருள் பட்டது, படவே சத்தியத்தின் பொருட்டுச் சிருட்டியின் முதலில் உண்டானதும் எனப் பொருள் பட்டது. அக்கினியாகிய வாயால் தேவர்கள் அவிகளை யருந்துகின்றனர் என்பதால் அக்கினி வாயெனப்பட்டது. தேவர்கள் தங்கட்குத் தலைவனுயிருக்கும்படி வேள்வியில் முன்னர் நிலைத்துள்ள அக்கினியை உண்டாக்கினர் எனச் சில மேனாட்டறிஞர் கூறியுள்ளார்.

## மந்திரம் 6.

*கீதம்—ஆசிரம் அல்லது வரதம்.*

२३ ३१ २र ३२३ १२ ३२
68. *वित्वदापो न पर्वतस्य पृष्ठादुक्थेभिरग्ने जनयन्त देवाः ।
२ ३ १२ ३१२ ३१ २र३१२ ३१२
तं त्वा गिरः सुष्टुतयो वाजयन्त्याजिं न गिर्ववाहो जिग्युरश्वाः॥६॥

இருக்கு 6-24-6.

விசுவதாபொ ந பவர்தஸ்ய ப்ருஷ்டாது உக்தெபிரக்நெ ஜநயந்த [தெவாஃ ।
தம் த்வா கிரஃ ஸுஷ்டுதயொ வாஜயந்த்யாஜிம் ந கிர்வவாஹொ [ஜிக்யுரச்வாஃ ॥

அந்வயம்.

हे अग्ने! देवाः, उक्थेभिः, पर्वतस्य, पृष्ठात्, आपो न, त्वत् (आत्मनः कामान्) व्यजनयन्त, हे गिर्ववाह!, (भरद्वाजाः, स्तोतारः,) तं, त्वां, वाजयन्ति, (अपि च) अश्वाः आजिं न, सुष्टुतयः, गिरः, त्वां, जिग्युः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹெ அக்நெ! | அக்கினியே! |
| देवाः | தெவாஃ | போற்றுவோர்கள் |
| उक्थेभिः | உக்தெபிஃ | தோத்திரங்களால் |
| पर्वतस्य | பவர்தஸ்ய | மேகத்தின் |
| पृष्ठात् | ப்ருஷ்டாத் | மேற்பக்கத்தினின்று |
| आपो न | ஆபொ ந | நீரைப்போல |
| त्वत् | த்வத் | நினதிடத்திலிருந்து |
| (आत्मनः कामान्) | (ஆத்மநஃ காமாந்) | (தனது விருப்பங்களைப்) |
| व्यजनयन्त | வ்யஜநயந்த | பலவிதமாயிலுண்டாக்கிக் கொள்கின்றார்கள். |
| हे गिर्ववाहः! | ஹெ கிர்வவாஹஃ! | துதிவாக்கை லேற்றுக்கொள்ளுதற்குரிய அக்கினியே! |
| (भरद्वाजाः) | (பரத்வாஜாஃ) | (பரத்துவாச குலத்துதித்த) |
| (स्तोतारः) | (ஸ்தோதாரஃ) | (துதியாளர்கள்) |

* वित्वदापो न पर्वतस्य पृष्टदुक्थेभिरिन्द्रानयन्त यज्ञैः, तं त्वाभिः सुष्टुतिभिर्वाजयन्त आजिं न जग्मुर्गिर्वाहो अश्वाः என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| तं त्वां | தம் த்வாம் | அத்தகைய உன்னை |
| वाजयन्ति | வாஜயந்தி | வலியுடையதாகச் செய்கின்றார்கள். |
| (अपि च) | (அபி ச) | மற்றும் |
| अश्वाः | அச்வா: | குதிரைகள் |
| आजिं न | ஆஜிம் ந | போரை விரைவில் வெல்வன போன்று |
| सुष्टुतयः गिरः | ஸுஷ்டுதய: கிர: | அழகிய துதிவடிவ வாக்குகள் |
| त्वां | த்வாம் | உன்னை |
| जिग्युः | ஜிக்யு: | வெல்கின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—6. பரத்துவாச ரிஷி. திருஷ்டுப் சந்தம்.

அக்கினியே! தோத்திரங்களாலும், வேள்விகளாலும், அவிகளாலும், போற்றுவோர்கள் தனது விருப்பங்களை உன்னிடத்தினின்று பலவயையாக உண்டாக்கிக்கொள்கின்றார்கள். அதிலுவமை:—மேகத்தின் மேற்பக்கத்தினின்று தண்ணீரைப் போன்று, மற்றும் துதிவடிவவாக்குகளால் ஏற்றுக் கொள்ளற்குரிய அக்கினியே! பரத்துவாச குலத்தர்களான தோத்திரம் பண்ணுவோர்கள் வெளிப்படையாகிய உன்னை ஆற்றலுடையனாகப் பண்ணுகின்றார்கள். அல்லது அன்னத்தை விரும்புகின்றார்கள். மற்றும், அழகிய தோத்திர வடிவமான வாக்குகள் உன்னைச் செயிக்கின்றன. வசப்படுத்துகின்றனவென்பதுமது. அதிலொப்புமை:—குதிரைகள் போரை விரைவில் வெல்லுகின்றன போன்று, என்பதாம். (6)

குறிப்பு—குதிரைகள் போர்க்கு விரைவாய் ஓடுவதுபோல் துதிகளால் உன்னை நாங்கள் அடைகின்றோம் என்பது ஆங்கில மொழி பெயர்ப்பின் கருத்து.

## மந்திரம் 7.

கீதம்—வாமதேவருடைய ரௌத்திரம்.

२ ३ १ २ ३१ २ ३ १ २र ३ २३ १२
69. आवो राजान मध्वरस्य रुद्रं होतारं सत्ययजं रोदस्योः ।
३ २ ३ १ २ ३ २ ३ २ ३ १२ ३ १२
अग्निं पुरा तनयित्नो रचित्ताद्धिरण्यरूपमवसे कृणुध्वम् ॥ ७ ॥

இருக்கு 4-3-1.

ஆவோ ராஜாந மத்⁴வரஸ்ய ருத்³ரம் ஹோதாரம் ஸத்யயஜம் [ரோத³ஸ்யோ: ।
அக்³நிம் புரா தநயித்நோ ரசித்தாத்³தி⁴ரண்யரூபமவஸே க்ருணுத்⁴ [வம் ॥

அந்வயம்.

(हे ऋत्विजः !), अध्वरस्य, राजानं, होतारं, रुद्रं, रोदस्योः, सत्ययजं, हिरण्यरूपं, अग्निं, वः अवसे, तनयित्नोः, (इव), अचित्तात्, पुरा, आकृणुध्वम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः !) | (ஹே ருத்விஜ: !) | வேட்போர்காள் ! |
| अध्वरस्य | அத்⁴வரஸ்ய | வேள்வியினுடைய |
| राजानं | ராஜாநம் | வேந்தனும் : |
| होतारं | ஹோதாரம் | அமரரை யழைப்போனும் |
| रुद्रं | ருத்³ரம் | பயந்தரு மொலி செய்வோனும் |
| रोदस्योः | ரோத³ஸ்யோ: | விண்ணுலக, மண்ணுலகங்க ளிரண்டனுக்கும் |
| सत्ययजं | ஸத்யயஜம் | அன்னங் கொடுப்பவனும் |
| हिरण्यरूपं | ஹிரண்யரூபம் | பொற்காந்தி யுடையோனுமாகிய |
| अग्निं | அக்³நிம் | அக்கினியை |
| वः अवसे | வ: அவஸே | உங்களைக் காப்பாற்றிக்கொள்வ தற்கு |
| तनयित्नोः इव | தநயித்நோ: இவ | இடிபோல் விழுந்து |
| अचित्तात् पुरा | அசித்தாத் புரா | இறப்பதன் முன் |
| आ कृणुध्वं | ஆ க்ருணுத்⁴வம் | நன்கு ஆராதிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—7. திருஷ்டுப் சந்தம். வாமதேவ ரிஷி கூறுகின்றார் :—

வேட்போர்காள் ! எசமானர்காள் ! வேள்விக்கரசனும், தேவர்களை யழைப்பவனும், பயந்தரு மொலியிடுவோனும், அல்லது சத்துருக்களை யழச்செய்பவனும், அல்லது " இஃதன்றிக் கோரமாகிய தநுக்கள் எவ்வுருத்திரன்" என்னு மறையால் உருத்திர வடிவனும், சுவர்க்கம் பூமிகட்கு அன்ன மளிப்பவனும், அல்லது சத்திய அவியால் தேவர்களைப் பூசிப்பவனும், அல்லது சத்திய வானந்தத்தை யடைவிப்பவனும், எனினுமாம். அல்லது மண்ணும் விண்ணும் வியாபித்திருப்பவனும், தங்க நிறத்தனுமாகிய அக்கினியை, உங்களுடைய பாதுகாப்பின்பொருட்டு, இடிபோன்று திடீரென வரும் சித்தமற்ற தன்மை அதாவது சித்தமொடுங்கலை யுபலக்கணமாகவுடைய இந்திரியங்களெலா மொடுங்கலாம். இறத்தலென்பது மிதுவே. இம்மரணத்தின் முன்னரே நீங்கள் அக்கினியை அவிகளால் முழுதும் ஆராதிப்பீர்களாக.

(7)

## மந்திரம் 8.

கீதம்—வைசுவம்.

३ २उ ३ २३१ २र ३ २ ३ १२३ १२ १२
70. इन्धे राजा समर्यो नमोभिः यस्य प्रतीक माहुतं घृतेन ।
१२ ३ १ २ ३ २३ १ २र३१ २
नरो हव्येभिरीडते सबाध अग्निरग्रमुष सामशोचि ॥ ८ ॥

இருக்கு 1-7-8.

ஐஂெ ராஜா ஸமர்யோ நமோபி: யஸ்ய ப்ரதீக மாஹுதம் க்ரு[தேந ।
நரோ ஹவ்யேபிரீடதே ஸபாத அக்நிரக்ர முஷஸாமசோசி ॥

அந்வயம்.

राजा, अर्यः, अग्निः, नमोभिः (सह), समिन्धे, यस्य प्रतीकं, घृतेन, आहुतं, नरः, सबाधः, हव्येभिः, (यं), ईडते, (सः) अग्निः, उषसां, अग्रं, आ अशोचि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| राजा | ராஜா | பிரகாசிப்பதும் |
| अर्यः | அர்ய: | சாமியுமாகிய |
| अग्निः | அக்நி: | அக்கினி |
| नमोभिः (सह) | நமோபி: (ஸஹ) | தோத்திரங்களோடு (கூட) |
| समिन्धे | ஸமிந்தே | வளர்கின்றது. |
| यस्य | யஸ்ய | எதனுடைய |
| प्रतीकं | ப்ரதீகம். | வடிவம் |
| घृतेन आहुतं | க்ருதேந ஆஹுதம் | நெய்யால் ஆகுதிசெய்யப்பட்டதாமோ, |
| नरः | நர: | மனிதர்கள் |
| सबाधः | ஸபாத: | தோன்றின பீடைகளோடுகூடினவர்களாய் |
| हव्येभिः | ஹவ்யேபி: | அவிகளோடு |
| (यं) ईडते | (யம்) ஈடதே | எதைப் பூசிக்கின்றார்களோ, |
| (सः) अग्निः | (ஸ:) அக்நி: | அவ் வக்கினி |
| उषसां अग्रं | உஷஸாம் அக்ரம் | உஷா உதிப்பதன் முன்னரேயே |
| आ अशोचि | ஆ அசோசி | நன்கு விளங்குகிறது. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—8. வசிட்ட ரிஷி. திருஷ்டுப் சந்தம்.

விளங்குவதும், சாமியும், அல்லது அவிகளைச் செலுத்துவதுமாகிய அக்கினி, தோத்திரங்களோடு கூடவே நன்கு விருத்தியாகின்றது. எவ் வக்கினிக்கு நெய்யாலாகுதிபண்ணலே வடிவமோ, எம்மைச்சேர்ந்த மனிதர்கள் தோன்றின பீடைகளை யுடையவர்களாய் அவிகளோடு எதைத் துதிக்கின்றார்களோ, அவ் வக்கினி உஷா தேவதையுதிப்பதன் முன்னரே மிகவும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. (8)

## மந்திரம் 9.

கீதம்—இந்திர தேவதையாமம்.

२ ३१ २ ३१ २ ३१ २र ३ १ २
71. प्रकेतुना बृहता यात्यग्नि रारोदसी वृषभोरोरवीति ।
१ २ ३ २ ३ १ २र ३ २३१ २ ३ २ २
* दिवश्चिदन्तादुपमामुदान डपामुपस्थे महिषो ववर्द्ध ॥ ९ ॥

இருக்கு 1-8-1.

പ്രകേതുനാ ബൃഹതാ യാത്യഗ്നി രാരോദസീ വൃഷഭോ രോ[രവീതി ।
ദിവശ്ചിദന്താ ദുപമാമുദാന ഡപാമുപസ്ഥേ മഹിഷോ വവർദ്ധ ॥

அங்வயம்.

अग्निः, बृहता, केतुना, युक्तः (सन्) आरोदसी, प्रयाति (देवाह्वानकाले), वृषभः (इव), रोरवीति, दिवश्चित्, अन्तात्, उपमां, उदानट्, अपां, उपस्थे, महिषः, ववर्द्ध ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अग्निः | അഗ്നിഃ | அக்கினி |
| बृहता केतुना (युक्तः सन्) | ബൃഹതാ കേതുനാ (യുക്തഃ സൻ) | பிரக்ஞையோடு கூடியதாயிருந்து |
| आ | ആ | இப்போது |
| रोदसी | രോദസീ | வானுக்கும் வையத்திற்கும் |
| प्रयाति | പ്രയാതി | அழகாகச் செல்கின்றது. |
| (देवाह्वान काले) | (ദേവാഹ്വാന കാലേ) | (தேவரை யழைக்குங்கால்) |
| वृषभः (इव) | വൃഷഭഃ (ഇവ) | இடபத்தைப் (போல்) |

* दिवश्चिदन्तां उपमां उदान ळपां, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| रोरवीति | ரொரவீதி | பேரொலி செய்கின்றது. |
| दिवश्चित् | திவஶ்சித் | விண்ணுலகம் |
| अन्तात् | அந்தாத் | வரையினும் |
| उपमां | உபமாம் | மேகத்திற்கருகில் |
| उदानट् | உதாநட் | மேலே வியாபிக்கின்றது. |
| अपां | அபாம் | மழைத் தண்ணீருக்குச் |
| उपस्थे | உபஸ்தே | சமீபத்தில் |
| महिषः | மஹிஷஃ | பெரிதாய் |
| ववर्द्ध | வவர்த்த | வளர்கின்றது. |

## சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—9. திரிசிரா துவாஷ்டர ரிஷி. திருஷ்டுப் சந்தம்.

அக்கினி நுண்ணறிவோடு கூடியதாய் இப்போது விண்ணுலகிற்கும், மண்ணுலகிற்கும் நன்கு போகின்றது. மற்றும், தேவர்களை யழைக்குஞ் சமயம் எருது போன்று பேரொலியிடுகின்றது. அந்தரிட்ச உலகத் தெல்லை வரையிலும், மேகங்கட்கருகில் சுவாலை வடிவமார்ந்த சூரியனுயிருந்து மேல் வியாபிக்கின்றது. மழைத்தண்ணீரின் உறைவிடமென்னும் அந்தரிட்சத்தில் மின்னல் வடிவாய் மிகப் பெருத்திருக்கின்றது என்பதாம். (9)

குறிப்பு.—அக்கினியை இடபமா யுவமித்தற்கு நித்தியமாக இருடிகள் இவ்வாறு கற்பிக்கின்றார்கள். காலைப்போதில் தேவாராதனை செய்யுமிடத்திற்குச் செல்லுங்கால் இடப வடிவாம். அது புருடார்த்தத்தைக் கொம்பாகவுடையது. முத்தீ, மற்றும், உதய முதயமின்மைத் தீ என்பவைகளைக் கால்களாகவுடையது. விண்ணில் சூரிய வடிவம், அந்தரிட்சத்தில் மின்னல் வடிவம், தரையில் விறகினாலாமக்கினி வடிவம் என்னும், முக்கயிற்றாற் கட்டப்பட்டது, அக்கினி கொழுந்துவிட்டெரியுங்கா லுண்டாகு மொலியே இடபமிடு மொலியாம், இங்ஙனமிருக்க, இடபமாயு வமித்தல் கூடாததென்பதெங்ஙனம்? இனிது கூடுமென்க.

## மந்திரம் 10.

கீதம்—வசிட்டரல்லது பிரசாபதி ரிஷி, ராசிமராயம், ஸ்பாந்திகரணம், ச்யாவனம், சைகண்டினம், இந்தவம்.

३२उ ३ १ २ ३ २ ३१२ ३ २

72. अग्निं नरो दीधितिभि ररण्योर्हस्तच्युतं जनयत प्रशस्तम् ।

३ १ २ ३१२ ३ २

दूरे दृशं गृहपति मथव्युम् ॥ १० ॥

இருக்கு 7-1-7.

அக்நிம் நரோ தீதிதிபிரரண்யோர்ஹஸ்தச்யுதம் ஜநயத ப்ரஶஸ்தம்।
தூரேத்ருஶம் க்ருஹபதிமதர்யும் ॥

### அந்வயம்.

नरः, प्रशस्तं, दूरे, दृशं, गृहपतिं, अथर्युं, हस्तच्युतं, अरण्योः, (विद्यमानं), अग्निं, दीधितिभिः, जनयत ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| नरः | நர: | வேட்போர்கள் |
| प्रशस्तं | ப்ரஶஸ்தம் | மிகத் துதிக்கத் தக்கதும் |
| दूरे दृशं | தூரே த்ருஶம் | தூரத்திற் காண்பதும் |
| गृहपतिं | க்ருஹபதிம் | வீட்டைக் காப்பதும் |
| अथर्युं | அதர்யும் | வரக்கூடியதும் |
| हस्तच्युतं | ஹஸ்தச்யுதம் | கைகளாலுண்டாக்கியதும் |
| अरण्योः (विद्यमानं) | அரண்யோ: (வித்யமாநம்) | அரணிக்கட்டைகளி லிருக்கின்றதுமாகிய |
| अग्निं | அக்நிம் | அக்கினியை |
| दीधितिभिः | தீதிதிபி: | விரல்களினல் |
| जनयत | ஜநயத | உண்டாக்குகின்றார்கள். |

### சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—10. வசிட்ட ரிஷி.

நியமஞ் செய்கின்ற வேட்போர்கள், இனிது தோத்திரஞ் செய்யத்தக்கதும், தூரத்திற் காண்பதும், அல்லது தூரத்திற் காணப்பட்டதும், வேள்விச்சாலைகளைக்காப்பதும், செல்வதும், அல்லது அடையப்படுவதும், கைகளாலுண்டானதும், அரணிக் கட்டைகளிலிருப்பதுமாகிய அக்கினியை விரல்களினலுண்டாக்குகின்றார்கள். நிருத்தம் 5-2-101-ல் யாஸ்க முனிவரு மிவ்வாறே இதற்குப் பொருள் கூறியுள்ளார். (10)

## ஏழாவது கண்டம்

முற்றும்.

## எட்டாவது கண்டம்.

### பிரபாடகம்—1, அத்தியாயம்—1.

எட்டு மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

*கீதம்—சேன பிரசாபதி ரிஷி, சயனம், சாயனம், தீர்க்காபுஷ்யம்.*

१ २ ३ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २
**73. अबोध्यग्निः समिधा जनानां प्रतिधेनुमिवायती मुषासम् ।**
३ १ २ ३ २ ३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ २ ३ १ २
**यह्वा इव प्रवया मुज्जिहानाः प्र भानवः *सस्रते नाकमच्छ॥१॥**

இருக்கு 5-1-1.

அபோத்யக்நி: ஸமிதா ஜநாநாம் ப்ரதிதேநுமிவாயதீ முஷாஸம் ।
யஹ்வா இவ ப்ரவயா முஜ்ஜிஹாநா: ப்ரபாநவ: ஸஸ்ரதே நாகமச்ச ॥

அந்வயம்.

(अयं) अग्निः, जनानां, समिधा, धेनुमिव, आयतीं, प्रति उषासं, अबोधि, (प्रवुद्धस्याग्नेः) भानवः, यह्वाः, वयां, प्रोज्जिहानाः, (वृक्षा इव), नाकं, अच्छ, प्रसस्रते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **(अयं) अग्निः** | (அயம்) அக்நி: | இவ் வக்கினி |
| **जनानां** | ஜநாநாம் | வேட்போர் முதலியோர்களுடைய |
| **समिधा** | ஸமிதா | சமித்துக்களால் (விறகுகளால்) |
| **धेनुमिव** | தேநுமிவ | பாற்பசுப்போல் |
| **आयतीं** | ஆயதீம் | வருகின்ற |
| **प्रति उषासं** | ப்ரதி உஷாஸம் | ஒவ்வொரு உஷத் காலத்தும் |
| **अबोधि** | அபோதி | துயில் விட்டெழுந்தது. |
| **(प्रवुद्धस्याग्नेः)** | (ப்ரபுத்தஸ்யாக்நே:) | எழுந்த அக்கினியினுடைய |
| **भानवः** | பாநவ: | சுவாலைகள் |
| **यह्वाः** | யஹ்வா: | பெரிதான |

* सिस्रते, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| वयां | வயாம் | கிளைகளை |
| प्रोज्जिहानाः | ப்ரோஜ்ஜிஹானா: | இனி மேலே தள்ளிப்போகின்ற |
| (वृक्षा इव) | (வ்ருக்ஷா இவ) | மரங்களைப்போல |
| नाकं | நாகம் | விண்ணுலகை |
| अच्छ | அச்ச | நோக்கி |
| प्रसस्रते | ப்ரஸஸ்ரதே | விரிந்து போகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—1. புத கவிஷ்டிர ரிஷிகள். திருஷ்டுப் சந்தம். தேவதை அக்கினி.

இவ் வக்கினி, வேள்வி செய்பவர் முதலியோர்களுடைய ஓம விறகுகளால் நித்திரைவிட் டெழுந்தது. தீயோமத்தின் பொருட்டுப் பால்தரும் பசு அதிகாலையில் எழுந்து கொள்வதுபோல, வாராநின்ற ஒவ்வொரு உஷத் காலத்திலும் அக்கினி யெழுந்தது. மற்றும் எழுந்த அக்கினியினுடைய கிரணங்கள் பருத்தகிளைகளைத் தள்ளி மேலெழுந் தருக்களைப்போலப், பெரிதான தனது ஆதாரத்தைவிட்ட கிரணங்கள் வானுலகை நோக்கிப் பரவுகின்றன. (1)

குறிப்பு.—தீ ஓமஞ் செய்வாருடைய தீ, ஓர்போதும் அவிந்து போகின்றதில்லை. அங்ஙனமேனும் இரவில் விறகின்றிக் குறைதலே தூங்குதல். காலையில் வளர்த்தலே விழிப்பாம் என்க. மேற்செல்லும் புட் கூட்டங்களைப்போல் விரிகின்றன என்றனர் மேனாட்டாசிரியரிற் சிலர்.

## மந்திரம் 2.

கீதம்—பௌஷம்.

२ ३ १२ ३ १ २ ३ २ ३१ २र ३ २ ३ १ २
74. प्रभूर्जयन्तं महां विपोधां *मूरैरमुरं पुरां दर्माणम् ।
१२ ३ २ ३ १ २र ३ १२ ५ १ २र ३ २
नयन्तं गीर्भिर्वना धियं धा हरिश्मश्रुं न वर्मणा धनर्चिम् ॥ २॥

இருக்கு 19-46-5.

ப்ரபூ⁴ர்ஜயந்தம் மஹாம் விபோதா⁴ம் மூரைரமுரம் புராம் த³ர்மாணம் ।
நயந்தம் கீ³ர்பி⁴ர்வநா தி⁴யம் தா⁴ ஹரிஶ்மஶ்ரும் நவர்மணா த⁴நர்சிம் ॥

---

* मूरा என்பது இருக்கு.

அந்வயம்.

(हे स्तोतः!), जयन्तं, महान्, विपोधां, मूरैः पुरां, दर्माणं, अमुरं, अग्निं, स्तोतुं, प्रभूः (किञ्च), गीर्भिः, वना, (धनानि) नयन्तं. हरिश्मश्रुं न, वर्मणा, (ज्वालया) (उपेतं), धनर्चिं, धियं धाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे स्तोतः!) | (ஹே ஸ்தோத:!) | (துதிப்போய்!) |
| जयन्तं | ஜயந்தம் | வெற்றி பெறுகின்றதும் |
| महान् | மஹாந் | மகத்தானதும் |
| विपोधां | விபோதாம் | தாங்குவதும் |
| मूरैः | மூரை: | மூடர்களால் விரும்பப்படுந் |
| पुरां | புராம் | தேகங்களைக் |
| दर्माणं | தர்மாணம் | காப்பதும் |
| अमुरं | அமுரம் | மூடத்தன்மையிலாததுமாகிய |
| अग्निं | அக்நிம் | அக்கினியைத் |
| स्तोतुं | ஸ்தோதும் | துதிப்பதற்கு |
| प्रभूः | ப்ரபூ: | வல்லுநனுவாயாக. |
| (किञ्च) | (கிஞ்ச) | (மற்றும்) |
| गीर्भिः | கீர்பி: | தோத்திரங்களாற் |
| वना | வநா | பூசிக்கத் தக்கதும் |
| (धनानि) नयन्तं | (தநாநி) நயந்தம் | தனங்களை யடைவிப்பதும் |
| हरिश्मश्रुं न | ஹரிஶ்மஶ்ரும் ந | மஞ்சணிற உரோமம்போல் |
| वर्मणा | வர்மணா | கவசமாகிய |
| (ज्वालया) | (ஜ்வாலயா) | சுவாலையோடு |
| (उपेतं) | (உபேதம்) | (கூடியதும்) |
| धनर्चिं | தநர்ச்சம் | துதிக்கு விடயமுமாகிய |
| अग्निं | அக்நிம் | அக்கினியைக் குறித்துப் |
| धियं धाः | தியம் தா: | பணி செய்வாயாக. |

சாயண பாடியம்.

*கண்டம்—8. இருக்கு—2. வத்சபிரிய ரிஷி, திருஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.*

*தோத்திரம்பண்ணுவோய்! நீ அசுரப் படைகளை வெல்கின்றதும், மகத்தும், பேரறிவாளர்களை யேந்துவதும், மூடர்களால் நிலைத்துள்ள உடம்புகளை அன்போடு காப்பதும், அறியாமையிலாததும், ஆகிய அக்கினியைத் தோத்திரம் பண்ண ஆற்றலுடையோனுவாயாக. தோத்திரத்தால் இனிது*

போற்றுதற்குரியதும், தனங்களை படைவிப்பதும், கவசமென்னுங் கவாலை போடு கூடியதும், மஞ்சணிற வுரோமம்போல. (இதைக் கவசத்திற்கே விசேடணமாக்கிக் கொள்க.) செய்யா நின்ற துதிக்கு விடயமானதும், துதியால் பிரியப்படுவதும், ஆகிய அக்கினியை முன்னிட்டுப் பணிவிடை யென்னுங் கருமத்தைச் செய்வாராக. मूरः मूरा:, எனப் பாடபேதமுண்டு. சண்டுக் கண்டபடி சந்தமோதுவாரும், சிறிது வேற்றுமையாக, இருக்கோதுவாருங் கொள்வர்.

(2)

குறிப்பு.—அறிவுடையார்களின் உடம்புகளைப் பாதுகாப்பதுபோல் அறியாமையுடையார்களின் தேகங்களையும் பாதுகாப்பதுகொண்டு அக்கினியினுடைய பெருந்தன்மை தெ... எல்லாவற்றினுஞ் சிறப்புடையதாமெனக் கொள்க.

தனையை ...வெல்வதும், மூடர்களுடனிருக்தும் மூடத்தன்மையை படையாததும், பேரறிவுடையது...ம், வேட்போர்கள் விரல்களாற் கொள்ளப்பட்டதுமாகிய அக்கினியை விப்பிரர்கள் ...ர்கள் என்... பது ஆங்கில மொழிபெயர்ப்பின் கருத்து.

## மந்திரம் 3.

கீதம்—சுக்கிரம்.

३१ २ ३ १२३१ २ ३ १ २र ३ १२ ३ १२

75\. शुक्रं ते अन्यद्यजतं ते अन्यद् विषुरूपे अहनी द्यौरिवासि।

२ ३ २ ३१ २र २ १ २ ३२ ३ १ २

विश्वा हि माया अवसि *स्वधावन् भद्रा ते पूषन्निह रातिरस्तु॥३॥

இருக்கு 6-58-1.

ஶுக்ரம் தே அந்யத்³யஜதம் தே அந்யத்³ விஷுரூபே அஹநீ [த்³யௌரிவாஸி ।

விஶ்வா ஹி மாயா அவஸி ஸ்வதா⁴வந் ப⁴த்³ரா தே பூஷந்நிஹ [ராதிரஸ்து ॥

அந்வயம்.

हे पूषन्!, ते, अन्यत्, शुक्रं, ते, अन्यत्, यजतं, (अत एव) विषुरूपे, अहनी, (त्वं), द्यौः इव, असि, हे स्वधावन्!, हि, विश्वा माया, अवसि, ते भद्रा, राति इह अस्तु ॥

---

* स्वधावो, என்பது இருக்க பாடம்.

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पूषन् ! | ஹெ பூஷந் ! | (காத்தளிக்கும்) பூஷா தேவதையே ! |
| ते | தெ | உன்னுடைய |
| शुक्रं (वर्णं) | ஶுக்ரம் (வணம்) | வெண்மை நிறம் |
| अन्यत् | அந்யத் | பகல் வடிவம். |
| ते यजतं | தெ யஜதம் | உனது கருமை நிறம் |
| अन्यत् | அந்யத் | இரவு வடிவாம். |
| (अत एव) | (அத ஏவ) | இதனாலேயே |
| विषु रूपे | விஷு ரூபெ | மாறுபட்ட |
| अहनी | அஹநீ | பகலிரவுகளுண்டாயின |
| (त्वं) | (த்வம்) | (நீ) |
| द्यौः इव असि | த்யௌः இவ அஸி | சூரியன் போன்றிருக்கின்றாய். |
| हे स्वधावन् ! | ஹெ ஸ்வயாவந் ! | அன்னமுடைய பூஷா தேவதையே ! |
| हि विश्वा माया | ஹி விஶ்வா மாயா | மாயைகளனைத்தையும் |
| अवसि | அவஸி | பாதுகாக்கின்றாய் (ஆதலின்) |
| ते | தெ | உன்னுடைய |
| भद्रा | பத்ரா | மங்கலமாகிய |
| रातिः | ராதிः | ஈகை |
| इह अस्तु | இஹ அஸ்து | இங்குண்டாகுக. |

### சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—3. பரத்துவாச ரிஷி. திருஷ்டுப் சந்தம். பூஷா தேவதை.

பூஷா தேவ! உன்னுடைய வெண்மை நிறமானது ஒரு பொழுதாகும், பகல் வடிவமென்பதுமிதுவே. அங்ஙனமே இயற்கைக் கருமை நிறம், ஈண்டு மூலத்திலுள்ள (यजतं) (யஜதம்) என்பது கூட்டுறவாகிய பொருண் மேலதாம். நிற்கவே, ஒளியோடு கூட்டுறவுடையது எனவாயிற்று, கருமை வடிவமென்பதது. அது ஒரு பொழுதாம். இரவு வடிவமென்பதுமிதுவே. இவ்வாறு வெண்மை கருமையான பல நிறமுடைய நாளிரவுகள் உனது மகிமையாலுண்டாயின என்பது பொருள்.

அல்லது பூஷா தேவ! உன்னுடைய ஒரு வடிவம் பகலையுண்டாக்குகின்றது. உனது மற்றொரு வடிவம் வேட்கத்தக்கது. பிரகாசமில்லாதது. அது இரவை யுண்டாக்குகின்றது. இது பற்றியே, பகலிரவுகளுண்டாயின. பகலிரவுகளை யுண்டாக்குவதற்குச் சூரியனே கருத்தனவன். எவ்வாறு

அக்கினிக்கு அது பொருந்தும்? என்னுமா சங்கையை நீக்குவான் 'சூரியன் போற் பிரகாசிப்பவனு யிருக்கின்றாய் எனக் கூறப்படுகின்றது. எதனாலெ னின்? அன்னமுடைய தேவதையாகிய பூஷாவே! நீ அகில மாயைகளையும் (பிரக்ஞைகளென்பனவுமவை) எவ் வேதுவினாலிரட்சிக்கின்றனையோ, அக் காரணத்தால், பகலிரவிற்கும் நீ கருத்தன் என மேலோட்டுக. அத்தன்மைய உனது மங்கலமாகிய ஈகை எங்களிடத்துண்டாகுக என்பதாம். யாஸ்க முனி வரும் இம் மந்திரத்திற்கு நிருத்தம் 12-2-6-ம் சூத்திரத்தில் இவ்வாறே பொருள் கூறியுள்ளார் என்க. (3)

## மந்திரம் 4.

கீதம்—கௌத்சம்.

१ २ ३ १ २ ३ १ २ २ ३ १ २२
76. इडामग्ने पुरुदंꣳ सꣳसनिं गोः शश्वत्तमꣳ हुमानाय साध ।
१ २ ३ १ २२ ३ २उ ३ १ २ ३ १ २ ३ २
स्यान्नः सूनुस्तनयो विजावाग्ने सा ते सुमति र्भूत्वस्मे ॥ ४ ॥

இருக்கு 3-6-11.

ஐடாமக்நே புருதம்ஸம் ஸநிம் கோ: ஶஶ்வத்தமம் ஹ்வமாநாய ஸாத ।
ஸ்யாந்ந: ஸூநுஸ்தநயோ விஜாவாக்நே ஸாதே ஸுமதிர் பூத்வஸ்மே ॥

### அந்வயம்.

अग्ने! पुरुदंसं, गोः, सनिं, इडां, शश्वत्तमं, हुमानाय, (मह्यं), साध,
(किञ्च) हे अग्ने!, नः, सूनुः, तनयः स्यात्, (इति या ते मतिः)
सा ते, सुमतिः अस्मे, विजावा. भूतु ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்நே! | அக்கினியே! |
| पुरुदंसं | புருதம்ஸம் | பலவ்கைக்கருமங்கள் கொண்ட |
| गोः सनिं | கோ: ஸநிம் | கோ முதலியவற்றைத் தேடும் |
| इडां | ஐடாம் | இடாம் என்னும் பெயர்பூண்ட கோ தேவதையை |
| शश्वत्तमं | ஶஶ்வத்தமம் | எக் காலமும் |
| हुमानाय (मह्यं) | ஹ்வமாநாய (மஹ்யம்) | ஓமத்தலைவனு மெனக்கு |
| साध | ஸாத | சாத்தியம் பண்ணிவைப்பாயாக. |
| (किञ्च) | (கிஞ்ச) | (மற்றும்) |
| हे अग्ने! | ஹே அக்நே! | அக்கினியே! |

| | | |
|---|---|---|
| नः | நஃ | எமக்குப் |
| सूनुः तनयः स्यात् | ஸூநு: தநய: ஸ்யாத் | புத்திர பௌத்திரர்களுண்டாகுக. |
| (इति या ते मतिः) | (இதி யா தெ மதி:) | (உனக்குண்டாகும் யாதொரு இத்தகைய புத்தியுண்டோ), |
| सा ते सुमतिः | ஸா தெ ஸுமதி: | உன்னுடைய அத்தகைய நற்புத்தியானது |
| अस्मे | அஸ்மெ | எமக்குப் |
| विजावा | விஜாவா | பலனுடையதாய் |
| भूतु | பூது | ஆகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—4. விசுவாமித்திர ரிஷி. சந்தம் திருஷ்டுப். தேவதை அக்கினி.

அக்கினியே! அநேக கருமங்களுக்கிடமாகிய, கோ முதலிய பசுக்களைச் சம்பாதித்தற்குரிய 'இடாய்' என்னும் பெயர்பூண்ட கோ வடிவ தேவதையை எக்காலத்தும், வேள்வித் தலைவனுகிய எனக்குக் கைகூடுமாறு செய்துவைப்பாயாக. மற்றும், எங்கட்குப் புத்திர பௌத்திரர்க ளுண்டாகுக என உனக்குண்டாகும் நன் மதியானது எங்களிடத்துப் பலனுடையதாகுக.

குறிப்பு.—ஈண்டு 'पुरुदंसं' என்பதில் 'தம்சம்' என்றது வேடம் என நிகண்டு கூறியிருப்பினும் கருமப்பெயர்களுட் கூறினமைபற்றிக் கருமவாசகமாம், புரு, என்பது பலவகையாம். இவ்வாறுயவிடத்து பலவகைக் கருமங்கள் என்முயிற்று. மற்றும், அதை அன்மொழித் தொகையாக்கிப் பலவகைக் கருமங்களையுடையது எனக்கோடலால் கோவிற்கு விசேடமாயினமை காண்க.

## மந்திரம். 5.

கீதம்—காசியபம்.

१ २र ३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ २ ३ २
77\. प्र होता जातो महान्नभोविन् नृषद्मा सीद *दपां विवर्त्ते ।
२ ३ २ ३ २ ३ १ २र ३ १ २र ३ १ २ ३ २
दधयो धायी सुते वयांश्सि यन्ता वसूनि विधते तनूपाः ॥५॥

இருக்கு 10-46-1.

ப்ர ஹொதா ஜாதொ மஹாந்நபொவிந் ந்ருஷத்மா ஸீதத³பாம் விவர்த்தே ।
தத⁴யொ தா⁴யீ ஸுதெ வயாம்ஸி யந்தா வஸூநி விதெ⁴தெ தநூபா: ॥

* अपां मुपस्थे दधियों धायी स ते, என்பது இருக்கு.

## அந்வயம்.

योऽग्निः, अपां, विवर्त्ते, आसीदत्, (सः) (इदानीं), होता, जातः, महान्, नमोवित्, नृषद्मा, प्रसीदत्, (यद्वा) अपां, विवर्त्ते प्रसीदत्, (सोऽग्निः), दधत्, सुधायी, (हे स्तोतः!) (सोऽग्निः) विधते, ते, वयांसि, वसूनि, यन्ता (भवतु), (किंच) तनूपाः, भवतु ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| योऽग्निः | யோ(அ)க்நி: | யாதொரு அக்கினி |
| अपां विवर्त्ते | அபாம் விவர்த்தே | அந்திரிட்சப் பிரதேசத்தில் |
| आसीदत् | ஆஸீதத் | இருந்து கொண்டிருந்ததோ |
| (सः) | (ஸ:) | அவ் வக்கினி |
| (इदानीं) | (இதாநீம்) | (இப்போது) |
| होता जातः | ஹோதா ஜாத: | தலைவனது ஓமத்தை யுண்டாக்குவதாகவும் |
| महान् | மஹாந் | பூசிக்கத் தக்கதாகவும் |
| नमोवित् | நமோவித் | அந்தரிக்கத்தை யுணர்ந்ததாகவும் |
| नृषद्मा | ந்ருஷத்மா | வேட்கும், மனிதர்கட்கு அருகிலிருப்பதாகவும் |
| प्रसीदत् | ப்ரஸீதத் | களிப்படைகின்றது. |
| (यद्वा) | (யத்வா) | (அல்லது) |
| अपां विवर्त्ते | அபாம் விவர்த்தே | கருமங்கட் கருகில் |
| प्रसीदत् | ப்ரஸீதத் | களிப்படைகின்ற |
| (सोऽग्निः) | (ஸோ(அ)க்நி:) | அவ் வக்கினி |
| दधत् | தததத் | அவியைத்தாங்கிக்கொண்டு |
| सुधायी | ஸுதாயீ | வேதிகையிற்றாபிக்கப்பட்டது |
| (हे स्तोतः!) | (ஹே ஸ்தோத:!) | (துதிப்போய்!) |
| (सोऽग्निः) | (ஸோ(அ)க்நி:) | அவ் வக்கினியானது |
| विधते | விததே | நற்பணி செய்யும் |
| ते | தே | உனக்கு |
| वयांसि | வயாம்ஸி | அன்னங்களையும் |
| वसूनि | வஸூநி | தனங்களையும் |
| यन्ता (भवतु) | யந்தா (பவது) | நியமிப்பது (ஆகுக.) |
| (किञ्च) | (கிஞ்ச) | (மற்றும்) |
| तनूपाः | தநூபா: | உடம்பைக் காப்பாற்றுவதும் |
| (भवतु) | (பவது) | ஆகுக. |

### சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு 4. வத்சப்பிரிய ரிஷி. திருஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.

யாதோரக்கினி அந்தரிட்ச உலகத்தின் பிரதேசத்திய நீர் நிலையில் மின்னல் வடிவா யிருந்துகொண்டிருந்ததோ, அவ் வக்கினி இப்போது எசமானர்களுடைய ஓமத்தை யுண்டாக்குவதாய் வெளி வந்திருக்கின்றது. மற்றும், குணங்களாற் போற்றத்தக்கதாயும் அந்தரிக்கத்தை யுணர்ந்ததாயுமாகி, அங்குத் தோன்றியதால் அதை யுணர்ந்த தன்மை என்க. வேள்வித் தலைவர்கட்கு அருகிலிருந்துகொண்டு வேதிகையிற் களிப்புற்றுமிருக்கின்றது. அல்லது மூலத்திலுள்ள 'अपां' (அபாம்) என்பதற்குக் கருமம் பொருளாமாதலின் கருமங்கட்குச் சமீபத்தில் வேதிகையில், கூறிய இலக்கணமுடையதாயிருந்து களிப்படைகின்றது என்பதுமாம். அல்லது 'अपां' அபாம், என்பதற்கு நீரெனக்கொண்டு நீரிற்கு நடுவில் யாதோரக்கினி அவியை யேற்கப் பொறுக்கொணுததாய் மறைந்திருந்ததோ? அவ்வக்கினி மறித்துந் தேவர்களாற் பிரார்த்திக்கப்பட்டதாய்க் கூறியவண்ணமாயிருந்து வேதிகையிற் களிப்புற்றிருக்கின்றது எனினுமொக்கும். அத் தன்மைய அவ் வக்கினி அவிகளைத் தாங்கிக்கொண்டு (இருக்குமாறு) வேதிகையில் (மேடையில்) தாபிக்கப்பட்டதானது, தோத்திரஞ் செய்வோய்! அவ் வக்கினி, பணிசெய்யுமுனக்கு அன்னங்களையுந் திரவியங்களையும் நியமிப்பதாகுக. (கொடுப்பதாகுக என்பது மதம்.) மற்றும் உடம்பை யிரட்சிப்பதாகவு மாகுக. (5)

**குறிப்பு.**—'नृषद्मा' (நிருஷத்மா) 'नृषद्वा' (நிருஷத்வா) எனவும் பாடபேதமுண்டு. 'दधय धायी सुते' எனச் சந்தமோதுவாரும் 'दधिया धायी सते' என இருக் கோதுவாருஞ் சொள்வர்.

அப்பு என்பதற்குச் சருமமெனக் கொண்டதற்கு நிருக்தமே பிரமாணமாமென்க.

## மந்திரம் 6.

கீதம்—கிருதசேர அங்கிரசம்.

२ ३ ३ ३ १ २ '३ २ ३ १ २ ३ १ २ ३ १ २

78. प्र सम्राजमसुरस्य प्रशस्तं पुंसः कृष्टीनामनुमाद्यस्य ।

१ २ ३ २ ३१२ ३ १ २ ३ १ २ ३ १ २

इन्द्रस्येव प्र तवसस्कृतानि वन्दद्वारा वन्दमाना विवष्टु ॥ ६ ॥

இருக்கு 7-6-1.

ப்ர ஸம்ராஜமஸுரஸ்ய ப்ரஶஸ்தம் பும்ஸ: க்ருஷ்டீநாமநுமாத்ய[ஸ்ய ।

இந்த்ரஸ்யேவ ப்ர தவஸஸ்க்ருதாநி வந்தத்வாரா வந்தமாநா விவஷ்டு ॥

### அந்வயம்.

असुरस्य, पुंसः, कृष्टीनां, अनुमाद्यस्य, तवसः, इन्द्रस्य, इव, अग्नेः, प्रशस्तं, सम्राजं, प्र (स्तौतु,) (तथा), वन्दद्वारा, वन्दमाना, कृतानि, विवष्टु ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| असुरस्य | அஸுரஸ்ய | வலியுடையதும் |
| पुंसः | பும்ஸ: | வீரமுள்ளதும் |
| कृष्टीनां | க்ருஷ்டீநாம் | சனங்கட்குத் |
| अनुमाद्यस्य | அநுமாத்யஸ்ய | துதிக்கத்தக்கதும் |
| तवसः | தவஸ: | ஆற்றலுடைய |
| इन्द्रस्य इव | இந்த்ரஸ்ய இவ | இந்திரனுக்கு ஒத்ததுமாகிய |
| (अग्नेः) | (அக்நே:) | (அக்கினியினுடைய,) |
| प्रशस्तं | ப்ரஶஸ்தம் | மேம்பட்டதும் |
| सम्राजं | ஸம்ராஜம் | இனிது விளங்குகின்றதுமாகிய உருவத்தை |
| प्र (स्तौतु) | ப்ர (ஸ்தௌது) | நன்கு (துதிப்பீர்களாக,) |
| (तथा) वन्दद्वारा | (தயா) வந்தத்வாரா | (அங்ஙனமே) வணக்கத்தின் துவாரமாகிய துதி முதலியவைகளையும் |
| वन्दमाना | வந்தமாநா | யாவராலும் போற்றப்பட்ட |
| कृतानि | க்ருதாநி | கருமங்களையும் |
| प्र विवष्टु | ப்ர விவஷ்டு | நன்கு விரும்புவீர்களாக. |

### சாயணபாடியம்.

கண்டம்—8. இருக்கு—6. வசிட்ட ரிஷி. திருஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.

ஆற்றலுடையதும், வீரமுள்ளதும், ஈண்டு மூலத்திலுள்ள पुंसः (பும்ச:) என்னும் பதத்திற்கு வீரம் எனப் பொருள் கொள்ளப்பட்டது. வீரனுடைய ஆண் தன்மையாதலின் வீரியம் எனப்படுகின்றது. யாஸ்க முனிவரும், 'पुमान् पुरुमना भवति पुंसतेर्वा', என இதைக் கூறியுள்ளார். சனங்கட்குத் துதிக்கத் தக்கதும், வலியுள்ள இந்திரன் போன்றதுமாகிய அவ் வக்கினியின், பெருமை வாய்ந்ததும், மிக விளங்குவதுமாகிய வடிவத்தை நன்கு துதிப்பீர்களாக. அவ் வாறே துதி முதலியவைகளையும், யாவர்களும் போற்றுகின்ற கருமங்களையும் முழுதும் விரும்புவீர்களாக. (6)

குறிப்பு.—'प्रसम्म्राज मसुरस्य प्रशस्तं', எனச் சந்தமோதுவாரும், 'प्रसम्म्राजो असुरस्य प्रशस्तिम्' என இருக்கோதுவாருங் கொள்வார்.

'वन्दद्वारा वन्दमानां विवष्टु', எனவும், 'वन्दे दारुं वन्दमानो विवच्मि' எனவும் பாட பேதமுண்டு.

## மந்திரம் 7.

கீதம்—பரத்துவாச ரிஷி, பிராசாகம்.

३२ ३ १ २ ३१२ ३ १ २ ३१ २र ३ १ २
79. अरण्योर्निहितो जातवेदा गर्भ इवे * त्सुभृतो गर्भिणीभिः ।
३ १ २ ३ १ २ ३ १ २ ३१ २ ३क२र
दिवे दिव ईड्यो जागृवद्भिर्हविष्मद्भिर्मनुष्येभिरग्निः ॥ ७ ॥

இருக்கு 3-29-2.

அரண்யோர்நிஹிதோ ஜாதவேதா கர்ப இவேத்ஸுப்ருதோ கர்பி- [ணீபி: ।
திவே திவ ஈட்யோ ஜாக்ருவத்பிர் ஹவிஷ்மத்பிர் மநுஷ்யேபிரக்நி: ॥

அந்வயம்.

जातवेदाः, अरण्योः, निहितः (अयं), अग्निः, गर्भिणीभिः, गर्भः, सुभृतः, इवेत्, (तादृशोऽग्निः) हविष्मद्भिः, जागृवद्भिः, मनुष्येभिः, दिवे दिवे, ईड्यः, (भवति) ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| जातवेदाः | ஜாதவேதா: | தோன்றிய பொருளெல்லா முணர்ந்த |
| (अयं) अग्निः | (அயம்) அக்நி: | (இவ்) வக்கினி |
| अरण्योर्निहितः | அரண்யோர்நிஹித: | அரணிக் கட்டைகளிற் ருபிக்கப் பட்டிருக்கின்றது, |
| गर्भिणीभिः | கர்பிணீபி: | கருப்பங்கொண்ட பூவைகளால் |
| गर्भः | கர்ப: | கருப்பமானது |
| सुभृतः इवेत् | ஸுப்ருத: இவேத் | இனிது தாங்கப்படுமாறு |
| (तादृशोऽग्निः) | (தாத்ருசோऽக்நி:) | (அத்தன்மைய அக்கினி,) |
| हविष्मद्भिः | ஹவிஷ்மத்பி: | அவிகளைக் கைக்கொண்டவர்களும் |
| जागृवद्भिः | ஜாக்ருவத்பி: | விழித்துக்கொண் டிருப்பவர்களுமான |
| मनुष्येभिः | மநுஷ்யேபி: | மனிதர்களால் |
| दिवे दिवे | திவே திவே | ஒவ்வொரு நாளிலுங் |
| ईड्यः (भवति) | ஈட்ய: (பவதி) | துதிக்கத்தக்க(தாகின்றது.) |

* सुधितो गर्भिणीषु, என்பது இருக்கு.

### சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—7. விசுவாமித்திர ரிஷி. சந்தம் திருஷ்டுப். அக்கினி தேவதை.

எல்லா விடய வுணர்வுகளையுடைய இவ் வக்கினி, வேள்வியின் பொருட்டுத் தேவர்களால் இயற்கையாகவே அரணிக் கட்டைகளி லிருத்தப்பட்டிருக்கின்றது. அதிலுவமை :—கருப்பம் போல் என்றமை. கருப்பிணி மடைந்தையர்களால் கருப்பம் நன்கு தாங்கப்படுவதுபோல் என்பதாம். அவ் வண்ணத்த அக்கினி அவியைத் தாங்குபவர்களாயும், கருமங்களிற் சாக்கிரதையாயுமுள்ள மனிதர்களான எங்களால் ஒவ்வொரு தினத்திலும் துதி வடிவ வாக்குகளாற் போற்றத்தக்கதாகின்றது. (7)

### மந்திரம் 8.

கீதம்—வைசுவாநராக்கினி அத்திரி ரிஷி, ராக்ஷோக்னம்.

३ १२ ३ २ ३ २ ३ १२ १२

80. सनादग्ने मृणसि यातुधानान् न त्वा रक्षांᳫसि पृतनासु जिग्युः ।

१२ ३१ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २

अनुदह सह मूरान् *कयादो मा ते हेत्या मुक्षत दैव्यायाः ॥ ८ ॥

இருக்கு 10-87-19.

ஸநாதக்நே ம்ருணஸி யாதுதாநாந் ந த்வா ரக்ஷாம்ஸி ப்ருதநா [ஸு ஜிக்யு: ।

அநுதஹ ஸஹ மூராந் கயாதோ மா தே ஹேத்யா முக்ஷத [தைவ்யாயா: ॥

### அந்வயம்.

हे अग्ने ! (त्वं), सनात्, यातुधानान्, मृणसि, रक्षांसि, पृतनासु, त्वा, न जिग्युः, (त्वं), सह मूरान्, कयादः, अनुदह, ते, दैव्यायाः, हेत्याः, मा मुक्षत ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने ! | ஹே அக்நே ! | அக்கினியே ! |
| (त्वं) | (த்வம்) | (நீ) |
| सनात् | ஸநாத் | நீண்டகாலமாய் |
| यातुधानान् | யாதுதாநாந் | இராக்கதர்களை |
| मृणसि | ம்ருணஸி | பிடிக்கின்றாய். |

* क्रव्यादो, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| रक्षांसि | ரக்ஷாம்ஸி | இராக்கதர்கள் |
| पृतनासु | ப்ருதநாஸு | போர்களில் |
| त्वां | த்வாம் | உன்னை |
| न जिग्युः | ந ஜிக்யுஃ | வென்றிலர் |
| त्वं | த்வம் | நீ |
| सह मूरान् | ஸஹ மூராந் | கொல்லுந் தொழிலை யுடைய |
| कयादः | கயாதஃ | புலாலுண்ணும் இராக்கதர்களை |
| अनुदह | அநுதஹ | முறைப்படி யெரித்துவிடுவாயாக |
| ते | தே | உன்னுடைய |
| दैव्यायाः | தைவ்யாயாஃ | திவ்யமாகிய |
| हेत्याः | ஹேத்யாஃ | ஆயுதத்தினின்று |
| मा मुक्षत | மா முக்ஷத | (அவர்கள்) விடுபடாதிருப்பார்களாக. |

## சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—8. பாயு ரிஷி. சந்தம் திருஷ்டுப். அக்கினி தேவதை.

அக்கினியே! நீ நீண்டகால முதற்கொண்டு இராக்கதர்களைத் துன்புறுத்துகின்றாய். அங்ஙனமாயினும், உன்னை யுத்தத்தில் இராக்கதர்கள் வெல்ல முடியாராயினர். ஆயினும் அத்தகைய நீ இப்பொழுது கொல்லுந் தொழிலுக்குரிய புலாலுண்ணும் இராக்கதர்களை முறையே சுவாலையாற் சாம்பராக்குவாயாக. ஆயினும், உன்னுடைய சம்பந்தமாகிய திவ்யாத்திரத்தினின்றும் (அவர்கள்) விடுபடாதோராவார்களாக. (8)

குறிப்பு.—माते हेत्या मुक्षत दैव्यायाः என்பதற்கு அவர் புலாலை விடாதாராகுக. தேவர்கள் தமது திவ்ய வடிவத்தாற் கொல்வார்களாக, என்னும் பொருள் கூற விவரணக்காரர் கொள்கை. ஏனையவை பாடியத்திற் கியைந்தனவே. இத ரிஷி சயா எனக் கொள்ளப்பட்டது ஆங்கிலத்தில்.

ஈண்டு, கயாத: (புலாலுண்ணும்) என்றதற்குப் பாவிகள் எனவும், அல்லது அ, வடிவ மாமிசத்தைத் தின்னும் வைதிகர்கள் எனவுங் கொள்வர், இதில் பாவிகளை நேரே தேவர்கள் சொல்கின்றார்கள். வைதிகர்களைப் பரலோகத்திற்குக் கொண்டு போகின்றார்கள், என்பர் மேனாட்டாசிரியரிற் சிலர்.

## எட்டாவது கண்டம்

முற்றும்.

# ஒன்பதாவது கண்டம்.

## பிரபாடகம்—1. அத்தியாயம்—1.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

२ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २
.81 अग्न ओजिष्ठमाभर द्युम्नमस्मभ्य मध्रिगो ।
१ २ ३१२ २ २ ३ २ ३ १ २ ३ १ २
*प्र नो राये पनीयसे रत्सि वाजाय पन्थाम् ॥ १ ॥

இருக்கு 5-10-1.

அக்நெ ஒஜிஷ்டமாபர த்யும்நமஸ்மப்ய மத்ரிகொ ।
ப்ர நொ ராயெ பநீயஸெ ரத்ஸி வாஜாய பந்தாம் ॥

அந்வயம்.

हे अग्ने!, ओजिष्ठं, द्युम्नं, अस्मभ्यं, आभर, हे अध्रिगो!, पनीयसे, राये नः, प्र (प्रयोजय) वाजाय पन्थां रत्सि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने ! | ஹெ அக்நெ ! | அக்கினியே ! |
| ओजिष्ठं | ஒஜிஷ்டம் | பேராற்றலுடையதும் |
| द्युम्नं | த்யும்நம் | பூண் முதலியவைகளால் விளங்கப்பட்டதுமாகிய தனத்தை |
| अस्मभ्यं | அஸ்மப்யம் | எங்கட்குக் |
| [आभ]र | ஆபர | கொண்டுவந்து நிறையக் கொடுப்பாயாக. |
| [अ]ध्रिगो ! | ஹெ அத்ரிகொ ! | தடையற்ற போக்குடையோய் ! |
| | நঃ | எங்களை |
| [पन]ीयसे | பநீயஸெ | போற்றத்தக்க |
| राये | ராயெ | தனத்தோடு |
| प्र (प्रयोजय) | ப்ர (ப்ரயொஜய) | கூடியவர்களாகச் செய்வாயாக. |
| वाजाय | வாஜாய | அன்னத்திற்கு |
| पन्थां | பந்தாம் | வழியைச் |
| रत्सि | ரத்ஸி | செய்வாயாக. |

* प्र णो राया परीणसा, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

இம் மந்திரந் தொடங்கி ஏழாவது, எட்டாவது கண்டங்களில் '16 மந்திரங்கள்' அனுஷ்டுப் சந்தங்களை யுடையன. 10-ம் கண்டத்தின் முதன் மந்திரம் வைசுவ தேவதையை யுடையது, 10-ம்கண்டத்தின் இரண்டாம் மந்திரம் அங்கிரசர்களின் துதி. எஞ்சின 14 மந்திரங்களும் அக்கினியைத் தேவதையாகக் கொண்டன.

கண்டம்—9. இருக்கு—1. கயத்திரி ரிஷி. அனுஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.

அக்கினியே! மிகுந்த வலி யுடையதும், கங்கணம், முடி, முதலிய வடிவங்களால் யாண்டும் விளங்கப்பட்டதுமாகிய தனத்தை எங்கட்குக் கொண்டுவந்து தருவாயாக. தடையிலாது செல்வோய்! அல்லது கேடிலாக் கிரணங்களை யுடையோய்! எங்களைப் போற்றுதற்குரிய தனத்தோடு கூடியவர்களாகச் செய்வாயாக. அன்னம் எங்கட்கருகில் வந்தடையுஞ் சாதனமாம் மார்க்கத்தை யினிது வரையறுப்பாயாக. செய்வாயாக என்பதுமது. (1)

குறிப்பு.—மூலத்தில் 'अध्रिगो!' என்றது தடையின்றிச் செல்லுதல் என்னும் பொருளைத் தந்து நின்றது, गो என்பது கமனம், (நடத்தல்) அல்லது கிரணம் எனக் கூறுகின்றது நிகண்டு.

## மந்திரம் 2.

கீதம்—அக்கினிதேவ பிருகது.

१ २ ३२उ ३ २ ३ १ २ ३ १ २
82. यदि वीरो अनुष्यादग्नि मिन्धीत मर्त्यः ।
३ १२ ३ १ २ ३१ २र ३ १ २
आ जुह्वद्धव्य मानुषक् शर्म भक्षीत दैव्यम् ॥ २ ॥

இருக்கு 5-2-6.

𑌯𑌦𑌿 𑌵𑍀𑌰𑍋 𑌅𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑌗𑍍𑌨𑌿𑌮𑌿𑌨𑍍𑌧𑍀𑌤 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌃 ।
𑌆 𑌜𑍁𑌹𑍍𑌵𑌦𑍍𑌧𑌵𑍍𑌯 𑌮𑌾𑌨𑍁𑌷𑌕𑍍 𑌶𑌰𑍍𑌮 𑌭𑌕𑍍𑌷𑍀𑌤 𑌦𑍈𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

அந்வயம்.

यदि वीरः स्यात्, (तदा), (सः) मर्त्यः, अग्निं, इन्धीत, (किञ्च), आनुषक्

हव्यं, आ जुह्वत्, (अपिच), दैव्यं, शर्म, भक्षीत ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| यदि वीरः स्यात् | 𑌯𑌦𑌿 𑌵𑍀𑌰𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | எக்கால் வீரக்குழந்தை பிறக்கின்றதோ, |
| (तदा सः) मर्त्यः | (𑌤𑌦𑌾 𑌸𑌃) 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌃 | அக்கால் அம்மனிதன் |
| अग्निं इन्धीत | 𑌅𑌗𑍍𑌨𑌿𑌂 𑌇𑌨𑍍𑌧𑍀𑌤 | அக்கினியை வளர்க்குக. |
| (किञ्च) | (𑌕𑌿𑌞𑍍𑌚) | (மற்றும்) |
| आनुषक् | 𑌆𑌨𑍁𑌷𑌕𑍍 | இடையறாது |
| हव्यं | 𑌹𑌵𑍍𑌯𑌂 | அவியை (தேவ உணவை) |
| आजुह्वत् | 𑌆𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑍍 | இனிது கொடுப்பானாக. |
| (अपिच) | (𑌅𑌪𑌿𑌚) | (மற்றும்) |
| दैव्यं शर्म | 𑌦𑍈𑌵𑍍𑌯𑌂 𑌶𑌰𑍍𑌮 | வானவரின் இன்பத்தை அல்லது வீட்டை |
| भक्षीत | 𑌭𑌕𑍍𑌷𑍀𑌤 | அநுபவிப்பான். |

### சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—2. வாமதேவர், பரத்துவாசர், அல்லது வார்ஹஸ்பத்தியர் ரிஷி. அனுஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.

எப்போது எந்த மனிதனுக்கு வீரமாகிய மகப்பேறுண்டாகியதோ, அப்போது அம் மனிதன் தீ வளர்ப்பானாக. மற்றும், உள்ளவாறு இடையின்றி நோக்கோடு அவி கொடுப்பானாக. மற்றும் தேவர்கள் சம்பந்தமாகிய இன்பத்தையேனும் அல்லது வீட்டையேனும் அநுபவிப்பான். (2)

குறிப்பு.—எக்கால் மனிதன் அவியை இடையறாது கொடுத்து அக்கினியை வளர்க்கின்றானோ, அக்காலத்திலே வீரனாகின்றான். மற்றும் தேவர்களின் சுகத்தையநுபவிக்கின்றான் என்பது விவரணக்காரர் உடன்பாடு.

## மந்திரம் 3.

கீதம்—யாமம்.

३ १ २ ३१ ३ २उ ३ १र २र

83. त्वेषस्ते धूम ऋण्वति * दिवि सं छुक्र आततः ।

२ ३ २उ ३२उ ३ १ २ ३ १ २

सूरो नहि द्युता त्वं कृपा पावक रोचसे ॥ ३ ॥

இருக்கு 6-2-6.

𑌤𑍍𑌵𑍇𑌷𑌸𑍍𑌤𑍇 𑌧𑍂𑌮 𑌋𑌣𑍍𑌵𑌤𑌿 𑌦𑌿𑌵𑌿 𑌸𑌂 𑌛𑍁𑌕𑍍𑌰 𑌆𑌤𑌤𑌃 ।
𑌸𑍂𑌰𑍋 𑌨𑌹𑌿 𑌦𑍍𑌯𑍁𑌤𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌕𑍃𑌪𑌾 𑌪𑌾𑌵𑌕 𑌰𑍋𑌚𑌸𑍇 ॥

---

*विषञ्छुक्र, என்பது இருக்கு.

அந்வயம்.

**हे अग्ने! त्वेषः, ते, शुक्रः, धूमः, दिवि, आततः, ऋण्वति, हे पावक! सूरो न, कृपा, (स्तुतः सन्) त्वं, द्युता, रोचसे, हि ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने ! | ஹே அக்நே ! | அக்கினியே ! |
| त्वेषः ते | த்வேஷः தே | வளர்கின்ற உனது |
| शुक्रः धूमः | ஶுக்ரः தூமः | வெண்மைப்புகை |
| दिवि | திவி | வெளியில் |
| आततः | ஆததः | விரிந்து |
| ऋण्वति | ருண்வதி | மேகவுருவாய்ப் பரிணமித்துப் போகின்றது |
| हे पावक! | ஹே பாவக ! | பரிசுத்தப்படுத்துவோய் ! |
| सूरो न | ஸூரோ ந | இரவி போல |
| कृपा (स्तुतः सन्) | க்ருபா (ஸ்துதः ஸந்) | நோக்குண்டாமாறு செய்யக்கூடிய துதியாற்றுதிக்கப்பட்டவனாய் |
| त्वं | த்வம் | நீ |
| द्युता | த்யுதா | பிரகாசத் (தால்) தோடு |
| रोचसे हि | ரோசஸே ஹி | உண்மையாய் விளங்குகின்றாய் |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—3. பரத்துவாசரிஷி. அநுஷ்டுப் சந்தம். தே[வதை]
அக்கினி.

அக்கினியே! பிரகாசிக்கின்ற உன்னுடைய நிர்மலமாகிய வெண்மை நிறமாகிய புகையானது அந்தரிக்ஷத்தில் விரிந்து மே[கமாய்ப்] பரிணமித்துப் போகின்றது. மற்றும், பரிசுத்தமாக்குவோ[னாய்ப்] போய்! அக்கினியே! இரவியொப்பத் துதிக்கத்தக்க நோ[க்கைச்] செய்யவல்லதுதியால் துதிக்கப்பட்ட நீ உண்மையில் ஒ[ளிர்]கின்றாய் என்பதாம்.

குறிப்பு.—உலக வழக்கில் 'ऋच्छति' என ஒருமையில் வ[ரும்] 'ऋण्वति' என 'நுக்' என்னு மிடைச்சொற் பெற்றுப் பன்மை[...]

## மந்திரம் 4.

*கீதம்—அக்கினி தேவதையின் பிருகது.*

१ २र३१ २र ३ १ २र
84. त्वं हि क्षैतवद्यशोऽग्ने मित्रो न पत्यसे ।
१ २ ३ २ ३ १ २ ३ १ २र
त्वं विचर्षणे श्रवो वसो पुष्टिं न पुष्यसि ॥ ४ ॥

இருக்கு 6-2-1.

த்வம் ஹி க்ஷைதவத்யஶோऽக்நே மித்ரோ ந பத்யஸே ।
த்வம் விசர்ஷணே ஶ்ரவோ வஸோ புஷ்டிம் ந புஷ்யஸி ॥

### அந்வயம்.

हे अग्ने !, त्वं, हि, क्षैतवत्, यशः, मित्रः न, पत्यसे, हे विचर्षणे ! वसो ! त्वं, श्रवः, पुष्टिं न, पुष्यसि ॥

### பதவுரை.

अग्ने !

| | |
|---|---|
| ஹே அக்நே ! | அக்கினியே ! |
| த்வம் | நீ |
| ஹி | உண்மையாய் |
| க்ஷைதவத் | காய்ந்த விறகோடு கூடிய |
| யஶ: | அன்னத்தை |
| மித்ர: ந | பகலபிமானி தேவதையைப் போல |
| பத்யஸே | அடைகின்றாய். (ஆதலின்) |
| ஹே விசர்ஷணே ! | எல்லாவற்றையு மினிது காண்போய் ! |
| வஸோ ! | வியாபக ! |
| த்வம் | நீ |
| ஶ்ரவ: | புகழுற்ற அன்னத்திற்கு |
| புஷ்டிம் ந | வலுவையும் |
| புஷ்யஸி | விருத்தி பண்ணுகின்றாய் |

## சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—4. பாரத்துவாச ரிஷி. சந்தம் அனுஷ்டுப். தேவதை அக்கினி.

அக்கினியே! நீ உண்மையில் உலர்ந்த விறகோடு கூடிய அன்னத்தை அடைகின்றாய். அதிலுவமை:—மித்திர தேவதைபோல என்றது. பகலையபிமானிக்குந் தேவதை மித்திரனெனப்படும். அது போன்று என்பதாம். (இது மூலத்திலுள்ள 'क्षैतं' க்ஷைதம், என்றதற்கு க்ஷய: குறைவு அதைப் பற்றியது உலர்ந்த விறகு எனப் பொருட்படுத்திக் கூறப்பட்டது). அல்லது, க்ஷய: என்பது வீடு என நிகண்டு கூறுகின்றது ஆதலின் அவ்வீட்டிலுள்ளது அவி வடிவ அன்னம். அவ் வன்னத்தையுடைய அவ்வீட்டை மித்திரனுகிய புருடன் அடைவது போன்று அடைகின்றாய் என்பதுமாம். அல்லது 'पत्यसे' (பத்யசே) என்னுஞ் சொல் ஐசுவரிய பொருளுடையது என்று நிருக்தங் கூறுதலின் இத்தன்மைய அன்னத்தைச் செலுத்துகின்றாய் என்பதுமாம். இக்காரணத்தாலேயே சிறப்பு வகையால் எல்லாவற்றையுங் காணப்பட்டதும் வியாபகமுமாகிய அக்கினியே! நீ தலைவன் வீட்டிலுள்ள புகழ் வாய்ந்த அன்னத்தையும், அன்ன காரியமாகிய புஷ்டியையும் விருத்தி பண்ணுகின்றாய் என்பதாம். (4)

குறிப்பு.—மித்திரன் என்பது சூரியனுக்கு மற்றோர் பெயராம். இதுவே பகலையுண்டாக்கும் அபிமானி தேவதை. நிருக்தத்தில் இதுவே வாயுமுதலிய தேவகணங்கட்கு நடுவில் இருக்கின்றது எனக் கூறப்பட்டுள்ளது.

நிகண்டு 'यशः' என்றதும் அன்னமென நிகண்டு கூறுகின்றது. ஆதலின் அவி வடிவ அன்னம் என்பது பொருள்.

## மந்திரம் 5.

கீதம்—கௌமுத ரிஷி பிருகதம்.

३ २३ १ २ ३ २ ३ १ २३ १ २
85. प्रातरग्निः पुरुप्रियो विश स्तवेताऽतिथिः ।
२ ३ २ ३ १ २ ३ १ २र ३ १ २
*विश्वे यस्मिन्नमर्त्ये हव्यं मर्त्तास इन्धते ॥ ५ ॥

இருக்

ப்ராதரக்நி: புருப்ரியோ விஶ ஸ்தவேதாऽதிதி: ।
விஶ்வே யஸ்மிந்நமர்த்யே ஹவ்யம் மர்த்தாஸ இந்தே ॥

அந்வயம்.

पुरुप्रियः, विशः, अतिथिः, अग्निः, प्रातः, स्तवेत, विश्वे, मर्त्तास
यस्मिन्, अमर्त्ये, हव्यं, इन्धते ॥

* विश्वानि यो अमर्त्यो हव्या मर्त्येषु रेण्वति, என்பது இ(

பதவுரை.

| | | |
|---|---|---|
| पुरुप्रिय: | புருப்ரிய: | பல்லோர்க்கும் பிரியமானதும் |
| विश: | விஶ: | தலைவனிடத்துப் பொருளைச் சேர்ப்பதும் |
| अतिथि: | அதிதி: | எசமான் வீட்டிற்கு எப்போதுஞ் செல்வதுமாகிய |
| अग्नि: | அக்நி: | அக்கினி, |
| प्रात: | ப்ராத: | விடியற் போதில் |
| स्तवेत | ஸ்தவேத | துதிக்கப்படுகின்றது. |
| विश्वे मर्त्तास: | விஶ்வே மர்த்தாஸ: | எல்லா மனிதர்களும் |
| यस्मिन् अमर्त्ये | யஸ்மிந் அமர்த்யே | இறப்பிலாத எவ் வக்கினியில் |
| हव्यं | ஹவ்யம் | அவியைத் |
| इन्धते | இந்தேதே | தாபிக்கின்றார்களோ, (அவ் வக்கினி துதிக்கப்படுகின்றது). |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—5. மிருக்த வாஹாத்வித ரிஷி. அநுஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.

எல்லார்க்கும் பிரியனும், எசமானிடத்தில் தனத்தைச் சேரச்செய்வோனும், எசமானர்களுடைய வீட்டிற்குத் திதிகளிற் செல்லாதோனும், எப்போதுஞ் செல்பவனும் என்பது மது. “அதிதி வீடுகட்குச் செல்பவன். திதிகளில் பரகுலங்களை அல்லது பரவீடுகளை அடைபவனுவான்” என யாஸ்க முனிவரும் நிருக்தத்தில் கூறியுள்ளார். ஆதலின் இவ்விதமாகிய வக்கினி விடியற்காலத்திற் றோத்திரம் பண்ணப்படுகின்றது. இறவாத ...டைய எவ் வக்கினியில் எல்லா மனிதர்களும் அவியைக் கொண்டு ...பிக்கின்றார்களோ, அவ் வக்கினி எனக் கூட்டிக்கொள்க. (5)

மந்திரம் 6.

—அக்கினி ரிஷி யத்வாகிஷ்டீயம், யன்மகிஷ்டீயம்.

१ २२३ २३१२ ३१२
यद्वाहिष्ठं तदग्नये बृहदर्च विभावसो ।
१२ ३ २३ २उ ३ १ २
महिषीव त्वद्रयिस्त्वद्वाजा उदीरते ॥ ६ ॥

இருக்கு 5-25-7.

...ஷ்டம் ததக்நயே ப்ருஹதர்ச விபாவஸோ ।
...த்வத்ரயிஸ்த்வத்வாஜா உதீரதே ॥

அந்வயம்.

वाहिष्ठं यत्, तत्, अग्नये, (क्रियते) हे विभावसो!, बृहत् अर्च, (यतः) त्वत्, महिषीव, रयिः, वाजा, उदीरते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वाहिष्ठं | வாஹிஷ்டம் | நன்மையை அடைவிப்பதாகிய |
| यत् तत् | யத் தத் | யாதொரு தோத்திரமுண்டோ அது |
| अग्नये (क्रियते) | அக்நயெ (க்ரியதெ) | அக்கினிக்குச் (செய்யப்படுகின்றது.) |
| हे विभावसो! | ஹெ விபாவஸொ! | கிரணமாகிய தனமுடையோய்! |
| बृहत् | ப்ருஹத் | மிகுந்த, (அன்ன, தனங்களை) |
| अर्च | அர்ச | எமக்குக் கொடுப்பாயாக. |
| यतः | யதஃ | யாதினாலெனின்? |
| त्वत् | த்வத் | நின்னிடத்திலிருந்து |
| महिषीव | மஹிஷீவ | மிகுதியாகவே |
| रयिः | ரயிஃ | தனங்களும் |
| वाजा | வாஜா | அன்னங்களும் |
| उदीरते | உதீரதெ | வெளிப்படுகின்றன (ஆகலின் என்க.) |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—6. வசூயவ ஆத்ரேயர்கள் ரிஷிகள். சந்தம் அனுஷ்டுப். அக்கினி தேவதை.

நன்மைக்குக் கொண்டுபோகப்பட்ட தோத்திர மெதுவோ, அது அக்கினிக்குச் செய்யப்படுகின்றது. இவ்வாறு தோத்திரஞ் செய்வதா கிரணத்தையே தனமாகவுடைய, அக்கினியே! நீ மிகுந்த தனத்தை அன்னத்தையும் எங்கட்குத் தருவாயாக. எவ்வாறு இதற்கு அன்ன த களைக் கொடுக்குந்தன்மை? (என்றவா வருமிடத்துக் கூறப்படுகின் எக்காரணத்தால் நின்னிடத்திலிருந்து மிகுந்த திரவியங்களும், அன்ன ளும், வெளிப்படுகின்றனவோ, அக்காரணத்தாலேயே என்பதாம். மூ வுள்ள 'இவ' என்னுஞ் சொல் அசை.

குறிப்பு—மூலத்தில் 'महिषीव' என்பதற்கு வேந்தனுடைய ம னிடத்திலேயே இருப்பது போன்று தனமுதலியவைகள் நின்னிடத்நி கின்றன என்பர் மேனாட்டாசிரியர்.

## மந்திரம் 7.

கீதம்—அக்கினி ரிஷி, விசோவிசீயம் அல்லது எடம்.

३ १ २ ३ १ २ ३ १ २ ३ २

87. विशो विशो वो अतिथिं वाजयन्तः पुरुप्रियम् ।

३ २ ३ २ ३ १ २ ३ २ ३ २ ३ १ २

अग्निं वो दुर्यं वचः स्तुषे शूषस्य मन्मभिः ॥ ७ ॥

இருக்கு 8-74-1.

விஶோ விஶோ வோ அதிதிம் வாஜயந்த: புருப்ரியம் ।
அக்நிம் வோ து³ர்யம் வச: ஸ்துஷே ஶூஷஸ்ய மந்மபி⁴: ॥

அந்வயம்.

(हे ऋत्विजः यजमानाः!) वः, वाजयन्तः, विशः, विशः, पुरुप्रियं, अतिथिं, अग्निं, स्तुत्या, 'परिचरत' (अहं च), वः, दुर्यं, अग्निं, शूषस्य, (लाभाय), मन्मभिः, वचः, स्तुषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ऋत्विजः! | ஹே ருத்விஜ:! | வேட்போர்காள்! |
| यजमानाः! | யஜமாநா:! | தலைவர்காள்! |
| वः | வ: | நீங்கள் |
| वाजयन्तः | வாஜயந்த: | அன்னத்தை விரும்பினவர்களாய் |
| विशः विशः | விஶ: விஶ: | எல்லாப் பிரசைகட்கும் |
| पुरुप्रियं | புருப்ரியம் | மிகப் பிரியமும் |
| अतिथिं | அதிதிம் | பூசிக்கத் தக்கதுமாகிய |
| ग्निं | அக்நிம் | அக்கினியைத் |
| त्या | ஸ்துத்யா | தோத்திரத்தால் |
| चरत) | (பரிசரத) | (இறைஞ்சுவீர்களாக.) |
| ं च) | (அஹம் ச) | யானும் |
| | வ: | உங்கணிமித்தம் |
| | து³ர்யம் | வீட்டிற்கினியதாகிய |
| | அக்நிம் | அக்கினியை |
| ाय) | ஶூஷஸ்ய (லாபாய) | சுகமடைதற் பொருட்டு |
| | மந்மபி⁴: வச: | தெளிந்த துதிகளான வாக்குகளால் |
| | ஸ்துஷே | துதிக்கின்றேன். |

### சாயண பாடியம்.

*கண்டம்—9. இருக்கு—7. கோபவன ரிஷி. அல்லது சப்தவத்ரி ரிஷி. அனுஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.*

*வேட்போர்காள்! வேள்வித் தலைவர்காள்! நீங்கள் அன்னத்தை விரும்பினவர்களாகி எல்லாச் சனங்கட்கும் மிகப் பிரியமாகியதும், பூசிக்கத் தக்கதுமாகிய அக்கினியைத் தோத்திரத்தால் இறைஞ்சுவீர்களாக. இறைஞ்சுவீர்களாக என்பது எஞ்சி நின்றது. யானும் உங்கட்காக வீட்டிற்கு இதமாகிய அக்கினியைச் சுக லாபத்தின் பொருட்டுத் தோத்திரம் பண்ணுகின்றேன். எச் சாதனங்களாலெனின்? மனனஞ் செய்யப்பட்ட தோத்திரங்களினால். போற்றுகின்றேன் என மேற் கூட்டிக்கொள்க.* (7)

**குறிப்பு.**—*துர்யம் = வீடு, சுபம் = சுகம், என நிருத்தம் கூறுகின்றது, வேட்போர்கள் ஒவ்வொருவருக்கும் அதிதியாயும், வீட்டிற்கு வெளியே யாகத்தில் இருக்கப்பட்டதுமாகிய அக்கினியைத் துதிக்கின்றேன். துர்யம் வாசலிலுண்டாவது எனப் பாடியம் கூறுகின்றது என்பர் மேனாட்டு மொழி பெயர்ப்பாசிரியர்.*

### மந்திரம் 8.

*கீதம்—சார்க்கப் பிரசாபதி ரிஷி, கனீனிகம்.*

३२उ ३ २ ३ १ २र ३ २ ३१२
88. **बृहद्वयो हि भानवेऽर्चा देवायाग्नये ।**
२ ३१ २र ३ १ २ ३२ ३२
**यं मित्रं न * प्रशस्तये मर्त्तासो दधिरे पुरः ॥ ८ ॥**

இருக்கு 5-16-1.

*ബൃഹദ്വയോ ഹി ഭാനവേഽർച്ചാ ദേവായാഗ്നയേ ।*
*യം മിത്രം ന പ്രശസ്തയേ മർത്താസോ ദധിരേ പുരഃ ॥*

### அந்வயம்.

भानवे, बृहत्, वयः, (दीयते), हि, (अतस्त्वमपि) देवाय, अग्नये, वयः, अर्चा, मर्त्तासः, यं मित्रं, न, प्रशस्तये, पुरः दधिरे ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **भानवे** | *ഭാനവേ* | *வேள்வியில் ஒளிர்கின்ற அக்கினிக்கு* |
| **बृहत्** | *ബൃഹത്* | *அவி வடிவாய் மிகுந்துள்ள* |
| **वयः** | *വയഃ* | *அன்னங்* |

---

* प्रशस्तिभि र्मर्त्तासो, *என்பது இருக்கு.*

| | | |
|---|---|---|
| (दीयते) | (தீயதே) | (கொடுக்கப்படுகின்றது.) |
| हि (अतः) | ஹி (அதஃ) | இக்காரணத்தால் |
| (त्वमपि) | (த்வமபி) | (நீயும்) |
| देवाय अग्नये | தேவாய அக்நயே | பிரகாசமாகிய அக்கினிக்கு |
| वयः | வயஃ | அன்னங் |
| अर्च्चा | அர்ச்சா | கொடுப்பாயாக. |
| मर्त्तासः | மர்த்தாஸஃ | மனிதர்கள் |
| यं | யம் | எவ் வக்கினியை |
| मित्रं न | மித்ரம் ந | நண்பனைப்போல |
| प्रशस्तये | ப்ரஶஸ்தயே | மேலாகிய துதியின் பொருட்டு |
| पुरः दधिरे | புரஃ ததிரே | முன்பு நிலை நிறுத்துகின்றார்களோ (அவ் வக்கினிக்கு). |

சாயண பாடியம்

கண்டம்—9. இருக்கு—8. புருராத்திரேய ரிஷி. அனுஷ்டுப் சந்தம். அக்கினி தேவதை.

வேள்வியில் மிகப் பிரகாசிக்கின்ற அக்கினிக்கு அவி வடிவ மகத்தாகிய அன்னங் கொடுக்கப்படுகின்றது. ஆதலின் நீயும் பிரகாசிக்கின்ற அக்கினியின் பொருட்டு அன்னத்தைக் கொடுப்பாயாக. மனிதர்கள் எவ் வக்கினியை நண்பனைப்போன்று சிறந்த தோத்திரத்தின் பொருட்டு (அக்கினி நம் பொருட்டுத் தேவர்களைத் துதிக்குக என்னுந் துதியின் பொருட்டு அவ்வக்கினியை) முன்பு நிலைநிறுத்துகின்றார்களோ, (அவ்வக்கினிக்குக் கொடுப்பாயாக என இயைத்துக்கொள்க). (8)

குறிப்பு.—'पुरः दधिरे' என்றதற்கு—கிழக்குப் பக்கத்திலுள்ள வேதிகையில் தாபிக்கின்றார்களோ, எனப் பொருள் கூறப்பட்டுள்ளது ஆங்கிலேய மொழி பெயர்ப்பில்.

## மந்திரம் 9.

கீதம்—அத்திரி ரிஷி, சுபௌத வர்ணம்.

१२ ३१ २ ३ १२३१ २र

89. * अगन्म वृत्रहन्तमं ज्येष्ठमग्निमानवम् ।

१ २ ३१२ ३ २ ३१२ ३ १ २

† यः स्म श्रुतर्वन्नार्क्षे बृहदनीक इध्यते ॥ ९ ॥

இருக்கு 1-7-8.

* आगन्म, † यस्य श्रुतर्वा बृहन्नार्क्षो अनीक एधते, என்பது இருக்கு.

அகந்ம வ்ருத்ரஹந்தமம் ஜ்யேஷ்டமக்நிமாநவம் ।
யஸ்ஸ ஸ்ருதர்வந்நார்க்ஷே ப்ருஹதநீக இத்யதே ॥

அந்வயம்.

**वृत्रहन्तमं, ज्येष्ठं, आनवं, अग्निं, अगन्म, यः, (अग्निः); आर्क्षे, श्रुतर्वन्, बृहत्, अनीकः इध्यते (स्म) ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **वृत्रहन्तमं** | வ்ருத்ரஹந்தமம் | பாவத்தை மிகத் தொலைப்பதும் |
| **ज्येष्ठं** | ஜ்யேஷ்டம் | போற்றத் தக்கதும் |
| **आनवं** | ஆநவம் | மனிதனைப் பற்றியதுமாகிய |
| **अग्निं** | அக்நிம் | அக்கினியை |
| **अगन्म** | அகந்ம | அடைந்தோம், (யானடைந்தேன்), |
| **यः (अग्निः)** | யஃ (அக்நிஃ) | எவ்வக்கினி |
| **आर्क्षे श्रुतर्वन्** | ஆர்க்ஷே ஶ்ருதர்வந் | ரிக்ஷ புத்திரனாகிய சுருதவன்மன் நிமித்தம் |
| **बृहत्** | ப்ருஹத் | பெரிய |
| **अनीकः** | அநீகஃ | சுவாலைக் கூட்டமுடையதாய் |
| **इध्यते स्म** | இத்யதே ஸ்ம | வளர்க்கப்பட்டிருந்ததோ, (அவ்வக்கினியை). |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—9. கோபவன ரிஷி.

பாவங்களை முழுது மொழிப்பதும், பூசிக்கத் தக்கதும், மனித சம்பந்தமுடையதும், அவர்கட்கு இனிமை செய்வதும், ஆகிய அக்கினியை யாம் அடைந்தோம். (போற்றுதற்குப் பன்மை கூறல்) யாதோரக்கினி ரிக்ஷ புத்திரனாகிய 'சுருதவன்மன்' எனப் பெயர் கொண்ட வேந்தன் பொருட்டுப் பெரிய சுவாலைக் கூட்டங்களை யுடையதாய் விருத்தியாகி யிருந்ததோ, அவ்வக்கினியை யாம் அடைந்தோமென அந்வயித்துக்கொள்க. இவ்வாறு சுருதவன்மன் வீட்டிற்கு உண்ணும் பொருட்டு வந்த கோபவன ரிஷி அக்கினியைத் துதிக்கின்றார். (9)

குறிப்பு.—முற்காலத்தில் ஓர்கால் இம் மந்திரத்தைக் கண்ட கோபவனரிஷி ஐயமுண்பான் சுருதவன்மன் என்னும் வேந்தனருகே சென்று அங்கு உண்மையில் அவ் வேந்தன், வேள்விவிரதம் பூண்டிருக்கின்றதையும், வேள்வித்தீ பெருஞ் சுவாலையோடு சொலிக்கின்றதையுங் கண்டனர். கண்டு இந்த ரிஷியானவர் 'விருத்திரஹந்தமம்' என்னும் இம் மந்திரத்தாற் றுதித்தனர் என இதிகாசமொன்றுளது.

**'अगन्म, आगन्म'** எனப் பாட பேதமுண்டு.

## மந்திரம் 10.

*ரிஷி—கசியப சுவயோனீந்ர இந்திரியம்.*

३ २ २र ३ १२ ३ २ ३ १ २ ३ १ २
90. जातः परेण धर्मणा यत्सवृद्भिः सहाभुवः ।
३ २उ ३ १२ ३ २ ३ २ ३ १ २र ३ २
पिता यत्कश्यपस्याग्निः श्रद्धा माता मनुः कविः ॥ १० ॥

இருக்கு 11-90-11.

ஜாத꞉ பரேண த⁴ர்மணா யத்ஸவ்ருத்³பி⁴꞉ ஸஹாபு⁴வ꞉ ।
பிதா யத்கஶ்யபஸ்யாக்³னி꞉ ஶ்ரத்³தா⁴ மாதா மனு꞉ கவி꞉ ॥

### அந்வயம்.

हे अग्ने!, त्वं, परेण, धर्मणा, जातः, यत्, सवृद्भिः, सह, अभुवः, यत्, अग्नेः, पिता, श्रद्धा, माता, मनुः, कविः, (स्तोता), (सोऽग्निः त्वं), (यजमानायाभीष्टं फलं प्रयच्छ)

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்³னே! | அக்கினியே! |
| (त्वं) | (த்வம்) | (நீ) |
| परेण धर्मणा | பரேண த⁴ர்மணா | மேலாகிய தாபித்தல் (நாட்டுதன்) முதலிய தருமத்தால் |
| जातः | ஜாத꞉ | உண்டானாய். |
| यत् | யத் | எவ் வக்கினி |
| सवृद्भिः | ஸவ்ருத்³பி⁴꞉ | வேட்போர்களோடு |
| अभुवः | அபு⁴வ꞉ | இருக்கின்றதோ, |
| यत् अग्नेः | யத் அக்³னே꞉ | எவ் வக்கினிக்கு |
| कश्यपः | கஶ்யப꞉ | கசியபரிஷி |
| पिता | பிதா | பிதாவோ, |
| श्रद्धा | ஶ்ரத்³தா⁴ | சிரத்தை யென்பாள் |
| माता | மாதா | அன்னையோ, |
| मनु | மனு | மனுவானவர் |
| कविः | கவி꞉ | துதிப்பவரோ, |

| | | |
|---|---|---|
| (सोऽग्निः त्वं) | (ஸோऽக்³நி: த்வம்) | (அவ் வக்கினியாகிய நீ) |
| (यजमानाय) | (யஜமாநாய) | (தலைவனுக்கு) |
| (अभीष्टं फलं) | (அபீ⁴ஷ்டம் ப²லம்) | (விரும்பிய பயனை) |
| (प्रयच्छ) | (ப்ரயச்ச²) | (இனிது கொடுக்கின்றாய்.) |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—10. வாமதேவர் அல்லது கசியயர், மரீசி, மனு, அல்லது வைவ சுவதர்கள் ரிஷிகள். சந்தம் அநுஷ்டுப். தேவதை அக்கினி.

அக்கினியே! நீ மேலாகிய தருமத்தால் (அதாவது தாபித்தன் முதலிய கருமத்தால்) வெளிப்பட்டோனாய் வேள்வியோடிருக்கின்ற வேட்போர்களுடன் தரையைப்பற்றிய வேள்வியின்கணிருக்கின்றாய். கசியபருடைய அக்கினி, என்னும் மூல பதங்களின் வேற்றுமையை 'கசியபர் அக்கினியினுடைய' என மாறுபடுத்திக்கொள்க. எனவே, எவ் வக்கினிக்குக் கசியபர் பிதாவோ என்றாயிற்று. ஆகவே, எவ் வக்கினிக்கு கசியபர் பிதாவோ, சிரத்தையென்னுந் தேவி அன்னையாவளோ, அளவற்ற கருமமுடையவரும், அல்லது அளவிலாத அறிவுடையவருமாகிய வைவசுத மனு துதிக்கின்றவராவரோ, அவ் வக்கினி எசமானனுக்கு விரும்பிய பலனைக்கொடுக்குக. இதனாற் குறிப்பிட்ட இதிகாசத்தை வேறு பிராமணத்திற்காண்க .(10)

குறிப்பு.—எவ் வக்கினி, கசியப ரிஷியைப் பரிபாலிப்பதாமோ, சிரத்தையாகிய சத்தியத்தை யுடையதோ, மழை பெய்விக்குந் தன்மையால் உலகனைத்தையும் உண்டாக்குவதோ, மனுவாமோ, (பக்தி, பக்தியிலாமையை யறிவதோ,) கவியாமோ, (மேதாவியோ) எவ் வக்கினி, கூட இருக்கப்பட்ட தேவர்களோடு கூடவே வெளிப்படுகின்றதோ, அத் தகைய இவ் வக்கினி மேலாகிய தருமமென்னுங் கருமத்தால் வெளித்தோன்றியது என விவரணத்திற் காணப்படுகின்றது. இதுவே ஆங்கில மொழி பெயர்ப்பிலுங் காணப்படுகின்றது.

## ஒன்பதாவது கண்டம்.

முற்றும்.

—

## பத்தாங் கண்டம்.

### பிரபாடகம்—1, அத்தியாயம்—1.

ஆறு மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

கீதம்—பார்ஹிஸ் பிரத்தியம்.

२ ३ १ २ ३ १२ ३ २ ३ १२
91. सोमꣳ राजानं * वरुणमग्निमन्वारभामहे ।
३ २उ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २
आदित्यं विष्णुꣳ सूर्य्यं ब्रह्माणं च बृहस्पतिम् ॥ १ ॥

இருக்கு 10-141-3.

𑌸𑍋𑌮𑌂 𑌰𑌾𑌜𑌾𑌨𑌂 𑌵𑌰𑍁𑌣𑌮𑌗𑍍𑌨𑌿𑌮𑌨𑍍𑌵𑌾𑌰𑌭𑌾𑌮𑌹𑍇 ।
𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌚 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌮𑍍 ॥

அந்வயம்.

राजानं, सोमं, वरुणं, अग्निं, आदित्यं, विष्णुं, सूर्य्यं, ब्रह्माणं, बृहस्पतिं, च, अन्वारभामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| राजानं | 𑌰𑌾𑌜𑌾𑌨𑌂 | விளங்குகின்ற அல்லது ஈசனாகிய, |
| सोमं | 𑌸𑍋𑌮𑌂 | சோமனையும் |
| वरुणं | 𑌵𑌰𑍁𑌣𑌂 | வருணனையும் |
| अग्निं | 𑌅𑌗𑍍𑌨𑌿𑌂 | அக்கினியையும் |
| आदित्यं | 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 | அதிதி புத்திரனையும் |
| विष्णुं | 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 | விஷ்ணுவையும் |
| सूर्य्यं | 𑌸𑍂𑌰𑍍𑌯𑌂 | சூரியனையும் |
| ब्रह्माणं | 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 | பிரமனையும் |
| बृहस्पतिं च | 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌂 𑌚 | பிருகற்பதியையும் |
| अन्वारभामहे | 𑌅𑌨𑍍𑌵𑌾𑌰𑌭𑌾𑌮𑌹𑍇 | அன்பு பாராட்டுகின்றோம். |

* अवसेऽग्निं गीर्भिर्हवामहे, आदित्यान्, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

*கண்டம்*—10. இருக்கு—1. *அக்கினித்தாபஸ ரிஷி. அநுஷ்டுப் சந்தம். தேவதை விசுவேதேவர்.*

*விளங்குகின்றவனும், அல்லது. ஈசனுமாகிய, மதியையும், இரவியையும், வருணனையும், அக்கினியையும் எம்மைக் காப்பதன் பொருட்டு வழிபடுகின்றனம். அவ்வாறே, அதிதி மைந்தனையும், விஷ்ணுவையும், பிரமனையும், பிருகற்பதியையும் தோத்திரங்களால் காப்பதன் பொருட்டு வழிபடுகின்றனம் என்பதாம்.* (1)

**குறிப்பு.**—‘ *ஆதித்தியனை, என்றது = அதிதியின் புத்திரனாகிய வாயுவை. யாண்டும் ஆதித்யனென்னும் சொல் சூரியனென்னும் பொருளில் வெளிப்படையாமாயினும், ஈண்டுச் சூரியனை வேறாய்க் கொள்ளப்படலால் சூரியனைக் குறிப்பதன்று. அற்றேல், அதிதிபுத்திரர்களிற் பிறரைக் கொள்ளாததென்னைகொலோவெனின்? பிரகரண வயத்தாற் பொருந்தாது. என்னை? பிரகரணத்திலோ, சோம, சூரிய, அக்கினி முதலியவைகள், கொள்ளப்பட்டிருக்கின்றன. அவ்வாறே வாயுவைக் கொள்ளலும் மரபாமென்க.*

*ஈண்டுப் பூமிக்கு மூர்த்தியாகிய ‘சருவன்’ என்பவனைப் பிருகற்பதி என்பதாலும், சலவடிவ ‘பவன்’ என்பவனை வருணன் என்பதாலும், உருத்திரவடிவம் அக்கினியாம் அதை ‘அக்கினி’ என்பதாலும், உக்கிர வடிவ வாயுவை ‘ஆதித்தியன்’ என்பதாலும் ஆகாசமூர்த்தி ‘பீமன்’ அதை விஷ்ணு என்பதாலும், சோம மூர்த்தியாகிய மாதேவனை சோமன் என்பதாலும் எசமான மூர்த்தியாகிய ‘பசுபதியை’ பிரமன் என்பதாலும், சூரியனாகிய ‘ஈசானனை’ சூரியனென்பதாலும், கூறப்பட்டிருத்தலால் இம் மந்திரத்தில் ஈசானது அட்ட மங்கல மூர்த்திகளின் உபாசனை வெளிப்படையாமென்பது காண்க.*

## மந்திரம் 2.

*கீதம்—ஆரூடவத் ஆங்கிரசம், அல்லது யாமம்.*

३२ ३ २ ३ १ २ ३ २ ३ १ २र
92. **इत एत उदारुहन् दिवः पृष्ठान्यारुहन् ।**
२ ३ २ ३ १,२ ३ १ २र
**प्र भूर्जयो यथा पथोद्यामङ्गिरसो ययुः ॥ २ ॥**

*இத ஏத உதா³ருஹந் தி³வ꞉ ப்ருஷ்டா²ந்யாருஹந் ।*
*ப்ர பூ⁴ர்ஜயோ யதா² பதோ²த்³யாமங்கி³ரஸோ யயு꞉ ॥*

அந்வயம்.

भूर्जयः, आङ्गिरसः, एते, यथा, उत्, द्यां प्रययुः, यथा पथा (जनाः तथा), इतः, उदारुहन्, आगत्य, दिवः, पृष्ठानि, आरुहन् ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| भूर्जयः | 𑌭𑍂𑌰𑍍𑌜𑌯𑌃 | அவியைப் (தேவவுணவைப்) பக்குவஞ் செய்வோர்களான |
| आङ्गिरसः | 𑌆𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑌃 | அங்கிரச ரிஷியின் சந்ததியார்களென்னும் |
| एते | 𑌏𑌤𑍇 | இவர்கள் |
| यथा | 𑌯𑌥𑌾 | எவ்வாறு |
| उत् | 𑌉𑌤𑍍 | மேல்வழியால் |
| द्यां | 𑌦𑍍𑌯𑌾𑌂 | வானுலகை |
| प्रयँयुः | 𑌪𑍍𑌰𑌯𑌯𑍁𑌃 | இனிது அடைந்தார்களோ, அவர்கள் |
| यथा पथा (जनाः तथा) | 𑌯𑌥𑌾 𑌪𑌥𑌾 (𑌜𑌨𑌾𑌃 𑌤𑌥𑌾) | வழியைப்பற்றிக்கொண்டு சனங்கள் ஒரு ஊரை யடைகின்றது போல் |
| इतः | 𑌇𑌤𑌃 | தரையினின்றும் |
| उदारुहन् | 𑌉𑌦𑌾𑌰𑍁𑌹𑌨𑍍 | மேற்சென்று |
| आगत्य | 𑌆𑌗𑌤𑍍𑌯 | வந்து |
| दिवः | 𑌦𑌿𑌵𑌃 | சுவர்க்கத்தினின்றும் |
| पृष्ठानि | 𑌪𑍃𑌷𑍍𑌠𑌾𑌨𑌿 | மேம்பாடான இடங்களைப்பற்றி |
| आरुहन् | 𑌆𑌰𑍁𑌹𑌨𑍍 | ஏறிச்செல்கின்றார்கள் |

## சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—2. வாமதேவ ரிஷி. அநுஷ்டுப் சந்தம். விசுவதேவர் தேவதை.

ஆங்கிரச ரிஷியின் சந்ததியார்களான இவர்கள் உயர்ந்த மார்க்கத்தால் வானுலகை யடைந்தார்கள். அவர்கள் எவ்விதமானவர்களெனின்! 'भूर्जय:' என்பதில் 'भृज्जति' என்பதின் பொருள் பக்குவஞ் செய்தலாமாதலின், தேவவுணவுகளைப் பக்குவஞ் செய்வோர்களாவர். அடைவதிலுவமை :—வழியைக் கொண்டு சனங்கள் கிராம முதலியவைகளை யடைவதுபோன்றெனல். மற்றும் இந்தப் பூமியினின்றும் மேலே போய் வந்துஞ் சுவர்க்கத்தினுடைய இடங்களைத் தாண்டி ஏறுகின்றார்கள். (2)

குறிப்பு.—'द्यां' 'வானுலகை, என்னும் பதத்தால் வாழ்நாளுக்குப் பின் அடையத்தக்க தோரிடம் அல்ல என்பது பெறப்படுகின்றது. என்னை? மார்க்கத்தைப்பற்றியதினாலேயே அடைவதமையாமையின். மற்றோ, மேம்பட்ட ஒழுக்கமாகிய மார்க்கத்தைப் பற்றிக்கொண்டு அடையத்தக்க இன்ப விசேடமே ஈண்டு வானுலகென்றதாம். அல்லது, இமயமலை முதலிய உயர்ந்த விடமாம், எனக் கருதுகின்றோம். மற்றும் 'भूर्जय:' என்றதற்கு, பூமியை வென்றவர்கள் என்பது விவரணக்காரர் உடன்பாடு. இதுவே ஆங்கில மொழிபெயர்ப்பின் கருத்துமாம்.

## மந்திரம் 3.

கீதம்—அசிதம்.

३१ २ ३२ ३ १ २३ १२
93. राये अग्ने महे त्वा दानाय समिधीमहि ।
१ २ ३ २ ३१ २३ १ २ ३१२ ३ १
ईडिष्वा हि महे वृषन् द्यावा होत्राय पृथिवी ॥ ३ ॥

ராயெ அக்நெ மஹெ த்வா தாநாய ஸமிதீமஹி ।
ஈடிஷ்வா ஹி மஹெ வ்ருஷந் த்யாவா ஹொத்ராய ப்ருதிவீ ॥

அந்வயம்.

हे अग्ने!, त्वा, महे, राये, दानाय, समिधीमहि, हे वृषन्! महे, होत्राय, द्यावा पृथिवी, ईडिष्वा ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹெ அக்நெ! | அக்கினியே! |
| त्वा | த்வா | உன்னை, |
| महे | மஹெ | மிகுந்த |
| राये | ராயெ | திரவியத்தைக் |
| दानाय | தாநாய | கொடுப்பதற்கு |
| समिधीमहि | ஸமிதீமஹி | நன்கு வளர்க்கின்றோம். |
| हे वृषन्! | ஹெ வ்ருஷந்! | தான (ஈகை) மழைபெய்வோய்! |
| महे | மஹெ | பெரிய |
| होत्राय | ஹொத்ராய | தீ யோமத்தின் பொருட்டு |
| द्यावा पृथिवी | த்யாவா ப்ருதிவீ | வானுலகையும் மண்ணுலகையும் |
| ईडिष्वा | ஈடிஷ்வா | (நீ) துதிப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—3. கசியபர் அல்லது அசிதர் அல்லது தேவல ரிஷி.

அக்கினியே! மிகுந்த தனங் கொடுப்பதன் பொருட்டு யாங்கள் நன்றாக உன்னை வளர்க்கின்றோம். வேண்டியதை மழையெனப் பெய்யும் அக்கினியே! நீ பெரிதாகிய தீ யோமத்தின் பொருட்டு, வானையும் மண்ணையுந் தோத்திரஞ் செய்வாயாக. (3)

குறிப்பு.—'होत्राय' என்றதற்கு ஓமத்தின் பொருட்டென்றனர் பாடியக்காரர், ஓமத்திரவியத்தின் பொருட்டென்றனர் விவரணக்காரர். வானுலகு மண்ணுல கிரண்டும் என்றது, வானுலகை மண்ணுலகை என, இரண்டாம் வேற்றுமை விரிக்கப் பெற்றது.

## மந்திரம் 4.

கீதம்—துவாஷ்ட்ரீ.

३ २ ३ २ ३ २ ३ २ ३ २ उ ३ २ ३ २
94. दधन्वे वा यदी मनु वोचद् * ब्रह्मेति वेरु तत् ।
२ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २
परि विश्वानि काव्या नेमिश्चक्र † मिवा भुवत् ॥ ४ ॥

இருக்கு 2-5-3.

𑌦𑌧𑌨𑍍𑌵𑍇 𑌵𑌾 𑌯𑌦𑍀 𑌮𑌨𑍁 𑌵𑍋𑌚𑌦𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌵𑍇𑌰𑍁 𑌤𑌤𑍍 ।
𑌪𑌰𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌨𑌿 𑌕𑌾𑌵𑍍𑌯𑌾 𑌨𑍇𑌮𑌿𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌵𑌾 𑌭𑍁𑌵𑌤𑍍 ॥

அந்வயம்.

वा, ईम्, अनु, (होत्रादिः), यत्, दधन्वे, यत् ब्रह्म, अनुवोचत्, तत्, (सर्वं) वेरु, (अयमग्निः), विश्वानि, काव्या, नेमिः चक्रं इव, पर्य्यभुवत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वा | 𑌵𑌾 | அல்லது |
| ईम् | 𑌈𑌮𑍍 | இவ் வேள்வியைக் |
| अनु | 𑌅𑌨𑍁 | குறியாகவைத்து |
| (होत्रादिः) | (𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌃) | இருக்கு மறை படிப்போர் முதலியோர்கள் |
| यत् | 𑌯𑌤𑍍 | எந்த அவியைத் |
| दधन्वे | 𑌦𑌧𑌨𑍍𑌵𑍇 | தாங்குகின்றார்களோ, |
| यद्ब्रह्म | 𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | எந்தத் துதியைச் |
| अनुवोचत् | 𑌅𑌨𑍁𑌵𑍋𑌚𑌤𑍍 | சொல்கின்றார்களோ |
| त् (सर्वं) | 𑌤𑌤𑍍 (𑌸𑌰𑍍𑌵𑌂) | அவ் வனைத்தையும் |
| | 𑌵𑍇𑌰𑍁 | அறிகின்றது. |
| ामग्निः) | (𑌅𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃) | (இவ் வக்கினி) |
| नि | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌨𑌿 | எல்லா |
| | 𑌕𑌾𑌵𑍍𑌯𑌾 | அறிவு மிகுந்த வேட்போர்களாற் செயப்படுங் கருமங்களையும் |
| च | 𑌨𑍇𑌮𑌿𑌃 𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌵 | இருப்புக் கட்டானது சக்கரத்தைப் பற்றிக்கொள்வது போல் |
| | 𑌪𑌰𑍍𑌯𑌭𑍂𑌵𑌤𑍍 | தன்வயப்படுத்திக்கொள்கின்றது. |

पे वेरत, † मिवा भवत्, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—4. பார்க்க ஹாருதி ரிஷி, அல்லது, சோம ரிஷி. அநுஷ்டுப் சந்தம். தேவதை அக்கினி.

அல்லது, இவ் வேள்வியைக் குறித்து அவியைத் தாங்குவோர்களான இருக் கோதுவார் முதலியோர்கள் யாதொரு தோத்திரஞ் சொல்கின்றார் களோ, மற்றும், எசுர் மறை, படிப்போர்கள் எந்த அவியைத் தாங்கு கின்றார்களோ, (ஈண்டு, அது, என்றதையுஞ் சேர்த்து வேள்வியைக் குறியாக் கொண்டு எனப்பொருள் கொள்க.) அவைகளனைத்தையும் அக்கினி தான் அனுட்டிக்குமாறு அறிகின்றது, அல்லது விரும்புகின்றது. இவ் வக்கினி மேதாவிகளான வேட்போர்களின் சம்பந்தமான கருமங்களனைத்தையும் தன் வசமாக்கிக்கொள்ளுகின்றது. வியாபித்துக்கொள்கின்ற தென்பதுமது. வியாபிப்பதிலுவமை :—இரும்புக் கட்டு இரதத்தின் சக்கரத்தை உள்ளவாறு முழுதும் வியாபித்துக்கொள்வது போல் என்பது. (4)

குறிப்பு.—'दधन्वे' என்றது 'दधन्' என்பதாம். 'वे' என்றதும், 'इम्, अनु' என்னு மிரண்டும் அசைச் சொற்கள் என்பர் விவரணக்காரர். 'वेरु' என்றது 'वेः, उ' எனவாம். வே: என்பது அறிதல். உ. என்றது அசை. வே: என்னுந் தன்மைச் சொல் அதாவது 'அறிவேன்' என்பது, அறிகின்றது, எனப்படர்க்கை யாயிற்று. 'काव्या' என்றது:—சுருதி வாக்குகள் அல்லது அவிகள், என்பது விவரணக்காரரது கொள்கை. அஃது உலகியலில் கவய: என வரும்.

'ब्रह्म' எனவும் 'ब्रह्माणि' எனவும் பாடபேதமுண்டு.

## மந்திரம் 5.

கீதம்—அகத்திய ரிஷி, ராக்ஷோக்னம்.

१ २ ३ १२ ३ १२ ३ २ ३ २ ३ १ २
95. **प्रत्यग्ने हरसा हरः *शृणाहि विश्वतस्परिः ।**
३ १ २ ३२ ३ २ ३क २र ३क२र
**यातुधानस्य रक्षसो बलं †न्युब्ज वीर्य्यम् ॥ ५ ॥**

இருக்கு 10-87-.

ப்ரத்யக்3நே ஹரஸா ஹர: ஶ்ருணாஹி விஶ்வதஸ்பரி: ।
யாதுதா4நஸ்ய ரக்ஷஸோ ப3லம் ந்யுப்3ஜ வீர்ய்யம் ॥

அந்வயம்

हे अग्ने !, हरसा, हरः, यातुधानस्य, बलं, विश्वतः परिः, प्रति शृणाहि, (तथा) रक्षसः, वीर्यं, न्युब्ज ॥

* शृणीहि, † निरुज वीर्यम् , என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்நே! | அக்கினியே! நீ |
| हरसा | ஹரஸா | தனது பிரகாசத்தால் |
| हरः | ஹர: | கெடுக்குஞ் சீலமுள்ள |
| यातुधानस्य | யாதுதா₄நஸ்ய | இராக்கதருடைய |
| बलं | ப₃லம் | வலியை |
| विश्वतः परिः | விஶ்வத: பரி: | எல்லா வகையானும் நீங்குமாறு |
| प्रतिश्रगाहि | ப்ரதிஶ்ருணாஹி | முழுதும் நாசஞ் செய்வாயாக |
| (तथा) | (ததா₂) | (அவ்வாறே) |
| रक्षसः | ரக்ஷஸ: | இராக்கதருடைய |
| वीर्यं (च) | வீர்யம் (ச) | பராக்கிரமத்தையும் |
| न्युब्ज | ந்யுப்₃ஜ | ஒடுக்கி விடுவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—5. பாயுர் ரிஷி. அனுஷ்டுப் சந்தம். ரக்ஷோஹா அக்கினி, தேவதை.

அக்கினியே! நீ உன்னுடைய ஒளியால் அல்லது கோபத்தால், ஈண்டு யாஸ்கமுனிவரும் 'हरो हरते ज्योतिहरे उच्यते' என்றனர். ஆதலின், 'हरसा' ...றதற்கு ஒளியால் எனக்கொள்ளப்பட்டது. பிறரை வாட்டுஞ் சீலமுள்ள ...தருடைய வலியை எல்லா வகையானும் போமாறு முற்றிலும் ...யாக. (5)

...ப்பு—'न्युब्ज' என்றதற்கு முற்றிலும் ஒழிப்பாயாக எனக் கொண்டனர் ...காரர். சேர்படுத்துவாயாக எனக் கொண்டார் விவரணக்காரார்.

## மந்திரம் 6.

கீதம்—மாநவம்.

१ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ २र ३ २
96. त्वमग्ने वसूꣳरिह रुद्राꣳ आदित्याꣳ उत ।
१ २ ३२उ ३ १२ ३ १२
यजा स्वध्वरं जनं मनुजातं घृतप्रुषम् ॥ ६ ॥

இருக்கு 1-45-1.

த்வமக்₃நே வஸூꣳரிஹ ருத்₃ராꣳ ஆதி₃த்யாꣳ உத ।
யஜா ஸ்வத்₄வரம் ஜநம் மநுஜாதம் க்₄ருதப்ருஷம் ॥

அந்வயம்.

हे अग्ने!, त्वं, इह, वसून्, रुद्रान्, आदित्यान्, उत, स्वध्वरं, मनुजातं, घृतप्रुषं, जनं, यज ॥

पदवुரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹெ அகெ்ந! | அக்கினியே! |
| त्वं | த்வம் | நீ |
| इह | இஹ | இக் கருமத்தில் |
| वसून् | வஸூந் | வசுக்களையும் |
| रुद्रान् | ருத்ராந் | உருத்திரர்களையும் |
| आदित्यान् | ஆதித்யாந் | ஆதித்தர்களையும் |
| उत | உத | மற்றும் |
| स्वध्वरं | ஸ்வத்வரம் | நல்ல வேள்வியிலுள்ளதும் |
| मनुजातं | மநுஜாதம் | பிரசாபதியா லுண்டாக்கப்பட்டதும் |
| घृतप्रुषं | க்ருதப்ருஷம் | நீரைக் கொடுப்பதுமாகிய |
| जनं | ஜநம் | சனத்தையும் |
| यज | யஜ | ஆராதிப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—6. பிரஸ் கண்வரிஷி. அநுஷ்டுப் அக்கினி தேவதை.

அக்கினியே! நீ இக்கருமத்தில் வசு முதலியோர்களை யாராதிட மற்றும், தேவதை வடிவமாகிய மற்றைய பிராணியையும் ஆராதிட எத்தன்மைய பிராணியை யெனின்? அழகிய வேள்வியோடுகூ மனுப் பிராசாபதியா லுண்டாக்கப்பட்டதை. மற்றும் நீரைத் தரு ஆராதிப்பாயாக என இயைத்துக்கொள்க.

குறிப்பு —மூலத்தில் 'जनं' என்றதால் தேவதை வடிவப் பிராணி கொ பட்டது. பிரசாபதியைத் தேவதையாகவுடைய ஆசாயம் என்பது பெ ஆகாயமே பிரசாபதி என, சபரசுவாமி எழுதியுள்ளார். (பூருவ மீமாஞ்சைச் ச பாடியத்தில்) பிராணன் என்பது வாயு. அதுவும் உற்பத்தியின் முன்பு ஆகாய னிலைக்கின்றது எனச் சுருதியுங் கூறுகின்றது. ஆதலின் சனம் என்பதால் பிரசா பதியே கொள்ளக்கிடக்கின்றது என்பதே துணிபு.

'மநுஜாதம்' என்றது = இந்திரனை. என்னை? எல்லாத் தேவதைகளும் மனுவினாலுண்டாக்கப்பட்டனவாமென 'मनोर्वै देवाः यज्ञियास' என்றற் றொடக்

கத்து சுருதி கூறுவதால் என்க. ஈண்டு ‘மநுஜாதம்’ என வேறு கொள்ளப்பட்டமையின், அச் சொல்லால் இந்திரனே குறிக்கப்படுகின்றான். ‘घृतप्रुषं’ நீர் தருவோனை என்னும் விசேடணம் அவனுக்கே பொருந்துமாறறிக.

வசுக்கள் எட்டு:—தவன், த்ருவன், சோமன், சாவித்திரன், அநிலன், அநலன், பிரத்யூஷன், பிரபாசன் என்பன. பதினொரு வருத்திரர்கள்:—அசர், ஏகபாதர், அகிர்புத்னர், பிநாகி, அபராசிதர், திரியம்பகர், மகேசுரர், விருஷாகபி, சம்பு, அரணர், ஈசுரர் என்பவர்கள்.

## பத்தாவது கண்டம்

முற்றும்.

---

## முதற் பிரபாடகமும்

முடிந்தது.

---

# இரண்டாவது பிரபாடகம்.

## பிரபாடகம்—2. அத்தியாயம்—1. கண்டம்—11.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

கீதம்—தௌதம் அல்லது தீர்க்கதமசம்.

३ १ २ ३ १ २ ३ १२ ३ १२ ३ २
97. पुरु त्वा *दाशिवाँ३ वोचेऽरिरग्ने तव स्विदा ।
३ १ २ ३२उ ३१२
तोदस्येव शरण आ महस्य ॥ १ ॥

இருக்கு 1-150-1.

பு²ரு த்வா தா³ஶிவாம்ʼ வோசே(அ)ரிரக்³நே தவ ஸ்விதா³ ।
தோத³ஸ்யேவ ஶரண ஆ மஹஸ்ய ॥

அந்வயம்.

हे अग्ने!, त्वा दाशिवान्, (अहं), पुरु वोचे, (यतः) महस्य, तोदस्य, शरण आ इव, तव स्विदा, अरिः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்³நே! | அக்கினியே! |
| त्वा | த்வா | உன்னைக் குறித்து |
| दाशिवान् | தா³ஶிவாந் | புத்திரன் பொருள் முதலியவை களைக் கொடுக்கவேண்டுமென |
| (अहं) | (அஹம்) | (நான்) |
| पुरु वोचे | புரு வோசே | பலவகையாய்ச் சொல்கின்றேன். |
| (यतः) | (யத:) | (எதனால்) |
| महस्य | மஹஸ்ய | மகத்தாகிய |
| तोदस्य | தோத³ஸ்ய | ஆசிரியனுடைய |
| शरण आ इव | ஶரண ஆ இவ | தொண்டன் போல |
| तव स्विदा | தவ ஸ்விதா³ | உனக்கே |
| अरिः | அரி: | தொண்டனானேன், (அதனால்). |

* दाश्वत्, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

11, 12-ம் கண்டங்களின் 1-ம், மந்திரத்திலிருந்து 8-மந்திரங்கள் ககுப் சந்தத்தையுடையன. 10-மந்திரங்கள், 'உஷ்ணிக்' சந்தமுடையன. மற்றும், 11-ம் கண்டம், 5-ம் மந்திரம் பவமான தேவதையையுடையது. ஷ கண்டம் 6-ம் மந்திரம் அதிதியின் துதியாம். எஞ்சினவைகள் அக்கினி தேவதையையுடையன. எல்லாவற்றிற்கும் 'ஆக்கினேயம்' என்னும் வழக்கு குடைக்காரர்கள் போகின்றார்கள் என்பதுபோற் கண்டு கொள்க.

கண்டம்—11. இருக்கு—1. தீர்க்கதம ரிஷி. உஷ்ணிக் சந்தம். அக்கினி தேவதை.

அக்கினியே! உன்னைக்குறித்துப் பலவகையாகச் சொல்கின்றேன், அல்லது பல்வகை வரத்தைச் சொல்கின்றேன், அதாவது மைந்தனைத் தருவாயாக, திரவியந் தருவாயாக, என்பது முதலிய விச்சைகளைச் சொல்கின்றேன் என்பதாம், ஒன்றுஞ் செய்திலையெனிலோ, அன்று, மற்றோ அவி கொடுத்தவனா யிருக்கின்றேனாதலின் விரும்பியதைச் சொல்கின்றேன் என்க. இதர சாதாரணமாய்ப் பேசுகின்றவனுக்கு, எவ்வாறு கொடுக்கத்தக்கது என்றெண்ணற்க என்பதாம். பேராசிரியனுடைய் தொண்டன் போல் அக்கினியே! உனக்கே யான் தொண்டன் என்க.

ஈண்டு வடமொழியில் ஆகாரம் உவமைப்பொருளில் நின்றது. அக்கால், ஆண்டான் வீட்டில் எவ்வாறு கருப்பத்திலிருந்தே அடிமை யாதல் நியதமாயுள்ளதோ, அங்ஙனமே யானுமாதலின் விரும்பியதைப் பலவாறுப் சொல்கின்றேன் என்பதாம், நீயும் வேண்டிய தனத்தையுந் தருவாயாக என்பது பொருள்.

இம் மந்திரத்திற்கு யாஸ்க முனிவரும் நிருத்தம் 5, 2, 8-ம் சூத்திரத்தில் இவ்வாறே பொருள் கூறியுள்ளார். (1)

குறிப்பு.—அநேக விதமாக உன்னை யழைக்கின்றேன் என்பது ஆங்கிலமொழி பெயர்ப்பின் கருத்து.

## மந்திரம் 2.

கீதம்—ஆசுவரிஷி ப்ரகிருதம்.

१ २र २उ ३ १ २ ३२

98. प्र होत्रे पूर्व्यं वचोऽग्नये भरता बृहत् ।

३ १ २र ३ १ २ ३ २ ३ १ २

विपां ज्योतींꣳषि बिभ्रते न वेधसे ॥ २ ॥

இருக்கு 3-10-5.

ஹோத்ரே வ பூர்வ்யம் வசோக்நயே பரதா ப்ருஹத் ।
விபாம் ஜ்யோதீம்ஷி பிப்ரதே ந வேதஸே ॥

அந்வயம்.

(हे होत्रादयः!) विपां ज्योतींषि, बिभ्रते, वेधसे, होत्रे, अग्नये, बृहत्, पूर्व्यं, वचः, प्रभरता ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे होत्रादयः!) | (ஹே ஹோத்ராதய:!) | (இருக்கோதுவோர் முதலியோர்களே!) (நீவிர்) |
| विपां | விபாம் | எசுர்மறையோதும் விப்பிரர்களுடைய |
| ज्योतींषि | ஜ்யோதீம்ஷி | கருமத்தாலுண்டான ஒளிகளை |
| बिभ्रते | பிப்ரதே | இனிது தாங்கப்பட்டதும், |
| वेधसे | வேதஸே | உலகத்தைத்தாங்குவதும், |
| होत्रे | ஹோத்ரே | தேவதையை யழைப்பதும் (ஆகிய) |
| अग्नये | அக்நயே | அக்கினியின் பொருட்டுச் |
| पूर्व्यं | பூர்வ்யம் | பண்டைக் காலத்திய |
| बृहत् | ப்ருஹத் | மகத்தான |
| वचः | வச: | தோத்திரங்களை, |
| प्रभरता | ப்ரபரதா | சம்பாதிப்பீர்களாக, (துதிப்பீர்களாக) |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—2. விசுவாமித்திர ரிஷி. உஷ்ணிக் சந்தம். அக்கினி தேவதை.

எசமானன், இருக்கோதுவார் முதலியோர்கட்குக் கூறுகின்றான் :—ஹோத்ருஎன்னும் இருக்கோதுவார் முதலியோர்களே! (நீவிர்) அறிவு மிகுந்த 'அத்துவர்யு' எனப்படும் எசுர் படிப்போர் முதலானவர்களுடைய நற்கருமாநுட்டானத்தாற் றோடிய, ஒளிகளை நிமித்தமாகக் கொள்ளப்பட்டதும், உலகத்தை யினிது தாங்குவதும், தேவர்களை யழைப்பதுமாகிய அக்கினிக்கு, மகத்தாய பண்டைக்காலத்திய துதிமுதலிய தோத்திர வாக்கியங்களை, அல்லது உலகத்தைப் படைக்கும் பரமேசுரன் இரவி முதலிய சோதிகளை யுண்டாக்குமாறு, இனிது சம்பாதிப்பீர்களாக. தோத்திரஞ் செய்வீர்களாக என்பது பொருள். (2)

குறிப்பு.—அக்கினியை, பிருகத் என்னும் தோத்திரத்தால் திருப்தி செய்வீர்களாக என்பது ஆங்கில ஆசிரியர் கருத்து. ஈண்டு வடமொழியிலுள்ள நகாரம் ஒரு வகையில் பொருள் தாராமலும் ஒரு வகையில் உவமைப் பொருளைத் தந்தும் நின்றது.

## மந்திரம் 3.

*கீதம்—பிரசாபதி ரிஷி சுருதிரே சிரத்தாம் சிரத்தம் சத்யம்*

२ ३ १ २ ३ १ २ ३ १ २
99. **अग्ने वाजस्य गोमत ईशानः सहसोयहो ।**
३ १ २ ३ २ २ १ २
***अस्मे देहि जातवेदो महि श्रवः ॥ ३ ॥**

இருக்கு 1-97-4.

𑌅𑌗𑍍𑌨𑍇 𑌵𑌾𑌜𑌸𑍍𑌯 𑌗𑍋𑌮𑌤 𑌈𑌶𑌾𑌨𑌃 𑌸𑌹𑌸𑍋𑌯𑌹𑍋 ।
𑌅𑌸𑍍𑌮𑍇 𑌦𑍇𑌹𑌿 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑍋 𑌮𑌹𑌿 𑌶𑍍𑌰𑌵𑌃 ॥

### அந்வயம்.

हे सहसो यहो !, अग्ने !, गोमतः, वाजस्य, ईशानः, (असि) (अतः)
हे जातवेदः ! अस्मे महि श्रवः देहि ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सहसो यहो !** | 𑌹𑍇 𑌸𑌹𑌸𑍋 𑌯𑌹𑍋 ! | ஆற்றலின் மைந்தனுகிய |
| **अग्ने !** | 𑌅𑌗𑍍𑌨𑍇 ! | அக்கினியே ! (நீ) |
| **गोमतः** | 𑌗𑍋𑌮𑌤𑌃 | கோக்களோடு கூடியவனும் |
| **वाजस्य** | 𑌵𑌾𑌜𑌸𑍍𑌯 | அன்னத்திற்கு |
| **ईशानः** | 𑌈𑌶𑌾𑌨𑌃 | இறைவனுமாக |
| **(असि)** | (𑌅𑌸𑌿) | (இருக்கின்றாய்.) |
| **(अतः)** | (𑌅𑌤𑌃) | (இதனால்) |
| **हे जातवेदः !** | 𑌹𑍇 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑌃 ! | தோன்றிய வுணர்வு தனங்களை யுடையோய் ! |
| **अस्मे** | 𑌅𑌸𑍍𑌮𑍇 | எமக்கு |
| **महि** | 𑌮𑌹𑌿 | மிகுந்த |
| **श्रवः** | 𑌶𑍍𑌰𑌵𑌃 | அன்னத்தைக் |
| **देहि** | 𑌦𑍇𑌹𑌿 | கொடுப்பாயாக. |

### சாயண பாடியம்.

*கண்டம்*—11. இருக்கு—3. கோதம ரிஷி. உஷ்ணிக் சந்தம். அக்கினி தேவதை.

வலியினுடைய குழந்தையாகிய அக்கினியே! பல கோக்களை யுடையவர்க்கும், அன்னத்திற்கும், இறைவன் நீயா யிருக்கின்றாய். ஆதலின்

* अस्मे धेहि, என்பது இருக்கு.

உண்டாகிய தனமுள்ளோய்! அல்லது உண்டானவைகளை புணர்ந்தோய்! அக்கினியே! மிக்குள்ள அன்னத்தை எம்பாலிருக்குமாறு இனிது தருவாயாக. நிலை நிறுத்துவாயாக என்பதுமது. ஆற்றலின் மைந்த! என்பது பிறவற்றிற்குக் கருவியாந் தன்மையால் ஆறும் வேற்றுமைத் தொடர்பு விளி எனப்பட்டது 'अस्मे' என்றது ஏழாம் வேற்றுமைப் பொருளில் சே விகுதி பெற்றது. நான்காம் வேற்றுமையாகக்கொளின், எமக்குத் தருவாய் எனப் பொருள் படும். ஏழாம் வேற்றுமை யெனக் கொள்ளின் 'अस्मासु' எங்களிடத்து ஜாதவேதாவாகிய அக்கினியே! (நீ) தனத்தை நிலை நிறுத்துவாயாக என முடியும். (3)

குறிப்பு.—அரணிக் கட்டையை வலி கொண்டு கடைதலாலெழுதலின், தீ ஆற்றலுக்கு மைந்தனென உபசரிக்கப்பட்டது.

'अस्मे देहि' எனவும், 'अस्मे धेहि' எனவும் பாடம்.

### மந்திரம் 4.

கீதம்—பிரசாபதி ரிஷி, சதம்.

`२ ३ १ २      ३ २ ३ १ २  ३१ २`
100. **अग्ने यजिष्ठो अध्वरे देवान्देवयते यज ।**
`१ २ ३ १    २२३ २ ३  १ २`
**होता मन्द्रो विराजस्यति स्रिधः ॥ ४ ॥**

இருக்கு 3-10-7.

அக்நே யஜிஷ்டோ அத்வரே தேவாந்தேவயதே யஜ ।
ஹோதா மந்த்ரோ விராஜஸ்யதி ஸ்ரிதஃ ॥

அந்வயம்.

**हे अग्ने! यजिष्ठः (त्वं) अध्वरे, देवयते, देवान्, यज (किञ्च) होता, मन्द्रः, (त्वं), स्रिधः, अति विराजसि ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்நே! | அக்கினியே! |
| यजिष्ठः (त्वं) | யஜிஷ்டஃ (த்வம்) | ஆராதிப்பதிற்சிறந்தவனு |
| अध्वरे | அத்வரே | வேள்வியில் |
| देवयते | தேவயதே | தேவர்களை விரும்பு பொருட்டு |
| देवान् | தேவாந் | தேவர்களை |
| यज | யஜ | ஆராதிப்பாய |
| (किञ्च) | (கிஞ்ச) | (அன்றியும்) |

| | | |
|---|---|---|
| होता | ஹோதா | தேவரையழைப்பவனும் |
| मन्द्रः (त्वं) | மந்த்³ர: (த்வம்) | களிப்பிப்பவனுமாகிய (நீ) |
| स्रिधः | ஸ்ரித⁴: | சத்துருக்களினும் |
| अति | அதி | மேலாய் |
| विराजसि | விராஜஸி | இனிது விளங்குகின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—4. விசுவாமித்திர ரிஷி. உஷ்ணிக் சந்தம். அக்கினி தேவதை.

அக்கினியே! ஆராதனை செய்வதிற் சிறந்த நீ, வேள்வியில் தேவர்களை விரும்புகின்ற எசமானன் பொருட்டுப் போற்றத்தக்க தேவதைகளைப் பூசிப்பாயாக. மற்றும், தேவர்களை யழைப்பவனும், எசமானனுக்குக் களிப்புண்டாக்குபவனுமாகிய நீ நாசம்பண்ணுகின்ற எல்லாச் சத்துருக்களையும் அடக்கிக்கொண்டு மேலாய் விளங்குகின்றாய். (4)

குறிப்பு.—ஈண்டுச் சத்துருக்கள் என்றது சோம்பல் நித்திரை முதலியவைகளை.

மந்திரம். 5.

கீதம்—துவஷ்டாரிஷி ஆதித்தியம்.

३ २ ३२ ३१ २ ३ १ २र ३ २
101. *जज्ञानः सप्त मातृभिर्मेधा माशासत श्रिये ।
३ २ ३ १ २ ३ १ २ ३२
अयं ध्रुवो रयीणां चिकेतदा ॥ ५ ॥

இருக்கு 10-101-4.

ஜஜ்ஞாந: ஸப்த மாத்ருபி⁴ர்மேதா⁴ மாஶாஸத ஶ்ரியே ।
அயம் த்⁴ருவோ ரயீணாம் சிகேததா³ ॥

அந்வயம்.

ध्रुवः, अयं, रयीणां, आचिकेतत्, सप्त, मातृभिः, (सह) जज्ञानः (सः अग्निः) मेधां, श्रिये, आशासत ॥

பதவுரை.

| | |
|---|---|
| த்⁴ருவ: | நிலையுள்ள |
| அயம் | இவ் வக்கினி |
| ரயீணாம் | திரவியங்கட்குக் |

* ...तरः, वेधामक्षासत, चिकेतयत्, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| आचिकेतत् | ஆசிகெதத் | கட்டளை (சிட்சை) செய்ய வுணர்ந் திருக்கின்றது. |
| सप्त | ஸப்த | ஏழு |
| मातृभिः | மாத்ருபிஃ | நாக்குகளோடு |
| (सह) | (ஸஹ) | (கூட) |
| जज्ञानः | ஜஜ்ஞாநஃ | வெளிப்பட்டிருக்கின்றது. |
| (सः अग्निः) | (ஸஃ அக்நிஃ) | (அவ் வக்கினி) |
| मेधां | மெதாம் | கருமத்தை நியமிக்குஞ் சோமத் தைக் குறித்து |
| श्रिये | ஶ்ரியெ | தொண்டின் நிமித்தம் |
| आ शासत | ஆ ஶாஸத | கட்டளை யிடுகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—5. திரித ரிஷி. உஷ்ணிக் சந்தம். தேவதை பவமான னென்னுஞ் சோமன்.

நிலையாயுள்ள இவ் வக்கினி தனங்கட்குக் கட்டளையிடுவதை யுணர்ந் திருக்கின்றது. ஏழென்னுந்தொகைகொண்ட அவிகளை அளக்குமாற்றலுள்ள நாக்குகளோடு, அல்லது, தன்மேல் அவிகளை யெறிகின்ற நாக்குகளோடு கூட வெளிப்பட்டிருக்கின்றது. அவ் வக்கினி, கருமங்களை நன்கு ஏற் படுத்துகின்ற சோமத்துக்குச் சேவையின் பொருட்டுக் கட்டளையிடுகின்றது. சோமத்திற்குத் தொண்டு செய்ய விரும்புகின்றது என்பதுமது. (5)

குறிப்பு.—ஏழு மாதர்கள் என்பதற்கு, நாக்குகள் போன்ற ஏழு சுவாலைகளுடன் அல்லது பிருதிவி, தாத்ரீ, காபீ, வேந்தன் மனைவி, அந்தணமாது, குருபத்தினி, கருப்பிணி, என்னும் ஏழு மாதர்களுடன் என்பதும், இவர்களை யாராதிக்கில் அக்கினி யைப் பூசித்த பயனுண்டு. இவைகள் கோபமடையின் அக்கினியும் முனிவடையும், ஆதலின் இவைகள் தேவதைகள் போன்று வழிபடத்தக்கன என்பதும் பிறமதம். ஏழு சந்தங்கள், ஏழு ஓத்துருக்கள், ஏழு சோம சமஸ்தாக்கள், ஏழு தேவதைகள், ஏழு வேள்விகள், ஏழு அவிகள் என்பனவே ஏழு மாதர்களாவர் என்பது விவரணக் காரர் மதம்.

மந்திரம் 6.

கீதம்—அதிதி ரிஷி ஆதித்யம்.

३२उ ३ १ २ ३ १ २र ३ १ २
102. उत स्या नो दिवा मतिरदिति रूत्यागमत् ।
१ २र ३ १ २ ३ २३ १ २
सा शन्तात मयस्करदप स्रिधः ॥ ६ ॥

அக்கினி
ள்ள 'ஹி'
ற சீலமுடைய

உத ஸ்யா நோ திவா மதிரதிதி ரூத்யா கமத் ।
ஸா ஶந்தாதா மயஸ்கரதப ஸ்ரிதஃ ॥

அந்வயம்.

उत, मतिः, स्या, अदितिः, ऊत्या, दिवा, नः, अगमत्, (आगत्य च)
सा, शंताता, मयः, करत्, स्रिधः, अप (गमयतु) ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| उत | உத | மற்றும் |
| मतिः | மதிஃ | பூசிக்கத்தக்க |
| स्या | ஸ்யா | முற்கூறிய அந்த |
| अदिति | அதிதி | அதிதி தேவதை, |
| ऊत्या | ஊத்யா | பாதுகாத்தலுடன் |
| दिवा | திவா | பகலில் |
| नः | நஃ | எங்களைக் குறித்து |
| अगमत् | அகமத் | வருக. |
| (आगत्य च) | (ஆகத்ய ச) | (வந்து) |
| सा | ஸா | அவ்வதிதி தேவதை |
| शंताता | ஶந்தாதா | சாந்தமுண்டாக்குஞ் |
| मयः | மயஃ | சுகத்தையுஞ் |
| करत् | கரத் | செய்வதாகுக. |
| स्रिधः | ஸ்ரிதஃ | சத்துருக்களையும் |
| अप (गमयतु) | அப (கமயது) | விலக்குக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—6. இரிமிடி ரிஷி. உஷ்ணிக் சந்தம். அதிதி, தேவதை.

மற்றும், மனனம் பண்ணற்குரிய, அல்லது துதித்தற்குரிய, முற்கூறிய அவ்வதிதி தேவதை, பாதுகாப்போடு கூட பகலில் எங்களை முன்னிட்டு வருக. வந்து, சாந்தியைத்தருகின்ற சுகத்தையும் அவ்வதிதி தேவதை செய்குக. கொலைத்தொழிற் புரியுஞ் சத்துருக்களைத் தூரத்தில் ...குக. 'स्रिधि' என்பதற்குக் கொல்லுதல் என்பது பொருள். (6)

குறிப்பு.—மூலத்திலுள்ள, 'மதி' என்னுஞ் சொல்லிற்கு, இப்பாடியத்திற் ...ட்படி, மனனம் பண்ணத்தக்கது, அல்லது துதிக்கத்தக்கது, எனக் கொள் ...றிவுடையாள்) எனக் கொண்டனர் விவரணக்காரர். ஓர்காலுந் தன்புருத ... அவளே தேவமாதாவாவள் என்பதும் அவர் கொள்கையே. தீனத் ...ம என்பது பிறர் கொள்கை. பிரகிருதி யென்பது இதிகாசக்காரர் ...தி—அந்தரிட்சம் எனவும், மயம்—என்பது சுகமெனவுங் கூறுகின் ...னவும், उत, स्या, எனவும் பாடம்.

## மந்திரம் 7.

கீதம்—வார்க்க சம்யம்.

१२ ३ १ २ ३ २ १२ ३ १२
103. ईडिष्वा हि *प्रतीव्यां३ यजस्व जातवेदसम् ।
३ १ २ ३ १२
चरिष्णु धूममगृभीतशोचिषम् ॥ ७ ॥

இருக்கு 8-23-1.

ஈடிஷ்வா ஹி ப்ரதீவ்யாம் யஜஸ்வ ஜாதவேதஸம் ।
சரிஷ்ணு தூமம் அக்ருபீத சோசிஷம் ॥

அந்வயம்.

प्रतीव्यां, (अग्निं) हि ईडिष्वा (किञ्च) चरिष्णु धूमं, अगृभीत शोचिषं, जातवेदसं, यजस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| प्रतीव्यां | ப்ரதீவ்யாம் | சத்துருக்களிடத்து மாறுதலையுடைய |
| (अग्निं) हि | (அக்நிம்) ஹி | (அக்கினியை) யே |
| ईडिष्वा | ஈடிஷ்வா | துதிப்பாயாக. |
| (किञ्च) | (கிஞ்ச) | (அன்றியும்) |
| चरिष्णु धूमं | சரிஷ்ணு தூமம் | பரந்து செல்லும் புகையையுடையதும் |
| अगृभीत शोचिषं | அக்ருபீத சோசிஷம் | பற்றவொண்ணாத வொளியையுடையதும் |
| जातवेदसं | ஜாதவேதஸம் | தோன்றின பிராணிகளை யுணர்ந்ததுமாகிய அவ் வக்கினியைப் |
| यजस्व | யஜஸ்வ | போற்றுவாயாக. |

சாயணபாடியம்.

கண்டம்—11. இருக்கு—7. வைசுவமனு யசுவரிஷி. உஷ்ணிக் சந்தம். அக்கினி தேவதை.

சத்துருக்களிடத்து மாறுபாடாய்ச் செல்லுந் தன்மையுள்ள அக்கினியையே தோத்திரங்களாற் றுதிப்பாயாக. ஈண்டு மூலத்திலுள்ள 'ஹி' என்பது தேற்றத்தினின்றது. மற்றும், யாண்டுஞ் செல்கின்ற சீலமுடைய

* प्रतीव्यम्, என்பது இருக்கு.

புகையை யுடையதும், சுவாலைகளை யுடையதும், இராக்கதர்களாற் கொள்ள முடியாத வொளியை யுடையதும், தோன்றின, பிராணிகளனைத்தையு முணர்ந்ததுமாகிய அவ் வக்கினியைத் தேவவுணவுகளால் ஆராதிப்பாயாக. (7)

குறிப்பு.—प्रदीव्यं, என்றதற்கு மாறிச்செல்லுஞ் சீலமுடையதென்று பாடியத்திற் கொண்டபடி கொள்ளாது, 'யாண்டுமுள்ளது' எனவும் 'ஹி' என்பதை அசை யெனவுங் கொண்டனர் விவரணக்காரர்.

जातवेदसं, என்றதற்கு அக்கினி யென்றூர் பாடியக்காரர். சூரியனெனக் கொண்டனர் விவரணக்காரர். 'இதில்' "उदुत्यं जातवेदसं" என்னும் மறை வாக்கும், जातवेदसे सुनवाम, என்னும் நிகண்டு வாக்கும் பிரமாணமாமென்பர்.

## மந்திரம் 8.

கீதம்—அகத்திய ரிஷி ரக்ஷோக்னம்.

१ २र ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
104. न तस्य मायया च न रिपु रीशीत मर्त्यः ।
२ ३ १ २ ३ १ २ ३ १ २
यो अग्नये दृदाश *हृव्यदातये ॥ ८ ॥

இருக்கு 8-23-25.

ந தஸ்ய மாயயா ச ந ரிபு ரீஶீத மர்த்ய꞉ ।
யொ அக்நயெ தநாஶ ஹவ்யதாதயெ ॥

அங்வயம்.

यः, हृव्यदातये, अग्नये, ददाश, तस्य, मर्त्यः, रिपुः (सन्), मायया च, न, ईशीत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | ய꞉ | யாதொருவன் |
| हृव्यदातये | ஹவ்யதாதயெ | அவி யேற்றுக்கொள்ளுகின்ற |
| अग्नये | அக்நயெ | அக்கினிக்கு |
| ददाश | தநாஶ | அவி கொடுக்கின்றானோ, |
| तस्य | தஸ்ய | அவனுக்கு |
| मर्त्यः | மர்த்ய꞉ | யாதொரு மனிதனும் |

* हृव्यदादिभिः என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **रिपुः (सन्)** | ரிபு: (ஸந்) | சத்துருவாயிருந்து |
| **मायया च** | மாயயா ச | கபடத்தினுலேயும் |
| **न ईशीत** | ந ஈஶீத | தலைவனுகமாட்டான். |

### சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—8. வைசுவமனு வையசுவ ரிஷி. உஷ்ணிக் சந்தம். அக்கினி தேவதை.

ச. ந. என்னு மசைச் சொற்கட்கு உம்மைப் பொருள். அவியேற்கு மாற்றலுடைய அக்கினிக்கு அவிகளைக் கொடுக்கின்றவனுக்கு எவனும் வஞ்சகத்தாலேனும் தலைவனுகமாட்டான். அவனுடைய சத்துரு வலியில்லாதவனுகின்றான் என்பது பொருள். (8)

குறிப்பு.—மாயை யென்பதை பாடியக்காரர் கபடமென்றார். விவரணக்காரரோ, பிரக்ஞை யென்றார். நகாரத்தை உம்மையெனக் கொண்டார் பாடியக்காரர். அசை யென்றனர் விவரணக்காரர்.

## மந்திரம் 9.

கீதம்—சௌமக்ரதவம் பிருகதாக்னேயீயம்.

२३ १ २ ३ २ ३२ ३१२ ३क २र

105. **अप त्यं वृजिनꣳ रिपुꣳस्तेनमग्ने दुराध्यम् ।**

१ २ २ २ ३२

**दविष्ठमस्य सत्पते कृधी सुगम् ॥ ९ ॥**

இருக்கு 8-23-14.

அப த்யம் வ்ருஜிநம் ரிபும் ஸ்தேநமக்நே துராத்யம் ।
தவிஷ்டமஸ்ய ஸத்பதே க்ருதீ ஸுகம் ॥

### அந்வயம்.

हे अग्ने! त्वं, त्यं, वृजिनं, रिपुं, दुराध्यं, स्तेनं, दविष्ठं, अपास्य,
हे सत्पते! सुगं कृधी ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अग्ने! त्वं** | ஹே அக்நே! த்வம் | அக்கினியே! நீ |
| **त्यं** | த்யம் | பிரசித்தனுகிய அந்த |
| **वृजिनं** | வ்ருஜிநம் | வஞ்சகனும் |
| **रिपुं** | ரிபும் | பாவஞ் செய்பவனும் |

| | | |
|---|---|---|
| दुराध्यं | து³ராத்⁴யம் | கொடிய எண்ணத்தனுமாகிய |
| स्तेनं | ஸ்தே நம் | துன்புறுத்துவோனை |
| दविष्ठं | த³விஷ்ட²ம் | மிகத்தூரத்தில் |
| अपास्य | அபாஸ்ய | நீக்குவாயாக. (எடுத்துப்போடுவாயாக.) |
| हे सत्पते! | ஹே ஸத்பதே! | சத்துருக்களைக்காப்பாற்றுவோய்! |
| सुगं | ஸுக³ம் | நன்மார்க்கத்தாலடையு மின்பத்தைச் |
| कृधी | க்ருதீ⁴ | செய்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—9. பரத்துவாச ரிஷி. உஷ்ணிக் சந்தம். வைசுவ தேவாக்கினி தேவதை.

அக்கினியே! பிரசித்தியாயுள்ள அக் கபடனும், பாவஞ் செய்வோனும், துக்கத்தாற் கிட்டுவதை யுண்பவனும், அல்லது, கெட்ட கருத்துடையவனுமாகிய இத்தன்மைய இம்சை செய்வோனை மிகத்தூரத்தில் எடுத்தெறிவாயாக. ஈண்டு, 'அசு' என்னும் 'தாது' (பகுதி) எ தல் என்னும் முதனிலைத்தொழிற்பெயர் கொண்டது. நல்லோர்களைப் பாதுகாக்குமக்கினியே! எங்கட்கு நல் வழியாற் பெறத்தக்க சுகத்தைச் செய்வாயாக. ஈண்டு எல்லாத் தேவதை வடிவமாகிய அக்கினியைத் துதித்தலால் விசுவ தேவத்தன்மை அமையு மாறறிக. வைசுவ தேவம் என்பது மிதுவே. (9)

குறிப்பு.—வைசுவ தேவத் தன்மையை, விசுவே தேவா; சர்வே தேவா: என நிருக்தம் கூறுகின்றது. மிக அருதியாகிய தேவதா லிங்க மந்திர சமுதாயம் எல்லாத் தேவர்கட்கும் பொதுவாமாதலின் வைசுவ தேவம் என்பர் தேவராச வேட்பார். இம் மந்திரத்திற்கு ரிகிசுவன ரிஷி யென்று கூறுகின்றது ஆங்கில மொழி பெயர்ப்பு.

## மந்திரம் 10.

கீதம்—அகத்திய ரிஷி ரக்ஷோக்னம்.

३क२र ३ १२ ३ १२
106. श्रुष्टयग्ने नवस्य मे स्तोमस्य वीर विश्पते ।
२ ३२३ १२ ३१ २
नि मायिन *स्तपसा रक्षसो दह ॥ १० ॥

இருக்கு 8-32-14.

* तपुषा, என்பது இருக்கு.

𑌶𑍍𑌰𑍁𑌷𑍍𑌟𑍍𑌯𑌗𑍍𑌨𑍇 𑌨𑌵𑌸𑍍𑌯 𑌮𑍇 𑌸𑍍𑌤𑍋𑌮𑌸𑍍𑌯 𑌵𑍀𑌰 𑌵𑌿𑌶𑍍𑌪𑌤𑍇 ।
𑌨𑌿 𑌮𑌾𑌯𑌿𑌨𑌸𑍍𑌤𑌪𑌸𑌾 𑌰𑌕𑍍𑌷𑌸𑍋 𑌦𑌹 ॥

அந்வயம்.

हे वीर! विश्पते! अग्ने! नवस्य, मे, स्तोमस्य, श्रुष्टी मायिनः,
रक्षसः, तपसा, निदह ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे वीर!** | 𑌹𑍇 𑌵𑍀𑌰 ! | வீரனே ! |
| **विश्पते!** | 𑌵𑌿𑌶𑍍𑌪𑌤𑍇 ! | மக்களைக் காப்பாற்றுவோய் ! |
| **अग्ने!** | 𑌅𑌗𑍍𑌨𑍇 ! | அக்கினியே ! |
| **नवस्य** | 𑌨𑌵𑌸𑍍𑌯 | இவ்வேளை செய்தலின் புதிதான |
| **मे स्तोमस्य** | 𑌮𑍇 𑌸𑍍𑌤𑍋𑌮𑌸𑍍𑌯 | எனது தோத்திரசமுதாயத்தைக் |
| **श्रुष्टी** | 𑌶𑍍𑌰𑍁𑌷𑍍𑌟𑍀 | கேட்டு |
| **मायिनः** | 𑌮𑌾𑌯𑌿𑌨𑌃 | மாயையையுடைய |
| **रक्षसः** | 𑌰𑌕𑍍𑌷𑌸𑌃 | இராக்கதர்களை |
| **तपसा** | 𑌤𑌪𑌸𑌾 | தகிக்கின்ற பிரகாசத்தால் |
| **निदह** | 𑌨𑌿𑌦𑌹 | முழுதுஞ் சாம்பராக்குவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—10. விசுவமநு ரிஷி. உஷ்ணிக் சந்தம். வைசுவ தேவாக்கினி தேவதை.

சத்துருக்களை யழிப்போய்! அல்லது, வீரிய முடையோய்! மனிதர் களைக் காப்பாற்றுவோய்! அக்கினியே! இப்போது செய்தலின் புதிதாகிய தோத்திரக் கொத்துகளைக் கேட்டு மாயையை யுடையவர்களும், இது பற்றியே கருமங்கட் கிடையூறு செய்கின்றவர்களுமான இராக்கதர்களை, காய்கின்ற சுவாலையால் அடியோடு சாம்பராக்குவாயாக. (10)

குறிப்பு.—ஈண்டுப் பாடியக்காரர், பலவகையாய் வேற்றுமைகளைத் திரிபாக்கிப் பொருள் கொண்டுள்ளார். விவரணக்காரரோ, எனது புதிதாகிய தோத்திரத்தின் வலியால் வீரமுள்ளோய்! மக்களைக் காப்பாற்றுவோய்! அக்கினியே! மாயாவியான இராக்கதர்களை ஒளியால் விரைவில் சாம்பராக்குதி, எனப் பொருட்படுத்தியுள்ளார்.

## பதினோராவது கண்டம்

முற்றும்.

## பன்னிரண்டாவது கண்டம்.

---

## பிரபாடகம்—2. அத்தியாயம்—1.

எட்டு மந்திரங்களாலானது.

---

### மந்திரம் 1.

*கீதம்—இந்திர வசிஷ்ட பிரம்மிட்டீயம்.*

१ २र ३ १ २ ३ २ ३ १ २
107. **प्र मꣳहिष्ठाय गायत ऋताव्ने बृहते शुक्रशोचिषे ।**
३ १ २ ३१२
**उप स्तुतासो अग्नये ॥ १ ॥**

இருக்கு 8-103-8.

ப்ர மꣳஹிஷ்டாய காயத ருதாக்னே ப்ருஹதே ஶுக்ரஶோசிஷே ।
உப ஸ்துதாஸோ அக்னயே ॥

அந்வயம்.

**हे उपस्तुतासः!, मंहिष्ठाय, ऋताव्ने, बृहते, शुक्रशोचिषे,**
**अग्नये, प्रगायत ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे उपस्तुतासः!** | ஹே உபஸ்துதாஸ:! | அருகிற் றுதிப்போர்காள்! (நீவிர்) |
| **मंहिष्ठाय** | மꣳஹிஷ்டாய | தலைவள்ளலும் |
| **ऋताव्ने** | ருதாக்னே | வேள்வி அல்லது, சத்தியமுடையவனும் |
| **बृहते** | ப்ருஹதே | மகானும் |
| **शुक्रशोचिषे** | ஶுக்ரஶோசிஷே | ஒளிமிகுந்த சுடரோனும் (ஆகிய) |
| **अग्नये** | அக்னயே | அக்கினிக்குத் |
| **प्रगायत** | ப்ரகாயத | நன்கு தோத்திரம்படிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—1. பிரயோகபார்க்கவ ரிஷி. ககுப் சா கினி தேவதை.

அருகிற் றுதிப்போர்காள்! நீவிர் சிறந்த கொடையுடையோனும், வேள்வியுடையோனும், அல்லது, சத்தியமுடையோனும், மகானும், ஒளி மிகுந்த சுடரோனும் ஆகிய அக்கினிக்குத் தோத்திரஞ் சொல்வீர்களாக. (1)

குறிப்பு.—ऋताव्ने, என்றதற்கு, நீரைத்தரும் என்றும். இதற்கு சௌப ரிஷி யென்றுங் கொள்வர் பேருட்டாசிரியர்.

மந்திரம் 2.

கீதம்—பரத்துவாச ரிஷி வாசபிருத் வாசாபிருத் வாசபர்மீயம்

१ २र३ २ ३ १ २ ३ १ २ ३ १ २
108. प्र सो अग्ने तवोतिभिः * सुवीराभिस्तरति वाजकर्मभिः ।
२ ३ २ ३१ २र
यस्य त्वंꣳ सख्यमाविथ ॥ २ ॥

இருக்கு 8-19-20.

ப்ர ஸொ அக்நே தவொதிபி: ஸுவீராபிஸ்தரதி வாஜகர்மபி:।
யஸ்ய த்வம் ஸக்யமாவித ॥

அந்வயம்.

हे अग्ने! त्वं, यस्य, सख्यं, आविथ, तव, सुवीराभिः, वाजकर्मभिः, ऊतिभिः, सः, प्रतरति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்நே! | அக்கினியே! |
| त्वं | த்வம் | நீ |
| यस्य | யஸ்ய | எவனுக்கு |
| सख्यं | ஸக்யம் | நண்பன் |
| आविथ | ஆவித | ஆகின்றாயோ, |
| तव | தவ | உன்னுடைய |
| सुवीराभिः | ஸுவீராபி: | நல்ல மக்கட்பேற்றைத் தருவனவும் |

* सुवीराभिस्तिरते वाजभर्मभिः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| | வாஜகர்மபி: | அன்னங்களையும் ஆற்றல்களையும் காப்பாற்றுவனவும் ஆன |
| | ஊதிபி: | பரிபாலனங்களினால் |
| | ஸ: | அவன் |
| प्रतरति | ப்ரதரதி | விருத்தியாகின்றான் |

### சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—2. சௌபரி ரிஷி. ககுப் சந்தம். அக்கினி தேவதை.

அக்கினியே! உன்னுடைய பாதுகாப்புக்களினால் அந்த எசமானன் இனிது விருத்தியாகின்றான். (எத்தன்மைய பாதுகாப்புக்களாலெனின்), பாதுகாப்புக்கள் விசேடித்துக் கூறப்படுகின்றன :—அழகிய புத்திரன் முதலியோர்களை யுடையனவும், அன்னங்களின் கருமத்தையேனும், அல்லது ஆற்றலின் கருமத்தையேனும் காப்பாற்றுவனவுமான, அத்தன்மைய பாதுகாப்புக்களினால் என மேலன்வயித்துக் கொள்க. அக்கினியே! நீ எந்த எசமானனுக்கு சிநேகனாகின்றனையோ, அவன் விருத்தியாகின்றான் என முன்னுள்ளதுடன் சேர்த்துக்கொள்க. (2)

குறிப்பு.—तरति वाजकर्मभिः, எனவும், तिरते वाजकर्मभिः எனவும், பாடபேதமுண்டு.

## மந்திரம் 3.

கீதம்—சௌபரம்.

१ २ ३क २र ३ १ २ ३ १२३ १ २
109. तं *गूर्द्धया स्वर्णरं देवासो देवमरतिं दधन्विरे ।
३ २ ३ १ २
देवत्रा †हव्य मूहिषे ॥ ३ ॥

இருக்கு 8-15-1.

தம் க்ருத்⁴யா ஸ்வர்ணரம் தேவாஸோ தேவமரதிம் த⁴ந்விரே ।
தேவத்ரா ஹவ்ய மூஹிஷே ॥

அந்வயம்.

(हे स्तोतः !), गूर्द्धया, स्वर्णरं, तं, (स्तुहि), देवासः, देवं, अरतिं, दधन्विरे, (प्राप्यच), (तेनाग्निना), देवत्ना हव्यं, आ ऊहिषे ॥

---

* गूर्धया, †हव्य मोहिरे, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे स्तोतः!) | (ஹெ ஸ்தோதஃ!) | துதிப்போய்! (நீ) |
| गूर्द्धया | கூர்த்தயா | போற்றுங் கருமத்துடன் |
| स्वर्णरं | ஸ்வர்ணரம் | எல்லாவற்றையுஞ் செலுத்தும் |
| तं | தம் | அவ் வக்கினியைத் |
| (स्तुहि) | (ஸ்துஹி) | (தோத்திரம் பண்ணுவாயாக.) |
| देवासः | தெவாஸஃ | வேட்போர்கள் |
| देवं | தெவம் | ஈகை முதலிய குணங்களை யுடையதும் |
| अरतिं | அரதிம் | இறையுமாகிய (எதை) |
| दधन्विरे | தயந்விரெ | அடைந்தார்களோ, |
| (प्राप्यच) | (ப்ராப்யச) | (அடைந்து) |
| (तेन अग्निना) | (தெந அக்நிநா) | அவ் வக்கினி வாயிலாக |
| देवत्रा | தெவத்ரா | தேவதைகட்கு |
| हव्यं | ஹவ்யம் | அவியைச் |
| आ ऊहिषे | ஆ ஊஹிஷெ | சேர்க்கின்றார்களோ, (அவ் வக்கினியை யெனக் கூட்டுக.) |

சாயண பாடியம்

கண்டம்—12. இருக்கு—3. சௌபரி ரிஷி. ககுப் சந்தம். அக்கினி தேவதை.

தோத்திரஞ்செய்வோய்! பிரசித்தியாகிய அவ் வக்கினியைத் துதிக்குங் கருமத்தாற் றுதிப்பாயாக. எவ் வண்ணமாகிய அக்கினியை யெனின்? அனைத்தையுஞ் செலுத்துவதை, எசமானர்க ளனைவர்களாலும் கரும முதலியதிற் கொண்டு போகப்பட்டதை. அல்லது சுவர்க்கத்தைக் குறித்து அவிகளைக் கொண்டுபோவதை. ஈகை முதலிய குணங்களுடையதும், இறை ஆயதும், அல்லது இனிதடையத் தக்கதுமாய எதை அடைகின்றார்களோ, அதாவது, துதி முதலியவைகளா லடைகின்றார்களோ, அடைந்து அவ் வக்கினி வாயிலாகத் தேவர்களை யுத்தேசித்து, புரோடாசம் முதலிய அவியை (தேவ

வுணவை) சேர்க்கின்றார்களோ, அவ் வக்கினியை. துதிப்பாயாக என முடித்துக்கொள்க. (3)

குறிப்பு.—தேவர்கள் = அதாவது துதிப்போர்கள் எனவே வேட்போர்கள் எனப்பட்டது.

'दधन्विरे' என்பதில் धवि:, என்பதற்கு அடைதல் பொருள்.

देवत्रा, என்பதில் 'தேவ மனுட', என்பதாதியால், त्रा இரண்டாம் வேற்றுமையில் வந்தது.

ஈண்டு, गूर्द्धयति, என்பதற்குத் துதித்தல் பொருளென நிருக்தம் 3-14-5 கூறுகின்றது.

## மந்திரம் 4.

கீதம்—பக்கம் அல்லது சௌபரம்.

१ २ ३ १ २ ३ १ २ ३ २ २ ३ २ ३ २
110. *मा नो हृणीथा अतिथिं वसुरग्निः पुरुप्रशस्त एषः ।
२ ३ १ २ ३ २
यः सुहोता स्वध्वरः ॥ ४ ॥

இருக்கு 8-103-12.

மா நோ ஹ்ருணீதா அதிதிம் வஸுரக்நி: புருப்ரஶஸ்த ஏஷ: ।
ய: ஸுஹோதா ஸ்வத்வர: ॥

அந்வயம்.

(हे ऋत्विक्सङ्घ!) यः, सुहोता, स्वध्वरः, (सः), एषः, अग्निः, पुरुप्रशस्तः, वसुः, (तं) अतिथिं, नः, यज्ञे, मा हृणीथाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ऋत्विक्सङ्घ! | ஹே ருத்விக்ஸங்க! | வேட்போர் கூட்டத்தோர்களே! (நீவிர்) |
| यः | ய: | எது |
| सुहोता | ஸுஹோதா | இனிது தேவர்களை யழைப்பதும் |
| स्वध्वरः | ஸ்வத்வர: | நல்ல வேள்வியையுடையதுமாமோ, |
| (सः) एषः अग्निः | ஸ: ஏஷ: அக்நி: | அத் தகைய இவ் வக்கினி |
| पुरुप्रशस्तः | புருப்ரஶஸ்த: | பல்லோராற்றுதிக்கப்பட்டதும் |
| वसुः | வஸு: | வாசஞ் செய்விப்பதுமாம். |
| (तं) अतिथिं | (தம்) அதிதிம் | அதிதிபோற் பூசிக்கத்தக்க (அவ் வக்கினியை) |

* मानो हृणीता मतिथिर्वसु, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **(नः यज्ञे)** | (நः யஜ்ஞே) | (எமது வேள்வியில்) |
| **मा हृणीथाः** | மா ஹ்ருணீதா: | { வேறிடஞ் செல்லுமாறு அலக்கழிக்காதீர்கள். |

சாயண பாடியம்.

*கண்டம்*—12. *இருக்கு*—4. *பிரயோகபார்க்கவ ரிஷி. அல்லது சோபரி கண்ணுவ ரிஷி. ககுப் சந்தம். அக்கினி தேவதை.*

*வேட்போர் கழகத்தோர்களே! (நீவிர்) எமது வேள்வியில் அதிதி போற் பிரியப்படத்தக்க அக்கினியை வேறோரிடத்திற் போகச் செய்யாதீர்கள். எவ் வக்கினியை? என்றாசங்கித்துக் கூறப்படுகின்றது:—யாதோரக்கினி தேவர்களை யினிதழைப்பதும், அழகிய வேள்விபுடையதுமாமோ, அதை யென்க. எவ் வக்கினி பல்லோர்களாற் போற்றப்பட்டதும், வசிக்கச் செய்வதுமாகின்றதோ, அதை என மேல் அந்வயித்துக்கொள்க.* (4)

**குறிப்பு.**—*அக்கினியானது எங்களையும் அதிதிகளையும் வெறுக்காதிருக்குக என்பது ஆங்கில மொழிபெயர்ப்பாசிரியரின் கருத்து.*

## மந்திரம் 5.

*கீதம்—பக்த ரிஷி தேவாநீகம், அல்லது பதி.*

३ १ २ ३ १ २र ३ २ ३ १ २ ३ १ २ ३र

111. **भद्रो नो अग्निराहुतो भद्रा रातिः सुभग भद्रो अध्वरः ।**

३ २ ३ १ २र

**भद्रा उत प्रशस्तयः ॥ ५ ॥**

இருக்கு 8-19-19.

பத்ரோ நோ அக்நிராஹுதோ பத்ரா ராதி: ஸுபக பத்ரோ அத்வர:।
பத்ரா உத ப்ரசஸ்தய: ॥

அந்வயம்.

आहुतः, अग्निः, नः, भद्रः, (भवतु), हे सुभग !, नः भद्रा रातिः, अध्वरः, भद्रः, (भवतु), उत, प्रशस्तयः, भद्राः (भवन्तु) ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **आहुतः** | ஆஹுத: | *அவிகளாற் களிப்படைந்த* |
| **अग्निः** | அக்நி: | *அக்கினி* |
| **नः** | ந: | *எங்கட்கு* |
| **भद्रः (भवतु)** | பத்ர: (பவது) | *மங்கள (மாகுக).* |
| **हे सुभग !** | ஹே ஸுபக ! | *மங்களமாகிய தனமுள்ளோய் !* |

| | | |
|---|---|---|
| नः | நஃ | எங்கட்கு |
| भद्रा रातिः | ஹத்ரா ராதிஃ | மங்களமாகிய தனமும் ஈகையும் |
| भवतु | ஹவது | உண்டாகுக. |
| भद्रः अध्वरः | ஹத்ரஃ அயூரஃ | மங்களமாகிய வேள்வி |
| (भवतु) | (ஹவது) | (உண்டாகுக). |
| उत भद्राः प्रशस्तयः | உத ஹத்ராஃ வ்ரஶஸ்தயஃ | மற்றும், மங்களமாகிய துதிகள் |
| (भवन्तु) | (ஹவந்து) | (உண்டாகுக). |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—5. சௌபரி ரிஷி.

அவிகளால் திருப்தியடைந்த அக்கினி எங்கட்கு மங்களமாகுக. அழகிய தனமுடைய அக்கினியே! எங்கட்கு மங்களமாகிய திரவியங்களும், தானங்களும் உண்டாகுக. மங்களமாகிய வேள்வியும் மற்றும், மங்களங்களான பெருமைகளும், துதிகளும் உண்டாகுக. (5)

குறிப்பு—आहुतः என்பதற்குத் தேவர்களை யழைக்க நியமித்தல் பொருளென்று கூறுகின்றது ஆங்கில மொழி பெயர்ப்பு.

## மந்திரம் 6.

கீதம்—கௌதமம். அல்லது, சாத்தியம்.

१ २ ३ १ २३ १ २२३ १ २

112. यजिष्ठं त्वा ववृमहे देवं देवत्रा होतारममर्त्यम् ।

३ २ ३ १ २ ३ १२

अस्य यज्ञस्य सुक्रतुम् ॥ ६ ॥

இருக்கு 8-18-3.

யஜிஷ்டம் த்வா வவ்ருமஹே தேவம் தேவத்ரா ஹோதாரமமர்த்யம் ।
அஸ்ய யஜ்ஞஸ்ய ஸுக்ரதும் ॥

அந்வயம்.

(हे अग्ने!), यजिष्ठं, देवत्रा, देवं, होतारं, अमर्त्यं, अस्य यज्ञस्य, सुक्रतुं, त्वा, ववृमहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे अग्ने!) | (ஹே அக்நே!) | (அக்கினியே!) |
| यजिष्ठं | யஜிஷ்டம் | ஆராதனையிற் சிறந்ததும் |
| देवत्रा | தேவத்ரா | தேவர்களுக்குள் |
| देवं | தேவம் | சிறந்த ஈகை முதலிய குணங்களுடையதும் |

| | | |
|---|---|---|
| होतारं | ஹோதாரம் | தேவர்களை யழைப்பதும் |
| अमर्त्यं | அமர்த்யம் | இறவாததும் |
| अस्य यज्ञस्य | அஸ்ய யஜ்ஞஸ்ய | இவ் வேள்விக்கு |
| सुक्रतुं | ஸுக்ரதும் | நற் கருத்தனுமாகிய |
| त्वा | த்வா | உன்னை |
| ववृमहे | வவ்ருமஹே | நன்கு பூசிக்கின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—6. சோபரி ரிஷி.

அக்கினியே! பூசிப்பதிற் சிறந்த உன்னை இனிது போற்றுகின்றோம். எவ் வண்ணத்தனுகிய உன்னை யெனின்? தேவர்களுக்குட் சிறந்த தான முதலிய குணமுடையோனை. மற்றுந் தேவர்களை யழைப்போனை. மற்றும் இறவாதோனை, மற்றும் இவ்வேள்வியிற் சிறந்த தலைவனை. (போற்றுகின்றோம் என்பதனோடு மேற் கூட்டுக) (6)

குறிப்பு.—अस्य यज्ञस्य सुक्रतुम्, என்றதற்கு இவ் வேள்வியை இனிது முடிக்க, எனப் பொருள் கூறியுள்ளார் ஆங்கில மொழி பெயர்ப்பாளர்.

## மந்திரம் 7.

கீதம்—சமதக்னி ரிஷி, சம்வர்க்கம்.

१२ ३१ २३ २ ३ २ ३ १२ ३ १ २ ३ १ २
113. तदग्ने द्युम्नमाभर *यत्सासाहा सदने कञ्चिदत्रिणम् ।
३ १ २र ३क२र
मन्युं †जनस्य दूढ्यम् ॥ ७ ॥

இருக்கு 8-19-12.

தத³க்³நே த்³யும்நமாப⁴ர யத்ஸாஸாஹா ஸத³நே கஞ்சித³த்ரிணம் ।
மந்யும் ஜநஸ்ய தூ³ட்⁴யம் ॥

அந்வயம்.

हे अग्ने!, तत्, द्युम्नं, आभर, यत् आसदने, (वर्तमानं), कञ्चित्, अत्रिणं, सासाहा, (तथा), दूढ्यम्, जनस्य, मन्युं, सासाहा ॥

* यत्सा सहत्सहने, † जतस्य दूढ्य:, என்பது இருக்கு.

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | 𑌹𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇! | அக்கினியே ! |
| तत् | 𑌤𑌤𑍍 | அந்த |
| द्युम्नं | 𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌂 | அன்னத்தை, அல்லது, கீர்த்தியை |
| आभर | 𑌆𑌭𑌰 | எங்கட்குத் தருவாயாக. |
| यत् आसदने | 𑌯𑌤𑍍 𑌆𑌸𑌦𑌨𑍇 | எக்கால் வேள்வி மண்டபத்தில் |
| (वर्तमानं) कश्चित् | (𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌂) 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | (இருக்கின்றவன்) எவனுனும் |
| अत्रिणं | 𑌅𑌤𑍍𑌰𑌿𑌣𑌂 | புலாலுண்ணும் அவ் விராக்கதனை |
| सासाहा | 𑌸𑌾𑌸𑌾𑌹𑌾 | மிகத் தாழ்த்திவிடுவாயாக. (மற்றும்) |
| (तथा) | (𑌤𑌥𑌾) | அவ்வாறே |
| दूढ्यम् | 𑌦𑍂𑌢𑍍𑌯𑌮𑍍 | பாவமதியுள்ள சத்துருவையும் |
| जनस्य मन्युं | 𑌜𑌨𑌸𑍍𑌯 𑌮𑌨𑍍𑌯𑍁𑌂 | சனங்களின் கோபத்தையும் |
| सासाहा | 𑌸𑌾𑌸𑌾𑌹𑌾 | முற்று மடக்கி விடுவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—7. சோபரி ரிஷி

அக்கினியே ! (நீ) அவ் வன்னத்தை அல்லது கீர்த்தியை எங்கட்கு நிறையத் தருவாயாக. ஓர்கால் வேள்வி மனையில் புலாலுண்ணும் இராக்கதர் யாரேனுமிருப்பரேல், அவ் விராக்கதர் முதலியோர்களையும் அடியோடு அடக்கி விடுவாயாக, அவ்வாறே பாவ மதியுடைய சத்துருவையும், மக்களின் கோபங்களையும் அடக்கி விடுவாயாக. (7)

குறிப்பு.—दूढ्या, எனவும் दूळभम्, எனவும் பாடபேதம்.

## மந்திரம் 8.

கீதம்—அகத்திய ரிஷி ராக்ஷோக்னம்.

१ २र ३ १ २ ३ १ २र ३ १ २ ३ २
114. यद्वा उ विश्पतिः शितः सुप्रीतो *मनुषो विशे ।
२उ ३२उ ३ १ २
विश्वेदग्निः प्रति रक्षांसि सेधति ॥ ८ ॥

இருக்கு 8-13-13.

யதா உ விஶ்பதிஃ ஶிதஃ ஸுப்ரீதொ மநுஷொ விஶெ ।
விஶ்வெதக்நிஃ ப்ரதி ரக்ஷாம்ஸி ஸெயதி ॥

அந்வயம்.

विश्पतिः, शितः (अयं), अग्निः, सुप्रीतः, मनुषः, विशे, यत्, वै,
वर्तते, (तदा), अग्निः, विश्वा इत्, रक्षांसि, प्रतिषेधति उ ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विश्पतिः | விஶ்பதிஃ | மனிதர்களைக் காப்பாற்றுவதும் |
| शितः (अयं) | ஶிதஃ (அயம்) | சுடர் மிகுந்ததுமாகிய இந்த |
| अग्निः | அக்நிஃ | அக்கினி |
| सुप्रीतः | ஸுப்ரீதஃ | மிகக் களிப்புடையதாய் |
| मनुषः | மநுஷஃ | மனிதரது |
| विशे | விஶெ | வீட்டில் |
| यत् वै (वर्तते) | யத் வை (வர்த்ததெ) | எப்பொழுதிருக்கின்றதோ |
| (तदा) | (ததா) | அப்பொழுது |
| अग्निः | அக்நிஃ | அக்கினி |
| विश्वा इत् | விஶ்வா இத் | அவரைப் பீடிக்கின்ற எல்லா |
| रक्षांसि | ரக்ஷாம்ஸி | இராக்கதர்களையும் |
| प्रतिषेधति | ப்ரதிஷெதி | நாசப்படுத்துகின்றது. |
| उ | உ | இது பிரசித்தமாம். |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—8. விசுவமனு ரிஷி. சந்தம் உஷ்ணிச். தேவதை அக்கினி.

மனிதர்களைக் காப்பாற்றுவதும், அவிகளால் சுடர் மிகுந்ததுமாகிய அவ் வக்கினி மக்கள் தம் மனைக்கண் உள்ளன்போடு எக்காலம் வரை இருக்கின்றதோ, அக்காலம் வரை அவருடைய பகைவராய்த் துன்புறுத்தும் இராக்கதர்களனைவரையும் நாசப்படுத்தி விடுகின்றது. மூலத்திய உகாரம், பிரசித்தியில் நின்றது, இது பிரசித்தியாம் என்பதாம். (8)

வேதப்பொருளை விளக்கலால் இருளின் துன்பத்தை நீக்கி, புருடார்த்தங்கள் நான்கையும் வித்தியாதீர்த்தேசர் கொடுப்பாராக.

ஸ்ரீமத், இராசாதிராச பரமேசுர, வைதீக மார்க்கப் பிரவர்த்தக,
ஸ்ரீவீரபுக்க பூபால சாம்ராச்சிய துரந்தரராகிய சாயணாசாரியாராலியற்றிய
மாதவீய சாம வேதார்த்தப் பிரகாசமேன்னும்
சந்த வியாக்கியானம்,
ஆக்கினேய காண்டத்தின் முதலாவது அத்தியாயம்
பன்னிரண்டாவது கண்டம்
முற்றும்.

---

**ஆக்கினேய காண்டம்**
அல்லது
**ஆக்கினேய பருவம்**
முற்றும்.

---

சாமவேத சங்கிதை முதலாம் அத்தியாயம்
முற்றும்.

---

ஓம் சுப்ரமண்யோம் ! ஓம் சுப்ரமண்யோம் ! ஓம் சுப்ரமண்யோம் !

ஓம் சாந்தி: ! சாந்தி: ! சாந்தி: !

---

# சாமவேத சங்கிதை

இரண்டாவது

## ஐந்திர காண்டம்.

## இரண்டாம் அத்தியாயம்,

### பிரபாடகம்—2. முற்பாதி கண்டம்—1.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

१ २      ३ १   २र    ३ २ ३ १ २

115. **तद्वो गाय सुते सचा पुरुहूताय सत्वने ।**

२उ    ३ २ ३ १ २

**शं यद्गवे न शाकिने ॥ १ ॥**

இருக்கு 6-45-22.

தத்வோ காய ஸுதே ஸசா புருஹூதாய ஸத்வநே ।

ஶம் யத்கவே ந ஶாகிநே ॥

அந்வயம்.

हे स्तोतारः!, वः, सुते, पुरुहूताय, सत्वने, यत्, शाकिने, गवे न, शम्, तत्, सचा, गाय ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे स्तोतारः!** | ஹே ஸ்தோதார: ! | துதிப்போர்காள் ! |
| **वः** | வ: | நீங்கள் |
| **सुते** | ஸுதே | சோமரம் பிழிந்தவிடத்து |
| **पुरुहूताय** | புருஹூதாய | பலராலழைக்கப்பட்டவனுய |
| **सत्वने** | ஸத்வநே | பகைஞரைக் காய்கின்ற அல்லது தனத்தைக் கொடுக்கின்ற இந்திரன் பொருட்டு |

| | | |
|---|---|---|
| यत् | யத் | யாதொரு தோத்திரம் |
| शाकिने | ஶாகிநே | வலிமிக்க இந்திரனுக்கு |
| गवे न | கவே ந | ஆவிற்கு (புல்) ஒப்ப |
| शम् | ஶம் | சுகங் கொடுப்பதாகின்றதோ ? |
| तत् | தத் | அத் துதியைக் |
| सचा | ஸசா | கூழமி நின்று |
| गाय | காய | பாடுவீர்களாக. |

சாயண பாடியம்.

எவருடைய, மூச்சுக் காற்று மறைகளோ, எவர், மறைகளினின்றும் உலகை யுண்டாக்கினரோ, அவ் வித்தியாதீர்த்த மாகேசுரரை வணங்குகின்றேன்.

கண்டம்—1. இருக்கு—1. சம்யுர் வார்ஹஸ்பத்திய ரிஷி. காயத்திரி சந்தம். இந்திரன் தேவதை.

துதிப்போர்களே ! நீங்கள், சோமரசம் பிழிந்தானவிடத்து அநேக எசமானர்களா லழைக்கப்பட்டவனும், பகைஞரைக் கெடுப்போனும், அல்லது, திரவியந்தருவோனுமாகிய இந்திரன் பொருட்டு கூடிக்கொண்டு தோத்திரம் பாடுவீர்களாக. ஆவிற்குப்புல் சுகந்தருமாறு யாதொரு துதி ஆற்றலுடைய இந்திரனுக்கு இன்பந்தருகின்றதோ ? அத்துதியை. (செய்வீர்களாக என இயைத்துக்கொள்க.) (1)

குறிப்பு.—பயிரிடுவோன் எருதின் நலத்தைக் கருதுவது போல் அன்போடு பாடுவீர்களாக என்பதும், இதற்குப் பரத்துவாசர் ரிஷியென்பதும், ஆங்கில மொழி பெயர்ப்பின் கருத்து.

## மந்திரம் 2.

१ २ ३१ २ ३ १ २ ३ १ २ ३
116. यस्ते नूनꣳ शतक्रतविन्द्र द्युम्नितमो मदः ।
१ २ ३ १ २र
तेन नूनं मदे मदेः ॥ २ ॥

இருக்கு 8-19-16.

யஸ்தே நூநம் ஶதக்ரதவிந்த்ர த்யும்நிதமோ மத³: ।
தேந நூநம் மதே³ மதே³: ॥

அந்வயம்.

हे शतक्रतो इन्द्र !, द्युम्नितमः, यः, मदः, नूनं, ते, तेन, नूनं, मदे, मदेः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे शतक्रतो इन्द्र! | ஹே ஶதக்ரதோ இந்த்ர! | நூற்றுக்கணக்கான உணர்வின் மிக்க இந்திர! |
| द्युम्नितमः | த்யும்நிதம: | மிகக் கீர்த்தியுள்ள |
| यः मदः | ய: மத: | யாதொரு சோமமுண்டோ, அது |
| नूनं | நூநம் | நிச்சயமாய் முன்னரேயே |
| ते | தே | உனக்குப் பிழிந்து வைத்திருக்கப்பட்டிருக்கின்றது. |
| तेन | தேந | அதனால் |
| नूनं | நூநம் | இப்போது |
| मदे | மதே | களிப்பையடைந்த விடத்து எமக்கும் |
| मदेः | மதே: | ஆனந்தந் தருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—2. சுருதகக்ஷ ரிஷி. காயத்திரி சந்தம்.

இதில் சோமந் துதிக்கப்படுகின்றது :—நூறுவகை மெய்புணர்வுகளையுடைய இந்திர! சிறந்த கீர்த்தியுடைய மதம் என்னுங் களிப்பைத் தருதலால் மதமெனப்பட்டது சோமம். (கொடி வகையி லொன்று.) அத்தகைய யாதொரு சோமமுண்டோ? அது நிச்சயமாய் முன்னரே உனக்கு எங்களாற் பிழிந்து வைக்கப்பட்டிருக்கின்றது. எங்களாற் கொடுக்கப்பட்ட அச் சோமரசத்தால் (இப்போது அதைக் குடித்தலால்) உனக்கு மிகக் களிப்புண்டாய விடத்து எங்களையும் திரவிய முதலியதைக் கொடுத்தலாற் களிப்படைவிப்பாயாக என்பதாம். (2)

குறிப்பு.—உன்னுடைய களிப்பைப்போல எம்மையும் களிப்படையச் செய்வாயாக என்பது ஆங்கிலம்.

மந்திரம் 3.

२ ३ १ २ ३२ ३ २ ३ १ २ ३ १ २

117. गाव *उप वेदाऽवटे मही यज्ञस्य रप्सुदा ।

३ १ २ र ३ १ २

उभा कर्णा हिरण्यया ॥ ३ ॥

இருக்கு 6-45-22.

காவ உப வதாऽவடே மஹீ யஜ்ஞஸ்ய ரப்ஸுதா ।

உபா கர்ணா ஹிரண்யயா ॥

* उपावतावत, என்பது இருக்கு.

அந்வயம்.

हे गावः! (यूयं), अवटे, उपवद, यज्ञस्य, रप्सुदा, मही, उभाकर्णा, हिरण्यया ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे गावः!** | ஹெ ராவஃ! | கோக்களே! |
| **(यूयं)** | (யூயம்) | (நீங்கள்) |
| **अवटे** | அவடெ | மகாவீர (பாத்திர) த்தைக் குறித்து |
| **उपवद** | உபவத | அடைவீர்களாக. |
| **यज्ञस्य** | யஜ்ஞஸ்ய | வேள்வியின் சாதனமாகிய |
| **रप्सुदा** | ரப்ஸுதா | மந்திரத்தாற் கறக்கத் தக்க |
| **मही** | மஹீ | ஆடு பசுக்களின் பால் முக்கியமான தாம், மற்றும். |
| **उभाकर्णा** | உபாகர்ணா | இப்பாத்திரத்தின் காதுகளென்னுங் கைப்பிடிகள் |
| **हिरण्यया** | ஹிரண்யயா | பொன் வெள்ளிகளாற் செய்யப்பட்டுள்ளன. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—3. அரியத பிரகாத ரிஷி. காயத்திரி சந்தம்.

பாற்பசுக்களே! நீங்கள் மகாவீரபாத்திரத்தை முன்னிட்டு (மகா வீர பாத்திரம் என்பது முக் கலசங்களை யொன்றாய்ச் சேர்த்ததுபோன்ற ஒரு மண்பாத்திரம்) அதன் பக்கத்திற் சேர்வீர்களாக. இவ் வேள்வியின் சாதனமாகிய பயன் தரத் தக்கதும், அல்லது மந்திரத்தாற் கறக்கத் தக்கதுமாகிய, பசுவின் பால், ஆட்டின் பால், மிக விரும்பப்பட்டதாமாதலின் அங்குப் போய்ச் சேர்வீர்களாக என முடிக்க. பசுவின் பாலும் ஆட்டின் பாலும் மகா வீரபாத்திரத்திற் பெய்தற்குரியதாமாதலின் பசுக்கள் என்றமை, ஆட்டிற்கு முபலக்கணமானது. மற்றும் இப்பாத்திரம் பொன் வெள்ளிகளாற் செய்த இரண்டு காதுகளை யுடையதாம். (3)

குறிப்பு.—ஈண்டு, மூலத்திலுள்ள **गावः**, என்னும் பதத்திற்கு பசுக்களென்றும், '**अवटे**' என்றதற்கு—கிணறு, அல்லது பள்ளம், என்றுங் கொண்டு கோக்களே! (நீங்கள்) கிணற்றுக்கருகில் வருவீர்களாக என்பார்கள் உவடர் மகீதரர்கள். அவடே என்பதற்கு வேள்விக்குண்டத்தில் என்பர் மற்றோர் சாரார். மற்றோர் வகையார் '**गावः**' என்பது, வாக்குகள் என்றும். 'அவடே' என்றது, அவ, என்னும் பகுதி காத்தற் பொருளுடையதா மாதலின் காக்குந்தன்மையுடைய இந்திரன், அல்லது ஓங்காரமாகும், அதனிடத்து வாக்குகளே! நீங்கள் சேர்வீர்களாக என்பர். எனது வாக்குகள் பொற்குண்டலக் காதுகளையுடைய இந்திரனையும், நீர் தரும் பூமியையுந் துதிக்குக என்பது ஆங்கிலம்.

மந்திரம் 4.

२३१२ ३ १ २३ १२
118. अरमश्वाय गायत * [illegible] रुक्षारं गवे ।
२३१२३१
अरमिन्द्रस्य धा[illegible] ॥

இ[illegible]

அரமஶ்வாய கா[illegible] ருக்ஷாரம் கவெ ।
அரமிந்த்ரஸ்ய[illegible]

அந்வயம்

हे श्रुतकक्ष आत्मन्!, अश्वाय, अरं, गायत, (तथा) गवे, अरं, गायत, इन्द्रस्य धाम्ने, अरं गायत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे श्रुतकक्ष आत्मन्! | ஹெ ஶ்ருதகக்ஷ ஆத்மந்! | (யாகஞ்செய்கிற) சுருதகக்ஷன் என்னு மான்மாவே! (நீ) |
| अश्वाय | அஶ்வாய | குதிரையின் பொருட்டு |
| अरं | அரம் | நிறையத் |
| गायत | காயத | துதி பாடுவாயாக. |
| (तथा) | (தயா) | அப்படியே |
| गवे | கவெ | ஆவின் பொருட்டும் |
| अरं | அரம் | நிறையத் |
| गायत | காயத | தோத்திரம் பாடுவாயாக |
| इन्द्रस्य धाम्ने | இந்த்ரஸ்ய தாம்நெ | இந்திரனுடைய வீட்டின் பொருட்டும் |
| अरं | அரம் | நிறையத் |
| गायत | காயத | தோத்திரம் பாடுவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—4. சுருதகக்ஷ ரிஷி. காயத்திரி சந்தம்.

சுருதகக்ஷ ரிஷி என்பவர் தனதான்மாவையே கூப்பிட்டுக் கூறுகின்றார்:—சுருதகக்ஷ ஆன்மாவே! நீ நிறையத் தோத்திரத்தைப் பாடுவாயாக. எதன் பொருட்டு இந்திரனைக் குறித்த துதியெனின்? கூறுகின்றார்:— அசுவத்தின் பொருட்டென்றது. இந்திரனாற் கொடுக்கப்பட்ட குதிரையின்

* श्रुतकक्षो अरं, என்பது இருக்கு.

போதுமானவரை இந்திரனைக் குறித்து தோத்திரஞ் ருத்து. அங்ஙனமே ஆவை யடைதற் பொருட்டும், த்திரம் பண்ணுவாயாக. இந்திரனைக் கருத்தாவாகக் டைதற் பொருட்டும் போதுமானவரை தோத்திரஞ் ாம். இந்திரன் வீடு முதலியவைகளைக் கொடுக்கின்றான் பொருட்டுத் துதிசெய்வாயாக என்பது பொருள். அல்லது, , என்பதிலுள்ள ஆறும் வேற்றுமை செயப்படு பொருளில் முதலியவற்றின் இலாபத்தின் பொருட்டு இந்திரனைத் துதிப் ம். (4)

குறிப்பு.— , எனவும் श्रुतकक्ष:, எனவும் பாடமுண்டு. தகக்ஷ, என் பது—வேதப்பிரியர் எனப் பொருள்படும், சுருதகக்ஷ; என்ற விளியை சுருதகக்ஷ ரின் புத்திரர்காள்! எனப் பொருள்படுத்தியுள்ளது ஆங்கிலத்தில்.

மந்திரம் 5.

११९. तमिन्द्रं वाजयामसि महे वृत्राय हन्तवे ।
स वृषा वृषभो भुवत् ॥ ५ ॥

இருக்கு 8-93-7.

தமிந்த்ரம் வாஜயாமஸி மஹே வ்ருத்ராய ஹந்தவே ।
ஸ வ்ருஷா வ்ருஷபோ புவத் ॥

அந்வயம்.

(यजमानाः आहुः), महे, वृत्राय हन्तवे, तं इन्द्रं, वाजयामसि,
वृषा, सः, वृषभः, भुवत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (यजमानाः) | (யஜமாநா:) | (வேள்வித் தலைவர்கள்) |
| (आहुः) | (ஆஹு:) | (கூறுகின்றார்கள்) |
| महे | மஹே | பெரிய |
| वृत्राय हन्तवे | வ்ருத்ராய ஹந்தவே | விருத்திராசுரனைக் கொல்ல |
| तं इन्द्रं | தம் இந்த்ரம் | அவ் விந்திரனை |
| वाजयामसि | வாஜயாமஸி | வலியுடையனாக்குகின்றோம். |
| वृषा | வ்ருஷா | வள்ளலாகிய |
| (सः) | (ஸ:) | அவ் விந்திரன் |
| वृषभः | வ்ருஷப: | தனங் கொடுப்போனாக |
| भुवत् | புவத் | ஆகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—5. சுருதககக்ஷ ரிஷி.

எசமானர்கள் சொல்கின்றார்கள் :—முற்கூறிய அ
ரசத்தாலும், தோத்திரங்களாலும், ஆற்றலுடையவ
எதன் பொருட்டெனின்! நீரைத் தடுக்கின்ற பெரி
சுரனைக் கொல்லுதற்பொருட்டு. ஈண்டு, சோமரசங் குடித்
டோனுயிருந்து. அல்லது, எனது தோத்திரங்களால் து
யிருந்து, விருத்திராசுரனைக் கொல்வதிலும் ஆற்றலுடை
ரேம் என்பது திரண்ட பொருள். வள்ளலாகிய அ
பட்டவர்களும், சோமமளிக்கப்பட்டவர்களுமான
வோனுக என்பதாம்.

குறிப்பு.—விருத்திரனைக் கொன்றவனுக்கு அ
எருது வீரியத்தைப் பெய்வதுபோன்று அவன் ம
ஆங்கில மொழி பெயர்ப்பின் கருத்து.

மந்திரம்

१ २ ३ २ ३२ ३ १२ ३ १

120. त्वमिन्द्र बलादधि सहसो जात ओ

१ २र ३ १२र

त्वꣳ सन् वृषन् वृषेदसि ॥ ६ ॥

த்வமிந்த்ர பலாதயி ஸஹஸோ ஜாத ஓ
த்வம் ஸந் வ்ருஷந் வ்ருஷேதஸி ॥

அந்வயம்.

हे इन्द्र !, त्वं, सहसः, बलात्, ओजसः, अधिजातः, हे वृषन् !,
त्वं, वृषा इत् असि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| त्वं | த்வம் | நீ |
| सहसः | ஸஹஸஃ | பிறரை யட |
| बलात् | பலாத் | வலியினின் |
| ओजसः | ஓஜஸஃ | தைரியத்தி |

| | |
|---|---|
| ஜயிஜாத: | புகழ் பெற்றவன். |
| ஹே வ்ருஷந் ! | வரத்தைப் பெய்கின்றவனே ! |
| | மேம்பட்ட |
| | நீ |
| வ்ருஷா இத் அஸி | வேண்டியபலனைப் பெய்கின்றவனு யிருக்கின்றாய். |

சாயண பாடியம்.

ரு—6. இந்திரமாதா தேவசாமய ரிஷிகள். காயத்திரி தேவதை.

ர யுமிழ்த்தும் ஆற்றலாற் பிரசித்தி பெற்றவனு ழ் என்றது ஐந்தாம் வேற்றுமைப் பொருண்மே ருத்திரன் முதலியோர்களைக் கொல்வதற்குக் யும் புகழ்பெற்றவனு யிருக்கின்றாய் எனப் லுக்குக் காரணமாகிய தைரியத்தினின்றும் (கேட்டதைப்) பொழிவோய் ! வள்ளற் ரும்பியதைப் பெய்கின்றவனு யிருக்கிறாய் (6)

ர் வலியாலும், பிறர் வலியின் அனுகூலத்தாலும் பூற்றையும் போக்குகின்றாய். மற்றும் நலத்தையும் என்பது ஆங்கிலம்.

மந்திரம் 7.

३ २३ ३ १ २
मवर्द्धयत् यद् भूमिं व्यवर्त्तयत् ।
१ २ ३२ ३ २
चक्राण ओपशं दिवि ॥ ७ ॥

இருக்கு 6-14-5.

யஜ்ஞ இந்த்ர அவர்த்தயத் யத் பூமிம் வ்யவர்த்தயத் ।
சக்ராண ஓபசம் திவி ॥

அந்வயம்.

र्द्धयत्, यत्, दिवि, ओपशं, चक्राणः, भूमिं,

பதவுரை.

| | | |
|---|---|---|
| यज्ञः | யஜ்ஞ: | வேள்வியானது |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| अवर्द्धयत् | அவர்த்தயத் | வளர்த்தது. |
| यत् | யத் | எதனாலெனின் |
| दिवि | திவி | வானில் |
| ओपशं | ஓபசம் | (மேகத்தைப்) |
| चक्राणः | சக்ராண: | இந்திரன் |
| भूमिं | பூமிம் | தரையை |
| व्यवर्त्तयत् | வ்யவர்த்தயத் | தழை... |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—7. கோ சூக்தி, ...

வேள்வி அதாவது—தலைவர்களால் அருட் தேவதையை விருத்தியாக்கிற்று. "இந்திர தது ஆராதனையாற் பெரிது செய்தது", எ அவ் விந்திரன் எதன் பொருட்டு தரையை மழை மிக விருத்திபண்ணினனோ, (அக்காரணத்தால் வள... முடிக்க.) யாது செய்துகொண்டு (பூமியை விருத்தி ... எனின்? வானில் மேகங்களைப் பரவுமாறு செய்துகொண்டு ஒள்ளதோர் ஆற்றல் விசேடத்தை வானில் நிகழச் செய்... யை மழை வாயிலாக விருத்தி பண்ணுகின்றான் என முடித்...

குறிப்பு —வானைச் சுற்றிக்கொண்டு இடி முதலியவைகளை யைத் திருத்தியதால், என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 8.

१ २ ३२उ ३ १ २र ३ २ ३ २ ३ २
122. यदिन्द्राहं यथा त्वमीशीय वस्व एक इत् ।
३ २ ३ १ २
स्तोता मे गोसखा स्यात् ॥ ८ ॥

இருக்கு 8-14-2.

யதிந்த்ராஹம் யதா த்வமீசீய வஸ்வ ஏக இத் ।
ஸ்தோதா மே கோஸகா ஸ்யாத் ॥

* गो षखा, என்பது இருக்கு.

அந்வயம்.

न्द्र!, यथा, त्वं, एकः इत्, वस्वः, (तथा) अहम् यत्, ईशीय, मे, गोसखा स्यात् ॥

பதவுரை.

| | |
|---|---|
| ஹெ உநு! | இந்திரனே! |
| யயா | எவ்வாறு |
| கூ | நீ |
| உகூ | ஒருவனுகவே |
| | தனத்திற் கிறைவனே, |
| | (அவ்வாறே) |
| | நானும் |
| ரீய | ஐசுவரியமுடையவ னுருவனேல், |
| | என்னைத் |
| | துதிப்போன் |
| பா ஸவாகூ | கோக்களை யுடையவனுவான். |

சாயண பாடியம்.

ருக்கு—8. கோ சூக்தி அசுவசூக்திகள் ரிஷிகள்.

। தனத்திற்கு நீ யொருவனே தனி இறைவனுகின்றது ும் ஐசுவரியமுடையவனுகுங்கால் என்னைத் துதிப்பவர்களும் ் கூடியவராவார்கள். இறைவனுகிய உன்னைத் துதிப்போர்கள் றிக் கோக்களை யுடையார்களாகார்கள்? மற்றே, கோக்களை யுடை களே யாவார்கள் என்பது கருத்து. (8)

மந்திரம் 9.

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २
123. पन्यं पन्यमित्सोतार आधावत मद्याय ।
१ २ ३ २ ३ १ २
सोमं वीराय शूराय ॥ ९ ॥

இருக்கு 8-2-25.

வநூஂ வநூமிஸோதார ஆயாவத ஐநூாய ।
ஸொமஂ வீராய ஶூராய ॥

அந்வயம்.

हे सोतारः!, मद्याय, वीराय, शूराय, पन् ...पं, आधाव

பதவுரை

| | |
|---|---|
| हे सोतारः! | ஹெ ஸொதாரஃ! |
| मद्याय | உஷூாய |
| वीराय | வீராய |
| शूराय | ஶூராய |
| पन्यं पन्यं इत् | பநூம் பநூம் ஐ |
| सोमं | ஸொமம் |
| आधावत | ஆயாவத |

சாயண

கண்டம்—1. இருக்கு—9. மேதா திதி

சோமரசம் பிழியும் அத்துவர்யுக்களே

வேட்போர்கள்—அத்துவரியுக்கள்) களிப்பை

னைக்கொன்ற வீரனும், சூரத்தன்மை யுடை

எங்கும் போற்றத்தக்க சோமரசத்தை அளிப்பீர்.

## மந்திரம் 10.

३१ २ ३२उ ३ २ ३ १२ ३१२

124. इदं वसो सुतमन्धः पिबा सुपूर्णमुदरम् ।

१ २ ३ १ २

अनाभयिन् ररिमा ते ॥ १० ॥

இருக்கு 8-2-1.

ஐஉம் வஸொ ஸுதமந்ஃ பிவா ஸுபூர்ணமுஉரம் ।

அநாலயிந் ரரிமா தெ ॥

அந்வயம்.

हे वसो! इदं, सुतम्, अन्धः, पिबा, उदरं, सुपूर्णं, हे अनाभयिन्!, ते, ररिमा ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वसो! | ஹெ வஸொ! | உள்ளிருந்தியக்குமிந்திர! |
| इदं | ஐஉம் | இப்போதுள்ள |
| सुतम् | ஸுதம் | பிழிந்தெடுத்த சோமமாகிய |

அன்னத்தை
அருந்துவாயாக.
வயிறு
இனிது நிறையுமாறு
யாண்டும் பயமற்றோய் !
நின் பொருட்டுச்
சோமங் கொடுக்கின்றோம்.

ராடியம்.

வர், பிரியமேத்திர ரிஷி.

க முன்னிருக்கின்ற பிழிந்தெடுத்த
ாயாக. உனது வயிறு மிக நிறையு
பமிலாத இந்திரனே ! நின்பொருட்டுக்
ாமரசத்தைக் கொடுக்கின்றோம் என்ப
(10)

திர ! சோமரசத்தை அருந்துவாயாக. அவியை
ப் களிப்புண்டாமாறு யாங்கள் உண்கின்றோம் என்

## முதலாவது கண்டம்.

முற்றும்.

---

## இரண்டாவது கண்டம்

பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—2.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

125. २उ ३ २ ३ १ २ ३ १ २र
उद्घेदभि श्रुतामघं वृषभं नर्यापसम् ।
१ २
अस्तारमेषि सूर्य ॥ १ ॥

இருக் கு8-63-1.

உத்³வேதி³ ஶ்ருதாமக⁴ம் வ்ருஷப⁴ம் நர்ய
அஸ்தாரமேஷி ஸூர்ய ॥

அந்வயம்

हे सूर्य्य!, (सुवीर्य)!, श्रुतामघं, वृषभं

பத

| | | |
|---|---|---|
| हे सूर्य्य! | ஹே ஸூர்ய்ய! | |
| (सुवीर्य!) | (ஸுவீர்ய!) | |
| श्रुतामघं | ஶ்ருதாமக⁴ம் | |
| वृषभं | வ்ருஷப⁴ம் | |
| नर्य्यापसं | நர்ய்யாபஸம் | |
| अस्तारं | அஸ்தாரம் | உத |
| (इदं) | (இத³ம்) | (இ |
| उदेषि | உதே³ஷி | யாண் |
| घ | ஘ | இது பிரசி |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—1. சுருதகக்ஷர் அல்லது சுருதகக்ஷ ரி

இவ் விரண்டு மந்திரங்களிலும் சூரிய வடிவ இந்திரன் து படுகின்றான்.—‘இவ்வாதித்தன் இந்திரன், என மறையுங் கூறுகின்றது. இரவிகள் பன்னிரண்டனுள் இந்திரன் சூரிய வடிவமெனக் கூறப்பட்டிருக் கின்றான். ஆதலின் இந்திரன் சூரிய வடிவன், நல்ல வீரமுடைய சூரியனாகிய இந்திர! நீ எக்காலுமீய்ந் தன்மையால் கீர்த்தியுள்ள தனமுடைமை, இது பற்றியே இரப்போர்கட்குத் தனத்தை வருஷிக்குந் தன்மை, மனிதர்கட்கு இனிமையான கருமஞ் செய்தற் றன்மை, வள்ளற்றன்மை, உதாரமுடைமை என்னு மித்தன்மைய புகழை யாண்டும் விரிக்கின்றாய். இதம், என்றது தேற்றமாதலின், நீயே அவனுடைய வேள்வியில் சூரிய வடிவமாய்த் தோன் றுகின்றாய் என்பதாம். க என்பது பிரசித்தமாம் என்க. (1)

குறிப்பு.—சூரிய! நீ இந்திரனுக்கு முன்னிற்போகின்றாய் என்பது ஆங்கிலக் கருத்து.

## மந்திரம் 2.

१ १ २ ३ १ २
दगा अभि सूर्य्य ।

१ २ ॥

இருக்கு 8-63-4

: சுஹி ஸூர்ய்யே ।

### அந்வயம்.

यत्, कच्च, अभि, उदगाः, इन्द्र! तत्,

### பதவுரை.

| | | |
|---|---|---|
| | வ்ருத்ரஹந் ! | மழையைத் தடுக்கும் மேகத்தைத் தொலைக்கின்ற |
| | ஸூர்ய்ய ! | சூரியனாகிய இந்திரனே ! |
| | அத்ய | இத் தினத்தில் |
| | யத் கச்ச | எப் பொருட் சமுதாயங்களை |
| | அபி | மேற்சொன்னமாறு செய்து |
| उदगाः | உதகாः | உதித்தனையோ, |
| इन्द्र! | இந்த்ர ! | இந்திரனே ! |
| तत् सर्वं | தத் ஸர்வம் | அவ் வனைத்தும் |
| ते | தே | உன்னுடைய |
| वशे | வஶே | வசமாயிருக்கின்றன. |

### சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—2. சுருதகக்ஷர் அல்லது சுருதகக்ஷ ரிஷி.

நீரைத் தடுக்கின்ற மேகத்தை யொழிப்போய்! அதாவது—சூரியனாகிய இந்திரனே! இத் தினத்தில், எப் பொருட் சமுதாயங்கள் அனைத்

தையும் நேர்படத் தோன்றுமாறு செய்து உதயமடைந்திருக்கின்றனையோ, அப் பொருட் கூட்டம் உனது வசமாயிருக்கின்றது என்பதாம். (2)

இம் மந்திரத்திற்கு இவ்வாறே சௌனகரும் பொருள் கூறியுள்ளார்.

**குறிப்பு.**—வேள்வியில் எவைகள் தொடுக்கப்படுகின்றனவோ, அவைகளை வானுலகிற் கனுப்புகின்றாய். அனைத்து முன் வசமாய் நிற்றலின் என்பது ஆங்கிலம்

## மந்திரம் 3.

१ २र ३२३ १ २ ३२३ १२

127. **य आनयत् परावतः सुनीती तुर्वशं यदुम् ।**

२३ २ ३ २३ १२

**इन्द्रः स नो युवा सखा ॥ ३ ॥**

இருக்கு 6-45-1.

ய ஆநயத் பராவத꞉ ஸுநீதீ துர்வஶம் யது³ம் ।

இந்த்³ர꞉ ஸ நோ யுவா ஸகா² ॥

### அந்வயம்.

यः, तुर्वशं, यदुं, सुनीती, परावतः, आनयत्, युवा, सः, इन्द्रः, नः, सखा ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | ய꞉ | எவ்விந்திரன் |
| तुर्वशं | துர்வஶம் | துர்வசனென்போனையும் |
| यदुं | யது³ம் | யது என்போனையும் தூரத்திற் றாக்கி யெறிந்துவிட்டு, பின்னர் |
| सुनीती | ஸுநீதீ | நல்ல நீதிவாயிலாக |
| परावतः | பராவத꞉ | அத் தூரதேசத்தினின்று |
| आनयत् | ஆநயத் | மறித்துங் கொண்டுவந்தனனோ, |
| युवा | யுவா | தருணனாகிய |
| सः इन्द्रः | ஸ꞉ இந்த்³ர꞉ | அவ்விந்திரன் |
| नः | ந꞉ | எங்கட்கு |
| सखा | ஸகா² | நண்பனாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—4. சுருதக்கக்ஷ ரிஷி.

இந்திரனே! நீ நாற்புறமும் ஆயுதங்களை வீசிக்கொண்டு யாண்டுஞ் செல்லுஞ் சீலமுள்ள இராக்கதர்கள் இரவுகளில் எங்கட்கு எதிரில் வர முடியாதவர்களாவார்களாக. மற்றும் வருவார்களேல், அவ் விராக்கதர்களை உன்னுடைய உதவியாற் கொன்றுவிடுவோமாக. (கொல்லுமாறு செய்வாயாக என்பது பொருள்.) (4)

## மந்திரம். 5.

१ २ ३ २ ३ २ ३ १ २ ३ १ २

129. एन्द्र सानसिंꣳ रयिंꣳ सजित्वानꣳ सदासहम् ।

१ २३२ १२

वर्षिष्ठमूतये भरा ॥ ५ ॥

இருக்கு 1-7-1.

ஏந்த்₃ர ஸாநஸிம் ரயிம் ஸஜித்வாநம் ஸதா₃ஸஹம் ।
வர்ஷிஷ்ட₂ மூதயே ப₄ரா ॥

அந்வயம்.

हे इन्द्र !, ऊतये, सानसिं, सजित्वानं, सदासहं, वर्षिष्ठं, रयिं, आभर ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்₃ர ! | இந்திரனே! (நீ) |
| ऊतये | ஊதயே | எம்மைக் காப்பாற்றுதற் பொருட்டு |
| सानसिं | ஸாநஸிம் | இனிது போகிக்கத்தக்கதும் |
| सजित्वानं | ஸஜித்வாநம் | ஒத்தவிரோதியை வெல்லுஞ் சீலமுடையதும் |
| सदासहं | ஸதா₃ஸஹம் | எக்காலுஞ் சத்துருவை யடக்கத் தக்க கருவியாயுள்ளதும் (ஆகிய) |
| वर्षिष्ठं | வர்ஷிஷ்ட₂ம் | மிகுந்த |
| रयिं | ரயிம் | தனத்தைக் |
| आभर | ஆப₄ர | கொண்டுவந்து கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—5. மதுச்சந்த ரிஷி.

இந்திரனே! (நீ) என்னைப் பாதுகாத்தற் பொருட்டுத் தனத்தைக் கொடுப்பாயாக. எவ் வண்ணமாகிய திரவியத்தை யெனின்? நன்கு அனுப

விக்கத் தக்கதும், மற்றும், ஒத்த சத்துருவைச் சயிக்குஞ் சீலமுடையதும். தனத்தினாலேயே சூரர்களான தொழிலாளிகளைத் தேடிக்கொண்டு சத்துருவை வெல்கின்றார்களாதலின் என்க. அன்றியும், எப்போதுஞ் சத்துருக்களை யடக்குவதற்கு நிமித்தமானதும், நிறைவானதுமாகிய தனத்தைக் கொடுப்பாயாக என்று முடித்துக்கொள்க. (5)

## மந்திரம் 6.

१ २ ३१ २ ३२उ ३१२
130. इन्द्रं वयं महाधन इन्द्रमर्भे हवामहे ।
१ २ ३१२ ३ १ २
युजं वृत्रेषु वज्रिणम् ॥ ६ ॥

இருக்கு 1-7-5.

இந்த்ரம் வயம் மஹாதந இந்த்ரமர்பே ஹவாமஹே ।
யுஜம் வ்ருத்ரேஷு வஜ்ரிணம் ॥

அந்வயம்.

वयं, अर्भे, इन्द्रं, हवामहे, महाधने, वृत्रेषु, युजं, वज्रिणं, इन्द्रं, हवामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वयं | வயம் | நாங்கள் |
| अर्भे | அர்பே | சிறிது தனமுண்டாயவிடத்தும் |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| हवामहे | ஹவாமஹே | அழைக்கின்றோம். |
| महाधने | மஹாதநே | பெருந்தனத்தின் பொருட்டுந் |
| वृत्रेषु | வ்ருத்ரேஷு | தனலாபத்திற் றடைபண்ணுவோரை நீக்குவான் |
| युजं | யுஜம் | துணைவனும் |
| वज्रिणं | வஜ்ரிணம் | வச்சிர மேந்தியவனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| हवामहे | ஹவாமஹே | ஆவாகனஞ் செய்கின்றோம். (அழைக்கின்றோம்.) |

சாயணபாடியம்.

கண்டம்—2. இருக்கு—6. மதுச்சந்த ரிஷி.

அனுட்டானஞ் செய்கின்ற நாங்கள், மிகுந்த தனத்தின் பொருட்டும், இந்திரனை யழைக்கின்றோம். சிறிது தன நிமித்தமாகவும் இந்திர

ணைக் கூப்பிடுகின்றோம். எவ்வி
அல்லது பொறுமையுடையார்
கள் கிட்டியவிடத்து அவர்களைட
கின்றோம் என்பததோடு சேர்த்
வாசகமாயிருப்பினும், ஈண்டுப்
னின்றது.

குறிப்பு.—ஈண்டு மகாதனை
லும் பெரும் போரிலும், சத்ரு
கின்றோம் என்று கூறுகின்றது.

ப

१ २ ३ १ २ ३ १
131. अपिबत् कद्रुवः सुतमिन्द्र
१ २ ३ १ २
* तत्राददिष्ट पौंस्यम् ॥ ७ ॥

அபிபத் கத்ருவஃ ஸுதமிந்த்ரஃ ஸஹஸ்ர...
தத்ராததிஷ்ட பௌம்ஸ்யம் ॥

அந்வயம்.

इन्द्रः, कद्रुवः, सुतं, अपिबत्, सहस्रबाह्वे, (अहनत्) तत्र, पौंस्यं, आददिष्ट ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| इन्द्रः | இந்த்ரஃ | இந்திரன் |
| कद्रुवः | கத்ருவஃ | கத்துருவரிஷியால் |
| सुतं | ஸுதம் | பிழியப்பட்ட சோமரசத்தைப் |
| अपिबत् | அபிபத் | பருகினன், பருகிய பின்னர் |
| सहस्रबाह्वे | ஸஹஸ்ரபாஹ்வே | சகத்திரவாகு என்னுமசுரனைக் |
| (अहनत्) | (அஹநத்) | (கொன்றனன்) |
| तत्र | தத்ர | அதில் |
| पौंस्यं | பௌம்ஸ்யம் | (இந்திரனுடைய) வீரத்தன்மை |
| आददिष्ट | ஆததிஷ்ட | வெளிப்பட்டது. |

* अत्रादेदिष्ट என்பது இருக்கு.

## சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—8. வசிட்ட ரிஷி.

விரும்பியதை மழையெனப் பெய்யும் இ...
கின்ற வசிட்டரிஷி சம்பந்தமான யாங்கள் ...
கின்றோம். வியாபகமாகிய இந்திர!
தரித்துக் கொள்வாயாக.

### மந்த்ரு.

२ ३ २ ३२ ३ १२
133. आ घा ये अग्निमिन्धते
२ ३ २ ३ २ ३ १ २
येषामिन्द्रो युवा सखा ॥

ஆ வா யெ அக்நிமிந்ததெ ஸ்த்ருணந்தி
யெஷாமிந்த்ரோ யுவா ஸவா ॥

### அந்வயம்.

ये, आ घा, अग्निं, इन्धते, येषां, युवा, इन्द्रः सखा, ते, स्तृणन्ति ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| ये | யெ | எவர்கள் |
| आ घा | ஆ வா | உண்மையில் மனதொருமைப் பட்டவர்களாகி |
| अग्निं | அக்நிம் | அக்கினியை |
| इन्धते | இந்ததெ | வளர்க்கின்றார்களோ, |
| येषां | யெஷாம் | எவர்கட்குக் |
| युवा | யுவா | கட்டிளமையுடைய |
| इन्द्रः | இந்த்ரஃ | இந்திரன் |
| सखा | ஸவா | மித்திரனாகின்றானோ, |
| ते | தெ | அவர்கள் |
| आनुषक् | ஆநுஷக் | முறையாய்த் |
| बर्हिः | பர்ஹிஃ | தருப்பையைப் |
| स्तृणन्ति | ஸ்த்ருணந்தி | பரப்பி வைக்கின்றார்கள். |

* यस्य त्रिधात्ववृत बर्हिः, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

ுூ. திரிசோக ரிஷி.

ுமையில் ஒருமைப்பட்டவர்களாகி அக்கினியை
ு என்று மிளையோனுகிய இந்திரன் நண்ப
கருப்பையைப் பரப்புகின்றூர்கள். (9)

. இந்திரனை நண்பனைக் கொண்...
...
ுன்புறுகின்றூர்கள் என்பது ஆங்கிலம்.

ம் 10.

:३ १ २ ३ १ २र
परि बाधो जही मृधः ।

नर ॥ १० ॥

இருக்கு 8-45-40

ஷஃ வரி ஬ாயொ ஜஹீ ம்ருயஃ ।
தஷாஹா ॥

அந்வயம்.

(हे इन्द्र!) विश्वाः, द्विषः, अपभिन्धि, बाधः मृधः, परिजही, स्पार्हं, तत्, वसु आभर ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे इन्द्र!) | (ஹெ ஊந்ர!) | (இந்திரனே!) |
| द्विषः | ஃிஷஃ | துவேஷிக்கின்ற சத்துரு சேனைகள் |
| विश्वाः | விஸ்வாஃ | எல்லாவற்றையும் |
| अपभिन्धि | அவஹிநிஃ | முழுதுந் தொலைத்து விடுவாயாக. |
| बाधः | ஬ாயஃ | தீமை செய்கின்ற |
| मृधः | ம்ருயஃ | போரை |
| परिजही | வரிஜஹீ | இனிது வெல்வாயாக. |
| स्पार्हं | ஸ்பாஹம் | இச்சித்தற்குரிய |
| तत् वसु | தக் வஸு | அந்தத் தனத்தை |
| आभर | ஆஹர | எங்கட்குக் கொண்டுவந்து கொடுப்பாயாக. |

சாயண பாடி.

கண்டம்—2.		10. திரிசோக ரிஷி.

இந்திரனே ... ஷம் பண்ணுகின்ற சத்துரு ... கொல்வாயாக. மூத ... முதனிலைத் தொழிற்பெய ... பெயர்களுக்குட் கூறப்பட்டிருத்தலின் ஈண்டு உயுத்தப் பொரு ... அதைக் கெடுப்பாயாக. (வெல்வாயாக) பின்னர் அவர்களுடைய ... எங்கட்குக் கொண்டுவந்து கொடுப்பாயாக.

குறிப்பு.—சசோக ரிஷி என்பது முண்டு.

## இரண்டாவது கண்டம்

முற்றும்.

---

## மூன்றாவது கண்டம்.

பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—3.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

३१२ ३ २ ३ १ २३ १ २र

135. इहेव श्रृण्व एषां कशा हस्तेषु यद्वदान् ।

१ २र ३१२

नि यामं चित्रमृञ्जते ॥ १ ॥

இருக்கு 1-27-2.

ஐஹேவ ஶ்ருண்வ ஏஷாம் கஶா ஹஸ்தேஷு யத்வதாந் ।
நி யாமம் சித்ரம்ருஞ்ஜதே ॥

அந்வயம்.

एषां, हस्तेषु, कशाः, यद्वदान्, इहेव, श्रृण्वे, यामं, चित्रं, न्यृञ्जते ॥

ஙகிதை

...த்வுரை

இம் மரு

கைகளி

| | | |
|---|---|---|
| | | தத்த ...னதை யடிக சி ...டைகள் |
| | யஅஹாநு | எந்தச் சத்த மிடுகின்றனவோ, அதை |
| | ஊஹெவ | இங்கேயே நின்று |
| | ஶ்ருணெ | கேட்கின்றேன். (அச் சத்தம்) |
| याम | யாஉம | போரில் |
| चित्रं | சித்ரும | பலவித சூரத்தன்மையை |
| न्यृञ्जते | நூரஜுதெ | அழகுபடுத்துகின்றது (அலங்காரஞ் செய்கின்றது) |

## சாயண பாடியம்.

**கண்டம்—2. இருக்கு—1. கண்ணுவ கௌர ரிஷி.**

இந்த மருத்துக்களினுடைய கைகளில் இருக்கப்பட்ட தங்கள் தங்கள் வாகனத்தை அடிப்பதற்குக் காரணமான சாட்டை முதலியவைகள் எந்தச் சத்தமிடுகின்றதோ, அந்தச் சத்தத்தை இவ்விடத்திலேயே நின்று கேட்கின்றேன். அச் சத்த விசேடமானது போர்க்களத்தில் பலவகையாகிய சூரத்தன்மையை இயற்கையாக அலங்காரம் பண்ணுகின்றது.

ஈண்டு ऋञ्जति, என்றது அலங்கரித்தலாகிய பொருளுடைமையைப் புலப்படுத்துகின்றது யாஸ்க முனிவர் நிருக்தம். (1)

**குறிப்பு.**—சாட்டைகளின் சத்தம்—சாட்டைகளால் அடித்தலினின்று எழுமொலி.

கைகளிலுள்ள சௌக்கடிச் சத்தமும் இரதத்தின் சப்தமும் கேட்கப்படுகின்றது என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 2.

३१ २ ३ १२ ३ १ २ ३ १ २

136. इम उ त्वा विचक्षते सखाय इन्द्र सोमिनः ।

३ १ २ ३ १ २ ३ २

पुष्टावन्तो यथा पशुम् ॥ २ ॥

இருக்கு 8-46-16.

ஊம உ ஃவா விசக்ஷதெ ஸவாய ஊந்ர ஸொமிநஃ ।

வூஷாவநெ்ா யதா வஶும் ॥

அந்வயம்.

हे इन्द्र !, सोमिनः, सखायः, इमे उ, पुष्टावन्तः, पशुं, यथा त्वा, विचक्षते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| सोमिनः | ஸோமிநః | சோமரசம் பிழிந்த |
| सखायः इमे उ | ஸகாயః இமெ உ | எனது நண்பர்களாய இம் மனிதர்கள் |
| पुष्टावन्तः | புஷ்டாவந்தః | மிகப்பற்றுடையவர்களாய்ப் |
| पशुं यथा | பஶும் யதா | பசுவைப்போல் |
| त्वा | த்வா | உன்னையே |
| विचक्षते | விசக்ஷதெ | விசேடமாய்ப் பார்க்கின்றார்கள் |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—2. திரிசோக ரிஷி.

இந்திரனே! உன்னை சோமரசம் பிழிந்தவர்கள் அதாவது எனது நண்பர்களாய்த் தெளிந்த இம் மக்கள் பற்றுடையார்களாய், பசுவைப்போல் (பசு மற்றொன்றை ஒருமையோடு பார்ப்பதுபோல்) ஒருமைப்பட்ட மனத்துடன் நின்னையே சிறப்பாகப் பார்க்கின்றார்கள். (2)

குறிப்பு.—பசுக்காப்போன் பசுவைப் பார்த்தல்போல் சோமரசம் அருந்துகின்ற இந்திரனை இங்குள்ளார் பார்க்கின்றார். பாசம்—மிகப்பற்று என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 3.

१२ ३२३ २३ १२ ३१२
137. समस्य मन्यवे विशो विश्वा नमन्त कृष्टयः ।
३ १२३ १ १
समुद्रायेव सिन्धवः ॥ ३ ॥

இருக்கு 8-6-4.

ஸமஸ்ய மந்யவெ விஶோ விஶ்வா நமந்த க்ருஷ்டயः ।
ஸமுத்ராயெவ ஸிந்தவः ॥

அந்வயம்.

विशः, विश्वाः, कृष्टयः, अस्य, मन्यवे, समुद्राय, सिन्धवः इव, सं नमन्त ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विशः | விஶ꞉ | உட்கார்ந்தவர்களாய் |
| विश्वाः | விஶ்வா꞉ | எல்லாப் |
| कृष्टयः | க்ருஷ்டய꞉ | பிரசைகளும் |
| अस्य | அஸ்ய | இவ் விந்திரனுடைய |
| मन्यवे | மந்யவே | கோபத்தின் பொருட்டு அல்லது, மனனம் பண்ணுதற்குரிய தோத்திரத்தின் பொருட்டு |
| समुद्राय | ஸமுத்ராய | சமுத்திரத்திற்கு |
| सिन्धवः इव | ஸிந்தவ꞉ இவ | நதிகள் பணிவனபோல் |
| सं नमन्त | ஸம் நமந்த | இனிது பணிகின்றார்கள். |

சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—3. வத்ச கண்ணுவ ரிஷி.**

சனங்க ளெல்லாரும் உட்கார்ந்தவர்களாகி இவ் விந்திரனுடைய கோபத்தின் பொருட்டு, அல்லது 'மந்யு:' என்றது மனன சாதனமா மாதலின் மனன சாதனமாகிய தோத்திரத்தின் பொருட்டு, இயற்கையில் தானகவே இனிது பணிகின்றார்கள். அதிலுவமை 'சமுத்திரத்திற்கு' என்றது. கடலைக்குறித்து செல்லுஞ் சீலமுடைய நதிகள் தானகவே பணிகின்றன போன்று என்பதாம். (3)

குறிப்பு.—மந்யவே, என்பதற்கு சந்தோஷப்படுத்த என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 4.

३ २ ३ १ २र ३१ २र ३२
138. देवानामिदवो महत्तदा वृणीमहे वयम् ।
१ २ ३ १ २ ३१ २
वृष्णामस्मभ्यमूतये ॥ ४ ॥

இருக்கு 8-72-1.

தேவாநாமித³வோ மஹத்ததா³ வ்ருணீமஹே வயம் ।
வ்ருஷ்ணாமஸ்மப்⁴யமூதயே ॥

அந்வயம்.

(हे देवा:!), देवानां, इत्, महत्, अवः, वृष्णां, तत्, वयम्, अस्मभ्यम्, ऊतये, आ वृणीमहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हेदेवाः!) | (ஹெ தெவாஃ!) | (தேவர்காள்!) |
| देवानां इत् | தெவா நாம் இத் | மிகுந்த ஒளியோடு விளங்குகின்ற தங்கட்கே |
| महत् अवः | மஹத் அவஃ | பெரும் பாதுகாப்பாக இருக்கின்றதும் |
| वृष्णां | வ்ருஷ்ணாம் | வேண்டியவற்றைப் பொழிகின்ற தங்கட்குத் தனமாகவுமுள்ள |
| यत् | யத் | யாதொரு பாதுகாப்புண்டோ, |
| तत् | தத் | அப் பாதுகாத்தலை |
| वयं | வயம் | தலைவர்களான யாங்கள் |
| अस्मभ्यमूतये | அஸ்மப்யமூதயெ | எங்களுடைய பரிபாலனத்தின் பொருட்டு |
| आ वृणीमहे | ஆ வ்ருணீமஹெ | எல்லாவகையானும் வேண்டுகின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—4. குசீதி கண்ணுவ ரிஷி.

தேவர்களே! எப்போதும் பிரகாசமாய் விளங்கப்பட்டவர்களான உங்கட்கே வியாப்தமாகிய அல்லது பெரிதாகிய பரிபாலிக்குந் தன்மை யாதொன்றுள்ளதோ, அது வேண்டியதை மழையெனப் பெய்கின்ற உங்கட்குத் தனவடிவமாம், அங்ஙனமாகிய காத்தலை (அவ்வாறு காக்கவேண்டுமென) எசமானர்களாய யாங்கள் எல்லா வகையானும் பிரார்த்திக்கின்றோம். எதன் பொருட்டெனின்? பரிபாலனத்தின் பொருட்டு முன்னர் 'எங்கட்கு' எனப் பொதுவாக் கூறப்பட்டது. அது ஈண்டுச் சிறப்பிக்கிக்கப்படுகின்றது:—எங்களுடைய பரிபாலனத்தின் பொருட்டென. (4)

## மந்திரம் 5.

३ २ ३ २ ३ १ २
139. * सोमानाꣳ स्वरणं कृणुहि ब्रह्मणस्पते ।
३ १ २ ३ १ २ ३ २
कक्षीवन्तं य औशिजः ॥ ५ ॥

இருக்கு 1-38-1.

ஸோமாநாம் ஸ்வரணம் க்ருணுஹி ப்ரஹ்மணஸ்பதே ।
கக்ஷீவந்தம் ய ஔஶிஜஃ ॥

---

सोमानं, என்பது இருக்கு.

அந்வயம்.

हे ब्रह्मणस्पते !, सोमानां, कक्षीवन्तं, यः, औशिजः, स्वरणं, कृणुहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ब्रह्मणस्पते ! | ஹே ப்ரஹ்மணஸ்பதே ! | பிரமணப்பதியென்னுந் தேவதையே ! நீ |
| सोमानां | ஸோமாநாம் | சோமரசங்களை யெடுத்து அனுட்டானம் பண்ணுகின்றவனுகிய என்னை, |
| कक्षीवन्तं | கக்ஷீவந்தம் | தேவர்களுள் சிறந்தோனுயுள்ள கக்ஷீவந்தன் என்னும் |
| यः औशिजः | யஃ ஔஶிஜஃ | உசிசனுடைய புத்திரன் யாதொருவன் உளனே, அவனைப்போல் |
| स्वरणं | ஸ்வரணம் | தேவர்களுட் பிரகாசிப்பவனுகச் |
| कृणुहि | க்ருணுஹி | செய்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—5. மேதாதிதி ரிஷி.

பிரமணப்பதியாகிய தேவதையே! நீ, சோமரசம் பிழிகின்றவனும் அனுட்டானம் பண்ணுகின்றவனுமாகிய என்னைப் பிரகாசமுடையவனுகச் செய்வாவாயாக. அதிலுவமை :—'கக்ஷீவந்தம்' என்றது. ஈண்டுப் போல் என்னு முவமைச்சொல் கூட்டிக்கொள்ளற் பாலது. கக்ஷீவான் தேவர்களுக்குள் எவ் வண்ணம் பிரகாசமா யிருக்கின்ருனே, அதுபோல் என்பது பொருள். கக்ஷீவன் என்னும் ரிஷி அனுட்டானஞ் செய்கின்ற முனிவர்களுட் கீர்த்திபெற்றவர் என்பது, தைத்திரீயம் படிப்போர்களாலும், एवं वै पर आट्णारः कक्षीवानौशिजो वीतहव्यः श्रायसत्रसदस्युः पौरुकुत्स्य प्रजाकामा अचिन्वत, எனக் கூறப்பட்டுள்ளது. வேறு மந்திரத்திலும் இவர் இருடிகளுள் அனுட்டானத்திற் கீர்த்தி பெற்றவரெனக் கூறப்பட்டிருக்கின்றது. அதாவது "நான் கக்ஷீவான் ரிஷி விப்ரன் என்பதாம்." ஆகையால் இவருக்கு அனுட்டானம் பண்ணுவோரை உவமையாகக் கூறியது பொருத்தமுடையதேயாமென்க. மற்றும், "சோமரச மெடுப்போனைப் பிரகாசமுடையவனுய்ச் செய்குதி. பிரமணப்பதியே! கக்ஷீவந்தனை யொப்ப, யாதொரு கக்ஷீவன் உசிசருடைய புத்திரனே!" என இம் மந்திரத்திற்கு யாஸ்க முனிவரும் நிருக்தத்தில் உரை கூறியுள்ளார். (5)

### மந்திரம் 6.

१२ ३ १२ ३ १ २र

140. * बोधन्मना इदस्तु नो वृत्रहा भूर्यासुतिः ।

३ १२ ३ २ ३ १२

शृणोतु शक्र आशिषम् ॥ ६ ॥

இருக்கு 8-63-18.

𑌬𑍋𑌧𑌨𑍍𑌮𑌨𑌾 𑌇𑌦𑌸𑍍𑌤𑍁 𑌨𑍋 𑌵𑍃𑌤𑍍𑌰𑌹𑌾 𑌭𑍂𑌰𑍍𑌯𑌾𑌸𑍁𑌤𑌿𑌃 ।
𑌶𑍃𑌣𑍋𑌤𑍁 𑌶𑌕𑍍𑌰 𑌆𑌶𑌿𑌷𑌮𑍍 ॥

அந்வயம்.

वृत्रहा, भूर्यासुतिः, नः, बोधन्मना, इत्, अस्तु शक्रः, आशिषं, शृणोतु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वृत्रहा | 𑌵𑍃𑌤𑍍𑌰𑌹𑌾 | விருத்திராசுரனைக் கொன்றோனும் |
| भूर्यासुतिः | 𑌭𑍂𑌰𑍍𑌯𑌾𑌸𑍁𑌤𑌿𑌃 | மிகப் பிழிந்த சோமரசமுடையவனுமாகிய (இந்திரன்) |
| नः | 𑌨𑌃 | எங்களுடைய |
| बोधन्मना इत् | 𑌬𑍋𑌧𑌨𑍍𑌮𑌨𑌾 𑌇𑌤𑍍 | மனோ வேட்கைகளை யறிகின்றவனாகவே |
| अस्तु | 𑌅𑌸𑍍𑌤𑍁 | இருப்பானாக. |
| शक्रः | 𑌶𑌕𑍍𑌰𑌃 | போரிற் பொருநரைக்கொல்லுஞ் சமர்த்தனாகிய இந்திரன் |
| आशिषं | 𑌆𑌶𑌿𑌷𑌂 | எங்களுடைய துதியைக் |
| शृणोतु | 𑌶𑍃𑌣𑍋𑌤𑍁 | கேட்பானாக. |

சாயண பாடியம்

கண்டம்—3. இருக்கு—6. சுருதகக்ஷ ரிஷி.

இது பரோக்ஷமாய்ச் செய்யப்பட் துதி. விருத்திராசுரனைக் கொன்றவனும், மிகப்பிழிந்த சோமரசத்தை யடைபவனும், துதிப்போர்களின் விருப்பத்தையுணர்கின்ற மனத்தனுமாகிய இந்திரன். எங்களுடைய மனோ வேட்கையை என்றும் அறிகின்றவனாகவே யிருப்பானாக. 'எங்களுடைய மனதிலுள்ள விருப்பங்களை யறிவானாக' என்பதுமது. அல்லது இவ்வாறாகிய இந்-

* बोधिन्मना, என்பது இருக்கு.

திரன் எங்களுடைய வேள்வியில் தோன்றுவானாக என்பதுமாம். அதி லென்னமெனின், உயுத்தத்தில் சத்துருக்களைக் கொல்லுமாற்றலுள்ள இந்தி ரன் எமது துதியை, அல்லது, வேண்டுகோளைக் கேட்பானாக என்பதாம். (துதியைக் கேட்பானேல் விரும்பியதைத் தருவான் என்பது கருத்து.) (6)

இந்திரன் பொருட்டு, பல தேசங்களிலும், சோமரசம் பிழியப்படுவ தாலும், சோமரச முதலிய அவிகள் கொடுக்கப்படுவதாலும் இந்திரன் மிகு ரசமுடையான் எனப்பட்டான்.

ஈண்டு 'இத்' என்னும் வடமொழிப்பதம் தேற்றப் பொருளில் நின்றது.

## மந்திரம் 7.

३१ २ ३ १२ ३ १२
141. अद्य नो देव सवितः प्रजावत्सावीः सौभगम् ।
१ २ ३ १ २
परा दुष्वप्न्यंᳲ सुव ॥ ७ ॥

இருக்கு 5-82-4.

அத்3ய நோ தே3வ ஸவித꞉ ப்ரஜாவத்ஸாவீ꞉ ஸௌப4க3ம் ।
பரா து3ஷ்ஷ்வப்ந்யம் ஸுவ ॥

அந்வயம்.

हे सवितः देव!, नः, अद्य, प्रजावत्, सौभगं, सावीः, दुष्वप्न्यं, परासुव ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सवितः देव! | ஹே ஸவித꞉ தே3வ! | சூரியதேவனே! |
| नः | ந꞉ | எங்கட்கு |
| अद्य | அத்3ய | வேள்வியாற்றுகின்ற இத் தினத்தில் |
| प्रजावत् | ப்ரஜாவத் | புத்திரனோடுகூட |
| सौभगं | ஸௌப4க3ம் | தனத்தைக் |
| सावीः | ஸாவீ꞉ | கொடுப்பாயாக. |
| दुष्वप्न्यं | து3ஷ்ஷ்வப்ந்யம் | தீக் கனவுபோன்ற வறுமையை |
| परासुव | பராஸுவ | நீக்குவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—7. சியாவசுவ ரிஷி.

ஆதித்ததேவே! நீ எங்கட்கு இவ் வேள்வித் தினத்தில் புத்திரன் முதலியவைகளோடு கூடிய திரவியத்தை யடைவிப்பாயாக. தீய கன வெனத் துன்பந்தரும் வறுமையைத் தூரத்திற் போக்குவாயாக. (7)

## மந்திரம் 8.

२ १ २३१ २र ३२३१२

142. *क्व३स्य वृषभो युवा तुविग्रीवो अनानतः ।

३१ २र

ब्रह्मा कस्तꣳ सपर्यति ॥ ८ ॥

இருக்கு 8-64-7.

க்வாஸ்ய வ்ருஷபோ யுவா துவிக்ரீவோ அநாநத: ।
ப்ரஹ்மா கஸ்தம் ஸபர்யதி ॥

அந்வயம்.

वृषभः, युवा, तुविग्रीवः, अनानतः, स्यः, क?, तम्, कः?, ब्रह्मा, सपर्यति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वृषभः | வ்ருஷப: | மனவேட்கையை நிறைப்பவனும் |
| युवा | யுவா | கட்டிளமையனும் |
| तुविग्रीवः | துவிக்ரீவ: | நீண்ட கழுத்துடையானும் |
| अनानतः | அநாநத: | வணங்காதோனுமாகிய |
| स्यः | ஸ்ய: | அவ் விந்திரன் |
| क? | க்வ? | எங்குள்ளான்? இவனை யாவனறிவான்? |
| तं | தம் | அவ் விந்திரனை |
| ब्रह्मा | ப்ரஹ்மா | துதிக்கின்றவகினை |
| कः? | க:? | எவன்? |
| सपर्यति | ஸபர்யதி | பூசிக்கின்றானோ, (அவனறிவான் என்க). |

* क्वस्य, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—8.** பிராகாத கண்ணுவ ரிஷி.

விருட்பை வருஷிப்போனும், நித்திய இளமையோனும், நீண்ட கழுத்தனும், ஓர்போதும் யார்க்கும் வணங்காதோனுமாகிய அவ்விந்திரன், எங்குள்ளான்? என்னுமிதை யாவ ரறிவார்? துதியாளனாகிய எவன் பூசிக்கின்றானோ, அவன் அறிவான் என்பதாம். (8)

குறிப்பு.—எல்லாவற்றையுந் தனக்குள் அடக்கிக்கொள்வோனும் பிறரை வெல்லுந் தகைமையோனும் என இந்திரனுக்கு விசேடணங் கூறியுள்ளது ஆங்கிலத்தில். பிரமாவினாலும் பூசிக்கப்படுபவன் என்பதும் ஆங்கிலக் குறிப்பே.

## ம ந் தி ர ம் 9.

३ १ २ ३ १ २ ३१ २ ३ १२
143. उपह्वरे गिरीणाꣳ *सङ्गमे च नदीनाम् ।
३ १ २र
धिया विप्रो अजायत ॥ ९ ॥

இருக்கு 8-6-28.

உபஹ்வரே கிரீணாம் ஸங்கமே ச நதீநாம் ।
தியா விப்ரோ அஜாயத ॥

அந்வயம்.

गिरीणां, उपह्वरे, नदीनां, सङ्गमे च, धिया, विप्रः, अजायत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| गिरीणां | கிரீணாம் | மலைகளைச்சார்ந்த |
| उपह्वरे | உபஹ்வரே | பிரதேசத்திலும், |
| नदीनां | நதீநாம் | நதிகளின் |
| सङ्गमे च | ஸங்கமே ச | சங்கமத்திலும், |
| धिया | தியா | செய்யப்பட்ட துதியால் |
| विप्रः | விப்ரঃ | நுண்ணிய மதியுடைய இந்திரன் |
| अजायत | அஜாயத | வெளிப்படுகின்றான். |

* सङ्गथे नदीनां, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. வத்ச ரிஷி.

மலைகளின் நடுப்பிரதேசத்திலும், நதிகள் கூடுமிடத்திலும், தோத்திரஞ் செய்தால் இந்திரன் தனது துதியைக் கேட்க இனிது வெளிப்படுகின்றான். ஈண்டுத் துதியைக் கேட்க என்பது எஞ்சி நின்றது. (9)

सङ्गथे च, எனவும் பாடமுண்டு.

குறிப்பு.—மிகுந்த மேகக் கூட்டத்திலும் புத்திரா லுண்டாக்கப்பட்டான் என்பது ஆங்கிலம்,

## மந்திரம் 10.

२ ३ १ २ ३ १ २र ३ १ २ ३ २

144. प्र सम्राजं चर्षणीनामिन्द्रꣳ स्तोता नव्यं गीर्भिः ।

१ २ ३ २ ३ १ २

नरं नृषाहं मꣳहिष्ठम् ॥ १० ॥

இருக்கு 8-16-1.

ப்ர ஸம்ராஜம் சர்ஷணீநாமிந்த்ரம் ஸ்தோதா நவ்யம் கீர்பி:।
நரம் ந்ருஷாஹம் மம்ஹிஷ்டம்॥

அந்வயம்.

चर्षणीनां, सम्राजं, गीर्भिः, नव्यं, नरं, नृषाहं, मंहिष्ठं, इन्द्रं, प्रस्तोता ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| चर्षणीनां | சர்ஷணீநாம் | மனிதர்களுக்குள் |
| सम्राजं | ஸம்ராஜம் | இனிது விளங்குபவனும் |
| गीर्भिः | கீர்பி: | தோத்திரங்களால் |
| नव्यं | நவ்யம் | துதிக்கத்தக்கோனும் |
| नरं | நரம் | தலைவனும் |
| नृषाहं | ந்ருஷாஹம் | சத்துருவை யடக்குவோனும் |
| मंहिष्ठं | மம்ஹிஷ்டம் | வள்ளலுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| प्रस्तोता | ப்ரஸ்தோதா | மிகத்துதிப்பார்களாக, |

சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—10. இரிமீட ரிஷி.**

மக்களுக்குள் நன்கு விளங்குபவனுகிய அல்லது மனிதர்களுக்கு இறைவனுகிய இந்திரனை, துதிப்போர்காள்! நீவிர் இனிது தோத்திரஞ் செய்வீர்களாக. எத் தன்மைய இந்திரனை யெனின்? தோத்திரங்களாற் றுதிக்கத்தக்கோனை, மற்றுஞ் செலுத்துவோனை, இன்னும் சத்துருக்களான மனிதர்களையடக்குவோனை, மற்றும் சிறந்த கொடையுடையானை. துதிப்பீர்களாக என்பதனேடு சேர்த்துக்கொள்க. (10)

மூன்றுவது கண்டம்

முற்றும்.

---

## நான்காவது கண்டம்.

---

பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—4.

பத்து மந்திரங்களாலானது.

---

மந்திரம் 1.

१२ ३ १ २ ३१ २ ३ १२

145. अपादु शिप्रचन्धसः सुदक्षस्य प्रहोषिणः ।

२ ३ २ ३ १ २

इन्दोरिन्द्रो यवाशिरः ॥ १ ॥

இருக்கு 8-92-4.

அபாது ஶிப்ர்யந்தஸ: ஸுதக்ஷஸ்ய ப்ரஹோஷிண: ।
இந்தோரிந்த்ரோ யவாஶிர: ॥

அந்வயம்.

शिप्री, इन्द्रः, प्रहोषिणः, सुदक्षस्य, यवाशिरः, इन्दोः, अन्धसः, उ, अपात् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| शिप्री | ஶிப்ரீ | அழகிய மூக்கு, அல்லது தலைப் பாகையை உடையவனாகிய |
| इन्द्रः | இந்த்ர: | இந்திரன், |
| प्रहोषिणः | ப்ரஹோஷிண: | மிகுதியாக அவிகளால் ஓமஞ் செய்கின்ற |
| सुदक्षस्य | ஸுதக்ஷஸ்ய | சுதக்ஷரிஷியின் |
| यवाशिरः | யவாஶிர: | கோதுமையோடு சமைத்ததும் |
| इन्दोः | இந்தோ: | பாண்ட முழுதுங் கொதித்துள்ளதுமாகிய |
| अन्धसः | அந்தஸ: | சோமவடிவ அன்னத்தை |
| उ | உ | உண்மையாய் |
| अपात् | அபாத் | அருந்தினன். |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—1. சுருதகக்ஷ ரிஷி.

அழகிய மூக்கு, அல்லது, தலைப்பா உடைய இந்திரன், மிகுந்த அவிகளால் தேவர்களைப் பூசிக்கின்ற சுதக்ஷ என்னும் இருடி சம்பந்தமாகியதும் கோதுமைகளோடு கலந்து பக்குவமாகியதும், பாண்டங்களெங்குங் கொதித்துத் ததும்பியதுமாகிய சோமமென்னும் அன்னத்தை அருந்தினன். அல்லது இந்திரன்பொருட்டு ஏற்படுத்திய சோமரச பாகத்தை யருந்தினன். (1)

குறிப்பு.—सुदक्षस्य, என்றதற்கு வலியைத் தரும் சோமரசத்தை எனக் கொள்ளப்பட்டது ஆங்கிலத்தில்.

## மந்திரம் 2.

३ १ २ ३ १ २र ३ १ ३
146. *इमा उ त्वा पुरूवसोऽभि प्रनोनवुर्गिरः ।
१ २ ३ २उ ३ १ २
गावो वत्सं न धेनवः ॥ २ ॥

இருக்கு 6-45-25.

இமா உ த்வா புரூவஸோ(அ)பி ப்ரநோநவுர்கிர: ।
காவோ வத்ஸம் ந தேநவ: ॥

---

* इमा उत्वा शतक्रतोऽभिप्रणोनुवुर्गिरः । इन्द्र वत्सं न मातरः । என்பது இருக்கு.

அங்வயம்.

हे पुरुवसो !, त्वा अभि, इमाः, गिरः, प्रनोनवुः, गावः, धेनवः, वत्सं, न ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पुरुवसो ! | ஹெ புரூவஸொ ! | மிகுந்த தனமுடைய இந்திர ! |
| त्वा अभि | த்வா அபி | நின்னைக் குறித்து |
| इमाः गिरः | இமா: கிர: | எனது, இத் துதிகள் |
| धेनवः | தெநவ: | பால்தருகின்ற |
| गावः | காவ: | பசுக்கள் |
| वत्सं न | வத்ஸம் ந | கன்றை யடைவனபோல |
| प्रनोनवुः | ப்ரநொநவு: | அடிக்கடி நன்கு அடைகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—2. மேதாதிதி ரிஷி.

பெருந் தனமுடையோய்! அல்லது, வசுக்கள் என்றது வேள்விகளுமா மாதலின், மிகுந்த வேள்விகளை யுடையோய்! இந்திர! உன்னைக் குறித்தே என்னுடைய தோத்திரங்கள் மிகுதியாய் மீண்டும் மீண்டும் (நின்பால்) வந்தடைந்து (நின்னை) வியாபிக்கின்றன. அதிலுவமை :—கோக்கள் காம தேனுக்கள் வீட்டிலுள்ள கன்றைக்குறித்து விரைவில் வந்தடைகின்றன போல. அதாவது :—கோக்கள் கன்றைக்குறித்துக் கதறுவதுபோல எனது வாக்குகள் உன்னைக்குறித்து ஒலிக்கின்றன (முழக்கமாய்த் துதிக்கின்றன) என்பதாம். (2)

குறிப்பு.—நௌதி, என்றது ஈண்டு வியாபகப் பொருளுடையது.

பாற்பசுக்களின் சத்தம் அவற்றின் கன்றுகளுக்குக் களிப்புண்டாக்குமாறு எனது தோத்திரம் நினக்குக் களிப்பைத்தருகின்றது என்பது ஆங்கிலம்

மந்திரம் 3.

२ उ३ १ २ ३ २३ १ २ ३क २र
147. अत्राह गोरमन्वत नाम त्वष्टुरपीच्यम् ।
३ २ ३ १२ ३ २
इत्था चन्द्रमसो गृहे ॥ ३ ॥

இருக்கு 1-84-15.

அத்ராஹ கொரமந்வத நாம த்வஷ்டுரபீச்யம் ।
இத்தா சந்த்ரமஸொ க்ருஹெ ॥

அங்வயம்.

गोः, चन्द्रमसः, अत्राह, गृहे, त्वष्टुः, अपीच्यम्, नाम, इत्था, अमन्वत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| गोः | கொ: | செல்கின்ற |
| चन्द्रमसः | சந்த்ரமஸ: | சந்திரனுடைய |
| अत्राह | அத்ராஹ | இந்த |
| गृहे | க்ருஹெ | மண்டலத்திலேயே |
| त्वष्टुः | த்வஷ்டு: | துஷ்டா, என்னும் ஆதித்தனுடைய |
| अपीच्यं | அபீச்யம் | இரவில் மறைந்துள்ள |
| नाम | நாம | கிரணங்களிருக்கின்றன. |
| इत्था | இத்தா | இவ்வாறு |
| अमन्वत | அமந்வத | கொள்ளப்பட்டிருக்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—3. கோதம ரிஷி.

செல்கின்ற சந்திரனுடைய இம்மண்டலத்திலேயே 'துவஷ்டா! என்னும் இரவியின் சம்பந்தமான இரவில் மறைந்துள்ள அதனுடைய எந்தக் கிரணங்களுண்டோ, அவை சூரியனுடைய கிரணங்களேயாம், என்றிவ்வாறு அறியப்பட்டிருக்கின்றது.

தெளிந்த நீர்மயச்சந்திர விம்பத்தில் சூரியகிரணங்கள் பிரதிபலிக்கின்றன. அதிற் பிரதிபலித்துள்ள கிரணங்கள் சூரியனிடத்தில் எத்தன்மைய பெயரை அடைகின்றனவோ, அத்தன்மைய பெயரையே சந்திரன்பா லிருப்பனவாகி அடைகின்றன என்பதாம். (3)

**குறிப்பு.**—இரவில் மறைந்துள்ள இரவியின் கிரணங்கள் சந்திரமண்டலத்திற் புகுந்து பகற்போல் இருளை நீக்கி எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கின்றன. இத்தன்மைய ஒளியோடு கூடிய சூரியன் இந்திரனேயாவன். பன்னிரு சூரியருள் இந்திரனையு மொருவனுயெண்ணி யிருத்தலின், இதனால் பகல் இரவுகளிற் பிரகாசிக்கின்றவன் இந்திரனே என்பதாம். இந்திரனுடைய துதி காணப்படுதலால் இதற்கு இந்திரதேவதை என்பது பொருத்தமுடையதேயாம். இத்தன்மைய கிரணங்கட்குப் பற்றுக்கோடாயிருக்குந் தன்மையால் சந்திரனை முக்கியமாய்க் கூற விரும்பிய தன்மைபற்றி சாந்திர மசி இஷ்டியில் (ஓம விசேடத்தில்) விநியோகமுமமைகின்றது என்பது திரண்ட பொருள்.

ஈண்டு யாஸ்க முனிவர் நிருக்தமும்:—இதனுடைய, ஓர் கிரணம் சந்திரனை விளக்குகின்றது. ஆதித்தனிடத்தினின்று இவ்விளக்கமுண்டாகியதெனக் கூறற்பாலது. ஆகையால் மறைந்துள்ள சூரிய கிரணம் சந்திரன். கந்தருவ, என்பது நியமமாகின்றது அதுவும் கோக்களால் உணரப்படுகின்றது. கோக்கள் = கிரணங்கள் அதாவது மறைந்துள்ளன அல்லது, இலயித்தன சென்றுள்ளன மேல் சந்திர மண்டலத்தில் எனக் கூறுகின்றது.

## மந்திரம் 4.

२ उ ३ २३३ १ २ ३ २३ १ २र

148. यदिन्द्रो अनयद्रितो महीरपो वृषन्तमः ।

१२ ३ १ २३ १ २

तत्र पूषा भुवत् सचा ॥ ४ ॥

இருக்கு 6-46-4.

*யதி³ந்த்³ரோ அநயத்³ரிதோ மஹீரபோ வ்ருஷந்தம: ।*
*தத்ர பூஷா பு⁴வத் ஸசா ॥*

### அந்வயம்.

यत्, वृषन्तमः, इन्द्रः, रितः, महीः, अपः, अनयत्, तत्र, पूषा, सचा, भुवत् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| यत् | யத் | எப்போது |
| वृषन्तमः | வ்ருஷந்தம: | அதிகமாய் மழை பெய்விக்கின்ற |
| इन्द्रः | இந்த்³ர: | இந்திரன் |
| रितः | ரித: | ஓடுகின்ற |
| महीः | மஹீ: | மிகுந்த |
| अपः | அப: | மழைத்தண்ணீரை |
| अनयत् | அநயத் | இவ் வுலகத்திற் சேர்க்கின்றானோ, |
| तत्र | தத்ர | அப்பொழுது |
| पूषा | பூஷா | போஷக (வளர்க்கின்ற) தேவதை |
| सचा | ஸசா | அனுகூலம் |
| भुवत् | பு⁴வத் | ஆகின்றது. |

### சாயண பாடியம்.

*கண்டம்—4. இருக்கு—4. பரத்துவாச ரிஷி.*

*எக் காலத்தில் மிக மழை பெய்விக்கின்ற இந்திரன் நிரம்ப மழைத்தண்ணீரை இவ் வுலகமடையுமாறு செய்கின்றானோ, அக் காலத்தில் போஷக தேவதை (பூஷா தேவதையென்பது மது) இந்திரனுக்கு அனுகூலமாயிருக்கின்றது.* (4)

**குறிப்பு.**—பூஷா = இரவி விசேடம். இதுவே பூஷா தேவதை, போஷக தேவதை யெனப்படுகின்றது.

### மந்திரம் 5.

१२ ३१२ ३ २ ३ २ ३ १ २

149. गौर्धयति मरुताँ श्रवस्युर्माता मघोनाम् ।

३ २उ ३ १ २

युक्ता वह्नी रथानाम् ॥ ५ ॥

இருக்கு 8-94-1.

𑌗𑍌𑌰𑍍𑌧𑌯𑌤𑌿 𑌮𑌰𑍁𑌤𑌾𑌂 𑌶𑍍𑌰𑌵𑌸𑍍𑌯𑍁𑌰𑍍𑌮𑌾𑌤𑌾 𑌮𑌘𑍋𑌨𑌾𑌮𑍍 ।

𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌵𑌹𑍍𑌨𑍀 𑌰𑌥𑌾𑌨𑌾𑌮𑍍 ॥

#### அங்வயம்.

मघोनाम्, मरुताम्, माता, रथानां, वह्नीः, युक्ता, गौः, श्रवस्युः, धयति ॥

#### பதவுரை.

| | | |
|---|---|---|
| मघोनां | 𑌮𑌘𑍋𑌨𑌾𑌂 | தனமுள்ள |
| मरुतां | 𑌮𑌰𑍁𑌤𑌾𑌂 | மருத்துக்களுடைய |
| माता | 𑌮𑌾𑌤𑌾 | மாதாவானவள் |
| रथानां | 𑌰𑌥𑌾𑌨𑌾𑌂 | மருத்துக்களின் |
| वह्नीः | 𑌵𑌹𑍍𑌨𑍀𑌃 | வடவானலத்தினின்று தாங்குவிப்பாளாய் |
| युक्ता | 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 | யாண்டும் பூசிக்கப்பட்டவளாகிய |
| गौः | 𑌗𑍌𑌃 | ஆகாயவடிவ, கோ, மாதா |
| श्रवस्युः | 𑌶𑍍𑌰𑌵𑌸𑍍𑌯𑍁𑌃 | அன்னத்தை விரும்பியவளாய் |
| धयति | 𑌧𑌯𑌤𑌿 | தனது புத்திரனைப் போஷிக்கின்ருள். |

#### சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—5. விந்து, அல்லது, பூதகஷேோ ரிஷி.

தனமுடைய மருத்துக்களை யுண்டாக்கப்பட்ட, கோ, என்னும் ஆகாய வடிவ மாதா சோமத்தைக் குடிக்கின்ருள், அல்லது தனது புத்திரர்களைப் பாதுகாக்கின்ருள், யாது விரும்பி மருத்துக்களைக் காப்பாற்றுகின்ருள் எனின்? அன்ன விருப்புடையாளாய்.) (அவள்) எத்தன்மையாளெனின்?

மருத்துக்களை பெரிய வடவாலனங்களோடுச் சேர்ப்பவள். அவள் யாண்டும் புசிக்கத்தக்காளா யிருக்கின்றாள்.

'கோ மாதாவினின்று பால்கள், அல்லது மருத்துக்களுண்டாயின, என மறையுங் கூறுகின்றது. ஆதலின் கௌ—என்றது 'மத்திமை' என்னும் வாக்கு அதன் கண்ணேயே மத்தியத்தானமான மருத்துக்களு மிருத்தலின் அவைகள் அதனுடைய புத்திரர்கள் என உபசரிக்கப்படுகின்றன. (5)

குறிப்பு.—வாயு புத்திரர்களான மருத்துக்களோடு சேர்ந்து கீர்த்தியை விரும்பி மழையை அனுப்புகின்றாள் என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 6.

१२ ३ १२ ३ २ ३ १ २
150. उप नो हरिभिः सुतं याहि मदानां पते ।
१२ ३ १२ ३२
उप नो हरिभिः सुतम् ॥ ६ ॥

இருக்கு8-93-31.

உவ நொ ஹரிஹி: ஸுதம் யாஹி மதாநாம் வதெ ।
உவ நொ ஹரிஹி: ஸுதம் ॥

அந்வயம்.

मदानां, पते !, हरिभिः, नः, सुतं, उपयाहि, हरिभिः, नः, सुतं, उपयाहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मदानां | மதாநாம் | சோமங்கட்கு |
| पते ! | வதெ ! | இறைவனாகிய இந்திர ! |
| हरिभिः | ஹரிஹி: | ஆயிரம் பரிகளோடு |
| नः | ந: | எங்களுடைய (வேள்வியில்) |
| सुतं | ஸுதம் | சோமரச மருந்தற்பொருட்டு |
| उपयाहि | உவயாஹி | விரைவில் வருவாயாக. |
| हरिभिः | ஹரிஹி: | ஆயிரம் பரிகளோடு |
| नः | ந: | எங்களுடைய (வேள்வியில்) |
| सुतं | ஸுதம் | சோமரச மருந்தற்பொருட்டு |
| उपयाहि | உவயாஹி | விரைவில் வருவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—6. சுருதகக்ஷ அல்லது, சுகக்ஷோவா ரிஷி.

மதங்கட்குத் தலைவனே! மதந் தருவது மதமாம். சோமரசத்தால். மதம் (களிப்பு) உண்டாகலின் சோமரசம் மதமெனப்பட்டது. எனவே சோமங்கட் கிறைவ! (என்பதுந் திரண்ட பொருள்). இந்திரனே! நீ நூறு, ஆயிர மெண்கொண்ட (அளவற்ற) குதிரைகளோடு கூடிய இரதத்தில் எங்களுடைய வேள்வியில் பிழிந்துள்ள சோமரசத்தை அருந்தற்பொருட்டு விரைவில் வருவாயாக என்பதாம்.

उप नो हरिभिः सुतं என மறித்துங் கூறியது, ஆதரவின் பொருட்டாம்.

'आ शतेन हरिभिः' என்பது முதலிய வாக்கியங்களில் அநேக குதிரைகள் எனச் சுருதியில் கூறப்பட்டிருத்தலின், ஈண்டும் இஃது ஆயிரக் கணக்காய்க் கொள்ளப்பட்டது. (6)

## மந்திரம் 7.

३ १ २र ३ १ २ ३ १ २ ३ २
151. **इष्टा होत्रा असृक्षतेन्द्रं वृधन्तो अध्वरे ।**
१ २ ३ १ २र
**अच्छावभृथमोजसा ॥ ७ ॥**

இருக்கு 8-93-23.

𑌇𑌷𑍍𑌟𑌾 𑌹𑍋𑌤𑍍𑌰𑌾 𑌅𑌸𑍃𑌕𑍍𑌷𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌵𑍃𑌧𑌨𑍍𑌤𑍋 𑌅𑌧𑍍𑌵𑌰𑍇 ।
𑌅𑌚𑍍𑌛𑌾𑌵𑌭𑍃𑌥𑌮𑍋𑌜𑌸𑌾 ॥

அந்வயம்

**अध्वरे, वृधन्तः, इष्टाः, होत्राः, अवभृथं अच्छ, ओजसा, इन्द्रं, असृक्षत ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **अध्वरे** | 𑌅𑌧𑍍𑌵𑌰𑍇 | வேள்வியில் |
| **वृधन्तः** | 𑌵𑍃𑌧𑌨𑍍𑌤𑌃 | அவியால் இந்திரனை வளர்க்கின்றவர்களும் |
| **इष्टाः** | 𑌇𑌷𑍍𑌟𑌾𑌃 | வேட்கின்றவர்களுமான |
| **होत्राः** | 𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌃 | இருக்குமறை படிப்போர்கள் எழுவரும் |
| **अवभृथं अच्छ** | 𑌅𑌵𑌭𑍃𑌥𑌂 𑌅𑌚𑍍𑌛 | வேள்வி முடிவு நீராடும்வரை |
| **ओजसा** | 𑌓𑌜𑌸𑌾 | ஆற்றலோடு |
| **इन्द्रं** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 | இந்திரனைக் குறித்து |
| **असृक्षत** | 𑌅𑌸𑍃𑌕𑍍𑌷𑌤 | அவியைக் கொடுத்துக் கொண்டிருப்பார்களாக |

சாயண பாடியம்.

**கண்டம்—4. இருக்கு—7.** *சுருதகக்ஷா அல்லது சுதக்ஷா ரிஷி.*

எங்களுடைய வேள்வியில் அவிகளால் இந்திரனை வளர்க்கப்பட்டவர்களும், வேள்வியாற்றுவோர்களுமான ஏழு ஹோதாக்கள் என்னும் இருக்குணர்ந்தார்கள், சோமரசம் பிழிந்தெடுக்குமளவும் தமதாற்றலோடு கூடியவர்களாய் இந்திரனைக் குறித்து ஆகுதி செய்துகொண் டிருப்பார்களாக, வேள்வி முடிவில் நீராடும்வரை இருக்கு மறை யோதுவோர்கள் ஆராதிக்கின்றார்கள் என்பது கருத்து. (7)

குறிப்பு.—வேள்வியில் குறைவுபாடிருக்குமாயின் அதை நீக்குதற்குரிய அவிகளைத் தயார்ச் செய்வீர்களாக என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 8.

३२उ ३१ २र ३ २ ३ १ २ ३१२

152. **अहमिद्धि पितुष्परि मेधामृतस्य जग्रह ।**

३१ २र

**अहꣳ सूर्य्य इवाजनि ॥ ८ ॥**

இருக்கு 8-6-10.

𑌅𑌹𑌮𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑌿𑌤𑍁𑌷𑍍𑌪𑌰𑌿 𑌮𑍇𑌧𑌾𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌜𑌗𑍍𑌰𑌹 ।
𑌅𑌹𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑍍𑌯 𑌇𑌵𑌾𑌜𑌨𑌿 ॥

அந்வயம்.

पितुः, ऋतस्य, मेधां, अहं इत्, परिजग्रह, हि, अहं, सूर्य्यः इव अजनि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **पितुः** | 𑌪𑌿𑌤𑍁𑌃 | பரிபாலிப்போனாகிய |
| **ऋतस्य** | 𑌋𑌤𑌸𑍍𑌯 | உண்மை வடிவுள்ள இந்திரனுடைய |
| **मेधां** | 𑌮𑍇𑌧𑌾𑌂 | அநுக்கிரகமாகிய புத்தியை |
| **अहं इत्** | 𑌅𑌹𑌂 𑌇𑌤𑍍 | யானே |
| **परिजग्रह** | 𑌪𑌰𑌿𑌜𑌗𑍍𑌰𑌹 | கிரகித்துள்ளேன். |
| **हि** | 𑌹𑌿 | யாதினாலெனின்? |
| **अहं** | 𑌅𑌹𑌂 | யான் |
| **सूर्य्यः इव अजनि** | 𑌸𑍂𑌰𑍍𑌯𑍍𑌯𑌃 𑌇𑌵 𑌅𑌜𑌨𑌿 | சூரியன் விளக்கிக்கொண்டு எழுமாறு எழுந்துள்ளேன் (ஆதலின் என்க.) |

* जग्रभ, என்பது இருக்கு.

### சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—8. வத்ச கண்வ ரிஷி.

பாதுகாப்பவனும், சத்தியனுமாகிய அவ் விந்திரனுடைய அநுக்கிரகமாகிய புத்தியை, யானொருவனே அடைந்தவனாக யிருக்கின்றேன். மற்றையர் அலர். யாது காரணத்தால் இவ்வாறும் எனின்? நான் சூரியன்போலுண்டானேன் ஆதலின். அதாவது—சூரியன் பிரகாசித்துக்கொண்டு எழுகின்றதுபோல யான் தோன்றினேன் என்பதாம். (8)

## மந்திரம் 9.

153. ३१२ ३२३१२ ३१२
रेवतीर्नः सधमाद इन्द्रे सन्तु तुविवाजाः ।
३२ ३ २३१२
क्षुमन्तो याभिर्मदेम ॥ ९ ॥

இருக்கு 1-30-13.

ரேவதீர்ந꞉ ஸதமாத இந்த்ரே ஸந்து துவிவாஜா꞉ ।
க்ஷுமந்தோ யாபிர்மதேம ॥

### அந்வயம்.

क्षुमन्तः, याभिः, मदेम, नः, इन्द्रे सधमादे, रेवतीः, तुविवाजाः, सन्तु ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| क्षुमन्तः | க்ஷுமந்த꞉ | அன்னமுடைய யாங்கள் |
| याभिः | யாபி꞉ | எப்பசுக்களால் |
| मदेम | மதேம | களிப்படைகின்றோமோ, |
| नः | ந꞉ | எம்முடைய (அப் பசுக்கள்) |
| इन्द्रे सधमादे | இந்த்ரே ஸதமாதே | எம்மோடு இந்திரன் களிப்புற்றவிடத்து |
| रेवतीः | ரேவதீ꞉ | பால், நெய், முதலியவைகளென்னும் தனமுடையவைகளாகவும் |
| तुविवाजाः | துவிவாஜா꞉ | மிகுந்த ஆற்றலுடையவைகளாகவும் |
| सन्तु | ஸந்து | இருக்குக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—9. சுனச்சேப ரிஷி.

அன்ன முடையார்களான யாங்கள் எப் பசுக்களால் ஆனந்தமடைவோமோ, எங்களோடுகூட இந்திரன் களிப்படைந்த விடத்து எங்களுடைய அப் பசுக்கள், பால், நெய் முதலியவைகளென்னுந் தனமுடையவைகளாகவும், மிகுந்த ஆற்றலுடையவைகளாகவும் இருக்குக. (9)

குறிப்பு.—அன்னத்தையுந் தனத்தையும் விரும்பும் எங்களுடைய தோத்திரங்கள் எப்போதுங் களிப்புற்ற இந்திரனிடத்து இருக்குக என்பது ஆங்கிலம்.

மந்திரம் 10.

१ २ ३ १ २ ३ १ २ ३ २
154. सोमः पूषा च चेततुर्विश्वासां सुक्षितीनाम् ।
३ २ २क ३ २ २
देवत्रा रथ्योऽर्हिता ॥ १० ॥

ஸொமஃ பூஷா ச சேததுர்விஶ்வாஸாம் ஸுக்ஷிதீநாம் ।
தேவத்ரா ரத்யோ஽ர்ஹிதா ॥

அந்வயம்.

देवत्रा, रथ्यः, अर्हिता, सोमः, पूषा च, विश्वासां, सुक्षितीनां, चेततुः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| देवत्रा | தேவத்ரா | தேவர்களுக்குள் |
| रथ्यः | ரத்யஃ | தேருக்குரியனாய் |
| अर्हिता | அர்ஹிதா | ஏறிச் செல்லுகின்ற |
| सोमः | ஸொமஃ | சோமனும், |
| पूषा च | பூஷா ச | சூரியனும், |
| विश्वासां | விஶ்வாஸாம் | எல்லா |
| सुक्षितीनां | ஸுக்ஷிதீநாம் | மனிதர்களாலும் இந்திரனுக்குக் கொடுக்கப்பட்ட அவிகளை |
| चेततुः | சேததுஃ | அறிவார்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—10. சுனசேபர் அல்லது வாமதேவ ரிஷி.

தேவர்களுக்குள் இரத மேறத்தக்க சோமனும், அத்தகைய சூரியனும், நல்ல மனிதர்கள் சம்பந்தமாய் இந்திரனுக்குக் கொடுக்கப்படும் அவிகளை அறிவார்களாக. (10)

குறிப்பு—ஈண்டு க்ஷிதி என்றது—பிரஜை. வேள்வித்தலை..ன் தலைவிகளாற் கொடுக்கப்பட்ட அவிகளைச், சோம சூரியர்கள் தேவர்கட்குக் ெ·ாண்டுபோய்க் கொடுப்பதற்கு நியமிக்கப்பட்டவர்கள் என்பது ஆங்கிலம்.

## நான்காவது கண்டம்.

முற்றும்.

---

## ஐந்தாவது கண்டம்

பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—5.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

२ ३ २ ३ १ २३ १ २ ३ १ २र

155. **पान्तमा वो अन्धस इन्द्रमभि प्रगायत ।**

३ १२ ३१ २३ १ २ ३ २

**विश्वासाहꣳ शतक्रतुं मꣳहिष्ठं चर्षणीनाम् ॥ १ ॥**

இருக்கு 8-92-1.

𑌪𑌾𑌨𑍍𑌤𑌮𑌾 𑌵𑍋 𑌅𑌨𑍍𑌧𑌸 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌭𑌿 𑌪𑍍𑌰𑌗𑌾𑌯𑌤 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌾𑌹𑌂 𑌶𑌤𑌕𑍍𑌰𑌤𑍁𑌂 𑌮𑌂𑌹𑌿𑌷𑍍𑌠𑌂 𑌚𑌰𑍍𑌷𑌣𑍀𑌨𑌾𑌮𑍍 ॥

அந்வயம்.

(हे ऋत्विजः !,) वः, विश्वासाहं, शतक्रतुं, चर्षणीनां, मंहिष्ठं, अन्धसः, आपान्तं, इन्द्रं, अभिप्रगायत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः!) | (ஹே ருத்விஜ: !) | (வேட்போர்காள் !) |
| वः | வ: | நீவிர் |
| विश्वासाहं | விஶ்வாஸாஹம் | சத்துருக்கள் அனைவரையும் அடக்குபவனும் |
| शतक्रतुं | ஶதக்ரதும் | பல்வகை, அறிவுகளை அல்லது கருமங்களை யுடையவனும் |
| चर्षणीनां | சர்ஷணீநாம் | மனிதர்கட்கு |
| मंहिष्ठं | மம்ஹிஷ்டம் | மிகத் தனங்கொடுப்பவனும் |
| अन्धसः | அந்தஸ: | சோமமாகிய அன்னத்தை |
| आपान्तं | ஆபாந்தம் | நோக்கமாய் அருந்துபவனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| अभिप्रगायत | அபிப்ரகாயத | நன்கு துதிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—1. சுருதகக்ஷ ரிஷி:

வேட்போர்களே! நீங்கள் சோம மெனப்படும் அன்னத்தை நோக்கமாக அருந்துவோனாகிய இந்திரனை இனிது போற்றுவீர்களாக. எவ்வண்ணத்தனாகிய இந்திரனை யெனின்? சத்துருக்களனைவரையும், அல்லது பூதங்களனைத்தையும் அடக்குபவனும், இதுபற்றியே, பலவகை நுண்ணறிவுகளை யுடையானும், அல்லது பலவகைக் கருமமுடையானும், மற்றும், மனிதர்கட்கு மிகுந்த திரவியத்தை யளிப்போனும், அல்லது, வேள்வித் தலைவர்கட்கு ஆராதிக்குந் தன்மையாற் போற்றத்தக்கவனுமாகிய இந்திரனை. இனிது தோத்திரம் பண்ணுவீர்களாக என அந்வயித்துக்கொள்க. (1)

மந்திரம் 2.

२ ३ १ २ ३ १२३ १ २
156. प्र व इन्द्राय मादनꣳ हर्य्यश्वाय गायत ।
१ २ ३ १ २
सखायः सोमपाव्ने ॥ २ ॥

இருக்கு 7-31-1.

ப்ர வ இந்த்ராய மாதநம் ஹர்யஶ்வாய காயத ।
ஸகாய: ஸோமபாவ்நே ॥

அந்வயம்.

हे सखायः!, वः, हर्य्यश्वाय, सोमपाव्ने, इन्द्राय, मादनं, प्रगायत ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः! | ஹெ ஸ஖ாயஃ! | நண்பர்களே! |
| वः | வஃ | நீங்கள் |
| हर्यश्वाय | ஹய்ய்ஶ்வாய | அரி என்னுங் குதிரைகளை யுடையவனும் |
| सोमपाव्ने | ஸொமபாவ்நெ | சோமரசம் அருந்துவோனும் ஆகிய |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| मादनं | மாத³நம் | களிப்புண்டாக்குதற்குரிய தோத்திரத்தை |
| प्रगायत | ப்ரகா³யத | இனிது பாடுவீர்களாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—2. வசிட்ட ரிஷி.

மித்திரர்களே! நீங்கள் அரியென்னும் பெயர் பூண்ட குதிரைகளை யுடையானும், சோமபானம் பண்ணுபவனுமாகிய இந்திரனுக்கு ஆனந்தம் விளைவிக்குந் தோத்திரத்தை நன்கு படிப்பீர்களாக. (2)

குறிப்பு.—பொன்னிறம் அல்லது பச்சை நிறமாகிய குதிரைகளை யுடையானும் என்பதும், மயக்கத்தைத் தரும் சோமத்தைக் குடிப்பவனும் என்பதும் ஆங்கிலம்.

## மந்திரம் 3.

३ १२ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २

157. वयमु त्वा तदिदर्था इन्द्र त्वायन्तः सखायः ।

१ २ ३ १ २

कण्वा उक्थेभिर्जरन्ते ॥ ३ ॥

இருக்கு 8-2-16.

வயமு த்வா ததி³த³ர்தா² இந்த்³ர த்வாயந்த꞉ ஸகா²ய꞉ ।

கண்வா உக்தே²பி⁴ர்ஜரந்தே ॥

### அந்வயம்.

हे इन्द्र!, त्वायन्तः, सखायः, वयं, तदिदर्थाः, त्वा, कण्वाः, उक्थेभिः, जरन्ते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்ர! | இந்திரனே! |
| त्वायन्तः | த்வாயந்த꞉ | உன்னைத் தம் மவனாகச் செய்ய விரும்பிய |
| सखायः वयं | ஸகாய꞉ வயம் | மித்திரர்களான யாங்கள் |
| तदिदर्थाः | ததிதர்தா꞉ | உன்னைத் துதிப்பதுவே பயனெனக் கொண்டவர்களாய் |
| त्वा | த்வா | உன்னைத் துதிக்கின்றோம். |
| कण्वाः | கண்வா꞉ | கண்ணுவ கோத்திரத்தினர்களான எனது புத்திரர்களும் |
| उक्थेभिः | உக்தேபி꞉ | வேதமந்திரங்களாகிய துதிகளால் |
| जरन्ते | ஜரந்தே | உன்னையே துதிக்கின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—3. மேதாதிதியும், பிரியமேதரும் ரிஷிகள்.

இந்திர! உன்னை, யாமே எனக்கொள்ள விரும்பிய ஒத்த அறிவுடைய நண்பர்களான யாங்கள், நின்னைத் துதிப்பதுவே பயனெனக் கொண்டவர்களாய் உன்னைத் துதிக்கின்றோம். கண்ணுவ கோத்திரத்திலுதித்த எனது புத்திரர்களும் சஸ்திரமென்னுந் தோத்திர விசேடங்களால் நின்னையே போற்றுகின்றார்கள் என்பதாம். (3)

उ—(உ) என்றது, அசைச் சொல்.

மந்திரம் 4.

158. १ २ ३ १२ ३ २र ३ १ २
इन्द्राय मद्वने सुतं परिष्टोभन्तु नो गिरः ।
३ १ २ ३१२
अर्कमर्चन्तु कारवः ॥ ४ ॥

இருக்கு 8-93-19.

இந்த்ராய மத்வநே ஸுதம் பரிஷ்டோபந்து நோ கிர꞉ ।
அர்கமர்சந்து காரவ꞉ ॥

அந்வயம்.

मद्वने, इन्द्राय, सुतं, नः, गिरः, परिष्टोभन्तु, कारवः, अर्कं, अर्चन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मह्ने | மஹ்நே | களிக்குந் தன்மையையேயுடைய |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரனுக்குப் |
| सुतं | ஸுதம் | பிழிந்துள்ள சோமத்தை |
| नः | ந: | எமது |
| गिरः | கிர: | தோத்திர வாக்குகள் |
| परिष्टोभन्तु | பரிஷ்டோபந்து | முற்றுந்துதிப்பனவாகுக. |
| कारवः | காரவ: | துதிப்போர்கள் |
| अर्कं | அர்க்கம் | யாவரும் போற்றத்தக்க சோமத்தைப் |
| अर्चन्तु | அர்ச்சந்து | பூசிப்பார்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—4. சுருதகக்ஷ ரிஷி.

ஆனந்திக்குந் தன்மையையுடைய இந்திரன் பொருட்டுப் பிழிந்தெடுக்கப்பட்ட சோமரசத்தை, எமது வாக்குகள் மிகத் துதிசெய்வனவாகுக. மற்றும், தோத்திரஞ் செய்விப்போர்களும் துதிப்போர்களும், யாவராலும் போற்றத்தக்க சோமத்தைப் பூசிப்பார்களாக. (4)

स्तोभति : என்பதற்கு—துதித்தல் பொருளென நிகண்டு 3-14-4-ல் கூறியுள்ளது.

குறிப்பு.—சோமத்தைத் தேவதையாகக்கொண்டு பூசித்தல் என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 5.

३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २

159. अयं त इन्द्र सोमो निपूतो अधि बर्हिषि ।

१ २ ३ २ उ ३ १ २

एहीमस्य द्रवा पिब ॥ ५ ॥

இருக்கு 8-16-11.

அயம் த இந்த்ர ஸோமோ நிபூதோ அதி பர்ஹிஷி ।
ஏஹீமஸ்ய த்ரவா பிப ॥

அந்வயம்.

हे इन्द्र !, ते, अयं सोमः, बर्हिषि अधि, निपूतः, इम्, अस्य, एहि, द्रव, पिब ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்ர! | இந்திரனே! |
| ते | தே | நின்பொருட்டு |
| अयं सोमः | அயம் ஸோம: | இச் சோமம் |
| बर्हिषि अधि | பர்ஹிஷி அதி | வேதிகையில் விரித்துள்ள தருப்பையின்மீது |
| निपूतः | நிபூத: | பவித்திரமாக்கப்பட்டுள்ளது. |
| इम् | இம் | இப்போது |
| अस्य | அஸ்ய | இச் சோமத்திற்கருகில் |
| एहि | ஏஹி | வருவாயாக, (வந்து ஓமம்பண்ணுமிடத்திற்கு) |
| द्रव | த்ரவ | விரைவில் போவாயாக. |
| पिब | பிப | (போய் அச்சோமத்தை) அருந்துவாயாக. |

### சாயண பாடியம்.

**கண்டம்—5. இருக்கு—5. இரிமீட ரிஷி.**

இந்திரனே! நினக்காக இச் சோமரசம், வேதிகையிற் பரப்பியிருக்கின்ற தருப்பையின் மீது ஆடையின் நுனியால் சோதிக்கப்பட்டுள்ளது. அதாவது இடித்துப் பிழிதல் முதலிய சமற்காரங்களால் சுத்தம் பண்ணப்பட்டதென்பது பொருள். இப்போது இத் தகைய சோமத்தின் பொருட்டு வருவாயாக. வந்து யாண்டு ரசவடிவ சோமம் ஓமம் பண்ணப்படுகின்றதோ, ஆண்டு விரைவிற் செல்வாயாக. (சென்ற) பின்னர் அச்சோமத்தை அருந்துவாயாக என்பதாம். (5)

### மந்திரம் 6.

३ २ ३१२ ३१२ ३१२

160. सुरूपकृत्नुमूतये सुदुघामिव गोदुहे ।

३ २ ३ १ २

जुहूमसि द्यवि द्यवि ॥ ६ ॥

இருக்கு 9-4-1

ஸுரூபக்ருத்னுமூதயே ஸுதுகாமிவ கோதுஹே ।
ஜுஹூமஸி த்யவி த்யவி ॥

### அந்வயம்.

सुरूपकृत्नुं, ऊतये, गोदुहे, सुदुघां इव, द्यवि द्यवि, जुहूमसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सुरूपकृत्नुं | ஸுரூபக்ருத்நும் | நற் கருமத்திற்குத் தலைவனாகிய இந்திரனை |
| ऊतये | ஊதயெ | தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்கு, |
| गोदुहे | கொது ஹெ | பால் கறத்தற் பொருட்டு |
| सुदुघां इव | ஸுதுகாம் இவ | அழகிய பாற்பசுவை யழைப்பது போல |
| द्यवि द्यवि | த்யவி த்யவி | ஒவ்வொரு நாளும் |
| जुहूमसि | ஜுஹூமஸி | ஆவாகனம் பண்ணுகின்றோம். (அழைக்கின்றோம்.) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—6. மதுச்சந்த ரிஷி.

நற்கருமத்திற்குத் தலைவனாகிய இந்திரனை, எங்களைக் காப்பாற்றும் பொருட்டு நாடோறும் அழைக்கின்றோம். அழைப்பதிலுவமை :—பால் கறப்பதற்கு நற்பசுவை அழைப்பது போன்றென்ல். அதாவது நன்கு பால் கறக்கும் பசுவை உலகில் பால் கறப்போன் பால் கறப்பதற்கு வேண்டிக் கூப்பிடுவது போன்று என்பதாம். ‘ த்யவி த்யவி ’ என்றது பன்னிரு தினத்தின் பெயர் எனக் கூறுகின்றது நிருக்தம். ஆதலின் நாடோறும் என்றது பன்னிரு பகலெனக் கொள்க. (6)

## மந்திரம் 7.

३ १ २ ३ २ ३१ २ ३१२
161. अभि त्वा वृषभा सुते सुतꣳ सृजामि पीतये ।
३ १ २ ३ १२
तृम्पा व्यश्नुही मदम् ॥ ७ ॥

இருக்கு 8-45-22.

அபி த்வா வ்ருஷபா ஸுதே ஸுதம் ஸ்ருஜாமி பீதயே ।
த்ரும்பா வ்யஶ்நுஹீ மதம் ॥

அந்வயம்.

हे वृषभ !, त्वा, सुते, सुतं, पीतये, अभिसृजामि, तृम्पा, मदं, व्यश्नुही ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वृषभ! | ஹெ வரஷப! | வேட்கையைப் பெய்யும் இந்திர! |
| त्वा | த்வா | உன்னைக் குறித்து |
| सुते | ஸுதெ | சோமரசம் பிழிந்த காலத்து |
| सुतं | ஸுதம் | பிழிந்த அச் சோமரசத்தை |
| पीतये | பீதயெ | அருந்துவதற்கு |
| अभिसृजामि | அபிஸரஜாமி | (நினக்கு) அர்ப்பிக்கின்றேன். |
| तृम्पा | தரம்பா | திருப்தியைச் செய்வதும் |
| मदं | மதம் | களிப்பைக் கொடுப்பதுமாகிய சோமரசத்தை |
| व्यश्नुही | வ்யச்நுஹீ | நன்கு ஏற்றுக்கொள்வாயாக. |

சாயணபாடியம்.

கண்டம்—5. இருக்கு—7. திரிசோக ரிஷி.

விரும்பியதை மழையெனப் பெய்வோனாகிய இந்திரனே! உனக்குச் சோமரசம் பிழிந்தெடுத்த விடத்து, பிழிந்த அச் சோமரசத்தை யருந்துவதற்கு அர்ப்பணஞ் செய்கின்றேன். திருப்தியைத் தருவதும், களிப்பையுண்டாக்குவதுமாகிய அச் சோமரசத்தை இனிது பெற்றுக்கொள்வாயாக. (7)

### மந்திரம் 8.

१ २ ३ १ २२३१२ ३२

162. य इन्द्र चमसेष्वा सोमश्चमूषु ते सुतः ।

१ २२३ १ २

पिबेदस्य त्वमीशिषे ॥ ८ ॥

இருக்கு 8-82-7.

ய இந்த்ர சமஸெஷ்வா ஸொமஶ்சமூஷு தெ ஸுதः ।

பிபெதஸ்ய த்வமீஶிஷெ ॥

அந்வயம்.

हे इन्द्र!, ते, सुतः, यः, सोमः, चमसेषु, चमूषु, आ, अस्य, त्वं, पिब इत्, ईशिषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹெ ஈ௩ு! | இந்திரனே! |
| ते | தெ | நின் பொருட்டு |
| सुतः | ஸுதஃ | பிழியப்பட்ட |
| यः सोमः | யஃ ஸொமஃ | எச் சோமரசம் |
| चमसेषु | சமஸெஷு | சமசு, என்னும்பாத்திரங்களிலும் |
| चमूषु | சமூஷு | கிரகம் என்னும் பாத்திரங்களிலும் |
| आ | ஆ | நிறைக்கப்பட்டிருக்கின்றதோ, |
| अस्य | அஸ்ய | அச் சோமரசத்தை |
| त्वं | த்வம் | நீ |
| पिब इत् | பிப ஈத் | அவசியம் அருந்துவாயாக, (இந்திர! நீ) |
| ईशिषे | ஈஶிஷெ | ஈசனாயிருக்கின்றாய், (ஆதலின்). |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—8. குசீத ரிஷி.

இந்திர! உன்பொருட்டுப் பிழியப்பட்ட சோமரசம், சமசு, என்னும் பாத்திரங்களிலும், அருந்தற்குரிய கிரகம், என்னும் பாத்திரங்களிலும், நிரம்பியிருக்கின்றது. இதனுடைய அச் சோமரசத்தை ஒரு தலையாகக் குடிப்பாயாக. எவ்வாறு அஃது யான் குடித்தற்குரியதோவெனின்? ஆண்டுக் கூறப்படுகின்றது:—இந்திரனே! நீ உண்மையில் அதற்கு ஈசனாயிருக்கின்றாய் ஆதலின். அருந்துவயாக என முடித்துக்கொள்க. (8)

**குறிப்பு.**—பிழிந்தெடுக்கும் பல்லோர்களால் அநேக அகப்பைகளில் நிறைய வைத்திருக்கின்றது அதை அருந்துவாயாக என்பது பிறர் கொள்கை.

மந்திரம் 9.

१ २ ३ १ २ ३ १ २
163. योगे योगे तवस्तरं वाजे वाजे हवामहे ।
१ २ ३ १ २ ३ १ २
सखाय इन्द्रमूतये ॥ ९ ॥

இருக்கு
குக.

யொகெ யொகெ தவஸ்தரம் வாஜெ வாஜெ ஹவா
ஸகாய ஈந்த்ரமூதயெ ॥

அந்வயம்.

**योगे योगे, वाजे वाजे, तवस्तरं, इन्द्रं, ऊतये, सखायः, हवामहे ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **योगे योगे** | யொகெ யொகெ | ஒவ்வொரு கருமத் தொடக்கத்திலும் |
| **वाजे वाजे** | வாஜெ வாஜெ | இடையூறுகப் போர்விளைந்தவிடத்து |
| **तवस्तरं** | தவஸ்தரம் | பேராற்றலுடைய |
| **इन्द्रं** | இந்த்ரம் | இந்திரனை, |
| **ऊतये** | ஊதயெ | (எம்மை) காக்கும் பொருட்டு |
| **सखायः** | ஸகாயः | மித்திரர்களான நாங்கள் |
| **हवामहे** | ஹவாமஹெ | அழைக்கின்றோம். |

சாயண பாடியம்.

**கண்டம்**—5. இருக்கு—9. சுனச்சேப ரிஷி.

அவ்வக் கருமத்தின் றொடக்கத்தில் கருமத்தைக் கெடுக்கத்தக்க போருண்டாகிய விடத்து, ஆற்றல் மிக்குடைய இந்திரனை, மித்திரர்களைப் போல் அன்புடைய யாங்கள் எம்மைப் பாதுகாத்தற்பொருட்டு அழைக்கின்றோம். (9)

## மந்திரம் 10.

२उ ३ १ २ ३१ २ ३ १ २२

164. **आ त्वेता निषीदतेन्द्रमभिप्रगायत ।**

१ २ ३ १ २

**सखायः स्तोमवाहसः ॥ १० ॥**

இருக்கு 1-5-1.

ஆத்வேதா நிஷீத‌தேந்த்ரமபிப்ரகாயத ।
ஸகாயஃ ஸ்தோமவாஹஸஃ ॥

அந்வயம்.

**हे स्तोमवाहसः, हे सखायः ! तु, आ इत, आ इत, निषीदत, इन्द्रं, अभि प्र गायत ॥**

புதவுரை.

| | | |
|---|---|---|
| स्तोमवाहस: | ஸ்தோமவாஹஸ: | ஸ்தோத்திரக் கொத்துகளை யடைவிக்கின்ற |
| (हे) सखाय: ! | (ஹே) ஸகாய: ! | வேட்போர்காள்! நீவிர் |
| तु | து. | மிக விரைவாய் |
| आ इत | ஆ இத | வருவீர்களாக, |
| आ इत | ஆ இத | வருவீர்களாக. (வந்து) |
| निषीदत | நிஷீத | உட்காருங்கள். (உட்கார்ந்து) |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனைப் |
| अभिप्रगायत | அபிப்ரகாயத | பலவகையாய்த் தோத்திரம் புரிவீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—10. மதுச்சந்த ரிஷி.

ஈண்டு 'து' என்றது விரைவுப் பொருள்கொண்ட அசைச் சொல், ஆ-இத. ஆ-இத, என இரண்டு ஆகாரங்களால் மந்திரத்தில் இத:—வருவீர்களாக, என்பதை இரட்டித்துக்கொள்க. கொண்டு விடத்து நண்பர்களான வேட்போர்களே! (நீவிர்) விரைவாக இக்கருமத்தில் வருவீர்களாக, வருவீர்களாக எனப் பொருள்பட்டது. ஈண்டு அன்பின் பொருட்டு இரட்டித்தலாம். வந்து உட்காருவீர்களாக. மற்றும் இந்திரனை எல்லா வகையாலும் நன்கு துதிப்பீர்களாக. எத்தன்மையர் நீவிரெனின்? மும்முறையாகவும், ஐம்முறையாகவும், பத்துமுறையாகவும் சொல்லப்படுகின்ற தோத்திர மஞ்சரிகளை (ஸ்தோமங்களை) இக் கருமத்தில் அடைவிப்போர்களாவீர்கள்.

குறிப்பு—ஸ்தோமம்—துதிமஞ்சரி.

ஐந்தாவது கண்டம்

முற்றும்.

## ஆறுவது கண்டம்.

---

### பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—6.

பத்து மந்திரங்களாலானது.

---

#### மந்திரம் 1.

३१ २र ३१ २
165. इदंꣳ *ह्यन्वोजसा सुतंꣳ राधानां पते ।
२ ३ २ १ २
पिबात्वा ३ स्य गिर्वणः ॥ १ ॥

இருக்கு 3-51-10.

𑌇𑌦𑌂 𑌹𑍍𑌯𑌨𑍍𑌵𑍋𑌜𑌸𑌾 𑌸𑍁𑌤𑌂 𑌰𑌾𑌧𑌾𑌨𑌾𑌂 𑌪𑌤𑍇 ।
𑌪𑌿𑌬𑌾𑌤𑍍𑌵𑌾 ३ 𑌸𑍍𑌯 𑌗𑌿𑌰𑍍𑌵𑌣𑌃 ॥

அந்வயம்.

हे राधानां पते !, गिर्वणः, ओजसा, इदं, अनु, ओजसा, सुतं, अस्य, तु, पिब, हि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे राधानां पते ! | 𑌹𑍇 𑌰𑌾𑌧𑌾𑌨𑌾𑌂 𑌪𑌤𑍇! | தனங்கட் கிறைவனே ! |
| गिर्वण ! | 𑌗𑌿𑌰𑍍𑌵𑌣 ! | தோத்திரத்தாற் போற்றத்தக்க இந்திர ! |
| ओजसा | 𑌓𑌜𑌸𑌾 | ஆற்றலோடு கூடிய நீ |
| इदं अनु | 𑌇𑌦𑌂 𑌅𑌨𑍁 | இம்முறையாய் |
| ओजसा | 𑌓𑌜𑌸𑌾 | வலியுடன் (கற்களாலிடித்து) |
| सुतम् | 𑌸𑍁𑌤𑌮𑍍 | பிழிந்தெடுக்கப்பட்ட |
| | 𑌅𑌸𑍍𑌯 | இச் சோமரசத்தை |
| | 𑌤𑍁 | விரைவில் |
| | 𑌪𑌿𑌬 𑌹𑌿 | அருந்துவாயாக |

---

*ஔஜஸா, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—1. விசுவாமித்திர ரிஷி.

திரவியங்கட் கிறைவனே! துதியாற் போற்றத்தக்க இந்திர! வலியோடு கூடிய நீ இம்முறையால் ஆற்றலோடு கற்களாற் (இடித்துப்) பிழிந்தெடுக்கப்பட்ட இச் சோமரசத்தை விரைவி லருந்துவாயாக. (1).

## மந்திரம் 2.

३ १ २र ३१२ ३ १ २ ३ १ २

166. महाँ इन्द्रः परश्च * नो महित्वमस्तु वज्रिणे ।

१ २र ३ १ २र

द्यौर्न प्रथिना शवः ॥ २ ॥

இருக்கு 3-51-10.

மஹாம் இந்த்3ர: பரஶ்ச நோ மஹித்வமஸ்து வஜ்ரிணே ।
த்3யௌர்ந ப்ரதி2நா ஶவ: ॥

அந்வயம்.

नः, इन्द्रः, महान्, परः, वज्रिणे, महित्वं, अस्तु, द्यौः न, शवः, प्रथिना ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| नः | ந: | எமது |
| इन्द्रः | இந்த்3ர: | இவ், விந்திரன் |
| महान् | மஹாந் | தேகத்தாற் பெரியனாகவும் |
| परः | பர: | குணத்தால் மேம்பட்டவனாகவு (முள்ளான்) |
| वज्रिणे | வஜ்ரிணே | வச்சிரமேந்திய இந்திரனுக்கு |
| महित्वं | மஹித்வம் | (முற்கூறிய இருவகைப்) பெருந்தன்மைகளும் |
| अस्तु | அஸ்து | எப்போதும் இருக்குக, (மற்றும்) |
| द्यौः न | த்3யௌ: ந | வானுலகுபோன்று |
| शवः | ஶவ: | சேனைவடிவ ஆற்றலும் |
| प्रथिना | ப்ரதி2நா | மிகக் கீர்த்தியுள்ளதாகுக. |

* नु, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

**கண்டம்—6. இருக்கு—2. மதுச்சந்த ரிஷி.**

இவ் விந்திரன் தேகத்தாற் பெரியன், குணங்களாலுஞ் சிறந்தவனுவன். அன்றியும், வச்சிரந் தாங்கிய இந்திரனுக்கு முற்கூறிய இருவகைப் பெருந் தன்மைகளும் எப்போதுமுண்டாகுக. ஆயினும், இபற்கையிலமைந்ததை யும் வாழ்த்துதல் அன்பினுலாம். இன்னும், விண்ணுலகு போன்று இந்திரனுடைய சேனைவடிவ வலி தழைத்தோங்குக. ஈண்டுத் தழைத்தோங்குக என்பது எஞ்சி நின்றது. விண்ணுலகு எவ்வாறு விரிந்துள்ளதோ, அஃதொப்ப இவனுடைய சேனை விரிந்தோங்குக என்பது பொருள். மூலத்திய 'நு' விரைவு நாமங்களுட் கூறியிருப்பினும் அப் பொருள் ஈண்டு அமையாமையின் கூட்டுறவாகிய பொருளே ஈண்டுக் கொள்ளப்பட்டது. நகாரம், உலகவழக்கில் நிடேதப்பொருள், உவமைப் பொருள் என இருவகைப் பொருளை யுடைத்து. அவற்றுள் எப் பதத்தோடு அந்வயப்படுகின்றதோ, அப் பதத்தினின்றும் முற்கூறப்பட்ட நகாரம் நிடேதப்பொருளை யுடையதாம். பின்னர்க் கூறப்பட்ட நகாரம் உவமைப் பொருளையுடையதாம். யாஸ்க முனிவரும் 1, 2, 6-ல் இதற்கு இவ் வண்ணமே பொருள் கூறியுள்ளார். (இது பற்றியே) ஈங்கு உவமை வாசகமாகிய 'द्यौ' 'த்யௌ' என்னுஞ் சொல்லின் பின்னர், 'द्यौर्न' என நகாரங் கூறப்பட்டிருத்தலின் நகாரத்திற்கு உவமைப் பொருள் கொள்ளக் கிடந்தமை காண்க. (2)

குறிப்பு.—ஈண்டுப் பாடியத்திற் குறிப்பிட்ட 'நு' என்னுஞ் சொல் வேறு பிரதிகளிலிருக்கலாம்.

## மந்திரம் 3.

१ २र ३१ २ ३२ ३१ २र
167. आ तु न इन्द्र क्षुमन्तं चित्रं ग्राभꣳ संगृभाय ।
३ १ २र
महाहस्ती दक्षिणेन ॥ ३ ॥

இருக்கு 8-18-1.

ஆ து ந இந்த்ர க்ஷுமந்தம் சித்ரம் க்ராபம் ஸம்க்ருபாய ।
மஹாஹஸ்தீ தக்ஷிணேந ॥

அந்வயம்.

हे इन्द्र !, महाहस्ती, तु, नः, क्षुमन्तं, चित्रं, ग्राभं, दक्षिणेन, आसंगृभाय ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| महाहस्ती | மஹாஹஸ்தீ | பெருங் கைகளையுடைய (நீ) |
| तु | தூ | இப்போது |
| नः | நঃ | எங்கட்குக் கொடுத்தற்பொருட்டு, |
| क्षुमन्तं | க்ஷுமந்தம் | துதிக்கத்தக்கதும் |
| चित्रं | சித்ரம் | பலவகையானதும் |
| ग्राभं | க்ராபம் | கொள்ளத்தக்கதுமாகிய தனத்தை |
| दक्षिणेन | தக்ஷிணேந | வலக்கையால் |
| आसंगृभाय | ஆஸம்க்ருபாய | நேர்முகமாய் எடுப்பாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—3. குசீதோ கண்ணுவ ரிஷி.

இந்திர ! மகத்தான கைகளையுடைய நீ எங்கட்குக் கொடுத்தற் பொருட்டு, போற்றத்தக்கதும், பலவகைப்பட்டதும், கொள்ளற்பாலதுமாகிய தனத்தை வலக்கையால் இப்போதே ஒருமுகப்பட்டு எடுப்பாயாக. (3)

குறிப்பு.—வலக்கையால் (சோம) பாத்திரத்தை யெடுத்துச் சோமரசத்தை அருந்துவாயாக என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 4.

३ १ २र ३ १ २ ३ १ २ ३ २
168. अभि प्र गोपतिं गिरेन्द्रमर्च यथा विदे ।
३ २ ३ २ ३ १ २
सूनुꣳ सत्यस्य सत्पतिम् ॥ ४ ॥

இருக்கு 8-66-4.

அபி ப்ர கோபதிம் கிரேந்த்ரமர்ச யதா விதே ।
ஸூநும் ஸத்யஸ்ய ஸத்பதிம் ॥

### அந்வயம்.

गोपतिं, सत्यस्य, सूनुं, सत्पतिं, इन्द्रं, गिरा, यथा विदे, अभि प्र अर्च ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| गोपतिं | ஗ோபதிம் | கோக்கட்குத் தலைவனும் |
| सत्यस्य | ஸத்யஸ்ய | வேள்வியினுடைய |
| सूनुं | ஸூநும் | புத்திரனும் |
| सत्पतिं | ஸத்பதிம் | எசமானர்களைப் பரிபாலிப்பவனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| गिरा | கி³ரா | துதியால் |
| यथा विदे | யதா² விதே³ | துதியையும், வேள்விக்கு வருதலையும் அவன் அறியுமாறு |
| अभि अर्च | அபி⁴ அர்ச | முற்றும் மிகப் பூசிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—4. பிரியமேத ரிஷி.

கோக்கட்கு இறைவனாகிய இந்திரனைத் தோத்திரத்தால் (நீவிர்) இனிது பூசிப்பீர்களாக. அவ் விந்திரன் எவ்வாற்றால் தனது தோத்திர முறையை அறிகின்றனோ, அல்லது எவ் வாற்றால் வேள்வியை யுத்தேசித்து செல்லற்பாலது, என வுணர்கின்றனோ, அவ்வாற்றால் பூசிப்பீர்களாக என முடித்துக் கொள்க. எவ் வண்ணமாகிய இந்திரனை யெனின்? வேள்வியினுடைய புத்திரனை. ஈண்டுப் புத்திரனென்றது, அதில் மிக விருப்புடைமையால் புத்திரனென உபசரிக்கப்பட்டது. மற்றும், எசமானர்களைப் பாதுகாப்போனை. பூசிப்பீர்களாக என மேலே சேர்த்துக்கொள்க. (4)

குறிப்பு.—எனது அறிவளவில் சோமரசத்தின் தலைவனாகிய இந்திரனை வாக்கால் போற்றுகின்றேன் என்று கூறுகின்றது ஆங்கிலம்.

## மந்திரம் 5.

१ २ ३ १ २र ३ २ ३ १२३ १ २

169. कया नश्चित्र आ भुव दूती सदावृधः सखा ।

२ ३ १ २ ३ २

कया शचिष्ठया वृता ॥ ५ ॥

இருக்கு 4-31-1.

கயா நஶ்சித்ர ஆ பு⁴வ தூ³தீ ஸதா³வ்ருத⁴: ஸகா² ।

கயா ஶசிஷ்ட²யா வ்ருதா ॥

அந்வயம்.

सद्दावृधः, चित्रः, सखा, कया, ऊती नः आ भुवत्, शचिष्ठया, कया वृता ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **सदावृधः** | ஸதாவருய: | எக்காலும் வளர்ந்து கொண்டிருப்பவனும் |
| **चित्रः** | சித்ர: | விசித்திர குணமுடையோனும் |
| **सखा** | ஸகா | நண்பனுமாகிய இந்திரன் |
| **कया** | கயா | யாதானுமோர் |
| **ऊती** | ஊதீ | திருப்தியைச் செய்கின்ற கருமத்தால் |
| **नः** | ந: | எங்கட்கு முன் |
| **आ भुवत्** | ஆ ஹுவத் | தோன்றுவானாக. |
| **शचिष्ठया** | ஶசிஷ்டயா | அறிந்துசெய்த |
| **कया वृता** | கயா வருதா | யாதானுமொரு அநுட்டானத்தால் |
| **आ भुवत्** | ஆ ஹுவத் | நேரே வெளிப்படுவானாக. |

சாயண பாடியம்

*கண்டம்—6. இருக்கு—5. வாமதேவ ரிஷி.*

*என்றும் வளர்பவனும், பற்பல குணமுடையவனும், மித்திரனுமாகிய இந்திரன் யாதானுமோர் திருப்தியின் காரணத்தால் எங்களை முன்னிட்டுத் தோன்றுவானாக. மிக நன்குணர்ந்து அநுட்டிக்கப்பட்ட யாதேனுமொரு தற்காலத்திய கருமத்தாலும் முன் றோன்றுவானாக.* (5)

**குறிப்பு.**—எங்களுடைய மித்திரனும் எப்போதும் வளர்ப்பவனும், அநேக குணங்களை யுடையவனுமாகிய இந்திரன் தற்காலத்திய வேள்விக்கருமத்தை நடத்திக்கொண்டு காப்பாற்றுதற் பொருட்டு எங்களிடத்தி லிருப்பானாக என்பது ஆங்கிலம்.

மந்திரம் 6.

170. त्यमु वः सत्रासाहं विश्वासु गीर्ष्वायतम् ।
आच्या वयस्यूतये ॥ ६ ॥

இருக்கு 8-62-7.

த்யமு வ: ஸத்ராஸாஹம் விஶ்வாஸு கீர்ஷ்வாயதம் ॥
ஆச்யா வயஸ்யூதயே ॥

அந்வயம்.

हे स्तोतः!, सत्रासाहं, वः, विश्वासु, गीर्षु, आयतं, त्यं उ, ऊतये, आच्यावयसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे स्तोतः! | ஹெ ஸ்தோதஃ! | துதிப்போர்காள்! (நீவிர்) |
| सत्रासाहं | ஸத்ராஸாஹம் | பலவற்றைத் தாழ்மைப்படுத்துகின்ற |
| वः | வஃ | உங்களுடைய |
| विश्वासु | விஶ்வாஸு | எல்லாத் |
| गीर्षु | கீர்ஷு | தோத்திரங்களிலும் |
| आयतं | ஆயதம் | பரவியுள்ள |
| त्यं उ | த்யம் உ | அவ் விந்திரனையே |
| ऊतये | ஊதயே | எனது பாதுகாப்பின் பொருட்டு |
| आच्यावयसि | ஆச்யாவயஸி | நேர்முகமாக்கி அனுப்புவீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—6. சுருதகக்ஷ ரிஷி.

வேள்வித்தலைவன் துதிப்போர்களை யழைத்து இனிது கூறுகின்றான்:— துதிப்போர்காள்! நீவிர் பலவற்றைத் தாழ்மைப்படுத்துவனவும், அல்லது சத்துருக்களைத் தனது வலியா லடைந்து வெற்றிகொள்வனவுமான உங்களுடைய எல்லாத் தோத்திரங்களிலும் வியாபித்திருக்கின்ற (யாண்டும் இந்திரனே, துதிக்கப்படுகின்றா னாதலின் அத் துதிகளில் இந்திரன் பரவியுள்ளான்) அவ் விந்திரனையே எனது பாதுகாப்பின் பொருட்டு உங்களுடைய தோத்திரங்களால் எனது வேள்வியை நேரே அடையச் செய்வீர்களாக. (6)

**குறிப்பு.**—எல்லோர்களாலுந் துதிக்கப்பட்டவனும், எக்காலும் வெற்றியுள்ளவனுமாகிய இந்திரனை, எனதான்மாவே நீ உனது பாதுகாப்பின் பொருட்டு அடைவாயாக என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 7.

१२ ३ २ ३ १ २ ३ १ २र ३ १ २
171. सदसस्पति मद्भुतं प्रियमिन्द्रस्य काम्यम् ।
३ २ ३ १ २
सनिं मेधामयासिषम् ॥ ७ ॥

இருக்கு 1-18-6.

ஸதஸஸ்பதி மத்புதம் ப்ரியமிந்த்ரஸ்ய காம்யம் ।
ஸநிம் மேதாமயாஸிஷம் ॥

அந்வயம்.

मेधां, अद्भुतं, इन्द्रस्य प्रियं, काम्यं, सनिं, सदसस्पतिं, अयासिषम् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| मेधां | 𑌮𑍇𑌧𑌾𑌂 | கூரிய மதியை யடைதற் பொருட்டு |
| अद्भुतं | 𑌅𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 | வியப்பைத் தருவதும் |
| इन्द्रस्य प्रियं | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 | இந்திரனுக்குப் பிரியமானதும் |
| काम्यं | 𑌕𑌾𑌮𑍍𑌯𑌂 | விரும்பத்தக்கதும் |
| सनिं | 𑌸𑌨𑌿𑌂 | தனத்தைக் கொடுப்பதுமாகிய |
| सदसस्पतिं | 𑌸𑌦𑌸𑌸𑍍𑌪𑌤𑌿𑌂 | சதசற்பதி யென்னும் வேட்போரவைத்தலைமைத் தெய்வத்தை |
| अयासिषम् | 𑌅𑌯𑌾𑌸𑌿𑌷𑌮𑍍 | (யான்) அடைந்துள்ளேன். |

### சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—7. மேதாதிதி ரிஷி.

நுண்ணறிவைப் பெறுவதன்பொருட்டு யான் 'சதசற்பதி' என்னும் பெயருள்ள தேவதையை அடைந்தவனாயிருக்கின்றேன். எவ்விதமாகிய தேவதையை யெனின்? ஆச்சரியத்தைத் தரத்தக்கதும், சோம மருந்துவதிற் கூடவிருக்குந்தன்மையாற் பிரியமானதும், விரும்பத்தக்கதும், திரவியத்தை யளிப்பதுமாகிய இத்தன்மைய சதசற்பதி என்னுந் தேவதையை அடைந்துள்ளவனா யிருக்கின்றேன் என முடித்துக்கொள்க. (7)

ஈண்டு, सदसस्पतिं, என்பது வேட்போர் அவைத்தலைமைத் தெய்வத்தை.

குறிப்பு.—சபைத் தலைவனும் கீர்த்தியுடையவனும், விரும்பத்தக்கோனும் அழகுடையவனும் வேட்போனுக்கு அருகிலிருப்பவனுமாகிய இந்திரனைத் தனத்தின்பொருட்டு வேண்டுகின்றேன் என்பது ஆங்கிலம்.

### மந்திரம் 8.

२ ३ १ २ ३ २ ३२उ ३क२र ३१२
172. ये ते पन्था अधो दिवो येभिर्व्यश्वमैरयः ।
३१ २ ३ १२
उत श्रोषन्तु नो भुवः ॥ ८ ॥

𑌯𑍇 𑌤𑍇 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌅𑌧𑍋 𑌦𑌿𑌵𑍋 𑌯𑍇𑌭𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌶𑍍𑌵𑌮𑍈𑌰𑌯𑌃 ।
𑌉𑌤 𑌶𑍍𑌰𑍋𑌷𑌨𑍍𑌤𑍁 𑌨𑍋 𑌭𑍁𑌵𑌃 ॥

अங்வயம்.

हे इन्द्र !, दिवः, अधः, ये, पन्थाः, येभिः, विश्वं, ऐरयः, ते, उत, नः, भुवः, श्रोषन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| दिवः | திவ: | வானுலகிற்குக் |
| अधः | அத: | கீழே |
| ये पन्थाः | யெ பந்தா: | எந்த மார்க்கங்க ளிருக்கின்றன வோ, |
| येभिः | யெபி: | எம் மார்க்கங்களினால் |
| विश्वं | விச்வம் | உலகனைத்தையும் |
| ऐरयः | ஐரய: | அடைந்திருக்கின்றாயோ, |
| ते | தெ | அம் மார்க்கங்கள் தலைவர்களாற் றுதிக்கத்தக்கனவாம். |
| उत | உத | மற்றும் |
| नः | ந: | எங்களுடைய |
| भुवः | புவ: | உறைவிடங்களைத் |
| श्रोषन्तु | ச்ரொஷந்து | தலைவர்கள் கேட்பார்களாக. |

சாயண பாடியம்.

**கண்டம்—6. இருக்கு—8. வாமதேவ ரிஷி.**

(இந்திர !) வானுலகிற்குக் கீழாக எவ் வீழிகளிருக்கின்றனவோ, எவ் வழிகளால் உலகனைத்தையும் அடைந்திருக்கின்றாயோ, அவ் வழிகள் எசமானர்களாற் ஸ்தோத்திரம் பண்ணத்தக்கனவாம். ஈண்டுத் தோத்திரம் பண்ணத்தக்கன என்பது எஞ்சி நின்றது. மற்றும் நினது அநுக்கிரகத்தால் எசமானர்கள் எங்களுடைய நிவாசத்தானங்களைக் கேட்பார்களாக. (8)

**குறிப்பு.**—விரைவிலோடும் பரிபோல் சுவர்க்கத்தின் கீழ் எம் மார்க்கத்தில் நீ சென்றபோதிலும் பூமியில் எங்கள் துதிகள் நினது செவியிற்படத் தக்கனவாகுக என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 9.

३ १ २ ३ २ ३२३१२
173. भद्रं भद्रं न आ भरेषमूर्जं शतक्रतो ।
१२ ३१२
यदिन्द्र मृडयासि नः ॥ ९ ॥

இருக்கு 8-93-28.

ஹத்₃ரம் ஹத்₃ரம் ந ஆ ஹரேஷமூர்ஜம் ஶதக்ரதோ ।
யதி₃ந்த்₃ர ம்ருட₃யாஸி ந: ॥

அந்வயம்.

हे शतक्रतो !, इन्द्र !, भद्रं, भद्रं, नः, आभर, इषम् ऊर्जं, नः, यत्,
मृडयासि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे शतक्रतो ! | ஹே ஶதக்ரதோ ! | நூற்றுக்கணக்கான கருமங்களைச் செய்தோய் ! |
| इन्द्र ! | இந்த்₃ர ! | இந்திரனே ! |
| भद्रं भद्रं | ஹத்₃ரம் ஹத்₃ரம் | மிக நலந்தரும் தனத்தை |
| नः | ந: | எங்கட்கு |
| आभर | ஆஹர | நிறையத் தருவாயாக. |
| इषम् ऊर्जं | இஷம் ஊர்ஜம் | வலிவுள்ள அன்னத்தைத் தருவா யாக |
| नः | ந: | எங்களைச் |
| यद् मृडयासि | யத்₃ ம்ருட₃யாஸி | சுகப்படுத்துவையேல் (தன முத லியவைகளைத் தருவாயாக). |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—9. சுருதகக்ஷ ரிஷி.

நூற்றுக் கணக்கான கருமத்தோய் ! அல்லது நூற்றுக் கணக்கான மெய்யுணர்வுள்ளோய் ! இந்திரனே ! மங்களமிக்குடைய அல்லது இன்ப முண்டாக்குகின்ற தனத்தை எங்கட்குக் கொடுப்பாயாக. அங்ஙனமே அன்ன ரசத்தை அல்லது வலிவுள்ள அன்னத்தைக் கொடுப்பாயாக. எங்களைச் சுகப்படுத்துவையேல், திரவிய முதலியவைகளைத் தருவாயாக என்பதாம்.

ஈண்டு, மிருட என்னும் வடமொழிப் பகுதிச் சொல், சுகமென்னும் பொருண்மேனின்றது. (9)

மந்திரம் 10.

२ ३ १ २ ३ २ ३१ २र ३ १२
174. अस्ति सोमो अयꣳ सुतः पिबन्त्यस्य मरुतः ।
३ २ ३ १ २ ३ १ २
उत स्वराजो अश्विना ॥ १० ॥

இருக்கு 8-94-4

அஸ்தி ஸோமோ அயம் ஸுதஃ பிபந்த்யஸ்ய மருதஃ।
உத ஸ்வராஜோ அஸ்விநா ॥

அந்வயம்.

अयं, सोमः, सुतः, अस्ति, अस्य, स्वराजः, मरुतः, पिबन्ति, उत, अश्विना ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अयं | அயம் | இந்தச் |
| सोमः | ஸோமஃ | சோமரசம் |
| सुतः | ஸுதஃ | பிழியப்பட்டு |
| अस्ति | அஸ்தி | இருக்கின்றது. |
| अस्य | அஸ்ய | இச் சோமரசத்தை |
| स्वराजः | ஸ்வரா | தன்னொளியால் விளங்குகின்ற |
| मरुतः | மரு | மருத்துக்கள் |
| पिबन्ति | பிபந்தி | காலையில் அருந்துகின்றார்கள். |
| उत | உத | மற்றும் |
| अश्विना | அஸ்விநா | அசுவினி குமாரர்களும் காலையோமத்தில் அருந்துகின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—10. பிந்துர் ரிஷி.

முன்னிலிருக்கின்ற இச்சோமரசம் மருத்துக்களின் பொருட்டு எங்களால் பிழியப்பட்டிருக்கின்றது. இதை ஏற்றுக்கொண்டவிடத்து தனது பிரகாசத்தால் விளங்கப்பட்ட அதாவது பிறவற்றின் பிரகாசத்தால் விளங்கப்படாத என்பதாம். மருத்துக்கள் (வாயு தேவதைகள்) இச்சோமரசத்தை காலையில் அருந்துகின்றார்கள். இன்னும் அசுவினி குமாரர்களும் காலையிற் செய்யும் சவனத்தில் (கருமத்தில்) அருந்துகின்றார்கள் என்பதாம். (10)

## ஆறாவது கண்டம்

முற்றும்.

---

## ஏழாவது கண்டம்.

### பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—7.

பத்து மந்திரங்களாலானது.

#### மந்திரம் 1.

३१२ ३ २३१२ ३१ २र

175. ईङ्खयन्तीरपस्युव इन्द्रं जातमुपासते ।

३ १२ ३१२

* वन्वानासः सुवीर्य्यम् ॥ १ ॥

இருக்கு 10-153-1.

ஈங்க்₃யந்தீரபஸ்யுவ இந்த்₃ரம் ஜாதமுபாஸதே ।
வந்வாநாஸ: ஸுவீர்யம் ॥

அந்வயம்.

ईङ्खयन्तीः, अपस्युवः, जातं, (तं) इन्द्रं, उपासते, सुवीर्यं, वन्वानासः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| ईङ्खयन्तीः | ஈங்க்₃யந்தீ: | துதிவாயிலாக இந்திரனை யடைந்தவர்களும் |
| अपस्युवः | அபஸ்யுவ: | தமது கருமத்தை விரும்பியவர்களுமான இந்திரனுடைய மாதாக்கள் |
| जातं | ஜாதம் | வெளித்தோன்றிய |
| (तं) इन्द्रं | (தம்) இந்த்₃ரம் | (அவ்) விந்திரனைப் |
| उपासते | உபாஸதே | போற்றுகின்றார்கள். (மற்றும்) |
| सुवीर्यं | ஸுவீர்யம் | மிக வீரமுள்ள தனத்தை |
| वन्वानासः | வந்வாநாஸ: | அவ் விந்திரனிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளுகின்றார்கள். |

---

* भेजानासः, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—1. இந்திரமாதாக்கள், தேவ சாமயர்கள், ரிஷிகள்.

. துதி முதலியவைகளால் இந்திரனை யடைந்தவர்களும், தமது கருமத்தை விரும்பினவர்களுமான இந்திர மாதாக்கள், அதாவது இம் மந்திரத்தைக் கண்டவர்கள், வெளிப்பட்ட அவ் விந்திரனைக் குறித்துப் பணிசெய்கின்றார்கள். மற்றும் மிக வீரமுள்ள தனத்தை இந்திரனிடத்தினின்றும் பெற்றுக்கொள்ளுகின்றவர்களாகின்றார்கள். (1)

ஈண்டு இந்திர மாதாக்களென்பது இருடிகளை.

குறிப்பு.—நமது துதிகள் இந்திரனிடஞ் சென்று, தங்கி, அடைந்து. இருந்து ஆற்றலைப்பெற இந்திரனை வேண்டுகின்றன என்பது ஆங்கிலம்.

மந்திரம் 2.

१ २ ३ १ २र

176. *न कि देवा इनीमसि न क्या †योपयामसि ।

३ १२

मन्त्रश्रुत्यं चरामसि ॥ २ ॥

இருக்கு 10-134-1.

ந கி ஜெவா இநீமஸி ந க்யா யொவயாமஸி ।

மஙூஸ்ரூத்யம் வராமஸி ॥

அந்வயம்.

हे देवाः!, न कि इनीमसि, न कि योपयामसि, मन्त्रश्रुत्यं, चरामसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे देवाः ! | ஹெ ஜெவாः ! | தேவர்களே ! |
| न कि इनीमसि | ந கி இநீமஸி | (உங்கள் விஷயத்தில்) சிறிதுங் கெடுதல் செய்யோம். |
| न कि योपयामसि | ந கி யொவயாமஸி | மாறொழுக்கத்தால் மோகிக்கவும் செய்யோம். |
| मन्त्रश्रुत्यं | மஙூஸ்ரூத்யம் | உங்களுடைய வாக்கினின்றுங் கேட்கப்பட்ட கருமத்தை |
| चरामसि | வராமஸி | அனுட்டிக்கின்றோம். |

* 'न कि देवा 'इ.नीमसि' என்பன இருக்கு.

† पजोभिरपि कक्षेभिरत्राभिसंरभामहे என்பது இருக்கில் அதிக பாடம்.

சாயண பாடியம்.

*கண்டம்—7. இருக்கு—2. கோதா ரிஷி.*

*இந்திரன் முதலிய தேவர்காள்! உங்கள் விஷயத்தில் சிறிதும் துன்பஞ் செய்யோம், ஒழுக்கமில்லாததாலும், அல்லது மாறுபட்ட அனுட்டானத்தாலும் மோகிக்கவுஞ் செய்யோம், மற்றென்னெனில்? வேதவிதி வாக்கியங்களால் கூறப்பட்ட உங்களைப்பற்றிய கருமங்களை அனுட்டிக்கின்றோம்.* (2)

*ஈண்டு 'மாங்' என்னும் வடமொழிப் பகுதி, அகரமாய்க் குறுமகாரங் கெட்டு ஆகாரங்கூடி 'இநீமஸி' எனவாகி துன்பமென்னும் பொருளைத் தந்து நின்றது.*

## மந்திரம் 3.

३ १   २र  ३१२३ १२

177. *दोषो आगाद् बृहद्गाय द्युमद्गामन्नाथर्वण ।

३ २ ३ १   २ ३ १२

स्तुहि देवꣳ सवितारम् ॥ ३ ॥

அதர்வணம் 6-1-1.

ஷொஷொ ஆகா³த்³ ப்³ருஹத்³கா³ய த்³யுமத்³கா³மந்நாத²ர்வண ।
ஸ்துஹி ஷெவம் ஸவிதாரம் ॥

அந்வயம்.

हे बृहद्गाय!, द्युमद्गामन्, आथर्वण, दोषः, आगात्, सवितारं, देवं, स्तुहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे बृहद्गाय!** | ஹெ ப்³ருஹத்³கா³ய! | பெருங் கீதம் பாடுவோய்! |
| **द्युमद्गामन्!** | த்³யுமத்³கா³மந்! | ஒளியுடன் நடப்போய்! |
| **आथर्वण!** | ஆத²ர்வண! | அதர்வண ரிஷி சந்தானனே! (நீ) |
| **दोषः** | ஷொஷஃ | வேட்போர், எசமானன் என்னுமிவர்களுடைய பிழைகளால் யாதொரு தோஷம் |
| **आगात्** | ஆகா³த் | வருகின்றதோ, (அதை) நீக்குதற் பொருட்டு |
| **सवितारं देवं** | ஸவிதாரம் ஷெவம் | பிரேரகம், என்னுந் தேவதையைத் |
| **स्तुहि** | ஸ்துஹி | துதிப்பாயாக. |

---

* दोषो गाय बृहद्गाय द्युमद्धेहि आथर्वण देवं सवितारम्, *என்பது அதர்வணம்.*

## சாயண பாடியம்.

**கண்டம்—7. இருக்கு—3.** *தத்தியக் ஆதர்வண ரிஷி.*

பிருகத் என்னுங் கீதம் பாடுவோய்! பிரகாசத்தோடு செல்வோய்! அதர்வண ரிஷியின் சந்தானனே! என, இந்த ரிஷி தனதான்மாவையே அழைக்கின்றார். வேட்போர், எசமானன், என்பவர்களின் பிழையால் யாதாகினுஞ் சிறிது தோடம் வருமாகில் அதைப் போக்க 'பிரேகம்' என்னும் தேவதையை நீ துதிப்பாயாக. அல்லது இருளை நாசம் பண்ணும் தா தேவதை, அல்லது இராக்கதர்களைத் தகிக்கச் செய்யுஞ் சவிதா வதை வந்திருக்கின்றது. ஆதலின் அதர்வண ரிஷியின் சந்தான! நீ பிரு என்னுந் தோத்திரத்தைப் பாடுவாயாக. இத்தன்மைய பாடலைப் பாடும் னதான்மாவே! நீ விளக்கமுள்ள மற்றையத் துதியைப் பாடுவாயாக. எஞ்சியது மறித்தும் அன்பின் பொருட்டுக் கூறப்பட்டது என்பதாம். (3)

**குறிப்பு.**—வாமதேவ ரிஷி. இரவு நீங்கும் தருணத்தில் வந்துவிட்டேன். சவிதா தேவதையைப் பூசிப்பீர்களாக. சவிதா = உண்டாக்குகின்ற தேவதை என்பது ஆங்கிலம்.

### மந்திரம் 4.

३ २ ३ १ २र ३क २र ३ २ ३ २
178. **एषो उषा अपूर्व्या व्युच्छति प्रिया दिवः ।**
३ २ २ ३ २
**स्तुषे वामश्विना बृहत् ॥ ४ ॥**

இருக்கு 1-46-1.

ஏஷோ உஷா அபூர்வ்யா வ்யுச்சதி ப்ரியா திவ: ।
ஸ்துஷே வாமச்விநா ப்ருஹத் ॥

அந்வயம்.

प्रिया, अपूर्व्या, एषः, उषा, दिवः, व्युच्छति, अश्विनौ, वाम्, बृहत्, स्तुषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **प्रिया** | ப்ரியா | யாவர்கட்கும் பிரிய காரணமாகியதும் |
| **अपूर्व्या** | அபூர்வ்யா | முற்போதிலாததும் (இச்சமயத்திலுள்ளதும்) |
| **एषः** | ஏஷ: | எங்கட்குக் காணப்படுகின்றதுமாகிய இந்த |

| | | |
|---|---|---|
| उषा | உஷா | உஷா தேவதை |
| दिवः | திவః | வானுலகிலிருந்து வந்து |
| व्युच्छति | வ்யுச்சதி | இருட்டைப் போக்குகின்றது. (பிரகாசிக்கின்றது). |
| हे अश्विनौ ! | ஹே அஶ்விநௌ ! | அசுவினி குமாரர்களே ! |
| वाम् | வாம் | உங்களிருவரையும் |
| बृहत् | ப்ருஹத் | மிகவுந் |
| स्तुषे | ஸ்துஷே | துதிக்கின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—4. பிரஸ்கண்ணுவ ரிஷி.

எங்களால் காணப்பட்டதும், யாவர்கட்கும் பிரிய காரணமானதும், முந்திய நடு இரவு முதலிய காலங்களில் இராததும், அதாவது இப்போதிலுள்ளதுமாகிய உஷா தேவதை விண்ணுலகினின்று வந்து இருளைப் போக்குகின்றது. அசுவினி குமாரர்காள்! உங்களிருவரையும் உள்ளவாறு மிகத் துதிக்கின்றேன். (4)

## மந்திரம் 5.

१ २ ३ २ ३ १ २३ १ २र

179. इन्द्रो दधीचो अस्थभिर्वृत्राण्यप्रतिष्कुतः ।

३ १२ ३ १२र

जघान नवतीर्नव ॥ ५ ॥

இருக்கு 1-84-13.

இந்த்ரோ தயீசோ அஸ்தபிர்வ்ருத்ராண்யப்ரதிஷ்குதஃ ।
ஜகான நவதீர்நவ ॥

அந்வயம்.

अप्रतिष्कुतः, इन्द्रः, दधीचः, अस्थभिः, नव, नवतीः, वृत्राणि, जघान ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अप्रतिष्कुतः | அப்ரதிஷ்குதஃ | மாறுபட்ட சப்தமிலாத (பிறரால் வெல்லமுடியாத) |
| इन्द्रः | இந்த்ரஃ | இந்திரன் |
| दधीचः | தயீசஃ | அதர்வண மறையோதுந் ததீசி ரிஷியின் |
| अस्थभिः | அஸ்தபிஃ | தலை யெலும்புகளினால் |

| | | |
|---|---|---|
| नव | நவ | ஒன்பதாற் பெருக்கிய |
| नवतीः | நவதீஃ | தொண்ணூறு (810) |
| वृत्राणि | வ்ருத்ராணி | அசுரர்களைக் |
| जघान | ஜகாந | கொன்றனன். |

சாயண பாடியம்.

**கண்டம்—7. இருக்கு—5. கோதம ரிஷி.**

இதில் சாட்டியயாயனருடைய இதிகாசம் சொல்லப்படுகின்றது :—அதர்வண வேதியராகிய ததீசி ரிஷி வாழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டதினாலேயே அசுரர்கள் தோல்வி யடைந்துவிட்டார்கள். அவர் சுவர்க்கஞ் சென்றவிடத்து இப் பூவுலகம் அசுரர்களால் வியாபிக்கப்பட்டது. பின்னர் இந்திரன் அசுரர்களோடு போராட முடியாதவனாய், அந்த ரிஷியைத் தேடிச்செல்ல அவர் சுவர்க்கமடைந்தனர் எனக் கேள்விப்பட்டனன். கேட்டு இங்கே அவருடைய எலும்பு சிறிதேனும் மீந்திருக்கின்றதா? என அங்குள்ளார்களை வினவினன். அவர்கள் எந்தத் தலையினால் அசுவினி குமாரர்கட்கு மது வித்தையை உபதேசித்தாரோ, குதிரையின் றலை வடிவ, அந்தச் சிரசிருக்கின்றதென, இந்திரனுக்குக் கூறினார்கள். மற்றும் அது யாண்டுளதோ? என்பதை யாங்களறியோம் என்றுங் கூறிவிட்டனர். அது கேட்ட இந்திரன் அதைத் தேடுவீர்களாக, அல்லது, அதைத்தேட விரும்புவீர்களாக என்றான். அதைக் கேட்டுத் தேடியவிடத்து குருக்ஷேத்திரத்திலுள்ள, 'சர்யணாவத்' என்னும் புட்கரணியிற் கிடைத்தது. அதைக்கொண்டு அவருடைய எலும்புகளால் இந்திரன் அசுரர்களைக் கொன்றனன் என்பதாம்.

(மந்திரப் பொருள்) அன்னியர்களால் மாறுபட்ட வார்த்தை கூறப்படாத இந்திரன் அதர்வண வேதியராகிய ததீசி ரிஷியின் முதுகுமுதலிய விடங்களிலுள்ள எலும்புகளினால், தொண்ணூற்றை ஒன்பது முறையாகக் கொண்ட (அதாவது 810) அசுரர்களைக் கொன்றனன். அது வருமாறு:—மூவுலகத்திலுள்ள தேவர்களையும் வெல்லுதற்பொருட்டு அசுரமாயை முதலில் மூன்று வகையாகின்றது. அம் மூன்றும், இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் வேறுபாட்டால் அக்காலத்தவர்களைவெல்ல மூன்று வகையாகின்றது, மீண்டும் ஒவ்வொன்றும் முக்குணமுடையதாகின்றது, இவ்வாறு ஒன்பதாகின்றன. மீண்டும், உற்சாகமுதலிய மூன்று சத்திகளால் முக்குணமான விடத்து இருபத்தேழு (27) ஆகின்றன மறித்தும் முக்குணத்தால் எழுபத்தொன்று (71) ஆகின்றன. இவ்வாறு நான்குமுறை மூன்றாற் பெருக்கினமாயைகளால் பத்துத் திக்குகளிலும், ஒவ்வொன்றும் நிலைத்தவிடத்து (810-வகை) என்பது பொருந்துகின்றது. இவ் விதமாகிய ஆவரணங்களை, அல்லது அசுரக் கூட்டங்களைக் கொன்றுவிட்டனன் என்பதாம்.

(5)

## மந்திரம் 6.

२ उ ३ १ २र ३ १ २ ३ १ २

180. इन्द्रेहि मत्स्यन्धसो विश्वेभिः सोमपर्वभिः ।

३ १ २ ३ १ २र

महाँ३ अभिष्टिरोजसा ॥ ६ ॥

இருக்கு 1-9-1.

ஐஂத்ரேஹி மத்ஸ்யந்தஸோ விஶ்வேபிஃ ஸோமபர்வபிஃ ।
மஹாஂ அபிஷ்டிரோஜஸா ॥

### அந்வயம்.

हे इन्द्र !, एहि, विश्वेभिः, सोमपर्वभिः, अन्धसः, मत्सि, ओजसा, महान्, अभिष्टिः ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! நீ |
| एहि | ஏஹி | இப்போது வருவாயாக (வந்து) |
| विश्वेभिः | விஶ்வேபிஃ | எல்லாச் |
| सोमपर्वभिः | ஸோமபர்வபிஃ | சோமரஸமாகிய் |
| अन्धसः | அந்தஸஃ | அன்னங்களால் |
| मत्सि | மத்ஸி | களிப்படைவாயாக. (பின்னர்) |
| ओजसा | ஓஜஸா | ஆற்றலினால் |
| महान् | மஹாந் | மகானாகிச் |
| अभिष्टिः | அபிஷ்டிஃ | சத்துருவை யடக்குவோனாகுதி. |

### சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—6. மதுச்சந்த ரிஷி.

இந்திர ! இக் கருமத்தில் வருவாயாக, வந்து, சோமரசமாகிய அன்னங்களனைத்தாலுங் களிப்படைவாயாக. அதன் பின்னர், வலியால் பெரியோனாகிச் சத்துருக்களை அடக்குவாயாக. ஈண்டு ஆவாயாக என்பது எஞ்சி நின்றது. வலியினுடைய பெயர்கள் இருபத்தெட்டனுள் ஓஜ :—என்பதும் நிருத்தம் 2-9-ல் கூறப்பட்டிருத்தலின் ஈண்டு ஓஜ :—என்பது வலியெனக் கொள்ளப்பட்டது. (6)

## மந்திரம் 7.

१ २र ३ २ ३२ ३ १ २
181. आ तू न इन्द्र वृत्रहन्नस्माकमर्द्धमागहि ।
३ २ २ १ २ २ १ २
महान् महीभिरूतिभिः ॥ ७ ॥

இருக்கு 4-32-1.

ஆ தூ ந இந்த்ர வ்ருத்ரஹந்நஸ்மாகமர்த்தமாகஹி ।
மஹாந் மஹீபிரூதிபி: ॥

அந்வயம்.

हे वृत्रहन्!, इन्द्र!, नः, आ तु, महान्, महीभिः, ऊतिभिः, अस्माकं, अर्द्धं, आगहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वृत्रहन्! | ஹே வ்ருத்ரஹந்! | சத்துருவைக் கொல்லுகின்ற |
| इन्द्र! | இந்த்ர! | இந்திரனே! (நீ) |
| नः | ந: | எமக்கருகில் |
| आ तु | ஆ து | விரைவில் வருவாயாக. |
| महान् | மஹாந் | மகானுகிய நீ |
| महीभिः | மஹீபி: | பெரிய |
| ऊतिभिः | ஊதிபி: | பாதுகாப்புகளுடன் |
| अस्माकं | அஸ்மாகம் | எங்களுக்குச் |
| अर्द्धं | அர்த்தம் | சமீபத்தில் |
| आगहि | ஆகஹி | வருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—7. வாமதேவ ரிஷி.

சத்துருக்களை நாசம் பண்ணும் இந்திரனே! நீ, எங்களைக் குறித்துச் சீக்கிரம் வருவாயாக. இந்திர! பெரியோனுகிய நீ முற்றுங் காப்பாற்றுவதோடு எங்கட்குச் சமீபமாயும் வருவாயாக. (7)

### மந்திரம். 8.

२ ३ १२          ३२३   ३ १२

**182. ओजस्तदस्य तित्विष उभे यत्समवर्तयत् ।**

२ ३ १ २३   १२

**इन्द्रश्चर्मेव रोदसी ॥ ८ ॥**

இருக்கு 8-6-5.

𑌓𑌜𑌸𑍍𑌤𑌦𑌸𑍍𑌯 𑌤𑌿𑌤𑍍𑌵𑌿𑌷 𑌉𑌭𑍇 𑌯𑌤𑍍𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑍍 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑌰𑍍𑌮𑍇𑌵 𑌰𑍋𑌦𑌸𑍀 ॥

#### அங்வயம்.

**यत्, इन्द्रः, उभे, रोदसी, चर्म इव, समवर्तयत्, अस्य, तत्, ओजः तित्विषे ॥**

#### பதவுரை.

| | | |
|---|---|---|
| **यत्** | 𑌯𑌤𑍍 | எவ் வலியினால் |
| **इन्द्रः** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 | இந்திரன் |
| **उभे रोदसी** | 𑌉𑌭𑍇 𑌰𑍋𑌦𑌸𑍀 | வானுலகு மண்ணுலகிரண்டையும் |
| **चर्म इव** | 𑌚𑌰𑍍𑌮 𑌇𑌵 | தோலைப்போல் |
| **समवर्तयत्** | 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑍍 | அடக்கிக்கொண்டிருக்கின்றானே, |
| **अस्य** | 𑌅𑌸𑍍𑌯 | இவ் விந்திரனுடைய |
| **तत्** | 𑌤𑌤𑍍 | அந்த |
| **ओजः** | 𑌓𑌜𑌃 | ஆற்றல் |
| **तित्विषे** | 𑌤𑌿𑌤𑍍𑌵𑌿𑌷𑍇 | விளக்கமாயிற்று. |

#### சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—8. வத்ச ரிஷி.

இவ் விந்திரன் எவ் வலியினால் வானையு மண்ணையும் சருமம்போல் இனிது தன் வயப்படுத்திக்கொண்டிருக்கின்றானே, அவ் வன்மை விளங்கிற்று. அதாவது ஒருவன் ஒரு தோலை ஓர்கால் விரித்து ஒருபோது சுருட்டுவதுபோல (வானும் மண்ணும்) அவன் வயமாகவே ஆகிவிட்டன என்பது பொருள்.

குறிப்பு:—'த்விஷ' என்னும் பகுதி விளக்கப் பொருளினின்றது.

## மந்திரம் 9.

३ १२ ३ ३ १२ २ २
183. अयमु ते समतसि कपोत इव गर्भधिम् ।
२ ३ १ २
वचस्तच्चिन्न ओहसे ॥ ९ ॥

இருக்கு 1-30-4.

𑌅𑌯𑌮𑍁 𑌤𑍇 𑌸𑌮𑌤𑌸𑌿 𑌕𑌪𑍋𑌤 𑌇𑌵 𑌗𑌰𑍍𑌭𑌧𑌿𑌮𑍍 ।
𑌵𑌚𑌸𑍍𑌤𑌚𑍍𑌚𑌿𑌨𑍍𑌨 𑌓𑌹𑌸𑍇 ॥

### அந்வயம்.

(हे इन्द्र !,) अयं उ, ते, कपोतः, गर्भधिं, इव, समतसि, तच्चित्, नः, वचः, ओहसे ॥

### பதவுரை.

| (हे इन्द्र !) | (𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 !) | (இந்திரனே !) |
|---|---|---|
| अयं उ | 𑌅𑌯𑌂 𑌉 | காணப்படும் இச் சோமரசம் |
| ते | 𑌤𑍇 | நினக்குத் தேடிவைக்கப்பட்டிருக்கின்றது. (நீ சோமரசத்தை) |
| कपोतः | 𑌕𑌪𑍋𑌤𑌃 | ஆண்புறவு |
| गर्भधिं इव | 𑌗𑌰𑍍𑌭𑌧𑌿𑌂 𑌇𑌵 | சூல்கொண்ட பெண்புறவையடைவதொப்ப |
| समतसि | 𑌸𑌮𑌤𑌸𑌿 | எப்பொழுதும் நன்கு அடைகிறாய். |
| तच्चित् | 𑌤𑌚𑍍𑌚𑌿𑌤𑍍 | அக்காரணத்தாலே |
| नः | 𑌨𑌃 | எங்களுடைய |
| वचः | 𑌵𑌚𑌃 | வார்த்தையையும் |
| ओहसे | 𑌓𑌹𑌸𑍇 | அடைகின்றாய். |

### சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—9. சுனச்சேப ரிஷி.

இந்திரனே ! நீ கருப்பங்கொண்ட பெண்புறவை ஆண்புறவு அடைவது
ல எச் சோமரசத்தை எப்போதும் இனிது பெறுகின்றாயோ, அச்
சந் தேடப்பட்டது. அக்காரணத்தானே எங்களுடைய வாக்கும்
டைகின்றது. (9)

### மந்திரம் 10.

२ ३ १ २ ३२ ३ १ २ ३१ २ ३२
184. वात आ वातु भेषजꣳ शम्भु मयोभु नो हृदे ।
२ ३ १२
प्र न आयूꣳषि तारिषत् ॥ १० ॥

இருக்கு 10-186-1.

வாத ஆ வாது பேஷஜம் ஶம்பு மயோபு நோ ஹ்ருதே ।
ப்ர ந ஆயூம்ஷி தாரிஷத் ॥

அந்வயம்.

वातः, नः, हृदे, शम्भु, मयोभु, भेषजं, आ वातु, नः, आयूंषि, प्रतारिषत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वातः | வாதஃ | காற்று |
| नः | நஃ | எங்களுடைய |
| हृदे | ஹ்ருதே | உள்ளத்திற்கு |
| शम्भु | ஶம்பு | வியாதியை யொழிப்பதும் |
| मयोभु | மயோபு | சுகந்தருவதுமாகிய |
| भेषजं | பேஷஜம் | மருந்தையேனும், அல்லது நீரையேனும் |
| आ वातु | ஆ வாது | அடைவிக்குக. (மற்றும்) |
| नः | நஃ | எங்களுடைய |
| आयूंषि | ஆயூம்ஷி | ஆயுட்களை(யும்) |
| प्रतारिषत् | ப்ர தாரிஷத் | வளர்ப்பதாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—10. வாதாயன உல்ல ரிஷி:

காற்றானது எங்களுடைய இருதயத்திற்கு மருந்தையேனும் அல்லது தண்ணீரையேனுங் கொண்டுவருக. எத்தன்மையதை யெனின்? வியாதியை நீக்கிச் சுகமுண்டாக்கத்தக்கதை. கொண்டுவருக என்பதுடன் சேர்த்துக் கொள்க. அன்றியும் எங்களுடைய ஆயுளை வளர்க்குக. (10)

## ஏழாவது கண்டம்.

முற்றும்.

## எட்டாவது கண்டம்

### பிரபாடகம்—2. அத்தியாயம்—2. கண்டம்—8.

ஒன்பது மந்திரங்களாலானது.

#### மந்திரம் 1.

१ २र ३ १२ ३ १ २ ३ २
185. यꣳ रक्षन्ति प्रचेतसो वरुणो मित्रो अर्य्यमा ।
२ ३ १ २ ३ १२
*न किः स दभ्यते जनः ॥ १ ॥

இருக்கு 4-16-3.

யம் ரக்ஷந்தி ப்ரசேதஸோ வருணோ மித்ரோ அர்ய்யமா ।
ந கி: ஸ தப்யதே ஜந: ॥

அந்வயம்

प्रचेतसः, वरुणः, मित्रः, अर्यमा, यम्, रक्षन्ति, सः, जनः, न किः दभ्यते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| प्रचेतसः | ப்ரசேதஸ: | உயர்ந்த ஞானமுடைய |
| वरुणः | வருண: | வருணதேவன் |
| मित्रः | மித்ர: | மித்திர தேவன் |
| अर्यमा | அர்யமா | அரியமா தேவதை (என்னு மிவர்கள்) |
| यं | யம் | எவ் வேள்வித் தலைவனைக் |
| रक्षन्ति | ரக்ஷந்தி | காப்பாற்றுகின்றனரோ, |
| सः जनः | ஸ: ஜந: | அவ் வேள்வித்தலைவனுகிய மனிதன் |
| न किः दभ्यते | ந கி: தப்யதே | எவற்றாலேனும் துன்புறுத்தப் படான். |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—1. கண்ணுவ ரிஷி.

மெய்யுணர்வையுடைய வருணன் முதலிய தேவர்கள், எவ்வெசமானனைக் காப்பாற்றுகின்றனரோ? அவ்வெசமானன் எவற்றாலும் துன்பமடையான் என்பதாம். (1)

---

* नूचित्स, என்பது இருக்கு.

## மந்திரம் 2.

३ २उ ३ १ २ ३ २ ३ १ २२३२
186. गव्योषु णो यथा पुराश्वयोत रथया ।
३ २ ३ १ २
*वरिवस्या महोनाम् ॥ २ ॥

நிறைக்கின்றன,

இருக்கு 8-64-10.

஗வ்யோஷு ணோ யதா புராஶ்வயோத ரதயா ।
வரிவஸ்யா மஹோநாம் ॥

அந்வயம்.

(हे इन्द्र !,) यथा, पुरा, नः, सु गव्या, उ, अश्वया, उत, रथया, महोनां, वरिवस्या ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे इन्द्र !) | (ஹே இந்த்ர !) | (இந்திரனே ! நீ) |
| यथा | யதா | எவ்வண்ணம் |
| पुरा | புரா | முன்னர் எங்கள் வேள்வியில் பசு முதலியவற்றைக் கொடுப்பதற்கு வந்ததுபோல் இப்போதும் |
| नः | நঃ | எங்கட்கு |
| सु गव्या | ஸு கவ்யா | நல்ல பசுவைக் கொடுக்கவேண்டுமென்ற இச்சையாலும் |
| उ | உ | மற்றும் |
| अश्वया | அஶ்வயா | குதிரையைக் கொடுக்கவேண்டுமென்னும் இச்சையாலும் |
| उत | உத | அன்றியும் |
| रथया | ரதயா | தேரைக் கொடுக்கவேண்டுமென்னும் இச்சையாலும் |
| महोनां | மஹோநாம் | கீர்த்தியைத் தருந் தனங்களைக் கொடுப்பதற்கும் |
| वरिवस्या | வரிவஸ்யா | வருவாயாக. |

---

* वरिवस्य महामह, என்பது இருக்கு.

## சாயண பாடியம்.

இருக்கு—2. வச்ச ரிஷி.

ங்கட்கு ஆவைத் தரவேண்டுமென்னும் இச்சையால் பள்ளியின்கண் முன்னர் வந்தனை, அதுபோல் இப்போதும் —பசுவைக் கொடுக்கும் பொருட்டு வருவாயாக. பசுவைக் கொடுக்கவேண்டுமென்னும் விருப்பத்தால் மாத்திரமன்று, மற்றோ, அசுவத்தையுந் தரவேண்டு மென்னு மிச்சையினாலும் வருவாயாக. அஃதன்றியும், இரதங் கொடுக்கவேண்டு மென்னும் விருப்பத்தானும் வருவாயாக. மற்றும் பெருங் கீர்த்தியைத் தரும் தனத்தைக் கொடுத்தற் பொருட்டும் வருவாயாக. இவைகளைக் கொடுப்பாயாக என்பது பொருள். (2)

**குறிப்பு** :—பசு, குதிரை, தேர், என்பவைகளைப் பெற்றுக்கொள்ள விருப்பமுள்ள நாங்கள் முன்போல நின்னைத் துதிக்கின்றோம். எனெனின்? அவி கொடுப்போர்களால் நீ துதிக்கத்தக்கோனு யிருக்கின்றாய் ஆதலின் என்பது ஆங்கிலம்.

### மந்திரம் 3.

३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २
187. इमास्त इन्द्र पृश्नयो घृतं दुहत आशिरम् ।
३ २ ३ १ २ ३ १ २
एनामृतस्य पिप्युषीः ॥ ६ ॥

இருக்கு 8-6-19.

ஐமாஸ்த ஐந்த்ர ப்ருஸ்னயோ க்ருதம் து³ஹத ஆஸிரம் ।
ஏனாம்ருதஸ்ய பிப்யுஷீ: ॥

அங்வயம்.

हे इन्द्र !, ते, ऋतस्य, पिप्युषीः, इमाः, पृश्नयः, घृतं, एनां, आशिरं, दुहते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| ते | தே | உன்னுடைய |
| ऋतस्य | ருதஸ்ய | சத்தியத்தை அல்லது வேள்வியை |
| पिप्युषीः | பிப்யுஷீ: | விருத்தி பண்ணப்பெற்ற |
| इमाः | இமா: | இந்த |
| पृश्नयः | ப்ருஸ்னய: | நல்ல நிறமுடைய கோக்கள் |

| | | |
|---|---|---|
| **घृतं** | வ்ருதம் | பொங்குந் தன்மையுள்ள |
| **एनां** | ஏநாம் | இந்தப் |
| **आशिरं** | ஆஶிரம் | பாலே |
| **दुहते** | து³ஹதே | (பாத்திரத்தில்) நிறைக்கின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—3. வத்ச ரிஷி.

இந்திர! நினது சம்பந்தமுள்ள நன்னிறமுடைய இந்தக் கோக்கள் பொங்குந் தன்மையுள்ள பாலேப் பாத்திரம் நிறையக் கறக்கின்றன. நன்னிறப் பசுக்கள் எத்தன்மையன வெனின்? சத்தியத்தை அல்லது இந்திரனுடைய வேள்வியை வளர்க்கத்தக்கன என்பதாம். (3)

குறிப்பு.—சோமரசமும் வெண்ணெயும் எடுக்குமிடத்தில் பாடப்படும் பாடல்கள் நினக்காகுக என்பது ஆங்கிலம்.

மந்திரம் 4.

३ २ ३ १ २ ३ १ २र

188. **अया धिया च गव्यया पुरुणामन् पुरुष्टुत ।**

१ २र ३ १ २

**यत्सोमे सोम *आभुवः ॥ ४ ॥**

இருக்கு 8-6-91.

அயா தி⁴யா ச க³வ்யயா புரூணாமந் புருஷ்டுத ।
யத்ஸோமே ஸோம ஆபு⁴வ꞉ ॥

அந்வயம்.

पुरुणामन्!, पुरुष्टुत!, सोमे सोमे, यद्, आभुवः, गव्यया, अया, धिया ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे पुरुणामन्!** | ஹே புரூணாமந்! | பல நாமங்களையுடையோய்! |
| **पुरुष्टुत!** | புருஷ்டுத! | பல்லோரால் றுதிக்கப்படுகின்றோய்! இந்திர! |
| **सोमे सोमे** | ஸோமே ஸோமே | எமது சோமயாகமனைத்திலும் |
| **यद्** | யத் | எக்கால் |
| **आभुवः** | ஆபு⁴வ꞉ | அதையருந்த வருவையோ, அப்போது |

* आ भवः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| गव्यया | மவ்யயா | "நமக்குப் பசுக்கள் வேண்டும்" என்னும் |
| अया | அயா | இந்தப் |
| धिया | யியா | புத்தியோடு கூடியவர்களாவோம். (பசு தன முதலியவைகளை யுடைத்தானவர்களாவோம்). |

சாயண பாடியம்.

**கண்டம்—8.** இருக்கு—4. சுருதககக்ஷ ரிஷி.

சக்கரன், விருத்திரனைக் கொன்றோன், என்பது முதலிய பல நாமங்களை யுடையோய்! அல்லது பலராலுந் தோத்திரம் பண்ணப்படுவோய்! இந்திரனே! என்னுடைய சோமயாகமனைத்திலும், நீ எப்போது அதை யருந்துவான் வருவையோ, அப்போது நாங்கள் எம் பொருட்டுக் கோக்களை விரும்பும் புத்தியுடையவர்களாவோம். நீ சோமரசங் குடித்தவிடத்து யாங்கள் கோக்கள் முதலியவைகளை யுடையவர்களாவோம் என்பது பொருள். (4)

**குறிப்பு.**—ணண்டு நமயதி, துதிக்கின்ற தேவதையிடம் நயதி - கொண்டு போகின்றது ஆதலின் நாமம் என்பது தோத்திரமாம்.

மந்திரம் 5.

३ २ ३ १२ ३ १ २ ३ १ २
189. पावका नः सरस्वती वाजेभिर्वाजिनीवती ।
३ १ २ ३ १ २
यज्ञं वष्टु धिया वसुः ॥ ५ ॥

இருக்கு 8-45-26.

வாவகா ந꞉ ஸரஸ்வதீ வாஜெபி⁴ர் வாஜிநீவதீ ।
யஜ்ஞம் வஷ்டு யியா வஸு꞉ ॥

அந்வயம்.

पावका, वाजिनीवती, धिया वसुः, सरस्वती, वाजेभिः, नः, यज्ञं, वष्टु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पावका | வாவகா | பவித்திரம் பண்ணுபவரும் |
| वाजिनीवती | வாஜிநீவதீ | அன்னந்தருஞ் சத்தியானவரும் |
| धिया वसुः | யியா வஸு꞉ | கருமத்தாலடையுந் தனத்திற்குக் காரண வடிவருமான |
| सरस्वती | ஸரஸ்வதீ | சரஸ்வதி தேவியார் |

| | | |
|---|---|---|
| वाजेभिः | வாஜெபிஃ | கொடுக்கத்தக்க அன்னங்களோடு |
| नः | நஃ | எங்களுடைய |
| यज्ञं | யஜ்ஞம் | வேள்வியை |
| वष्टु | வஷ்டு | விரும்புவாராக. (மற்றும் அதை முடித்துவைப்பாராக.) |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—5. மதுச்சந்த ரிஷி.

கலைமகளாந் தேவியார் அவிகளென்னும் அன்னங்களான நிமித்தங்களோடு, அல்லது, எசமானர்கள் கொடுக்கத்தக்க அன்னங்களான நிமித்தங்களோடு எம்முடைய வேள்வியை விரும்புவாராக. அதாவது நடத்துவிப்பாராக என்பது பொருள். கலைமடந்தை சுத்தன்மையரெனின்? பவித்திரம் பண்ணுபவர். அன்னமுள்ள கிரியையுடையார். கருமத்தாலடையத்தக்க தனத்திற்கு நிமித்தமானவர். (5)

இம்மந்திரத்திற்கு யாஸ்க முனிவரும் நிருக்தத்தில் இவ்வாறே பொருள் கூறியுள்ளார்.

ஐதரேய ஆரண்யகாண்டச் சுருதியாலும் இவ்வாறு உரை கூறப்பட்டுள்ளது.

மந்திரம் 6.

२ ३ १ २र ३ २उ ३ १ २
190· क इमं नाहुषीष्वा इन्द्रꣳ सोमस्य तर्पयात् ।
२ ३ २३ १ २
स नो वसून्या भरात् ॥ ६ ॥

க இமம் நாஹுஷீஷ்வா இந்த்ரம் ஸோமஸ்ய தர்பயாத் ।
ஸ நோ வஸூந்யா பராத் ॥

அந்வயம்.

नाहुषीषु, कः, इमं इन्द्रं, सोमस्य, तर्पयात्, सः, नः, वसूनि, आभरत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| नाहुषीषु | நாஹுஷீஷு | மநுடப்பிறப்பினுள் |
| कः | கஃ | எவன் |
| इमं इन्द्रं | இமம் இந்த்ரம் | இவ்விந்திரனைச் |
| सोमस्य | ஸோமஸ்ய | சோமரசத்தைக் கொண்டு |

| | | |
|---|---|---|
| तर्पयात् | தர்பயாத் | திருப்திபண்ண வல்லான் ? |
| सः | ஸ: | அத் தன்மைய இந்திரன் |
| नः | ந: | எங்கள் வேள்வியில் திருப்தனையத் |
| वसूनि | வஸூநி | தனங்களைக் |
| आभरत् | ஆபரத் | கொடுப்பானாக. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—6. வாமதேவ ரிஷி.

மனுடப் பிறப்பினுள் இவ் விந்திரனைச் சோமரசத்தால் திருப்திபண்ண (பிரியமுண்டாக்க) வல்லார் யாவர்? (ஒருவரும் இலர் என்பதாம்), அத்தன்மைய, (அதாவது மனிதர்களாற் பிரியப்படுத்த முடியாத) அவ் விந்திரன் எங்களுடைய வேள்வியில் திருப்தியுடையனாய்த் தனங்களைக் கொண்டுவந்து கொடுப்பானாக என்பது பொருள். (6)

குறிப்பு :—சண்டு நகுஷ என்பது மனிதர் பெயர் என, 2-3-9-ல் நிருக்தங் கூறுகின்றது. ஆதலின் மனுடப் பிறப்பினுள் எனப்பட்டது.

## மந்திரம் 7.

१ २ ३ २उ ३ २ ३ २ ३ १ २ ३२
191. आ याहि सुषुमा हि त इन्द्र सोमं पिबा इमम् ।
२उ ३१ २ ३ १२
एदं बर्हिः सदो मम ॥ ७ ॥

இருக்கு 1-7-1

ஆ யாஹி ஸுஷுமா ஹி த இந்த்ர ஸோமம் பிபா இமம் ।
ஏதம் பர்ஹி: ஸதோ மம ॥

அந்வயம்.

हे इन्द्र !, आयाहि, ते, सुषुमा हि, इमं, सोमं, पिब, मम, इदं, बर्हिः, आ सदः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! (நீ) |
| आयाहि | ஆயாஹி | வருவாயாக. |
| ते | தே | நினக்கு |
| सुषुमा हि | ஸுஷுமா ஹி | யாம் சோமரசத்தைப் பிழிந்துள்ளோம் |

| | | |
|---|---|---|
| इमं | ஊ௨ம் | இந்தச் |
| सोमं | ஸொமம் | சோமரசத்தை |
| पिब | விப | அருந்துவாயாக. (அருந்தி) |
| मम | ௨௨ | எமது |
| इदं | ஊ௫ம் | இந்த |
| बर्हिः | பஹி ௪ஃ | வேதிகையில் விரித்துள்ள தருப்பையின் மீது |
| आसदः | ஆஸ௫ஃ | உட்காருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—7. இரிமீட ரிஷி.

இந்திர! நீ வருவாயாக. நாங்கள் நின் பொருட்டு உண்மையில் சோமரசம் பிழிந்து வைத்திருக்கின்றோம். அத்தகைய இச் சோமரசத்தை அருந்துவாயாக. அருந்திவிட்டு எமது வேள்வியின் வேதிகையில் நினக்கு விரித்து வைத்திருக்கும் தருப்பையின் மீது இனிது உட்காருவாயாக. (7)

## மந்திரம் 8.

१ २ ३ १२र ३२ ३ १ २ ३ २

192. महि त्रीणामव * रस्तु द्युक्षं मित्रस्यार्यम्णः ।

३ २३ १२

दुराधर्षं वरुणस्य ॥ ८ ॥

இருக்கு 10-185-1.

௨ஹி த்ரீணாமவஉஸ்து ௫்யுக்ஷம் மித்ரஸ்யாயம்ணஃ ।
௫ுராயஷம் வருணஸ்ய ॥

அந்வயம்.

मित्रस्य, अर्यम्णः, वरुणस्य, त्रीणां, द्युक्षं, दुराधर्षं, महि, अवः, अस्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मित्रस्य | மித்ரஸ்ய | மித்திரதேவன் |
| अर्यम्णः | அயம்ணஃ | அரிய மாதேவன் |
| वरुणस्य | வருணஸ்ய | வருண தேவன் என்னும் |
| त्रीणां | த்ரீணாம் | (இம்) மூவர்களுடைய |
| द्युक्षं | ௫்யுக்ஷம் | ஒளியானது, |

---

* अवोस्तु, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| दुराधर्षं | துராதர்ஷம் | பிறராற் கெடுக்கமுடியாத |
| महि | மஹி | பெரிய |
| अवः | அவঃ | பாது காப்பாக |
| अंस्तु | அஸ்து | (எமக்கு) இருக்குக. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—8. வாருணி சத்தியதிருதி ரிஷி.

மித்திரன், அரியமா, வருணன், என்னும் இம் மூன்று தேவர்களின் பேரொளியானது, அதாவது பிறராற் கெடுக்க முடியாத முழுப் பிரகாசம் எங்கட்கு பெரும் பாதுகாப்பாக இருக்குக. (8)

அவ: என்பது சந்தம் பற்றி அவர: என வந்தது.

மந்திரம் 9.

१ २ ३ १ २
193. त्वावतः पुरुवसो वयमिन्द्र प्रणेतः ।
१ २
स्मसि स्थातर्हरीणाम् ॥ ९ ॥

இருக்கு 8-46-1.

த்வாவத: புருவஸோ வயமிந்த்ர ப்ரணேத: ।
ஸ்மஸி ஸ்தாதர்ஹரீணாம் ॥

அந்வயம்.

हे पुरुवसो !, प्रणेतः, हरीणां, स्थातः, इन्द्र !, त्वावतः, वयं, स्मसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पुरुवसो ! | ஹே புருவஸோ ! | மிகுந்த தனமுடையோய் ! |
| प्रणेतः | ப்ரணேத: | கருமத்தினின்றும் கரையேற்றி வைப்போனும் |
| हरीणां | ஹரீணாம் | அரி, என்னுங் குதிரைகளுக்கு |
| स्थातः | ஸ்தாத: | இறைவனுமாகிய |
| इन्द्र ! | இந்த்ர ! | இந்திரனே ! |
| वयं | வயம் | நாங்கள் |
| त्वावतः | த்வாவத: | நின்னுடையவர்களாக |
| स्मसि | ஸ்மஸி | இருக்கின்றோம். |

சாயண பாடியம்.

**கண்டம்—8. இருக்கு—9. வத்ச ரிஷி.**

*மிகுந்த தனமுடைய இந்திரனே! அரி, என்னுங் குதிரைகளுக்கு இறைவனும், கருமங்களின் கரையைக் கடக்கச் செய்வோனுமாகிய இந்திர! உனக்கொப்புள்ளார் வேறொருவருமின்மையால் நாங்கள் நின்னுடையவர்களாகவே இருக்கின்றோம்.* (9)

## எட்டாவது கண்டம்

முற்றும்.

---

# இரண்டாவது பிரபாடகம்

முடிந்தது.

---

## ஒன்பதாவது கண்டம்.

**பிரபாடகம்—3. அத்தியாயம்—2. கண்டம்—9.**

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

१ २ ३ १ २ ३ १ २र

194. **उ त्वा मदन्तु *सोमाः कृणुष्व राधो अद्रिवः ।**

१२ ३ १२

**अव ब्रह्मद्विषो जहि ॥ १ ॥**

இருக்கு 6-6-1.

உ த்வா மதந்து ஸோமா: க்ருணுஷ்வ ராதோ அத்ரிவ: ।
அவ ப்ரஹ்மத்விஷோ ஜஹி ॥

அந்வயம்.

हे इन्द्र!, त्वा, सोमाः, उत्, मदन्तु, अद्रिवः, राधः, कृणुष्व, ब्रह्मद्विषः, अवजहि ॥

---

* स्तोमा, என்பது இருக்கு.

சத்துருக்களால் மறைப்புண்டான விடத்தில் அவர்களை வெல்வதற்கு அழைக்கின்றார்கள். அஃதன்றியும், குதிரைகளைக் கட்டியிருக்குந் தறிகளிலும் அதாவது, போர்புரிய விரும்புவோர்களும், நின்னையே அழைக்கின்றார்கள். இதனால் யாங்களுமழைக்கின்றோம் என்பது பொருள். (2)

குறிப்பு.—யாங்கள் அன்னத்திற்கும் தனத்திற்கும் நின்னை அழைக்கின்றோம். ஏனையோர்கள் மழையின் பொருட்டும் சத்துருவை வெல்வதற்கும் அழைக்கின்றார்கள் என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 3.

३ १ २र ३ १२ ३ १ २ ३ १ २ ३ २

235. **अभि प्र वः सुराधसमिन्द्रमर्च यथाविदे ।**

१ २ ३ २ ३ १ २ ३ १२ ३१ २ ३ १ २

**यो जरितृभ्यो मघवा पुरूवसुः सहस्रेणेव शिक्षति ॥ ३ ॥**

இருச்கு 8-49-1.

அபி ப்ர வ꞉ ஸுராதஸமிந்த்ரமர்ச்ச யதாவிதே ।
யோ ஜரித்ருப்யோ மகவா புரூவஸு꞉ ஸஹஸ்ரேணேவ
[ஶிக்ஷதி ॥

அந்வயம்.

**पुरूवसुः, यः, मघवा, जरितृभ्यः, सहस्रेण इव, शिक्षति, यथाविदे, वः, सुराधसं, इन्द्रं, अभि, प्रार्च ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **पुरूवसुः** | புரூவஸு꞉ | பலவகைத் தனங்களையுடைய |
| **यः** | ய꞉ | யாதொரு |
| **मघवा** | மகவா | இந்திரன், |
| **जरितृभ्यः** | ஜரித்ருப்ய꞉ | தோத்திரம்பண்ணுகின்ற எங்கட்கு |
| **सहस्रेणेव** | ஸஹஸ்ரேணேவ | ஆயிர வகைத் தனங்களாற் போன்று |
| **शिक्षति** | ஶிக்ஷதி | கட்டளையிடுகின்றான். அதாவது (மிகுந்த தனத்தைக் கொடுக்கின்றான் என்பது பொருள்.) |
| **यथाविदे** | யதாவிதே | யாங்கள் உணர்ந்தவாறே (உணர்ந்து) |
| **वः** | வ꞉ | வேட்போர்களான நீவிரும் |

| | | |
|---|---|---|
| सुराधसं | ஸுராயஸம் | நல்ல திரவியமுள்ள |
| इन्द्रं | இந்த்ரம் | அவ் விந்திரனை |
| अभि प्रार्च | அபி ப்ரார்ச | ஒருமுகமாய் நன்கு ஆராதிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—3. பாலகில்யர் ரிஷி.

பசு முதலிய பலவிதத் தனங்களையுடைய, அல்லது, வேள்வி பலவாமாதலின் பல வேள்விகளில் வசிக்கின்ற யாதொரு இந்திரனுண்டோ, அவன் துதிப்போர்களான எங்கட்கு ஆயிரம்வகைத் திரவியத்தாற் போன்று கட்டளையிடுகின்றான். அதாவது, பசு முதலிய மிகுந்த தனங்களை எங்கட்குக் கொடுக்கின்றான் என்பது பொருள். அவ் விந்திரன் எங்களால் அறியப்படுவது போன்று, வேட்போர்காள்! நீவிரும் சிறந்த ஐசுவரியமுடைய இந்திர தேவனை அறிந்து நன்கு ஆராதிப்பீர்களாக. (3)

குறிப்பு.—தனத்தைக் கொடுக்கும் நின்னைத் துதிக்கின்றேன். யாதினாலெனின்? எல்லாச் சாத்திரமுணர்ந்தோனாகவும், மிகுந்த திரவியமுடையோனாகவும் இருக்கின்றாயாதலின் என்பது ஆங்கிலம்.

மந்திரம் 4.

१ २ ३ १ २ ३२३ १ २ ३१ २२
236. तं वो दस्ममृतीषहं वसोर्मन्दानमन्धसः ।
३ २ ३ १ २२ ३२३ १ २ ३ १ २
अभि वत्सं न स्वसरेषु धेनव इन्द्रं गीर्भिर्नवामहे ॥ ४ ॥

இருக்கு 8-88-1

தம் வோ த³ஸ்மம்ருதீஷஹம் வஸோர்மந்தா³நமந்த⁴ஸ꞉ ।
அபி⁴ வத்ஸம் ந ஸ்வஸரேஷு தே⁴நவ இந்த்³ரம் கீ³ர்பி⁴ர்நவாமஹே ॥

அந்வயம்.

(हे ऋत्विजः !,) (यजमानाः !,) दस्मं, ऋतीषहं, वसोः, अन्धसः, मन्दानं, तं इन्द्रं, वः, धेनवः, वत्सं न, गीर्भिः, स्वसरेषु, अभिनवामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः !) | (ஹே ருத்விஜ꞉ !) | (வேட்போர்களே !) |
| (यजमानाः !) | (யஜமாநா꞉ !) | (தலைவர்களே !) (யாம்) |
| दस्मं | த³ஸ்மம் | தரிசிக்கத்தக்கோனும் |

| | | |
|---|---|---|
| ऋतीषहं | ருதீஷஹம் | சத்துருக்களை யடக்குவோனும் |
| वसोः | வஸோ: | துன்பத்தை நீக்குவோனும் |
| अन्धसः | அந்தஸ: | சோமமாகிய அன்னத்தால் |
| मन्दानं | மந்தாநம் | களிப்படைகின்றவனும் |
| वः | வ: | உங்கட்குப் போற்றத் தக்கவனுமாகிய |
| तं इन्द्रं | தம் இந்த்ரம் | அவ்விந்திரனை) |
| धेनवः | தேநவ: | பாற் பசுக்கள் |
| वत्सं न | வத்ஸம் ந | கன்றைக் கருதிக் கதறுமாறு |
| गीर्भिः | கீர்பி: | துதியாகிய வாக்குகளால் |
| स्वसरेषु | ஸ்வஸரேஷு | பகற் காலங்களில் |
| अभिनवामहे | அபிநவாமஹே | யாம் பலவகையாக இறைஞ்சுகின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—4. நோதா ரிஷி இந்திரனைத் துதிக்கின்றார்.

வேட்போர்களே! தலைவர்களே! தரிசித்தற்குரியோனும், துன்புறுத்துஞ் சத்துருக்களை யடக்குவோனும், மற்றும், துன்பத்தைப் போக்குவோனும், அல்லது, பாத்திரத்தில் இருக்கின்ற சோமமென்னும் அன்னத்தை யருந்தியதாற் களிப்புறுகின்றோனும், ஆராதிக்கப்பாலதாந் தன்மையால் உங்களைப் பற்றியவனுமாகிய அவ் விந்திரனைப் பெரிதுமிறைஞ்சுகின்றோம். யாம் இந்திரனைக் குறித்துக் கதறுகின்றோமென்பது பொருள். எக்காலங்களிலெனின்? இரவியால் நியமிக்கப்பட்ட பகல்களில் (ஸ்வசரேழு,) என்றதற்கு யாஸ்க முனிவரும் 5-4-ல் பகல்கள், எனப் பொருள் கூறியுள்ளார். (பகற் போதுகளில் தோத்திரத்தாற் கதறுகின்றோம் என்பது திரண்ட பொருள்.) அதிலுவமை:—கோட்டங்களில் புதிதாயீன்ற பசுக்கள் தமது கன்றைக் குறித்துக் கதறுவன போன்றெனல். (4)

மந்திரம் 5.

१ २   ३ १ २ ३१ २ ३ १ २ ३ १ २

237. तरोभिर्वो विदद्वसुमिन्द्रं सबाध ऊतये ।

३ १   २ २ ३ १ २   ३ २ ३ २ उ ३ २ ३ १ २

बृहद्गायन्तः सुतसोमे अध्वरे हुवे भरं न कारिणम् ॥ ५ ॥

இருக்கு 8-64-1.

தரோபிர்வோ விதத்வஸுமிந்த்ரம் ஸபாத ஊதயே ।

ப்ருஹத்காயந்த: ஸுதஸோமே அத்வரே ஹுவே பரம் ந காரிணம் ॥

அந்வயம்.

(हे ऋत्विजः !,) वः, तरोभिः, विदद्वसुं, इन्द्रं, सबाधः, ऊतये, बृहत्, गायन्तः, सुतसोमे, अध्वरे, भरं, कारिणं न, हुवे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः !) | (ஹே ருத்விஜ: !) | வேட்போர்காள் ! |
| वः | வ: | நீங்கள் |
| तरोभिः | தரோபி: | விரைவுள்ள பரிகளோடு கூடியவனும் |
| विदद्वसुं | விதத்வஸும் | தனத்தைக் கொடுப்பவனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை, |
| सबाधः | ஸபாத: | பீடையுற்றோர்களாகித் |
| ऊतये | ஊதயே | தம்மைப் பாதுகாத்தற்பொருட்டு |
| बृहत् | ப்ருஹத் | பிருகத், என்னுஞ் சாமகீதத்தைப் |
| गायन्तः | காயந்த: | பாடுவோர்களாய் (ஆராதிப்பீர்களாக,) யானும் |
| सुतसोमे | ஸுதஸோமே | சோமரசந் தேடப்பட்டுள்ள |
| अध्वरे | அத்வரே | வேள்வியில், |
| भरं | பரம் | குடும்பத்தைக் காப்பாற்றுவோனைத் |
| कारिणं न | காரிணம் ந | தமக்குதவி செய்பவனை மக்கள் முதலியோர்கள் அழைப்பது போல் |
| हुवे | ஹுவே | அழைக்கின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—5. கலி பிரகாத ரிஷி.

வேட்போர்காள் ! நீவிர், வேகமுடைய குதிரைகளோடு கூடியவனும், மிக வேகமாய்த் தனங்களை யடைகின்றவனுமாகிய இந்திரனை, பீடையுற்றவர்களாகி தம்மைப் பாதுகாத்தற்பொருட்டு, பிருகத் சாமம், என்னும் பாடலைப் பாடுகின்றவர்களாயிருந்து ஆராதிப்பீர்களாக. ஈண்டு 'ஆராதிப்பீர்களாக' என்பது எஞ்சி நின்றது. யாண்டெனின் ? கூறப்படுகின்றது :— சோமரசம் பிழிந்தெடுத்துள்ள விடத்தில், சோமயாகத்தில் என்பதுமது. யானும் அவ்விந்திரனை அழைக்கின்றேன் என்க. எதைப்போலெனின் ? குடும்பத்தைப் பாதுகாக்கின்றவனும், தமக்கு நலஞ்செய்யுஞ் சீலமுடையவனுமாகிய, ஒருவனை, அவனது புத்திரர் முதலியோர்கள் தமக்குதவிபுரியுமாறு அழைக்கின்றதைப் போன்றெனல். அத்தன்மைய இந்திரனை யான் அழைக்கின்றேன் என்பதாம். (5)

### மந்திரம் 6.

३२३१२ ३ २३

238. तरणिरित्सिषासति वाजं पुरन्ध्या युजा ।

२ ३१२ ३१ २ ३२३१ २र ३१२

आ व इन्द्रं पुरुहूतं नमे गिरा नेमिं तष्टेव सुद्रुवम् ॥ ६ ॥

தரணி ரித்ஸிஷாஸதி வாஜம் புரந்த்யா யுஜா ।

ஆவ இந்த்ரம் புருஹூதம் நமே கிரா நேமிம் தஷ்டேவ ஸுத்ருவம்

அந்வயம்.

तरणिरित्, युजा, पुरन्ध्या, वाजं, सिषासति, सुद्रुवं, नेमिम्, तष्टा इव, पुरुहूतं, इन्द्रं, गिरा, वः, आनमे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| तरणिरित् | தரணிரித் | போரில் வேகமுடையவனே |
| युजा | யுஜா | அநுகூலமாகிய |
| पुरन्ध्या | புரந்த்யா | பெரும் புத்தியால் |
| वाजं | வாஜம் | அன்னத்தைப் |
| सिषासति | ஸிஷாஸதி | பெறுகின்றான். |
| सुद्रुवं | ஸுத்ருவம் | நற்கட்டையை |
| नेमिं | நேமிம் | சக்கரமாய் |
| तष्टा इव | தஷ்டா இவ | தச்சன் வளையச் செய்வது போன்று |
| पुरुहूतं | புருஹூதம் | பல்லோரால் அழைக்கப்பட்ட |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனைத் |
| गिरा | கிரா | தோத்திரத்தால் |
| वः | வ: | உங்கட்காக |
| आनमे | ஆநமே | ஒருமுகப்படுத்துகின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—6. வசிட்ட ரிஷி.

போர்த்தொழின் முதலிய கருமங்களில் அனுகூலமாகிய பெரும்புத்தியால் விரைவாகவே ஒருவன் அன்னத்தை நுகர்கின்றான். பல்லோர்களால் அழைக்கப்பட்ட இந்திரனை, வேள்வித் தலைவர்காள்! நும்பொருட்டு யான் தோத்திரத்தால் ஒருமுகப்படுத்துகின்றேன். அதிலுவமை:—தச்சன் ஒரு மரத்தைச் சக்கரமாகச் செய்வது போன்றெனல். (6)

குறிப்பு.—பெரும் புத்தியோடுகூட அன்னத்தைக் கொடுக்க விரும்புகின்றான் என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 7.

१ २ ३ १ २ ३२ ३ १ २ ३ १ २
239. पिबा सुतस्य रसिनो मत्स्वा न इन्द्र गोमतः ।
३ १ २ ३ १ २ ३२ १ २ ३ १ २
आपिनो बोधि *सधमाद्ये वृधेऽस्माँ अवन्तु ते धियः ॥ ७ ॥

இருக்கு 8-3-1.

𑌪𑌿𑌬𑌾 𑌸𑍁𑌤𑌸𑍍𑌯 𑌰𑌸𑌿𑌨𑍋 𑌮𑌤𑍍𑌸𑍍𑌵𑌾 𑌨 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌗𑍋𑌮𑌤𑌃 ।
𑌆𑌪𑌿𑌨𑍋 𑌬𑍋𑌧𑌿 𑌸𑌧𑌮𑌾𑌦𑍍𑌯𑍇 𑌵𑍃𑌧𑍇𑌽𑌸𑍍𑌮𑌾𑌂 𑌅𑌵𑌨𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌧𑌿𑌯𑌃 ॥

அங்வயம்.

हे इन्द्र !, रसिनः, गोमतः, नः, सुतस्य, पिब, मत्स्व, सधमाद्ये, आपिः, नः, वृधे, बोधि, ते, धियः, अस्मान्, अवन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | 𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திரனே ! (நீ) |
| रसिनः | 𑌰𑌸𑌿𑌨𑌃 | இரசத்தையுடையதும் |
| गोमतः | 𑌗𑍋𑌮𑌤𑌃 | பசு நெய் முதலியவைகளோடு கூடியதுமாகிய |
| नः | 𑌨𑌃 | எங்களுடைய |
| सुतस्य | 𑌸𑍁𑌤𑌸𑍍𑌯 | பிழிந்தெடுத்த சோமரசத்தை |
| पिब | 𑌪𑌿𑌬 | அருந்துவாயாக. (அருந்தி) |
| मत्स्व | 𑌮𑌤𑍍𑌸𑍍𑌵 | களிப்படைவாயாக. |
| सधमाद्ये | 𑌸𑌧𑌮𑌾𑌦𑍍𑌯𑍇 | தேவர்கள் களிப்பெய்தும் வேள்வியில் |
| आपिः | 𑌆𑌪𑌿𑌃 | சுற்றத்தானாய் |
| नः | 𑌨𑌃 | எங்களுடைய |
| वृधे | 𑌵𑍃𑌧𑍇 | விருத்தியின் பொருட்டுச் |
| बोधि | 𑌬𑍋𑌧𑌿 | சாவதானமாவாயாக. |
| ते | 𑌤𑍇 | உன்னுடைய |
| धियः | 𑌧𑌿𑌯𑌃 | அனுக்கிரகமாகிய புத்திகள் |
| अस्मान् | 𑌅𑌸𑍍𑌮𑌾𑌨𑍍 | எங்களைப் |
| अवन्तु | 𑌅𑌵𑌨𑍍𑌤𑍁 | பாதுகாப்பனவாகுக. |

* सधमादः, என்பது இருக்கு.

### சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—7. மேதாதிதி ரிஷி.

இந்திர ! சுவையுடையதும், ஆவின் பரிணாமமாகிய பால், நெய் முதலியவைகளோடு கூடியதுமாகிய, எங்களுடைய சோமரசத்தை அருந்துவாயாக. அருந்திக் களிப்படைவாயாக. மற்றும், தேவர்கள் களிப்படைதலின் சதமாத்யம் எனப்படும் வேள்வியில் நீ சுற்றத்தானாக இருந்து, நாங்கள் வளர்தற் பொருட்டுக் கருத்துடையோனாகுதி. உன்னுடைய அனுக்கிரகமாகிய புத்தி துதிக்கின்றவர்களான எங்களைக் காப்பாற்றுக என்பதாம். (7)

### மந்திரம் 8.

२उ ३ १२ ३ २उ३ १२
240. त्वꣳ ह्येहि चेरवे विदाभगं वसुत्तये ।
१ २
उद्वावृषस्व मघवन् गविष्टय उदिन्द्राश्वमिष्टये ॥ ८ ॥

இருக்கு 8-17-6.

ത്വം ഹ്യേഹി ചേരവേ വിദാഭഗം വസുത്തയേ ।
ഉദ്വാവൃഷസ്വ മഘവൻ ഗവിഷ്ടയ ഉദിന്ദ്രാശ്വമിഷ്ടയേ ॥

### அந்வயம்.

हे इन्द्र !, हि, त्वं, वसुत्तये, एहि, चेरवे, भगं विदाः, मघवन्, गविष्टये, उद्वावृषस्व, इन्द्र ! अश्वमिष्टये, उद्वावृषस्व ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ഹേ ഇന്ദ്ര ! | இந்திரனே ! நீ |
| हि | ഹി | உண்மையில் வள்ளலாதலின் |
| वसुत्तये | വസുത്തയേ | எமக்குத் தனத்தைக்கொடுத்தற் பொருட்டு |
| एहि | ഏഹി | வருவாயாக. வந்து |
| चेरवे | ചേരവേ | நல்லொழுக்கமுடைய எமக்கு |
| भगं | ഭഗം | ஐசுவரியத்தைக் |
| विदाः | വിദാഃ | கொடுப்பாயாக. |
| मघवन् ! | മഘവൻ ! | இந்திர ! |
| गविष्टये | ഗവിഷ്ടയേ | கோக்களை விரும்பும் எமக்கு |

| | | |
|---|---|---|
| उद्वावृषस्व | உத்³வாவ்ருஷஸ்வ | பசுக்களைத் தருவாயாக. |
| इन्द्र ! | இந்த்³ர ! | இந்திர ! |
| अश्वमिष्टये | அஶ்வமிஷ்டயே | அசுவத்தை விரும்பும் எமக்கு |
| उद्वावृषस्व | உத்³வாவ்ருஷஸ்வ | அசுவத்தையுந் தருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—8. பர்க்கரி ரிஷி.

இந்திர ! நீயே உண்மையாகிய கொடையாளி யென்று அறியப்படுகின்றாய். இதனால் நீ வருவாயாக. எதன் பொருட்டெனின்? எங்கட்குத் திரவியத்தை கொடுத்தற் பொருட்டு. வந்து நல்லெலொழுக்கமுடைய எமக்குப் போற்றத்தக்க ஐசுவரியத்தைத் தருவாயாக. தனமுள்ள இந்திர! ஆவை விரும்பும் எமக்கு ஆவைத் தருவாயாக. அவ்வாறே குதிரையை யிச்சிக்குமெமக்குக் குதிரையுந் தருவாயாக என்பதாம். (8)

குறிப்பு.—நல்லறிவுடைய எமது ஐசுவரியத்தை யுணர்ந்தவனாய், கோ, பரி முதலியவைகளைக் கொடுப்பாயாக என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 9.

१ २र ३२ ३ १ २र ३१ २
241. न हि वश्चरमं च न वसिष्ठः परिमंसते ।
३ १ २ ३२ ३ १२ ३२उ ३ १ २ ३ १ २
अस्माकमद्य मरुतः सुते सचा विश्वे *पिबन्तु कामिनः ॥ ९ ॥

இருக்கு 7-59-3.

ந ஹி வஶ்சரமம் ச ந வஸிஷ்ட²: பரிமம்ஸதே ।
அஸ்மாகமத்³ய மருத: ஸுதே ஸசா விஶ்வே பிப³ந்து காமிந: ॥

அந்வயம்.

हे मरुतः !, वः, चरमं च न, वसिष्ठः, न हि परिमंसते, अद्य, अस्माकं, सुते, मरुतः कामिनः, विश्वे, सचा, पिबन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे मरुतः ! | ஹே மருத: ! | மருத்துக்களே ! |
| वः | வ: | உங்களுக்குள் |
| चरमं च न | சரமம் ச ந | சிறுவரையுங் கூட |

---

* பிப³த என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| वसिष्ठः | வஸிஷ்ட: | வசிட்ட ரிஷியாகிய யான் |
| न हि परिमंसते | ந ஹி பரிமம்ஸதே | நீக்கித் துதித்திலேன். |
| अद्य | அத்ய | இப்போது |
| अस्माकं | அஸ்மாகம் | எங்களுடைய |
| सुते | ஸுதே | சோமரசந் தேடியவிடத்து |
| मरुतः कामिनः | மருத: காமிந: | சோமரசத்தை விரும்புகின்ற |
| विश्वे | விஶ்வே | நீவிர் எல்லோரும் |
| सचा | ஸசா | ஒன்றுகூடி |
| पिबन्तु | பிபந்து | அருந்துவீர்களாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—9. வசிட்ட ரிஷி, பரோட்சமாய்க் கூறுகிற

மருத்துக்களே! 'வசிட்டன்' என்னும் ரிஷியாகிய நான், உங்க கடையனுபுள்ளவனையுங்கூட நீக்கித துதி செய்திலேன். மற்று, உங் லோரையுமே துதிக்கின்றேன் என்பது பொருள். எமது சோமரசம் பிழி தெடுத்த இச் சமயத்தில் சோமரசம் வேண்டிய மருத்துக்களான நீவிர் யாவரு மொருங்கு சேர்ந்து குடிப்பீர்களாக. (9)

குறிப்பு.—மருத்துக்களே! நீங்களிருக்குமிடம் சிறிதுந் தெரியவில்லை ஆயினும் தேவர்களுடன் வந்து சோமரசம் அருந்துவீர்களாக என்பது ஆங்கிலம்.

### மந்திரம் 10.

१ २ ३ १ २र ३१ २ ३ १ २

242. मा चिदन्यद्विशंसत सखायो मा रिषण्यत ।

२ ३ १ २ ३ १२ ३ १ २ ३१ २र ३ १ २

इन्द्रमित्स्तोता वृषणं सचा सुते मुहुरुक्थाच शंसत ॥ १० ॥

இருக்கு 8-1-6.

மா சித³ந்யத்³விஶம்ஸத ஸகா²யோ மா ரிஷண்யத ।

இந்த்³ரமித்ஸ்தோதா வ்ருஷணம் ஸசா ஸுதே முஹுருக்தா²ச ஶம்ஸத ॥

### அந்வயம்.

हे सखाय !, अन्यत्, मा चिद्विशंसत, मा रिषण्यत, सुते, वृषणं, इन्द्रमित्, सचा, स्तोत, उक्था च, मुहुः, शंसत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः ! | ஹெ ஸவாயஃ ! | (துதிப்போராய) நண்பீர் ! |
| अन्यत् | அந்யத் | இந்திரனது துதியினும் வேறு துதியைச் |
| मा चिद्विशंसत | மா சித்³விஶம்ஸத | சொல்லாதீர்கள். |
| मा रिषण्यत | மா ரிஷண்யத | வீணாய் மெலியாதீர்கள். |
| सुते | ஸுதே | சோமரசந் தேடியவிடத்து |
| | வ்ருஷணம் | விழைந்தவாற்றாற் பெய்தளிக்கும் |
| | இந்த்³ரம் | இந்திரனையே |
| | ஸசா | ஒன்று சேர்ந்து |
| | ஸ்தோத | துதிப்பீர்களாக. |
| | உக்தா² ச | இந்திரனைப் போற்றும் சஸ்த்திரமென்னுந் துதிவிசேடங்களையும் |
| मुहुः | முஹுஃ | அடிக்கடி |
| शंसत | ஶம்ஸத | ஓதுவீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—10. பிரகாத காண்வ ரிஷி.

(எமக்கு) ஒத்த வுணர்வுடைய துதிப்போர்களே! நீவிர், இந்திரனுடைய தோத்திரத்தைத் தவிர்த்து மற்றைய துதிகளை யுரைக்காதீர்கள். துன்புறுத்துவோராகாதீர்கள். பிறர் துதிகளால் வீணாக மெலியாதீர்கள் என்பதாம். சோமரசம் பிழிந்தவிடத்து, மனம் விரும்பியவைகளை மழையெனப் பெய்யும் இந்திரனையே நீவிரெல்லீருமொருங்கு குழுமித் துதிப்பீர்களாக. இந்திரனைப்பற்றிய சஸ்திரமென்னும் மந்திர விசேடங்களை அடிக்கடி யோதுவீர்களாக. (10)

முதலாவது கண்டம்.

முற்றும்.

## இரண்டாவது கண்டம்

---

### பிரபாடகம்—3. அத்தியாயம்—3. கல

பத்து மந்திரங்களாலானது.

---

### மந்திரம் 1.

२ ३ १ २र ३२ ३ १२ ३ १२
243. नकिष्टं कर्मणा नशद्यश्चकार सदावृधम् ।
२ ३ २ ३२ ३ १ २ ३१ २ ३१ २ ३ १ २र
इन्द्रं न यज्ञैर्विश्वगूर्तमृभ्वसमधृष्टं * धृष्णुमोजसा ॥ १ ॥

இருக்கு 8-70-3.

நகிஷ்டம் கர்மணா நஶத்யஶ்சகார ஸதாவ்ருதம் ।
இந்த்ரம் ந யஜ்ஞைர்விஶ்வகூர்தம்ருப்வஸமத்ருஷ்டம் த்ருஷ்ணு
[மோஜஸா ॥

அங்வயம்.

यः, सदावृधं, विश्वगूर्तम्, ऋभ्वसं, ओजसा, अधृष्टं, न, धृष्णुं, इन्द्रं, यज्ञैः, चकार, तम्, कर्मणा, नकिः, नशत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | யஃ | யாதொரு வேள்வித் தலைவன், |
| सदावृधं | ஸதாவ்ருதம் | எப்போதும் வளரப்பெற்றவனும் |
| विश्वगूर्तं | விஶ்வகூர்தம் | உலகந் தொழத்தக்கோனும் |
| ऋभ्वसं | ருப்வஸம் | பெரியோனும் |
| ओजसा | ஓஜஸா | ஆற்றலால் |
| अधृष्टं | அத்ருஷ்டம் | எவருக்கு மடங்காதோனும் |
| न | ந | மற்றும் |
| धृष्णुं | த்ருஷ்ணும் | சத்துருக்களை யடக்குவோனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| यज्ञैः | யஜ்ஞைஃ | வேள்விகளால், வசமாகச் |

---

* धृष्ण्वोजसम्, என்பது இருக்கு.

நஉ-ஓணா — {செய்துவிட்டானே, அவ்வேள்வித் தலைவனை கொல்லுதல் முதலிய கருமத்தால் (வரும்பலன்)

நகி: நபஸ — வியாபிக்காது. (பற்றாது.)

சாயண பாடியம்.

இருக்கு—1. ஆங்கிரசர் புருஷன்மர் ரிஷிகள்.

[illegible] வேள்வித் தலைவனைக் கொல்லுதல் முதலிய தொழிலால் வரும் வியாபிக்காது. (எவ்விதமாகிய தலைவனை யெனின்?) யாதொருவன் அநுகூலமான வேள்விகளால் இந்திரனையே தன்வயமாக்கிக்கொண்டானே, அவனை என முடித்துக்கொள்க) எவ் வண்ணமாகிய இந்திரனை யெனின்? எப்போதும் வளரப்பெற்றானை. மற்றும், அனைவர்களாலுந் துதிக்கத் தக்கோனை. மற்றும் பெரியோனை. மற்றும் பிறராற்றலா லமிழ்த்தப்படாதோனை. சத்துருக்களை யடக்குவோனை. (வியாபிக்காது என்பதனோடு சேர்க்க.) (1)

## மந்திரம் 2.

२ ३१ २ ३१२ ३२ ३१२ ३१२

244. य ऋते चिदभिश्रिषः पुरा जत्रुभ्य आतृदः ।

१ २ ३ २ ३१२ ३२३१ ११३ १२३१२

सन्धाता सन्धिं मघवा पुरूवसु * र्निष्कर्ता विहुतं पुनः ॥ २ ॥

இருக்கு 8-1-129.

ய ருதே சிதபிஶ்ரிஷஃ புரா ஜத்ருப்ய ஆத்ருதஃ ।
ஸந்தாதா ஸந்திம் மகவா புரூவஸுர் நிஷ்கர்தா விஹ்ருதம் புநஃ ॥

## அந்வயம்.

यः, अभिश्रिषः, ऋते चित्, जत्रुभ्यः, आतृदः, पुरा, सन्धिं, सन्धाता, मघवा, पुरूवसुः, (इन्द्रः), विहुतं, पुनः, निष्कर्ता ॥

* इष्कर्त्ता विहुतं, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | யঃ | யாதொரு இந்திரன் |
| अभिश्रिषः | அபிஶ்ரிஷঃ | கூட்டுங் கருவிகள் |
| ऋते चित् | ருதே சித் | இல்லாமலே |
| जत्रुभ्यः | ஜத்ருப்யঃ | கழுத்துகளினின்றும் |
| आतृदः | ஆத்ருதঃ | இரத்தமெழுவதன் |
| पुरा | புரா | முன்பே |
| सन्धिं | ஸந்திம் | கூட்டத்தக்கதைக் |
| सन्धाता | ஸந்தாதா | கூட்டிவைப்பவனாகின்றானோ, |
| मघवा | மகவா | தனமுடையோனும் |
| पुरूवसुः | புரூவஸுঃ | மிகுந்த ஐசுவரியமுடையவனுமாகிய |
| (इन्द्रः) | (இந்த்ரঃ) | (அவ் விந்திரன்) |
| विहुतं | விஹ்ருதம் | துணித்து வேறாக்கியவைகளை |
| पुनः | புநঃ | மறித்தும் |
| निष्कर्ता | நிஷ்கர்தா | சுத்தப்படுத்தி வைக்கின்றான் (சேர்த்து வைக்கின்றான் என்பது பொருள்.) |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—2. மேதாதிதி மேத்யாதிதிகள், இதற்கும், மேல் வரும் மந்திரத்திற்கும் ரிஷிகளாவார்கள்.

சேர்த்துவைக்கும் பொருள்களில்லாமலே (மருந்து முதலிய இல்லாமலே) எவ் விந்திரன் கழுத்துகளினின்று இரத்த மெழுவதன் முன்னமே அவற்றைச் சேர்த்துவைப்போனாகின்றானோ, தனமுள்ளோனும், ஐசுவரிய முடையானுமாகிய அவ் விந்திரன் துணிக்கப்பட்ட அவற்றை மீண்டும் மிக நலப்படுத்துகின்றான். (ஒட்டி வைக்கின்றான்) என்பது மதம். (2)

குறிப்பு.—வச்சிரம் என்பது இடி, வேள்விச்சாலையில் வரத்தகாதவர்கள் வரில் அவர்களைத் தடுக்க துவாரபாலகர்கள் வைத்திருக்கும் தலையிலுருண்டையுடைய இரும்பாணிகள் சூழ்ந்த தடியுமாகும் என்பது ஆங்கிலம்.

மந்திரம் 3.

१ २ ३ २ ३ २३ २ ३ १ २र ३ १ २
245. आ त्वा सहस्रमाशतं युक्ता रथे हिरण्यये ।
३ २ ३ १२ ३ २ ३ १२ ३ १ २
ब्रह्मयुजो हरय इन्द्र केशिनो वहन्तु सोमपीतये ॥ ३ ॥

இருக்கு 8-1-24.

ஆ த்வா ஸஹஸ்ரமா ஶதம் யுக்தா ரதே ஹிரண்யயே ।
ப்ரஹ்மயுஜோ ஹரய இந்த்ர கேஶினோ வஹந்து ஸோமபீதயே ॥

அந்வயம்.

हे इन्द्र !, ब्रह्मयुजः, केशिनः, हिरण्यये, रथे, युक्ताः, आसहस्रं, शतं, हरयः, त्वा, सोमपीतये, आ वहन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| ब्रह्मयुजः | ப்ரஹ்மயுஜః | துதிசெய்து கொடுத்த அவிகளோடு கூடினவைகளும் |
| केशिनः | கேஶினః | கழுத்தில் நீண்ட மயிர்களுள்ளவைகளும் |
| हिरण्यये | ஹிரண்யயே | பொன்மயமாய்ச் செய்துள்ள |
| रथे | ரதே | தேரில் |
| युक्ताः | யுக்தாః | ஒன்று சேர்த்துப் பூட்டியவைகளுமான |
| आसहस्रं शतं | ஆ ஸஹஸ்ரம் ஶதம் | ஆயிரத்து நூறு |
| हरयः | ஹரயః | குதிரைகள் |
| त्वा | த்வா | உன்னைச் |
| सोमपीतये | ஸோமபீதயே | சோமரச மருந்துவதற்கு |
| आ वहन्तु | ஆ வஹந்து | இழுத்துக்கொண்டு வருவனவாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—3.

இந்திரனே! உனது ஆயிரத்து நூறு குதிரைகளும், எமது வேள்வியைக் குறித்து உன்னைக்கொண்டு வருவனவாகுக. யாண்டுங் குதிரைகளிரண்டே. அங்ஙனமாயினும், அதன் ஐசுவரியங்களான ஏனைய குதிரைகளுமிருக்கின்றன. (ஆதலின் ஆயிரத்தின்மேற் கணக்கிடப்பட்டன.) ஒரே சமயத்தில் அநேக குதிரைகளால் கொண்டுவரப்படுதல் எவ்வாறுமென்றுசங்கித்துக் கூறப்படுகின்றது :—ஒன்று சேர்த்துப் பூட்டியவைகளுமான என்றது. விரைவில் வருமாறு பொன்மயமாகிய இரதத்திற் பூட்டப்பட்டிருத்தலின் அநேக குதிரைகள் ஒரே சமயத்திலேயே செல்லுதல் பொருந்துமென்பது கருத்து. எவ்விதமான குதிரைகளெனின்? பிரமனாகிய இந்திரனோடு கூடியவைகள். அல்லது, எமது தோத்திரங்களோடு, அல்லது, எமது அவிகளோடு கூடியவைகள். மற்றும், கழுத்திற்கு மேலுள்ள சடைமயிர்களை

யுடையவைகள். இந்திரனைக் கொண்டு வருதல் யாது கருதியோவெனின்? ஆண்டுக் கூறப்படுகின்றது :—சோமரச மருந்துவதற்கு என. எமது சோமரசத்தை யருந்துமாறு கொண்டு வருவனவாகுக என்பது பொருள். (3)

## மந்திரம் 4.

२ ३ १ २ ३ १ २ ३ २ ३१ २
246. आ मन्द्रैरिन्द्र हरिभिर्याहि मयूररोमभिः ।
२ ३ २ ३ १ २३ २उ ३ २उ ३ १ २३ १ २
मा त्वा केचिन् नियेमुरिन्न पाशिनोऽति धन्वेव ताँइहि ॥ ४ ॥

இருக்கு 3-45-1.

ஆ மந்த்ரைரிந்த்ர ஹரிபிர்யாஹி மயூரரோமபி: ।
மா த்வா கேசிந் நியேமுரிந்ந பாஶினோऽதி தந்வேவ தா஁இஹி ॥

அந்வயம்.

हे इन्द्र !, मन्द्रैः, मयूररोमभिः, हरिभिः, धन्वेव, तान्, अति, आयाहि, इत्, पाशिनः, न, त्वा, मा नियेमुः, एहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்ர! | இந்திரனே! நீ |
| मन्द्रैः | மந்த்ரை: | களிப்பைத் தருபவைகளும் |
| मयूररोमभिः | மயூரரோமபி: | மயிலிறகுகள் போன்ற மயிர்களுள்ளனவுமான |
| हरिभिः | ஹரிபி: | குதிரைகள்வாயிலாக. |
| धन्वेव | தந்வேவ | வழிப்போக்கர் உவர்ப்பூமியை விரைவிற் கடக்குமாறு |
| तान् अति | தாந் அதி | செல்வதற்குத் தடையாயுள்ள அவைகளைக் கடந்து |
| आयाहि | ஆயாஹி | வருவாயாக. |
| इत् | இத் | இன்னும் |
| पाशिनः न | பாஶிந: ந | வேடன் வலையாற் பறவைகளைப் பிடிப்பதுபோல |
| त्वा | த்வா | உன்னை |
| मा नियेमुः | மா நியேமு: | ஒருவரும் தடைபண்ணாதோராகுக, |
| एहि | ஏஹி | வருவாயாக, |

சாயண பாடியம்.

**கண்டம்—2. இருக்கு—4.** விசுவாமித்திரர் உண்மையாகிய இந்திரனை யழைக்கின்றார் :—

இந்திரனே ! களிப்பையுண்டாக்குகின்ற மயிலிறகுகள் போன்ற மயிர்களையுடைய குதிரைகள்வாயிலாக நீ வேள்வியைக் குறித்து வருவாயாக. யாதொரு விதமான சனங்களும் நின்னை நியமிப்போர்களாகாதொழிவார்களாக. பிரயாணத்திற் றடை செய்யாதோர்களாக என்பது கருத்து. அதிலுவமை :—வலைக்கயிற்றைக் கையிற் கொண்ட வேடர்கள் பறவைகளைப் பிடித்துக்கொள்வது போன்றெனல். அதுபோல தடைப்படுத்தாதோர்களாவார்களாக என்பது பொருள். ஆயினும், வழி நடப்போர்கள் உவர்ப் பூமியை விரைவிற் கடந்து செல்வதுபோல பிரயாணஞ் செய்வதற்குத் தடையாயுள்ள அவைகளைக் கடந்து விரைவில் வருவாயாக என்பதாம். (4)

**குறிப்பு.**—வழியில் தடைப்படுத்துவரேல், அவர்களுடன் தனுவினாற் போராடுதி, ஈண்டுக் குதிரைகள் என்றது வானவில் என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 5.

२ ३२ २र ३ १ २ ३ १ २

**247. त्वमङ्ग प्रशंꣳसिषो देवः शविष्ठ मर्त्यम् ।**

२उ ३ १ २ ३ २३ १ २ ३ १ २

**न त्वदन्यो मघवन्नस्ति मर्डितेन्द्र ब्रवीमि ते वचः ॥ ५ ॥**

இருக்கு 1-84-19.

ஃவமங்க ப்ரஶம்ஸிஷோ தேவஃ ஶவிஷ்ட மர்த்யம் ।
ந ஃவதந்யோ மகவந்நஸ்தி மர்டிதேந்த்ர ப்ரவீமி தே வசஃ ॥

அந்வயம்.

हे अङ्ग शविष्ठ !, इन्द्र !, देवः त्वं, मर्त्यं, प्रशंसिषः, मघवन् !, इन्द्र !, त्वदन्यः, मर्डिता, नास्ति, ते, वचः, ब्रवीमि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अङ्ग शविष्ठ ! | அங்க ஶவிஷ்ட ! | ஆற்றலுடையார்களுட் சிறந்த |
| इन्द्र ! | இந்த்ர ! | இந்திரனே ! |
| देवः त्वं | தேவஃ த்வம் . | பிரகாசிக்கின்ற நீ |
| मर्त्यं | மர்த்யம் | தன்னைத் துதிக்கும், மரண தருமத்தையுடைய மனிதனை |

| | | |
|---|---|---|
| प्रशंसिषः | ப்ரஶம்ஸிஷ: | { இவன் என்ன தனன், என |
| मघवन्! | மகவந்! | தனமுடை |
| इन्द्र! | இந்த்ர! | இந்திரனே |
| त्वदन्यः | த்வதந்ய: | { நின்னைத் வரும் |
| मर्डिता | மர்டிதா | நலஞ்செய் |
| नास्ति | நாஸ்தி | இலர். ஆ |
| ते | தே | உன்னுடை |
| वचः | வச: | துதியாகிய |
| ब्रवीमि | ப்ரவீமி | யாண்டுஞ் செ |

சாயண பாடியம்

கண்டம்—2. இருக்கு—5. கோதம ரிஷி.

மூலத்தில் 'அங்க' என்றது மனத்தின் ஒருமைப்பாட்டை யுணர்த்து நின்றது. ஆற்றலுடையாரில் மேம்பட்ட இந்திர! பிரகாசவடிவமாகிய நீ நின்னைத் துதிக்கின்ற மரண தருமத்தையுடைய வொருவனை, இவனால் மிக நன்கு துதிக்கப்பட்டேன் எனப் போற்றுகின்றாய். தனமுடைய இந்திரனே! நின்னையொழிய வேறியாருஞ் சுகப்படுத்துவோரிலர். இதனால் நின் பொருட்டுத் துதியாகிய வாக்கைச் சொல்கின்றேன் என்பதாம். (5)

மந்திரம் 6.

१ २ ३ १ २ ३ १ २२३१ २
248. त्वमिन्द्र यशा अस्यृजीषी शवसस्पतिः ।
२ ३ १ २ ३२उ ३ २ ३१२ ३ १ २
त्वं वृत्राणि हंस्यप्रती * न्येक इत्पुर्वनुत्तश्चर्षणीधृतिः ॥ ६ ॥

இருக்கு 8-90-5.

த்வமிந்த்ர யஶா அஸ்ய்ருஜீஷீ ஶவஸஸ்பதி: ।
த்வம் வ்ருத்ராணி ஹம்ஸ்யப்ரதீந்யேக இத்புர்வநுத்தஶ்சர்ஷணீ
[த்ருதி: ॥

அந்வயம்.

हे इन्द्र!, शवसस्पतिः, ऋजीषी, त्वं, यशा, असि, अप्रतीनि, पुरु, वृत्राणि, अनुत्तः, चर्षणीधृतिः, एक इत्, हंसि ॥

---

* एक इदनुत्ता चर्षणी धृता, என்பது இருக்கு.

பதவுரை.

| | |
|---|---|
| ற ஐ நே்ர ! | இந்திரனே ! |
| ஸஹு திஃ | ஆற்றலைப் பாதுகாப்போனும் |
| ஷீ | போற்றற்குரிய சோமரசத்தை யேற்றுக்கொள்வோனுமாகிய |
| | நீ |
| ா | கீர்த்தியுடையோனாக |
| ஸி | இருக்கின்றாய். (ஏனெனின்) ? |
| ப்ர தீநி | பேராற்றலுடையோர்களும் எதிர் நிற்கமுடியாத |
| ப்ரூரூ | அநேக |
| வ்ர த்ராணி | இராக்கதர்களை |
| கு ந்ரூ தஃ | ஒருவராலுந் தூண்டப்படாமலே |
| அஷ்ஷ்ணீ யர திஃ | வேள்வித் தலைவர்களைக் காப்பாற்றுகின்ற நீ |
| ஏக இத் (एक इत्) | ஒருவனாகவே |
| ஹம்ஸி (हंसि) | நாசஞ்செய்கின்றனை. (ஆதலின் என்க.) |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—6. நிருமேதர், புருமேதர் ரிஷிகள்.

இந்திரனே ! வலியைக் காப்போனும், பிழிந்தெடுத்த சோமமுடையோனுமாகிய நீ கீர்த்தியுடையோனா யிருக்கின்றாய். இவன் எவ்வாறு கீர்த்தியுடையான் என்றாசங்கித்துக் கூறப்படுகின்றது :—பெரும் வலியுடையோர்களான அநேக இராக்கதர்களை, வேறெவராலுந் தூண்டப்படாமல் வேள்வித் தலைவனைக் காப்பாற்றுகின்ற நீ உதவியின்றி யொருவனாகவே நாசஞ்செய்கின்றனை, ஆதலின் கீர்த்தி மிக்குடையோன் என்பதாம். (6)

குறிப்பு.—பல வடிவமுடையதும், துதிக்கத் தக்கதும், வீரனாற் றாங்கப்பட்டதுமாகிய வச்சிராயுதத்தாற் சத்துருக்களை நாசம் பண்ணுகின்றனை என்பது ஆங்கிலம்.

மந்திரம் 7.

२ ३ २ ३ १ २ ३ १ २ ३क २र ३ २

249. इन्द्रमिद्देवतातय इन्द्रं प्रयत्यध्वरे ।

१ २ ३ २ ३ १ २ ३ २ ३ १२ ३ १२

इन्द्रꣳ समीके वनिनो हवामह इन्द्रं धनस्य सातये ॥ ७ ॥

இருக்கு 8-3-5.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌦𑍍𑌦𑍇𑌵𑌤𑌾𑌤𑌯 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌯𑌧𑍍𑌵𑌰𑍇 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌮𑍀𑌕𑍇 𑌵𑌨𑌿𑌨𑍋 𑌹𑌵𑌾𑌮𑌹 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌧

அந்வயம்.

देवतातये, इन्द्रमित्, हवामहे, अध्वरे प्रयति, इन्द्रं,
धनस्य, सातये, इन्द्रं, हवामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **देवतातये** | 𑌦𑍇𑌵𑌤𑌾𑌤𑌯𑍇 | வேள்வியின் |
| **इन्द्रमित्** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌤𑍍 | இந்திரனையே |
| **हवामहे** | 𑌹𑌵𑌾𑌮𑌹𑍇 | அழைக்கின் |
| **अध्वरे प्रयति** | 𑌅𑌧𑍍𑌵𑌰𑍇 𑌪𑍍𑌰𑌯𑌤𑌿 | வேள்வி தொட |
| **इन्द्रं** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 | இந்திரனை |
| **हवामहे** | 𑌹𑌵𑌾𑌮𑌹𑍇 | அழைக்கின்ருேம். |
| **समीके** | 𑌸𑌮𑍀𑌕𑍇 | வேள்வி முடிவிலும், போரிலும் |
| **वनिनः** | 𑌵𑌨𑌿𑌨𑌃 | ஆராதிக்கின்ற யாம் |
| **इन्द्रं** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 | இந்திரனை |
| **हवामहे** | 𑌹𑌵𑌾𑌮𑌹𑍇 | அழைக்கின்ருேம். |
| **धनस्य** | 𑌧𑌨𑌸𑍍𑌯 | தனத்தின் |
| **सातये** | 𑌸𑌾𑌤𑌯𑍇 | இலாபத்தின் பொருட்டும் |
| **इन्द्रं** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 | இந்திரனை |
| **हवामहे** | 𑌹𑌵𑌾𑌮𑌹𑍇 | அழைக்கின்ருேம். (ஆதலின் இந்திரன் விரைவில் வருவாஞகை என்பது கருத்து.) |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—7. மேத்தியாதிதி ரிஷி.

வேள்வியின் பொருட்டுத் தேவர்களுக்குள் இந்திரனையே அழைக்கின்ருேம். வேள்வி தொடங்கிய விடத்தும் இந்திரனை யழைக்கின்ருேம். வேள்வி இனிது முடிவு பெற்றவிடத்தும் ஆராதிக்கின்ற யாங்கள் இந்திரனை யழைக்கின்ருேம். அல்லது போரிலும் இந்திரனையே அழைக்கின்ருேம். தனலாபத்தின் பொருட்டும் இந்திரனையே அழைக்கின்ருேம். இதனுல் விரைவில் இந்திரன் வருவாஞகை என்பதாம். (7)

ஈண்டுச் சமீகம் என்றது போர் என நிருத்தம். 2-17-11-ல் கூறியுள்ளது.

**குறிப்பு**—ஈண்டு, தேவர்களென்னுந் தோத்திரஞ் செய்வோர்களால் விரிக்கப் படுதலின் தேவதாதி - என்பது வேள்வியாம்.

## மந்திரம் 8.

३ १ २ ३ १ २र
त्वा पुरुवसो गिरो वर्द्धन्तु या मम ।
३ १ २ ३ २ ३ १ २र
र्णाः शुचयो विपश्चितोऽभिस्तोमैरनूषत ॥ ८ ॥

இருக்கு 8-3-3.

ுவஸொ கிரொ வஜ்ஷுு யா ஊ ॥
ுயொ விபஶ்சிதொ஽லிஷொமெஊநூஷத ॥

அந்வயம்.

..., मम, इमाः, याः गिरः त्वा, वर्द्धन्तु, पावक वर्णाः, शुचयः, विपश्चितः, स्तोमैः, अभ्यनूषत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पुरुवसो ! | ஹெ புருவஸொ ! | மிகுந்த தனமுள்ள இந்திர ! |
| मम | ஊ | என்னுடைய |
| इमाः | இஊா: | இத்தகைய |
| याः गिरः | யா: கிர: | எந்த வாக்குகளுண்டோ, அவை |
| त्वा | ஃவா | உன்னை |
| वर्द्धन्तु | வஜ்ஷுு | வளர்ப்பனவாகுக. அவ்வாறே |
| पावकवर्णाः | வாவகவண்ணா: | தீயொத்த வொளியுடையார்களும் |
| शुचयः | ஶுவய: | சுத்தர்களுமான |
| विपश्चितः | விவஶ்சித: | அறிஞர்கள் |
| स्तोमैः | ஷோமெ: | தோத்திரங்களால் |
| अभ्यनूषत | அஹ்யநூஷத | துதிக்கின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—8. மேத்தியாதிதி ரிஷி.

வேத மந்திரங்களாகிய சஸ்திர மென்னும் என்னுடைய இந்தத் துதி விசேட வாக்குகள் உன்னை வளர்க்குக. அவ்வாறே, அழல் நிறமுடையார்களும், அதாவது அக்கினி போன்ற ஒளியுடையவர்களும், இதனாலேயே சுத்தர்களுமான வித்வான்களும், வேத கீதம் பாடுவோர்களுமான நீவிர் தோத்திரங்களாற் போற்றுவீர்களாக. ஈண்டு அத் தோத்திரங்களாவன 'பகிஷ்பவமானாதிகள்' என்க. (8)

குறிப்பு.—வேள்விக்குப் புறம்பாய் அசுவினி குமாரர்களைப் பரிசுத்தபடுத்தச் செய்கின்ற பாடல்வடிவ துதியைப் பகிஷ்பவமானம் என்பர் வேள்வியாளர்.

## மந்திரம் 9.

२ ३ १ २र ३ २ ३ १ २ ३
251. उदु त्ये मधुमत्तमा गिरः स्तोमास ईरते ।
१ २ ३ १ २र ३ २ ३ १ २
सत्राजितो धनसा अक्षितोतयो वाजयन्तो रथा इव ॥ ९ ॥

இருக்கு 8-3-15.

உது த்யே மதுமத்தமா கிர: ஸ்தோமாஸ ஈரதே ।
ஸத்ராஜிதோ தநஸா அக்ஷிதோதயோ வாஜயந்தோ ரதா இவ ॥

அந்வயம்.

सत्राजितः, धनसा, अक्षितोतयः, वाजयन्तः, त्ये, मधुमत्तमाः, गिरः, स्तोमासः, उदीरते, रथा इव ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सत्राजितः | ஸத்ராஜித: | எக்காலுஞ் சத்துருக்களை வெல்கின்றவைகளும் |
| धनसा | தநஸா | மிகுந்த தனமுடையவைகளும் |
| अक्षितोतयः | அக்ஷிதோதய: | கெடாத பாதுகாப்புடையவைகளும் |
| वाजयन्तः | வாஜயந்த: | அன்னத்தை விரும்புவைகளுமான |
| रथा इव | ரதா இவ | இரதங்களைப் போல |
| त्ये | த்யே | புகழ்பெற்ற |
| मधुमत्तमाः | மதுமத்தமா: | மிகுந்த தீஞ்சுவை வாய்ந்த |
| गिरः | கிர: | மேம்பட்ட வாக்குகளும் |
| स्तोमासः | ஸ்தோமாஸ: | பகிஷ்பவமானதி தோத்திரங்களும் |
| उदीरते | உதீரதே | வெளிக் கிளம்புகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—9. மேத்தியாதிதி ரிஷி.

புகழ்பெற்ற தீஞ்சுவை மலிந்த சஸ்திர மென்னும் வாக்கு விசேடங்களும் பகிஷ்பவமான (வேள்விக்கு வெளியே செய்கின்ற துதி) முதலிய கீதப்பாட்டுகளும், இந்திர! உன்னைக் குறித்து எழுகின்றன. அதிலுவமை:—எப்போதுஞ் சத்துருக்களை வெற்றிகொள்வனவும், இதனாலேயே தனங்களை மிக ஏற்றுக்கொள்வனவுமென்றாயிற்று. மற்றும், கெடாத பாதுகாப்புடையவைகளும், அன்னத்தை விரும்புகின்றவைகளுமான இரதங்கள் எனல். இரதங்கள்போல வெளிக் கிளம்புகின்றன என்பதாம். (9)

## மந்திரம் 10.

१ २ ३ २ ३ २३२उ ३ १ २र
52. यथा गौरो अपाकृतं तृष्यन्नेत्यवेरिणम् ।
१ २ ३२ उ ३ १ २ ३ १ २ ३ २उ ३ १२
त्वे नः प्रपित्वे तूयमा गहि कण्वेषु सु सचा पिब ॥ १० ॥

இருக்கு 8-4-3.

யதா கௌரோ அபாக்ருதம் த்ருஷ்யந்நேத்யவேரிணம் ।
த்வே ந: ப்ரபித்வே தூயமாகஹி கண்வேஷு ஸு ஸசா பிப ॥

### அந்வயம்.

गौरः, तृष्यन्, अपा, कृतं, इरिणं, यथा, अवैति; आपित्वे, प्रपित्वे, इन्द्र!, नः, तूयं, आगहि, कण्वेषु, सचा, सु पिब ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| गौरः | கௌரா: | செந்நிறமுடைய மான்கள் |
| तृष्यन् | த்ருஷ்யந் | தாகமுற்று |
| अपा | அபா | நீரால் |
| कृतं | க்ருதம் | நிறைந்துள்ள |
| इरिणं | இரிணம் | புல்லற்ற குளத்தைக் குறித்து |
| यथा | யதா | எவ்வாறு |
| अवैति | அவைதி | ஒருமுகப்பட்டுச் செல்லுகின்றனவோ, அவ்வாறே |
| आपित्वे | ஆபித்வே | சுற்றமாந் தன்மையை |
| प्रपित्वे | ப்ரபித்வே | அடைந்த விடத்து |
| (इन्द्र!) | (இந்த்ர!) | (இந்திரனே! நீ) |
| नः | ந: | எங்களிடத்து |
| तूयं | தூயம் | விரைவில் |
| आगहि | ஆகஹி | வருவாயாக. வந்து |
| कण्वेषु | கண்வேஷு | கண்ணுவ ரிஷியைச் சேர்ந்த எங்களுக்குள் |
| सचा | ஸசா | ஒன்றுகூடித் தேடிய சோமரசத்தை |
| सु पिब | ஸு பிப | இனிதருந்துவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—10. தேவாதிதி கண்ணுவ ரிஷி.

செந்நிறமுடைய மான், நீர்வேட்கை யடைந்து நீர்களானில லற்ற தடாகத்தை யடையுமாறு, அதாவது:—ஒருமுகப்பட்டு ட லடைவது போல என்பதாம். சுற்றமாந் தன்மையை யடைந்தவிடத்து, இந்திரனே! நீ எங்களிடத்து விரைவில் வருவாயாக. வந்து, கண்ணுவரின் புத்திரர்களான எங்களுக்குள் ஒன்றுகூடி விடாமுயற்சியாற் றேடிவைக்கப் பட்ட சோமரசத்தை இனிது அருந்துவாயாக. (10)

## இரண்டாவது கண்டம்

முற்றும்.

---

## மூன்றாவது கண்டம்

---

பிரபாடகம்—3. அத்தியாயம்—3. கண்டம்—3.

பத்து மந்திரங்களாலானது.

---

### மந்திரம் 1.

१ २ ३ २ ३ २ ३ १ २ ३ १ २
253. शग्ध्यू३षु शचीपत इन्द्र विश्वाभिरूतिभिः ।
२३ १ २र ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
भगं नहि त्वा यशसं वसुविदमनु शूर चरामसि ॥ १ ॥

இருக்கு 8-61.5.

𑌶𑌗𑍍𑌧𑍍𑌯𑍂𑌷𑍁 𑌶𑌚𑍀𑌪𑌤 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌭𑌿𑌰𑍂𑌤𑌿𑌭𑌿𑌃 ।
𑌭𑌗𑌂 𑌨𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾 𑌯𑌶𑌸𑌂 𑌵𑌸𑍁𑌵𑌿𑌦𑌮𑌨𑍁 𑌶𑍂𑌰 𑌚𑌰𑌾𑌮𑌸𑌿 ॥

அங்வயம்.

हे शचीपते !, शूर, इन्द्र !, विश्वाभिः, ऊतिभिः, शग्धि, भगं न, यशसं, वसुविदं, त्वा, अनुचरामसि ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| | ஶசீபதே! | இந்திராணி கொழுந! நீ |
| | ஶூர! | சூரனே! |
| | இந்த்³ர! | இந்திரனே! |
| विश्वाभिः ऊतिभिः | விஶ்வாபி⁴: ஊதிபி⁴: | எல்லாப் பாதுகாப்புகளுடனே |
| शग्धि | ஶக்³தி⁴ | விரும்பியதைக் கொடுப்பாயாக. |
| भगं न | ப⁴க³ம் ந | எமது பாக்கியத்திற் கொத்த |
| यशसं | யஶஸம் | கீர்த்தியுடையோனும் |
| वसुविदं | வஸுவித³ம் | தனங் கொடுப்போனுமாகிய |
| त्वा | த்வா | நின்னையே |
| अनुचरामसि | அநுசராமஸி | (யாம்) ஆராதிக்கின்றோம். |

### சாயண பாடியம்.

**கண்டம்—3.** இருக்கு—1. பர்க்க ரிஷி.

இந்திராணிக்கு இறைவனாகிய இந்திர! நீ எல்லாவகைப் பாதுகாப்புக்களோடும் விரும்பியதைத் தருவாயாக. சூரனே! பாக்கியத்தைப் போன்ற கீர்த்தி யுடையவனும், தனத்தைக் கொடுப்போனுமாகிய நின்னை யாம் ஆராதிக்கின்றோம் என்பதாம். (1)

### மந்திரம் 2.

१ २ ३ २ ३ १ २क २र ३ १२
254. या इन्द्र भुज आभरः स्वर्वांॅ असुरेभ्यः ।
३ २ ३१२ ३ २ ३ २ ३१२
स्तोतारमिन्मघवन्नस्य वर्द्धय ये च त्वे वृक्तबर्हिषः ॥ २ ॥

இருக்கு 8-97-1.

யா இந்த்³ர பு⁴ஜ ஆப⁴ர: ஸ்வர்வாம்ˮ அஸுரேப்⁴ய: ।
ஸ்தோதாரமிந்மக⁴வந்நஸ்ய வர்த்³த⁴ய யே ச த்வே வ்ருக்தப³ர்ஹிஷ: ॥

### அந்வயம்.

हे इन्द्र!, स्वर्वान्, भुजः, याः, असुरेभ्यः, आभरः, मघवन्!, अस्य, स्तोतारमित्, वर्द्धय, च, ये, त्वे, वृक्तबर्हिषः ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்³ர! | இந்திரனே! நீ |
| स्वर्वान् | ஸ்வர்வாந் | சுவர்க்கத்திலுள்ளதும் |
| भुजः | பு⁴ஜ: | போகித்தற்குரியதுமாகிய |

| | | |
|---|---|---|
| याः | யாஃ | யாதொரு தனத்தை |
| असुरेभ्यः | அஸுரெப்⁴யஃ | இராக்கதர்களிடத்தினின்று |
| आभरः | ஆப⁴ரஃ | கொண்டு வந்தனையோ, அது கொண்டுவரப்பட்டதாதலின் |
| मघवन्! | மக⁴வந்! | தனமுடைய இந்திரனே! நீ |
| अस्य | அஸ்ய | இத் திரவியத்தைத் தானஞ் செய்தலால் |
| स्तोतारमित् | ஸ்தோதாரமித் | தன்னைத் துதிப்போர்களையே |
| वर्द्धय | வர்த்³த⁴ய | வளர்ப்பாயாக. |
| ये च | யெ ச | மற்றும் வேட்போர்களான எவர்கள் |
| त्वे | த்வெ | நின்பொருட்டுத் |
| वृक्तबर्हिषः | வ்ருக்தப³ர்ஹிஷஃ | தருப்பையை விரிக்கின்றவர்களாகின்றார்களோ, (அவர்களையும் வளர்க்குதி.) |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—2. இரேபராகிய காசியப ரிஷி.

இந்திரனைப் பிரார்த்திக்கின்றார் :—இந்திரனே! சுகமுடையவனாகிய, அல்லது, சுவர்க்கத்திலுள்ளதை யுடையவனாகிய, அல்லது, பூத சமுதாயத்தை யுடையவனாகிய நீ அனுபவிக்கத்தக்க எந்தத்தனங்களுண்டோ? அவைகளைப் பேராற்றலுள்ள அசுரர்களிடத்தினின்று கொண்டுவந்தனை. அதாவது :—அசுரர்களைக் கொன்று பறித்துக்கொண்டு வந்தவனாயிருக்கின்றாய். இதனாலேயே தனமுடைய இந்திரனே! நீ இவ்வண்ணங் கொண்டுவந்த திரவியத்தைத் தானஞ் செய்தலால் நின்னைத் தோத்திரம் பண்ணுவோர்களையே விருத்தியுடையார்களாய்ச் செய்வாயாக. அன்றியும் ஏனைய வேட்போர்கள் நின்பொருட்டுத் தருப்பை யாசனம் விரிப்போர்களா யிருக்கின்றார்கள். ஆதலின் அவர்களையுந் தனத்தினால் நீ விருத்தி செய்வாயாக என்பதாம். (2)

**குறிப்பு.**—மூலத்திலுள்ள 'சுவ' என்னுஞ் சொல் அனைத்தும் என்பதன் பரியாயச் சொல்லாக நின்றது. எல்லாப் பூதத்தொகுதிகளும் ஆன்மாவினிடத்திலிருந்து உண்டானவைகளாமாதலின் 'சுவ' என்பதற்கு அனைத்தும் எனவும் பொருள் சொள்ளப்பட்டது.

## மந்திரம் 3.

२ ३२३ २३ १ २ ३क२र

255. प्र मित्राय प्रार्य्यम्णे सचथ्यमृतावसो ।

३ २ १२३ २३ १२ ३१ २र

वरूथ्ये ३ वरुणे छन्द्यं वचः स्तोत्रꣳ राजसु गायत ॥ ३ ॥

இருக்கு 8-103-2.

ப்ர மித்ராய ப்ரார்ய்யம்ணே ஸசத்ய ம்ருதாவஸோ ॥
வரூத்யே வருணே சந்த்யம் வச: ஸ்தோத்ரம் ராஜஸு காயத ॥

அங்வயம்.

ऋतावसो !, मित्राय, सचथ्यं, छन्द्यं, वचः, स्तोत्रं, अर्यम्णे, वरूथ्ये, वरुणे, राजसु, प्रगायत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ऋतावसो ! | ஹே ருதாவஸோ ! | வேள்வியாகிய தனமுடையோய் ! நீ |
| सचथ्यं | ஸசத்யம் | தொண்டு செய்தற்குரிய |
| छन्द्यं | சந்த்யம் | வேள்வியிலுண்டாகும் |
| वचः | வச: | வாக்காகிய |
| स्तोत्रं | ஸ்தோத்ரம் | தோத்திரத்தை, |
| मित्राय | மித்ராய | மித்திர தேவதையின் பொருட்டும் |
| अर्यम्णे | அர்யம்ணே | அரியமா தேவதையின் பொருட்டும் |
| वरूथ्ये | வரூத்யே | வேள்விச் சாலையிலுள்ள |
| वरुणे | வருணே | வருணனின் பொருட்டும் |
| राजसु | ராஜஸு | இம் மூவரும் விளங்குமிடத்தில் |
| प्रगायत | ப்ரகாயத | நன்கு பாடுவீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—3. சமதக்கினி ரிஷி.

வேள்வியையே தனமெனக் கொண்டோய்! நீ சேவிக்கத் தக்கதும், வேள்வி மனையிலுண்டாவதுமாகிய, அல்லது, கருத்திற்கிசைந்ததாகிய தோத்திரத்தை மித்திர தேவதையின்பொருட்டு இனிது படிப்பாயாக. (அங்ஙனமே) அரியமா தேவதையின் பொருட்டும், வேள்வி வீட்டின்பாலுள்ள

வருணன் பொருட்டும் படிப்பாயாக. அதாவது விளங்குகின்ற மித்திர தேவதை முதலிய மூவரையும் துதிப்பாயாக என்பது திரண்ட பொருள். (3)

ஈண்டு மூலத்திலுள்ள காயத, என்னும் பன்மைச் சொல் போற்றுதற் பொருட்டாம்.

**குறிப்பு.**—வேள்வியாற் றனங்கொடுப்போய்! என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 4.

३ १ २ ३१२ ३ २ ३ १ २ ३१२
256. **अभि त्वा पूर्वपीतय इन्द्र स्तोमेभिरायवः ।**
३ १२ ३ २३ १२ ३ १ २ ३ २
**समीचीनास ऋभवः समस्वरन् रुद्रा गृणन्त पूर्व्यम् ॥ ४ ॥**

𑌅𑌭𑌿 𑌤𑍍𑌵𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑍀𑌤𑌯 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌸𑍍𑌤𑍋𑌮𑍇𑌭𑌿𑌰𑌾𑌯𑌵𑌃 ।
𑌸𑌮𑍀𑌚𑍀𑌨𑌾𑌸 𑌋𑌭𑌵𑌃 𑌸𑌮𑌸𑍍𑌵𑌰𑌨𑍍 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤 𑌪𑍂𑌰𑍍𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

### அந்வயம்.

हे इन्द्र !, आयवः, पूर्वपीतये, स्तोमेभिः, त्वा, अभि, समीचीनासः, ऋभवः, समस्वरन्, रुद्राः, पूर्व्यं, गृणन्त ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | 𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திரனே ! |
| **आयवः** | 𑌆𑌯𑌵𑌃 | துதிப்போர்கள், |
| **पूर्वपीतये** | 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑍀𑌤𑌯𑍇 | முன்னர், சோமரசம் அருந்துவதற்குத் |
| **स्तोमेभिः** | 𑌸𑍍𑌤𑍋𑌮𑍇𑌭𑌿𑌃 | துதிகளால் |
| **त्वा अभि** | 𑌤𑍍𑌵𑌾 𑌅𑌭𑌿 | நின்னைத் துதிக்கின்றார்கள். |
| **ऋभवः** | 𑌋𑌭𑌵𑌃 | ருபு, முதலியோர்கள் |
| **समीचीनासः** | 𑌸𑌮𑍀𑌚𑍀𑌨𑌾𑌸𑌃 | ஒன்று கூடியவர்களாய் |
| **समस्वरन्** | 𑌸𑌮𑌸𑍍𑌵𑌰𑌨𑍍 | நின்னையே இனிது போற்றினர்கள். |
| **रुद्राः** | 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌃 | உருத்திரனுடைய புத்திரர்களான மருத்துக்க(ளும்) |
| **पूर्व्यं** | 𑌪𑍂𑌰𑍍𑌵𑍍𑌯𑌂 | பழையோனாகிய வுன்னையே |
| **गृणन्त** | 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤 | துதித்தார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—4. மேதாதிதி ரிஷி.

இந்திரனே! தோத்திரம் பண்ணுவோர்கள் தோத்திரங்களால் நின்னையே ஏத்துகின்றார்கள். எதன்பொருட்டெனின்? எல்லாத் தேவர்கட்கு முன்னரே நீ சோமரச மருந்துதற்பொருட்டு. (மற்றும்) சவன காலத்தில் அகப்பை விசேடங்களால் சோமரசமும் இந்திரனையே அழைக்கின்றது. அவ்வாறே ஒன்றாய்க் கூடின ருபுக்கள், அதாவது ருபு, விபு, ஆச என்னும் இம்மூவர்களும் நின்னையே மிக்க இனிமையோடு துதித்தார்கள். உருத்திரனுடைய புத்திரர்களான மருத்துக்கள், பழையோனாகிய வுன்னைத் துதித்தார்கள். அதாவது:—விருத்திராசுரனைக் கொல்லுங்கால், பகவ! நன்கு கொல்லுதி, வெல்லுதி, வீரனாகுதி என்னுந் துதியாகிய இவ் வாக்கால் நின்னையே துதித்தனர் என்பது பொருள். (4)

மந்திரம் 5.

२ ३ १ २ ३१ २र ३ १ २
257. प्र व इन्द्राय बृहते मरुतो ब्रह्मार्चत ।
३१ २ ३ २ ३ १२ ३१२ ३१२
वृत्रꣳ हनति वृत्रहा शतक्रतुर्वज्रेण शतपर्वणा ॥ ५ ॥

இருக்கு 8-89-3.

ப்ர வ இந்த்ராய ப்ருஹதே மருதோ ப்ரஹ்மார்சத ।
வ்ருத்ரம் ஹநதி வ்ருத்ரஹா ஶதக்ரதுர்வஜ்ரேண ஶதபர்வணா ॥

அங்வயம்.

हे मरुतः!, बृहते, वः इन्द्राय, ब्रह्म, प्रार्चत, वृत्रहा, शतक्रतुः, शतपर्वणा, वज्रेण, वृत्रं, हनति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे मरुतः! | ஹே மருத:! | துதிப்போர்காள்! |
| बृहते | ப்ருஹதே | மகானாகிய |
| वः इन्द्राय | வ: இந்த்ராய | உங்களுடைய இந்திரன் பொருட்டு |
| ब्रह्म | ப்ரஹ்ம | சாமவேதமாகிய தோத்திரத்தைச் |
| प्रार्चत | ப்ரார்சத | இனிது சொல்வீர்களாக. அக்கால் |

| | | |
|---|---|---|
| वृत्रहा | வ்ருத்ரஹா | பாவத்தைத் தொலைக்கின்றவனும் |
| शतक्रतुः | ஶதக்ரதுஃ | நூற்றுக் கணக்கான வேள்வி செய்தவனுமாகிய இந்திரன் |
| शतपर्वणा | ஶதபர்வணா | நூறு வகையாய்ச்செல்கின்ற |
| वज्रेण | வஜ்ரேண | வச்சிராயுதத்தால், விருத்திராசுரனை, அல்லது |
| वृत्रं | வ்ருத்ரம் | பாவத்தை |
| हन्ति | ஹந்தி | நாசஞ் செய்கின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—5. நிருமேத புருமேதர்கள் ரிஷிகள்.

தோத்திரம் பண்ணுவோர்களே! தோத்திரம்பண்ணல் தோத்திரம் பண்ணற்குரியனாந் தன்மையால் உங்களுடைய சம்பந்தியானவனும், மகானுமாகிய இந்திரன் பொருட்டுச் சாமவேதமாகிய தோத்திரத்தை இனிது சொல்வீர்களாக. அதினின்று, மேகத்தை அல்லது, பாவத்தை நாசஞ் செய்பவனும், நூறு வகையான கருமம், அல்லது அறிவை யுடையவனுமாகிய இந்திரன், உங்களாற் றுதிக்கப்பட்டோனாயிருந்து நூறு வகையான தாரைகளை யுடைய வச்சிரம் என்னும் பெயருள்ள ஆயுதத்தால் மழையின் இடையூற்றை, அல்லது விருத்திரன் என்னும் அசுரனைக் கொல்லுகின்றான் என்பதாம். (5)

## மந்திரம் 6.

२१ २र ३ १२ ३१२

258. बृहदिन्द्राय गायत मरुतो वृत्रहन्तमम् ।

२ ३ २ ३१२ ३१२ ३ २३ १२

येन ज्योतिरजनयन्नृतावृधो देवं देवाय जागृवि ॥

இருக்கு 8-89-1.

ப்ருஹதிந்த்ராய காயத மருதோ வ்ருத்ரஹந்தமம் ।
யேந ஜ்யோதிரஜநயந்ந்ருதாவ்ருதோ தேவம் தேவாய ஜாக்ருவி ॥

அந்வயம்

हे मरुतः!, वृत्रहन्तमं, बृहत्, इन्द्राय, गायत, ऋतावृधः, देवाय, देवं, जागृवि, ज्योतिः, येन, अजनयन् ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे मरुतः ! | ஹே மருத꞉! | இன்சொற் கூறுந் துதியாளர்களே! நீவிர் |
| वृत्रहन्तमं | வ்ருத்ரஹந்தமம் | பாவமுழுவதையும் போக்குகின்ற |
| बृहत् | ப்ருஹத் | பிருகத் என்னும் பாடலை |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டுப் |
| गायत | காயத | பாடுவீர்களாக. |
| ऋतावृधः | ருதாவ்ருத꞉ | சத்தியத்தை வளர்க்கின்ற தேவதைகள், அல்லது, இருடிகள், |
| देवाय | தேவாய | பிரகாசமுள்ள இந்திரனுக்கு |
| देवं | தேவம் | திவ்யமாகியதும் |
| जागृवि | ஜாக்ருவி | யாவரையும் விழித்திருக்கச் செய்வதுமாகிய |
| ज्योतिः | ஜ்யோதி꞉ | சோதியை |
| येन | யேந | எந்தச் சாமவேதப் பாடலால் |
| अजनयन् | அஜநயந் | உண்டாக்கினர்களோ, அப் பாடலைப் பாடுவீர்களாக. |

## சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—6. நிருமேத புருமேத ரிஷிகள்.

மருத்துக்களே! அதாவது:—துதிப்போர்களே! நீவிர் பாவ முழுவதையுந் தொலைக்கும் 'பிருகத்சாமம்' என்னுங் கீதப்பாட்டை எமது வேள்வியிற் பாடுவீர்களாக. சத்தியத்தை, அல்லது வேள்வியை வளர்ப்போரான விசுவ தேவர்கள், அல்லது அங்கிரசரென்னும் இருடிகள், பிரகாசமுடைய இந்திரன் பொருட்டு, திவ்யத் தன்மையுடையதும், எல்லாரையும் விழிக்கச் செய்யுஞ் சீலமுடையதுமாகிய சோதியை, எந்தச் சாமவேதப் பாட்டால் இந்திரன் பொருட்டு உண்டாக்கினர்களோ, அச் சாமவேத பாடலைப் பாடுவீர்களாக என முடித்துக்கொள்க. (6)

குறிப்பு.—நமது பகைவரைக் கொல்லுதலிற் சிறந்தவனும், கருமத்தை நிறுவியவனும், பிரகாசத்தை யுண்டுபண்ணியவனுமாகிய இந்திரனைத் துதிப்பீர்களாக என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 7.

२ ३ १ २ २ १ २ ३ २ ३२ ३ १ २
259. इन्द्र क्रतुं न आभर पिता पुत्रेभ्यो यथा ।
१ २ ३ १ २ ३ १ २ ३ १ २२
शिक्षाणो अस्मिन् पुरुहूत यामनि जीवा ज्योतिरशीमहि ॥ ७ ॥

இருக்கு 7-33-26.

ஐந்த்³ர க்ரதும் ந ஆப⁴ர பிதா புத்ரேப்⁴யோ யதா² ।
ஶிக்ஷாணோ அஸ்மிந் புருஹூத யாமநி ஜீவா ஜ்யோதி
[ரஶீமஹி ॥

அந்வயம்.

हे इन्द्र !, नः, क्रतुं, आभर, यथा, पिता, पुत्रेभ्यः, नः, शिक्ष, पुरुहूत !, यामनि, जीवाः, ज्योतिः, अशीमहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்³ர ! | இந்திரனே ! நீ |
| नः | நஃ | எங்கட்கு |
| क्रतुं | க்ரதும் | { கருமத்தை, அல்லது, ஞானத்தைக் |
| आभर | ஆப⁴ர | கொடுப்பாயாக. மற்றும் |
| यथा | யதா² | எவ்வாறு |
| पिता | பிதா | பிதாவானவன் |
| पुत्रेभ्यः | புத்ரேப்⁴யஃ | { புத்திரர்கட்குத் தனங் கொடுக்கின்றனே, அதுபோல் |
| नः | நஃ | எங்கட்கு |
| शिक्ष | ஶிக்ஷ | { அறிவு அல்லது தனங்களைக் கொடுப்பாயாக. |
| पुरुहूत ! | புருஹூத ! | இந்திர ! |
| यामनि | யாமநி | வேள்வியில் |
| जीवाः | ஜீவாஃ | சீவர்களான யாங்கள் |
| ज्योतिः | ஜ்யோதிஃ | சூரியனை |
| अशीमहि | அஶீமஹி | நாடோறு மடைவோமாக. |

## சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—7.** வசிட்ட ரிஷி.

இந்திரனே! நீ எங்கட்குக் கருமத்தையேனும், உண்மை யுணர்வையே னுந் தருவாயாக. மற்றும், தந்தை மகற்குத் தனங்கொடுக்குமாறு எங்கட்குத் தனத்தைத் தருவாயாக. பல்லோராலழைக்கப்படுகின்ற இந்திர! சீவர்க ளான யாங்கள் வேள்வியில் சூரியனை ஒவ்வொரு நாளும் அடைவோமாக. அல்லது, பிராணிகளைப் பிரகாசிப்பிக்கின்ற இந்திரனென்னும் பரமான்மாவே! நீ கருமத்தையேனும், அல்லது தன்னையுணரும் உணர்வையேனும் எங்கட் குத் தருவாயாக என்பது பொருள். அதிலுவமை:—பிதா புத்திரர்கட்கு வித்தையையேனும், அல்லது தனத்தையேனுங் கொடுக்குமாறெனல். பலராலழைக்கப்படுவோய்! இந்திர! யாவர்களாலு மடையத்தக்க இந்தப் பிரமத்தினிடத்தில் சீவர்களான யாங்கள் பரவொளியாய்ச் சேர்வோமாக. (7)

### மந்திரம். 8.

१ २ ३ १२ ३ १ २ ३ १२
260, मा न इन्द्र परावृणग्भवा नः *सधमाद्ये ।
१ २ ३२उ ३ २ ३ १ २ ३ १२
त्वं न ऊती त्वमिन्न आप्यं मा न इन्द्र परावृणक् ॥ ८ ॥

இருக்கு 8-97-7.

𑌮𑌾 𑌨 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑌰𑌾𑌵𑍃𑌣𑌗𑍍𑌭𑌵𑌾 𑌨𑌃 𑌸𑌧𑌮𑌾𑌦𑍍𑌯𑍇 ।
𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌊𑌤𑍀 𑌤𑍍𑌵𑌮𑌿𑌨𑍍𑌨 𑌆𑌪𑍍𑌯𑌂 𑌮𑌾 𑌨 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑌰𑌾𑌵𑍃𑌣𑌕𑍍 ॥

#### அங்வயம்.

हे इन्द्र !, नः, मा परावृणक् , नः, सधमाद्ये, भव, इन्द्र !, नः, त्वमित् , ऊती, त्वं, नः, आप्यं, इन्द्र !, नः, मा परावृणक् ॥

#### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | 𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திரனே ! நீ |
| **नः** | 𑌨𑌃 | அவிகொடுக்கின்ற எங்களை |
| **मा परावृणक्** | 𑌮𑌾 𑌪𑌰𑌾𑌵𑍃𑌣𑌕𑍍 | விட்டுவிடாதே. |
| **नः** | 𑌨𑌃 | எங்களுடைய |
| **सधमाद्ये** | 𑌸𑌧𑌮𑌾𑌦𑍍𑌯𑍇 | களிப்புக்குக்காரணமாகிய வேள்வியில் (சோமரசமருந்துவதற்குத்) |
| **भव** | 𑌭𑌵 | தோன்றுவாயாக. |

* सधमादः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| इन्द्र ! | ஊந்த்ர ! | இந்திரனே ! |
| नः | நஃ | எங்களை |
| त्वमित् | க்வமித் | நீயே |
| ऊती | ஊதீ | பாதுகாப்பில் வைப்பாயாக. |
| त्वं | க்வம் | நீ |
| नः | நஃ | எங்கட்கு |
| आप्यं | ஆப்யம் | சுற்றத்தோனாகின்றாய். |
| इन्द्र ! | ஊந்த்ர ! | இந்திரனே ! நீ |
| नः | நஃ | எங்களைத் |
| मा परावृणक् | மா பராவ்ருணக் | தள்ளி விடாதே. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—8. ரேப ரிஷி.

...ர! நீ அவி கொடுக்கின்ற எங்களை விட்டு விடாதே. (மேலும்) இப்பெ... ளை கூறப்படுகின்றது, நீ எங்களுடைய களிப்புக்குக் காரணமாகிய வேள்வியில் சோமரச மருந்துவதற்கு வெளிப்படுவாயாக. அன்றியும் இந்திரனே! எங்களை நீயே பாதுகாப்பில் நிலை நிறுத்துவாயாக. அல்லது நீயே உண்மையில் எங்களைக் காப்பாற்றுவோனா...வாய். அங்ஙனமே நீயே எங்கட்குச் சுற்றத்தானாகின்றாய், இதனால் எ...த் தள்ளிவிடாதே என்பது திரண்ட பொருள். (8)

## மந்திரம் 9.

३१ २ ३ १२ ३ २ ३ २ ३ १२
261. वयं घ त्वा सुतावन्त आपो न वृक्तबर्हिषः ।
३ १ २ ३ १२ ३ १२ ३ १२
पवित्रस्य प्रस्रवणेषु वृत्रहन् परि स्तोतार आसते ॥ ९ ॥

இருக்கு 8-33-1.

வயம் வ க்வா ஸுதாவந்த ஆபொ ந வ்ருக்தபர்ஹிஷஃ ।
பவித்ரஸ்ய ப்ரஸ்ரவணெஷு வ்ருத்ரஹந் பரி ஸ்தோதார
[ஆஸதே ॥

அந்வயம்.

हे वृत्रहन्!, त्वा, वयं, घ, सुतावन्तः, आपः न, पवित्रस्य, प्रस्रवणेषु, वृक्तबर्हिषः स्तोतारः, परि आसते ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वृत्रहन्! | ஹெ வ்ருத்ரஹந்! | விருத்திரனைக் கொன்ற இந்திரனே! |
| त्वा | த்வா | நின்னைக் குறித்து |
| वयं | வயம் | நாங்கள் |
| घ | வ | உண்மையில் |
| सुतावन्तः | ஸுதாவந்தः | சோமரசந் தேடினவர்களாய் |
| आपः न | ஆபः ந | நீரைப்போல அடைகின்றோம். |
| पवित्रस्य | பவித்ரஸ்ய | நிருமலமாகிய சோமத்தைப் பிழிந்து |
| प्रस्रवणेषु | ப்ரஸ்ரவணெஷு | இரச மெடுக்குமிடத்து |
| वृक्तबर्हिषः | வ்ருக்தபர்ஹிஷः | தருப்பாசனம் விரிக்கின்ற |
| स्तोतारः | ஸ்தோதாரः | துதிப்போர்களும் |
| परि आसते | பரி ஆஸதெ | நின்னையே வழிபடுகின் |

## சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. மேதாதிதி ரிஷி.

விருத்திரனைக் கொன்றோய்! இந்திர! உன்னைக் குறித்து நாங்கள் உண்மையில் சோமரசம் பிழிந்தெடுத்தோம். (மற்றும்) நீரை[illegible] பாலடைகின்றோம். பவித்திரமாகிய சோமரச மெடுக்குமிடத்[illegible] பையாசனம் விரித்து வைத்திருக்கின்ற துதிப்போர்களும் நின்[illegible] சிக்கின்றார்கள்.

## மந்திரம்.

१ २ ३ १ २ ३ १ २र ३ १ २ ३ १ २
262. यदिन्द्र नाहुषीष्वा ओजो नृम्णं च कृष्टिषु ।
२ ३ १ २ ३ २ ३ १ २र ३ १ २र ३ १ २
यद्वा पञ्चक्षितीनां द्युम्नमाभर सत्रा विश्वानि पौंस्या ॥ १० ॥

இருக்கு 6-46-7.

யதிந்த்ர நாஹுஷீஷ்வா ஓஜோ ந்ருண்ணம் வ க்ருஷ்டிஷு ।
யத்வா பஞ்சக்ஷிதீநாம் த்யும்நமாபர ஸத்ரா விஶ்வாநி பௌம்ஸ்யா ॥

## அந்வயம்.

हे इन्द्र !, नाहुषीषु, कृष्टिषु, ओजः, च, नृम्णं, यद्वा, पञ्च, क्षितीनां, द्युम्नं, आभर, सत्रा, विश्वानि, पौंस्या ॥

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர | |
| [illegible]षीषु | நாஹுஷீஷு | மக்களான |
| कृष्टिषु | க்ருஷ்டிஷு | பிரசைகளுக்குள் இருக்கின்ற |
| ओजः | ஓஜஃ | ஆற்றலையும் |
| नृम्णं च | ந்ருஂணம் ச | தனத்தையும் |
| यद्वा | யத்வா | அல்லது |
| पञ्च क्षितीनां | பஞ்ச க்ஷிதீநாம் | வேடனை ஐந்தாவதாகக்கொண்ட நான்கு வருணத்தவர்களின் |
| द्युम्नं | த்யும்நம் | விளங்குகின்ற அன்னங்களனைத்தையுங் |
| आभर | ஆபர | கொடுப்பாயாக. அவ்வாறே |
| सत्रा | ஸத்ரா | பெரிதான |
| विश्वानि | விஶ்வாநி | எல்லா |
| पौंस्या | பௌம்ஸ்யா | ஆற்றல்களையுங் கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—10. பரத்துவாச ரிஷி.

இந்திரனே! மனிதர்களிடத்து எவ்வளவு ஆற்றலுந், தனங்களும் உள்ளனவோ, அவைகளையும், அல்லது வேடனை ஐந்தாவதாகக்கொண்ட நான்கு வருணத்தவர்களின் அன்ன மனைத்தையும் எங்கட்குக் கொடுப்பாயாக. அவ்வாறே பேராற்றல்களையும் எங்கட்குத் தருவாயாக. (10)

ஈண்டு மூலத்திலுள்ள ஆகாரம் சேர்க்கைப் பொருளில் நின்றது.

குறிப்பு—'நகுஷ' என்பது மனிதரின் பெயர், என நிருத்தம் 2-9-ல் கூறியுள்ளது.

## மூன்றுவது கண்டம்.

முற்றும்.

பத்து மந்திரங்களாலானது.

## மந்திரம் 1.

३ २ १ १ २र ३ १२ ३ २
263. सत्यमित्था वृषेदसि वृषजूति*र्नोऽविता ।
२ ३क२र ३ २ २ ३२ ३ १ २ ३१ २ ३१
वृषाह्युग्र शृण्विषे परावति वृषो अर्वावति श्रुतः ॥ १ ॥

இருக்கு ४-33-01.

ஸத்யமித்தா வ்ருஷேதஸி வ்ருஷஜூதிர்நோऽவிதா ।
வ்ருஷாஹ்யுக்ர ஶ்ருண்விஷே பராவதி வ்ருஷோ அர்வாவதி ஶ்ருதஃ ॥

அந்வயம்.

हे उग्र!, (त्वं), सत्यं, इत्था, वृषा, इत्, असि, वृषजूतिः, नः, अविता, वृषाहि, शृण्विषे, परावति, वृषेव, अर्वावति, वृषः, श्रुतः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे उग्र! | ஹே உக்ர! | வேகமுள்ள இந்திர! |
| (त्वं) | (த்வம்) | (நீ) |
| सत्यं | ஸத்யம் | உண்மையாக |
| इत्था | இத்தா | இவ்வாறு |
| वृषा इत् असि | வ்ருஷா இத் அஸி | விருப்பத்தை மழையெனப் பெய்வோனாகவே இருக்கின்றாய். |
| वृषजूतिः | வ்ருஷ ஜூதிஃ | சோமரசந் தெளிப்போர்களால் அழைக்கப்பட்டோனாகி |
| नः | நஃ | எங்களைக் |
| अविता | அவிதா | காப்பாற்றுவோனாகின்றாய். |

* नोऽवृतः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர | |
| [illegible]दृषीषु पराव[illegible] | [illegible] | |
| वृषेव | | [illegible]ண்டியவைகளை வருஷிக்கின்ற வனாகவே இருக்கின்றாய். |
| अर्वावति | அர்வாவதி | அருகிலிருந்து |
| वृषः | வ்ருஷ: | மனோவேட்கையை நிறைவேற்றச் செய்வோனெனவும் |
| श्रुतः | ச்ருத: | கேட்கப்பட்டிருக்கின்றாய். (சொல்லப்பட்டிருக்கின்றாய்.) |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—1. மேதாதிதி ரிஷி.

வேகமுள்ள இந்திரனே! நீ உண்மையாய் இன்னணம் விரும்பியதை மழையெனப் பொழிவோனாகவேயிருக்கின்றாய். சோமரசத்தைத் தெளிப்போர்களாலும், பிழிந்தெடுப்போர்களாலும் அழைக்கப்பட்டோனாய், எங்களைப் பாதுகாப்போனாயிருக்கின்றாய். வரதானங்களைப் பொழிகின்றவன் எனச்சொல்லப்படுகின்றாய். நீ தூரத்திலிருப்பவனாயினும் வேண்டியவைகளைப் பொழிகின்றவனாகவே இருக்கின்றாய். அருகிலிருந்து விரும்பியவைகளைப் பொழிகின்றேன் எனவே கேட்கப்படுகின்றாய். அதாவது சொல்லப்படுகின்றாய் என்பது பொருள். (1)

மந்திரம் 2.

२ ३ १ २ ३ २ ३ १२ ३ १ २

264. यच्छक्रासि परावति यदर्वावति वृत्रहन् ।

१२ ३ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २

अतस्त्वा गीर्भिर्द्युगदिन्द्र केशिभिः सुतावाँ आविवासति ॥ २ ॥

இருக்கு 8-97-4.

யச்சக்ராஸி பராவதி யதர்வாவதி வ்ருத்ரஹந் ।
அதஸ்த்வா கீர்பிர்த்யுகதிந்த்ர கேசிபி: ஸுதாவாம் ஆவிவாஸதி ॥

அந்வயம்.

हे शक्र !, परावति, यत्, असि, वृत्रहन्, यत् अर्वावति, अतः, इन्द्र !, द्युगत्, केशिभिः, गीर्भिः, त्वा, सुतवान्, आविवासति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे शक्र! | ஹெ ஶக்ர! | இந்திரனே! நீ |
| परावति | பராவதி | தூரமாகிய வானுலகில் |
| यत् असि | யத் அஸி | இருப்பையேல் (அதினின்றும்) ...ற்றும் |
| वृत्रहन्! | வ்ருத்ரஹந்! | இந்திர! |
| यत् अर्वावति | யத் அர்வாவதி | அதினின்றும் அருகிலுள்ள அந்தரிக்கத்திலிருப்பையேல் (அதினின்றும்) |
| अतः | அதஃ | அல்லது, இம் மண்ணுலகினின்றேனும் |
| इन्द्र! | இந்த்ர! | இந்திர! |
| द्युगत् | த்யுகத் | சுவர்க்கத்திற்குச் செல்கின்ற |
| केशिभिः | கெஶிபிஃ | குதிரைகளைப் போன்றுள்ள |
| गीर्भिः | கீர்பிஃ | தோத்திரங்களால் |
| सुतवान् | ஸுதவாந் | சோமந் தேடப்பட்ட வேள்வித் தலைவன் |
| त्वा | த்வா | உன்னையே |
| आविवासति | ஆவிவாஸதி | வேள்விக்கு அழைக்கின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—2. ரேபரிஷி.

சத்துருவைக் கொல்லும் ஆற்றலுடைய இந்திர! (நின்னை) தூரமாகிய சுவர்க்கலோகத்திலிருக்கும்போதேனும், விருத்திரனைக் கொன்ற இந்திர! அல்லது, அதினின்றுங் கீழேயுள்ள (அதை நோக்க அருகிலுள்ள) வானிலிருக்கும்போதேனும், அல்லது, இந்தப் பூவுலகிலிருக்கும்போதேனும், யாண்டுஞ் செல்லுகின்ற கேசங்களையுடைய அசுவம்போன்று இருக்கப்பட்ட தோத்திரங்களால் இந்திர! சோமரசம் பிழிந்த வேள்வித்தலைவன் தனது வேள்வியைக் குறித்து அவ்வுலகங்களினின்று (வருமாறு) அழைக்கின்றான். அல்லது உன்னை இத் தோத்திரங்களால் ஆராதிக்கின்றான் என்பதாம். (2)

குறிப்பு.—நீண்ட மயிர்களுள்ள குதிரைகளையுடைய இந்திரன் என்பது ஆங்கிலம்.

## மந்திரம் 3.

३ १ २ ३१ २र३ १२ ३ २ ३ १ २र
265. अभि वो वीरमन्धसो मदेषु गाय गिरा महा विचेतसम् ।
२ ३ २ ३ १ २ ३ २ ३ २ ३ १ २
इन्द्रं नाम श्रुत्यं शाकिनं वचो यथा ॥ ३ ॥

இருக்கு 8-46-4.

அபி வொ வீரமந்தஸொ மதெஷு காய கிரா மஹா விசெதஸம் ।
இந்த்ரம் நாம ஶ்ருத்யம் ஶாகிநம் வசொ யதா ॥

### அந்வயம்.

(हे उद्गात्रादयः !,) वः, (हे यजमानाः !) वः, अन्धसः, मदेषु, वीरं, नाम, विचेतसं, श्रुत्यं, शाकिनं, इन्द्रं, महा, गिरा, वचः, यथा, गाय ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे उद्गात्रादयः ! | ஹெ உத்³கா³த்ராத³ய: ! | சாமமறை பாடுவோர் முதலியோர்களே ! அல்லது |
| (हे यजमानाः !) | (ஹெ யஜமாநா: !) | எசமானர்களே ! |
| वः | வ: | உங்களுடைய நலத்தின்பொருட்டு |
| अन्धसः | அந்த⁴ஸ: | சோமத்தைத் |
| मदेषु | மதெ³ஷு | தேடும் பொழுதுகளில் |
| वीरं | வீரம் | சத்துருவைப் பயமுறுத்துவோனும் |
| नाम | நாம | சத்துருவைப் பணியச்செய்வோனும் |
| विचेतसं | விசெதஸம் | சிறந்த உணர்வுடையவனும் |
| श्रुत्यं | ஶ்ருத்யம் | யாண்டுந் துதித்தற்குரியோனும், |
| शाकिनं | ஶாகிநம் | ஆற்றலுடையோனு மாகிய |
| इन्द्रं | இந்த்³ரம் | இந்திரனை, |
| महा | மஹா | பெரிதாகிய |
| गिरा | கி³ரா | தோத்திரத்தால் |
| वचः | வச: | உங்களுடைய வாக்கு |
| यथा | யதா² | எவ்வாறு எழுகின்றதோ அவ்வாறே |
| अभिगाय | அபி⁴கா³ய | இனிது பாடுவீர்களாக. |

## சாயண பாடியம்.

**கண்டம்—4. இருக்கு—3. வத்ச ரிஷி.**

இம் மந்திரத்தை பிபீலிகா மத்தியா பிருகதி என்பார் இருக்கோதுவார். முதல் ஈற்றிலுள்ள பாதங்கள் பதின்மூன்றெழுத்துகள் இடையில் எட்டெழுத்துகள் கொண்டது என்பர் திரிபதிகள்.

சாமமறை யோதுவோர் முதலியோர்களே! நீவிர், அல்லது வேள்வித் தலைவர்களே! நீவிர், உங்கணலத்தின் பொருட்டுச் சோமரசம் பிழிந்தெடுக்குங் காலங்களில், சத்துருவைப் பயப்படுத்துவோனும், சத்துருவைப் பணியச் செய்பவனும், மெய்யுணர்வுடையோனும், யாண்டுங் கேட்கத் தக்கோனும், அல்லது துதிக்கத் தக்கோனும், வலிவுடையானுமாகிய இந்திரனை மகத்தாகிய தோத்திரத்தால் உங்களுடைய வாக்கு எவ்வாறெழுகின்றதோ, அவ்வாறே அதாவது:—காயத்திரிப் பாடலாலேனும், அல்லது திருஷ்டுப், பாடலாலேனும் தோத்திரஞ் செய்வீர்களாக என்பதாம். (3)

## மந்திரம் 4.

१ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ ३
266. इन्द्र त्रिधातु शरणं त्रिवरूथꣳ स्वस्तये ।
३ १ २ ३ १२ ३ १२ ३ १ २ ३ १२
छर्दिर्यच्छ मघवद्भ्यश्च मह्यञ्च यावया दिद्युमेभ्यः ॥ ४ ॥

இருக்கு 6-46-90.

இந்த்ர த்ரிதாது ஶரணம் த்ரிவரூதம் ஸ்வஸ்தயே ।
சர்திர்யச்ச மகவத்ப்யஶ்ச மஹ்யஞ்ச யாவயா தித்யுமேப்ய꞉ ॥

அந்வயம்.

**हे इन्द्र !, त्रिधातु, त्रिवरूथं, स्वस्तये, छर्दिः, शरणं, मघवद्भ्यः, मह्यञ्च, एभ्यः, दिद्युं, यावया ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| त्रिधातु | த்ரிதாது | மூவகை நிமித்தங்களாலாய |
| त्रिवरूथं | த்ரிவரூதம் | {குளிர், வெயில், மழைகளென்னும் மூன்றையுங் (குறித்து) |
| स्वस्तये | ஸ்வஸ்தயே | மங்கலத்தின் பொருட்டு |
| छर्दिः | சர்தி꞉ | மேல் மூடப்பட்டுள்ள |
| शरणं | ஶரணம் | வீட்டை (இல்லத்தை) |

| | | |
|---|---|---|
| नः | நஃ | எமது |
| वचः | வசஃ | வேள்வியின் துதிவடிவ வாக்கை |
| नु | நு | விரைவாகப் |
| पातु | பாது | பாதுகாத்திடுக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—7. வாமதேவ ரிஷி.

'துவஷ்டா' என்னும் பெயர் பூண்ட உருவத்தை யபிமானிக்குந் தேவதை எங்களுடைய வாக்கைக் காப்பாற்றுக. 'பிரமணற்பதி' என்னும் மந்திராபிமானி தேவதை எங்களுடைய வாணியைப் பரிபாலிக்குக. மற்றும் வரையப்படாத, அல்லது, தீனத்தன்மையற்ற 'அதிதி' என்னுந் தேவமாதா வானவர் தமது புத்திர சகோதரர்களுடன், பகைஞரால் தாழ்த்தக்கூடாததும் பரிபாலிக்கத் தக்கதுமாகிய எமது வாக்கைப் பாதுகாப்பவராகுக என்பதாம். (7)

குறிப்பு.—துவஷ்டா தேவதை வாக்கைக் கொடுக்குக, பிரமணற்பதி மழையைப் பெய்விக்குக. அதிதி தேவியார் சத்துருக்களின் உபத்திரவத்தினின்று எம்மையும், எமது புத்திர பௌத்திரர்களையுங் காப்பாற்றுவாராக என்பர் சிலர்.

## மந்திரம். 8.

३ २ ३२ ३ १२३ १ २ ३ १२
300. कदाचन स्तरीरसि नेन्द्र सश्चसि दाशुषे ।
२ ३ १ २२ २ ३ २उ ३ १ २ ३ १ २
उपोपेन्नु मघवन् भूय इन्नु ते दानं देवस्य पृच्यते ॥ ८ ॥

இருக்கு 8-53-7.

கதாசந ஸ்தரீரஸி நேந்த்ர ஸஶ்சஸி தாஶுஷே ।
உபோபேந்நு மகவந் பூய இந்நு தே தாநம் தேவஸ்ய
[ப்ருச்யதே

அந்வயம்.

हे इन्द्र !, कदाचन, स्तरीः, न असि, दाशुषे, सश्चसि, मघवन्, देवस्य, ते, भूयः, दानं, उपोपेत्, पृच्यते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! நீ |
| कदाचन | கதாசந | ஓர் போதும் |
| स्तरीः | ஸ்தரீঃ | துன்புறுத்துவோனாய் |
| न असि | ந அஸி | இருக்கின்றிலை. |
| दाशुषे | தாஶுஷே | அவிகொடுப்போனுக்கு |
| सश्चसि | ஸஶ்சஸி | (பயனை) அடைவிக்கின்றாய். |
| मघवन् ! | மகவந் ! | தனமுடையோய் ! |
| देवस्य | தேவஸ்ய | பிரகாசமுடைய |
| ते | தே | உனது |
| भूयः | பூயঃ | மிகுந்த |
| दानं | தாநம் | ஈகையானது |
| उपोपेत् पृच्यते | உபோபேத் ப்ருச்யதே | எம்பாலே வந்து சேர்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—8. பால கில்லியர்கள் ரிஷிகள்.

இந்திரனே! நீ, ஓர் காலும் துன்புறுத்துவோனாகாய். அதாவது மலட்டாவைப் போல ஆகமாட்டாய் என்பதாம். மலட்டு ஆ கன்றைக் கருதி வீட்டிற்குச் செல்லாவாறு செய்யமாட்டாய் என்பது பொருள். மற்றே, அவி கொடுக்கின்ற வேள்வித் தலைவன் பொருட்டு வருவாய். அதாவது எம்மை வந்தடைவாய் என்பதாம். தனமுடைய இந்திர! ஒளி முதலிய குணங்களையுடைய உனது வர தானம் எங்களிடத்திலேயே சேர்கின்றது. மலட்டுப் பசுப்போலிராது, நீ எங்களிடம் வந்து எமக்கு வேண்டிய வரத்தைத் தருகின்றாய் என்பது கருத்து. (8)

## மந்திரம் 9.

३ १ २र ३ १२ ३१२
301. * युङ्क्ष्वा हि वृत्रहन्तम हरी इन्द्र परावतः ।
३ १२३ १ २ ३२ ३ २ ३ १
अर्वाचीनो मघवन्त सोमपीतय उग्र ऋष्वेभिरागहि ॥ ९ ॥

இருக்கு 8-3-17.

யுங்க்ஷ்வா ஹி வ்ருத்ரஹந்தம ஹரீ இந்த்ர பராவதঃ ।
அர்வாசீநோ மகவந்த ஸோமபீதய உக்ர ருஷ்வேபிராகஹி ॥

† युक्ष्वाहि, என்பது இருக்கு.

அந்வயம்.

हे वृत्रहन्तम!, हि, हरी, युङ्क्ष्व, मघवन्!, उग्रः, सोमपीतये, अर्वाचीनः, ऋष्वेभिः, मरुद्भिः, परावतः, आगहि ॥

பதவுரை.

| हे वृत्रहन्तम! | ஹே வ்ருத்ரஹந்தம ! | விருத்திரனைக் கொன்ற சிறப்புடையோய் ! |
|---|---|---|
| हि | ஹி | நிச்சயமாக |
| हरी | ஹரீ | நினது குதிரைகளை |
| युङ्क्ष्व | யுங்க்ஷ்வ | இரதத்திற் பூட்டுவாயாக. |
| मघवन्! | மகவந் ! | இந்திர ! |
| उग्रः | உக்ர: | மிகுந்த ஆற்றலுடைய நீ |
| सोमपीतये | ஸோமபீதயே | சோமரசம் அருந்துவதற்கு |
| अर्वाचीनः | அர்வாசீந: | எம்பால் நோக்கமாய் |
| ऋष्वेभिः | ருஷ்வேபி: | காணத் தக்க |
| मरुद्भिः | மருத்பி: | மருத்துக்களாய தேவதைகளுடன் |
| परावतः | பராவத: | பரவுலகினின்றும் |
| आगहि | ஆகஹி | வருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—9. மேதாதிதி அல்லது மேத்தியாதிதி ரிஷி.
விருத்திரனைக் கொன்ற சிறப்பு மலிந்தோய்! அதாவது :—மறித்தும் எழாவாறு கொன்றோய்! என்பதாம். நினது குதிரைகளை இரதத்திற் பூட்ட வேண்டும். தனமுடைய இந்திர! உயர்ந்த வன்மையுள்ள நீ சோமரசம் அருந்துதற் பொருட்டு எம்பால் நோக்கமாயுள்ள மருத்துக்களோடு தூரமாகிய வானுலகிலிருந்து வருவாயாக என்பதாம். (9)

'ஹி' என்னுஞ் சொல் தேற்றப் பொருளினின்றது.

## மந்திரம் 10.

२ ३ १ २र ३ १ २
302. त्वामिदा ह्यो नरोऽपीप्यन् वज्रिन् भूर्णयः ।
१ २ ३ १ २ ३३ ३ २ ३ १ २३ २
स इन्द्र *स्तोमवाहस इह श्रुध्युप स्वसरमागहि ॥ १० ॥

இருக்கு 8-99-1.

* स्तोमवाहसामिह, என்பது இருக்கு.

த்வாமிதா ஹ்யோ நரோऽபீப்யந் வஜ்ரிந் பூர்ணய: ।
ஸ இந்த்ர ஸ்தோமவாஹஸ இஹ ஶ்ருத்யுப ஸ்வஸரமாகஹி ॥

அந்வயம்.

हे वज्रिन्!, त्वां, भूर्णयः, नरः, इदा, ह्यः, अपीप्यन्, इन्द्र!, सः, स्तोमवाहसः, इह, श्रुधि, स्वसरं, उपागहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे वज्रिन्** | ஹே வஜ்ரிந் ! | வச்சிராயுதத்தைத் தாங்கினோய் ! |
| **त्वां** | த்வாம் | நினக்கு |
| **भूर्णयः** | பூர்ணய: | அவிகொடுப்போனாகிய |
| **नरः** | நர: | வேள்வி நாயகன் |
| **इदा** | இதா | இன்றும் |
| **ह्यः** | ஹ்ய: | முந்திய, தினமும், |
| **अपीप्यन्** | அபீப்யந் | சோமரசம் அருந்துவித்தனன். |
| **सः** | ஸ: | அத்தகைய |
| **इन्द्र!** | இந்த்ர ! | இந்திரனே ! நீ |
| **स्तोमवाहसः** | ஸ்தோமவாஹஸ: | தோத்திரஞ் செய்கின்றோனாகிய (எமது துதியை) |
| **इह** | இஹ | இவ் வேள்வியிற் |
| **श्रुधि** | ஶ்ருதி | கேட்பாயாக. |
| **स्वसरं** | ஸ்வஸரம் | எமதிடத்திற்கு |
| **उप आगहि** | உப ஆகஹி | வருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—10. நிருமேத ரிஷி.

வச்சிராயுதந் தாங்கிய இந்திர ! நின்னைக்குறித்து அவிகளை நிறையக் கொடுக்குஞ் சிலர்களான வேள்வித் தலைவர்கள், இன்றும், நேற்றும், நின்னைச் சோமரச மருந்தச் செய்தனர். அத்தகைய இந்திர ! நீ துதியாளர்களான எங்களுடைய தோத்திரத்தை இவ் வேள்வியிற் கேட்பாயாக. எமது வீட்டிற்கும் வருவாயாக. (10)

**குறிப்பு.**—ஈண்டுச் 'சுவ:சரம்' என்றது வீடாம். (நிருத்தம் 3·4·10)ல் இது வீட்டின் பெயர்களுட் கூறப்பட்டிருத்தலின் என்க.

## ஏழாவது கண்டம்

முற்றும்.

| | | |
|---|---|---|
| वां | வாம் | உங்களிருவரையும் |
| अवसे | அவஸெ | தனது காப்பின்பொருட்டு, அல்லது, உங்கள் திருப்தியின் பொருட்டு |
| अह्वे | அஹ்வெ | அழைக்கின்றேன். |
| हि | ஹி | யாதினாலெனின் ? நீவிர் |
| विशं विशं | விஶம் விஶம் | தம்மைத் துதிக்கின்ற ஒவ்வொருவரிடத்தும் |
| गच्छथः | கச்சத: | செல்கின்றவர்கள் (ஆதலின் என்க.) |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—2. வசிட்ட ரிஷி.

வானுலகை விரும்புகின்ற இச் சனங்களும், (மற்றும்) வேட்போர்களும், அசுவினி குமாரர்காள்! வியாபகமான உங்களை யழைக்கின்றார்கள். இத் தன்மைய வசிட்டனாகிய நானும், கருமத்தைத் தனமாகக் கொண்டோர்களே! உங்களிருவரையும் என்னைப் பாதுகாக்கும்பொருட்டு, அல்லது, உங்களிருவரையுங் களிப்படைவித்தற் பொருட்டு அழைக்கின்றேன். எதன் பொருட்டுப் பிரசைகளும் யானும் நினக்கு அன்பு கூறல் எனின் ? ஆண்டுக் கூறப்படுகின்றது. தம்மைத் துதிக்கின்றவர்கள் ஒவ்வொருவரிடத்தும் தாமே செல்கின்றீர்கள் ஆதலின் என்க. தோத்திரம் பண்ணுகின்ற மக்களை முன்னிட்டு நீங்களிருவரும் உண்மையாய்ச் செல்கின்றீர்கள் ; அதனால், இவ்வாறு (உங்கட்கு) இன்சொற் கூறப்படுகின்றது என்பதாம். (2)

## மந்திரம் 3.

२ ३ १ २ ३ १ २ ३ १ २

305. कु ष्ठः को वामश्विना तपानो देवा मर्त्यः ।

३ १ २ ३ १ २र ३ २ ३ २ ३ २ ३ १ २

घ्नता वामश्नया क्षपमाणोंऽशुनेत्थमु आद्वन् यथा ॥ ३ ॥

கு ஷ்ட: கொ வாமஶ்விநா தபாநொ தெவா மர்த்ய: ।

க்நதா வாமஶ்நயா க்ஷபமாணொம் ஶுநெத்தமு ஆத்வந் யதா ॥

அந்வயம்.

देवा, अश्विना, कु ष्ठः, कः, मर्त्यः, वां, तपानः, वां, अश्नया, घ्नता, अंशुना, क्षपमाणः, आद्वन् यथा, इत्थं उ ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| देवा | தெவா | பிரகாசமுடைய |
| अश्विना ! | அஶ்விநா ! | அசுவினி குமாரர்களே ! |
| कुत्रः | க்ஷூ: | தரையில் வாழ்கின்ற |
| कः मर्त्यः ? | கঃ மர்த்ய: ? | எம்மனிதர் ? |
| वां | வாம் | உங்களைப் |
| तपानः | தபாந: | பிரகாசிப்பவர்கள் ? (யாருமிலர்.) |
| वां | வாம் | உங்கணிமித்தம் |
| अश्मया | அஶ்மயா | கல்லால் |
| घ्नता | க்நதா | இடித்துச் |
| अंशुना | அம்ஶுநா | சோமரசத்தைப் பிழிந்ததால் |
| क्षपमाण: | க்ஷபமாண: | களைப்புற்ற வேள்வித் தலைவன் |
| आद्दन् यथा | ஆஹ்நு யதா | அரசனைப்போல |
| इत्थं उ | இத்தம் உ | இத்தன்மைய ஐசுவரியமுடைய வனாகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—3. அசுவினிகள் வைவசுவத ரிஷிகள்.

பிரகாசிக்கின்ற அசுவினி குமாரர்களே! உங்களைப் பூமியின்கண்ணுள்ள எம் மனிதர் (மரண சீலமுள்ள துதிப்போர்) பிரகாசிக்க வல்லார்? ஒருவருமிலர் என்பது பொருள். உங்கள் நிமித்தம், பிழிவதற்குக் கருவியாகிய கல்லாலிடித்துச் சோமரசம் எடுத்தலால், அல்லது, எங்களாற் பிழிந்தெடுக்கப்பட்டு உங்களைச் சேருகின்ற சோமரசத்தால் களைப்புற்ற வேள்வித் தலைவன் இவ்வாறாகவே யாகின்றான். அதாவது மிகுந்த ஐசுவரியமுடையானாகின்றான் என்பது பொருள். (யாரைப் போலெனின்றோ?) வேண்டிய அன்னரச முதலியவைகளை யருந்துகின்ற மன்னன் முதலியோர் போல. அவ் வேந்தன் எவ்வாறு மிகுந்த விருத்தி யுடையோனாய் எடுத்துக் காட்டுவதற்கு விடயமாகின்றானோ, அங்ஙனமே இவனுமாகின்றான் என்பதாம். (3)

மந்திரம் 4.

३१ ३ १२ ३२उ ३ १२
306. अयं वां मधुमत्तमः सुतः *सोमो दिविष्टिषु ।
१२ ३ १ २ ३ १ २र ३१२
तमश्विना पिबतं तिरो अन्ह्यं धत्तꣳ रत्नानि दाशुषे ॥ ४ ॥

இருக்கு 1-47-1.

* साम ऋतावता, என்பது இருக்கு.

அயம் வாம் மதுமத்தம꞉ ஸுத꞉ ஸோமோ திவிஷ்டிஷு ।
தமஶ்விநா பிபதம் திரோ அஹ்ந்யம் தத்தம் ரத்நாநி தாஶுஷே ॥

அந்வயம்.

हे अश्विना !, वां, दिविष्टिषु, मधुमत्तमः, अयम् सोमः, सुतः, तिरो अन्ह्यं, पिबतं, दाशुषे, रत्नानि, धत्तं ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अश्विना !** | ஹே அஶ்விநா ! | அசுவினி குமாரர்காள் ! |
| **वां** | வாம் | உங்கட்கு |
| **दिविष्टिषु** | திவிஷ்டிஷு | வேள்விகளில் |
| **मधुमत्तमः** | மதுமத்தம꞉ | தீஞ்சுவை மிகுந்த |
| **अयं सोमः** | அயம் ஸோம꞉ | இச் சோமரசம் |
| **सुतः** | ஸுத꞉ | பிழியப்பட்டிருக்கின்றது. |
| **तिरो अन्ह्यं** | திரோ அஹ்ந்யம் | முற்பகற் றேடிய சோமரசத்தை |
| **पिबतं** | பிபதம் | அருந்துவீர்களாக. |
| **दाशुषे** | தாஶுஷே | அவிகொடுக்கின்ற வேள்வித் தலைவனுக்கு |
| **रत्नानि** | ரத்நாநி | இரத்தினங்களைக் |
| **धत्तं** | தத்தம் | கொடுப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—8. பிரகண்ணுவ ரிஷி.

அசுவினி குமாரர்காள் ! உங்களுக்கு வியனுலகு வேட்கும் வேள்விகளில், இச் (முன்னுள்ள) சோமரசம் பிழிந்தெடுக்கப்பட்டிருக்கின்றது. (அது எவ்வண்ணமானதெனின் ?) மிகச் சுவையுடையது. சென்ற முன் தினத்தில் பிழிந்தெடுத்த அச் சோமரசத்தை யருந்திக்கொண்டு, அவி கொடுக்கின்ற வேள்வித் தலைவனுக்கு இரமணீயமான தனங்களைக் கொடுப்பீர்களாக என்பதாம். (4)

மந்திரம் 5.

२ ३ १२ ३ १ २ ३ २ ३ १ २३१ २
307. * आ त्वा सोमस्य गल्दया सदा याचन्नहं † ज्या ।
१ २ ३२ २२ ३ १ २२३ १ २
भूर्णिं मृगं न सवनेषु चुक्रुधं क ईशानं न याचिषत् ॥ ५ ॥

இருக்கு 8-1-20.

* मात्वा, † गिरा, என்பன இருக்கு.

ஆ த்வா ஸோமஸ்ய கல்தயா ஸதா யாசந்நஹம் ஜ்யா ।
பூர்ணிம் ம்ருகம் ந ஸவநேஷு சுக்ருதம் க ஈசாநம்
[ந யாசிஷத் ॥

அந்வயம்.

हे इन्द्र !, भूर्णिं, मृगं न, त्वा, सवनेषु, सोमस्य, गल्दया, ज्या, अहं, सदा, याचन्, आचुक्रुधं, कः, ईशानं, न, याचिषत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| भूर्णिं | பூர்ணிம் | தலைமையாகிய |
| मृगं न | ம்ருகம் ந | சிங்கம் போன்ற |
| त्वा | த்வா | உன்னை |
| सवनेषु | ஸவநேஷு | வேள்விகளில் |
| सोमस्य | ஸோமஸ்ய | சோமரசத்தின் |
| गल्दया | கல்தயா | பெருக்கோடும் |
| ज्या | ஜ்யா | வெற்றித்தன்மையுள்ள தோத்திரத்தோடுங்கூடிய யான் |
| सदा | ஸதா | எக்காலும் |
| याचन् | யாசந் | இரப்போனாகி |
| आचुक्रुधं | ஆசுக்ருதம் | நினது குரோதத்தைப் போக்குகின்றேன். |
| कः ? | கஃ ? | யார் ? |
| ईशानं | ஈசாநம் | இறைவனை |
| न याचिषत् ? | ந யாசிஷத் ? | இரக்கமாட்டார் ? |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—5. மேதாதிதி மேத்தியாதி ரிஷிகள்.

இந்திர ! உன்னை, வேள்விகளில் சோமரச வொழுக்கோடும், வெற்றிச் சீலமுள்ள தோத்திரத்தோடுங் கூடிய யான், எப்போதும் யாகஞ் செய்வோனாய் நினது குரோதத்தைப் போக்குகின்றேன். மிகுதியாய் ஏற்குமிடத்து நின்பால் குரோதமுண்டாகின்றது, அதைச் சோமரசத்தின் ஒழுக்கினாலும், தோத்திரத்தாலும் நீக்குகின்றேன் என்பது பொருள். எத்தன்மைய நின்னை யெனின் ? நிறைந்த தன்மையுள்ள சிங்கம்போல் பயங்கொடுக்கும் அத்தன்மையனை. இறைவனாகிய இந்திரனை யிரப்பதில் உலகம் பற்றிய

நியாயங் காட்டப்படுகிறது :—உலகில் எவன் இறைவனை (தலைவனை) யாசிக்க மாட்டான்? யாவர்களுமே யாசிப்பார்கள். (இரக்கின்றார்கள்) என்க. இதனால் யானும் இறைவனாகிய நின்னை யிரக்கின்றேன் என்பது உட்கிடை. (5)

குறிப்பு.— 'ஜ்யா' என்றதற்கு, வெற்றிச் சீலமுள்ள தோத்திரம் எனப்பொருட்படுதல் பற்றியே गिरा (கிரா) என ஓதுகின்றார்கள் இருக்குப் படிப்போர்கள். ஈண்டு ஆ, என்னும் இடைச்சொற்கு, நீக்கப் பொருளாம். இடைச் சொற்களுக்குப் பல பொருளாமாதலின். இதுபற்றியே இருக்குப் படிப்போர்கள் 'மாத்வா' என நீடேத வாசகத்தை யோதுகின்றார்கள் (என்பது காண்க.)

## மந்திரம் 6.

१ २ ३ २ ३ २उ ३ १ २
308. अध्वर्यो द्रावया त्वꣳ सोममिन्द्रः पिपासति ।
१ २ ३ १ २ ३ १२ ३ १२ १ २ ३ २
*उपो नूनं युयुजे वृषणा हरी आ च जगाम वृत्रहा ॥ ६ ॥

இருக்கு 8-4-11.

அத்₄வர்யோ த்₃ராவயா த்வம் ஸோமமிந்த்₃ர: பிபாஸதி ।
உபோ நூநம் யுயுஜே வ்ருஷணா ஹரீ ஆ ச ஜகா₃ம வ்ருத்ரஹா ॥

### அந்வயம்.

हे अध्वर्यो!, त्वं, सोमं, द्रावया, इन्द्रः, पिपासति, वृषणा, हरी, नूनं, उपो युयुजे, वृत्रहा च, आजगाम ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अध्वर्यो! | ஹே அத்₄வர்யோ! | வேள்வியாற்றுவோய்! |
| त्वं | த்வம் | நீ |
| सोमं | ஸோமம் | சோமத்தை |
| द्रावया | த்₃ராவயா | உத்தரவேதிகை, என்னுமிடத்திற் சேர்ப்பாயாக. ஏனெனின்? |
| इन्द्रः | இந்த்₃ர: | இந்திரன் |
| पिपासति | பிபாஸதி | சோமரசம் அருந்துவதற்கு விரும்புகின்றான். |
| वृषणा | வ்ருஷணா | தருணப் பருவமுடைய |
| हरी | ஹரீ | குதிரைகளை |

* उपनूनं, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| नूनं | நூநம் | நிச்சமாய் (இன்று) |
| उपो युयुजे | உபொ யுயுஜெ | இரதத்திற் பூட்டிவிட்டான். |
| वृत्रहा च | வ்ருத்ரஹா ச | விருத்திரனைக் கொன்ற இந்திரன் |
| आ जगाम | ஆ ஜகாம | வந்துவிட்டனன். (ஆதலின் என்க.) |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—6. தேவாதிதி ரிஷி.

வேள்விச்செய்கின்றவனே! நீ, உத்தரவேதிகையிற் சோமத்தை சேர்ப்பாயாக. அல்லது இளகுமாறு செய்குதி. அதாவது பிழிந்தெடுப்பாயாக என்பது பொருள். காரணமென்னையோவெனின்? இந்திரன் சோமரசத்தை அருந்த இச்சிக்கின்றான் ஆதலினென்க. நின்னால் இஃதெவ்வாறு உணரப்பட்டதெனின்றோ? ஆண்டுக் கூறப்படுகின்றது:—இப்போது தருணமான குதிரைகளைத் தேர்ப்பாகன் இரதத்திற் பூட்டிவிட்டனன். விருத்திரனைக் கொன்ற இந்திரன் வந்துவிட்டான். (இவ் வாற்றானென்க.) (6)

மந்திரம் 7.

३ २३२उ ३२ ३ २ ३ १ २
309. अभीषतस्तदा भरेन्द्र ज्यायः कनीयसः ।
३ २ ३ १ ३ १ २ ३ १२ ३ १ २
पुरूवसुर्हि * मघवन् बभूविथ भरे भरे च हव्यः ॥ ७ ॥

இருக்கு 7-37-76

அபீஷதஸ்ததா பரேந்த்ர ஜ்யாய: கநீயஸ: ।
புரூவஸுர்ஹி மகவந் பபூவித பரே பரே ச ஹவ்ய: ॥

அந்வயம்.

हे इन्द्र!, ज्यायः, इषतः, तत्, कनीयसः, अभ्याभर, मघवन्!, पुरूवसुः, बभूविथ, भरे भरे, हव्यः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹெ இந்த்ர! | இந்திரனே! |
| ज्यायः | ஜ்யாய: | எவரினுஞ் சிறந்தோனாகிய நீ |
| इषतः | இஷத: | வேண்டப்பட்டதும் |
| तत् | தத் | புகழ்பெற்றதுமாகிய தனத்தை |

* मघवन्त्सनासि, என்பன இருக்கு.

| | | |
|---|---|---|
| कनीयसः | கநீயஸः | தாழ்ந்தே |
| अभ्याभर | அப்யாபர | எல்லாவ யாக. |
| मघवन्! | மகவந்! | தனமுள் |
| पुरूवसुः | புரூவஸுः | பலரா |
| बभूविथ | பபூவித | இருச் |
| भरे भरे | பரே பரே | ஒவ்வொ |
| हव्यः च | ஹவ்யः ச | அழை ருய். தற்கு |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—7. வசிட்ட ரிஷி.

மேம்பட்டோனுகிய இந்திர! நீ உண்மையாய்த் குப் புகழ் வாய்ந்த திரவியத்தை எல்லாவாற்ருனுங் ெ யாக. தனமுள்ள இந்திர! நீ, பலராலும் போற்றப்பட்டே ருய். ஒவ்வொரு போர்க்களத்தும் அழைக்கப்படுவோனும், கத் தக்கோனுமா யிருக்கின்ருய் என்பதாம்

## மந்திரம் 8.

१ २ ३ १ २.२ २ ३ १ २ ३ १ २

310. यदिन्द्र यावतस्त्वमेतावदहमीशीय ।

३ २ ३ १ २ ३ १ २३ १ २

*स्तोतारमिद्दधिषे रदावसो न पापत्वाय रंꣳसिषम् ।

இருக்கு 7-

யதிந்த்ர யாவதஸ்த்வமேதாவதஹமீஶீய ।

ஸ்தோதாரமித்ததிஷே ரதாவஸோ ந பாபத்வாய ரம்ஸிஷம்

அந்வயம்.

हे इन्द्र!, त्वं, यावतः, ईशिषे, एतावत्, अहं, ईशीय, यत्, रदावसो, स्तोतारं, इत् दधिषे, पापत्वाय, न, रंसिषम् ॥

---

*स्तोतारमिद्दिधिषेय रदावसो न पापत्वाय रासीय, என்பது இருக்கு.

பதவுரை.

| | |
|---|---|
| ஊந்த்ர ! | இந்திரனே ! |
| | நீ |
| ஃ | எவ்வளவு தனத்திற்கு |
| ஷெ | இறைவனாகின்றனையோ, |
| கு | அவ்வளவு தனத்திற்கே |
| | யானும் |
| | தலைவனாகின்றேன். |
| | இதற்கு யாது காரணமோ, அதனால் |
| மஹொ ! | தனமீயும் இந்திர ! யான் |
| ஸாரம் | சாமமறை பாடுவோனையே |
| உயிஷெ | பாதுகாப்பேன். |
| வசுவாய | பாவத்திற்கு |
| ரஂஷிஷஂ | ஈயவேமாட்டேன். |

சாயண பாடியம்.

...க்கு—8. வசிட்டரிஷி.

நீ, எவ்வளவு தனத்திற்கு இறைவனாகின்றனையோ, அவ்வளவு யானுந் தலைவனாகின்றேன். ஆதலின், தனத்தைக் கொடுக் ...ர ! நான் என்னைச் சோர்ந்த ஸ்தோதா, என்னுஞ் சாமவேத பாட ...ங்கொடுத்துப் பாட வைப்பேன். (காப்பாற்றுவேன்) தீமையிற் ...ர் என்பதாம். (8)

மந்திரம் 9.

त्वमिन्द्र प्रतूर्त्तिष्वभि विश्वा असि स्पृधः ।
अशस्तिहा जनिता वृत्रतूरसि त्वं तूर्य तरुष्यतः ॥ ९

த்வமிந்த்ர ப்ரதூர்த்திஷ்வபி விஶ்வா அஸி ஸ்ப்ருத: ।
அஶஸ்திஹா ஜநிதா வ்ருத்ரதூரஸி த்வம் தூர்ய தருஷ்யத: ॥ இருக்கு 58

அங்வயம்.

इन्द्र!, त्वं, प्रतूर्तिषु, विश्वा स्पृधः, अभ्यसि, तूर्य!, त्वं, ... जनिता, वृत्रतूः, असि, तरुष्यतः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| त्वं | த்வம் | நீ |
| प्रतूर्तिषु | ப்ரதூர்திஷு | போர்களில் |
| विश्वा स्पृधः | விஶ்வா ஸ்ப்ருத: | போராடுவோர்களின் எல்லாச் சேனைகளையும் |
| अभ्यसि | அப்யஸி | அடக்கி விடுகின்றாய். |
| तूर्य ! | தூர்ய ! | பகைஞரை வதைக்கின்ற இந்திர ! |
| त्वं | த்வம் | நீ |
| अशस्तिहा | அஶஸ்திஹா | தெய்வீக ஆபத்துக்களைப் போக்கின்றாய். |
| जनिता | ஜநிதா | எனது விரோதிகட்கு ஆபத்தையுண்டாக்குகின்றாய். |
| वृत्रतूः ! | வ்ருத்ரதூ: ! | பகைஞர் (கூட்டங்)களைத் தொலைப்போனாய் |
| असि | அஸி | இருக்கின்றாய். |
| तरुष्यतः | தருஷ்யத: | எனக்கிடையூறுனவைகளை நீக்குகின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—9. நிருமேத ரிஷி.

இந்திர ! நீ, உயுத்தங்களில் போர் செய்வோர்களின் எல்லாச் சேனைகளையும் அடக்கி விடுகின்றாய். மற்றும் பகைஞரை வதைக்கின்ற இந்திரனே ! நீ, தெய்வீகமாய் வரும் ஆபத்தை நீக்குவோனா யிருக்கின்றாய். அசுரர்கட்குத் தெய்வீகமாய் ஆபத்துக்களை யுண்டாக்குவோனாகவும் இருக்கின்றாய். எல்லாப் பகைஞர் குலங்களை யறுப்போனாகவும் இருக்கின்றாய். எனது பாதகங்களைத் தொலைப்போனாகவும் இருக்கின்றாய் என்பதாம். (9)

## மந்திரம் 10.

१ २२३ १ २२ ३ १ २२ ३ १ २

312. *प्रयोरिरिक्ष ओजसा ‡दिवः सदोभ्यस्परि ।

१ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २

न त्वा विव्याच रज इन्द्र पार्थिव †मति विश्वं ववक्षिथ ॥ १० ॥

ப்ரயோரிரிக்ஷ ஓஜஸா திவ: ஸதோப்யஸ்பரி ।

ந த்வா விவ்யாச ரஜ இந்த்ர பார்திவ மதி விஶ்வம் வவக்ஷித ॥

* प्रहिरिरिक्ष, ‡ पिब अन्तेभ्यस्परि, † अनुस्वथां दिवक्षित, என்பன இருக்கு.

அந்வயம்.

हे इन्द्र!, दिवः, सदोभ्यः, ओजसा, प्ररिरिक्षे, पार्थिवं, रजः, त्वा, नविव्याच, विश्वम्, अति, ववक्षिथ ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹெ இந்த்ர! | இந்திரனே! |
| य: | ய: | யாதொரு நீ |
| दिवः | திவ: | வானுலகின் |
| परि सदोभ्यः | பரி ஸதொப்ய: | பதவி (யிடங்) களினின்று |
| ओजसा | ஒஜஸா | வலியால் |
| प्ररिरिक्षे | ப்ரரிரிக்ஷெ | மிகச் சிறந்தவனாகின்றாய். மற்றும், |
| पार्थिवं | பார்திவம் | தரையிலுண்டாகிய |
| रजः | ரஜ: | உலகம் |
| त्वा | த்வா | உன்னை |
| नविव्याच | ந விவ்யாச | தன்னுள் அடக்கிக்கொள்ளாது. (அத்தன்மைய நீ) |
| विश्वं | விஶ்வம் | உலகத்தைத் |
| अति | அதி | கடக்கச் செய்வித்து |
| ववक्षिथ | வவக்ஷித | (என்னைத்) தாங்கிக்கொள்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—10. நோதா ரிஷி.

இந்திர! நீ, வானுலகிலுள்ள இடங்களினின்று வலியினால் மிக மேம்பட்டவனாயிருக்கின்றாய். அன்றியும், இந்திர! தரையிற்றோன்றிய உலகம் உன்னை மகத்தாகிய தனது வடிவால் அடக்கிக்கொள்ளமாட்டாது. இயற்கையில் அதினின்றும் ஆற்றலுடையோனாயிருக்கின்றாய் என்பது பொருள். இவ் வண்ணனாயுள்ள நீ எம்மை, உலகங்களைத் தாண்டச் செய்வித்துத் தாங்கிக்கொள்ள விரும்புவாயாக. (எம்மை எல்லாவற்றினும் மேம்பாடாகச் செய்வாயென்பது கருத்து.) (10)

**குறிப்பு.**—இந்திர! நீ தூளி படலம் போல் உலகனைத்தினும் வியாபித்திருக்கின்றாய். நின்பால் உலகெலாம் வியாப்பியமாம் எனப் பொருள் கொள்வாருமுளர்.

## எட்டாவது கண்டம்

முற்றும்.

## ஒன்பதாவது கண்டம்

### பிரபாடகம்—4. அத்தியாயம்—3. கண்டம்—9.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

१ २ ३१ २र ३२ ३क २र ३ १ २ ३१२
313. असावि देवं गो ऋजीकमन्धो न्यस्मिन्निन्द्रो जनुषे मुवोच ।
१ २ ३१२र ३ २३१ २ ३ १२
बोधामसि त्वा हर्य्यश्व यज्ञैर्बोधानस्तोममन्धसो मदेषु ॥

இருக்கு 7-21-1.

அஸாவி தேவம் கோருஜீகமந்தோ ந்யஸ்மிந்நிந்த்ரோ ஜநுஷே முவோச|
போதாமஸி த்வா ஹர்யஶ்வ யஜ்ஞைர்போதாந ஸ்தோமமந்தஸோ
[மதேஷு ||

அங்வயம்.

देवं, गो ऋजीकं, अन्धः, असावि, ईं, इन्द्रः, अस्मिन्, जनुषा, न्यवोच,
हर्य्यश्व !, त्वा, यज्ञैः, बोधामसि, अन्धसः, मदेषु, नः, स्तोमं, बोधः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| देवं | தேவம் | பிரகாசமானதும் |
| गो ऋजीकं | கோ ருஜீகம் | ஆவின் பால், நெய் முதலியவைக ளாற் சுத்தஞ் செய்யப்பட்டது மாகிய |
| अन्धः | அந்தஃ | சோமமென்னும் அன்னம் |
| असावि | அஸாவி | தேடி வைக்கப்பட்டிருக்கின்றது. |
| ईं इन्द्रः | ஈம் இந்த்ரஃ | இந் விந்திரன் |
| अस्मिन् | அஸ்மிந் | தேடிய இச் சோமமாகிய அன் னத்தில் |
| जनुषा | ஜநுஷா | இயற்கையாகவே |
| न्युवोच | ந்யுவோச | மிக வொருமுகப்பட்டவனுகின் றுன். |
| हर्य्यश्व ! | ஹர்யஶ்வ ! | பொற் குதிரையை யுடைய இந் திர! |

| | | |
|---|---|---|
| त्वा | த்வா | உன்னை |
| यज्ञैः | யஜ்ஞை: | தோத்திரங்களாலும் அவிகளாலும் |
| बोधामसि | போதாமஸி | ஞாபகமுடையச் செய்கின்றேன். |
| अन्धसः | அந்தஸ: | சோமத்தின் |
| मदेषु | மதேஷு | களிப்புண்டாமிடங்களில் |
| नः | ந: | எங்களுடைய |
| स्तोमं | ஸ்தோமம் | தோத்திரத் தொகுதியை |
| बोध | போத | (நீ) அறிவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—1. வசிட்ட ரிஷி.

பிரகாசமுள்ளதும், ஆவின் பால், நெய் முதலியவைகளோடு கலந்துள்ளதும் (கவ்யத்தாற் பவித்திரம் பண்ணப்பட்ட தென்பதுமது) ஆகிய சோமமென்னும் அன்னந் தேடப்பட்டிருக்கின்றது. இவ் விந்திரன் பிழிந்தெடுத்துள்ள சோமமாகிய இவ் வன்னத்தில் இயற்கையாகவே தற்பரனாகின்றான். இனிமேல் பிரத்தியட்சமாகிய தோத்திரம். இந்திர! உனக்கு, தோத்திரங்களால், அல்லது, அவிகளால் அறிவுறுத்துகின்றேன். சோமத்தினுடைய களிப்புண்டாமிடங்களில் எங்களுடைய தோத்திரத்தை யறிந்துகொள்வாயாக என்பதாம். (1)

மந்திரம் 2.

314. योनिष्ट इन्द्र सदने अकारि तमानृभिः पुरुहूत प्रयाहि ।
असो यथा नोऽविता वृधश्चिद्ददो वसूनि ममदश्च सोमैः ॥ २ ॥

இருக்கு 7-24-1.

யோநிஷ்ட இந்த்ர ஸதநே அகாரி தமாந்ருபி: புருஹூத [ப்ரயாஹி ।
அஸோ யதா நோऽவிதா வ்ருதச்சித்ததோ வஸூநி மமதச்ச ஸோ[மை: ॥

அந்வயம்.

हे इन्द्र !, ते, सदने, योनिः, अकारि, पुरुहूत !, नृभिः, तम् , आप्रयाहि, नः, यथा, अविता, वृधश्चित् , असः, वसूनि, ददः, च, सोमैः, ममद ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ ஊந்ர ! | இந்திரனே! |
| ते | தெ | உன்னுடைய |
| सदने | ஸதநெ | இருப்பின் பொருட்டு |
| योनिः | யொநிஃ | ஓர் இடஞ் |
| अकारि | அகாரி | செய்யப்பட்டிருக்கின்றது. |
| पुरुहूत ! | வுரூஹூத ! | பலராலழைக்கப்படும் இந்திர ! |
| नृभिः | நரஷிஃ | நியமிக்கும் மருத்துக்களோடு |
| तं | தம் | அவ்விடத்தைக் குறித்து |
| आ प्रयाहि | ஆ வுரயாஹி | வருவாயாக. |
| नः | நஃ | எங்களைக் |
| अविता | அவிதா | காப்பாற்றுவோனும் |
| वृधश्चित् | வரயஸ்சிக் | விருத்தி பண்ணுவோனுமாக |
| यथा | யயா | எவ்வாறு |
| असः | அஸஃ | { இருக்கின்றாயோ, (அவ்வாறே) எமக்குத் |
| वसूनि | வஸூநி | தனங்களைக் |
| ददः | ஊஃ | கொடுப்பாயாக. |
| सोमैः च | ஸொமைஃ அ | மற்றும், சோமரசத்தாற் |
| ममदः | ஊஊஃ | களிப்படைவாயாக. |

## சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—2. வசிட்ட ரிஷி.

இந்திர ! வசித்தற்கு உனக்கு ஓரிடஞ் செய்யப்பட்டிருக்கின்றது. பல்லோராற் கூப்பிடப்பட்ட இந்திர ! நியதாக்களான மருத்துக்களோடு அவ்விடத்திற்கு வருவாயாக. எவ்வாற்றால் எங்களைக் காப்பாற்றுவோனாகவும் விருத்தி செய்வோனாகவும் இருக்கின்றனையோ, அவ்வாற்றானே எங்கட்குத் தனத்தையுங் கொடுப்பாயாக. எங்களுடைய சோமரசத்தாலுங் களிப்படைவாயாக என்பதாம். (2)

குறிப்பு —वृधेच என்பர் இருக்கோதுவார்.

### மந்திரம் 3.

१२ ३२ ३१ ३ २उ ३१२३१ २३ १ २
315. अदर्दरुत्समसृजो वि खानित्वमर्णवान् बद्बधानाँ * अरम्णः ।
३१२ ३ १२३२उ ३२उ ३ २३१२३२
महान्तमिन्द्र पर्वतं वि यद्वः सृजद्धारा †अव यद्दानवान् हन्॥३॥

இருக்கு 5-32-1.

அதர்தருத்ஸமஸ்ருஜோ வி கா₂நித்வமர்ணவாந் ப₃த்₃த₃தா₄நாந் அரம்ண:।
மஹாந்தமிந்த்₃ர பர்வதம் வி யத்₃வ: ஸ்ருஜத்₃தா₄ரா அவ யத்₃தா₃நவாந் ஹந் ॥

அந்வயம்

हे इन्द्र !, त्वं, उत्सं, अदर्दः, खानि, व्यसृजः, बद्बधानान्, अर्णवान्, अरम्णः,

यत्, महान्तं, पर्वतं, व्यसृजत्, धाराः, यत्, दानवान्, अवहन् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | ஹே இந்த்₃ர ! | இந்திரனே ! நீ |
| **उत्सं** | உத்ஸம் | நீர் நிறைந்துள்ள மேகத்தைப் |
| **अदर्दः** | அதர்த₃: | பிளந்தனை. பின்னர் |
| **खानि** | கா₂நி | மேகத்தின் நீர் வரும் வழிகளை (யும்) |
| **व्यसृजः** | வ்யஸ்ருஜ: | இனிது உண்டுபண்ணினாய். |
| **बद्बधानान्** | ப₃த்₃த₃தா₄நாந் | பீடை தருகின்ற |
| **अर्णवान्** | அர்ணவாந் | மேகங்களை |
| **अरम्णः** | அரம்ண: | இரையுமாறு செய்தாய். |
| **यद्** | யத்₃ | எப்போது |
| **यत्** | யத் | யாதொரு நீ |
| **महान्तं** | மஹாந்தம் | பெரிதாகிய |
| **पर्वतं** | பர்வதம் | மேகத்தை |
| **व्यसृजत्** | வ்யஸ்ருஜத் | விரியச்செய்தாயோ, (மற்றும்) |
| **धाराः** | தா₄ரா: | நீர்த்தாரைகளை விழச்செய்தனையோ, |
| **दानवान्** | தா₃நவாந் | தானவர்களை |
| **अवहन्** | அவஹந் | நன்கொழித்தனையோ, (அப்போதென்க.) |

---

* अरम्णा, सृजो विधार, † अबदानव इन् , என்பன இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. காதுர் ரிஷி.

இந்திரனே! நீ, நீர்கொண்ட மேகத்தை பிளந்தோனு யிருக்கின்றாய். பின்னர், மேகத்தினுடைய நீர்வரும் வழிகளைச் சிறப்புடையனவாகச் செய்தவனு யிருக்கின்றாய். இன்னும், பிடிக்கின்ற நீர் நிறைந்த மேகங்களைப் பிழிந்தாய். (விடுதலை பண்ணினாய்.) இந்திர! நீ, பெரிய மேகத்தை விரியச் செய்தாய். நீர்த்தாரைகளை விழச் செய்தவனு யிருக்கின்றாய். எப்போதெனின்? தானவர்களை, (தநுவின் புத்திரர்களை) அல்லது, நீரைக் கொடுக்கும் மேகங்களை நாசமாக்கினையோ, அப்போதென்க. இங்ஙனமே நிருத்தமும் இதற்குப் பொருளுரைக்கின்றது. (3)

குறிப்பு.—ஆசீர்வாதம் கொடுக்கின்ற இந்திரன் அழியாதவன் என, விசேடமாக்கியும் பொருள் கொள்வர் சிலர்.

## மந்திரம் 4.

३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २
316. सुष्वाणास इन्द्र स्तुमसि त्वा सनिष्यन्तश्चित्तुविनृम्ण वाजम् ।
१ २ ३ १ २र ३ २उ ३ १ २ ३ १ २
आ नो भर सुवितं यस्य *कोना तनात्मना सह्याम त्वोताः ॥४॥

இருக்கு 10-148-1.

ஸுஷ்வாணாஸ இந்த்ர ஸ்துமஸி த்வா ஸநிஷ்யந்தஶ்சித்துவிந்ருண [வாஜம் ।

ஆ நோ பர ஸுவிதம் யஸ்ய கோநா தநாத்மநா ஸஹ்யாம [த்வோதாः ॥

அந்வயம்.

हे इन्द्र !, सुष्वाणास, त्वा स्तुमसि, तुविनृम्ण, वाजं, सनिष्यन्तः, नः, सुवितं, आभर, यस्य, कोना, त्वोताः, तना, त्मना, सह्याम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர! | இந்திரனே! |
| सुष्वाणासः | ஸுஷ்வாணாஸः | சோமரசம் பிழிந்தெடுப்போர்களான யாங்கள் |
| त्वा स्तुमसि | த்வா ஸ்துமஸி | உன்னைத் துதிக்கின்றோம். |

* चाकन्त्मना तना सनुयान, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| तुविनृम्ण ! | துவிந்ருணு ! | மிகுந்த தனமுடைய இந்திர ! |
| वाजं | வாஜம் | அவியாகிய அன்னத்தை |
| सनिष्यन्तः | ஸநிஷ்யந்தஃ | பிரித்துக் கொடுக்கின்ற யாங்களுந் துதிக்கின்றோம் (ஆதலின்) |
| नः | நஃ | எங்கட்கு |
| सुवितं | ஸுவிதம் | இனிய தனத்தைக் |
| आभर | ஆபர | கொடுப்பாயாக. |
| यस्य | யஸ்ய | எதைப்பற்றி |
| कोना | கொநா | வேட்கின்றார்களோ, அத் தனத்தைத் தருவாயாக. |
| त्वोताः | த்வோதாஃ | நின்றாற் காப்பாற்றப்பட்ட நாங்கள் |
| तना | தநா | மிகுந்த தனங்களைத் |
| त्मना | த்மநா | தாமாகவே |
| सह्याम | ஸஹ்யாம | நினது அநுக்கிரகத்தா லடைகின்றோம். |

சாயண பாடியம்

கண்டம்—9. இருக்கு—4. பிருதுர்வைந ரிஷி.

இந்திர ! சோமரசம் பிழிந்தெடுக்கின்ற யாங்கள் உன்னைப் போற்றுகின்றோம். மிகுந்த தனமுடையோய் ! அல்லது, மிகுந்த வலியுடையோய் ! இந்திர ! சரு, புரோடாச முதலிய அன்னத்தைப் பிரித்துக் கொடுக்கின்ற யாங்கள் உன்னைத் துதிக்கின்றோம். இங்ஙனமா மாதலின், எங்கட்கு அடையத்தக்க இனிய தனத்தைக் கொடுப்பாயாக. அல்லது, எந்தத் தனத்தை விரும்புகின்றவனை யிருக்கின்றனையோ, அந்தத் தனத்தைக் கொடுப்பாயாக. யாங்கள் நின்றாற் காப்பாற்றப்பட்டோர்களாய் மிகுந்த தனங்களைத் தாமாகவே (பிறரை வேண்டாமலே) உனது கிருபையால் அடைந்துகொள்கின்றோம் என்பதாம். (4)

குறிப்பு.—தனம், வெற்றி, அடிமை முதலியவைகளைக் கொடுப்பாயாக என்பாருமுளர்.

மந்திரம் 5.

३ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ १२

317. * जगृह्मा ते दक्षिणमिन्द्र हस्तं वसूयवो वसुपते वसूनाम् ।

३ २उ ३ १२ ३ १ २ ३ १ २ ३१ २र ३ १ २

विद्मा हि त्वा गोपतिं शूर गोनामस्मभ्यं चित्रं वृषणं रयिं दाः ॥

இருக்கு 10-47-1.

ஜக்ருஹ்மா தே தக்ஷிணமிந்த்ர ஹஸ்தம் வஸூயவோ வஸுபதே
[வஸூநாம் |
வித்மா ஹி த்வா கோபதிம் ஶூர கோநாம் அஸ்மப்யம் சித்ரம் வ்ருஷ
[ணம் ரயிம் தா꞉ ||

## அந்வயம்.

वसूनां, वसुपते, इन्द्र, वसूयवः, ते, दक्षिणं हस्तं, जगृह्म, शूर, गोनां, त्वा, गोपतिं, विद्मः, अस्मभ्यं, चित्रं, वृषणं, रयिं, दाः ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| वसूनां | வஸூநாம் | தனமுடையார்கட்குள் |
| वसुपते इन्द्र ! | வஸுபதே இந்த்ர ! | தனங்கட் கிறைவனுகிய இந்திர ! |
| वसूयवः | வஸூயவ꞉ | தனத்தை இச்சிக்கின்ற நாங்கள் |
| ते | தே | நினது |
| दक्षिणं हस्तं | தக்ஷிணம் ஹஸ்தம் | வலக் கையைப் |
| जगृह्म | ஜக்ருஹ்ம | பிடித்துக்கொள்கின்ருேம். |
| शूर ! | ஶூர ! | பராக்கிரமமுடையோய் ! |
| गोनां | கோநாம் | கோக்களுடையார்களுள் |
| त्वा | த்வா | நின்னை |
| गोपतिं | கோபதிம் | கோக்கட்கு இறைவனென்று |
| विद्मः | வித்ம꞉ | (யாம்) அறிகின்ருேம். ஆதலின் |
| अस्मभ्यं | அஸ்மப்யம் | எங்கட்குப் |
| चित्रं | சித்ரம் | பலவகையான |
| वृषणं | வ்ருஷணம் | மனவேட்கையை நிறையச் செய்கின்ற |
| रयिं | ரயிம் | தனத்தைக் |
| दाः | தா꞉ | கொடுப்பாயாக. |

## சாயண பாடியம்.

*கண்டம்—9. இருக்கு—5. சப்தகுர் ரிஷி.*

*தனங்கட்கெல்லாந் தலைவனுகிய இந்திர! திரவியத்தை யிச்சிக்கின்ற நாங்கள் உனது வலக்கையைப் பிடித்துக்கொள்கின்ருேம். எங்கட்குத் தனங் கொடுக்காமற் போகக்கூடாது என மிகுந்த தனமுடையவர் தங் கையைப் பிடித்துக்கொள்வது போன்று. (பிடித்துக் கொள்கின்ருேமென மேலே கூட்டுக.) பராக்கிரமமுடைய இந்திர! உன்னை, கோக்கட்கு இறைவனென்று உணர்கின்ருேம். ஈண்டு இருத்தலானும், இல்லாமையானும் இறைவனுந் தன்மையும், அநேகமாந் தன்மையுங் கூறப்படுகின்றது. இதனுல் எங்கட்குப் பல்வகைப்பட்ட மனே விருப்பத்தை நிறையச் செய்யுந் தனத்தைக் கொடுப்பாயாக என்பதாம்.* (5)

## மந்திரம் 6.

२ ३ १ २ ३ १ २ ३ १ २र ३१२३ २ ३ २
318. इन्द्रं नरो नेमधिता हवन्ते यत्पार्या युनजते धियस्ताः ।
२ ३ १२ ३ १ २ ३ २ ३ १ २र ३ १ २ ३ १ २
शूरो नृषाता * श्रवसश्चकाम आ गोमति व्रजे भजा त्वं नः ॥६॥

இருக்கு 7-27-1.

இந்த்ரம் நரோ நேமதிதா ஹவந்தே யத்பார்யா யுநஜதே தியஸ்தா:
ஶூரோ ந்ருஷாதா ஶ்ரவஸஶ்சகாம ஆ கோமதி வ்ரஜே பஜா த்வம் [ந:॥

அந்வயம்.

यत्, पार्याः, ताः, धियः, युनजते, नरः, नेमधिता, इन्द्रं, हवन्ते, शूरः, नृषाता त्वं, श्रवसः, चकामे, गोमति, व्रजे, नः, भज ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यत् | யத் | எப்போது |
| पार्याः | பார்யா: | போரிற் பாதுகாப்பிற்குக் காரணமானவைகளும் |
| ताः | தா:. | கீர்த்தியுள்ளவைகளுமான |
| धियः | தியஃ | ஏவற் றொழில்கள் |
| युनजते | யுநஜதே | பிரயோகம் பண்ணப்படுகின்றனவோ, அக்கால் |
| नरः | நர: | வேள்வி, அல்லது போராற்றுகின்ற மனிதர்கள் |
| नेमधिता | நேமதிதா | வேள்வியில் அல்லது போரில் |
| इन्द्रं | இந்த்ரம் | எவ் விந்திரனை |
| हवन्ते | ஹவந்தே | அழைக்கின்றார்களோ, |
| शूरः | ஶூர: | வீரனும் |
| नृषाता त्वं | ந்ருஷாதா த்வம் | மனிதர்களைப் பாகுபாடு செய்வோனுமாகிய அத்தகைய நீ |
| श्रवसः | ஶ்ரவஸ: | அன்னம் அல்லது வலியை |
| चकामे | சகாமே | விரும்புமிடத்து |

* शवसश्चकान, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **गोमति** | கோமதி | கோக்களுள்ள |
| **व्रजे** | வ்ரஜெ | கோ சாலையில் |
| **नः** | நঃ | எங்களைப் |
| **भज** | ஹஜ | { பாகமுடையோர்களாகச் செய்வா யாக. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—6. வசிட்ட ரிஷி.

எக்காலத்தில் போரில் இறப்பைக் காரணமாக வுடைய (மரண பயத்தால்) கருமத் தொழில்கள் பிரயோகம் பண்ணப்படுகின்றனவோ, அப்போது வேள்வியின் கருத்தர்கள், அல்லது, போர்த் தலைவர்கள், வேள்வியில், அல்லது போரில், எவ் விந்திரனை யழைக்கின்றார்களோ, இந்திர! அத்தகைய நீ, வீரனாகவும், மனிதர்களைப் பாகுபாடு செய்வோனாகவும் இருக்கின்றாய். (ஆதலின்) அன்னத்தையேனும், வலியையேனும் இச்சிக்குமிடத்தில் கோக்கள் வாழும் கோட்டத்தில் எங்களைப் பாகமுடையர்களாய்ச் செய்வாயாக. (6)

மந்திரம் 7.

१२ ३ १ २२ ३ १ २ ३ १ २ ३ १ २ ३

319. **वयः सुपर्णा उपसेदुरिन्द्रं प्रियमेधा ऋषयो नाधमानाः ।**

१२ १ १ २ ३ २ ३ १ २२ ३ २ २ ३ १ २ ३ २

**अप ध्वान्तमूर्णुहि पूर्धिचक्षुर्मुमुग्ध्या३स्मान्निधयेव बद्धान् ॥ ७ ॥**

இருக்கு 30-73-13.

வயঃ ஸுபர்ணா உபஸேதுரிந்த்ரம் ப்ரியமேதா ருஷயோ நாத[மாநாঃ ।

அப த்வாந்த மூர்ணுஹி பூர்திசக்ஷுர்முமுக்த்யா3ஸ்மாந்நித[யேவ பத்தாந் ॥

அந்வயம்.

**वयः, सुपर्णा, प्रियमेधाः, ऋषयः, नाधमानाः, इन्द्रं, उपसेदुः, इन्द्र !, ध्वान्तं, अपोर्णुहि, चक्षुः, पूर्द्धि, निधया इव बद्धान्, अस्मान्, मुमुग्धि ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **वयः** | வயঃ | செல்கின்றவைகளும் |
| **सुपर्णा** | ஸுபர்ணா | { மிகுந்த நலத்தைக் கொடுப்பவை களும் |
| **प्रियमेधाः** | ப்ரியமேதாঃ | { வேள்வியை விரும்புகின்றவை களும் |

| | | |
|---|---|---|
| ऋषयः | ஜஷய꞉ | நீண்ட பார்வையுடையவைகளும் |
| नाधमाना: | நாயமாநா꞉ | மெய்புணர்வை யேற்பவைகளுமான கிரணங்கள், |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| उपसेदुः | உபஸேது꞉ | அடைந்தன. அடைந்து |
| इन्द्र ! | இந்த்ர ! | இந்திரனே ! நீ |
| ध्वान्तं | த்வாந்தம் | இருளைப் |
| अपोर्णुहि | அபொர்ணுஹி | போக்குவாயாக. |
| चक्षुः | சக்ஷு꞉ | ஒளியைப் |
| पूर्द्धि | பூர்த்தி | பரப்புவாயாக. |
| निधया इव बद्धान् | நிதயா இவ பத்தாந் | பாசக்கூட்டங்களாற் கட்டுப்பட்டவர்களை (விடுவிப்பதுபோல) |
| अस्मान् | அஸ்மாந் | எங்களை |
| मुमुग्धि | முமுக்தி | விடுவிப்பாயாக. (என வேண்டுகின்றன என்க) |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—7. கௌரிவீதி ரிஷி.

செல்லுகின்றவைகளும், சுகங் கொடுப்பதை வளர்ப்பவைகளுமான இரவியின் கிரணங்கள், இந்திரனை யடைந்தன. எவ்விதமானவைகளெனின் ? வேள்வியிற் பிரியப்படுபவைகள், நீண்ட நோக்குடையவைகள், வேள்வியை வேண்டுபவைகளாம். வேண்டுகின்ற வகைகளே கூறப்படுகின்றன :—இந்திரனே ! இருளை யொதுக்குவாயாக. ஈண்டு "எவ் விருள் மறைக்கப்பட்டுள்ளதோ அது மனதாலடையத்தக்கது. இதினின்றுங் கெட்டு உலோபமாகின்றது" என்னும் ஐதரேயப் பிராமணம் (பிராமணம் என்னும் வேத பாகத்தின் வாக்கு) சிந்திக்கற் பாலது. மற்றும், ஒளியையும் நிறையச் செய்வாயாக. அதாவது பாசக்கூட்டங்களாற் கட்டுப்பட்டவர்களான எங்களைப் பாசங்களினின்று நீங்குமாறு விடுவிப்பாயாக என்பதாம். ஈண்டு 'வயோவோ' என்றற் றொடக்கத்து 4-3-ல் உள்ள நிருத்தச் சூத்திரத்தில் இதன் பொருள் காணத் தக்கது. (7)

குறிப்பு.—இந்திரியங்கட்கு ஆன்மாவை முன்னிட்டும், மாணாக்கர்கட்கு பிரமஞானியாகிய ஆசிரியரை முன்னிட்டும், இருடிகட்கும் ஞானிகட்கும், பரமான்மாவைக் குறித்தும் நடந்த பேச்சென்பர் சிலர்.

### மந்திரம் 8.

१ २ ३ २उ १ २र ३ १ २र ३ १ २
320. नाके सुपर्णमुपयत्पतन्तꣳ हृदावेनन्तो अभ्यचक्षत त्वा ।
१२ ३ १२ ३ २ ३२ ३ १ २ ३ १ २३२
हिरण्यपक्षं वरुणस्य दूतं यमस्य योनौ शकुनं भुरण्युम् ॥ ८ ॥

இருக்கு 3-45-1.

நாகே ஸுபர்ணமுபயத்பதந்தம் ஹ்ருதாவேநந்தோ அப்ய
[க்ஷத த்வா ।
ஹிரண்யபக்ஷம் வருணஸ்ய தூதம் யமஸ்ய யோநௌ ஶகு
[நம் புரண்யும் ॥

அந்வயம்.

सुपर्णं, पतन्तं, हिरण्यपक्षं, वरुणस्य, दूतं, यमस्य, योनौ, शकुनं, भुरण्युं, त्वा, हृदा, वेनन्तः, नाके, अभ्यचक्षत, उपयत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सुपर्णं | ஸுபர்ணம் | இனிய வீழ்ச்சி யுடையவனும் (கீழ் வருபவனும்) |
| पतन्तं | பதந்தம் | வானிற் செல்பவனும் |
| हिरण्यपक्षं | ஹிரண்யபக்ஷம் | பொற் சிறகுள்ளவனும் |
| वरुणस्य | வருணஸ்ய | நீரை யபிமானிக்குந் தேவதைக்குத் (வருணனுக்கு) |
| दूतं | தூதம் | தூதனும் |
| यमस्य | யமஸ்ய | மின்னலாகிய தீயினுக்கு |
| योनौ | யோநௌ | இடமாகிய அந்தரிக்ஷத்தில் |
| शकुनं | ஶகுநம் | பறவையா யிருப்பவனும். |
| भुरण्युं | புரண்யும் | மழை முதலியவைகளால் உலகைக் காப்பாற்றுபவனுமாகிய |
| त्वा | த்வா | (கந்தருவனென்னும்) உன்னை |
| हृदा | ஹ்ருதா | உள்ளத்தால் |
| वेनन्तः | வேநந்த: | வேண்டப்பெற்ற துதிப்போர்கள் |
| नाके | நாகே | விண்ணில் |
| अभ्यचक्षत | அப்யசக்ஷத | பார்க்கின்றார்கள். அக்கால் |
| उपयत् | உபயத் | வந்துகொண்டிருக்கின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—8. வேனோபார்க்க ரிஷி. தேவதை வேந:

வேநனே! உன்னை, உள்ளத்தில் விருப்பம் மிகுந்த துதிப்போர்கள் வானில் இனிது பார்க்கின்றார்கள். எப்போது பார்க்கின்றார்களோ, அப்போது வந்துக்கொண்டிருக்கின்றாய் என்பது எஞ்சி நின்றது. எவ்வண்ணத்தனாகிய நின்னை யெனின்? வானிற் செல்கின்றவனும், பொன்மயமான சிறகுகளை யுடையவனும், நீரபிமானி தேவதையாகிய வருணனுக்குத் தூதனும், நியமிக்கப்படும் மின்னலாகிய அக்கினியின் இருப்பிடத்தில் (அந்தரிக்ஷத்தில்) பறவை வடிவாக இருப்பவனும், மழை முதலியவைகளால் உலகனைத்தையும் பரிபாலிப்பவனுமாகிய உன்னை. காண்கின்றார்கள் என முடித்துக் கொள்க. (8)

குறிப்பு.—ஈண்டு வேனன் என்பவன் வானிலிருந்து வரும் ஒரு கந்தருவன்.

மந்திரம் 9.

१२ ३१ २३२ ३२ ३ १ २ ३२ ३ १ २ ३१ २

321. ब्रह्म जज्ञानं प्रथमं पुरस्ताद्विसीमतः सुरुचो वेन आवः ।

२ ३क २र ३ १ २ ३ २ ३२३ २ ३ १२ ३ १२

स बुध्न्या उपमा अस्य विष्ठाः सतश्च योनिमसतश्च विवः ॥ ९ ॥

இருக்கு 5-6-1.

ப்ரஹ்ம ஜஜ்ஞாநம் ப்ரத²மம் புரஸ்தாத்³விஸீமத꞉ ஸுருசோ வேந [ஆவ꞉ ।

ஸ பு³த்⁴ந்யா உபமா அஸ்ய விஷ்டா²꞉ ஸதஶ்ச யோநிமஸதஶ்ச விவ꞉ ॥

அந்வயம்.

वेनः, पुरस्तात्, जज्ञानं, ब्रह्म, प्रथमं, विसीं, अतः, सुरुचः, आवः, सः, बुध्न्याः, अस्य उपमाः, विष्ठाः, सतः, च, असतः, योनिं, विवः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वेनः | வேந꞉ | வேனன், என்னும் யாதொரு கந்தருவன் |
| पुरस्तात् | புரஸ்தாத் | முற் காலத்தில் |
| जज्ञानं | ஜஜ்ஞாநம் | தோன்றிய, அல்லது, ஞானமுடைய |
| ब्रह्म | ப்ரஹ்ம | உத்தம குலத்தை |

| | | |
|---|---|---|
| **विसीं** | விஸீம் | விசீம், விசீம், என்னும் நலக்குறியாகிய ஒலியிட்டுக்கொண்டு |
| **अत:** | அத: | காணப்படும் இவ்வனைத்தினின்றும் |
| **सुरुच:** | ஸுருச: | நற் காந்திபுடையவனுய்க் |
| **आव:** | ஆவ: | காப்பாற்றினுனே, |
| **स:** | ஸ: | அக் கந்தருவன் |
| **बुध्न्या:** | புத்ந்யா: | அந்தரிக்ஷத்தின் |
| **अस्य उपमा:** | அஸ்ய உபமா: | இதற்கொப்பான இரவி முதலியவற்றின் காந்திகளை |
| **विष्ठा:** | விஷ்டா: | சிறப்பாய் நிலை நிறுத்தினுன். (அவ்வாறே) |
| **सत:** | ஸத: | இப்போதிருப்பதும் |
| **च** | ச | மற்றும் |
| **असत:** | அஸத: | இப்போ திலாததும், மேலுண்டாவதுமாகிய |
| **योनिं** | யோநிம் | இருப்பிடத்தையும் |
| **विव:** | விவ: | உண்டாக்கினுன், |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—9. பிருகற்பதி, அல்லது, நகுல ரிஷி.

'வேனன்' என்னும் மேற் செல்லுகின்ற ஒரு கந்தருவன். "வேனன் அதைக் கண்டு" என்று தொடங்கி "கந்தருவன் என்போன்" என ஏனைய மறைச்சாகையும் முடிவிற் கூறுகின்றது காண்க. அவ் வேனன், முற்காலத்தில் உண்டாகிய, அல்லது, மெய்யறிவுடைய, உத்தம குலமாகிய முன்னுடம்பை, இவைகளினின்று மேலாகப் பார்க்கப்பட்ட ஒளியாற் காப்பாற்றினுன். விசீம், என்று சொல்லப்பட்டது அவன் வாயினின் றெழுமோர் ஒலிக்குறிப்பு, அதாவது அநுக்கிரகக் குறியாம். அத் தன்மைய ஒலியை வாயினின்றும் வெளிப்படுத்திக்கொண்டு உத்தமகுல வுடம்பை பேரொளி யுடையதாகச் செய்துவிட்டான் என்பது (திரண்ட) பொருள். அவ் வேனன் இச் சரீரத்திற்கு ஒப்பான வானிற்றோன்றுகின்ற இரவியின் ஒளி முதலியவைகளை விசேடமாகத் தாபித்தனன். அங்ஙனமே இப்போது இருக்கப்பட்டதும், மேல் வருங்காலத்தில் இராததுமாகிய, உற்பத்தியின் காரணத்தை அல்லது வசிக்குமிடத்தை வெளிப்படுத்தினுன் என்பதாம். (9)

**குறிப்பு.**—வேனன் என்பதை அறிவுமயமாகிய பரமான்மா என்பார் ஒரு சாரார். மூலத்தில் 'பிரமம்' என்பது உத்தம குலத்தின் உடம்பெனப்பட்டது பாடியத்தில்.

## மந்திரம் 10.

१२   ३१२   ३२ ३१२ ३१२ ३१३

322. अपूर्व्या पुरुतमान्यस्मै महे वीराय तवसे तुराय ।

३   १२ ३२ ३ १२   ३   १२   ३   १२

विरप्शिने वज्रिणे शन्तमानि वचांस्यस्मै स्थविराय तक्षुः ॥१०॥

இருக்கு 6-32-1.

அபூர்வ்யா புரூதமாந்யஸ்மை மஹே வீராய தவஸே
[தூராய ।
விரப்ஶிநே வஜ்ரிணே ஶந்தமாநி வசாம்ஸ்யஸ்மை ஸ்தவிராய
[தக்ஷுஃ ॥

அந்வயம்.

महे, वीराय, तवसे, तुराय, विरप्शिने, वज्रिणे, स्थविराय, अस्मै, अपूर्व्या, पुरुतमानि, शन्तमानि, वचांसि, तक्षुः ॥

பதவுரை,

| | | |
|---|---|---|
| महे | மஹே | மகானும் |
| वीराय | வீராய | வீரனும் |
| तवसे | தவஸே | வலியுடையோனும் |
| तुराय | தூராய | வேகமுடையோனும் |
| विरप्शिने | விரப்ஶிநே | சிறப்பாகிய தோத்திரத்திற்கு விடயமாவோனும் |
| वज्रिणे | வஜ்ரிணே | வச்சிராயுத முடையானும் |
| स्थविराय | ஸ்தவிராய | பழையோனுமாகிய |
| अस्मै | அஸ்மை | இவ் விந்திரன் பொருட்டு, |
| अपूर्व्या | அபூர்வ்யா | புதியவைகளும் |
| पुरुतमानि | புரூதமாநி | பலவகைகளும் |
| शन्तमानि | ஶந்தமாநி | நலந் தருபவைகளுமான |
| वचांसि | வசாம்ஸி | தோத்திர வடிவ வாக்குகளைத் |
| तक्षुः | தக்ஷுஃ | துதிப்போர்கள் சொல்கின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—10. சுகோத்திர ரிஷி. இந்திரன்-தேவதை.

பண்டைக் காலத்தோர்களாற் றுதிக்கப்படாதனவும், மிகுதிப்பட்டனவும், இன்பந் தருவனவுமான தோத்திரவடிவ வாக்குகளை இவ்விந்திரன் பொருட்டுத் துதியாளர்கள் பாடுகின்றார்கள். ஈண்டுத் துதியாளர்கள் என்பது

எஞ்சி நின்றது. எவ்வண்ணத்தனாகிய இந்திரனுக்கெனின்? பெரியோனும், பலவகையான பகைஞர்களைக் கொல்வோனும், ஆற்றலுடையோனும், வேகமுடையோனும், சிறந்த துதிகட்கு விடயனும், பழையோனும், வச்சிராயுதமுடையோனுமாகிய இந்திரனுக்கு. பாடுகின்றார்களென மேற்கூட்டுக. (10)

## ஒன்பதாவது கண்டம்

முற்றும்.

---

## பத்தாவது கண்டம்

---

### பிரபாடகம்—4. அத்தியாயம்—3. கண்டம்—10.

ஒன்பது மந்திரங்களாலானது.

---

### மந்திரம் 1.

१ २ ३ १ २ ३ १ २ ३२ ३ २ ३१ २ ३१ २
323. अव द्रप्सो अंशुमतीमतिष्ठदियानः कृष्णो दशभिः सहस्रैः ।
२ ३ २ ३ ३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३१ २ ३ २
आवत्तमिन्द्रः शच्या धमन्तमप स्नीहितिं नृमणा अपद्राः ॥ १ ॥

இருக்கு 8-96-13.

அவ த்ரப்ஸோ அம்ஶுமதீ மதிஷ்டதியாந: க்ருஷ்ணோ தஶபி: ஸஹஸ்ரை: ।
ஆவத்தமிந்த்ர: ஶச்யா தமந்தமப ஸ்நீஹிதிம் ந்ருமணா அபத்ரா: ॥

அந்வயம்.

द्रप्सः, दशभिः, सहस्रैः, इयानः, कृष्णः, अंशुमतीं, अव अतिष्ठत्, शच्या, धमन्तं, तम्, इन्द्रः, आवत्, (अथ,) नृमणाः, स्नीहितिं, अपद्राः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| द्रप्सः | த்ரப்ஸ: | வேகமாய்ச் செல்கின்ற |
| दशभिः सहस्रैः | தஶபி: ஸஹஸ்ரை: | பத்தாயிரம் அசுரர்களுடன் |
| इयानः | இயாந: | முன்னேறிவந்த |
| कृष्णः | க்ருஷ்ண: | கிருஷ்ணன், என்னும் அசுரன் |

| | | |
|---|---|---|
| अंशुमतीं | அம்ஶுமதீம் | அஞ்சுமதி, என்னும் நதியை |
| अव अतिष्ठत् | அவ அதிஷ்டத் | வந்தடைந்திருந்தனன். பின்னர் |
| शच्या | ஶச்யா | தனது, செய்கையால் அல்லது ஞானத்தால் |
| धमन्तं | தமந்தம் | உலகிற்குப் பீதியுண்டாக்குகின்ற ஒலியிடும் |
| तं | தம் | அவ் வசுரனை |
| इन्द्रः | இந்த்ர: | (மருத்துக்களோடுகூட) இந்திரன் |
| आवत् | ஆவத் | போய்ச் சூழ்ந்துகொண்டனன். |
| (अथ) | (அத) | (பின்னர்) |
| नृमणाः | ந்ருமணா: | வேட்போர்கள் (பால்) மனம் வைக்கும் அவ் விந்திரன் |
| स्नीहितिं | ஸ்நீஹிதிம் | துன்புறுத்துகின்ற அவ் வசுர சேனைகளை |
| अपद्राः | அபத்ரா: | நாசஞ்செய்து விட்டனன். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—1. த்யுதான ரிஷி.

ஈண்டோர் இதிகாசங் கூறப்படுகின்றது அதாவது :—முன்னொரு காலத்தில் கிருஷ்ணன் என்பதோர் அசுரன், பத்தாயிரம் அசுரர்களாற் சூழப்பட்டோனாய் அம்சுமதி என்னும் நதிக்கரையிற் றங்கியிருந்தனன். அங்கு நீர் நடுவிலிருந்த அக் கிருஷ்ணனை, இந்திரன் பிருகஸ்பதியோடு போய்ச் சேர்ந்து அவனையும், அவனைப் பின்றொடர்ந்தார்களையும், பிருகற்பதியின் சகாயத்தாற் கொன்றனன் என்பதாம். சோமன், என்பவன் அஞ்சுமதி நதிக்கரையிலிருந்தனன். அவனை, பிருகற்பதியோடு இந்திரன் சென்று, பன்னாட் போராற்றிக் கொன்றனன் என, இவ் விதிகாசத்தை மற்றோர் வகையாய்க் கூறுவார் சிலர். இவ்விதிகாசமனைத்தும் இம்மந்திரத்திற் கூறப்படுகின்றது. இஃது இருடியாற் கூறப்படாததெனினோ, கொள்ளற் பாலதன்றாம். (இருடி மொழியாதலின் இஃது கொள்ளற்பாலதேயாம் என்பது கருத்து.)

இனி முறையாய் மந்திரத்தின் பொருள் கூறப்படுகின்றது. அது வருமாறு :—விரைவாகச் செல்கின்ற பத்தாயிர மெண்கொண்ட அசுரர்களாற் சூழப்பட்ட கிருஷ்ணன் என்னும் அசுரன், அம்சுமதி, என்னும் நதிக்கரையிலிருந்தனன். பின்னர், தனது செய்கையால், அல்லது, அறிவால் நீருக்குள்ளிருக்கப்பட்ட, அல்லது, உலகம் பயப்படுமாறு ஒலி செய்யப்பட்ட, கிருஷ்ணன் என்னும் அவ் வசுரனை இந்திரன் மருத்துக்களோடு போய் அடைந்தனன். அடைந்த பின்னர் அவனையும், அவனைப் பின்பற்றினோர்களையும், இந்

திரன் கொன்றுவிட்டனன் என்பதாம். மனிதர்களிடத்து, அல்லது, தே போர்களிடத்து மனமுள்ள, அவ்விந்திரன் அனைவரையுந் துன்புறுத்தும் அசுரனுடைய சேனையைக் கொன்று, அவனுடன் இருந்தாரையுங் கொன்று, விரைவில் ஓடிய அவ்வசுரனையுங் கொன்றுவிட்டனன் என்பது கருத்தெனக் கொள்க.

## மந்திரம் 2.

३१२ ३२३१२ ३ १ २३१ २
324. वृत्रस्य त्वा श्वसथादीषमाणा विश्वेदेवा
३१२ ३ १२ ३ २३२उ
मरुद्भिरिन्द्र सख्यं ते अस्त्वथेमा विश्वा

வ்ருத்ரஸ்ய த்வா ஶ்வஸதாதீஷமாணா விஶ்வே

மருத்³பி⁴ரிந்த்³ர ஸக்²யம் தே அஸ்த்வதே²மா விஶ்வ

### அந்வயம்.

हे इन्द्र!, ये, विश्वेदेवाः, सखायः, वृत्रस्य, श्वसथात्, ईषमाणाः, त्वा, अजहुः, मरुद्भिः, ते, सख्यं, अस्तु, अथ, इमाः, विश्वाः पृतनाः, जयासि ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்³ர! | இந்திரனே! (உனக்கு) |
| ये | யே | எந்த |
| विश्वे देवाः | விஶ்வே தே³வா: | விசுவ தேவர்கள் |
| सखायः | ஸகா²ய: | (போரில், முன்னர்) உதவியாயிருந்தார்களோ, (அவர்கள்) |
| वृत्रस्य | வ்ருத்ரஸ்ய | விருத்திராசுரனுடைய |
| श्वसथात् | ஶ்வஸதா²த் | பெருமூச்சால் |
| ईषमाणाः | ஈஷமாணா: | வெருண்டோடினவர்களாய் |
| त्वा | த்வா | நின்னை |
| अजहुः | அஜஹு: | விட்டுவிட்டார்கள். (ஆதலின் இந்திர!) |
| मरुद्भिः | மருத்³பி⁴: | மருத்துக்களோடு |
| ते | தே | உனது |
| सख्यं | ஸக்²யம் | நட்புத்தன்மை |
| अस्तु | அஸ்து | இருக்குக. |

| | |
|---|---|
| ஈயூ | பின்னர் |
| ஊஊா: | இந்த |
| விஶ்வா: | எல்லாப் |
| வ்ரு தநா: | பகைஞர் படைகளையும் |
| ஜயாஸி | வெற்றிகொள்வாயாக. |

சாயணபாடியம்.

ருக்கு—2. த்யுதான ரிஷி.

...ர் நினக்கு எந்த விசுவ தேவர்கள் (எல்லாத் தேவர் ...பி செய்பவர்களா யிருக்கின்றோம், என்று நண்பர்க ...ளனைவரும், விருத்திராசுரனுடைய பெருமூச்சால், ...தவர்கள் அனைவர்களையும் விருத்திராசுரன் நோக்கி ...மாறு பெருமூச்செறிந்தனன். அப் பெருமூச்சாற் ...ரம். இதுகொண்டே யாண்டு மோடினவர்களாய்ப் ...விட்டார்கள். இவ்வாறுயவழி இந்திர! மருத் ...டு நினக்கு மித்திரத் தன்மை யிருக்குக. எவ் ...துக்களோடெனின்? எம் மருத்துக்கள் நின்னைப் ...ர்களோடு. பின்னர் இவர்களனைவர்களும் பகைஞர் ...யாலடக்கி விடுவார்கள் என்பது கருத்து. "இந்தி ரன் விருத்திரனைக் கொன்று" என்றற் றொடக்கத்து (3-2-9.) ஐதரேயப் பிராமணங் கூறுகின்றது ஈண்டுச் சிந்திக்கற்பாலது. (2)

## மந்திரம் 3.

३ १ २ ३१ २र ३१ २र३ १ २ ३ १ २
325. विधुं दद्राणꣳ समने बहूनां युवानꣳ सन्तं पलितो जगार ।
३ १ २ ३ १ २ ३ २उ ३ २३ १ २र
देवस्य पश्य काव्यं महित्वाद्या ममार स ह्यः समानः ॥ ३ ॥

இருக்கு 10-55-5.

விധும் ஐத்ராணம் ஸமநே பஹூநாம் யுவாநம் ஸந்தம் பலிதோ [ஜகார ।
தேவஸ்ய பஶ்ய காவ்யம் மஹித்வாத்யா மமார ஸ ஹ்யः ஸமாநः ॥

அந்வயம்.

विधुं, समने, बहूनां, दद्राणं, युवानं सन्तं, पलितः, जगार, देवस्य, महित्वा, काव्यं, पश्य, अद्य, ममार, सः, ह्यः, समानः ॥

திரன் கொன்றுவிட்டனன் என்பதாம். மனிதர்களிடத்து, அல்லது, வே போர்களிடத்து மனமுள்ள, அவ்விந்திரன் அனைவரையுந் துன்புறுத்தும் அசுரனுடைய சேனையைக் கொன்று, அவனுடன் இருந்தார்களையுங் கொன்று, விரைவில் ஓடிய அவ்வசுரனையுங் கொன்றுவிட்டனன் என்பது கருத்தெனக் கொள்க.

-மூ-

மாகிய

## மந்திரம் 2.

ஒத்தனுமுள்ள ஒரு
ந்திரனுடைய கிரு

३१२ ३२३१२ ३ १२३१२

324. **वृत्रस्य त्वा श्वसथादीषमाणा विश्वेदेवा** ன் ஒருவன்

३१२ ३१२ ३२३२उ றனன்.

**मरुद्भिरिन्द्र सख्यं ते अस्त्वथेमा विश्वा** கிய இந்திரனுடைய

மிக்க

வ்ருத்ரஸ்ய த்வா ஶ்வஸதாதீஷமாணா விஶ்வெ) ஆற்றலை
)கிய ஆன்மாவே நீ) பார்ப்
ராயாக.

மருத்பிரிந்த்ர ஸக்யம் தெ அஸ்த்வதெமா விஶ்வக் கிழத் தன்மையுடைய
றவன்) இன்று
னன்.

அந்வயம்.

हे इन्द्र!, ये, विश्वेदेवाः, सखायः, वृत्रस्य, श्वसथात्, ईषमाणाः, त्वा, अजहुः, मरुद्भिः, ते, सख्यं, अस्तु, अथ, इमाः, विश्वाः पृतनाः, जयासि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र!** | ஹெ இந்த்ர! | இந்திரனே! (உனக்கு) |
| **ये** | யெ | எந்த |
| **विश्वे देवाः** | விஶ்வெ தெவாஃ | விசுவ தேவர்கள் |
| **सखायः** | ஸகாயஃ | (போரில், முன்னர்) உதவியாயிருந்தார்களோ, (அவர்கள்) |
| **वृत्रस्य** | வ்ருத்ரஸ்ய | விருத்திராசுரனுடைய |
| **श्वसथात्** | ஶ்வஸதாத் | பெருமூச்சால் |
| **ईषमाणाः** | ஈஷமாணாஃ | வெருண்டோடினவர்களாய் |
| **त्वा** | த்வா | நின்னை |
| **अजहुः** | அஜஹுஃ | விட்டுவிட்டார்கள். (ஆதலின் இந்திர!) |
| **मरुद्भिः** | மருத்பிஃ | மருத்துக்களோடு |
| **ते** | தெ | உனது |
| **सख्यं** | ஸக்யம் | நட்புத்தன்மை |
| **अस्तु** | அஸ்து | இருக்குக. |

| | |
|---|---|
| அத | பின்னர் |
| ஜநாஃ | இந்த |
| விஶ்வாஃ | எல்லாப் |
| வ்ருதநாஃ | பகைஞர் படைகளையும் |
| ஜயாஸி | வெற்றிகொள்வாயாக. |

சாயண பாடியம்.

ருக்கு—2. த்யுதான ரிஷி.

...ர் நினக்கு எந்த விசுவ தேவர்கள் (எல்லாத் தேவர்
...ி செய்பவர்களா யிருக்கின்றோம், என்று நண்பர்க
...ளனைவரும், விருத்திராசுர னுடைய பெருமூச்சால்,
...தவர்கள் அனைவர்களையும் விருத்திராசுரன் நோக்கி
...மாறு பெருமூச்செறிந்தனன். அப் பெருமூச்சாற்
...ரம். இதுகொண்டே யாண்டு மோடினவர்களாய்ப்
...விட்டார்கள். இவ்வாறுயவழி இந்திர! மருத்
...டு நினக்கு மித்திரத் தன்மை யிருக்குக. எவ்
...துக்களோடெனின்? எம் மருத்துக்கள் நின்னைப்
...ர்களோடு. பின்னர் இவர்களனைவர்களும் பகைஞர்
...யாலடக்கி விடுவார்கள் என்பது கருத்து. "இந்தி
...விருத்திரனைக் கொன்று" என்றற் றொடக்கத்து (3-2-9.) ஐதரேயப்
பிராமணங் கூறுகின்றது ஈண்டுச் சிந்திக்கற்பாலது. (2)

மந்திரம் 3.

३ १ २ ३१ २र ३१ २र३ १ २ ३ १ २

325. विधुं दद्राणꣳ समने बहूनां युवानꣳ सन्तं पलितो जगार ।

३१२ ३ १२ ३ २उ ३२३ १ २र

देवस्य पश्य काव्यं महित्वाद्या ममार स ह्यः समानः ॥ ३ ॥

இருக்கு 10-55-5.

விது⁴ம் த³த்³ராணம் ஸமநே ப³ஹூநாம் யுவாநம் ஸந்தம் பலிதோ [ஜகா³ர ।

தே³வஸ்ய பஶ்ய காவ்யம் மஹித்வாத்³யா மமார ஸ ஹ்ய꞉ ஸமாந꞉ ॥

அந்வயம்.

विधुं, समने, बहूनां, दद्राणं, युवानं सन्तं, पलितः, जगार, देवस्य, महित्वा, काव्यं, पश्य, अद्य, ममार, सः, ह्यः, समानः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विधुं | வியுஂ | போர் முதலியவைகளைச் செய்பவனும் |
| समने | ஸமநே | போரில் |
| बहूनां | பஹூநாஂ | அநேகம் பகைஞர்களை |
| दद्राणं | தத்ராணஂ | வெருட்டுபவனுமாகிய |
| युवानं सन्तं | யுவாநஂ ஸந்தஂ | தருணப் பருவத்தனுயுள்ள ஒருவனை, (இந்திரனுடைய கிருபையால்) |
| पलितः | பலிதஃ | கிழவன் ஒருவன் |
| जगार | ஜகார | வென்றனன். |
| देवस्य | தேவஸ்ய | காலமாகிய இந்திரனுடைய |
| महित्वा | மஹித்வா | மகிமை மிக்க |
| काव्यं | காவ்யஂ | (இந்த) ஆற்றலை |
| पश्य | பஶ்ய | (யானுகிய ஆன்மாவே நீ) பார்ப்பாயாக. |
| अद्य | அத்ய | (மிகக் கிழத் தன்மையுடைய ஒருவன்) இன்று |
| ममार | மமார | இறந்தனன். |
| सः | ஸஃ | அவன் |
| ह्यः | ஹ்யஃ | மறு தினத்திற் |
| समान: | ஸமாநஃ | பிறப்பெடுத்து வருகின்றான். (இதையும் பார்ப்பாயாக.) |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—3. பிருகதுக்த ரிஷி.

இம் மந்திரத்தில் இந்திரன் கால வடிவாய்த் துதிக்கப்படுகின்றான். எல்லா யுத்தங்களையும் நியமிப்பவனும், அதாவது போரனைத்தையுஞ் செய்பவனும்) அவ்வாறே போரில் எல்லாப் பகைஞர்களையும் வெருட்டுபவனுமாகிய இத்துணை வலியோடுகூடிய ஒரு தருணனை, கிழத்தன்மையுடையோன் ஒருவன் இந்திரனுடைய கிருபையால் வென்றனன். இத்தன்மைய இயல்புள்ளவனும், மேற்கூறிய இலக்கணத்தை யுடையவனுமாகிய, காலம் என்னும் இந்திரனுடைய மகிமை தங்கிய ஆற்றலை, பிருகத்துக்தனே! நீ காண்பாயாக. இந்த ரிஷி தனதான்மாவையே கூப்பிட்டுச் சொல்கின்றார். எவன் கிழத்தன்மையடைந்து இன்று இறக்கின்றானே, அவன் மற்றைய தினத்தில் நன்று பிழைக்கின்றான். அதாவது மறு பிறப்பில் வெளிப்படுகின்றான். (இதையுங் காண்பாயாக.) (3)

## மந்திரம் 4.

२ ३ २ ३२ ३ १२ ३१ २ ३ १२

326. त्वꣳह त्यत् सप्तभ्यो जायमानोऽशत्रुभ्यो अभवः शत्रुरिन्द्र ।

३१ २२ २ १ २२ ३ २ ३ १२ १२

गूढे द्यावापृथिवी अन्वविन्दो विभुमद्भ्यो भुवनेभ्यो रणं धाः ॥

இருக்கு 8-96-16.

த்வꣳஹ த்யத் ஸப்தப்யோ ஜாயமானோऽஶத்ருப்யோ அபவ:
[ஶத்ருரிந்த்ர ।

கூடே த்யாவாப்ருதிவீ அந்வவிந்தோ விபுமத்ப்யோ புவனேப்யோ
[ரணம் தா: ॥

அந்வயம்.

हे इन्द्र!, त्वं ह, त्यत्, जायमानः, अशत्रुभ्यः, सप्तभ्यः, शत्रुः, अभवः, गूढे, द्यावापृथिवी, अन्वविन्दः, विभुमद्भ्यः, भुवनेभ्यः, रणं धाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र!** | ஹே இந்த்ர! | இந்திரனே! |
| **त्वं ह** | த்வம் ஹ | உண்மையில் நீ |
| **त्यत्** | த்யத் | (மேல்வரும்) இவ்வித பராக்கிரம முடையாய். |
| **जायमानः** | ஜாயமான: | தோன்றும் போதே |
| **अशत्रुभ्यः** | அஶத்ருப்ய: | சத்துருக்களற்ற |
| **सप्तभ्यः** | ஸப்தப்ய: | கிருஷ்ணன், விருத்திரன், நமுசி முதலிய ஏழுவர்களின் பொருட்டுச் |
| **शत्रुः** | ஶத்ரு: | சத்துருவாக |
| **अभवः** | அபவ: | ஆனாய். (மற்றும், நீ) |
| **गूढे** | கூடே | இருள் மூடிப்புள்ள |
| **द्यावापृथिवी** | த்யாவாப்ருதிவீ | வானையும் மண்ணையும் |
| **अन्वविन्दः** | அந்வவிந்த: | விளக்கிக்கொண்டனை. (அங்ஙனமே) |
| **विभुमद्भ्यः** | விபுமத்ப்ய: | பெரிதாகின |
| **भुवनेभ्यः** | புவனேப்ய: | புவனங்களினின்றும் |
| **रणं** | ரணம் | இரமித்தலைக் |
| **धाः** | தா: | கொள்கின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—4. த்யுதான ரிஷி.

இந்திர! உண்மையில் நீ இத் தன்மைய செய்கையைச் செய்தோனு யிருக்கின்றாய். அஃதென்னை யெனின்? தோன்றிய போதே சத்துருக்க ளில்லாத கிருஷ்ணன், விருத்திரன், நமுசி, சம்பரன் முதலிய எழுவருக்குஞ் சத்துருவாயினே. அல்லது, ஏழுபுரியின் பொருட்டுச் சத்துருவாயினே. 'ஏழு புரத்தை எவன் நாசஞ்செய்கின்றான்' என்று நிருத்தமுங் கூறுகின்றது. அல்லது இருக்கோதுவான் முதலிய ஏழு வேட்போரின் பொருட்டு வேள்வி யிற் றோன்றும்போதே இடையூறு விளைப்பவர்கட்குச் சத்துருவானாய். அன்றியும், இந்திர! நீ இருளால் மூடப்பட்ட வானுலகையும் மண்ணுலகை யும், இரவி வடிவமாய் விளக்கி முறையாய் அவைகளை யடைந்தாய். அங்ஙன மே மகத்தான புவனங்களினின்றும் ஆடல் செய்வதை மேற்கொண்டாய். (இத்தன்மைய அரிய செயலை நீ செய்தனை என்பது கருத்து.) (4)

மந்திரம் 5.

३ १ २र ३ १ २ ३१२ ३ १ २ ३ २ ३१ २

327. मेडिं न त्वा वज्रिणं भृष्टिमन्तं पुरुधस्मानं वृषभꣳ स्थिरप्स्नुम् ।

३ २उ ३ १२ ३ १ २र ३ १ २३१२

करोष्यर्य्यस्तरुषीर्दुवस्युरिन्द्र द्युक्षं वृत्रहणं गृणीषे ॥ ५ ॥

மேடிம் ந த்வா வஜ்ரிணம் ப்ருஷ்டிமந்தம் புருதஸ்மாநம் வ்ருஷபம் [ஸ்திரப்ஸ்நும் ।

கரோஷ்யர்யஸ்தருஷீர்துவஸ்யுரிந்த்ர த்யுக்ஷம் வ்ருத்ரஹணம் [க்ருணீஷே ॥

அங்வயம்.

हे इन्द्र!, दुवस्युः, अर्यः, तरुषीः, करोषि, वृत्रहणं, द्युक्षं, पुरुधस्मानं, वृषभं, स्थिरप्स्नुं, वज्रिणं, भृष्टिमन्तं, त्वा, मेडिं न, गृणीषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்ர! | இந்திரனே! நீ |
| दुवस्युः | துவஸ்யு: | துதி முதலிய வழிபாட்டை விழைந்து |
| अर्यः | அர்ய: | எனது பகைஞர் தாழ்ந்தவராக வும் |
| तरुषीः | தருஷீ: | யான் வெற்றியுடை யனாகவும் |
| करोषि | கரோஷி | செய்கின்றாய். |

| | | |
|---|---|---|
| वृत्रहणं | வ்ருத்ரஹணம் | விருத்திரனைக் கொன்றவனும், |
| द्युक्षं | த்யுக்ஷம் | வானுலகி லிருப்போனும், |
| पुरुधस्मानं | புருதஸ்மானம் | நீரைத்தாங்குவோனும், அல்லது பகைஞரைக் கெடுப்போனும் |
| वृषभं | வ்ருஷபம் | வேண்டியதை மழையெனப் பொழிவோனும் |
| स्थिरप्स्नुं | ஸ்திரப்ஸ்னும் | நிலைத்த வடிவனும் |
| वज्रिणं | வஜ்ரிணம் | வச்சிராயுதந் தாங்கியவனும் |
| भृष्टिमन्तं | ப்ருஷ்டிமந்தம் | பகைஞரைக் காய்பவனுமாகிய |
| त्वा | த்வா | உன்னை |
| मेडिं न | மேடிம் ந | மழையைக் கொடுக்கின்ற வாக்கைத் துதிக்குமாறு |
| गृणीषे | க்ருணீஷே | தோத்திரம் பண்ணுகின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—5. வாமதேவ ரிஷி.

இந்திர! துதித்தல் முதலிய பணியை விரும்புகின்ற நீ எனது பகைஞர்களைத் தாழ்ந்தவர்களாகவும் (தோல்வி யுடையவர்களாகவும்) எங்களை வெற்றியுடையவர்களாகவுஞ் செய்கின்றாய். அல்லது, எங்களைத் தருணர்களாகவும், எமது சத்துருக்களை மெலிவுடையவர்க (கிழவர்க) ளாகவுஞ் செய்கின்றாய். ஆதலின், மழையைக் கொடுக்கும் மத்திமை வாக்கைப்போல், அதாவது மழையின் பொருட்டு (அவ்வாக்கை)த் துதிக்குமாறு உன்னைத் தோத்திரம் பண்ணுகின்றேன் என்பதாம். எவ்வண்ணத்தனாகிய நின்னையெனின்? விருத்திராசுரனைக் கொன்றோனும், மேகத்தைக் கடிந்தோனும், வானுலகிலிருப்போனும், மிகுந்த நீரைத் தாங்குவோனும், அல்லது, பல சத்துருக்களை யடக்குவோனும், விரும்பியவைகளை மழையாய்ப் பெய்விப்போனும், உண்மை வடிவனும், இந்திரனுடைய வடிவம் ஓர்காலும் நழுகுவதில்லை ஆதலினென்க. அல்லது, நிலையான சத்துருக்களைக் கொல்வோனும், வச்சிராயுதமுடையோனும், பகைஞரைக் காய்வோனுமாகிய நின்னை. துதிக்கின்றேன் என்பதனோடு சேர்த்துக்கொள்க. (5)

## மந்திரம் 6.

१ २ ३ २ २३ १२ ३ १२ ३ १२ ३ १ २

328. प्रवो * महे महे वृधे भरध्वं प्रचेतसे प्रसुमतिं कृणुध्वम् ।

१ २ ३ १ २र ३ २

विशः पूर्वीः प्रचर चर्षणीप्राः ॥ ६ ॥

இருக்கு 7-31-10.

---

* महो महि वृध, என்பது இருக்கு.

ப்ரவோ மஹே மஹே வ்ருதே ப⁴ரத்⁴வம் ப்ரசேதஸே ப்ர ஸுமதிம் [க்ருணுத்⁴வம் |
விஶ: பூர்வீ: ப்ரசர சர்ஷணிப்ரா: ||

## அந்வயம்.

(हे अस्मदीयाः !,) वः, महे वृधे, महे, प्रभरध्वं, प्रचेतसे, सुमतिं, प्रकृणुध्वं, चर्षणिप्राः, पूर्वीः, विशः, प्रचर ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे अस्मदीयाः !) | (ஹே அஸ்மதீ³யா: !) | (எம்மவர்களே !) |
| वः | வ: | நீவிர் |
| महे वृधे | மஹே வ்ருதே⁴ | தனத்தை மிக வளரச்செய்கின்ற |
| महे | மஹே | பெரியோனாகிய இந்திரனுக்கு |
| प्रभरध्वं | ப்ரப⁴ரத்⁴வம் | சோமரசத்தை அர்ப்பணஞ் செய்வீர்களாக. |
| प्रचेतसे | ப்ரசேதஸே | மேலாகிய அறிவுடைய இந்திரன் பொருட்டு |
| सुमतिं | ஸுமதிம் | இனிய தோத்திரத்தை |
| प्रकृणुध्वं | ப்ரக்ருணுத்⁴வம் | நன்கு செய்வீர்களாக. (இந்திர !) |
| चर्षणिप्राः | சர்ஷணிப்ரா: | பிரசைகளின் மனோவேட்கையை நிறையப் பண்ணுகின்ற நீ |
| पूर्वीः | பூர்வீ: | அவி கொடுக்கின்ற |
| विशः | விஶ: | பிரசைகளை |
| प्रचर | ப்ரசர | நன்கு அடைவாயாக. |

## சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—6. வசிட்ட ரிஷி. விராட் சந்தம்.

எம் மவர்களே ! நீவிர் தனத்தை மிக வளரச்செய்கின்ற பெரியோனாகிய இந்திரனுக்குச் சோமரசங்களை அர்ப்பணஞ் செய்வீர்களாக. மேலாகிய ஞானமுடைய இந்திரன் பொருட்டு அழகாகிய தோத்திரத்தையுஞ் செய்வீர்களாக. இனிப் பிரத்தியட்சத் தோத்திரம். இந்திர ! வேண்டியவைகளாற் பிரசைகளைத் திருப்தி செய்கின்ற நீ, அவிகளை நிறையக் கொடுக்கின்ற பிரசைகளை இனிதடைவாயாக என்பதாம். (6)

### மந்திரம் 7.

३ १ २ ३१ २ ३ १ २३ २उ ३ १२३ १२
329. शुनं हुवेम मघवानमिन्द्रमस्मिन् भरे नृतमं वाजसातौ ।
३ १ २ ३२३ २२ ३ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २
शृण्वन्तमुग्रमूतये समत्सु घ्नन्तं वृत्राणि सञ्जितं धनानि ॥ ७ ॥

இருக்கு 3-30-22.

ஶுநம் ஹுவேம மகவாநமிந்த்ரமஸ்மிந் பரே ந்ருதமம் வாஜஸாதௌ ।
ஶ்ருண்வந்தமுக்ரமூதயே ஸமத்ஸு க்நந்தம் வ்ருத்ராணி ஸஞ்ஜிதம்
[தநாநி ॥

அந்வயம்.

वाजसातौ, भरे, अस्मिन्, शुनं, मघवानं, नृतमं, इन्द्रं, हुवेम, शृण्वन्तं, उग्रं, समत्सु, वृत्राणि, घ्नन्तं, धनानि, सञ्जितं, ऊतये ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वाजसातौ | வாஜஸாதௌ | அன்னத்தை யடைவிப்பதும் |
| भरे | பரே | போராற்றுவோர்க்கு வெற்றி யென்னும் இலக்குமியை யடைவிப்பதுமாகிய |
| अस्मिन् | அஸ்மிந் | இப் போரின்கண் |
| शुनं | ஶுநம் | வளர்ந்துள்ளவனும் |
| मघवानं | மகவாநம் | தன முடையவனும் |
| नृतमं | ந்ருதமம் | மனிதர்களுள் மேம்பட்டவனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| हुवेम | ஹுவேம | வேள்விக்கு அழைக்கின்றோம். (அங்ஙனமே) |
| शृण्वन्तं | ஶ்ருண்வந்தம் | எனது துதியைக் கேட்போனும் |
| उग्रं | உக்ரம் | பகைஞர்கட்குப் பயங் கொடுப்போனும் |
| समत्सु | ஸமத்ஸு | போர்களில் |
| वृत्राणि | வ்ருத்ராணி | இராக்கதர்களைக் |
| घ्नन्तं | க்நந்தம் | கொல்வோனும் |
| धनानि | தநாநி | பகைஞரின் தனங்களை |
| सञ्जितं | ஸஞ்ஜிதம் | வெற்றியிற் கொள்கின்றவனுமாகிய நின்னை |
| ऊतये | ஊதயே | எம்மைப் பாதுகாத்தற் பொருட்டுக் (கூப்பிடுகின்றோம்.) |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—7. விசுவாமித்திர ரிஷி. சந்தம் திருஷ்டுப்.

அன்னலாபத்தைத் தரும் வெற்றி இலக்குமியை யளிக்கும் உயுத்தத்தில் உற்சாகத்தால் வளர்கின்றவனும், தனமுடையவனும், இதனுனே வியப்புற்ற ஐசுவரியமுடையானும், உலகனைத்தையும் வியப்புடன் நியமிப்போனுமாகிய இந்திர! உன்னை, குசிகர்களான நாங்கள் வேள்வியின் பொருட்டு அழைக்கின்ருேம். அங்ஙனமே எனது தோத்திரத்தைக் கேட்போனும், பகைஞர்களை அச்சப் படுத்துவோனும், போர்களில் விருத்திராசுரனை உப லக்கணமாய்க் கொண்ட எல்லா அசுரர்களையுங் கொன்ருேனும், சத்துருக்களின் தனங்களை இனிது வெற்றிகொள்வோனுமாகிய நின்னை, எங்களைக் காப்பாற்றுமாறு அழைக்கின்ருேம் என்பதாம். (7)

குறிப்பு.—குசிதர்கள் - குசித ரிஷியைச் சேர்ந்தவர்கள்.

மந்திரம் 8.

२३ १ २ ३ १ २ ३१ २

330. उदु ब्रह्माण्यैरत श्रवस्येन्द्रꣳ समर्ये महया वसिष्ठ ।

१ २र३ १२ ३ १ २ ३ २ ३ १२३ १ २

आ यो विश्वानि श्रवसा ततानोपश्रोता म ईवतो वचाꣳसि ॥८॥

இருக்கு 7-23-1.

உது ப்ரஹ்மாண்யைரத ஶ்ரவஸ்யேந்த்ரம் ஸமர்யே மஹயா [வஸிஷ்ட ।

ஆ யோ விஶ்வாநி ஶ்ரவஸா ததாநோபஶ்ரோதா ம ஈவதோ [வசாம்ஸி ॥

அந்வயம்.

श्रवस्या, ब्रह्माणि, उदैरत, वसिष्ठ, समर्ये, इन्द्रं, महय, यः, विश्वानि, श्रवसा, आततान, ईवतः, मे, वचांसि, उपश्रोता ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| श्रवस्या | ஶ்ரவஸ்யா | அன்ன வேட்கையால் |
| ब्रह्माणि | ப்ரஹ்மாணி | துதிகளை, அல்லது அவிகளை (இந்திரன் பொருட்டு) |
| उदैरत | உதைரத | (இருடிகள்) அர்ப்பணஞ் செய்கின்ருர்கள். (ஆதலின்) |
| वसिष्ठ! | வஸிஷ்ட! | இந்திரியங்களை வென்ருேனாகிய வசிட்ட! நீ |

| | | |
|---|---|---|
| समर्ये | ஸமர்யே | வேள்வியில் |
| इन्द्रं | இந்த்³ரம் | இந்திரனை |
| महय | மஹய | ஆராதிப்பாயாக. (மற்றும்) |
| यः | ய꞉ | எவ் விந்திரன் |
| विश्वानि | விஶ்வாநி | உலகங்களை |
| श्रवसा | ஶ்ரவஸா | அன்னத்தால், அல்லது, கீர்த்தியால் |
| आततान | ஆததாந | விருத்தி பண்ணுகின்றனோ, (அவன்) |
| ईवतः | ஈவத꞉ | உபாசிக்கின்ற |
| मे | மே | எனது |
| वचांसि | வசாம்ஸி | வாக்குகளைக் |
| उपश्रोता | உபஶ்ரோதா | கேட்போனுகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—8. வசிட்ட ரிஷி.

அன்னம் (வேண்டுமென்னும்) விருப்பால் தோத்திரங்களையும், அன்னங்களையும், இந்திரன் பொருட்டு இருடிகள் அர்ப்பிக்கின்றார்கள். ஈண்டு இருடிகள், என்பது எஞ்சி நின்றது. வசிட்ட! நீயும் வேள்வியில் இந்திரனைத் தோத்திரத்தாலேனும், அவியாலேனும் பூசிப்பாயாக. மற்றும், யாதொரு இந்திரன் இப் புவனங்களை அன்னத்தினாலேனும், கீர்த்தியினாலேனும், விருத்திபண்ணுகின்றனோ, அவன், வழிபடுகின்ற என்னுடைய துதியாகிய வாக்குகளைக் கேட்போனுகுக. (8)

## மந்திரம் 9.

३ १ २र ३ १ २र ३ १ २र ३ १ २र

331. चक्रं यदस्याप्स्वा निषत्तमुतो तदस्मै मध्विच्चच्छद्यात् ।

३ १ २र ३ २उ ३ २ ३ १ २र३ १ २

पृथिव्यामतिषितं यदूधः पयोगोष्वदधा ओषधीषु ॥ ९ ॥

இருக்கு 10-73-9.

சக்ரம் யத³ஸ்யாப்ஸ்வா நிஷத்தமுதோ தத³ஸ்மை மத்⁴விச்சச்ச²த்³யாத் ।

ப்ருதி²வ்யாமதிஷிதம் யதூ³த⁴꞉ பயோகோ³ஷ்வத³தா⁴ ஓஷதீ⁴ஷு ॥

அங்வயம்.

अस्य, यत् चक्रं, अप्सु, आ, निषत्तं, उतो, अस्मै, मध्वित्, चच्छद्यात्, तत्, पृथिव्यां, अतिषितं, यत् ऊधः, पयोगोषु, ओषधीषु, अदधाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अस्य | அஸ்ய | இவ் விந்திரனுடைய |
| यत् चक्रं | யத் சக்ரம் | யாதொரு சக்கராயுதம் |
| अप्सु | அப்ஸு | வானில் |
| आ | ஆ | நாற்புறத்தும் |
| निषत्तं | நிஷத்தம் | மேகத்தைக்கடிய நின்றதோ, |
| उत: | உத: | (மற்றும்) |
| अस्मै | அஸ்மை | இவ் விந்திரன் பொருட்டு |
| मधिवत् | மத்விக் | நீரையும் |
| चच्छद्यात् | சச்சத்யாத் | வசப்படுத்துகின்றதோ. |
| तत् | தத் | அது |
| पृथिव्यां | ப்ருதிவ்யாம் | தரையில் |
| अतिषितं | அதிஷிதம் | விடப்பட்ட |
| यत् ऊधः | யத் ஊத: | நீரை |
| पयो गोषु | பயோ கோஷு | பாற்பசுக்களிலும் |
| ओषधीषु | ஓஷதீஷு | பச்சிலைகளிலும் |
| अद्धाः | அததா: | நிலைக்க வைக்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—9. கௌரவீதி ரிஷி.

இவ் விந்திரனுடைய சக்கராயுதம், அந்தரிட்சத்தில் நாற்புறமும் மேகங்களைக் கடிதற்பொருட்டுத் தோன்றியது. மற்றும், அது இந்திரனுக்கு நீரையும் வசமாக்குகின்றது. தரையின்கண் விழப்பட்ட நீரை, பச்சிலைகளிலும், பால் கறக்கின்ற பசுக்களிடத்தும் நிறுத்தி வைக்கின்றது என்பதாம். (9)

## பத்தாவது கண்டம்.

முற்றும்.

## பதினோராவது கண்டம்.

பிரபாடகம்—4. அத்தியாயம்—3. கண்டம்—11.

பத்து மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

२ ३२ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २ १ २
332. त्यमूषु वाजिनं देवजूतꣳ सहोवानं तरुतारꣳ रथानाम् ।
१ २ ३ १ २ ३ २ ३ २ ३ १ १ ३ १ २
अरिष्टनेमिं पृतनाजमाशुꣳ स्वस्तये तार्क्ष्यमिहा हुवेम ॥ १ ॥

இருக்கு 10-178-1.

த்யமூஷு வாஜிநம் தேவஜூதம் ஸஹோவாநம் தருதாரம் [ரதாநாம் ।
அரிஷ்டநேமிம் ப்ருதநாஜமாசும் ஸ்வஸ்தயே தார்க்ஷ்யமிஹா [ஹுவேம ॥

அந்வயம்.

वाजिनं, देवजूतं, सहोवानं, रथानां, तरुतारं, अरिष्टनेमिं, पृतनाजं, आशुं, त्यं तार्क्ष्यं, स्वस्तये, इह, हुवेम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वाजिनं | வாஜிநம் | அன்னமுடையோனும், அல்லது வலியுடையோனும், |
| देवजूतं | தேவஜூதம் | தேவர்களால் நியமிக்கப் பட்டோனும் |
| सहोवानं | ஸஹோவாநம் | ஆற்றலுடையோனும் |
| रथानां | ரதாநாம் | போரில் ஏனைய இரதங்களைக் |
| तरुतारं | தருதாரம் | கடந்து செல்வோனும் |
| अरिष्टनेमिं | அரிஷ்டநேமிம் | கூரிய ஆயுதமுடையோனும் |
| पृतनाजं | ப்ருதநாஜம் | பகைஞர் படைகளை வெல்வோனும் |
| आशुं | ஆசும் | வேகமாய்ச் செல்வோனுமாகிய |
| त्यं तार्क्ष्यं | த்யம் தார்க்ஷ்யம் | புகழுற்ற அந்தத் திருக்ஷ புத்திரனாகிய சுபர்ணனை |
| स्वस्तये | ஸ்வஸ்தயே | மங்கலத்தின் பொருட்டு |
| इह | இஹ | இக் கருமத்திற்குப் |
| हुवेम | ஹுவேம | பன்முறை யழைக்கின்றோம். |

சாயண பாடியம்.

**கண்டம்—11. இருக்கு—1.** *தார்க்ஷிய புத்திரர் அரிஷ்டநேமி ரிஷி.*

புகழ்மலிந்த திருக்ஷனுடைய புத்திரன், தார்க்ஷியன் (சுபர்ணன்) என்னுந் தேவனை மங்கலத்தின் பொருட்டு இக் கிரியை(க்கு)யில் பன்முறை அழைக்கின்றோம். எவ்வண்ணத்தனை யெனின்? அன்னமுடையானும், அல்லது பலமுடையானும், தேவர்களாற் சோமங்கொண்டு வருதற்கு நியமிக்கப் பட்டவனும், அல்லது தேவர்களாற் பிரியப்பட்டவனும், ஈண்டு யாஸ்க முனிவரும் “தேவ தூதனை தேவர் பிரியனை” எனக் கூறியுள்ளார். வலியுள்ளானும், இதனாலே போரில் ஏனையோர்களின் இரதத்தைத் தாண்டிச் செல்வோனும், அல்லது, இரதமென்னும் இவ்வுலகத்தை, சோமரசங் கொண்டு வருங்கால் கரையேற்றுபவனும், ஈண்டு “இவனே இவ்வுலகங்களை இப்போதே கரையேற்றுகின்றான்” என ஏனைய மறையுங் கூறுகின்றது. துன்புறுத்தாத தேருடையானும், அல்லது துன்புறுத்தாத ஆயுதமுடையானும், அல்லது அரிஷ்டநேமி, என்னும் எனது காரணமானவனும், பகைஞரின் சேனைகளை அடையுமாறு செய்வோனும், அல்லது, செயிப்போனும், விரைவிற் செல்பவனுமானவனை. (இனிது அழைக்கின்றோம் என்பதனோடு சேர்க்க.) (1)

**குறிப்பு.**—*அரிஷ்டநேமியாகிய யான் இந்திரனை யழைக்கின்றேன் என்பாருமுளர்.*

## மந்திரம் 2.

३ २३ १ २   ३ २३ २ ३   १ २ ३२३   २३ १ २
**333. ऋतारमिन्द्र मवितारमिन्द्रꣳ हवेहवे सुहवꣳ *शूरमिन्द्रम् ।**
३२उ   ३१   ३१ २र ३२   ३२ ३१ २   ३ १ २
**†हुवे नु शक्रं पुरुहूतमिन्द्रमिदꣳ हविर्मघवा ‡वेत्विन्द्रः ॥ २ ॥**

இருக்கு 6-47-11.

த்ராதாரமிந்த்³ரம் அவிதாரமிந்த்³ரம் ஹவே ஹவே ஸுஹவம் ஶூரமிந்த்³ரம் |
ஹுவே நு ஶக்ரம் புருஹூதமிந்த்³ரமித³ம் ஹவிர்மக⁴வா வேத்விந்த்³ர꞉

அங்வயம்.

**ऋतारं, इन्द्रं, हुवे, अवितारं, इन्द्रं, (हुवे) हवे हवे, सुहवं, शूरं, शक्रं, पुरुहूतं, इन्द्रं, (हुवे) मघवा इन्द्रः, इदं, हविः, वेतु ॥**

---

* सूरं, † ह्वयामि, ‡ यात्विन्द्रः, என்பன இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| त्रातारं | த்ராதாரம் | பகைஞர்களினின்றும் பாதுகாப் போனாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| हुवे | ஹுவே | (யான்) அழைக்கின்றேன். |
| अवितारं | அவிதாரம் | மனோ விருப்பை நிறையச் செய் கின்ற |
| इन्द्रं (हुवे) | இந்த்ரம் (ஹுவே) | இந்திரனை யழைக்கின்றேன். |
| हवे हवे | ஹவே ஹவே | போர்களனைத்திலும் |
| सुहवं | ஸுஹவம் | இனிது அழைக்கத் தக்கோனும் |
| शूरं | ஶூரம் | சூரனும் |
| शक्रं | ஶக்ரம் | எல்லாச் செய்கையிலும் வல்லு நனும் |
| पुरुहूतं | புருஹூதம் | பலரால் அழைக்கப்படுவோனு மாகிய |
| इन्द्रं (हुवे) | இந்த்ரம் (ஹுவே) | இந்திரனை அழைக்கின்றேன். |
| मघवा इन्द्रः | மகவா இந்த்ர: | தனமுள்ள இந்திரன் |
| इदं | இதம் | இந்த |
| हविः | ஹவி: | அவியை |
| वेतु | வேது | அருந்துவானாக. |

## சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—2. பரத்துவாச ரிஷி.

சத்துருக்களினின்றும் பாதுகாப்போனாகிய இந்திரனை அழைக்கின்றேன். அங்ஙனமே மனோவேட்கைகளை நிறையச் செய்கின்ற இந்திரனை யழைக்கின்றேன். உயுத்தங்களனைத்திலும் இனிது அழைத்தற்குரியோனும், வீரமுடையானும், காரியங்களனைத்திலும் வல்லுநனும், பாதுகாக்குமாறு பல்லோர்களால் அழைக்கப்படுவோனுமாகிய இந்திரனை அழைக்கின்றேன். இவ்வாறு அழைக்கப்பட்டவனும், தனமுடையவனுமாகிய அவ்விந்திரன் முன்னிருக்கின்ற இந்த அவியை அருந்துவானாக என்பதாம். (2)

## மந்திரம் 3.

१ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ २ १ २
334. यजामह इन्द्रं वज्रदक्षिणꣳ हरीणाꣳ *रथ्या३विव्रतानाम् ।
१२र ३ १ २ १ २ ३१ २र ३ १२ ३ १ २र
प्रश्मश्रुभिर्दोधुवदूर्ध्वधा भुवद्विसेनाभि ‡ र्भयमानो वि राधसा॥३॥

இருக்கு 10-23-1.

* रथ्यं, ‡ दयमानो, என்பன இருக்கு.

யஜாமஹ இந்த்ரம் வஜ்ரதக்ஷிணம் ஹரீணாம் ரத்யம் விவ்ரதாநாம் |
ப்ரஶ்மஶ்ருபிர்தோதுவதூர்த்வதா புவத்விஸேநாபிர்பயமாநோ
[விராதஸா ||

அந்வயம்.

वज्रदक्षिणं, विव्रतानां, हरीणां, रथ्यं, इन्द्रं, यजामहे, श्मश्रुभिः, दोधुवत्, ऊर्ध्वधाः, विभुवत्, सेनाभिः, भयमानः, वि राधसा ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **वज्रदक्षिणं** | வஜ்ரதக்ஷிணம் | வலக்கையில் வச்சிராயுதந் தாங்கியவனும் |
| **विव्रतानां** | விவ்ரதாநாம் | தேர் கொண்டு போதல் முதலிய பல தொழிலைச் செய்கின்ற |
| **हरीणां** | ஹரீணாம் | அரி, யென்னுங் குதிரைகளை |
| **रथ्यं** | ரத்யம் | வசமாக்கித் தேரிற் செலுத்துவோனுமாகிய |
| **इन्द्रं** | இந்த்ரம் | இந்திரனை |
| **यजामहे** | யஜாமஹே | அவிகளாற் பூசிக்கின்றோம். (பின்னர் அவன்) |
| **श्मश्रुभिः दोधुवत्** | ஶ்மஶ்ருபி: தோதுவத் | தனது மீசைகளை யடிக்கடி யசைத்துக்கொண்டு |
| **ऊर्ध्वधाः** | ஊர்த்வதா: | மேலே |
| **विभुवत्** | விபுவத் | நன்கு வெளிப்படுகின்றான். (மற்றும்) |
| **सेनाभिः** | ஸேநாபி: | சேனைகளுடன் |
| **भयमानः** | பயமாந: | பகைவர்களைப் பயமுறுத்திக் கொண்டு |
| **वि राधसा** | வி ராதஸா | போற்றுவோர்க்குப் பல வகைத் தனங்களைக் கொடுக்கின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—3. வசுக்குரோ, அல்லது விமதோ ரிஷி.

இந்திரனை, சோமங்களென்னும் அவிகளால் யாம் ஆராதிக்கின்றோம். எவ்வண்ணத்தனாகிய இந்திரனை யெனின்? பகைவர்களைக் கொல்லுதற்பொருட்டு இடைவிடாது வலக்கையில் வச்சிராயுதந் தாங்கியவனை. மற்றும், தேரிழுத்தல் முதலிய பலவகைத் தொழிலைச் செய்கின்ற அரி, என்னுங் குதிரைகளைக் கொண்டு தேர்ச்செலுத்துவோனை. ஆராதிக்கின்றோம் என்பதனோடு சேர்த்துக்கொள்க. அவ் விந்திரன் சோமரசம் அருந்திய பின்னர்

தனது மீசைகளை அடிக்கடி யசைத்துக்கொண்டு விசேடமாய் மேலே தோற்றுகின்றான். அன்றியும் மருத்துக்கள் முதலான தனது சேனைகளாற் சத்துருக்களை நடுங்கச் செய்துகொண்டு துதிப்போர்கட்குப் பலவிதமான தனங்களைக் கொடுக்கின்றான். (3)

குறிப்பு.—ஈண்டு மூலத்தில் வி, என்னும் அடைச்சொல்லைக் கொண்டு அதற்குரிய வினைச்சொல் சேர்க்கப்பாலதாமாதலின், பலவகைத் தனத்தைக் கொடுக்கின்றான் என வருவித்துரைக்கப்பட்டமை காண்க.

### மந்திரம் 4.

३ २ १ १२ ३ २१ १ २ ३ १ २ ३ १ २३२ ३ १ २
335. **सत्राहणं दाधृषिं तुम्रमिन्द्रं महामपारं वृषभꣳ सुवज्रम् ।**
२ ३ २ ३१ २र ३२उ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २
**हन्ता यो वृत्रꣳ सनितोत वाजं दाता मघानि मघवा सुराधाः ॥४॥**

இருக்கு 84-17-8.

ஸத்ராஹணம் தாத்ருஷிம் தும்ரமிந்த்ரம் மஹாமபாரம் வ்ருஷபம் ஸுவஜ்ரம் ।
ஹந்தா யோ வ்ருத்ரம் ஸநிதோத வாஜம் தாதா மகாநி மகவா ஸுராதா: ॥

அந்வயம்.

सत्राहणं, दाधृषिं, तुम्रं, महां, अपारं, वृषभं, सुवज्रं, इन्द्रं, यः, वृत्रं हन्ता, उत, वाजं सनिता, सुराधाः, मघवा, मघानि दाता ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **सत्राहणं** | ஸத்ராஹணம் | சத்துருவைக் கொல்வோனும் |
| **दाधृषिं** | தாத்ருஷிம் | மிகப் பயப்படுத்துவோனும் |
| **तुम्रं** | தும்ரம் | பகைஞரை வெருட்டுவோனும் |
| **महां** | மஹாம் | பெரியோனும் |
| **अपारं** | அபாரம் | கெடாதோனும் |
| **वृषभं** | வ்ருஷபம் | மனோவிருப்பங்களை மழையெனப் பொழிவோனும் |
| **सुवज्रं** | ஸுவஜ்ரம் | அழகிய வச்சிராயுத முடையோனுமாகிய |
| **इन्द्रं** | இந்த்ரம் | இந்திரனைத் (துதிக்கின்றோம்.) |
| **यः** | ய: | யாதொரு இந்திரன் |

| | | |
|---|---|---|
| वृत्रं हन्ता | வ்ருத்ரம் ஹந்தா | விருத்திரனைக் கொன்றவனோ, |
| उत | உத | மற்றும் |
| वाजं सनिता | வாஜம் ஸநிதா | அன்ன மளிப்பவனோ, |
| सुराधाः | ஸுராதா: | மிகுந்த தனமுடையானோ, |
| मघवा | மகவா | எவ் விந்திரன் |
| मघानि दाता | மகாநி தாதா | தனங் கொடுக்கின்றானோ, (அவனைத் துதிக்கின்றேன் எனக் கூட்டுக.) |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—4. வாமதேவ ரிஷி.

அநேக பகைஞர்களை யழிப்போனும், வியப்பாகப் பயப்படுத்துவோனும், சத்துருக்களைச் செலுத்துவோனும், பெரியோனும் விகாரப்படாதோனும், (நாசமற்றோனு மென்பதுமது) அழகிய வச்சிராயுத முடையோனுமாகிய இந்திரனை ஏத்துவோர்களான யாங்கள் துதிக்கின்றோம். ஈண்டு ஏத்துவோர்களான யாங்கள் என்பது எஞ்சி நின்றது. யாதொரு இந்திரன் விருத்திரன் என்னும் அசுரனைக் கொன்றவனாகின்றானோ, மற்றும், எவ் விந்திரன் அன்னங் கொடுப்போனாகின்றானோ, அழகிய தனமுடைய எவ் விந்திரன் தனங் கொடுப்போனாகின்றானோ, அவ் விந்திரனைத் துதிக்கின்றோமென மேலே கூட்டிக்கொள்க. (4)

## மந்திரம் 5.

336. यो नो वनुष्यन्नभिदाति मर्त्त उगणा वा मन्यमानस्तुरो वा ।
क्षिधी युधा शवसा वा तमिन्द्राभीष्याम वृषमणस्त्वोताः ॥ ५ ॥

யொ நொ வநுஷ்யந்நபிதாதி மர்த்த உகணா வா மந்யமாநஸ்துரொ வா ।
க்ஷிதீ யுதா ஶவஸா வா தமிந்த்ராபீஷ்யாம வ்ருஷமணஸ்த்வோதா: ॥

அந்வயம்.

हे इन्द्र !, यः, मर्त्तः, नः, वनुष्यन्, अभिदाति, यो वा, मन्यमानः, क्षिधी, युधा, शवसा, उगणाः वा, तुरः, तं, त्वोताः, वृषमणः, अभिष्याम ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| यः | யः | எந்த |
| मर्त्तः | மர்த்தः | மனிதன் |
| नः | நः | எங்களைக் |
| वनुष्यन् | வநுஷ்யந் | கொல்ல விரும்பி |
| अभिदासति | அபிதாஸதி | மேலேறிவருகின்றானோ, மற்றும், |
| यो वा | யோ வா | எவன் |
| मन्यमानः | மந்யமாநः | தன்னைப் பெரியோனெனமதிக்கின்றவனோ, |
| क्षिधी | க்ஷியீ | அறுக்கத்தக்க |
| युधा | யுதா | ஆயுதத்தை யெடுத்துக்கொண்டு |
| शवसा | ஶவஸா | வேகமாக |
| उगणाः वा | உகணாः வா | பெருங் கூட்டமானவைகளும் |
| तुरः | துரः | கொல்லுதற் குரியவைகளுமான எமது பிரசைகளின்மேல் ஏறி வருகின்றானோ, |
| तं | தம் | அவனை |
| त्वोताः | த்வோதாः | உன்னாற் காப்பாற்றப்பட்டவர்களும் |
| वृषमणः | வ்ருஷமணः | வலிய நடை யுடையவர்களுமான யாங்கள் |
| अभिष्याम | அபிஷ்யாம | அடக்கி விடுவோமாக. (நாசஞ் செய்வோமாக.) |

### சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—5. வாமதேவ ரிஷி.

இந்திரனே ! எம் மனிதன் எங்களைக் கொல்ல விரும்பி ஒருமுகப்பட்டு வருகின்றானோ, அல்லது, எவன் தன்னைப் பெரியோனாய் அபிமானித்துக் கொண்டு, சிறந்த கூட்டமானவைகளும் கொல்லத்தக்கவைகளுமான எமது பிரசைகளைக் குறித்து ஏற்றமாய் வருகின்றானோ, எவ் வாயுதத்தாற் றுன்புறுத்திக்கொண்டு வருகின்றானெனின் ? கொல்லுமாயுதத்தோடு விரைவாக, அல்லது, வலியோடு வருகின்றான். அவனை, நின்னாற் காப்பாற்றப்பட்டவர்களாய் ஆற்றன் மிக்க நடையோடு கூடின நாங்கள் கொன்று விடுவோமாக (என்பதாம்). (5)

**குறிப்பு.**—எவன் என்னைக் கொன்று எனது திரவியத்தையும் பிறருக்குக் கொடுக்கின்றானோ, நானே கொடையாளியெனக் கருவமடைகின்றானோ, அவனை, எனக் கூறுவார் சிலர்.

### மந்திரம் 6.

१ ३१२ ३ २ ३ १ २ ३ ३ ३ १ २ ३ १ २ ३ १२

337. यं वृत्रेषु क्षितयः स्पर्धमाना यं युक्तेषु तुरयन्तो हवन्ते ।

१ २र ३ २ ३ १ २र ३ १ २र ३ १२ ३ १ २र

यꣳ शूरसातौ यमपामुपज्मन्यं विप्रासो वाजयन्ते स इन्द्रः ॥६॥

யம் வ்ருத்ரேஷு க்ஷிதய꞉ ஸ்பர்தமானா யம் யுக்தேஷு துரயந்தோ [ஹவந்தே ।

யம் ஶூரஸாதௌ யமபாமுபஜ்மந்யம் விப்ராஸோ வாஜயந்தே ஸ [இந்த்ர꞉ ॥

அங்வயம்.

वृत्रेषु, स्पर्धमानाः, क्षितयः, यं, हवन्ते, युक्तेषु, तुरयन्तः, यं, शूरसातौ, यं, अपां, यं, उपज्मन्, यं, विप्रासः, वाजयन्ते, सः, इन्द्रः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वृत्रेषु | வ்ருத்ரேஷு | யுத்தங்களில் |
| स्पर्धमानाः | ஸ்பர்தமானா꞉ | குரோதங்கொண்ட |
| क्षितयः | க்ஷிதய꞉ | மனிதர்கள் |
| यं | யம் | எவனை |
| हवन्ते | ஹவந்தே | அழைக்கின்றார்களோ, |
| युक्तेषु | யுக்தேஷு | படைகளைக் கைக்கொண்ட போர்களில் |
| तुरयन्तः | துரயந்த꞉ | ஒருவர்க்கொருவர் கொன்று கொள்கின்றவர்கள் |
| यं | யம் | எவனை அழைக்கின்றார்களோ, |
| शूरसातौ | ஶூரஸாதௌ | போர்வீரர்களைப் பிரிக்குங் காலத்தில், அல்லது, போர்வீரர்களைப் பெறுதற்கு |
| यं | யம் | எவனை அழைக்கின்றார்களோ, |
| अपां | அபாம் | தண்ணீர் வேண்டின் |
| यं | யம் | எவனை அழைக்கின்றார்களோ, |
| उपज्मन् | உபஜ்மந் | மழையின் பொருட்டு |
| यं | யம் | எவனைச் சரணடைகின்றார்களோ, |
| विप्रासः | விப்ராஸ꞉ | அறிவுள்ள வேள்வித் தலைவர்கள் |
| वाजयन्ते | வாஜயந்தே | எவனை அவிகளால் வலியுறுத்துகின்றார்களோ, |
| सः | ஸ꞉ | அவன் |
| इन्द्रः | இந்த்ர꞉ | இந்திரன். |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—6. வாம தேவரிஷி.

நமக்கு இடையூறான உயுத்தங்களில் முனிவு கொண்ட மனிதர்கள் எவ் விந்திரனை யழைக்கின்றார்களோ, போர் முகப்பட்டுப் படைகளைக் கைக்கொண்டவர்களாய்ப் போர்களில் ஒருவரை யொருவர் கொல்லப்பட்டுள்ள சனங்கள், எவனை அழைக்கின்றார்களோ, போர்வீரர்களை இனிது பகுக்குங்கால் போரை வெல்லுதற்பொருட்டு எவனை அழைக்கின்றார்களோ, மற்றும், தண்ணீர்கள் இலாபமாகு நிமித்தம், எவனை அழைக்கின்றார்களோ, மழை பெய்தற் பொருட்டு எவனைச் சரணடைகின்றார்களோ, அதாவது எவனை அழைக்கின்றார்களோ என்பது பொருள். மிகுந்த உணர்வுள்ள வேள்வித்தலைவர்கள் எவனை அவிகளால் வலிமிக்கானாய்ப் பண்ணுகின்றார்களோ, அத் தன்மையன் இந்திரன் என்பதாம். (6)

## மந்திரம் 7.

१ २ ३ ३ २र ३२उ ३ १२ ३१ २
338. इन्द्रापर्वता बृहता रथेन वामीरिष आवहतꣳ सुवीराः ।
३ २ ३ १ २ ३ १२ ३ १ २ ३ १ २र ३ १२
वीतꣳ हव्यान्यध्वरेषु देवा वर्द्धेथां गीर्भिरिडया मदन्ता ॥ ७॥

இருக்கு 3-53-1.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌪𑌰𑍍𑌵𑌤𑌾 𑌬𑍃𑌹𑌤𑌾 𑌰𑌥𑍇𑌨 𑌵𑌾𑌮𑍀𑌰𑌿𑌷 𑌆𑌵𑌹𑌤𑌂 𑌸𑍁𑌵𑍀𑌰𑌾𑌃।
𑌵𑍀𑌤𑌂 𑌹𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌧𑍍𑌵𑌰𑍇𑌷𑍁 𑌦𑍇𑌵𑌾 𑌵𑌰𑍍𑌧𑍇𑌥𑌾𑌂 𑌗𑍀𑌰𑍍𑌭𑌿𑌰𑌿𑌡𑌯𑌾 𑌮𑌦𑌨𑍍𑌤𑌾॥

அந்வயம்.

हे इन्द्रापर्वता !, बृहता, रथेन, वामीः, सुवीराः, इषः, आवहतं, देवा !, अध्वरेषु, हव्यानि, वीतं, इडया, मदन्ता, गीर्भिः, वर्द्धेथाम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **इन्द्रापर्वता !** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌪𑌰𑍍𑌵𑌤𑌾 ! | இந்திர, பருவதர்களே ! நீவிர் |
| **बृहता** | 𑌬𑍃𑌹𑌤𑌾 | பெரிய |
| **रथेन** | 𑌰𑌥𑍇𑌨 | இரதத்தின்மீது வந்து |
| **वामीः** | 𑌵𑌾𑌮𑍀𑌃 | போற்றுதற்குரிய |
| **सुवीराः** | 𑌸𑍁𑌵𑍀𑌰𑌾𑌃 | நற்புத்திரர்களோடு |
| **इषः** | 𑌇𑌷𑌃 | அன்னத்தையுங் |
| **आवहतं** | 𑌆𑌵𑌹𑌤𑌂 | கொடுப்பீர்களாக. |
| **देवा !** | 𑌦𑍇𑌵𑌾 ! | விளங்குவோர்களே ! |

| | | |
|---|---|---|
| अध्वरेषु | 𑌅𑌧𑍍𑌵𑌰𑍇𑌷𑍁 | எமது வேள்விகளில் |
| हव्यानि | 𑌹𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 | அவிகளை |
| वीतं | 𑌵𑍀𑌤𑌂 | உண்பீர்களாக. அவ்வாறே |
| इडया | 𑌇𑌡𑌯𑌾 | யாங் கொடுத்த அன்னத்தால் |
| मदन्ता | 𑌮𑌦𑌨𑍍𑌤𑌾 | களிப்படைவீர்களாக. (களிப்புற்று) |
| गीर्भिः | 𑌗𑍀𑌰𑍍𑌭𑌿𑌃 | துதியாகிய எமது வாக்குகளால் |
| वर्द्धेथां | 𑌵𑌰𑍍𑌦𑍍𑌧𑍇𑌥𑌾𑌂 | விருத்தி யடைவீர்களாக. |

### சாயண பாடியம்.

*கண்டம்—11. இருக்கு—7. விசுவாமித்திரர் ரிஷி துதிக்கின்றார்.*

*இந்திரன், பருவதன் என்னு மிருவர்களே! நீவிர், பெரிதாகிய தேரில் வந்து, போற்றத்தக்க புத்திரர்களோடு அன்னத்தையும் எங்கட்குக் கொடுப்பீர்களாக. அன்றியும், விளக்கமான இந்திர பருவதர்களே! எமது வேள்விகளில் ஓமஞ் செய்தற்குரிய புரோடாச முதலியவைகளைப் புசிப்பீர்களாக. மற்றும், எங்களாற் கொடுக்கப்பட்ட அன்னத்தாற் களிப்புடையோர்களாய் நீங்களிருவரும் எமது துதியாகிய வாக்குகளால் விருத்தியாவீர்களாக.* (7)

## மந்திரம். 8.

१ २ ३ २ ३ १ २ ३ १ २र ३ २ ३ १ २

339. **इन्द्राय गिरो अनिशितसर्गा अपः प्रैरयत् सगरस्य बुध्नात् ।**

१ २र ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ २

**यो अक्षेणेव चक्रियौ शचीभिर्विष्वक्तस्तम्भ पृथिवीमुत द्याम् ॥**

இருக்கு 10-89-4.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌗𑌿𑌰𑍋 𑌅𑌨𑌿𑌶𑌿𑌤𑌸𑌰𑍍𑌗𑌾 𑌅𑌪𑌃 𑌪𑍍𑌰𑍈𑌰𑌯𑌤𑍍 𑌸𑌗𑌰𑌸𑍍𑌯 [𑌬𑍁𑌧𑍍𑌨𑌾𑌤𑍍 ।

𑌯𑍋 𑌅𑌕𑍍𑌷𑍇𑌣𑍇𑌵 𑌚𑌕𑍍𑌰𑌿𑌯𑍌 𑌶𑌚𑍀𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌵𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌮𑍍𑌭 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌮𑍁𑌤 |𑌦𑍍𑌯𑌾𑌮𑍍 ॥

### அந்வயம்.

इन्द्राय, अनिशितसर्गाः, गिरः, सगरस्य, बुध्नात्, अपः, प्रैरयत्, यः, शचीभिः, पृथिवीं, उत, द्यां, चक्रियौ, अक्षेण इव, विष्वक्, तस्तम्भ ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| अनिशितसर्गाः | அநிஶிதஸர்கா: | இடையறாது பேரொலியோடு சொல்லப்படுகின்ற |
| गिरः | கிர: | தோத்திரங்களால் |
| सगरस्य बुध्नात् | ஸகரஸ்ய புத்நாத் | வானிடத்தினின்று |
| अपः | அப: | மழை நீரைச் |
| प्रैरयत् | ப்ரைரயத் | செலுத்துகின்றவன் |
| यः | ய: | யாதொரு இந்திரனோ, அவன் |
| शचीभिः | ஶசீபி: | வேள்வி முதலிய கருமங்களினால் |
| पृथिवीं | ப்ருதிவீம் | மண்ணையும் |
| उत | உத | மற்றும் |
| द्यां | த்யாம் | விண்ணையும், |
| चक्रियौ | சக்ரியௌ | இரதத்தின் சக்கரங்கள் |
| अक्षेण इव | அக்ஷேண இவ | அச்சில் நிலைத்திருப்பன போல |
| विष्वक् | விஷ்வக் | நாற்புறத்தும் |
| तस्तम्भ | தஸ்தம்ப | நிலை நிறுத்தினன். |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—8. ரேணு ரிஷி.

இந்திரன் பொருட்டு மேன்மேல் கிளம்புகின்ற தோத்திரங்களினால் வானிலிருந்து நீரைச் செலுத்துகின்றவன் எவ் விந்திரனோ, அவன், வேள்வி முதலிய கருமங்களால் இரதத்தின் சக்கரங்கள் அச்சில் நிலைத்திருப்பனபோன்று வானுலகையும் மண்ணுலகையும் யாண்டும் நிலை நிறுத்தியுள்ளான் என்பதாம்.

## மந்திரம் 9.

३ १ २   ३ १ २   ३ २   ३ १ २ ३ १ २

340. *आ त्वा सखायः सख्या ववृत्युस्तिरः पुरूचिदर्णवां जगम्याः ।

३ १२ २२ ३ १२ १   ३ २ ३ १२   २ २ ३   २२

पितुर्नपातमादधीत वेधा अस्मिन् क्षये प्रतरां दीद्यानः ॥ ९ ॥

இருக்கு 7-24-1.

ஆ த்வா ஸகாய: ஸக்யா வவ்ருத்யுஸ்திர: புரூசிதர்ணவாம் [ஜகம்யா: ।

பிதுர்நபாதமாததீத வேதா அஸ்மிந் க்ஷயே ப்ரதராம் தீத்யாந:॥

---

* चित्सखायं सख्या वव्रत्यांस्तिरः पुरूचिदर्णवं जगन्वान् । पितुर्नपातमादधीत वेधा अधि क्षमि प्रतरं दीध्यानः ॥ என்பது இருக்கு.

அந்வயம்.

हे इन्द्र !, सखायः, सख्या, त्वा, आववृत्युः, पुरु, अर्णवां, तिरः, जगम्याः, अस्मिन्, क्षये, प्रतरां, दीद्यानः, वेधाः, पितुः, नपातं, आदधीत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| **सखायः** | ஸகாயஃ | துதிப்போர்கள் |
| **सख्या** | ஸக்யா | அன்புகொண்ட ஸ்தோத்திரத்தால் |
| **त्वा** | த்வா | உன்னை |
| **आववृत्युः** | ஆவவ்ருத்யுஃ | எம்மை நோக்கும்படி செய்கின்றார்கள். ஏனெனின்? நீ |
| **पुरु** | புரு | விரிந்த |
| **अर्णवां** | அர்ணவாம் | வானுலகிற்கு |
| **तिरः** | திரஃ | எழுந்து |
| **जगम्याः** | ஜகம்யாஃ | போய்விட்டனை. (ஆதலினென்க). |
| **अस्मिन् क्षये** | அஸ்மிந் க்ஷயெ | வசிக்கின்ற இடமாகிய இவ் வேள்வியில் |
| **प्रतरां** | ப்ரதராம் | மிகுந்த |
| **दीद्यानः** | தீத்யாநஃ | ஒளி வீசும் |
| **वेधाः** | வெதாஃ | இந்திரன் |
| **पितुः** | பிதுஃ | எனது தந்தைக்குப் |
| **नपातं** | நபாதம் | பௌத்திரனைக் |
| **आदधीत** | ஆததீத | கொடுப்பானாக. (எனக்குப் புத்திரனைத் தருவானாக.) |

சாயண பாடியம்

கண்டம்—11. இருக்கு—9. வாமதேவரிஷி.

இந்திர ! உன்னை, நண்பர்களான துதிப்போர்கள் அன்பார்ந்த துதிகளால் ஒருமை நோக்காகச் செய்கின்றார்கள். யாது பற்றியெனின்? நீ விரிவாகிய அந்தரிக்ஷத்திற்கு எழுந்து போய் விட்டனை, அதனாலென்க. இனிப் பரோக்ஷமாய்ச் செய்யப்பட்டது. (அனைத்தையும்) விசேடமாய்த் தாங்குகின்ற இந்திரன் என்னுடைய தந்தையார்க்குப் பௌத்திரனைக் கொடுப்பானாக. (எனக்குப் புத்திரனைக் கொடுப்பானாக என்பதுமது) எவ்வண்ணனாகிய இந்திரன் எனின் ? நல்ல இருப்பிடமாகிய இவ்வேள்வியில் மிகுந்த ஒளியோடு விளங்குகின்றவன். (8)

### மந்திரம் 10.

२ ३ १ २ ३ २ उ ३ २ ३ १ २ ३ १ २ ३ २

341. को अद्य युंक्ते धुरि गा ऋतस्य शिमीवतो भामिनो दुर्हृणायून् ।

३ १ २ ३ १ २ ३ १ २र ३ २ ३ २ ३ १ २

*आसन्नेषामप्सुवाहो मयोभून्य एषां भृत्यामृणधत्स जीवात् ॥

இருக்கு 3-74-16.

𑌕𑍋 𑌅𑌦𑍍𑌯 𑌯𑍁𑌂𑌕𑍍𑌤𑍇 𑌧𑍁𑌰𑌿 𑌗𑌾 𑌋𑌤𑌸𑍍𑌯 𑌶𑌿𑌮𑍀𑌵𑌤𑍋 𑌭𑌾𑌮𑌿𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌹𑍃𑌣𑌾𑌯𑍂𑌨𑍍 ।
𑌆𑌸𑌨𑍍𑌨𑍇𑌷𑌾𑌮𑌪𑍍𑌸𑍁𑌵𑌾𑌹𑍋 𑌮𑌯𑍋𑌭𑍂𑌨𑍍𑌯 𑌏𑌷𑌾𑌂 𑌭𑍃𑌤𑍍𑌯𑌾𑌮𑍃𑌣𑌧𑌤𑍍𑌸 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍 ॥

அந்வயம்.

अद्य ऋतस्य, धुरि, गाः, शिमीवतः, भामिनः, दुर्हृणायून्, अप्सुवाहः, मयोभून्, आसन्, कः, युंक्ते, यः, एषां, भृत्यां, ऋणधत्, सः, जीवात् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अद्य | 𑌅𑌦𑍍𑌯 | இன்று (செய்கின்ற) இக்கிரியையில் |
| ऋतस्य | 𑌋𑌤𑌸𑍍𑌯 | வேள்விக்குச் செல்லும் இந்திரனுடைய இரதத்தின் |
| धुरि | 𑌧𑍁𑌰𑌿 | நுகத்தடியில் |
| गाः | 𑌗𑌾𑌃 | பூட்டப் பட்டவைகளும், |
| शिमीवतः | 𑌶𑌿𑌮𑍀𑌵𑌤𑌃 | வீரமாய் வேலை செய்பவைகளும் |
| भामिनः | 𑌭𑌾𑌮𑌿𑌨𑌃 | பிரகாசமுடையவைகளும் |
| दुर्हृणायून् | 𑌦𑍁𑌰𑍍𑌹𑍃𑌣𑌾𑌯𑍂𑌨𑍍 | பகைஞர்களாற் றுங்கமுடியாத கோப முடையவைகளும் |
| अप्सुवाहः | 𑌅𑌪𑍍𑌸𑍁𑌵𑌾𑌹𑌃 | வேள்வியின் பொருட்டு இந்திரனைக் கொண்டு போகின்றவைகளுமான |
| मयोभून् | 𑌮𑌯𑍋𑌭𑍂𑌨𑍍 | (இன்பந்தருங்) குதிரைகளை, அல்லது கடிவாளங்களை, |
| आसन् | 𑌆𑌸𑌨𑍍 | வாழ்த்துகின்ற தோத்திரவாயிலாக |
| क: ? | 𑌕𑌃 ? | யாவன் ? |
| युंक्ते ? | 𑌯𑍁𑌂𑌕𑍍𑌤𑍇 ? | ஏவ வல்லான் ? |
| य: | 𑌯𑌃 | எவ்வேள்வித் தலைவன் |

* आसन्निषून्हृत्स्वसो, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| एषां | ஏஷாம் | இக் குதிரைகளின் |
| भृत्यां | ப்ருத்யாம் | தொழிலைத் |
| ऋणधत् | ருணதத் | துதிக்கின்றானோ, |
| सः | ஸ: | அவன் |
| जीवात् | ஜீவாத் | வாழ்கின்றான். |

## சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—10. கோதம ரிஷி.

இக் கிரியையில் வேள்விக்குச் செல்கின்றவைகளும், இந்திரனுடைய இரதத்தின் நுகத்தடியிற் கட்டப்பட்டவைகளும், விரைவாய் நடக்கின்றவைகளுமான குதிரைகளை, அல்லது கடிவாளங்களை, வாயினின் றெழுந் தோத்திரத்தால் யார் நிறுத்துவதற்கு ஆற்றலுடையார்? யாருமிலர் என்பது பொருள். எவ்விதமான குதிரைகளையெனின்? வீரமான தொழிலோடு கூடியவைகளும், பிரகாசத்தோடு கூடினவைகளும், பகைவர்களாற் பொறுக்க முடியாத கோபமுடையவைகளும், இந்திரனைக் கொண்டு செல்பவைகளும், இன்பந்தருபவைகளு மானவைகள். இத்தன்மைய குதிரைகளின் பணியை (இரதங்கொண்டேகுந் தொழிலை) எவ்வேள்வித் தலைவன் துதிக்கின்றானோ, அவன் நீண்ட ஆயுளுடையோனாகின்றான். அல்லது, "யாவன் என்பவன் பிரசாபதி" என்னும் மறைமொழியால், யாவன் என்பவன் பிரசாபதியாவன். அவன் வேள்வியை நடத்துவதில் (கோ—என்பது வாக்கு.) வேதவடிவ வாக்குவிசேடங்களை இப்போது சேர்க்கின்றவன், எவ்வண்ணத்த வேத வாக்குகளை யெனின்? கூறப்பட்ட கருமங்களோடு கூடினவைகளும், (அதாவது கூறல் கூறப்படல் என்னுஞ் சம்பந்தத்தால் வேள்வி முதலிய கருமங்களையுடையவைகளும்,) விளக்கமானவைகளும், கெடுக்க முடியாதவைகளும், வேதமோதல் நித்தியமாதலாலென்க. ஆன்மாவைக் கூறுவதால் முகம் போன்றவைகளும், அந்தரிக்ஷத்திற்கு வேள்வித் தலைவனைச் செலுத்துபவைகளும், மறையோதலால் வரும் புண்ணியத்தை (அதிருட்டத்தை) உடையவைகளுமானவைகளை. இத்தன்மைய மறைமொழிகளின் நன்மைத் தொழிலைப் பயனுடையதாகச் செய்கின்றவன் எவனோ, அவனொருவனே வாழ்கின்றான். பிறர் பிழைத்திருந்தும் இறந்தவரேயாவர் என்பதாம்.

## பதினோராவது கண்டம்

முற்றும்.

## பன்னிரண்டாவது கண்டம்

---

### பிரபாடகம்—4. அத்தியாயம்—3. கண்டம்—12.

பத்து மந்திரங்களாலானது.

---

#### மந்திரம் 1.

१ २ ३ १ २र ३ २ ३ १ २
342. गायन्ति त्वा गायत्रिणोऽर्चन्त्यर्कमर्किणः ।
३ १ २ ३ २३ १ २
ब्रह्माणस्त्वा शतक्रत उद्वंशमिव येमिरे ॥ १ ॥

இருக்கு 1-30-1.

஗ாயந்தி த்வா ஗ாயத்ரிணோऽர்சந்த்யர்கமர்கிண: ।
ப்ரஹ்மாணஸ்த்வா ஶதக்ரத உத்வம்ஶமிவ யேமிரே ॥

அந்வயம்.

हे शतक्रतो !, त्वा, गायत्रिणः, गायन्ति, अर्किणः, अर्कं, अर्चन्ति, ब्रह्माणः, वंशं इव, त्वा, उद्येमिरे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे शतक्रतो ! | ஹே ஶதக்ரதோ ! | இந்திரனே ! |
| त्वा | த்வா | உன்னைச் |
| गायत्रिणः | ஗ாயத்ரிண: | சாமமறை பாடுவோர்கள் |
| गायन्ति | ஗ாயந்தி | துதிக்கின்றார்கள். |
| अर्किणः | அர்கிண: | ஓமத்திற்கு இருக்குமறையோதுகின்ற ஓதாக்கள் |
| अर्कं | அர்கம் | போற்றத்தக்க நின்னை |
| अर्चन्ति | அர்சந்தி | ஒத்துக்களாலேத்துகின்றார்கள். |
| ब्रह्माणः | ப்ரஹ்மாண: | ஏனைய அந்தணர்கள் |
| वंशं इव | வம்ஶம் இவ | கழைக்கூத்தன் மூங்கிலையுயர்த்தி நாட்டுமாறு |
| त्वा | த்வா | உன்னை |
| उद्येमिरे | உத்யேமிரே | மேலாகச் செய்கின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—1. மதுச்சந்த ரிஷி.

28 மந்திரங்கள் அநுஷ்டுப் சந்தங்களை யுடையன. மருத்துக்கள், அக்கினி, வைசுவ தேவம், இருக்கு, சாமம், என்னு மிவைகள் இடையிலுள்ள தேவதைகள். ஏனையவைகள் இந்திரனையே தேவதையாக வுடையன. குடைகாரர்கள் போகின்றார்கள் என்ப தொப்ப அனைத்தும் ஐந்திரம் (இந்திர தேவதையை யுடையன) எனப்படுகின்றன.

அநேக கருமங்களை, அல்லது, மெய்யுணர்வுகளையுடைய இந்திர! நின்னைச் சாமவேதம் பாடுவோர்கள் துதிக்கின்றார்கள். ஆராதனைக்குரிய மந்திரங்களைப் படிக்கின்ற ஹோதாக்கள் இருக்குமறை யோதுவோர்கள் ஆராதித்தற்குரிய நின்னை மந்திரங்களால் ஆராதிக்கின்றார்கள். பிரமன், என்னும் வேள்வியை நடாத்துவோன் முதலிய ஏனையோர்கள் உன்னை மேனிலை யடையச்செய்கின்றார்கள். அதிலுவமை:—கழைக்கூத்தாடிகள் உறுதியாகிய மூங்கிலை உயரமாய் நாட்டுதல் போலெனல். அல்லது, நல்ல வழியிலுள்ள புத்திரர்கள் தமது குலத்தை மேன்மையுடையதாகச் செய்வது போலெனல். இம் மந்திரத்திற்கு யாஸ்கமுனிவரும் நிருத்தத்தின் 5, 4-ல். இவ்வாறே யுரை கூறியுள்ளார். (1)

மந்திரம் 2.

२ ३ १ २ ३ १ २ ३ १२
343. इन्द्रं विश्वा अवीवृधन्त्समुद्रव्यचसं गिरः ।
३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २
रथीतमꣳ रथीनां वाजानाꣳ सत्पतिं पतिम् ॥ २ ॥

இருக்கு 3-11-1.

இந்த்³ரம் விஶ்வா அவீவ்ருத⁴ந்த்ஸமுத்³ரவ்யசஸம் கி³ர꞉ ।
ரதீ²தமம் ரதீ²நாம் வாஜாநாம் ஸத்பதிம் பதிம் ॥

அந்வயம்

विश्वाः, गिरः, समुद्रव्यचसं, रथीनां, रथीतमं, वाजानां, पतिं, सत्पतिं, इन्द्रं, अवीवृधन् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विश्वाः | விஶ்வா꞉ | எமது, எல்லாத் |
| गिरः | கி³ர꞉ | தோத்திரங்களும், |
| समुद्रव्यचसं | ஸமுத்³ரவ்யசஸம் | கடலைச் சூழ்ந்துள்ளவனும் |

| | | |
|---|---|---|
| रथीनां | ரதீநாம் | தேரையுடைய போர்வீரர்களுள் |
| रथीतमं | ரதீதமம் | மிகச்சிறந்த போர்வீரனும், |
| वाजानां | வாஜாநாம் | அன்னத்திற்கு |
| पतिं | பதிம் | இறைவனும் |
| सत्पतिं | ஸத்பதிம் | நல்லவர்களைப் பாதுகாப்போனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| अवीवृधन् | அவீவ்ருதந் | விருத்தி செய்தன. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—2. மதுச்சந்த ரிஷி.

எங்களுடைய தோத்திர வாக்குகளெல்லாம், இந்திரனை விருத்தி பண்ணின. எவ் வண்ணத்தனாகிய இந்திரனை யெனின்? கடலைத் தன்னுளடக்கிக்கொண்டுள்ளானை. மற்றும், தேருடைய போர்வீரர்களுள் மிகச் சிறந்த தேருடையோனை. அன்னங்கட் கிறைவனை. நல்வழியிலுள்ளாரைப் பாதுகாப்போனை. (விருத்திசெய்தன என்பதனோடு சேர்த்துக்கொள்க). (2)

மந்திரம் 3.

३१२ २१२३ २३१२३ १२

344. इममिन्द्र सुतं पिब ज्येष्ठममर्त्यं मदम् ।

३१२ २क२र३ १२ ३२३ १ २

शुक्रस्य त्वाभ्यक्षरन् धारा ऋतस्य सदने ॥ ३ ॥

இருக்கு 1-84-4.

இமமிந்த்ர ஸுதம் பிப ஜ்யேஷ்டமமர்த்யம் மதம் ।
ஶுக்ரஸ்ய த்வாப்யக்ஷரந் தாரா ருதஸ்ய ஸதநே ॥

அந்வயம்.

हे इन्द्र !, ज्येष्ठं, मदं, अमर्त्यं, इमं सुतं, पिब, ऋतस्य, सदने, शुक्रस्य, धाराः, त्वा अभ्यक्षरन् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| ज्येष्ठं | ஜ்யேஷ்டம் | போற்றத்தக்க |
| मदं | மதம் | களிப்பைத்தருவதும் |
| अमर्त्यं | அமர்த்யம் | பிறவற்றுலாய மாந்தம்போற் கேட்டைத் தராததும் |

| | | |
|---|---|---|
| इमं सुतं | ஊடீம் ஸுதம் | { பிழிந்தெடுத்ததுமாகிய, இச் சோம ரசத்தை |
| पिब | பிப | அருந்துவாயாக. |
| ऋतस्य | ருதஸ்ய | வேள்வியின் |
| सदने | ஸதநே | மண்டபத்தில் |
| शुक्रस्य | ஶுக்ரஸ்ய | விளங்குகின்ற சோமரசத்தின் |
| धाराः | தாராஃ | தாரைகள் |
| त्वा अभ्यक्षरन् | த்வா அப்யக்ஷரந் | { நின்னை நோக்கி வந்துகொண்டிருக்கின்றன. |

### சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—3. கோதம ரிஷி.

இந்திரனே! நீ, பிழிந்தெடுத்த இச் சோமரசத்தை யருந்துவாயாக. அஃது எத்தன்மைய தெனின்? மிகப் போற்றத் தக்கதும், களிப்பைக் கொடுப்பதும், கொல்லாததும். சோமம் அருந்துவதாலுண்டாகும் மாந்தம் ஏனைய மாந்தம் போல் கொல்லாதது என்பது பொருள். அவ்வாறே வேள்வியின் சம்பந்தமான வீட்டில் விளங்கப்பட்டதுமாம். அத்தன்மைய சோம ரசத்தின் தாரைகள் நினது நோக்காய் வருகின்றன. உன்னையடைவதற்குத் தாமாகவே வருகின்றன என்பது பொருள். (3)

குறிப்பு.—சுக்கிரன் சோமரசத்தையுண்டு மயங்காமல் கசன், என்பவனை எழுப்பினான் என மச்சிய புராணக் கதைப்படி இதற்குப் பொருள் கொள்வாருமுளர்.

### மந்திரம் 4.

१ २ ३२उ ३ १ २
345. यदिन्द्र *चित्र म इह नास्ति त्वादातमद्रिवः ।
२ ३ १ २ ३ १ २
राधस्तन्नो विदद्वसो उभया हस्त्याभर ॥ ४ ॥

இருக்கு 5-39-1.

யதிந்த்ர சித்ர ம இஹ நாஸ்தி த்வாதாதமத்ரிவஃ |
ராதஸ்தந்நோ விதத்வஸோ உபயா ஹஸ்த்யாபர ||

அந்வயம்.

चित्र!, अद्रिवः! विदद्वसो!, इन्द्र!, त्वादातं, राधः, यत्, इह, मे, नास्ति, तत्, नः, उभया, हस्त्या, आभर ॥

† चित्र मेह नास्ति, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे चित्र! | ஹே சித்ர! | விசித்திரமாகிய குணமுடையோய்! |
| अद्रिवः! | அத்ரிவ:! | வச்சிராயுதந் தாங்கினோய்! |
| विदद्वसो! | விதத்வஸோ! | தனத்தைப் பெற்றுளோய்! |
| इन्द्र! | இந்த்ர! | இந்திரனே! நீ |
| त्वादातं | த்வாதாதம் | கொடுக்கத்தக்க |
| राधः | ராத: | தனம் |
| यत् | யத் | யாதோ, அது |
| इह | இஹ | இவ்வுலகில் |
| मे | மே | எமக்கு |
| नास्ति | நாஸ்தி | இல்லை. |
| तत् | தத் | அந்தத் தனத்தை |
| नः | ந: | எங்கட்கு |
| उभया हस्त्या | உபயா ஹஸ்த்யா | இரு கரங்களாலும் |
| आभर | ஆபர | கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—4. அத்திரி ரிஷி.

வச்சிரந் தாங்கினோய்! சித்திரனே! நின்னால் கொடுக்கத்தக்க தனம் யாதோ, அது இவ்வுலகில் எனக்கில்லை. தனம் பெற்றுள்ள இந்திர! எங்கட்கு இரண்டு கைகளாலும் அதைக் கொண்டுவந்து தருவாயாக. ஈண்டு நிருத்தமும் 4-4-ல் 'இந்திர! சித்திர! மகத்தாகிய தனம் யாதுண்டோ, அது எனக்கு இங்கில்லை' எனக் கூறியுள்ளது. (4)

## மந்திரம் 5.

३ १ २र ३ २उ ३ १ २ ३ १ २
346. श्रुधी हवं तिरश्चया इन्द्र यस्त्वा सपर्य्यति ।
३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २
सुवीर्य्यस्य गोमतो रायस्पूर्धि महाँ असि ॥ ५ ॥

இருக்கு 8-95-4.

ச்ருதீ ஹவம் திரச்சா இந்த்ர யஸ்த்வா ஸபர்ய்யதி ।
ஸுவீர்ய்யஸ்ய கோமதோ ராயஸ்பூர்தி மஹாம் அஸி ॥

அந்வயம்.

हे इन्द्र!, त्वा, यः, सपर्य्यति, तिरश्चया, हवं, श्रुधि, सुवीर्य्यस्य, गोमतः, रायः, पूर्द्धि, महान्, असि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹெ உஈந்ர! | இந்திரனே! நீ |
| त्वा | க்வா | உன்னை |
| यः | யஃ | எவன் |
| सपर्य्यति | ஸவயூ்ஷதி | அவிகளா லாராதிக்கின்ற, |
| तिरश्च्या | திரஸ்ஞா | திரச்சி, என்னும் எனது |
| हवं | ஹவம் | துதியைக் |
| श्रुधि | ஶ்ருயி | கேட்பாயாக. கேட்டு |
| सुवीर्य्यस्य | ஸுவீயூ்ஷஸ்ய | நல்ல வீரத்தன்மை யுடனும், அல்லது, புத்திரனுடனும் |
| गोमतः | ஹொஉதஃ | கோக்களுடனும் |
| रायः | ராயஃ | தனத்தையுங் கொடுத்து |
| पूर्द्धि | வூஷி | என்னைத் திருப்தியடையச் செய்வாயாக. |
| महानसि | உஹாநஸி | நீ, எல்லாத் தேவர்களினும் பெரியோனா யிருக்கின்றாய் (ஆதலின் என்க.) |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—5. திரச்சி ஆங்கிரச ரிஷி.

இந்திர! நீ, எவன் நின்னை அவிகளால் ஆராதிக்கின்றானோ, அத்தன்மையனாகிய 'திரச்சி' என்னும் பெயருள்ள எனது துதியைக் கேட்பாயாக. கேட்டு, இந்திர! நீ, சிறந்த வீரத்தன்மையுடன், அல்லது, நற்புத்திரனுடன், கோக்கள் முதலியவைகளுடன், தனத்தையுங் கொடுத்தலினால் எங்களைப் பூரண மாக்குவாயாக. இவ்வாற்றல் எதனாலென் றாசங்கித்துக் கூறப்படுகின்றது:—உண்மையில் நீ குணக்குன்றனையும், தேவர்களுக்குள் மேம்பட்டோனாயு மிருக்கின்றாய் ஆதலின் என்க. (5)

## மந்திரம் 6.

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २
347. असावि सोम इन्द्र ते शविष्ठ धृष्णवागहि ।
१ २ ३ २उ ३ २ ३ २ ३ १ २
आ त्वा पृणक्त्विन्द्रियꣳ रजः सूर्य्यो न रश्मिभिः ॥ ६ ॥

இருக்கு 1-84-1.

அஸாவி ஸொஉ இந்ர தெ ஶவிஷ்ட யூஷ்ணவா஗ஹி ।
ஆ க்வா வூணக்த்விந்ரியம் ரஜஃ ஸூயொ்ஷா ந ரஶ்மிஹிஃ ॥

அந்வயம்.

हे इन्द्र !, ते, सोमः, असावि, शविष्ठ, धृष्णः, आगहि, सूर्य्यः, रश्मिभिः, रजः, न, इन्द्रियं, त्वा, आ पृणक्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| ते | தே | நின் பொருட்டுச் |
| सोमः | ஸோம: | சோமரசம் |
| असावि | அஸாவி | தேடப்பட்டுள்ளது. |
| शविष्ठ ! | ஶவிஷ்ட ! | பேராற்றலுடையோய் ! |
| धृष्णः ! | த்ருஷ்ண: ! | பகைஞர்களை யடக்குவோய் ! நீ |
| आगहि | ஆகஹி | தேவாராதனை பண்ணுமிடத்திற்கு, வருவாயாக |
| सूर्य्यः | ஸூர்ய்ய: | இரவி |
| रश्मिभिः | ரஶ்மிபி: | கிரணங்களால் |
| रजः न | ரஜ: ந | விண்ணைப் பூரணமாக்கல் போன்று |
| इन्द्रियं | இந்த்ரியம் | சோமபானத்தா லுண்டாகும் பெரும் வலியானது |
| त्वा | த்வா | வந்த, நின்னைப் |
| आ पृणक्तु | ஆ ப்ருணக்து | பூரணமாக்குக. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—6. கோதம ரிஷி.

இந்திரனே ! நின் பொருட்டுச் சோமரசம் பிழிந்தெடுக்கப்பட் டிருக்கிறது. பேராற்றலுடையோய் ! நீ தேவபூசை செய்யுமிடத்திற்கு வருவாயாக. அங்ஙனம் வந்த உன்னை, சோமரசம் அருந்தலாலுண்டாகிய பேராற்றலானது பூரணமாக்குக. எது போலெனின் ? சூரியன் கிரணங்களால் வானைப் பூரணமாக்குமாறு என்பதாம். (6)

மந்திரம் 7.

१ २ ३ १ २ ३ २३ १ २ ३ २

348. एन्द्र याहि हरिभिरुप कण्वस्य सुष्टुतिम् ।

३ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २

दिवो अमुष्य शासतो दिवं यय दिवावसो ॥ ७ ॥

இருக்கு 8-34-1.

ஊநூ யாஹி ஹரிஹிரு॒வ கணுவஸு ஸு॒ஷு॒திழ।
திவொ அமு॒ஷு ஶாஸதொ திவம் யய திவாவஸொ ॥

அந்வயம்.

हे इन्द्र !, कण्वस्य, सुष्टुतिं, हरिभिः, उपायाहि, अमुष्य, दिवः, शासतः, दिवावसो !, दिवं, यय ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ ஊநூ ! | இந்திரனே ! |
| कण्वस्य | கணுவஸு | கண்ணுவ ரிஷியின் |
| सुष्टुतिं | ஸு॒ஷு॒திம் | அழகிய துதியின் பொருட்டுக் |
| हरिभिः | ஹரிஹிஃ | குதிரைகளின் வாயிலாக |
| उपायाहि | உபாயாஹி | வருவாயாக. |
| अमुष्य | அமு॒ஷு | இவனது |
| दिवः | திவஃ | வானுலகிற்குக் |
| शासतः | ஶாஸதஃ | கட்டளையிட்ட பின்னர் இன்புறுகின்றேன். |
| दिवावसो ! | திவாவஸொ ! | பிரகாசமுள்ள இந்திர ! |
| दिवं | திவம் | சுவர்க்கத்திற்குப் |
| यय | யய | போவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—7. காண்ணுவர் நிபாதிதி ரிஷி.

இந்திர ! நீ கண்ணுவர், என்னும் பெயருள்ள இருடியினுடைய அழகிய தோத்திரத்தைக் குறித்து குதிரைகளின் மீது வருவாயாக. ஈண்டு மூலத்தில் 'அமுஷ்ய' என்னும் ஆறும் வேற்றுமை அமுஷ்மின், (இவனில்) என்னும் பொருளில் நின்றது. நிற்கவே இவ் விந்திரன் வானுலகைத் தனது ஆணையிலிருக்க வைக்குமிடத்து அங்கு நாங்கள் இன்புறுகின்றோம். (என்பதாயிற்று) பிரகாசமுள்ள அவிகளையுடைய இந்திர ! நீவிர் (நீ) சுவர்க்கத்திற்குச் செல்லுவீர்களா (செல்வாயா)க. பன்மை புகழின் பொருட்டு. அல்லது, சுவர்க்கமென்னும் இவ் வுலகை ஆண்டு வருகின்ற நீங்கள் (நீ) சுவர்க்கத்திற்குச் செல்வீர்களா (செல்வாயா)க என்பதாம். (7)

## மந்திரம் 8.

२ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
349. आ त्वा गिरो रथीरिवास्थुः सुतेषु गिर्वणः ।
३ २ ३ १२ ३ १ २ ३२उ ३ १२
अभि त्वा समनूषत गावो वत्सं न धेनवः ॥ ८ ॥

இருக்கு 8-95-1.

ஆ த்வா கிரோ ரதீரிவாஸ்து: ஸுதேஷு கிர்வண: |
அபி த்வா ஸமநூஷத காவோ வத்ஸம் ந தேநவ: ||

அந்வயம்.

गिर्वणः, सुतेषु, गिरः, रथीः इव, त्वा आस्थुः, त्वा अभि, वत्सं, धेनवः, गावः, न, समनूषत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **गिर्वणः !** | கிர்வண: ! | வேத மந்திரங்களாற் றுதித்தற் குரிய இந்திர ! |
| **सुतेषु** | ஸுதேஷு | சோமரசம் பிழிந்து முடிந்த விடங்களில் |
| **गिरः** | கிர: | எமது துதியாகிய வாக்குகள் |
| **रथीः इव** | ரதீ: இவ | தேர்மீது செல்வோன் விரைவில் அடையத்தக்க இலட்சியத்தை யடையுமாறு |
| **त्वा आस्थुः** | த்வா ஆஸ்து: | விரைவில் நின்பால் ஒருமை யோடு சேர்கின்றன. இந்திர ! எமது வாக்குகள் |
| **त्वा अभि** | த்வா அபி | நின்னை நோக்கி |
| **वत्सं** | வத்ஸம் | கன்றைக் கருதி |
| **धेनवः गावः न** | தேநவ: காவ: ந | பாற்பசுக்கள் கதறுவனபோன்று |
| **समनूषत** | ஸமநூஷத | இனிது பதறித் துதிக்கின்றன. |

சாயண பாடியம்.

**கண்டம்—12. இருக்கு—8. திரச்சி ரிஷி.**

தோத்திர வாக்குகளாற் போற்றத் தக்க இந்திர! சோமரசம் பிழிந் தெடுத்த விடத்து எங்களுடைய துதிவடிவ வாக்குகள், ஒரு நோக்காய்ச் சென்று நின்னை அடைந்திருக்கின்றன. அதினுவமை :—இரதமுள்ள வீரன்

இரதத்திற் சென்று அடையுந் தேசத்தை விரைவி லடைகின்றது றெனல். மற்றும், இந்திரனே! எமது வாக்குகள் நின்னைக் குறித்து சத்தமிடுகின்றன. அதாவது துதிக்கின்றன. அதிலுவமை:—அன்பு நிறைந்த, அல்லது, செல்லுஞ் சீலமுள்ள பாற்பசுக்கள் தமது கன்றைக் கருதிக் கதறுவன போன்றெனல். (8)

## மந்திரம் 9.

२ ३ २ ३ १ २ ३ २ ३ २ ३ १ २

350. एतो न्विन्द्रꣳ स्तवाम शुद्धꣳ शुद्धेन साम्ना ।

३ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २

शुद्धैरुक्थैर्वावृध्वाꣳसं * शुद्धैराशीर्वान्ममत्तु ॥ ९ ॥

இருக்கு 8-95-7.

ஏதோ நிவிந்த்₃ரꣳ ஸ்தவாம ஶுத்₃த₄ꣳ ஶுத்₃தே₄ந ஸாம்நா ।
ஶுத்₃தை₄ருக்தை₂ர்வாவ்ருத்₄வாꣳஸꣳ ஶுத்₃தை₄ராஶீர்வாந்மமத்து ॥

அந்வயம்.

नु एत उ, शुद्धेन, साम्ना, शुद्धैः, उक्थैः, शुद्धं इन्द्रं, स्तवाम, शुद्धैः, आशीर्वान्, वावृध्वांसं, ममत्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| नु एत उ | நு ஏத உ | இருடிகள் தம்முட் பேசல்:— விரைவில், வருவீர்களாக, வருவீர்களாக. |
| शुद्धेन साम्ना | ஶுத்₃தே₄ந ஸாம்நா | பவித்திரப்படுத்தும் சாம மந்திரத்தால் |
| शुद्धैः उक्थैः | ஶுத்₃தை₄: உக்தை₂: | அவ்வாறுய இருக்கு மந்திரங்களால் |
| शुद्धं इन्द्रं | ஶுத்₃த₄ம் இந்த்₃ரம் | சுத்தமாக்கிய இந்திரனைத் |
| स्तवाम | ஸ்தவாம | துதிப்போம். (பின்னர்) |
| शुद्धैः | ஶுத்₃தை₄: | தோத்திரங்களால் |
| आशीर्वान् | ஆஶீர்வாந் | ஆவின்பால் முதலியவைகளாற் சுத்தம் பண்ணப்பட்ட சோமரசமானது |
| वावृध्वांसं | வாவ்ருத்₄வாம்ஸம் | பாவமிலாமை யாகிய காரணத்தால் விருத்தியாகிய அவ் விந்திரனுக்குக் |
| ममत्तु | மமத்து | களிப்பைத் தருவதாகுக. |

* शुद्ध आशीर्वान्, என்பது இருக்கு.

## சாயண பாஷ்யம்.

—12. இருக்கு—9. விசுவாமித்திர ரிஷி.

இருடிகள் தம்முள் ஒன்றற் கொன்று பேசிக்கொள்கின்றனர். அதாவது, விரைவில் நீவிர் வருவீர்களாக. வரின் யாம் பவித்திரத்தை யுண்டாக்குகின்ற சாமத்தாலும், அங்ஙனமே, சுத்திக்குக் காரணமான இருக்கு மந்திரங்களாலும், இந்திரனைப் பவித்திரமாகச் செய்வோம். பின்னர், சாமத்தாலும், இருக்குகளாலும் பாவமொழிந்ததால் விருத்தியாகிய அவ் விந்திரனை, சுத்தி யுண்டாக்குந் தோத்திரங்களால் அல்லது கரும விசேடங்களாற் போற்றுவோம். அதன் பின்னர் ஆவின்பால் முதலியவைகளாற் சுத்தமாகிய சோமரசம் இந்திரனுக்குக் களிப்பை யுண்டாக்குவதாம்.

முன்னொரு காலத்தில் இந்திரன் விருத்திராசுரன் முதலியோர்களைக் கொன்றுவிட்டு, "நான் பிரமகத்தி முதலிய தோஷமுடையோனாயினேன்" என்று தன்னுள் எண்ணிக்கொண்டனன். பின்னர் அவ் விந்திரன் இருடிகளிடத்திற் சென்று, இருடிகள்!! நீவிர் தமது சாம மந்திர கீதங்களால் என்னைப் பவித்திரப்படுத்துவீர்களாக என்றனன். அவ்வாறே அவர்கள் சாம கீதத்தாலும், மந்திரங்களாலும், அவனைச் சுத்தப்படுத்தினார்கள். பின்னர் பவித்திரமாகிய இந்திரனுக்கு வேள்வி முதலிய கருமங்களில் சோம முதலிய அவிசினையுங் கொடுத்தார்களென எனச் சாட்டியாயனப் பிராமணத்திலுங் கூறப்பட்டுள்ளது. இவ் விதிகாசம் இம் மந்திரத்திற் கூறப்படுகின்றது. ((9))

### மந்திரம் 10.

२ ३ १ २ ३ १ २ ३ ३ ३ २ ३१ २

351. *यो रयिं वो रयिन्तमो यो द्युम्नैर्द्युम्नवत्तमः ॥

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २

सोमः सुतः स इन्द्र तेऽस्ति स्वधापते मदः ॥ १० ॥

இருக்கு 6-44-1.

யோ ரயிம் வோ ரயிந்தமோ யோ த்யும்நைர் த்யும்நவத்தம: ॥

ஸோம: ஸுத: ஸ இந்த்ர தேऽஸ்தி ஸ்வதாபதே மத: ॥

### அந்வயம்.

हे इन्द्र!, यः, रयिन्तमः, यः, द्युम्नैः द्युम्नवत्तमः, सः, सोमः, वः, रयिं, स्वधापते, ते सुतः, मदः, अस्ति ॥

---

** यो रयिवो, என்பது இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| **यः** | யஃ | யாது |
| **रयिन्तमः** | ரயிந்தமஃ | மிகுந்த தனமுடையதோ, |
| **यः** | யஃ | யாது |
| **द्युम्नैः** | த்யும்நைஃ | விளங்கிய கீர்த்திகளினின்று |
| **द्युम्नवत्तमः** | த்யும்நவத்தமஃ | மிகுந்த கீர்த்தியுடையதோ, |
| **सः सोमः** | ஸஃ ஸொமஃ | அச்சோமரசமானது |
| **वः** | வஃ | நினது உபாசகர்களுக்கு |
| **रयिं** | ரயிம் | தனத்தைக் கொடுக்கின்றது. |
| **स्वधापते !** | ஸ்வதாபதெ ! | சோமமாகிய அன்னம்பாலிக்கும் இந்திர ! |
| **ते** | தெ | நினக்கு, |
| **सुतः** | ஸுதஃ | பிழிந்த பின்னர் அச் சோமரசம் |
| **मदः** | மதஃ | களிப்பைத் தருவதாய் |
| **अस्ति** | அஸ்தி | இருக்கின்றது. |

## சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—10. சம்பு வார்ஹஸ் பத்திய ரிஷி.

இந்திரனே! அச் சோமரசம் உன்னுடைய தோத்திரத்தைப் புரிகின்ற உனது தொண்டர்கட்குத் தனத்தைக் கொடுக்கின்றது. ஈண்டுக் கொடுக்கின்றது என்பது எஞ்சிநின்றது. எத்தன்மைய சோமரசமெனின்? விசேடமாகிய திரவியமுடையதும், விளங்கிய கீர்த்திகளினின்றும் மிகச்சிறந்த கீர்த்தியுடையதுமாம். சோமரசமாகிய அன்னத்தைக் காப்பாற்றும் இந்திர! அச் சோமரசம் பிழியப்பட்டதாய் உனக்குக் களிப்பைச் செய்வதாகின்றது என்பதாம். (10)

## பன்னிரண்டாவது கண்டம்

முற்றும்.

---

## மூன்றாவது அத்தியாயம்

முடிந்தது.

---

## முதலாவது கண்டம்

பிரபாடகம்—4. அத்தியாயம்—4. கண்டம்—1.

எட்டு மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २
352. प्रत्यस्मै पिपीषते विश्वानि विदुषे भर ।
३ २ ३ २ ३ १ २ ३ १२
अरङ्गमाय जग्मयेऽपश्चा * दध्वने नरः ॥ १ ॥

இருக்கு 8-3-17.

ப்ரத்யஸ்மை பிபீஷதே விஶ்வாநி விதுஷே பர ।
அரங்கமாய ஜக்மயேऽபஶ்சாத்த்வநே நர: ॥

அந்வயம்.

(हे अध्वर्यो !,) नरः, पिपीषते, विश्वानि, विदुषे, अरङ्गमाय, जग्मये, अपश्चादध्वने, अस्मै, प्रति भर ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे अध्वर्यो !) | (ஹே அத்வர்யோ !) | (எசுர்மறை யோதுவோனே !) |
| नरः | நர: | கருமத்தை நியமிப்போனாகிய நீ, |
| पिपीषते | பிபீஷதே | சோமரசம் அருந்த விரும்புபவனும் |
| विश्वानि | விஶ்வாநி | அறிதற்குரிய பொருள்களனைத்தையும் |
| विदुषे | விதுஷே | அறிந்தவனும் |
| अरङ्गमाय | அரங்கமாய | இனிது சேர்விப்போனும் |
| जग्मये | ஜக்மயே | வேள்வியிற் செல்வோனும் |
| अपश्चादध्वने | அபஶ்சாத்த்வநே | யாவரினும் முன்னே போய்ச் சேர்வோனுமாகிய |
| अस्मै | அஸ்மை | இவ் விந்திரன் பொருட்டுச் |
| प्रति भर | ப்ரதி பர | சோமரசத்தை அர்ப்பணஞ்செய்வாயாக. |

* दध्वने नरे, என்பன இருக்கு.

### சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—1. பரத்துவாச ரிஷி.

எசுர்மறை யோதுவோய்! கருமத்திற் குரியவற்றை நியமிப்போனு கிய நீ இவ் விந்திரன் பொருட்டுச் சோமரசத்தைக் கொடுப்பாயாக. எவ் வண்ணத்தனாகிய இந்திரன் பொருட் டெனின்? சோமரசம் அருந்த விரும்பு வோனும், அறியத்தக்க பொருள்களனைத்தையும் அறிபவனும், இனிது கொண்டு போய்ச் சேர்ப்போனும், வேள்வியிற் செல்லுஞ் சீலமுடையானும், யாவர்கட்கும் முன்னே செல்வோனுமாகிய இந்திரனுக்கு, சோமரசம் அர்ப் பணஞ் செய்வாயாக என முடித்துக்கொள்க. (1)

**குறிப்பு.**—ஈண்டு நூ, என்னும் பெயர்ச் சொல் நான்காம் வேற்றுமைப் பொரு ளில் வந்த ஆறும் வேற்றுமையாம். அதுபற்றியே இருக்கோதுவார்கள் अपश्चादध्वने नरे என (நியந்தாவின் பொருட்டு) என நான்காம் வேற்றுமையைக்கொண்டு ஓது கின்றார்கள். நியந்தாவின் பொருட்டு என்பது கருமங்கட்கு இறைவன் பொருட் டென்பதாம்.

## மந்திரம் 2.

१ २ ३२ ३ १ २ ३२ ३ १२ ३ २
353. आ नो वयो वयः शयं महान्तं गह्वरेष्ठां महान्तं पूर्विनेष्ठाम् ।
३२उ ३ १ २
उग्रं वचो अपावधीः ॥ २ ॥

ஆ நோ வயோ வயꞏ ஶயம் மஹாந்தம் கஹ்வரேஷ்டாம் மஹாந்தம் [பூர்விநேஷ்டாம்
உக்ரம் வசோ அபாவதீꞏ ॥

### அந்வயம்.

हे वयो!, शयं, महान्तं, गह्वरेष्ठां, नः, वयः, आ (हर), पूर्विनेष्ठां, महान्तं, उग्रं, वचः, अपावधीः ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वयो! | ஹே வயோ! | மித்திரனாகிய இந்திர! |
| शयं | ஶயம் | இத்தன்மைய நீ |
| गह्वरेष्ठां | கஹ்வரேஷ்டாம் | மலைக் குகையிலுள்ள |
| नः | நꞏ | எங்களுடைய |
| महान्तं | மஹாந்தம் | மிகுதியாகிய |

| | | |
|---|---|---|
| वयः | வயஃ | சோமமென்னும் அன்னத்தைக் |
| आ (हर) | ஆ (ஹர) | கொண்டுவந்து கொடுப்பாயாக. (கொடுத்து.) |
| पूर्विनेष्टां | பூர்வினேஷ்டாம் | முந்திய பந்தத்திலுள்ளதும் |
| महाव्रतं | மஹாவ்ரதம் | மிகுந்ததும் |
| उग्रं | உக்ரம் | பசி தாக நிமித்தமாய் அஞ்சுகின்றேன் என்னுங் கொடியது மாகிய |
| वचः | வசஃ | எனது பரிதாப வார்த்தையை |
| अपावधीः | அபாவதீஃ | நீக்குவாயாக அமர (தேவ) வழியிற் சேர்ப்பாயாக.) |

சாயண பாடியம்.

**கண்டம்—1. இருக்கு—2. வாமதேவன், அல்லது, சாகபூதர் ரிஷி.**

நண்பனாகிய இந்திரனே! இத்தன்மைய நீ பெரும் வலிவுள்ள மலைக் குகை முதலியவைகளி லிருக்கப்பெற்ற, எங்களுடைய சோமரசமாகிய அன்னத்தைக் கொண்டுவந்து கொடுத்து, பேராற்றலுடைய ஆதி சம்சாரத்தில் இருக்கப்பெற்ற பசிதாக நிமித்தத்தாற் (வரும்) பயங்கரமாகிய எமது (பரிதாப) வார்த்தையை நீக்குவாயாக. "பசி தாகங்கள், உக்கிரம் உன்னை" என்னு மறைமொழியையும் ஈண்டுணர்க. தேவத்தன்மை யடையச் செய்வாயாக என்பது பொருள். அதைப்பெறின் பசி தாகங்க ளொழிகின்றன என்பதாம். 'உண்மையில் தேவர்கள் உண்டிலர் குடித்திலர்' என்னும் மறை வாக்காற் பெறப்படுகின்றது என்பது பொருள். (2)

குறிப்பு.—மலைச் சிகரத்திற் படிந்துள்ள விருத்திரன் என்னும் மேகத்தைக் கடிந்தவன், சத்துருக்களின் கொடிய வாக்குகளையுங் கடிந்தவன் இந்திரன் என்பாருமுளர்.

## மந்திரம் 3.

२ ३ २३ २ ३१२ ३ १ २
354. आ त्वा रथं यथोतये सुम्नाय वर्त्तयामसि ।
३ १२ ३ २३ ३ २ ३ १ २
तुविकूर्मिमृतीषह *मिन्द्रꣳ शविष्ठ सत्पतिम् ॥ ३ ॥

இருக்கு 8-67-1.

ஆ த்வா ரதம் யதோதயே ஸும்நாய வர்த்தயாமஸி ।
துவிகூர்மிம்ருதீஷஹ மிந்த்ரம் ஶவிஷ்ட ஸத்பதிம் ॥

* इन्द्र शविष्ठ सत्पते, என்பது இருக்கு.

அந்வயம்.

हे शविष्ठ इन्द्र!, ऊतये, सुम्नाय, रथं यथा, तुविकूर्मिं, ऋतीषहं, सत्पतिं, त्वा इन्द्रं, आवर्त्तयामसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे शविष्ठ इन्द्र! | ஹெ ஶவிஷ்ட இந்த்ர! | பேராற்றலுடைய இந்திர! |
| ऊतये | ஊதயெ | தனது பாதுகாப்பின் பொருட்டும் |
| सुम्नाय | ஸும்நாய | சுகத்தின் பொருட்டும் |
| रथं यथा | ரதம் யதா | இரதத்தைச் சுற்றுவிப்பதுபோல் |
| तुविकूर्मिं | துவி கூர்மிம் | வியப்புள்ள வலியையுடையவனும் |
| ऋतीषहं | ருதீஷஹம் | துன்புறுத்துவோர்களை யடக்குவோனும் |
| सत्पतिं | ஸத்பதிம் | நல்லவர்களைப் பாதுகாப்போனுமாகிய |
| त्वा इन्द्रं | த்வா இந்த்ரம் | இந்திரனாகிய நின்னை |
| आवर्त्तयामसि | ஆவர்த்தயாமஸி | சுற்றித்திரியுமாறு செய்விக்கின்றோம். (சுகத்தை வளரச்செய்யுமாறு செய்விக்கின்றோம்.) |

சாயண பாடியம்.

*கண்டம்—1. இருக்கு—3. பிரியமேத ரிஷி.*

*இந்திர! உன்னைச் சுற்றுமாறு செய்கின்றோம் யாம். எதன் பொருட்டெனின்? எங்களைக் காப்பாற்றுதற் பொருட்டும், சுகத்தின் பொருட்டுமாம். எதைப் போலெனின்? இரதத்தை (வண்டியை) பாதுகாப்பின் பொருட்டும் சுகத்தின் பொருட்டும் சுற்றித்திரியுமாறு செய்வித்தல் போன்று. மிகுந்த வலியுடைய இந்திரனே! மிகுந்த கருமமுடையவனும், துன்புறுத்துவோர்களை யடக்குவோனும், நல்லோர்களைக் காப்பாற்றுவோனுமாகிய நின்னை சுற்றும்படி (விருத்தி பண்ணும்படி) யாம் செய்விக்கின்றோம் என பொருள் கொள்க.*

## மந்திரம் 4.

२ ३ २ ३ १ २ ३ १ २र

355. स पूर्व्यो *महोनां वेनः क्रतुभिरानजे ।

२ ३ २ ३ १ २ ३ २ ३२ ३ १ २ ३२

यस्य द्वारा मनुः पिता देवेषु धिय आनजे ॥

---

* महाना, என்பது இருக்கு.

ஸ வூர்வ்யோ மஹோநாம் வேநஃ க்ரதுபிராநஜே ।
யஸ்ய த்வாரா மநுஃ பிதா தேவேஷு தியஆநஜே ॥

அந்வயம்.

यस्य, द्वारा, धियः, देवेषु पिता, मनुः, आनजे, सः, पूर्व्यः, महोनां, ऋतुभिः, वेनः, आनजे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यस्य | யஸ்ய | எவ் விந்திரனை |
| द्वारा | த்வாரா | அடைவதற்கு உபாயமாகிய |
| धियः | தியஃ | கருமங்களை, |
| देवेषु पिता | தேவேஷு பிதா | தேவர்களுள் அனைவரையும் பாதுகாக்கின்ற |
| मनुः | மநுஃ | மநுவானவர் |
| आनजे | ஆநஜே | அடைவிக்கின்றாரோ, |
| सः | ஸஃ | அவ் விந்திரன் |
| पूर्व्यः | வூர்வ்யஃ | முக்கியமானவன். |
| महोनां | மஹோநாம் | பூசித்தற்குரிய வேள்வித்தலைவர்களுடைய |
| ऋतुभिः | க்ரதுபிஃ | வேள்விகள் வாயிலாக |
| वेनः | வேநஃ | அவிகளை விரும்பி (யும்) |
| नजे | ஆநஜே | வருகின்றான். |

சாயண பாடியம்.

1. இருக்கு—4. பிரகாத ரிஷி.

ந்திரனை யடைவதற்கு உபாயமாகிய கருமங்களை, தேவர்களுக்
ரயும் பரிபாலிக்கும் மநு அடையச் செய்கின்றாரோ, அவ்
வன். அவன், போற்றத்தக்க வேள்வித் தலைவர்களுடைய
ம் நிமித்தங்களால் அவர்களுடைய அவிகளை விரும்பியவ

(4)

வும் பாடம்

## மந்திரம் 5.

२ ३ १२ ३२ ३ १ २ ३ २३ २
356. यदी वहन्त्याशवो भ्राजमाना रथेष्वा ।
१ २ ३२र ३ २३ १ २
पिबन्तो मदिरं मधु तत्र श्रवांꣳसि कृण्वते ॥ ५ ॥

யதீ வஹந்த்யாஶவோ ப்ராஜமாநா ரதேஷ்வா ।
பிபந்தோ மதிரம் மது தத்ர ஶ்ரவாம்ஸி க்ருண்வதே ॥

அந்வயம்.

रथेषु, भ्राजमानाः, आशवः, यदि, आवहन्ति, तत्र, मदिरं, मधु, पिबन्तः, श्रवांसि, कृण्वते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **रथेषु** | ரதேஷு | இரதங்களில் |
| **भ्राजमानाः** | ப்ராஜமாநாঃ | விளங்கப்பட்டவர்களும் |
| **आशवः** | ஆஶவঃ | விரைவிற் செல்வோர்களுமான மருத்துக்கள் |
| **यदि** | யதி | எவ் வேள்வியின்கண் |
| **आवहन्ति** | ஆவஹந்தி | நின்னை அடையச் செய்கின்றார்களோ, |
| **तत्र** | தத்ர | அவ் வேள்வியில் |
| **मदिरं** | மதிரம் | களிப்பைத் தருவதும், |
| **मधु** | மது | சுவை மலிந்ததுமாகிய சோம ரசத்தை |
| **पिबन्तः** | பிபந்தঃ | அருந்தினவர்களாகி |
| **श्रवांसि** | ஶ்ரவாம்ஸி | அன்னங்களை |
| **कृण्वते** | க்ருண்வதே | மழைவாயிலாக உண்டாக்குகின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—5. சுவாவசிய ஆத்திரேய ரிஷி.

இந்திரனே! தேர்களில் விளங்கப்பட்டவர்களும் விரைவிற் செல்பவர்களுமான மருத்துக்கள் எவ் வேள்வியில் நின்பாற் சேர்க்கின்றார்களோ, அதாவது நின்னை யடையுமாறு செய்கின்றார்களோ, அவ் வேள்வியில் களிப்பை யுண்டாக்குவதும், மிகுந்த சுவையுள்ளது (நீரின்சுவை முதலியவற்றினுஞ் சிறந்த சுவையுடையது) மாகிய சோமமென்னும் அன்னத்தை அருந்

தினவர்களாய் மழைவாயிலாக அன்னங்களை யுண்டாக்குகின்றார்கள். அல்லது, விளங்கப்பட்டவர்களும், விரைவிற் செல்வோர்களும் களிப்பைத் தருஞ் சோமத்தை யருந்தினவர்களுமான வேட்போர்கள், அதாவது வேள்வித் தலைவர்கள், சோமத்தை எவ் வேள்வியில் இரதங்களிற் சேர்க்கின்றார்களோ, அவ்வேள்வியில் பிழிந்தெடுத்தல் முதலான கருமங்களாற் புகழப்பட்ட சோமரசமாகிய அன்னங்களை யுண்டாக்குகின்றார்கள் என்பதுமாம். (5)

## மந்திரம் 6.

१ २ ३ १ २ ३ १ २२ ३ १ २
357. त्यमु वो अप्रहणं गृणीषे शवसस्पतिम् ।
१ २ ३ २ ३ २ ३ १ २ ३ १२
इन्द्रं विश्वासाहं *नरंᳶ शचिष्ठं विश्ववेदसम् ॥ ६ ॥

இருக்கு 6-44.4-

த்யமு வோ அப்ரஹணம் க்ருணீஷே ஶவஸஸ்பதிம் ।
இந்த்ரம் விஶ்வாஸாஹம் நரம் ஶசிஷ்டம் விஶ்வவேதஸம் ॥

அந்வயம்.

(हे ऋत्विजः ! यजमानाः !) वः, अप्रहणं, शवसः, पतिं, विश्वासाहं, नरं, शचिष्ठं, विश्ववेदसं, त्यमु, इन्द्रं गृणीषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ऋत्विजः ! | ஹே ருத்விஜ꞉ ! | வேட்போர்களே ! |
| यजमानाः ! | யஜமாநா꞉ ! | தலைவர்களே ! |
| वः | வ꞉ | உங்கட்காக |
| अप्रहणं | அப்ரஹணம் | அன்பர்கட்கு அனுக்கிரகம் பண்ணுபவனும் |
| शवसः | ஶவஸ꞉ | ஆற்றலுக்கு |
| पतिं | பதிம் | இறைவனும் |
| विश्वासाहं | விஶ்வாஸாஹம் | எல்லாப் பகைஞர்களையும் அடக்குபவனும் |
| नरं | நரம் | நியமிப்பவனும் |
| शचिष्ठं | ஶசிஷ்டம் | வேள்வி முதலிய கருமத்திலிருப்பவனும் |
| विश्ववेदसं | விஶ்வவேதஸம் | தனங்களனைத்தையு முடையானுமாகிய |
| त्यमु इन्द्रं | த்யமு இந்த்ரம் | அவ் விந்திரனைத் |
| गृणीषे | க்ருணீஷே | துதிக்கின்றேன். |

* नरं महिष्टं विश्वचर्षणिम्, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—6. சம்யு ரிஷி.

வேட்போர்காள்! தலைவர்காள்! உங்கணிமித்தம் அவ் விந்திரனையே துதிக்கின்றேன். அல்லது, நீங்கள் துதிப்பீர்களாக. எவ் விதமாகிய இந்திரனை யெனின்? அன்பர்கட்கு அநுக்கிரகிப்போனும், ஆற்றலைப் பாதுகாப்போனும், சத்துருக்க ளனைவர்களையும் அடக்குவோனும், நியமிப்போனும், வேள்வி முதலிய கருமங்களில் இருப்பவனும், எல்லாத் தனமுடையவனுமாகியவனை துதிக்கின்றேன். என்பதனோடு சேர்த்துக்கொள்க. (6)

## மந்திரம் 7.

१ १ ३ ३ १ २र ३ १ ३
358. दधिक्राव्णो अकारिषं जिष्णोरश्वस्य वाजिनः ।
३ २ ३ १ २ ३ २ १ २
सुरभि नो मुखा करत्प्र न आयूंषि तारिषत् ॥ ७ ॥

இருக்கு 5-32-1.

𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑍋 𑌅𑌕𑌾𑌰𑌿𑌷𑌂 𑌜𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌾𑌜𑌿𑌨𑌃 ।
𑌸𑍁𑌰𑌭𑌿 𑌨𑍋 𑌮𑍁𑌖𑌾 𑌕𑌰𑌤𑍍𑌪𑍍𑌰 𑌨 𑌆𑌯𑍂𑌂𑌷𑌿 𑌤𑌾𑌰𑌿𑌷𑌤𑍍 ॥

அந்வயம்.

जिष्णोः, अश्वस्य, वाजिनः, दधिक्राव्णः, अकारिषं, नः, मुखा, सुरभि, करत्, नः, आयूंषि, प्रतारिषत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| जिष्णोः | 𑌜𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 | வெல்லுஞ் சீலமுடையதும் |
| अश्वस्य | 𑌅𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 | குதிரை வடிவங் கொண்டதும் |
| वाजिनः | 𑌵𑌾𑌜𑌿𑌨𑌃 | வேகமுள்ளதும் |
| दधिक्राव्णः | 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑌃 | ததிக்கிராவன், எனப்பட்டதுமாகிய அக்கினி தேவதையின் துதியைச் |
| अकारिषं | 𑌅𑌕𑌾𑌰𑌿𑌷𑌂 | செய்கின்றோம். (அவ் வக்கினி தேவதை |
| नः | 𑌨𑌃 | எமது |
| मुखा | 𑌮𑍁𑌖𑌾 | கண், வாய் முதலிய இந்திரியங்களை |

| | | |
|---|---|---|
| सुरभि | ஸுரபி | வலியுடையனவாகச் |
| करत् | கரத் | செய்குக. மற்றும் |
| नः | நஃ | எமது |
| आयूंषि | ஆயூம்ஷி | ஆயுட்களை(யும்) |
| प्रतारिषत् | ப்ரதாரிஷத் | விருத்திபண்ணுக. |

## சாயண பாடியம்.

**கண்டம்—1. இருக்கு—7. வாமதேவ ரிஷி.**

ததிக்கிராவன், என்பது ஒரு அக்கினி விசேடம். அதுவும் குதிரை வடிவமாம். ஈண்டு "அக்கினி தேவதைகளினின்று இயற்கையிலடங்கியது குதிரை வடிவாகி ஏது குதிரையென நின்றது" என்றற் றொடக்கத்திய வேட்போர் பிராமணம் என்னும் மறை வாக்குஞ் சிந்திக்கற்பாலது. அத்தகைய ததிக்கிராவன், என்னும் அக்கினி தேவதையினுடைய தோத்திரத்தைச் செய்கின்றேன் என்பதாம். வெல்லுஞ் சீலமுள்ள குதிரை வடிவுடையதும், வேகங் கொண்டதுமாகிய அத் தேவதை, எங்களுடைய நேத்திர முதலிய இந்திரியங்களை வலிவுடையனவாகச் செய்குக. எங்களுடைய ஆயுட்களையும் இனிது விருத்திபண்ணுக. (என்பது பொருள்.) (7)

## மந்திரம் 8.

३ २ ३ १ २र ३ १ २र
359. पुरां भिन्दुर्युवा कविरमितौजा अजायत ।
२ ३ १ २ ३ १२ ३ २ ३ १ २ ३ २
इन्द्रो विश्वस्य कर्मणो धर्त्ता वज्री पुरुष्टुतः ॥ ८ ॥

இருக்கு 1-11-4.

புராம் பிந்துர்யுவா கவிரமிதௌஜா அஜாயத |
இந்த்ரோ விஶ்வஸ்ய கர்மணோ தர்த்தா வஜ்ரீ புருஷ்டுதஃ ||

### அந்வயம்.

पुरां, भिन्दुः, युवा, कविः, अमितौजाः, विश्वस्य कर्मणः, धर्त्ता, वज्री, पुरुष्टुतः, अजायत, इन्द्रः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पुरां | புராம் | பகைஞரின் நகரங்களைப் |
| भिन्दुः | பிந்து: | பிளக்கின்றவனும் |
| युवा | யுவா | என்றுந் தருணப் பருவத்தனும் |
| कविः | கவி: | நுண்ணறிவினனும் |
| अमितौजाः | அமிதௌஜா: | பேராற்றலுடையானும் |
| विश्वस्य कर्मण: | விஶ்வஸ்ய கர்மண: | கரும காண்டங்களனைத்தையும் |
| धर्त्ता | தர்த்தா | பரிபாலிப்பவனும் |
| वज्री | வஜ்ரீ | வச்சிராயுதந் தாங்கினவனும் |
| पुरुष्टुतः | புருஷ்டுத: | பல்லோர்களாற் றுதிக்கப்பட்டோனும் |
| अजायत | அஜாயத | ஆனவனே |
| इन्द्रः | இந்த்ர: | இந்திரன். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—8. சேதா மதுச்சந்த ரிஷி.

இவ் விந்திரன், மேற் கூறப்படுங் குணங்களை யுடையவனாகின்றான். எவ்விதமான குணங்களை யுடையானெனின்? அவை வருமாறு :—சத்துரு நகரங்களைப் பிளக்கின்றவன், எக் காலுங் கிழத்தன்மையை யடையாதோன், நுண்ணறிவினன், பெரும் வலியுடையவன், சோதிட்டோம முதலிய கருமங்களைப் பாதுகாப்பவன், வேள்வித் தலைவனைப் பாதுகாத்தற் பொருட்டு இடையறாது வச்சிராயுதந் தாங்கினோன், இருக்குமறை யோதுவோர் முதலான பல்லோர்களால் அவ் வக் கருமத்திற் றுதிக்கப்பட்டவன் என்பதாம். (8)

## முதலாவது கண்டம்

முற்றும்.

## இரண்டாவது கண்டம்.

---

### பிரபாடகம்—4. அத்தியாயம்—4. கண்டம்—2.

பத்து மந்திரங்களாலானது.

---

#### மந்திரம் 1.

१२ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २
360. प्रप्र व स्त्रिष्टुभमिषं वन्दद्वीरायेन्दवे ।
३ १ २ ३ १ २ ३ २३ १ २
धिया वो मेधसातये पुरन्ध्या विवासति ॥ १ ॥

இருக்கு 8-69-1.

ப்ரப்ர வ ஸ்த்ரிஷ்டுபமிஷம் வந்தத்வீராயேந்தவே।
தியா வோ மேதஸாதயே புரந்த்யா விவாஸதி॥

அந்வயம்.

(हे अध्वर्यादयः !,) वः, त्रिष्टुभं, इषं, वन्दद्वीराय, इन्दवे, प्र प्र, वः, मेधसातये, पुरन्ध्या, धिया, आविवासति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे अध्वर्यादयः!) | (ஹே அத்வர்யாதய:!) | (வேட்போர் முதலியோர்களே!) |
| वः | வ: | நீங்கள் |
| त्रिष्टुभं | த்ரிஷ்டுபம் | மூன்று துதிகளோடு கூடிய |
| इषं | இஷம் | அன்னத்தை |
| वन्दद्वीराय | வந்தத்வீராய | வீரர்களாற் புகழத் தக்கவனும் |
| इन्दवे | இந்தவே | பிரகாசனுமாகிய இந்திரனுக்குச் |
| प्रप्र | ப்ரப்ர | சேர்ப்பீர்களாக. (அவ் விந்திரன்) |
| वः | வ: | உங்கட்கு |
| मेधसातये | மேதஸாதயே | வேள்வி யநுட்டானத்தின் பொருட்டு |
| पुरन्ध्या | புரந்த்யா | மெய்யறிவை யுடைய |
| धिया | தியா | கருமங்களால் |
| आविवासति | ஆவிவாஸதி | நலஞ் செய்வன். |

சாயண பாடியம்.

கண்டம்—2.　இருக்கு—1.　பிரியமேதா ரிஷி.

வேட்போர் முதலானவர்களே! (எசுரோதுவோர் முதலானவர்களே! என்பதுமது) நீவிர், மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலுந் துதிக்கப்பட்ட அன்னத்தை நிறையச் செய்வீர்களாக. யார்க்கெனின்? வீரர்கள் போற்றுகின்ற இந்திரனுக்கு. அல்லது, பயன்களை, அல்லது, மழைகளை நிரப்புவோனுக்கு. (இதனால்) அவ் விந்திரன் உங்கட்கு வேள்வி முதலியவற்றின் பொருட்டு மிக்குணர்வோடு கூடிய கருமத்தினின்றும் வேண்டிய பலனைக் கொடுத்தலாற் பெருமை பாராட்டுவான் என்பதாம்.　(1)

மந்திரம் 2.

३ १२　३ २ ३　२ ३२　३२ ३ १ २

361.　कश्यपस्य स्वर्विदो यावाहुः सयुजाविति ।

२ ३ २ ३१ २ ३२　३१　२र ३ १ २

ययोर्विश्वमपि व्रतं यज्ञं धीरा निचाय्य ॥ २ ॥

கஶ்யபஸ்ய ஸ்வர்விதோ யாவாஹு: ஸயுஜாவிதி ।
யயோர்விஶ்வமபி வ்ரதம் யஜ்ஞம் தீரா நிசாய்ய ॥

அந்வயம்.

कश्यपस्य, यौ, ययोः, विश्वं अपि व्रतं, यज्ञं, इति, निचाय्य, सयुजौ, स्वर्विदः, धीराः, आहुः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| कश्यपस्य | கஶ்யபஸ்ய | எல்லாவற்றையு முணருகின்ற இந்திரனுடைய |
| यौ | யௌ | இரண்டு குதிரைகள் எவைகளோ, |
| ययोः | யயோ: | எவ்விரண்டு குதிரைகளின் |
| विश्वं अपि व्रतं | விஶ்வம் அபி வ்ரதம் | கருமங்களனைத்தும் |
| यज्ञं | யஜ்ஞம் | வேள்வியின் பொருட்டேயாம் |
| इति | இதி | என் றிவ்வாறு |
| निचाय्य | நிசாய்ய | நிச்சயித்துக் கொண்டு |
| सयुजौ | ஸயுஜௌ | அக் குதிரைகள் சேர்த்துப் பூட்டப்படுகின்றன வென்று |
| स्वर्विदः | ஸ்வர்வித: | சுவர்க்கத்திலுள்ள |
| धीराः | தீரா: | தீரர்கள் |
| आहुः | ஆஹு: | சொல்லுகின்றார்கள். |

## சாயண பாஷ்யம்.

கண்டம்—2. இருக்கு—2. வாமதேவ ரிஷி.

காண்கின்றவன் கசியபன் "கசியபன் காண்கின்றவனாகின்றான்" என்று இனைய மறையுங் கூறுகின்றது. எல்லாவற்றையும் பார்க்கின்ற அதாவது எல்லாவற்றையு முணர்கின்ற அத்தகைய இந்திரனுடைய இரண்டு குதிரைகள் எவைகளோ, எவைகளுடைய எல்லாக் கருமங்களும் வேள்வி செய்பு மிடத்தைக் குறித்தே யாம், என்றிவ்வாறு நிச்சயித்துக்கொண்டு அக் குதிரைகள் ஒன்றாகவே பூட்டப்படுகின்றனவென்று சுவர்க்க மடைந்தோர் களான தீரர்கள் சொல்கின்றார்கள். அல்லது, கசியபன் என்றது பிரசாபதி யாவன், "கசியபன் எட்டாமவன் அவன் மாமேருவை விடான்" என்னும் இனைய மறையாலுங்காண்க. எல்லாவற்றையு முணரும் அவனுடன் கூடத் தொடர்பவர்கள் எந்தத்தேவர்கள் எனச் சனங்கள் கூறுகின்றார்களோ, வேத முணர்ந்த அவர்களே மித்திர வருணதேவர்கள். "பகல் மித்திரன் இரவு வருணன் என்பது ஐதரேயப் பிராமணம். எல்லாக் காரியங்களும் அவ் விரு வர்களிடத்து மடங்குதலின் என்க. அல்லது, இந்திரன் அக்கினி என்பதுமாம் அவ் விருவர்களுமே எல்லாவற்றையுந் தாங்குகின்றவர்களாதலின் என்க. இக்கருத்துக்கொண்டே இம் மந்திரத்திற்கு, இந்திரனும், அக்கினியுந் தேவ தைகள் என முன்னர்க் கூறப்பட்டனர். (2)

### மந்திரம் 3.

१२३ १ २ ३ १२ ३ १२
362. अर्चत प्रार्चत नरः प्रियमेधासो अर्चत ।
१२ ३ २ ३२उ ३ २ ३क२र
अर्चन्तु पुत्रका उत पुरमिद्‌ धृष्ण्वर्चत ॥ ३ ॥

இருக்கு 8-69-8.

அர்சத ப்ரார்சத நர꞉ ப்ரியமேதா⁴ஸோ அர்சத ।
அர்சந்து புத்ரகா உத புரமித்³ த்⁴ருஷ்ண்வர்சத ॥

அந்வயம்.

हे नरः !, अर्चत, प्रार्चत, प्रियमेधासः !, अर्चत, उत, पुत्रकाः, अर्चन्तु, पुरमित्‌, धृष्णु, अर्चत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे नरः!** | ஹெ நரஃ! | கருமத்திற்கு இறைவர்களான வேட்போர் முதலானவர்களே! நீவிர் |
| **अर्चत** | அர்சத | இந்திரனைப் போற்றுவீர்களாக. |
| **प्रार्चत** | ப்ரார்சத | சிறப்பாகவும் பூசிப்பீர்களாக. |
| **प्रियमेधासः!** | ப்ரியமெயாஸஃ! | வேள்வியி லன்புடையோர்களே! |
| **अर्चत** | அர்சத | (நீவிர்) போற்றுவீர்களாக |
| **उत** | உத | மற்றும். |
| **पुत्रका:** | புத்ரகாஃ | புத்திரர்களும் |
| **अर्चन्तु** | அர்சந்து | ஆராதிப்பீர்களாக. |
| **पुरमित्** | புரமிச் | போற்றுவோர்கட்கு நிறையச் செய்வோனும், |
| **धृष्णु** | த்ருஷ்ணு | சத்துருவை யடக்குவோனுமாகிய இந்திரனை |
| **अर्चत** | அர்சத | (நீவிர்) ஆராதிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—3. பிரியமேதா ரிஷி.

கருமங்கட்கு நியந்தாவான வேட்போர் முதலியோர்களே! நீங்கள் இந்திரனை யாராதிப்பீர்களாக. மற்றும், தோத்திரத்தால் இந்திரனையே இனிது போற்றுவீர்களாக. பிரியமேதா ரிஷி சம்பந்த முடையார்களே! அதாவது அந்தக் கோத்திரத்தவர்களே! நீங்கள் இந்திரனை யாராதிப்பீர்களாக. புத்திரர்களும் இந்திரனை யாராதிப்பார்களாக. மற்றும், துதிப்போர்கள் வேண்டியதைப் பூரணமாக்குவோனும், பகைஞர்களை யடக்குஞ் சீலமுள்ளவனுமாகிய இந்திரனைப் பூசிப்பீர்களாக என்பதாம். (3)

## மந்திரம் 4.

३ १ २र ३ २ ३ १ २ ३ १ २

363. **उक्थमिन्द्राय शंस्यं वर्द्धनं पुरुनिःषिधे ।**

३ १ २र ३ १ २ ३ १ २ ३ १ २

**शक्रो यथा सुतेषु नो रारणत् सख्येषु च ॥ ४ ॥**

இருக்கு 1-10-5.

உக்தமிந்த்ராய ஶம்ஸ்யம் வர்த்தநம் புருநிஃஷிதெ ।

ஶக்ரோ யதா ஸுதெஷு நோ ராரணத் ஸக்யெஷு ச ॥

அந்வயம்.

पुरुनिःषिधे, इन्द्राय, वर्द्धनं, उक्थं, शक्रः, नः, सुतेषु, च सख्येषु, यथा, रारणत्, शंस्यम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पुरुनिःषिधे | புருநிஃஷிதெ | எல்லாச் சத்துருக்களேயுங் கொல்லுகின்ற |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| वर्द्धनं | வர்த்தநம் | விருத்திக்குச் சாதனமாகிய |
| उक्थं (शंस्यं) | உக்தம் (ஶம்ஸ்யம்) | துதி விசேடம் (புகழற்பாலது.) |
| शक्रः | ஶக்ரஃ | இந்திரன் |
| नः | நஃ | எங்களுடைய |
| सुतेषु | ஸுதேஷு | புத்திரர்கள் விஷயத்திலும் |
| च | ச | மற்றும் |
| सख्येषु | ஸக்யேஷு | நண்பர்கள் விஷயத்திலும் |
| यथा | யதா | எவ்வாறு |
| रारणत् | ராரணத் | இரைகின்றானே, (புகழ்கின்றானே,) அவ்வாறே |
| शंस्यं | ஶம்ஸ்யம் | போற்றத் தக்கான் |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—4. மதுச்சந்த ரிஷி.

விருத்திக்குச் சாதனமாகிய வேத மந்திரம் இந்திரன் பொருட்டு எங்களா லோதற்பாலது. எவ்விதமாகிய இந்திரன் பொருட் டெனின்? அநேகம் பகைஞர்களே யொழிக்கத் தக்கவன் பொருட்டு. இந்திரன் எங்களுடைய புத்திரர்களிடத்தும், மித்திரர்களிடத்தும், எங்ஙனஞ் சிறப்பாக இரைவானே, அதாவது எமது மந்திரோச்சாரணத்தாற் களிப்புற்ற இந்திரன் எங்களுடைய மக்களேயும், நண்பர்களேயும் பலவகையாக எவ்வாறு புகழ்கின்றானே, அவ்வாறே அவன் போற்றத்தக்கான் என மேலே கூட்டுக. (4)

மந்திரம் 5.

३ १ २ ३ २ ३ १ २ ३ १२
364. विश्वानरस्य वस्पतिमनानतस्य शवसः ।
१२ ३ २३ १ २ ३ १ २
एवैश्च चर्षणीनामूती हुवे रथानाम् ॥ ५ ॥

இருக்கு 8-68-4.

விஶ்வாநரஸ்ய வஸ்பதிமநாநதஸ்ய ஶவஸ: ।
ஏவைஶ்ச சர்ஷணீநா ஊதீ ஹுவே ரதாநாம் ॥

அந்வயம்.

विश्वानरस्य, अनानतस्य, शवसः, पतिं, वः, चर्षणीनां, एवैः, रथानां,
ऊती, हुवे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **विश्वानरस्य** | விஶ்வாநரஸ்ய | பகைஞர்கள்மேற் செல்வோனும் |
| **अनानतस्य** | அநாநதஸ்ய | சத்துருக்கட்கு வணங்காதோனும் |
| **शवसः** | ஶவஸ: | ஆற்றலுக்கு |
| **पतिं** | பதிம் | இறைவனுமாகிய இந்திரனை மருத்துக்காள் ! |
| **वः** | வ: | உங்களுடைய |
| **चर्षणीनां** | சர்ஷணீநாம் | சேனைகளின் |
| **एवैः** | ஏவை: | கமனத்தோடு (நடைகளுடன்) |
| **रथानां** | ரதாநாம் | இரதங்களினுடைய |
| **ऊती** | ஊதீ | பாதுகாப்பின் பொருட்டு |
| **हुवे** | ஹுவே | அழைக்கின்றேன். |

சாயண பாடியம்.

*கண்டம்—2. இருக்கு—5. பிரியமேத ரிஷி.*

*எல்லாச் சத்துருக்களையும் அடக்குகின்ற, அல்லது, பகைஞர்கட்கு வணங்காமையை யடைச்செய்கின்ற ஆற்றலுக்கு இறைவனாகிய இந்திரனை, ஈண்டு இந்திர சம்பந்தமுடைய மருத்துக்களுங் கூறப்படுகின்றார்கள். ஆனால், மருத்துக்கள், என்னுஞ் சொல் இல்லை. அங்ஙனமாயினும், நீங்கள் என்னுஞ் சொல்லின் வலியால் பெறப்பட்டார்கள் எனக்கொள்க. மருத்துக்காள்! உங்களுடைய சேனைகள் நடைப்பதுடன், அல்லது, இந்திரனுடைய சேனைகளான உங்களுடைய நடையுடன் ஒரு நிலைக்களத்துள்ள உங்களுடைய இரதங்கள் செல்வதுடன் அழைக்கின்றேன். அதாவது நடந்து செல்பவர்களோடும், இரதங்களிற் செல்பவர்களோடும் (மருத்துக்களோடும்) இந்திரனை யழைக்கின்றேன் என்பது பொருள். அல்லது, வேள்வித் தலைவர்களே! உங்களுடைய சேனைகளுக்குள் இரதமுடையார்கள் எக் கால் போர்க்களம் புகுகின்றார்களோ, அப்போது அவர்களுடைய அநுகூலத்தின் பொருட்டு இந்திரனை யழைக்கின்றேன் எனினுமாம்.* (5)

## மந்திரம் 6.

१ ३ १ २ ३ १ २र ३ १ २र ३ १ २
365. *सघाः यस्ते दिवो नरो धिया मर्त्तस्य शमतः ।
३ १ २र३ २ ३ २ ३२उ ३ १ २
ऊती स बृहतो दिवो द्विषो अंहो न तरति ॥ ६ ॥

இருக்கு 6-2-4.

ஸகா: யஸ்தே திவோ நரோ தியா மர்த்யஸ்ய ஶமத: ।
ஊதீ ஸ ப்ருஹதோ திவோ த்விஷோ அம்ஹோ ந தரதி ॥

அந்வயம்.

शमतः, मर्त्तस्य, दिवः, ते, धिया, नरः, सखा, सः, बृहतः, दिवः, यः, ऊती, अंहो न, द्विषः, तरति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| शमतः | ஶமத: | அடங்கி நல்வழியிற் செல்லுகின்ற |
| मर्त्तस्य | மர்த்யஸ்ய | மனிதர்களுக்குள் |
| दिवः | திவ: | பிரகாச முதலிய குணமுடையோனாகிய |
| ते | தே | உன்னுடைய |
| धिया | தியா | துதியால் |
| नरः | நர: | எம்மனிதன் |
| सखा | ஸகா | (உன்னை) போற்றுகின்றானோ, |
| सः | ஸ: | அம்மனிதன் |
| बृहतः | ப்ருஹத: | மகானும் |
| दिवः | திவ: | பிரகாசமுடையவனுமாகிய |
| यः | ய: | யாதொரு நினது |
| ऊती | ஊதீ | பாதுகாப்பினால் |
| अंहो न | அம்ஹோ ந | பாவத்தைக் கடப்பதுபோற் |
| द्विषः | த்விஷ: | சத்துருக்களைக் |
| तरति | தரதி | கடக்கின்றான். |

* ऋधद् यस्ते सुदानवे धियामर्त्तः शशमते उतीष, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

**கண்டம்—2.** இருக்கு—6. *பரத்துவாச ரிஷி.*

*கருமானுஷ்டானத்தால் அடங்கிய விருத்தியுள்ள (தமது நெறியிலுள்ள) மனுடர்களுக்குப் பிரகாச முதலிய குணமுள்ள உன்னுடைய தோத்திரத்தால் எம்மனிதன் (உன்னைத்) துதிப்போனாகின்றானோ, மித்திரனாகின்றானோ, என்பதுமது. அவன் ஒளியுடைய நினது பெரும் பாதுகாப்பால் பாவத்தைக் கடப்பதுபோற் பகைஞர்களைத் தாண்டுகின்றான் என்பதாம். (அவன் சத்துருக்களாற் றுன்புறான் என்பது பொருள்.)* (6)

குறிப்பு.—*மூலத்தில் 'மனிதனுடைய' என்னும் ஒருமை சாதி யொருமை.*

## மந்திரம் 7.

३ १२ ३ ३ २ ३ २ ३ १ २
366. **विभोष्ट इन्द्र राधसो विभ्वी रातिः शतक्रतो ।**
१ २ ३ १ २
**अथा नो विश्वचर्षणे *द्युम्नꣳ सुदत्र मꣳहय ॥ ७ ॥**

இருக்கு 30-73-13.

விபோஷ்ட இந்த்ர ராதஸோ விப்வீ ராதிஃ ஶதக்ரதோ ।
அதா நோ விஶ்வசர்ஷணே த்யும்நம் ஸுதத்ர மம்ஹய ॥

அந்வயம்.

हे शतक्रतो ! इन्द्र !, विभोः, ते, राधसः, रातिः, विभ्वी, अथ, विश्वचर्षणे, सुदत्र !, नः, द्युम्नं, मंहय ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे शतक्रतो ! इन्द्र !** | ஹே ஶதக்ரதோ ! இந்த்ர ! | அநேக கருமங்களையுடைய இந்திர ! |
| **विभोः** | விபோஃ | வியாபகனாகிய |
| **ते** | தே | நினது |
| **राधसः** | ராதஸஃ | தனங்களின் |
| **रातिः** | ராதிஃ | கொடையானது |
| **विभ्वी** | விப்வீ | மகத்தாயிருக்கின்றது. |
| **अथ** | அத | இதனால் |
| **विश्वचर्षणे** | விஶ்வசர்ஷணே | அனைத்தையுங் காண்கின்றவனும் |

* द्युम्ना सुक्षत्र, *என்பது இருக்கு.*

| | | |
|---|---|---|
| **सुदत्र!** | ஸுதத்ர! | மங்கல வடிவ ஈகை யுடையவனு மாகிய இந்திரனே! நீ |
| **नः** | நஃ | எங்கட்குத் |
| **द्युम्नं** | த்யும்நம் | தனத்தைக் |
| **मंहय** | மம்ஹய | கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

*கண்டம்—2. இருக்கு—7. அத்திரி ரிஷி.*

*அநேக கருமங்களையுடைய இந்திர! நின்னுடைய தனம் வழங்கலாகிய மிகுந்த கொடையானது பெரியதாம். இக்காரணத்தால் அனைத்தையுங் காண்போய்! மங்கலமாகிய ஈகையுடைய இந்திர! நீ எங்கட்குத் திரவியத்தைக் கொடுப்பாயாக என்பதாம்.* (7)

## மந்திரம் 8.

१२ १ २ ३१ २र

367. **वयश्चित्ते पतत्रिणो द्विपाच्चतुष्पादर्जुनि ।**

२३ १२३१ २र ३ १ २र ३ १२

**उषः प्रारन्नृतूंरनु दिवो अन्तेभ्यस्परि ॥ ८ ॥**

இருக்கு 1-49-3.

வயஶ்சித்தே பதத்ரிணோ த்விபாச்சதுஷ்பாதர்ஜுநி ।
உஷஃ ப்ராரந்ந்ருதூம்ரநு திவோ அந்தேப்யஸ்பரி ॥

அந்வயம்.

अर्जुनि, हे उषः!, ते, ऋतून् अनु, द्विपात्, चतुष्पात्, पतत्रिणः, वयश्चित्, दिवः अन्तेभ्यः, परि, प्रारन् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **अर्जुनि** | அர்ஜுநி | வெண்மைநிற முடைய |
| **हे उषः!** | ஹே உஷஃ! | உஷாதேவதையே! |
| **ते ऋतून् अनु** | தே ருதூந் அநு | நீ உதயமான பின்னரே |
| **द्विपात्** | த்விபாத் | மனிதர் தேவர் முதலியோர்களும் |
| **चतुष्पात्** | சதுஷ்பாத் | கோ முதலியவைகளும் |
| **पतत्रिणः** | பதத்ரிணஃ | இறகுகளையுடைய |
| **वयश्चित्** | வயஶ்சித் | பறவைகளும் |
| **दिवः अन्तेभ्यः** | திவஃ அந்தேப்யஃ | வெளியிடங்களினின்று |
| **परि** | பரி | மேல் |
| **प्रारन्** | ப்ராரந் | இனிது தொழிற்படுகின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—8. பிரற்கண்ணுவ ரிஷி.

வெண்மை நிறமுடைய உஷா தேவதையே! உன்னுடைய உதயத்தை யனுசரித்தே மனுடர் முதலானோர்களும், இறகாற் செல்கின்ற பறவை முத லியவைகளும், வானிடங்களினின்றும் மேல் இனிது செய்கை யுடையன வாகின்றனர். இரவிற் கட்டுப்பட்டுக் கிடந்த எல்லா உயிர்களும் நீ வந்த தின் பின்னரேயே தொழிற்படுகின்றன (பிரவிர்த்திக்கின்றன) என்பது பொருள். (8)

## மந்திரம் 9.

३ १ २र३ २ ३ २ ३ १ २३ २ ३ २

368. अमी ये देवा स्थन मध्य आरोचने दिवः ।

१ २ ३२उ ३ २ ३ २ ३ २ ३ १ २

कद्वः ऋतं कदमृतं का प्रत्ना व आहुतिः ॥ ९ ॥

இருக்கு 1-10-52.

அமீ யெ தெவா ஸ்தந மத்ய ஆரொசநெ திவஃ|
கத்வஃ ருதம் கதம்ருதம் கா ப்ரத்நா வ ஆஹுதிஃ ||

அங்வயம்.

हे देवाः!, ये अमी, दिवः, आरोचने, मध्ये, स्थन, वः, ऋतं, कत्?, अमृतं (अनृतं,) कत्?, वः, प्रत्ना, आहुतिः, का? ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे देवाः! | ஹெ தெவாஃ! | இந்திரன் முதலிய தேவர்காள்! |
| ये अमी | யெ அமீ | எத்தகைய நீங்கள் |
| दिवः | திவஃ | பிரகாசமாகிய இரவி |
| आरोचने | ஆரொசநெ | உதித்த விடத்து |
| मध्ये | மத்யெ | வானில் |
| स्थन | ஸ்தந | நிலைக்கின்றீர்களோ, அத் தன்மைய |
| वः | வஃ | உங்களுடைய துதிக்கு விடய மாகிய |
| ऋतं | ருதம் | உண்மை (சத்தியம்) |
| कत्? | கத்? | எங்கே? |
| अमृतं (अनृतं) | அம்ருதம் (அந்ருதம்) | பொய்மை |
| कत्? | கத்? | எங்கே? |

| | | |
|---|---|---|
| वः | வ: | உங்களுடைய |
| प्रत्न | ப்ரத்ந | பண்டைக்காலத்திய |
| आहुतिः | ஆஹுதி: | ஆகுதி |
| का ? | கா ? | யாது ? |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—9. ஆப்யத்திரித ரிஷி.

இந்திரன் முதலான தேவர்காள்! எத்தகைய நீங்கள் பிரகாசமாகிய சூரியனுடைய ஒளிக்குள் வானுலகிலிருக்கின்றீர்களோ, அதாவது இரவியால் விளக்கப்பட்ட விடத்தில் என்பது பொருள். அத்தன்மைய உங்களுடைய தோத்திர விஷயமாகவுள்ள சத்தியம் எவ்விடத்திலிருக்கின்றது? அசத்தியம் எங்கேயுளது? உங்களுடைய பழமையாகிய ஆகுதி என்னையாயிற்று? (உங்களுடைய ஈகை என்னுயிற் றென்பது பொருள்) இத்தன்மைய துன்பாநுபவத்தால், என்னா லநுட்டிக்கப்பட்ட வேள்வி முழுதும் உங்களை யடையவில்லையென்று அநுமானிக்கின்றேன் என்பதாம். (9)

குறிப்பு.—ஈண்டு அமிருதம் எனற்பாலதில் இடையிலுள்ள ந காரம் ம காரமாய்த் திரிந்து அமிருத மென்றாயிற்று.

மந்திரம் 10.

369. ऋचꣳ साम यजामहे याभ्यां कर्माणि कृण्वते ।
वि ते सदसि राजतो यज्ञं देवेषु वक्षतः ॥ १० ॥

ருசம் ஸாம யஜாமஹெ யாப்யாம் கர்மாணி க்ருண்வதெ ।
வி தெ ஸதஸி ராஜதொ யஜ்ஞம் தெவெஷு வக்ஷத: ॥

அந்வயம்.

याभ्यां, कर्माणि, कृण्वते, ऋचं, साम, यजामहे, ते, सदसि, विराजतः, देवेषु, यज्ञं, वक्षतः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| याभ्यां | யாப்யாம் | இருக்கு, சாமம், என்னும் எந்த இரண்டு வேதங்களால் |
| कर्माणि | கர்மாணி | தோத்திரம் முதலிய கருமானுட்டானஞ் |
| कृण्वते | க்ருண்வதெ | செய்கின்றார்களோ, |

| | | |
|---|---|---|
| **ऋचं साम** | ஊஅ௦ ஸாஉ | அந்த, இருக்கையும், சாமத்தையும், |
| **यजामहे** | யஜாஉஹெ | ஆராதிக்கின்றோம். |
| **ते** | தெ | அந்த இருக்கும் சாமமும் |
| **सदसि** | ஸதஸி | வேட்போர் கழகத்தில் |
| **विराजतः** | விராஜதஃ | தோத்திர முதலியவைகளாக விளங்குகின்றன. |
| **देवेषु** | தெவெஷு | இந்திரன் முதலான தேவர்களிடத்தில் |
| **यज्ञं** | யஜ்ஞ௦ | வேள்விப்பாகத்தை(யுஞ்) |
| **वक्षतः** | வக்ஷதஃ | சேர்ப்பிக்கின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—10. வாமதேவ ரிஷி.

இருக்கோதுவோரும், சாமம் பாடுவோரும், மந்திரம், துதி முதலியவைகளை இருக்குச் சாமமென்னும் எவ் விரண்டு வேதங்களாற் செய்கின்றார்களோ, அந்த இருக்கையும், சாமத்தையும் நாங்களாராதிக்கின்றோம். அந்த இருக்குஞ் சாமமும், வேட்போர்கூட் டத்தில் (சதோமண்டபத்தில்) தோத்திரமாகவும் மந்திரமாகவும் நன்கு விளங்குகின்றன. அவ் விருக்குச் சாமங்கள் இந்திரன் முதலிய தேவர்களிடத்தில் வேள்விப்பாகத்தைச் சேர்ப்பிக்கின்றன என்பதாம். (10)

## இரண்டாவது கண்டம்.

முற்றும்.

## மூன்றாவது கண்டம்.

### பிரபாடகம்—4. அத்தியாயம்—4. கண்டம்—3.

பதினொரு மந்திரங்களாலானது.

இதிலுள்ள பதினொரு மந்திரங்களில், 10-ம், 11-க்கு, இந்திரன், 9-க்கு வான், மண், தேவதைகள் 1, 9, 11-க்கு, சகதி, சந்தம், 10-க்கு, மகாபந்தி. 1, 9, 11-க்கு, நிஷாதம். 10-க்கு, பஞ்சமம் சுரம்.

மந்திரம் 1.

२ ३ १२ ३१२३ १२ ३१ २३१ २ ३१२ ३१२
370. विश्वाः पृतना अभिभूतरं नरः सजूस्ततक्षुरिन्द्रं जजनुश्च राजसे ।
२ ३ १२ ३२ ३१ २३१ २र ३१२३ १२
*क्रत्वे वरे स्थेमन्यामुरीमुतोग्रमोजिष्ठं तरसं तरस्विनम् ॥ १ ॥

இருக்கு 8-67-10.

விஶ்வா: ப்ருதநா அபிபூதரம் நர: ஸஜூஸ்ததக்ஷுரிந்த்ரம் ஜஜநுஶ்ச ராஜஸே ।
க்ரத்வே வரே ஸ்தேமந்யாமுரீமுதோக்ரமோஜிஷ்டம் தரஸம் தரஸ்விநம் ॥

அந்வயம்.

नरः, विश्वाः, पृतनाः, सजूः, अभिभूतरं, इन्द्रं, ततक्षुः, च, राजसे, जजनुः, उत, क्रत्वे, वरे, स्थेमनि, आमुरीं, उग्रं, ओजिष्ठं, तरसं, तरस्विनम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| नरः | நர: | போர் புரிகின்ற |
| विश्वाः | விஶ்வா: | மிகுந்த |
| पृतनाः | ப்ருதநா: | சேனைகள் |
| सजूः | ஸஜூ: | ஒன்றுகூடி |
| अभिभूतरं | அபிபூதரம் | பகைஞர்களை முற்றும் அடக்குகின்ற |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனைப் |
| ततक्षुः | ததக்ஷு: | படைகளைக் கைக்கொண்டோனாய்ச் செய்தன. |

| | | |
|---|---|---|
| च | அ | மற்றும், துதிப்போர்கள் |
| राजसे | ராஜஸெ | பிரகாசத்தின் பொருட்டு இரவி யாகிய இந்திரனை |
| जजनुः | ஜஜநுஃ | துதி முதலியவைகளால் தமது வேள்வியில் வெளிப்படுத்திக் கொண்டார்கள். |
| उत | உத | மற்றும், |
| क्रत्वे | க்ரத்வெ | விருத்திரனைக் கொல்லல் முதலிய செய்கையின் பொருட்டு, |
| वरे | வரெ | மேலாகிய |
| स्थेमनि | ஸ்தெமநி | நிலைத்த விடத்திலுள்ள |
| आमुरीं | ஆமுரீம் | பகைஞரைக் கொல்வோனும் |
| उग्रं | உக்ரம் | தீவிர இயற்கையனும் |
| ओजिष्ठं | ஓஜிஷ்டம் | பேரொளியுடையவனும் |
| तरसं | தரஸம் | மிகுந்த ஆற்றலுடையவனும் |
| तरस्विनं | தரஸ்விநம் | விரைவுடையோனுமாகிய இந்திரனைத் துதிக்கின்றார்கள். |

## சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—1.

வியாபகமாகிய, அல்லது, பரந்துள்ள போரைச் செய்கின்ற சேனைகள் ஒன்று கூடியதாய்ப் பகைஞர்களை முழுதும் அடக்குகின்ற இந்திரனை ஆயுத முதலியவைகளாற் கூர்மையாக்கின. (படைகளைக் கைக்கொண்டவனாகச் செய்தன என்பது பொருள்.) அல்லது 'பிருதன' என்றது உயுத்தம், பிருதன போர் என்பது நிகண்டாமாதலின். எல்லாப் போர்களையுந் தாழ்மைப் படுத்தும் இந்திரனை, ஏனைய துதியாளர்கள் ஒருவர்க்கொருவர் ஒன்றுகூடி தோத்திரங்களால் கூர்மைப்படுத்தினார்கள் என்பதாம். அல்லது, வேட்போர்கள் அவி கொடுத்தலால் வீரியமுடையவனாகச் செய்கின்றார்கள் எனினுமாம். அன்றியும், துதிப்போர்கள் தமது பிரகாசத்தின்பொருட்டுச் சூரியனாகிய இந்திரனைத் தமது வேள்வியில் தோத்திர மந்திரங்களால் உண்டாக்கினார்கள். மற்றும், விருத்திரனைக் கொல்லுதல் முதலிய தம்முடைய செய்கையின் பொருட்டு, நிலைத்த உயர்ந்த இடத்திலுள்ளவனும் சத்துருக்களைக் கொல்லுகின்றவனுமாகிய இந்திரனைத், தமது தனலாபத்தின் பொருட்டுத் துதிக்கின்றார்கள் என்பது பொருள். எத்தன்மைய இந்திரனை யெனின்? உக்கிரமும், ஒளியும், போராற்றலும், பகைஞர்களைக் கொல்ல ஆற்றலும், விரைவும் உடையானை. துதிக்கின்றார்கள் என்பதனோடு சேர்த்துக்கொள்க என்பதாம். (1)

குறிப்பு:—क्रत्वा वरिष्ठं वर आमुरि, என்பது இருக்கு.

## மந்திரம் 2.

१ २ ३ १ २ ३ २उ ३ २उ ३ १ २ ३ २ ३ २

371. श्रत्ते दधामि प्रथमाय मन्यवे *अहन्यद्दस्युं नर्य्यँ विवेरपः ।

३ २उ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २

उभे यत्त्वा †रोदसी धावतामनु भ्यसाते शुष्मात् पृथिवीचिदद्रिवः ॥

இருக்கு 10-347-1.

𑌶𑍍𑌰𑌤𑍍𑌤𑍇 𑌦𑌧𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌯 𑌮𑌨𑍍𑌯𑌵𑍇 𑌅𑌹𑌨𑍍𑌯𑌦𑍍𑌦𑌸𑍍𑌯𑍁𑌂 𑌨𑌰𑍍𑌯𑌂 𑌵𑌿𑌵𑍇
[𑌰𑌪𑌃 ।

𑌉𑌭𑍇 𑌯𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌰𑍋𑌦𑌸𑍀 𑌧𑌾𑌵𑌤𑌾 𑌮𑌨𑍁 𑌭𑍍𑌯𑌸𑌾𑌤𑍇 𑌶𑍁𑌷𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍃
[𑌥𑌿𑌵𑍀𑌚𑌿𑌦𑌦𑍍𑌰𑌿𑌵𑌃 ॥

### அங்வயம்.

हे अद्रिवः !, ते, प्रथमाय, मन्यवे, श्रद्दधामि, यत्, दस्युं, अहन्, नर्य्यँ, अपः, विवेः, यत्, उभे, रोदसी, त्वा अनुधावतां, पृथिवी चित्, ते, शुष्मात्, भ्यसाते ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अद्रिवः ! | 𑌹𑍇 𑌅𑌦𑍍𑌰𑌿𑌵𑌃 ! | வச்சிராயுதந் தாங்கிய இந்திர ! |
| ते | 𑌤𑍇 | உன்னுடைய |
| प्रथमाय | 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌯 | முக்கியமாகிய |
| मन्यवे | 𑌮𑌨𑍍𑌯𑌵𑍇 | கோபத்தின் பொருட்டு |
| श्रद्दधामि | 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌮𑌿 | அன்பு செய்கின்றேன். |
| यत् | 𑌯𑌤𑍍 | எக் கோபத்தால் |
| दस्युं | 𑌦𑌸𑍍𑌯𑍁𑌂 | இடையூறு செய்யும் அசுரனைக் |
| अहन् | 𑌅𑌹𑌨𑍍 | கொன்றனையோ, |
| नर्य्यँ | 𑌨𑌰𑍍𑌯𑌂 | அவனை முழுதுங் கொன்றுவிட்டு |
| अपः | 𑌅𑌪𑌃 | மேகத்தால் மறைக்கப்பட்ட நீரை |
| विवेः | 𑌵𑌿𑌵𑍇𑌃 | இவ் வுலகிற்குக் கொண்டுவந்து சேர்த்தனையோ, |
| यत् | 𑌯𑌤𑍍 | எப்போது (அக்கோபத்தின் பொருட்டு) |
| उभे | 𑌉𑌭𑍇 | இரண்டாகிய |

* अहन्यद्वृत्रं, † भवतो रोदसी असुरेजते, என்பன இருக்கு.

| | | |
|---|---|---|
| रोदसी | ரொ₃ஃஸீ | மண்ணும் விண்ணும் |
| त्वा असुधावतां | த்வா அஸு₂தா₄வதாம் | நின்வசமாகின்றனவோ, அக்கால் |
| पृथिवीचित् | ப்ருதி₂வீசித் | நிறைந்த வானமும் |
| ते | தே | நினது |
| शुष्मात् | ஶுஷ்மாத் | வலியினின்று |
| भ्यसाते | ப்₄யஸாதே | பயமடைகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—2. சுவேத சைலூஷி ரிஷி.

வச்சிராயுதமுடைய இந்திர! முக்கியமாகிய நினது கோபத்தின் பொருட்டு அன்பு செலுத்து (வழிபடு) கின்றேன். அல்லது, உனது பிரகாசத்தின் பொருட்டு அன்பு செலுத்துகின்றேன். எக் கோபத்தினால் கருமங்கட்கிடையூறு செய்த அசுரனைக் கொன்றனையோ, (அடியோடு தொலையுமாறு கொன்று மேகத்தால் மறைக்கப்பட்ட மழைகளை இவ் வுலகத்திற்குக் கொண்டுவந்தனையோ,) அக்கோபத்தின் பொருட்டு எனச் சேர்த்துக்கொள்க. வானுலகம், மண்ணுலகம் என்னும் இரண்டும் நின்னைப் பின் றொடர்ந்துள்ளன. அதாவது நினது அதீனமாயிருக்கின்றன என்பது பொருள். மற்றும், விரிந்த ஆகாயமும் உன்னுடைய ஆற்றலினின்றும் பயமடைகின்றது. அதாவது பயத்தால் நடுங்குகின்றது என்பதாம்.

'பிருதிவீசித்' என்பது அந்தரிக்ஷம் என நிகண்டின் 1-3-9 சூத்திரங் கூறுகின்றது. (2)

## மந்திரம் 3.

३ २३ २ ३ १ २ ३ १ २ ३२उ ३ १ २ २२ १ २

372. समेत विश्वा ओजसा पतिं दिवो य एक इद्भूरतिथिर्जनानाम् ।

२ ३ १ २२ ३ १ २३ १ २ ३ १ २२ ३ २३ २

स पूर्व्यो नूतनमाजिगीषन्तं वर्त्तनीरनुवावृत एक इत् ॥ ३ ॥

ஸமேத விஶ்வா ஓஜஸா பதிம் தி₃வோ ய ஏக இத்₃பூ₄ரதிதி₂ர்ஜ
[நாநாம் ।

ஸ பூர்வ்யோ நூதநமாஜிகீ₃ஷந்தம் வர்த்தநீரநுவாவ்ருத
[ஏக இத் ॥

அந்வயம்.

हे विश्वाः!, दिवः, ओजसा, पतिं, समेत, यः, एकः इत्, जनानां, अतिथिः, भूः, पूर्व्यः, सः, आजिगीषन्तं, नूतनं, एकः इत्, वर्त्तनीः, अनुवावृते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे विश्वाः! | ஹெ விஶ்வாः ! | சனங்களே ! நீவிர் |
| दिवः | திவः | சுவர்க்கத்திற்கு |
| ओजसा | ஓஜஸா | ஆற்றலால் |
| पतिं | பதிம் | இறைவனாகிய இந்திரனைத் |
| समेत | ஸமேத | துதிகளாலும், அவிகளாலும் இனிது அடைவீர்களாக. |
| यः | யः | எவ் விந்திரன் |
| एक इत् | ஏக இத் | ஒருவனாகவே |
| जनानां | ஜநாநாம் | வேள்வித் தலைவர்கட்கு |
| अतिथिः | அதிதிः | அதிதி (விருந்து) போல் |
| भूः | பூः | பிரியன் ஆகின்றானோ, |
| पूर्व्यः | பூர்வ்யः | பழையோனாகிய |
| सः | ஸः | அவ் விந்திரன் |
| आजिगीषन्तं | ஆஜிகீஷந்தம் | தனது பகைஞரை வெல்லும் வேட்கையுடைய |
| नूतनं | நூதநம் | இக்காலத்திய துதிப்போர்களை |
| एक इत् | ஏக இத் | ஒருவனாகவே |
| वर्त्तनीः | வர்த்தநீः | வெற்றி வழியில் |
| अनुवावृते | அநுவாவ்ருதே | நடத்துகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—3. வாமதேவ ரிஷி.

சனங்களே! நீவிர் சுவர்க்கத்திற்கு வலி மிகுந்த இறைவனாகிய இந்திரனைத் தோத்திரத்தாலேனும் அவியாலேனும் இனிது அடைவீர்களாக. இந்திரன் ஒருவனாகவே யிருந்து வேள்வித் தலைவர்கட்கு அதிதி போன்று அன்பனாகின்றான். அதாவது அநாதியாகிய அவ் விந்திரன் தனது பகைஞர்களை வெல்ல விரும்பிய இக்காலத்திய துதிப்போர்களை, தான் ஒருவனாகவே வெற்றி மார்க்கத்தில் நடாத்துகின்றான் என்பதாம். (3)

மந்திரம் 4.

३१ २ ३ २ ३१ २ ३ २ ३२ ३ १ २
373. इमे ते इन्द्र ते वयं पुरुष्टुत ये त्वारभ्य चरामसि प्रभूवसो।
२उ ३ १ २ ३ २ ३ १२ ३ १ २ ३ २ ३ १२ ३ १ २
न हि त्वदन्यो गिर्वणो गिरः सघत् क्षोणीरिव *प्रतितद्धर्य्य नो वचः॥

இருக்கு 1-57-4.

* प्रति नो हर्य तद्वचः, என்பது இருக்கு.

ஐமெ தெ ஐநூ தெ வயம் வுருஷ்டுத யெ சுவாரஹு சுராமஸி [ஹுலவெஸா !
ந ஹி சுவடிகெறா மிவணெஸா மிறஃ ஸவக்ஷ் கெஷாணீரிவ ஹுவா [தஜுயற நொ வசஃ

அந்வயம்.

हे प्रभूवसो!, पुरुष्टुत, इन्द्र!, त्वा आरभ्य, ये, चरामसि, ते इमे वयं, ते, गिर्वणः, त्वदन्यः, गिरः, न हि, सघत्, तत्, नः, वचः, क्षोणीः इव, प्रतिहर्य ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **प्रभूवसो!** | ஹுலவெஸா ! | மிகுந்த தனமுள்ளவனும் |
| **पुरुष्टुत!** | வுருஷுத ! | பலராற் றுதிக்கப்பட்டவனுமாகிய |
| **इन्द्र!** | ஐநூ ! | இந்திரனே ! |
| **त्वा आरभ्य** | சுவா ஆரஹ்ய | நின்னைப் பற்றிக்கொண்டே |
| **ये** | யெ | எத்தகைய நாங்கள் |
| **चरामसि** | சராமஸி | வேள்வியில் முயல்கின்றோமோ, |
| **ते इमे वयं** | தெ ஐமெ வயம் | அத்தகைய இந்த நாங்கள் |
| **ते** | தெ | நின்னுடையவர்களே யாகின்றோம். |
| **गिर्वणः!** | மிவணஃ ! | மந்திரத்தாற் றுதிக்கத்தக்க இந்திர ! |
| **त्वदन्यः** | சுவடந்யஃ | நின்னைத்தவிர்த்து வேறு யாரும் |
| **गिरः** | மிறஃ | துதிப்பதற்கு |
| **न हि सघत्** | ந ஹி ஸவக்ஷ் | எமக்குக் கிடைத்திலர். |
| **तत्** | தக்ஷ் | ஆதலின் |
| **नः** | நஃ | எங்களுடைய |
| **वचः** | வசஃ | தோத்திரங்களை |
| **क्षोणीः इव** | கெஷாணீஃ ஐவ | தரையானது விரும்புவதுபோல் |
| **प्रतिहर्य** | ஹுதிஹய | (நீ) ஏற்றுக்கொள்வாயாக. |

சாயண-பாடியம்.

கண்டம்—3. இருக்கு—4. சவ்ய ஆங்கிரச ரிஷி.

மிகுந்த தனமுடைய இந்திரனே! இதனுனே அநேக வேள்வித் தலைவர்களால் துதிக்கப்பட்டோய்! எத்தகைய நாங்கள், நின்னைப்பற்றுக் கோடாகக்கொண்டு வேள்வியிற் பிரவிருத்திக்கின்றோமோ, அத்தகைய நாங்

கள் அத்தன்மையானே நின்னுடையவர்களேயாகின்றோம். தோத்திரத்தாற் போற்றத்தக்க இந்திர! நின்னை யொழிந்து துதி செய்ய வேறு யாரும் எமக்குக் கிடைத்திலர். இதனால் நீ எங்களுடைய தோத்திரமாகிய வாக்குகளை, தரையானது தன்னுடைய உயிர்வர்க்கங்களை விரும்புமாறு விரும்புவாயாக என்பதாம். (4)

### மந்திரம் 5.

३ १२ ३१२ ३ ३ २ ३१२ ३२ २र

374. चर्षणीधृतं मघवानमुक्थ्या३मिन्द्रं गिरो बृहतीरभ्यनूषत ।

२ १२ ३१ २३ २ ३१२ ३ १२ ३१ २

वावृधानं पुरुहूतꣳ सुवृक्तिभिरमर्त्यं जरमाणं दिवे दिवे ॥ ५ ॥

இருக்கு 3-51-1.

சர்ஷணீத்ருதம் மகவாநமுக்த்யா3மிந்த்ரம் கிரோ ப்ருஹதீரப்யநூஷத ।

வாவ்ருதாநம் புருஹூதꣳ ஸுவ்ருக்திபிரமர்த்யம் ஜரமாணம் திவே திவே ॥

### அந்வயம்.

चर्षणीधृतं, मघवानं, उक्थ्यं, वावृधानं, पुरुहूतं, अमर्त्यं, सुवृक्तिभिः, दिवे दिवे जरमाणं, इन्द्रं, बृहतीः, गिरः, अभ्यनूषत ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| चर्षणीधृतं | சர்ஷணீத்ருதம் | விரும்பிய பயனையளித்துக் காப்பாற்றுபவனும் |
| मघवानं | மகவாநம் | அன்னத்தை, அல்லது, வெள்ளியை யுடையோனும் |
| उक्थ्यं | உக்த்யம் | புகழுக் குரியானும் |
| वावृधानं | வாவ்ருதாநம் | வலி, பொருள் முதலியவைகளால் வளர்பவனும் |
| पुरुहूतं | புருஹூதம் | பல்லோரால் அழைக்கப்படுபவனும் |
| अमर्त्यं | அமர்த்யம் | இறப்பிலாதோனும் |
| सुवृक्तिभिः | ஸுவ்ருக்திபிஃ | அழகிய துதிகளால் |
| दिवे दिवे जरमाणं | திவே திவே ஜரமாணம் | நாடோறுந் துதிக்கப்பட்டவனுமாகிய |

| | | |
|---|---|---|
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| बृहतीः | ப்ருஹதீ: | பிருகதியான |
| गिरः | கிர: | எனது துதி வாக்குகள் |
| अभ्यनूषत | அப்யநூஷத | பலவகையாலும் துதிப்பனவாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—5. விசுவாமித்திரர் துதிக்கின்றார்.

விரும்பிய பயனைக் கொடுத்தலால் மனிதர்களைக் காப்பாற்றுவோனும், ஆற்றலை யுடையவனும், தனம், வேள்விகளை யுடையவனும், மந்திரங்களாற் றுதிக்கத்தக்கோனும், வலியாலும், தனம் முதலிய சம்பத்துக்களாலும், ஒவ்வொரு கணத்திலும் விருத்தியாகுவோனும், அநேக துதியாளர்களால் அழைக்கப்படுவோனும், இறப்பிலாதோனும், அழகிய தோத்திர வாசகங்களால் ஒவ்வொரு நாளும் போற்றத்தக்கோனுமாகிய அத்தகைய இந்திரனைப் பலவாற்றானும் எமது தோத்திரமாகிய விரிந்துள்ள வாக்குகள் அனைத்தும் துதிப்பனவாகுக. (5)

மந்திரம் 6.

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ ३ ३ १ २

375. अच्छा व इन्द्रं मतयः स्वर्युवः सध्रीचीर्विश्वा उशतीरनूषत ।

१२ ३ १ २ ३ २ ३ २ ३ २ ३ २ ३ २ ३ १ २ ३ १ २

*परिष्वजन्त जनयो यथा पतिं मर्यं न शुन्ध्युं मघवानमूतये ॥६॥

இருக்கு 10-43-1.

அச்சா வ இந்த்ரம் மதய: ஸ்வர்யுவ: ஸத்ரீசீர்விச்வா உசதீரநூஷத ।
பரிஷ்வஜந்த ஜநயோ யதா பதிம் மர்யம் ந சுந்த்யும் மகவாந [மூதயே ॥

அந்வயம்.

जनयः, यथा, मर्यं पतिं, न, शुन्ध्युं, मघवानं, ऊतये, परिष्वजन्त, वः, स्वर्युवः, सध्रीचीः, विश्वाः, उशतीः, मतयः, इन्द्रं, अच्छानूषत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| जनयः | ஜநய: | மனைவியானவள் |
| यथा | யதா | எவ்வாறு |
| मर्यं पतिं | மர்யம் பதிம் | கொழுநனாகிய ஒருவனையும், |
| न | ந | மற்றும். |

* परिष्वजते, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| शुन्ध्युं | ஶுந்த்யும் | சுத்தனாகிய |
| मघवानं | மகவாநம் | தன்முடையானையும் |
| ऊतये | ஊதயே | தனது பாதுகாப்பின் பொருட்டு |
| परिष्वजन्त | பரிஷ்வஜந்த | கட்டியணைத்துக்கொள்கின்றுளோ, அஃதொப்ப |
| स्वर्युवः | ஸ்வர்யுவ: | சுவர்க்கத்தோடு சேர்க்கின்றவைகளும் |
| सध्रीचीः | ஸத்ரீசீ: | (தம்முள்) கூடினவைகளும் |
| विश्वाः | விஶ்வா: | நிறைவானவைகளும் |
| उशतीः | உஶதீ: | விரும்பியவைகளுமான |
| वः | வ: | உங்களுடைய |
| मतयः | மதய: | தோத்திரங்கள் |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை |
| अच्छानूषत | அச்சாநூஷத | நாற்புறத்தும் அணைந்துகொள்கின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—6. கிருஷ்ண ஆங்கிரச ரிஷி.

சுவர்க்கத்தோடு சேரவைப்பவைகளும், (தம்முள்) கூடினவைகளும், வியாபகமானவைகளும், விரும்புபவைகளுமான தோத்திரங்கள், இந்திரனாகிய ஈசுரனைச் சூழ்ந்துகொள்கின்றன. அன்றியும், மனைவியானவள் கொழுநனாகிய மனிதனையும், மற்றும், தோடமற்ற தனமுடையோனையும், தமது பாதுகாப்பின் பொருட்டு அணைத்துக் கொள்கின்றுளோ, அதுபோல, இந்திரனை எனது துதிகள் சூழ்ந்து அணைத்துக் கொள்கின்றன என்பதாம். (6)

## மந்திரம் 7.

१ २उ ३१ २ १२ ३ २ ३१ २ ३ १ २ ३ १ २ ३२

376. अभि त्यं मेषं पुरुहूतमृग्मियमिन्द्रं गीर्भिर्मदता वस्वो अर्णवम् ।

२ ३ २ ३ २ ३ १२ ३ १ २ ३ १ २र ३ १ २र

यस्य द्यावो न विचरन्ति मानुषं भुजे मंहिष्ठमभि विप्रमर्चत ॥

இருக்கு 3-53-1.

அபி த்யம் மேஷம் புருஹூதம்ருக்மியமிந்த்ரம் கீர்பிர்மததா வஸ்வோ [அர்ணவம் ।

யஸ்ய த்யாவோ ந விசரந்தி மாநுஷம் புஜே மம்ஹிஷ்டமபி விப்ர [மர்சத ॥

அந்வயம்.

त्यं, मेषं, पुरुहूतं, ऋग्मियं, वस्वः अर्णवं, इन्द्रं, गीर्भिः, अभिमदत, यस्य, मानुषं, द्यावः, न, विचरन्ति, भुजे, मंहिष्ठं, विप्रं, अभ्यर्चत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| त्यं | த்யம் | கீர்த்தி பெற்றவனும், |
| मेषं | மேஷம் | சத்துருக்களோடு வைரமுடையானும் |
| पुरुहूतं | புருஹூதம் | பலராலழைக்கப்பட்டவனும் |
| ऋग्मियं | ருக்மியம் | மனிறமந்திரங்களால் துதிக்கப்பட்டு |
| वस्वः अर्णवं | வஸ்வஃ அர்ணவம் | தனத்துக்குச் சமுத்திரமாகி |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனை, நீவிர் |
| गीर्भिः | கீர்பிஃ | துதிகளால் |
| अभिमदत | அபிமதத | ஒருமையோடு களிப்படையச் செய்வீர்களாக. |
| यस्य | யஸ்ய | எவ் விந்திரனுக்கு |
| मानुषं | மாநுஷம் | மனிதர்களது இனிய கருமங்கள் |
| द्यावः न | த்யாவஃ ந | யாவர்கட்கும் இனிதாகிய இரவியின் கிரணம்போன்று |
| विचरन्ति | விசரந்தி | விசேடமாய் இருக்கின்றனவோ, |
| भुजे | புஜே | போகத்தின் பொருட்டு |
| मंहिष्ठं | மம்ஹிஷ்டம் | விருத்தியடைபவனும் |
| विप्रं | விப்ரம் | நுண்ணறிவோனுமாகிய அவ் விந்திரனைப் |
| अभ्यर्चत | அப்யர்சத | பூசிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—7. சக்கிய ரிஷி.

புகழுடையவனும், சத்துருக்களோடு வைரமுடையானும், அல்லது (மேஷம், என மூலத்திய சொல்லிருத்தலின்) கண்ணுவருடைய புத்திரன் மேதாதிதி என்னும் வேள்வித்தலைவனைக் குறித்து இந்திரன் ஆடாகவந்து அவருடைய சோமரசத்தை யருந்தினன். அதுபற்றி இந்திரனை ஆடு எனச் சொல்லினன், அது கொண்டு இப்போதும் இந்திரன் ஆடு எனப்படுகின்றான். "மேதாதிதி மேஷம்" என சுப்பிரமணிய மந்திரத்தின் ஒரு பாகத்திற்

நள்ள உரையாகிய பிராமணமுங் (மறையின் ஒரு பாகமுங்) கூறுகின்றது. அதாவது மேதாதிதியாகிய கண்ணுவரை இந்திரன் ஆடாக வடைந்து சோமரசத்தை யருந்தினன் என்பதாம். அநேக வேள்வித் தலைவர்களால் அழைக்கப்படுவோனும், மறையோத்துக்களால் துதிக்கப்படுவோனும், அல்லது, மறை மந்திரங்களால் உணரப்படுவோனும், தனங்களுக்கொரு நிலைக்களனும், என்னும் இத்தன்மைய குணங்களோடு கூடிய இந்திரனை, துதிப்போர்களே! நீவிர் தோத்திரங்களால் ஒருமை யடையச் செய்து களிப்புறுவீர்களாக. மக்கட்கெல்லாம் எவ் விந்திரனுடைய இனிமையானவைப்பாக இருக்கின்றனவோ, (அவ்விந்திரனை எனக் கூட்டுக,) ...கள் யாவர்கட்கும் இனிமையாவன போன்றெனல், (இந்திரனுடைய கருமங்கள் அனைவர்கட்கும் இனிய ...ாகத்தின் பொருட்டு வியப்பாக விருத்தியாகு ...டையானுமாகிய இந்திரனை நன்கு ஆராதிப்பீர்க (7)

## மந்திரம் 8.

२३ ३१२ ३१२ ३१ २२ ३१२ ३१ २२
377. त्यꣳ सु मेषं महया स्वर्विदꣳ शतं यस्य सुभुवः साकमीरते ।
२ ३ २२ ३२३ २३१२ ३१२ ३१२
अत्यं न वाजꣳ हवनस्यदꣳ रथमेन्द्रं ववृत्यामवसे सुवृक्तिभिः॥८॥

இருக்கு 1-52-1.

த்யம் ஸு மேஷம் மஹயா ஸ்வர்விதம் ஶதம் யஸ்ய ஸுபுவஃ ஸாகமீரதே ।

அத்யம் ந வாஜம் ஹவநஸ்யதம் ரதமேந்த்ரம் வவ்ருத்யாமவஸே ஸுவ்ருக்திபிஃ ॥

அந்வயம்.

यस्य, सुभुवः, साकं, ईरते, मेषं, स्वर्विदं, रथं, अत्यं वाजं न, हवनस्यदं, त्यं, इन्द्रं, अवसे, सुवृक्तिभिः, सुमहय, शतं, आववृत्याम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यस्य | யஸ்ய | எவனுக்கு |
| सुभुवः साकं | ஸுபுவஃ ஸாகம் | நன்கு வெளிப்பட்டுக் |
| ईरते | ஈரதே | கிடைக்கின்றனவோ அவனுடைய சத்துருக்களிடத்துப் |
| मेषं | மேஷம் | பகையுடையவனும் |

| | | |
|---|---|---|
| स्वर्विदं | ஸ்வவிதும் | { தனத்தை, வானை அல்லது, அடை |
| रथं | ரதம் | { இரதத்தைப்போல் இடத்திற் சேர்ப் |
| अत्यं वाजं न | அத்யம் வாஜம் ந | செல்லப்பழகிய குதி |
| हवनस्यदं | ஹவநஸ்யதும் | { வேள்வியின்பால் வி வோனுமாகிய |
| त्यं इन्द्रं | த்யம் இந்த்ரம் | அவ் விந்திரனை, |
| अवसे | அவஸே | எம்மைப் பாதுகாத்தற் |
| सुवृक्तिभिः | ஸுவ்ருக்திபி: | அரிய தோத்திரங்களால் |
| सुमहये | ஸுமஹய | பூசிப்பாயாக. |
| शतं | ஶதம் | நூறு முறை |
| आववृत्यां | ஆவவ்ருத்யாம் | வலம் வருகின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—8. சக்கிய ரிஷி.

புகழ்பெற்ற சத்துருக்களோடு வைரமுள்ளவனும், சூரியனை, அல்லது, சுவர்க்கத்தை அறிந்தவனும், அல்லது, அடைந்தோனும், அல்லது, தனத்தையடைவிப்போனுமாகிய இந்திரனை, வேட்போய்! நீ இனிது ஆராதிப்பாயாக. எத்தன்மைய இந்திரனை யெனின், இரதம்போல் விரும்பிய இடத்திற் சேர்ப்போனை, மற்றும், அழைப்பதை முன்னிட்டு, அல்லது, வேள்வியைக் குறித்து விரைவிற் செல்வோனை. அங்ஙனஞ் செல்வதிலுவமை :— செல்வதற்குப் பழகிய குதிரை போன்றெனல். எவ் விந்திரனுக்கு யான் நூறு முறை சுற்றுகின்றேனோ, (வலம் வருகின்றேனோ,) அத்தன்மைய இந்திரனைப் பூசிப்பாயாக என முடித்துக்கொள்க. (8)

## மந்திரம் 9.

३१२ ३ १२ ३ २ ३ २ ३ १ २३ १२ ३१२
378. घृतवती भुवनानामभिश्रियोर्वी पृथ्वी मधुदुघे सुपेशसा ।
१२ ३ १२र ३ १२३ १२ ३२३ १२
द्यावापृथिवी वरुणस्य धर्मणा विष्कभिते अजरे भूरि रेतसा ॥ ९ ॥

இருக்கு 6-70-1.

க்ருதவதீ புவநாநாமபிஶ்ரியோர்வீ ப்ருத்வீ மதுதுகே ஸுபேஶஸா [ஸுபேஶஸா ।

த்யாவாப்ருதிவீ வருணஸ்ய தர்மணா விஷ்கபிதே அஜரே பூரி [ரேதஸா ॥

அந்வயம்.

थवी, घृतवती, भुवनानां, अभिश्रिये, उर्वी, पृथ्वी, मधुदुघे,
पेशसा, वरुणस्य, धर्मणा, विष्कभिते, अजरे, भूरि रेतसा ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| | த்யாவாப்ருதிவீ | வானுலக மண்ணுலகங்கள் |
| | க்ருதவதீ | நீரையுடையன. (அவை) |
| | புவநாநாம் | பிராணிகட்கு |
| | அபிஶ்ரியே | ஆசிரயிக்கத்தக்கனவாம். |
| वी | உர்வீ ப்ருத்வீ | காரியங்களாக விரிந்தவைகளும் |
| दुघे | மதுதுகே | நீரைத் தருபவைகளும். |
| सुपेशसा | ஸுபேஶஸா | அழகிய வடிவுடையவைகளுமான அவைகள் |
| वरुणस्य | வருணஸ்ய | வருண தேவதையினுடைய வலியைத் |
| धर्मणा | தர்மணா | தாங்குதலினாலே |
| विष्कभिते | விஷ்கபிதே | நிலைத்தவைகளும் |
| अजरे | அஜரே | நித்தியங்களுமான |
| भूरि रेतसा | பூரி ரேதஸா | அநேகம் விதைகளையுடையன. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. பாரத்துவாச ரிஷி.

வானுலகு மண்ணுலகுகள் இரண்டும் நீரை யுடையன. அவைகள் பூதங்கட்குப் பற்றுக்கோடாகின்றன என்பது எல்லா வகையானு முணரப் பாலது. மற்றும், விரிவையுடையன, காரிய வடிவமாய்ப் பரந்துள்ளன, நீரைத் தருவன, அழகிய வடிவத்தையுடையனவுமாம். அவைகள் இத் தரையில் எல்லாவற்றையுஞ் செலுத்துகின்ற வருணனுடைய எல்லாம் வல்ல வேறோர் ஆற்றலாகிய தருமத்தை (தன்மையை)த் தாங்கிய விடத்தில் கெடாத நிலைத்த அநேக காரியங்களை யுண்டாக்குகின்றன என்பதாம். (9)

## மந்திரம் 10.

३ १ २र ३ १२ ३ २ ३ १ २
379. उभे यदिन्द्र रोदसी आपप्राथोषा इव
३ १ २ ३१ २ ३ १ २ ३ २
महान्तं त्वा महीनाꣳ सम्राजं चर्षणीनाम् ।
३ १ २र ३ १ २र
देवी जनित्र्यजीजनद्भद्रा जनित्र्यजीजनत् ॥ १० ॥

இருக்கு 10-13-4.

உபே யதிந்த்ர ரோதஸீ ஆபப்ராதோஷா இவ
மஹாந்தம் த்வா மஹீநாம் ஸம்ராஜம் சர்ஷணீநாம் ।
தேவீ ஜநித்ர்யஜீஜநத் பத்ரா ஜநித்ர்யஜீஜநத் ॥

அந்வயம்.

हे इन्द्र !, उभे रोदसी, उषा इव, यत्, आपप्राथ, महीनां, महान्तं, चर्षणीनां, सम्राजं, इन्द्रं, त्वा, देवी जनित्री, अजीजनत्, अजीजनत्, भद्रा, जनित्री ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| उभे रोदसी | உபே ரோதஸீ | வானுலகு மண்ணுலகு இரண்டினையும் |
| उषा इव | உஷா இவ | உஷாதேவதை தனதொளியால் உலகனைத்தையும் பூரணமாக்கல் போல், |
| यत् | யத் | எந்த நீ |
| आपप्राथ | ஆபப்ராத | தனது பிரகாசத்தால் நிறையப் பண்ணுகின்றனையோ, |
| महीनां | மஹீநாம் | தேவதைகட்குப் |
| महान्तं | மஹாந்தம் | பெரியோனும் |
| चर्षणीनां | சர்ஷணீநாம் | மனிதர்களுக்கு |
| सम्राजं | ஸம்ராஜம் | இறைவனுமாகிய |
| इन्द्रं | இந்த்ரம் | இந்திரனென்னும் |
| त्वा | த்வா | (அத்தன்மைய) நின்னை |
| देवी जनित्री | தேவீ ஜநித்ரீ | தேவர்கட் கன்னையாகிய அதிதி தேவியார் |
| अजीजनत् | அஜீஜநத் | பெற்றனர். |
| अजीजनत् | அஜீஜநத் | அத்தன்மைய புதல்வனைப் பெற்ற காரணத்தால் (அவர்) |
| भद्रा | பத்ரா | சிறந்த |
| जनित्री | ஜநித்ரீ | அன்னையாராவார். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—10. மேதாதிதி ரிஷி, மகாபந்திச்சந்தம்.

இந்திரனே! உஷா தேவதை தனது ஒளியால் உலகனைத்தையும் நிறையச் செய்வதுபோல எந்த நீ வானையும் மண்ணையும் தனது பிரகாசத்தால்

நிறைக்கின்றனையோ! அத்தகைய தேவர்கட்குத் தேவனும், மனிதர்கட்கெல்லாம் இறைவனுமாகின்ற இந்திரனென்னும் நின்னைப்பெற்ற, தேவர்கட்கு அன்னையாராகிய அதிதி தேவியார் இத்தன்மைய நின்னைப்பெற்ற காரணத்தாற் பெருங்கீர்த்தி யுடையவராயினர் என்பதாம். (10)

## மந்திரம் 11.

२ ३ १ २ ३ १२ ३ २ ३ २ ३ १ २ ३१२ ३ १ २
380. प्र मन्दिने पितुमदर्चता वचो यः कृष्णगर्भा निरहन्नृजिश्वना ।
३ २ ३ १२ ३ १ २ ३ १ २ ३ १२
अवस्यवो वृषणं वज्रदक्षिणं मरुत्वन्तꣳ सख्याय *हुवेमहि ॥ ११ ॥

இருக்கு 8-69-1.

ப்ர மந்தி3நே பிதுமத3ர்சதா வசோ ய: க்ருஷ்ணக3ர்பா4 நிரஹந்ந்ரு
[ஜிஶ்வநா ।
அவஸ்யவோ வ்ருஷணம் வஜ்ரத3க்ஷிணம் மருத்வந்தம் ஸக்2யாய
[ஹுவேமஹி ॥

அந்வயம்.

(हे ऋत्विजः !,) यः, ऋजिश्वना, कृष्णगर्भाः, निरहन् , मन्दिने, पितुमत् , वचः, प्रार्चत, वृषणं, वज्रदक्षिणं, मरुत्वन्तं, अवस्यवः, सख्याय, हुवेमहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः !) | (ஹே ருத்விஜ: !) | (வேட்போர்காள்! நீவிர்) |
| यः | ய: | எவ்விந்திரன் |
| ऋजिश्वना | ருஜிஶ்வநா | இருசுவி, என்னும் ரிஷியுடன் |
| कृष्णगर्भाः | க்ருஷ்ணக3ர்பா4: | கிருஷ்ணன், என்னும் அசுரனது கருப்பிணி மங்கையையும் |
| निरहन् | நிரஹந் | கொன்றனனோ, |
| मन्दिने | மந்தி3நே | துதித்தற்குரிய அவ் விந்திரன் பொருட்டு |
| पितुमत् | பிதுமத் | அவியாகிய அன்னத்தோடுகூடிய |
| वचः | வச: | துதியை |

---

* हवामहे, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| प्रार्चत | ப்ராஅர்சத | முழக்கமாய்ச் சொல்வீர்களாக. |
| वृषणं | வ்ருஷணம் | விரும்பியதைப் பொழிகின்றவனும் |
| वज्रदक्षिणं | வஜ்ரதக்ஷிணம் | வலக்கையில் வச்சிராயுதந் தாங்கியவனுமாகிய |
| मरुत्वन्तं | மருத்வந்தம் | இந்திரனை |
| अवस्यवः | அவஸ்யவஃ | காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்னு மிச்சையுடைய யாங்கள் |
| सख्याय | ஸக்யாய | நண்பன்போல உதவிபுரியுமாறு |
| हुवेमहि | ஹுவேமஹி | அழைக்கின்றோம். |

## சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—11. இம்மந்திரம் கருப்பசிராவிணி யுபநிடதம்.

வேட்போர்களே! நீவிர் தோத்திரஞ் செய்யத்தக்க இந்திரன் பொருட்டு அவிகளென்னும் அன்னங்களோடுகூடிய துதியாகிய வாக்கை முழக்கமாய்ச் சொல்வீர்களாக. யாதொரு இந்திரன் இருசிவி என்னும்இராசரிஷியாகிய நண்பரோடு கூடியவனாய், கிருஷ்ணன் என்னும் ஒரு அசுரனது மனைவியைக் கொன்றனனோ, அவன் பொருட்டென்க. அதாவது கிருஷ்ணன் என்னுமசுரனையும், அவனுக்குப் புதல்வன் உதியாவண்ணம், கருப்பங்கொண்ட அவனுடைய மனையாளையும் இந்திரன் கொன்றனன் என்பதாம். அவ்விந்திரன் பொருட்டு துதிவாக்கை முழங்குவீர்களாக என மேற்கூட்டுக. தம்மைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்னு மிச்சையுடைய நாங்கள் வேண்டியதை மழைபோற் பெய்கின்றவனும், வலக்கையில் வச்சிரங்கொண்டவனுமாகிய இந்திரனை நண்பன்போன்று உதவிபுரியுமாறு அழைக்கின்றோம். (11)

## மூன்றாவது கண்டம்

முற்றும்.

-----

## நான்காவது கண்டம்.

---

### பிரபாடகம்—4. அத்தியாயம்—1. கண்டம்—4.

பத்து மந்திரங்களாலானது.

---

#### மந்திரம் 1.

१२ ३२३ १२३ १२ २उ ३क

381. इन्द्र सुतेषु सोमेषु क्रतुं पुनीष उक्थ्यम् ।

३ २ ३२३ १२ ३२

विदे वृधस्य *दक्षस्य महाꣳहि षः ॥ १ ॥

இந்த்³ர ஸுதேஷு ஸோமேஷு க்ரதும் புநீஷ உக்த்²யம் |
விதே³ வ்ருத⁴ஸ்ய த³க்ஷஸ்ய மஹாꣳஹி ஷ꞉ ||

அந்வயம்.

हे इन्द्र!, सोमेषु सुतेषु, वृधस्य, दक्षस्य, विदे, क्रतुं, उक्थ्यं, पुनीषे, सः, महान् हि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹே இந்த்³ர! | இந்திரனே! நீ |
| सोमेषु सुतेषु | ஸோமேஷு ஸுதேஷு | சோமரசம் பிழிந்தெடுத்த விடத்து (அதை யருந்திக் கொண்டு) |
| वृधस्य | வ்ருத⁴ஸ்ய | பெருகச் செய்கின்ற |
| दक्षस्य | த³க்ஷஸ்ய | ஆற்றலின் |
| विदे | விதே³ | இலாபத்தின் பொருட்டு, |
| क्रतुं | க்ரதும் | கருமம்பண்ணுவோனையும் |
| उक्थ्यं | உக்த்²யம் | துதிப்போனையும் |
| पुनीषे | புநீஷே | பவித்திரஞ் செய்கின்றாய். |
| सः | ஸ꞉ | இந்திர! அத்தகைய நீ |
| महान् हि | மஹாந் ஹி | உண்மையாகப் பெரியோனே யாகின்றாய். |

---

* दर्शं सा महान् हि सः, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

இம் மந்திரத்திலிருந்து 18-மந்திரங்கட்கு இந்திரன்—தேவதை. இடையில் சில மந்திரத்திற்கு மருத்துக்கள்—தேவதைகள். 17-மந்திரங்கட்கு உஷ்ணிக் சந்தம். சிலவற்றிற்கு விராட் சந்தம், சிலவற்றிற்கு ககுப் சந்தம். சுரம், ரிஷபம்.

கண்டம்—4. இருக்கு—1. நாரத ரிஷி.

இந்திரனே! நீ சோமரசம் பிழிந்தெடுத்தவிடத்து அதை யருந்திக் கொண்டு வேள்விக்கருமஞ் செய்வோனையும், துதிப்போனையும், பரிசுத்தஞ் செய்கின்றாய். அல்லது, சோமரசம் பிழிந்தவிடத்து வேள்வியையும், தோத்திரத்தையும், வேள்வித் தலைவர்களாற் பவித்திரமாக்குவிப்பாயாக. எதன்பொருட்டெனின்? விருத்தி செய்யும் ஆற்றலின் இலாபத்தின் பொருட்டு. இத்தன்மைத்தாகிய அவ்விந்திரன் மிகப் பெரியோன். இதனால் உண்மையில் இவ்வாறு செய்ய வல்லான் என்பது கருத்து. (1)

## மந்திரம் 2.

१२ ३ १ २र ३१ ३ ३२

382. तमु अभि प्रगायत पुरुहूतं पुरुष्टुतम् ।

१ २ ३ १ २ ३ १ २र

इन्द्रं गीर्भिस्तविषमा विवासत ॥ २ ॥

இருக்கு 8-15-1.

தமு அபி ப்ரகாயத புருஹூதம் புருஷ்டுதம் |
இந்த்ரம் கீர்பிஸ்தவிஷமா விவாஸத ||

அந்வயம்.

(हे स्तोतारः!,) पुरुहूतं, पुरुष्टुतं, तमु इन्द्रं, अभि प्रगायत, तविषं, गीर्भिः, आविवासत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे स्तोतारः!) | (ஹே ஸ்தோதாரঃ!) | துதிப்போர்காள்! நீவிர் |
| पुरुहूतं | புருஹூதம் | பல்லோர்களாலழைக்கப் பெற்றோனும் |
| पुरुष्टुतं | புருஷ்டுதம் | அநேகர்களாலாராதிக்கப் பட்டோனுமாகிய |
| तमु इन्द्रं | தமு இந்த்ரம் | அவ்விந்திரனை |
| अभि प्रगायत | அபி ப்ரகாயத | ஒருமுகப்பட்டுத் துதிப்பீர்களாக. (மற்றும்) |
| तविषं | தவிஷம் | மிகப் பெரியோனாகிய இந்திரனை |
| गीर्भिः | கீர்பிঃ | மந்திர தோத்திரங்களால் |
| आविवासत | ஆவிவாஸத | ஆராதிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—2. கோசூக்தி யசுவ சூத்திகள் ரிஷிகள்.

துதிப்போர்களே! நீவிர் பல்லோரா லழைக்கப்பட்டோனும், அநேகர்களா லாராதிக்கப்பட்டோனுமாகிய அவ்விந்திரனை, ஒருமுகப்பட்டு இனிது துதிப்பீர்களாக. இதுவே விரித்துக் கூறப்படுகின்றது. அத்தன்மைய மிகப் பெரியோனாகிய இந்திரனை வாக்குகளால் வழிபடுவீர்களாக என்பதாம். (2)

மந்திரம் 3.

२ ३ १ २ ३ १२ ३१ २ ३ २
383. तं ते मदं गृणीमसि वृषणं * पृक्षु सासहिम् ।
३ १२ ३ १ २
उ लोककृत्नुमद्रिवो हरिश्रियम् ॥ ३ ॥

இருக்கு 8-15-4.

தம் தெ மதம் க்ருணீமஸி வ்ருஷணம் வ்ருக்ஷு ஸாஸஹிம்
உ லொககருத்நுமத்ரிவொ ஹரிச்ரியம் ॥

அந்வயம்.

हे अद्रिवः!, वृषणं, पृक्षु, सासहिं, लोककृत्नुं, उ, हरिश्रियं, मदं, ते, तं, गृणीमसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अद्रिवः! | ஹெ அத்ரிவः! | வச்சிராயுதமேந்திய இந்திர! |
| वृषणं | வ்ருஷணம் | மனவிருப்பை நிறைவாக்குவதும் |
| पृक्षु | வ்ருக்ஷு | பகைவருடைய போர்களில் |
| सासहिं | ஸாஸஹிம் | சத்துருவை யடக்குவதும் |
| लोककृत्नुं | லொககருத்நும் | உலகிற்கு இறையும் |
| उ | உ | மற்றும் |
| हरिश्रियं | ஹரிச்ரியம் | அரி யென்னுங் குதிரையால் வழிபடத்தக்கதும் |
| मदं | மதம் | சோமரசத்தை யருந்தியதாலுண்டாகியதுமாகிய |
| ते | தெ | உன்னுடைய |
| तं | தம் | அந்தக் களிப்பைப் |
| गृणीमसि | க்ருணீமஸி | புகழ்கின்றோம். |

* பூக்ஷு, என்பது இருக்கு.

### சாயண பாடியம்.

கண்டம்—4.　இருக்கு—3.　கோசூக்தி அசுவசூக்தி ரிஷிகள்.

வச்சிராயுதமேந்திய இந்திர ! மனோவேட்கையை மழைபோற் பொழிவதும், பகைஞர்களின் போரில் சத்துருக்களைத் தாழ்த்துவதும், உலகத்திற்கு இறையாவதும், இன்னும் அரியென்னுங் குதிரையாற் சேவிக்கப் படுவதும், சோமரசம் அருந்தியதாலுண்டாயதுமாகிய உன்னுடைய அக் களிப்பைப் புகழ்கின்றேன் என்பதாம். (3)

### மந்திரம் 4.

१ २र　३ १ २ ३ १ २　३ २ ३ २

384.　**यत्सोममिन्द्र विष्णवि यद्वा घ त्रित आप्त्ये ।**

१ २ ३२ ३ १ २ ३ १　२र

**यद्वा मरुत्सु मन्दसे समिन्दुभिः ॥ ४ ॥**

இருக்கு 8-11-16.

யத்ஸோமமிந்த்ர விஷ்ணவி யத்வா வ த்ரித ஆப்த்யே ।
யத்வா மருத்ஸு மந்த்ஸே ஸமிந்துபி: ॥

### அந்வயம்.

**हे इन्द्र !, विष्णवि, यत्, सोमं, यद्वा, आप्त्ये त्रिते, यद्वा, मरुत्सु, मन्दसे, समिन्दुभिः ॥**

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | ஹே இந்த்ர ! | இந்திரனே ! நீ |
| **विष्णवि** | விஷ்ணவி | விஷ்ணு சோமரசமருந்த வந்த விடத்து (பிறருடைய வேள்வியில்) |
| **यत्** | யத் | எப்போதும் |
| **सोमं** | ஸோமம் | சோமரசம் அருந்துகின்றாய். |
| **यद्वा** | யத்வா | அல்லது (மற்றும்) எக்காலும் |
| **आप्त्ये त्रिते** | ஆப்த்யே த்ரிதே | ஆத்த புத்திரனாகிய திரிதனுடைய வேள்வியில் சோமரசம் அருந்துகின்றாய். |
| **यद्वा** | யத்வா | அல்லது (எப்போதும்) |

| | | |
|---|---|---|
| मरुत्सु | 𑌮𑌰𑍁𑌤𑍍𑌸𑍁 | பிறருடைய வேள்வியில் மருத்துக்கள் சோமரசமருந்த வந்தவிடத்து மருத்துக்களோடுஞ் |
| मन्दसे | 𑌮𑌨𑍍𑌦𑌸𑍇 | சோமரசம் அருந்திக் களிக்கின்றாய். (அங்ஙனமாயினும்) |
| समिन्दुभिः | 𑌸𑌮𑌿𑌨𑍍𑌦𑍁𑌭𑌿𑌃 | மேம்பட்ட எனது சோமரசத்தாலுங் களிப்படைவாயாக. |

## சாயண பாடியம்

கண்டம்—4. இருக்கு—4. பருவத ரிஷி.

இந்திரனே! நீ விஷ்ணு சோமரசம் அருந்த வந்தவிடத்து பிறருடைய வேள்வியில் அவ்விஷ்ணுவோடு சோமரசம் அருந்தினை யென்றாலும், அல்லது, ஆப்தனின் புத்திரனாகிய திரிதன், என்னும் இராச ரிஷியாகிய வேள்வித் தலைவனோடு சோமரசம் அருந்தினையென்றாலும், அல்லது, மருத்துக்கள் சோமரசம் அருந்த வந்தவிடத்து (அவர்களுடன்) பிறர் வேள்வியிற் சோமரசம் அருந்திக் களிப்படைந்தனை யென்றாலும், சிறந்த எனது சோமரசத்தாலும் மிகக் களிப்படைவாயாக என்பதாம். (4)

## மந்திரம் 5.

२३ १ २३ १ २ ३ १ २ ३ १ २

385. एदु *मधोर्मदिन्तरꣳ सिञ्चाध्वर्यो अन्धसः ।

२उ ३ १ २र ३ १२

एवा हि वीर स्तवते सदावृधः ॥ ५ ॥

𑌏𑌦𑍁 𑌮𑌧𑍋𑌰𑍍𑌮𑌦𑌿𑌨𑍍𑌤𑌰𑌂 𑌸𑌿𑌞𑍍𑌚𑌾𑌧𑍍𑌵𑌰𑍍𑌯𑍋 𑌅𑌨𑍍𑌧𑌸𑌃 ।
𑌏𑌵𑌾 𑌹𑌿 𑌵𑍀𑌰 𑌸𑍍𑌤𑌵𑌤𑍇 𑌸𑌦𑌾𑌵𑍃𑌧𑌃 ॥

### அந்வயம்.

हे अध्वर्यो !, मधोः, अन्धसः, मदिन्तरं इत् , आसिञ्च, वीरः, सदावृधः एव, स्तवते हि ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अध्वर्यो ! | 𑌹𑍇 𑌅𑌧𑍍𑌵𑌰𑍍𑌯𑍋 ! | வேட்போர்களே! நீவிர் |
| मधोः | 𑌮𑌧𑍋𑌃 | களிப்பைச் செய்யுஞ் |
| अन्धसः | 𑌅𑌨𑍍𑌧𑌸𑌃 | சோமக் கொடியின் |

* मध्वो, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| मदिन्तरं इत् | மதிந்தரம் இத் | பெருங் களிப்பையே யுண்டாக்கும் ரசத்தை |
| आसिञ्च | ஆஸிஞ்ச | இந்திரன் பொருட்டுப் பிழிவீர்களாக. |
| वीरः | வீர: | வல்லுநனும் |
| सदावृधः एव | ஸதாவ்ருத: ஏவ | எப்போதும் அவிகளால் வளரத்தக்கவனுமாகிய இந்திரனென்றுவனே |
| स्तवते हि | ஸ்தவதே ஹி | தோத்திரங்களாற் றுதிக்கப்படுகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—5. விசுவமனு, வையசுவரிஷி.

வேட்போர்காள்! நீவிர் களிப்பைத் தருகின்ற அன்னமாகிய ... கொடியை யிடித்து, பெருங்களிப்பையே யுண்டாக்குகின்ற சோமர... இந்திரன் பொருட்டுப் பிழிவீர்களாக. வல்லோனும், தேவ வுணவுக... (அவியா)ல் எப்போதும் வளர்பவனுமாகிய இந்திரனே, அல்லது. தனது ஆற்றலை வளர்க்கும் இவ்விந்திரனே, தோத்திரங்களாலும், மந்திரங்களாலும் போற்றப்படுகின்றான். உண்மையில் துதிக்கப்பட்ட இந்திரனுக்குச் சோமரசங் கொடுக்கற்பாலதாமாதலின் பிழிவீர்களாக என்பது பொருத்தமாமெனக. (5)

## மந்திரம் 6.

२ ३ १ २ ३ १ २ ३ १ २र

386. एन्दुमिन्द्राय सिञ्चत पिबाति सोम्यं मधु ।

१ २र ३ २

प्र राधांसि चोदयते महित्वना ॥ ६ ॥

ஏந்துமிந்த்ராய ஸிஞ்சத பிபாதி ஸோம்யம் மது ।

ப்ர ராதாம்ஸி சோதயதே மஹித்வநா ॥

அந்வயம்

(हे ऋत्विजः !,) इन्दुं, इन्द्राय, आसिञ्चत, (ततः,) मधु, सोम्यं, पिबाति, महित्वना, राधांसि, प्रचोदयते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः!) | (ஹே ருத்விஜ:!) | வேட்போர்காள்! நீவிர் |
| इन्दुं | இந்தும் | பொங்குந்தன்மையுள்ள சோம ரசத்தை |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| आसिञ्चत | ஆஸிஞ்சத | ஒருமையுடன் பிழிக்தெடுப்பீர்களாக. |
| (ततः) | (தத:) | (பின்னர்) |
| मधु | மது | களிப்பைத்தரும் |
| सोम्यं | ஸோம்யம் | சோமத்தின் இரசத்தை |
| पिबाति | பிபாதி | இந்திரன் அருந்துவானாக. அருந்தி |
| स्वना | ஸ்வநா | தனது மகிமையால் |
| | ராயாம்ஸி | துதிப்போர்கட்கு அன்னங்களை |
| | ப்ரசோதயேத | மிகுதியாகக் கொடுப்பானாக. |

சாயண பாடியம்

காண்டம்—4. இருக்கு—6. விசுவமனு வையசுவ ரிஷி.

துதிப்போர்காள்! நீவிர் பொங்குந்தன்மையுள்ள சோமரசத்தை இந்திரன்பொருட்டு ஒருமுகப்பட்டு பிழிக்தெடுப்பீர்களாக என்பதாம். பின்னர், சோமமாகியதும், களிப்பைத் தருவதுமாகிய இரசத்தை இந்திரன் அருந்துவானாக. அருந்தி அவ்விந்திரன் தனது மகிமையால் தனைத் துதிப்போர்கட்கு அன்னங்களை இனிது கொடுப்பானாக என்பதாம். (6)

## மந்திரம் 7.

२ ३ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १२

387. एतोन्विन्द्रꣳ स्तवाम सखाय स्तोम्यं नरम् ।

३ २ २र ३ २उ ३ २

कृष्टीर्यो विश्वा अभ्यस्त्येक इत् ॥ ७ ॥

ஏதோ ந்விந்த்ரம் ஸ்தவாம ஸகாய ஸ்தோம்யம் நரம் ।

க்ருஷ்டீர்யோ விச்வா அப்யஸ்த்யேக இத் ॥

அந்வயம்.

हे सखायः!, नु, एत उ, यः, एक इत्, विश्वाः, कृष्टीः, अभ्यस्ति, स्तोम्यं, नरं, (तं) इन्द्रं, स्तवाम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः! | ஹெ ஸவாயঃ! | மித்திரர்போன்ற வேட்போர்காள்! நீவிர் |
| तु | நு | விரைவிலே |
| एत उ | ஏத உ | வருவீர்களாக. |
| यः | யঃ | எவ்விந்திரன் |
| एक इत् | ஏக இத் | ஒருவனாகவே |
| विश्वाः | விஶ்வாঃ | எல்லாப் |
| कृष्टीः | க்ருஷ்டீঃ | பகைஞர் சேனைகளையும் |
| अभ्यस्ति | அப்யஸ்தி | அடக்குகின்றானோ, |
| स्तोत्र्यं | ஸ்தோத்ர்யம் | துதிக்கத்தக்கவனும் |
| नरं | நரம் | யாவர்க்கும் தலைவனுமாகிய |
| (तं) इन्द्रं | (தம்) இந்த்ரம் | அவ்விந்திரனைத் |
| स्तवाम | ஸ்தவாம | (யாம்) துதிப்போமாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—7. விசுவமனு வையசுவரிஷி.

ஒத்த வறிவுள்ள நண்பர்களான வேட்போர்காள்! நீவிர் விரைவில் வருவீர்களாக. எதன் பொருட்டெனின்? அது கூறப்படுகின்றது:—துதிக்கத் தக்கோனும், எல்லாவற்றையுஞ் செலுத்துவோனுமாகிய அவ்விந்திரனைத் துதித்தற்பொருட்டு. யாதொரு இந்திரன் சகாயமற்றோனாகவே எல்லாச் சத்துரு சேனைகளையுந் தாழ்த்துகின்றானோ அவனைத் துதிப்போம் என அந்வயித்துக்கொள்க. (7)

## மந்திரம் 8.

१ २ ३ १२ ३ १ २ ३ २ ३ २
388. इन्द्राय साम गायत विप्राय बृहते बृहत् ।
३ १२ ३१ २ ३ १ २
ब्रह्मकृते विपश्चिते पनस्यवे ॥ ८ ॥

இருக்கு 8-98-1.

இந்த்ராய ஸாம காயத விப்ராய ப்ருஹதே ப்ருஹத் ।
ப்ரஹ்மக்ருதே விபஶ்சிதே பநஸ்யவே ॥

அந்வயம்.

(हे उद्गातारः !,) विप्राय, बृहते, ब्रह्मकृते, विपश्चिते, पनस्यवे, इन्द्राय, बृहत् साम, गायत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे उद्गातारः !) | (ஹே உத்₃காதார꞉ !) | சாமமறையாகிய கீதம் பாடுவோர்களே ! நீவிர் |
| विप्राय | விப்ராய | கூரிய வுணர்வுடையானும |
| बृहते | ப்₃ருஹதே | பெரியோனும் |
| ब्रह्मकृते | ப்₃ரஹ்மக்ருதே | அன்னத்திற்கிறைவனும் |
| विपश्चिते | விபஶ்சிதே | அறிஞனும் |
| पनस्यवे | பநஸ்யவே | துதியை விரும்புவோனுமாகிய |
| इन्द्राय | இந்த்₃ராய | இந்திரன் பொருட்டுப் |
| बृहत् साम | ப்₃ருஹத் ஸாம | பிருகத் என்னுஞ் சாமகீதத்தைப் |
| गायत | கா₃யத | பாடுவீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—8. நிருமேத ரிஷி.

சாமகீதம் பாடுவோர்களே ! நீவிர் நுண்ணறிவாளனும், பெரியோனும், அன்னத்திற் கிறைவனும், அறிஞனும், தோத்திரத்தை யிச்சிப்போனுமாகிய இந்திரன்பொருட்டு பிருகத் என்னுஞ் சாமகீதத்தைப் பாடுவீர்களாக என்பதாம். (8)

மந்திரம் 9.

२उ ३ २३१२ ३ २३ १ २
389. य एक इद्विदयते वसु मर्त्ताय दाशुषे ।
१ २ ३ १२ ३ १ २ ३२
ईशानो अप्रतिष्कुत इन्द्रो अङ्ग ॥ ९ ॥

இருக்கு 1-84-7.

ய ஏக இத்₃வித₃யதே வஸு மர்த்தாய தா₃ஶுஷே ।
ஈஶாநோ அப்ரதிஷ்க்குத இந்த்₃ரோ அங்க₃ ॥

அந்வயம்.

यः, एकः इत्, दाशुषे, मर्त्ताय, वसु, विदयते, अप्रतिष्कुतः, इन्द्रः, अङ्ग, ईशानः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | யஃ | யாதொரு இந்திரன் |
| एकः इत् | ஏக: இத் | ஒருவனாகவே |
| दाशुषे | தாஶுஷே | அவி கொடுக்கின்ற |
| मर्त्ताय | மர்த்தாய | மனிதன் பொருட்டுத் |
| वसु | வஸு | தனத்தை |
| विदयते | விதயதே | விசேடமாய்க் கொடுக்கின்றானோ, |
| अप्रतिष्कुतः | அப்ரதிஷ்குதः | (தனக்கு) இடையூறு விளைக்கத் தக்க வார்த்தையற்ற, |
| इन्द्रः | இந்த்ரः | (அந்த) இந்திரன் |
| अङ्ग | அங்க | விரைவில் |
| ईशानः | ஈஶாநः | உலகமெல்லாவற்றிற்கும் இறைவனாகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—9. கோதம ரிஷி.

யாதொரு இந்திரன் தனித்தே அவிகொடுத்த மனிதன் பொருட்டு (வேள்வித் தலைவன் பொருட்டுத்) தனத்தை விசேடமாய்க் கொடுக்கின்றானோ, பிறர்களாற் பேசும் இடையூறு வார்த்தையுமற்ற அவ்விந்திரன் விரைவில் உலகனைத்திற்கும் இறைவனாகின்றான் என்பதாம். (9)

மந்திரம் 10.

१ २ ३ १ २ ३ १ २र ३ १ २

390. सखाय आशिषामहे ब्रह्मेन्द्राय वज्रिणे ।

३२ ३ २ १२ ३ १२

स्तुष ऊ षु वो नृतमाय धृष्णवे ॥ १० ॥

இருக்கு 8-24-1.

ஸகாய ஆஶிஷாமஹே ப்ரஹ்மேந்த்ராய வஜ்ரிணே ।

ஸ்துஷ ஊ ஷு வோ ந்ருதமாய த்ருஷ்ணவே ॥

அந்வயம்.

हे सखायः !, वज्रिणे, इन्द्राय, ब्रह्म, आशिषामहे, वः, नृतमाय, धृष्णवे, सुस्तुषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः ! | ஹெ ஸவாயஃ ! | மித்திரர்களான வேட்போர்களே! நாம் |
| वज्रिणे | வஜ்ரிணெ | வச்சிராயுதந் தாங்கிய |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| ब्रह्म | ப்ரஹ்ம | தோத்திரத்தை |
| आशिषामहे | ஆஶிஷாமஹெ | சொல்வோமாக. |
| वः | வஃ | (மற்றும்) உங்களை முன்னிட்டு, |
| नृतमाय | ந்ருதமாய | எல்லாவற்றையும் நன்கு செலுத்துவோனும் |
| धृष्णवे | த்ருஷ்ணவெ | பகைஞர்கட்குப் பயங்கொடுப்போனுமாகிய இந்திரன்பொருட்டு |
| सुस्तुषे | ஸுஸ்துஷெ | (யானும்) தோத்திரம் பண்ணுகின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—10. விசுவமனு ரிஷி.

நண்பர்களான வேட்போர்களே! கையில் வச்சிரந்தாங்கிய இந்திரன் பொருட்டு நாம் தோத்திரஞ் சொல்வோமாக. அல்லது, எங்களாலீயப்பட்ட அவியாகிய அன்னத்தைப் பிரார்த்திக்கின்றோம். உங்களனைவரையும் முன்னிட்டு, எல்லாரையுஞ் செலுத்துவோனும். அல்லது, போரில் படைக்கலங்களை நியமிப்போனும், எல்லாப் பகைஞர்களையும் அச்சமுறுத்துவோனுமாகிய, அவ் விந்திரன்பொருட்டு யானே இனிது துதிக்கின்றேன் என்பதாம். (10)

## நான்காவது கண்டம்

முற்றும்.

## ஐந்தாவது கண்டம்

பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—5.

எட்டு மந்திரங்களாலானது.

### மந்திரம் 1.

३ १ २र ३ १ २ ३ २ ३ १ २
391. **गृणे तदिन्द्र ते शव *उपमां देवतातये ।**
१ २र ३१ २र
**यद्धंसि वृत्रमोजसा शचीपते ॥ १ ॥**

இருக்கு 8-62-8.

*க்ருணே ததிந்த்ர தே ஶவ உபமாம் தேவதாதயே*
*யத்தம்ஸி வ்ருத்ரமோஜஸா ஶசீபதே ॥*

அந்வயம்.

हे इन्द्र !, ते, तत् शवः, उपमां, देवतातये, गृणे यत्, शचीपते !, ओजसा, वृत्रं, हंसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| **ते** | தே | உன்னுடைய |
| **तत् शवः** | தத் ஶவ: | கீர்த்தி வாய்ந்த ஆற்றலுக்குத் |
| **उपमां** | உபமாம் | தக்கவாறு |
| **देवतातये** | தேவதாதயே | வேள்வித் தலைவன் அல்லது, வேள்வ தம் |
| **गृणे** | க்ருணே | (யான்) துதிக்கின்றேன் |
| **यत्** | யத் | யாதினாலெனின் ? |
| **शचीपते !** | ஶசீபதே ! | இந்திராணி கொழுந ! நீ |
| **ओजसा** | ஓஜஸா | வலியால் |
| **वृत्रं** | வ்ருத்ரம் | விருத்திரனை |
| **हंसि** | ஹம்ஸி | நாசஞ் செய்தனை. (ஆதலி |

* उपमं, என்பது இருக்கு.

### சாயண பாடியம்.

ண்டம்—5. இருக்கு—1. பிரகாத ரிஷி.

இந்திரனே! உன்னுடைய ஆற்றலுக்குத் தக்கவாறு, வேள்வியின் பொருட்டு, அல்லது, வேள்வித் தலைவன் பொருட்டுத் துதிக்கின்றேன். ாதுபற்றியெனின்? இந்திர! நீ விருத்திரனை ஆற்றலாற் கொன்றனை ாதலின். (உனது ஆற்றலைத் தோத்திரம் பண்ணுகின்றேன் என இயைத் துக்கொள்க.) (1)

### ம ந் தி ர ம் 2.

२ ३ १ २र ३ २३ १ २ ३ १२
392. यस्य त्यच्छम्बरं मदे दिवोदासाय रन्धयन् ।
३ १ २र ३ १ २र
अयं स सोम इन्द्र ते सुतः पिब ॥ २ ॥

இருக்கு 6-43-1.

𑌯𑌸𑍍𑌯 𑌤𑍍𑌯𑌚𑍍𑌛𑌮𑍍𑌬𑌰𑌂 𑌮𑌦𑍇 𑌦𑌿𑌵𑍋𑌦𑌾𑌸𑌾𑌯 𑌰𑌨𑍍𑌧𑌯𑌨𑍍 ।
𑌅𑌯𑌂 𑌸 𑌸𑍋𑌮 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌤𑍇 𑌸𑍁𑌤𑌃 𑌪𑌿𑌬 ॥

### அந்வயம்.

हे इन्द्र !, यस्य, मदे, त्यत्, शम्बरं, दिवोदासाय, रन्धयन्, सः, अयं, सोमः, ते, सुतः, पिब ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | 𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திரனே! நீ |
| स्य | 𑌯𑌸𑍍𑌯 | எச்சோமரசத்தினுடைய |
| | 𑌮𑌦𑍇 | களிப்பில் |
| | 𑌤𑍍𑌯𑌤𑍍 | அந்தச் |
| | 𑌶𑌮𑍍𑌬𑌰𑌂 | சம்பராசுரனை |
| | 𑌦𑌿𑌵𑍋𑌦𑌾𑌸𑌾𑌯 | திவோதாசன் என்னும் அன்பன் பொருட்டுக் |
| | 𑌰𑌨𑍍𑌧𑌯𑌨𑍍 | கொன்றனையோ, |
| | 𑌸𑌃 | அத்தகைய |
| मः | 𑌅𑌯𑌂 𑌸𑍋𑌮𑌃 | இச்சோமரசம் |
| | 𑌤𑍇 | நின் பொருட்டுத் |
| | 𑌸𑍁𑌤𑌃 | தேடப்பட்டிருக்கின்றது |
| | 𑌪𑌿𑌬 | (ஆதலின்) அருந்துவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—2. பரத்துவாச ரிஷி.

இந்திர! யாதொரு நீ சோமக் கொடியின் இரசத்தைப் பருகியதால் உண்டாகிய களிப்பினுற் சம்பரன் என்னும் அசுரனைக் கொன்றனையோ, அத்தகைய இச்சோமரசம் நின் பொருட்டுத் தேடப்பட்டிருத்தலினுல் (அதை) அருந்துவாயாக என்பதாம். (2)

## மந்திரம் 3.

१ २ ३ १ २
393. **एन्द्र नो गधि प्रिय सत्राजिदगोह्य ।**
१ २उ ३ १२ ३ १ २र ३
**गिरिर्न विश्वतः पृथुः पतिर्दिवः ॥ ३ ॥**

இருக்கு 8-897-4

ஏந்த்ர நோ கதி ப்ரிய ஸத்ராஜிதகோஹ்ய ।
கிரிர்ந விஶ்வத: ப்ருது: பதிர்திவ: ॥

அந்வயம்.

**प्रिय !, सत्राजित्, अगोह्य, इन्द्र !, गिरिः न, विश्वतः, पृथुः, दिवः, पतिः, नः, आगधि ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **प्रिय !** | ப்ரிய ! | அனைவருக்கும் அன்பனும் |
| **सत्राजित् !** | ஸத்ராஜித் ! | பகைஞர்களை வெல்வோனும் |
| **अगोह्य !** | அகோஹ்ய ! | நிந்தை யற்றோனுமாகிய |
| **इन्द्र !** | இந்த்ர ! | இந்திர ! |
| **गिरिः न** | கிரி: ந | மலையைப் போன்று |
| **विश्वतः** | விஶ்வத: | எல்லா வகையானும் |
| **पृथुः** | ப்ருது: | பெரியோனும் |
| **दिवः** | திவ: | சுவர்க்கத்திற்கு |
| **पतिः** | பதி: | இறைவனுமாகிய |
| **नः** | ந: | எங்களிடத்து |
| **आगधि** | ஆகதி | வருவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—3. நிருமேத ரிஷி.

அனைவர்கட்கும் அன்ப! பெரும்பகைஞர்களை வெல்வோய்! ஒருவராலும் பழிக்க வொண்ணாத இந்திர! மலைபோன்று எல்லாவற்றினின்றும் பெரியோனும், சுவர்க்கத்திற்கு இறைவனுமாகிய நீ எங்கணிமித்தம் வருவாயாக என்பதாம். (3)

### மந்திரம் 4.

१ २ ३ १२ ३ ३ २ १ २
394. य इन्द्र सोमपातमो मदः शविष्ठ चेतति ।
२ ३ २ ३ २ २ ३ १ २
येना हꣳसि न्या३ त्रिणं तमीमहे ॥ ४ ॥

இருக்கு 8-12-1.

ய இந்த்ர ஸோமபாதமோ மத꞉ ஶவிஷ்ட சேததி ।
யேநா ஹம்ஸி ந்யாத்ரிணம் தமீமஹே ॥

### அந்வயம்.

हे इन्द्र !, यः, सोमपातमः, शविष्ठ, मदः, चेतति, येन, अत्रिणं, निहंसि, तं, ईमहे ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே! |
| यः | ய꞉ | யாதொரு நீ |
| सोमपातमः | ஸோமபாதம꞉ | சோமரசத்தை மிக அருந்துகின்றுயோ, |
| शविष्ठ ! | ஶவிஷ்ட ! | ஆற்றல்மிக்கோய்! (அத்தன்மைய உனது) |
| मदः | மத꞉ | களிப்பானது |
| चेतति | சேததி | விருத்திரனைக் கொல்லல் முதலிய காரியத்தை யுணர்கின்றது. |
| येन | யேந | எம்மதத்தா (களிப்பா)ல் |
| अत्रिणं | அத்ரிணம் | இராக்கதர்களை |
| निहंसि | நிஹம்ஸி | முழுதுங் கொல்கின்றனையோ, |
| तं | தம் | அக்களிப்பைப் |
| ईमहे | ஈமஹே | போற்றுகின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—4. பருவத ரிஷி.

இந்திரனே! யாதொரு நீ மிகச் சோமரசம் அருந்துபவனுகின்ருய். வலி மிக்க இத்தன்மையனுன இந்திரனே! சோமரசம் அருந்தலாலுண்டான உனது மதமானது (களிப்பானது) விருத்திரனைக் கொல்லுதன் முதலிய காரியத்தைச் செய்ய நன்குணர்கின்றது. இதை ஒரு வாக்கியமாகவே கொண்டு, வலி மிக்க இந்திரனே! நீ சோமரசத்தாற் களிப்புடையனுந் தக்கோனுகயிருந்துகொண்டு அறிகின்ருய் எனினுமாம்.

ஈண்டு, முன்னர் உணர்கின்றது என்னுந் தன்மைச்சொல் இப்போது உணர்கின்ருய், என முன்னிலைச் சொல்லாய்த் திரிந்தது. இத்தன்மைய இந்திர! நீ எச் சோமரச மருந்தலாலுண்டாகிய களிப்பால் உயிர்களைத் தின்னும் இராக்கதரை மிகத் தாழ்ந்தவர்களாய்க் கேட்டை யடையுமாறு செய்தனையோ, அச் சோமரசம் அருந்தலாலுண்டாகிய மதமானது (களிப்பானது) விருத்திரனைக் கொல்லுதன் முதலிய காரியத்தை(ச் செய்ய) நன்குணர்கின்றது. அக் களிப்பை, அல்லது, அத்தன்மைய களிப்பையுடைய நின்னை வேண்டுகின்றேன் என்பதாம். (4)

குறிப்பு.—ஈண்டு ஈமஹே, என்னும் மூலபதத்திற்கு இரத்தற்றொழிலாம் நிகண்டும் அங்ஙனங் கூறுகின்றது. அல்லது அடைகின்றேன் என்பது பொருள். அதாவது தோத்திரங்களாற் போற்றுகின்றேன் என்பதாம்.

## மந்திரம் 5.

३ १ २र ३ २उ १ २ ३ १ २ ३१२

395. *तुचे तुनाय नो तत्सु द्राघीय आयुर्जीवसे ।

१ २ ३ १ २

आदित्यासः सुमहसः कृणोतन ॥ ५ ॥

இருக்கு 8-24-28.

துசெ துநாய நொ தத்ஸு த்ராகீய ஆயுர்ஜீவஸெ ।
ஆதித்யாஸ꞉ ஸுமஹஸ꞉ க்ருணோதந ॥

அந்வயம்.

हे सुमहसः आदित्यासः !, नः तुचे, तुनाय, जीवसे, द्राघीयः, तत् आयुः, सुकृणोतन ॥

* तुचेतनाय, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| **सुमहस:** | ஸுமஹஸ: | பேரொளியையுடைய அதிதி புத்திரர்களான |
| **हे आदित्यास:!** | ஹே ஆதித்யாஸ:! | தேவர்காள்! |
| **न: सुचे** | ந: ஸுசே | எனது புத்திரனுக்கும் |
| **तुनाय** | துநாய | பௌத்திரனுக்கும் |
| **जीवसे** | ஜீவஸே | வாழ்தற்பொருட்டு |
| **द्राघीय:** | த்ராகீய: | நெடுநாளிருக்கத்தக்க |
| **तत् आयु:** | தத் ஆயு: | அவ் வாயுளை |
| **सुकृणोतन** | ஸுக்ருணோதந | இனிது கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

**கண்டம்—5.** இருக்கு—5. இரிமீடி ரிஷி.

அழகிய பிரகாசங்களையுடைய அதிதி புத்திரர்களென்னுந் தேவர்காள்! **நீவிர்** எங்களுடைய புத்திரனுக்கும், பௌத்திரனுக்கும், இனிது வாழ்வதற்கு வேண்டிய நீண்ட ஆயுளை நன்கு விருத்தி செய்வீர்களாக என்பதாம்.

ஈண்டு 'துநாய' என்பது பௌத்திரன்பொருட்டு என்னும் பொருளுடையது. மற்றும், தகாரத்திலேறிய உகாரம், அசை. இதுபற்றியே '**தநாய**' என்றோதுகின்றனர் இருக்குமறையாளர்.

மந்திரம் 6.

२ ३ १ २र ३ १ २ ३ १ २
396. **वेत्था हि निर्ऋतीनां वज्रहस्त परिवृजम् ।**
१ २ ३ १ २३ १ २
**अहरहः शुन्ध्युः परिपदामिव ॥ ६ ॥**

இருக்கு 4-24-28.

**வேத்தா ஹி நிர்ருதீநாம் வஜ்ரஹஸ்த பரிவ்ருஜம் ।**
**அஹரஹ: ஶுந்த்யு: பரிபதாமிவ ॥**

அந்வயம்.

हे वज्रहस्त !, निर्ऋतीनां, परिवृजं, वेत्था हि, अहरहः, शुन्ध्युः, परिपदां इव ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे वज्रहस्त!** | ஹே வஜ்ரஹஸ்த! | வச்சிராயுதந்தாங்கிய கையோய்! |
| **निर्ऋतीनां** | நிர்ருதீநாம் | இடையூறு விளைவிக்கும் இராக்கதர்களை |
| **परिवृजं** | பரிவ்ருஜம் | வெருட்டுவதற்கு |

| | | |
|---|---|---|
| वेत्था हि | வெத்தா ஹி | நீயே யுணர்ந்தோனாகின்றாய். எதுபோல் வெருட்ட வெனின்? |
| अहरहः | அஹரஹः | நாடோறும் |
| शुन्ध्युः | ஶுந்த்யுः | இரவி யெழுந்தபோது |
| परिपदां इव | பரிபதாம் இவ | உயிர்கள் தமதிடத்தை நீங்கி நாற்புறத்தும் ஓடுவன போன்று. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—6. விசுவமனு ரிஷி.

இப்போது இருடியானவர் இந்திரனைக் கூப்பிட்டுக் சொல்கின்றார்:—வச்சிராயுதமேந்திய கரத்தோய்! நான்புறத்தும் இராக்கதர்களை ஓட்டுவதற்கு நீயே யுணர்கின்றாய் (நினக்கே தெரியும்.) அதிலுவமை:—சூரியனெழுந்தபோது நாற்புறத்துஞ் சென்றடைகின்ற வேள்வித் தலைவர்கள் போன்றெனல். அல்லது, நாற்புறத்தும் பறந்தோடும் பறைவைகள் போன்றெனல். பறவைகள் தத்தமது இடத்தை நாடோறும் விடுவதற்கு உணர்கின்றனபோன்று என்னும் இந்த உவமை ஒத்ததன்மையது.

ஈண்டு, இரவி யெழுந்தவுடன் பறவைகள் தத்தமது இடங்களை விட்டுவிட்டு எங்குஞ் செல்கின்றன. உண்மையில் இவ்வாறே இந்திரனாகிய நீ தனதாற்றலோடு விளங்குமிடத்துப் பகைஞர்கள் தமது நகர்களை விடுத்து ஓடுகின்றார்கள் என்பது திரண்டபொருள். (6)

ஹி என்பது தேற்றம், சுந்தியு:, என்பது சூரியன்.

## மந்திரம் 7.

१ २र ३२३ २ ३१२ ३ २
397. अपामीवामप स्रिधमपसेधत दुर्मतिम् ।
१ २ ३ १२ ३ १ ३
आदित्यासो युयोतना नो अंहसः ॥ ७ ॥

இருக்கு 8-18-10.

அபாமீவாமப ஸ்ரிதமபஸேதத துர்மதிம் ।
ஆதித்யாஸோ யுயோதநா நோ அம்ஹஸः ॥

அந்வயம்.

हे आदित्यासः!, अमीवां, अपसेधत, स्रिधं, अप, दुर्मतिं, अप, नः, अंहसः, युयोतन ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे आदित्यासः | ஹே ஆதித்யாஸ꞉ ! | அதிதியின் புத்திரார்காள்! நீவிர் |
| असीवां | அஶீவாம் | நோய்களை |
| अपसेधत | அபஸேதத | எம்மிடத்தினின்று விலக்குவீர்களாக. |
| स्रिधं | ஸ்ரிதம் | துன்பந் தரும் பகைஞர்களையும் |
| अप | அப | எம்மிடத்தினின்று வெருட்டிவிடுவீர்களாக. |
| दुर्मतिं | துர்மதிம் | எமைப்பீடிக்க நினைக்கும் புத்தியுடையார்களையும் |
| अप | அப | எம்மிடத்தினின்றும் ஒதுக்குவீர்களாக. |
| नः | ந꞉ | (மற்றும்) எங்களை |
| अंहसः | அம்ஹஸ꞉ | பாவத்தினின்றும் |
| युयोतन | யுயோதந | வேறுபடுத்துவீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—7. இரிமீடிரிஷி.

அதிதி புத்திரர்களான ஆதித்தியர்களே! நீவிர், நோயை எம்மிடத்தினின்று நீக்குவீர்களாக. பீடைதரும் பகைஞரையும் எம்மிடத்தினின்றும் வெருட்டி விடுவீர்களாக. என்னைத் துன்புறுத்தக் கருதுகின்ற மதியுடையார்களையும் விலக்குவீர்களாக. அன்றியும், ஆதித்தியர்களே! எங்களைப் பாவத்தினின்றும் விடுபட்டோர்களாய்ச் செய்வீர்களாக என்பதாம். (7)

மந்திரம் 8.

२ ३ १ २ ३ १ २ ३ १ ३ १२ ३१ २
398. पिबा सोममिन्द्र मन्दतु त्वाऽयं ते सुषाव हर्यश्वाद्रिः ।
३ २ ३१ २ १२ ३ १२
सोतुर्बाहुभ्यां सुयतो नार्वा ॥ ८ ॥

இருக்கு 7-22-1.

பிபா ஸோமமிந்த்ர மந்தது த்வாऽயம் தே ஸுஷாவ ஹர்யஶ்வாத்ரி꞉ ।
ஸோதுர்பாஹுப்யாம் ஸுயதோ நார்வா ॥

அந்வயம்.

हे इन्द्र!, सोमं, पिब, त्वा, मन्दतु, हर्यश्व, सोतुः, बाहुभ्यां, अर्वा न, सुयतः, अयं, अद्रिः, ते, सुषाव ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ ஊ்ர ! | இந்திரனே ! நீ |
| सोमं | ஸொமம் | சோமரசத்தை |
| पिब | பிப | அருந்துவாயாக. அச் சோமரசம் |
| त्वा | த்வா | உன்னைக் |
| मन्दतु | மந்தது | களிப்புடையவனுக்குக. |
| हर्यश्व ! | ஹயஶ்வ ! | அரியெனும் பரியையுடைய இந்திர ! |
| सोतुः | ஸொதுஃ | சோமரச மெடுப்போனுடைய |
| बाहुभ्यां | பாஹுப்யாம் | கை யிரண்டுகளாலும் |
| अर्वा न | அர்வா ந | குதிரையைப் பற்றுமாறு |
| सुयतः | ஸுயதஃ | இனிது கைப்பற்றிய |
| अयं अद्रिः | அயம் அத்ரிஃ | இக் கல்லானது |
| ते | தெ | நின்பொருட்டுச் |
| सुषाव | ஸுஷாவ | சோமத்தைப் பிழிந்தெடுத்தது |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—8. வசிட்ட ரிஷி. சந்தம் விராட்.

இந்திரனே ! நீ சோமரசத்தை யருந்துவாயாக, அச் சோமரசம் நின்னைக் களிப்புடையோனுக்குக. அரியெனும் பரியுடையோய் ! சோமரசம் பிழிவோனுடைய கைகளால் இரண்டு கடிவாளத்தின் கயிற்றாற் குதிரையைப் பிடித்தல் போன்று நன்கு எடுக்கப்பெற்ற கல்லானது நின்பொருட்டு இச் சோமத்தைப் பிழிந்தெடுத்தது. (8)

## ஐந்தாவது கண்டம்.

முற்றும்.

---

## ஆறாவது கண்டம்.

---

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—6.

பத்து மந்திரங்களாலானது.

---

தேவதை 1, 2, 4, 5, 7, 10, இந்திரன். 3, 6, மருத்துக்கள். ககுப் சந்தம். ரிஷபம் சுரம்.

#### மந்திரம் 1.

३ २ ३ १ २र ३ १ २ ३ १ २

399. **अभ्रातृव्यो अना त्वमनापिरिन्द्र जनुषा सनादसि ।**

३१ २ ३ १ २

**युधेदापित्वमिच्छसे ॥ १ ॥**

இருக்கு 8-21-13.

𑌅𑌭𑍍𑌰𑌾𑌤𑍃𑌵𑍍𑌯𑍋 𑌅𑌨𑌾 𑌤𑍍𑌵𑌮𑌨𑌾𑌪𑌿𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰 𑌜𑌨𑍁𑌷𑌾 𑌸𑌨𑌾𑌦𑌸𑌿 ।
𑌯𑍁𑌧𑍇𑌦𑌾𑌪𑌿𑌤𑍍𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌸𑍇 ॥

அந்வயம்.

हे इन्द्र!, त्वं, जनुषा, अभ्रातृव्यः असि, अना, सनात्, अनापिः, आपित्वं इच्छसे, युधेत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र!** | 𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰! | இந்திரனே! |
| **त्वं** | 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| **जनुषा** | 𑌜𑌨𑍁𑌷𑌾 | பிறப்பினின்றே |
| **अभ्रातृव्यः असि** | 𑌅𑌭𑍍𑌰𑌾𑌤𑍃𑌵𑍍𑌯𑌃 𑌅𑌸𑌿 | பகையை யொழித்தோனா யிருக்கின்றாய், (மற்றும்) |
| **जना** | 𑌜𑌨𑌾 | ஏவுகின்றவன் இலாதோன். |
| **सनात्** | 𑌸𑌨𑌾𑌤𑍍 | நீண்டகாலத்தி லிருந்தே |
| **अनापिः** | 𑌅𑌨𑌾𑌪𑌿𑌃 | சுற்றங்களற்றோன். நீ |
| **आपित्वं इच्छसे** | 𑌆𑌪𑌿𑌤𑍍𑌵𑌂 𑌇𑌚𑍍𑌛𑌸𑍇 | யாதேனுமோர் சுற்றத்தை விரும்புவையேல், அப்போது |
| **युधेत्** | 𑌯𑍁𑌧𑍇𑌤𑍍 | போராடித் துதிக்கின்றவர்கட்கு நண்பனாகின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—1. சௌபரி ரிஷி. ககுப், சந்தம்.

இந்திர! நீ பிறப்புத் தொட்டே சத்துரு வொழிந்தோனும், நியமிப்போனற்றோனும், சுற்றமற்றோனுமாவாய். அதாவது நெடுங்காலத்திலிருந்தே பகை முதலியவைக ளற்றோனா யிருக்கின்றாய் என்பதாம். நீ சுற்றமாந் தன்மையை விரும்புங்கால் அங்குப் போர்செய்தே துதிப்போர்கட்கு நண்பனாகின்றாய் என்பதாம். (1)

## மந்திரம் 2.

१ २ ३१ २ ३ १ २र ३ २ ३ १२
400. यो न इदमिदं पुरा प्रवस्य आनिनाय तमु वस्तुषे ।
१ २ ३ १ २ ३१२
सखाय इन्द्रमूतये ॥ २ ॥

இருக்கு 8-21-1·

யொ ந ஊஃபிஃம் வுரா வுவஸ்ய ஆநிநாய தமு வஸ்துஷெ ।
ஸவாய ஊந்ருமுதயெ ॥

அந்வயம்.

सखायः, हे ऋत्विजः यजमानाः!, यः, पुरा, इदं इदं, वस्यः, नः, प्राणिनाय, तमु इन्द्रं, वः, ऊतये, स्तुषे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सखायः | ஸவாயஃ | ஒத்த வறிவுடைய |
| हे ऋत्विजः ! | ஹெ ஊக்விஜஃ! | வேட்போர்காள்! |
| यजमानाः ? | யஜமாநாஃ! | தலைவர்காள்! |
| यः | யஃ | எவ் விந்திரன் |
| पुरा | புரா | முன்பு |
| इदं इदं | ஊஃம் ஊஃம் | இந்த |
| वस्यः | வஸ்யஃ | மேம்பட்ட தனத்தை |
| नः | நஃ | எமக்கு |
| प्राणिनाय | ப்ராணிநாய | மிகுதியாய்க் கொடுத்தானோ, (தனங்கொடுக்கின்ற) |
| तमु इन्द्रं | தமு ஊந்ரும் | அவ் விந்திரனை |
| वः | வஃ | உங்கட்குக் (தனங் கிடைப்பதற்கும்.) |

| | | |
|---|---|---|
| ऊतये | ஊதயெ | (உங்களைக்) காப்பாற்றுதற் பொருட்டுந் |
| स्तुषे | ஸ்துஷெ | துதிக்கின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—8. சௌபரிஷி.

ஒத்த மதியுள்ள வேட்போர்காள்! தலைவர்காள்! எவ் விந்திரன் முன்னர், காணற்பாலதாந் தன்மையா லிருக்கப்பட்ட சிறந்த தனங்களை எங்கட்கு நன்கு கொடுத்தனனோ, தனத்திற் கிறைவனாகிய அவ் விந்திரனை உங்கட்குத் தனக் கிடைக்குமாறும், (உங்களைப்) பாதுகாக்கும் பொருட்டும், சௌபரி யென்னும் யான் துதிக்கின்றேன் என்பதாம். (2)

## மந்திரம் 3.

१ २ ३ १ २ ३ १ २ ३ १२

401. आगन्ता मा रिषण्यत प्रस्थावानो मापस्थात समन्यवः ।

३ १ २

*दृढा चिद्यमयिष्णवः ॥ ३ ॥

இருக்கு 8-20-1.

ஆகந்தா மா ரிஷண்யத ப்ரஸ்தாவானோ மாபஸ்தாத ஸமந்யவ꞉ ।
த்ருடா சித்யமயிஷ்ணவ꞉ ॥

அந்வயம்.

प्रस्थावानः, आगन्त, मा रिषण्यत, समन्यवः, दृढाचित्, यमयिष्णवः, मा अपस्थात ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| प्रस्थावानः! | ப்ரஸ்தாவான꞉! | மிகச் செல்கின்றவர்களான வாயுக்களென்னும் மருத்துக்களே! நீவிர் |
| आगन्त | ஆகந்த | எங்களிடத்திற்கு வருவீர்களாக. |
| मा रिषण्यत | மா ரிஷண்யத | வராமையால் வருந்துன்பத்தைத் தாராதீர்கள். |
| समन्यवः! | ஸமந்யவ꞉! | ஒத்த பிரகாசமுள்ளவர்களே! |
| दृढाचित् | த்ருடாசித் | வலிய மலைகள் முதலியவைகளையும் |

* स्थिराचिन्नमयिष्णवः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **यमयिष्णवः !** | யமயிஷ்ணவ꞉ ! | செலுத்துஞ் சீலமுள்ள மருத்துக்காள் ! விநீர் |
| **मापस्थात** | மாபஸ்தாத | எங்களை விடுத்துப் பிறரிடத்தில் இருக்காதீர்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—3. சௌபரி ரிஷி.

வேகமாய்ச் செல்லுஞ் சீலமுள்ள வாயு தேவதைகாள்! நீவிர் வருவீர்களாக. வராமையால் எங்களைத் துன்புறுத்தாதீர்கள். ஒத்தவொளியுடையோர்களே! அல்லது, ஒத்த கோபமுடையார்களே! மிகவலிவுடைய மலைகளையுஞ் செலுத்துஞ் சீலர்களே! எங்களிடத்தினின்றும் வேறிடத்தில் இராதீர்கள். அதாவது எங்களிடத்திலேயே இருப்பீர்களாக என்பதாம். (3)

## மந்திரம் 4.

१ २३२उ ३१ २ ३ १२३ १२
402. **आयाह्ययमिन्दवेऽश्वपते गोपत उर्वरापते ।**
१ २
**सोमँ सोमपते पिब ॥ ४ ॥**

இருக்கு 8-21-3.

ஆயாஹ்யயமிந்தவே(அ)ச்வபதே கோபத உர்வராபதே ।
ஸோமம் ஸோமபதே பிப ॥

அந்வயம்.

**हे अश्वपते !, गोपते !, उर्वरापते !, इन्दवे !, अयं, आयाहि, सोमपते !, सोमं पिब ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अश्वपते !** | ஹே அச்வபதே ! | பரிகட்குப் பதியே ! |
| **गोपते !** | கோபதே ! | கோக்கட்குக் கோனே ! |
| **उर्वरापते !** | உர்வராபதே ! | பயிர்நிறைந்த நிலத்திற்குப் பரனே ! |
| **इन्दवे !** | இந்தவே ! | பிரகாசமுள்ள இந்திர ! |
| **अयं** | அயம் | இச்சோமரசம் நினக்காக (தேடப்பட்டு) இருக்கின்றது |
| **आयाहि** | ஆயாஹி | வருவாயாக. |
| **सोमपते !** | ஸோமபதே ! | சோமரசத்திற்குத் தலைவ ! |
| **सोमं पिब** | ஸோமம் பிப | சோமரசத்தை யருந்துவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—4. சௌபரி ரிஷி.

குதிரைகட்கிறைவ! கோக்களைக் காப்பாற்றுவோய்! பயிர்களெலாம் நிறைந்துள்ள பாருக்கரசே! பிரகாசமுள்ள இந்திரனென்னும் நினக்குச் சோமரசம் பிழிந்து வைத்திருக்கப்பட்டிருக்கின்றது. ஈண்டுப் பிழிந்து வைக்கப்பட்டிருக்கின்றது என்பது எஞ்சி நின்றது. ஆதலின் வருவாயாக என்பதாம். சோமரசத்திற்கிறைவ! நீ சோமரசத்தின்பொருட்டு வந்து சோமரசத்தை பருந்துவாயாக என்பது பொருள். (4)

## மந்திரம் 5.

१ २ ३ २ ३ १ २र ३ १ २
403. त्वया ह स्विधुजा वयं प्रति श्वसन्तं वृषभ ब्रवीमहि ।
३ १ २र ३ १ २
सं॒स्थे जनस्य गोमतः ॥ ५ ॥

இருக்கு 8-21-11.

த்வயா ஹ ஸ்வித்³யுஜா வயம் ப்ரதி ஶ்வஸந்தம் வ்ருஷப⁴ ப்³ரவீமஹி|
ஸம்ஸ்தே² ஜநஸ்ய கோ³மத꞉ ||

அந்வயம்.

हे वृषभ!, गोमतः, जनस्य, संस्थे, श्वसन्तम्, युजा त्वया ह स्वित्, वयं प्रति ब्रवीमहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वृषभ! | ஹே வ்ருஷப⁴! | மன வேட்கைகளைப் பொழிகின்ற இந்திர! |
| गोमतः | கோ³மத꞉ | கோ முதலியவைகளையுடைய |
| जनस्य | ஜநஸ்ய | அன்பாது |
| संस्थे | ஸம்ஸ்தே² | இடத்தில், அல்லது, போரில் |
| श्वसन्तं | ஶ்வஸந்தம் | பெருமூச்சேறியுஞ் சத்துருவைக் குறித்து |
| युजा त्वया ह स्वित् | யுஜா த்வயா ஹ ஸ்வித் | உனது உதவியினாலேயே |
| वयं | வயம் | நாங்கள் |
| प्रति ब्रवीमहि | ப்ரதி ப்³ரவீமஹி | பதிற் சொல்வோமாக. |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—5. சௌபரி ரிஷி.

வேண்டியதைப் பெய்கின்ற இந்திர! கோ முதலியவைகளோடு கூடிய அன்பரது இடத்தில், அல்லது, போர்க்களத்தில் எங்களைக் குறித்துண்டாகும் பெருங்கோபத்தால் பெருமூச்சுவிடுகின்ற சத்துருவிற்கு, நினது சகாயத்தாலேயே உண்மையில் யாம் பதிற் சொல்வோமாக. அதாவது (அவர்களைத்) தடுத்து விடுவோமாக என்பதாம். (5)

## மந்திரம் 6.

404. गावश्चिद्धा समन्यवः सजात्येन मरुतः सबन्धवः ।
रिहते ककुभो मिथः ॥ ६ ॥

இருக்கு 8-20-21.

஗ாவஶ்சித்³தா⁴ ஸமந்யவ: ஸஜாத்யேந மருத: ஸப³ந்த⁴வ: ।
ரிஹதே ககுபோ⁴ மித²: ॥

அந்வயம்.

हे समन्यवः! मरुतः, गावश्चित्, सजात्येन, सबन्धवः, ककुभः, मिथः, रिहते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे समन्यवः! मरुतः | ஹே ஸமந்யவ:! மருத: | ஒத்தவொளியுள்ள மருத்துக்காள்! |
| गावश्चित् | ஗ாவஶ்சித் | உமது மாதாவாகிய கோக்களும் |
| सजात्येन | ஸஜாத்யேந | ஒரு சாதியாந்தன்மையால் |
| सबन्धवः | ஸப³ந்த⁴வ: | ஒத்த சுற்றமுடையனவாகி |
| ककुभः | ககுப⁴: | கிழக்கு முதலிய திசைகளையடைந்து |
| मिथः | மித²: | ஒன்றற்கொன்று |
| रिहते | ரிஹதே | (தம்முள்) நக்கிக் கொள்கின்றன. |

### சாயண பாடியம்.

கண்டம்—6. இருருக்—6. சொபரி ரிஷி.

சமமாகிய பிரமாசமுடைய, அல்லது, சமமாகிய குரோதமுடைய வாய்வு தேவதைகாள்! உங்களுடைய மாதாவான கோக்களும் ஒரே சாதித் தன்மையால ஒரே தன்மையாக ஒவ்வொன்ருய்ச் செல்க. என்னும் இத்தன்மைய ஒத்த சுற்றமுடையனவாகிக் கிழக்கு முதலிய திசைகளின் பாகங்களை யடைந்து தம்முள் ஒன்றற்கொன்று நக்கிக் கொள்கின்றன என்பதாம். (6)

## மந்திரம் 7.

१ २ ३ १२३ १ २ ३ १ २
405. त्वं न इन्द्राभर ओजो नृम्णꣳ शतक्रतो विचर्षणे ।
२ ३ १ २३ १२
आ वीरं पृतनासहम् ॥ ७ ॥

இருக்கு 8-97-10.

த்வம் ந இந்த்ராபர ஓஜோ ந்ருணம் ஶதக்ரதோ விசர்ஷணே ।
ஆ வீரம் ப்ருதநாஸஹம் ॥

### அந்வயம்.

शतक्रतो !, विचर्षणे ! इन्द्र !, त्वं, नः, ओजः, नृम्णं, आभर, वीरं, पृतनासहं, आ ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| शतक्रतो ! | ஶதக்ரதோ ! | அளவிலாக் கருமமுடையோய்! |
| विचर्षणे ! इन्द्र ! | விசர்ஷணே! இந்த்ர ! | மிகுந்த நோக்குடையோய்! இந்திர ! |
| त्वं | த்வம் | நீ |
| नः | நஃ | எங்கட்கு |
| ओजः | ஓஜஃ | ஆற்றலையும் |
| नृम्णं | ந்ருணம் | தனத்தையும் |
| आभर | ஆபர | கொடுப்பாயாக. |
| वीरं | வீரம் | வீரத்தன்மையுடையோனும் |
| पृतनासहं | ப்ருதநாஸஹம் | படைகளைப் பழித்துத் தள்ளுபவனுமாகிய வுன்னை |
| आ | ஆ | (யாம்) அழைக்கின்றோம். |

சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—6.** நிருமேத ரிஷி.

மிகுந்த கருமங்களையுடைய இந்திர! பெரும்பார்வை யுடையோய்! நீ எங்கட்கு ஆற்றலையும், தனத்தையுங் கொடுப்பாயாக. வீரத்தன்மை யுடையோனும், சேனைகளை யடக்குவோனுமாகிய உன்னை யாம் அழைக்கின் றோம். (7)

## மந்திரம் 8.

२३क २र ३ १२ ३ १२ ३१२ ३ १२
406. **अधाहीन्द्र गीर्वण उप त्वा * काम ईमहे ससृग्महे ।**
३२३ १ २ ३१ २
**उदेव ग्मन्त उदभिः ॥ ८ ॥**

இருக்கு 8-98-7.

𑌅𑌧𑌾𑌹𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌗𑍀𑌰𑍍𑌵𑌣 𑌉𑌪 𑌤𑍍𑌵𑌾 𑌕𑌾𑌮 𑌈𑌮𑌹𑍇 𑌸𑌸𑍃𑌗𑍍𑌮𑌹𑍇।
𑌉𑌦𑍇𑌵 𑌗𑍍𑌮𑌨𑍍𑌤 𑌉𑌦𑌭𑌿𑌃 ॥

அந்வயம்.

हे गीर्वणः !, इन्द्र !, अधाहि, त्वा, कामः, ईमहे, उपससृग्महे, उदेव ग्मन्तः, उदभिः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे गीर्वणः !** | 𑌹𑍇 𑌗𑍀𑌰𑍍𑌵𑌣𑌃 ! | வாக்கால் வாழ்த்தத் தக்க |
| **इन्द्र !** | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திர ! |
| **अधाहि** | 𑌅𑌧𑌾𑌹𑌿 | இப்போது |
| **कामः** | 𑌕𑌾𑌮𑌃 | விரும்பிய பொருளை யீயுமாறு |
| **त्वा** | 𑌤𑍍𑌵𑌾 | நின்னை |
| **ईमहे** | 𑌈𑌮𑌹𑍇 | இரக்கின்றோம். (மற்றும்) |
| **उपससृग्महे** | 𑌉𑌪𑌸𑌸𑍃𑌗𑍍𑌮𑌹𑍇 | நின்னைத் துதியோடு பொருந்தச் செய்கின்றோம். (அதினுவமை) |
| **उदेव ग्मन्तः** | 𑌉𑌦𑍇𑌵 𑌗𑍍𑌮𑌨𑍍𑌤𑌃 | நீரிற்சென்றவன் தனக்கருகிலுள்ளானை |
| **उदभिः** | 𑌉𑌦𑌭𑌿𑌃 | கையாலெற்றிய நீரால் விளையாடுவோனைச் செய்வது போன்று என்பதாம். |

* कामान्महः ससृज्महे, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

**கண்டம்—6. இருக்கு—8.** கருப், சந்தம். நிருமேத ரிஷி.

வாக்காற் போற்றத்தக்க இந்திர ! இச்சமயம் (யாங்கள்) நின்னை விரும்புகின்றோம். அல்லது, விரும்பியவைகளை யிரக்கின்றோம். மற்றும் (யாம்) இரப்போர்களாகித் துதிகளோடு நின்னைச் சேர்க்கின்றோம். அதிலுவமை கூறப்படுகின்றது :—நீரிற் செல்கின்றவர்கள் கையாலெற்றிய நீரால் தனக்கருகிலுள்ளார்களையும் விளையாட்டின்பொருட்டு விளையாடுவோர்களாய்ச் செய்துகொள்வது போன்றெனல். (8)

**குறிப்பு.**—நீரில் மரக்கலத்தாற் பிரயாணஞ் செல்லும் வணிகரைப்போன்று ஊக்கமாய் நின்பொருட்டு வேட்கின்றோம் என்பர் சிலர்.

## மந்திரம் 9.

१२ ३ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १२

407. सीदन्तस्ते वयो यथा गोश्रीते मधौ मदिरे विवक्षणे ।

३ १ २र

अभित्वामिन्द्र नोनुमः ॥ ९ ॥

இருக்கு 8-21-5.

ஸீஃஷ்ஷெ வயொ யயா ஗ொஶ்ரீதெ மயௌ மதிரெ விவக்ஷணெ ।
அ஭ிதாமிந்஦்ர நொநுமஃ ॥

அந்வயம்.

हे इन्द्र!, गोश्रीते, मदिरे, विवक्षणे, ते, मधौ, वयो यथा, सीदन्तः, त्वां अभिनोनुमः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र!** | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| **गोश्रीते** | ஗ொஶ்ரீதெ | ஆவின் பால் தயிரோடு கூடியதும் |
| **मदिरे** | மதிரெ | களிப்பைத் தருவதும் |
| **विवक्षणे** | விவக்ஷணெ | சுவர்க்கத்திற் சேர்விப்பதுமாகிய |
| **ते** | தெ | உன்னுடைய |
| **मधौ** | மயௌ | சோமரசத்துக் கருகில் (யாம்) |
| **वयो यथा** | வயொ யயா | ஒன்றுகூடியுள்ள பறவைகள் போன்று |
| **सीदन्तः** | ஸீஃஷஃ | இருந்துகொண்டவர்களாய் |
| **त्वां अभि** | த்வாம் அபி | உனது நோக்குடன் |
| **नोनुमः** | நொநுமஃ | (உன்னை) அடிக்கடி வணங்குகின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—9. சௌபரி ரிஷி.

இந்திர! கோவிகாரமான பால் தயிரோடுகூடியதும், களிப்புண்டாக்குவதும், சுவர்க்கத்தை யடைவிக்குஞ் சீலமுடையதுமாகிய நின்னுடைய சோமரச மிருக்குமிடத்தில், பறவைகள் ஓரிடத்திலொன்று சேர்ந்திருப்பன போன்று, நாங்களிருந்துகொண்டு நினது நோக்கத்தால் உன்னை மீண்டும் மீண்டும் வணங்குகின்றோம் என்பதாம். (9)

## மந்திரம் 10.

३२३ १२ ३२उ ३ १२ ३ १२
408. वयमु त्वामपूर्व्य स्थूरं न कच्चिद्भरन्तोऽवस्यवः ।
१२ ३ १ २
वज्रिं चित्रꣳ हवामहे ॥ १० ॥

இருக்கு 8-21-1.

வயமு த்வாமபூர்வ்ய ஸ்தூரம் ந கச்சித்பரந்தோऽவஸ்யவ: |
வஜ்ரிம் சித்ரம் ஹவாமஹே ||

அந்வயம்.

हे वज्रिन्!, अपूर्व्य!, भरन्तः वयं, अवस्यवः, स्थूरं न, कच्चित्, चित्रं, त्वामु, हवामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वज्रिन्! | ஹே வஜ்ரிந்! | வச்சிராயுதந் தாங்கினோய்! |
| अपूर्व्य! | அபூர்வ்ய! | வேள்வி நீராடுகின்ற முக்காலத்திலும் வெளிப்படலாற் புதியோனாகிய இந்திர! |
| भरन्तः वयं | பரந்த: வயம் | சோமமாகிய அன்னத்தால் உம்மை நிறையச்செய்த யாங்கள் |
| अवस्यवः | அவஸ்யவ: | தம்மைக் காப்பாற்றிக்கொள்ளுதற்பொருட்டு விரும்பியவர்களாய் |
| स्थूरं न | ஸ்தூரம் ந | வீட்டில் தானியம் நிறைப்போன், மிகக் குணமுடைய |
| कच्चित् | கச்சித் | ஒருவனை யழைப்பது போன்று, |
| चित्रं | சித்ரம் | பலவித நிறமுடைய |
| त्वामु | த்வாமு | நின்னையே |
| हवामहे | ஹவாமஹே | அழைக்கின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—6. இருக்கு—10.

வச்சிராயுத மேந்திரனேய்! வேள்வியின் முக்காலத்திலும் வெளிப்படுவதாற் புதியோய்! சோமமாகிய அன்னங்களால் நின்னை வளர்க்கப்பட்ட யாங்கள் அநேக நிறமுள்ள (போற்றத்தக்க வடிவமுள்ள) தம்மைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பியவர்களாய் உன்னையே அழைக்கின்றோம். அதிலுவமை:—நெல் முதலியவைகளால் வீட்டை நிறைய வைக்கின்றவர்கள் நற்குணமிகுந்த ஒருவனை யழைப்பது போன்றெனல். (10)

## ஆறுவது கண்டம்

முற்றும்.

---

## ஏழாவது கண்டம்.

---

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—7.

பத்து மந்திரங்களாலானது.

---

தேவதைகள், 8, இந்திரன். 9, விசுவே தேவர்கள். 10. அசுவினிகள். சந்தம், பங்க்தி. சுரம், பஞ்சமம்.

மந்திரம் 1.

३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३क२र
409. स्वादोरित्था विषूवतो मधोः पिबन्ति गौर्यः ।
१ २र ३ १२ ३२ ३ १२ ३ २ ३ २ ३१२ ३१ २
या इन्द्रेण सयावरीर्वृष्णा मदन्ति *शोभथा वस्वीरनु स्वराज्यम् ॥
இருக்கு 1-84-10.

ஸ்வாதோரித்தா விஷூவதோ மதோ: பிபந்தி கௌர்ய: |
யா இந்த்ரேண ஸயாவரீர் வ்ருஷ்ணா மதந்தி ஶோபதா வஸ்வீரநு
[ஸ்வராஜ்யம் ||

---

* शोभसे, என்பது இருக்கு.

அந்வயம்.

स्वादोः, इत्था, विषूवतः, मधोः, गौर्यः, पिबन्ति, याः, वृष्णा इन्द्रेण,
सयावरीः, मदन्ति, शोभथाः, वस्वीः, स्वराज्यं अनु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| स्वादोः | ஸ்வாதோ: | சுவையுடையதும் |
| इत्था | இத்தா | இவ்வாறு |
| विषूवतः | விஷுவத: | வேள்வியனைத்திலுஞ் சூழ்ந்திருப்பதும் |
| मधोः | மதோ: | மதுரமுடைதுமாகிய சோமரசத்தை |
| गौर्यः | கௌர்ய: | வெண்மை நிறமுடைய பசுக்கள் |
| पिबन्ति | பிபந்தி | குடிக்கின்றன. |
| याः | யா: | எந்தக் கோக்கள் |
| वृष्णा इन्द्रेण | வ்ருஷ்ணா இந்த்ரேண | விரும்பியதை மழையெனப்பெய்யும் இந்திரனேடு |
| सयावरीः | ஸயாவரீ: | கூடச் செல்கின்றனவாய்க் |
| मदन्ति | மதந்தி | களிப்படைகின்றனவோ, |
| शोभथाः | ஶோபதா: | (மற்றும்) அழகுடையனவோ, |
| वस्वीः | வஸ்வீ: | பால் கொடுத்துக்கொண்டு வாழ்கின்றனவோ, அந்தப் பசுக்கள். |
| स्वराज्यं अनु | ஸ்வராஜ்யம் அநு | தமது ஆண்டையின் இராச்சியத்தில் நிலைத்திருக்கின்றன. |

சாயண பாடியம்.

**கண்டம்—7. இருக்கு—1. கோதம ரிஷி.**

இன்சுவையுடைய ரசத்தோடு கூடியதும், இவ்வாற்ருல் வேள்விகளனைத்திலும் நிறைந்திருப்பதுமாயுள்ளதும், மதுரமுடையதுமாகிய சோமரசத்தை, வெண்ணிறமுடைய கோக்கள் குடிக்கின்றன. எப் பசுக்கள் விரும்பியதை மழையெனப் பெய்கின்ற இந்திரனேடு செல்கின்றனவாய்க் களிப்படைகின்றனவோ, அப்பசுக்கள் இந்திரனருந்திய சேடத்தை (சோமரசத்தை) அருந்துகின்றன என்பது பொருள். இந்திரனேடு அழகுற்றிருப்பனவும், பால் கொடுக்குஞ் சீலத்தால் வாழ்கின்றனவுமான அப்பசுக்கள், தமது இந்திரனுடைய இராச்சியத்தை (வேந்தன் ஆணையைக்) குறியாகப் பற்றிக்கொண்டிருக்கின்றன என்பதாம். (1)

### மந்திரம் 2.

३ २र ३ २ ३ ३ १२ ३२३ १२
410. इत्था हि सोम इ*न्मदो ब्रह्म चकार वर्द्धनम् ।
१२ ३ १२ ३ १ २र २ ३ २२ १२ ३ १ १
शविष्ठ वज्रिन्नोजसा पृथिव्या निःशशा अहिमर्चन्ननु स्वराज्यम्॥२॥

இருக்கு 3-80-1.

இத்தா ஹி ஸோம இந்மதோ ப்ரஹ்ம சகார வர்த்தநம் |
ஶவிஷ்ட வஜ்ரிந்நோஜஸா ப்ருதிவ்யா நிஶ்ஶஶா அஹிமர்சந்நநு
[ஸ்வராஜ்யம் ||

அந்வயம்.

हे शविष्ठ! वज्रिन्!, इत्था हि, सोमे, मदः, वर्द्धनं, ब्रह्म, चकार, स्वराज्यं, अनु अर्चन्, ओजसा, पृथिव्याः, अहिं, निःशशाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे शविष्ठ! | ஹே ஶவிஷ்ட! | பெரும் வலியுடையோய்! |
| वज्रिन्! | வஜ்ரிந்! | வச்சிரமேந்தினோய்! இந்திர! |
| इत्था हि | இத்தா ஹி | இம்முறையாகவே |
| सोमे | ஸோமே | சோமரசத்தை யேற்றுக்கொண்ட விடத்து |
| मदः | மத: | துதிப்போர்கள் |
| वर्द्धनं | வர்த்தநம் | வளரத்தக்க |
| ब्रह्म | ப்ரஹ்ம | துதியைச் |
| चकार | சகார | செய்தார்கள். இதனால் நீ |
| स्वराज्यं अनु अर्चन् | ஸ்வராஜ்யம் அநு அர்சந் | தன திராச்சியத்தில் தனது இறைவனுந்தன்மையை விளக்கிக்கொண்டு |
| ओजसा | ஓஜஸா | ஆற்றலால் |
| पृथिव्याः | ப்ருதிவ்யா: | பூமியினின்றும் |
| अहिं | அஹிம் | விருத்திராசுரனைக் குறித்து |
| निःशशाः | நிஶ்ஶஶா: | நன்கு ஆணை செலுத்துவாயாக. (கொல்லாது அகற்றுதி.) |

* मदे ब्रह्मा, என்பது இருக்கு.

## சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—2.

வியப்புற்ற பேராற்றலுள்ளோய்! வச்சிராயுதந் தாங்கினோய்! இந்திர! நூல் கூறிய இம்முறையாகவே, சோமரசத்தை நீயேற்றுக்கொண்டவிடத்து, துதிப்போர்கள் நின்னை விருத்திபண்ணுந் தோத்திரத்தைச் செய்தார்கள். இதனால் நீ ஆற்றலால் பூமியினின்றும் வந்து கொல்கின்ற விருத்திராசுரனை அடியோடு கொல்லற்க. அதாவது கட்டளையிட்டுப் (அவனைப்) பிருதிவியினின்றும் நீக்கிவிடுவாயாக என்பதாம். (2)

## மந்திரம் 3.

२ ३ १ २ ३ १ २ ३ १ २र

411. इन्द्रो मदाय वावृधे शवसे वृत्रहा नृभिः ।

२उ ३२ ३ २ ३ १ २र ३ १ २र३ १ २

तमिन् महत्स्वाजिषूतिमर्भे हवामहे स वाजेषु प्रनोऽविषत् ॥ ३ ॥

இருக்கு 1-83-1.

ஐந்த்ரோ மதாய வாவ்ருதே ஶவஸே வ்ருத்ரஹா ந்ருபி⁴: ।
தமிந் மஹத்ஸ்வாஜிஷூதிமர்பே⁴ ஹவாமஹே ஸ வாஜேஷு ப்ரநோ

[ऽவிஷத் ॥

### அந்வயம்.

वृत्रहा इन्द्रः !, मदाय, शवसे, नृभिः, वावृधे, तमित्, महत्सु आजिषु, अर्भे, ऊतिं, हवामहे, वाजेषु, नः, सः प्राविषत् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| वृत्रहा इन्द्रः | வ்ருத்ரஹா இந்த்³ர: | விருத்திராசுரனைக் கொன்ற இந்திரன் |
| मदाय | மதாய | களிப்பின் பொருட்டும் |
| शवसे | ஶவஸே | வன்மையின் பொருட்டும் |
| नृभिः | ந்ருபி⁴: | வேள்வித் தலைவர்களால் |
| वावृधे | வாவ்ருதே | வளர்க்கப்பட்டான். |
| महत्सु आजिषु | மஹத்ஸு ஆஜிஷு | பெரிய போர்களிலும் |
| अर्भे | அர்பே⁴ | சிறிய போரிலும் |
| ऊतिं | ஊதிம் | காப்பாற்றுகின்ற |
| तमित् | தமித் | அவ்விந்திரனையே |
| हवामहे | ஹவாமஹே | அழைக்கின்றோம். |

| | | |
|---|---|---|
| वाजेषु | வாஜேஷு | போர்களில் |
| नः | நꞏ | எங்களை |
| सः | ஸꞏ | அவ் விந்திரன் |
| प्राविषत् | ப்ராவிஷத் | நன்கு காப்பாற்றுவானாக. |

## சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—3. கோதம ரிஷி.

மழையைத் தடுக்கின்ற விருத்திரன் என்னும் மேகத்தை, அல்லது, அசுரனைக் கொல்கின்றவனாகிய, அல்லது, இடையூறு செய்யுஞ் சத்துருக்களைக் கொல்கின்றவனாகிய இந்திரன், களிப்பின்பொருட்டும், ஆற்றலின் பொருட்டும், வேள்வி யியற்றுவோர்களால் தோத்திர மந்திரங்களான துதிகளால் வளர்க்கப்பட்டனன். (துதியாலேயே ஆற்றலையடைந்து தேவர்கள் வளர்கின்றனர் என்பது வழக்கு) பெரும்போர்களில் எங்களைப் பாதுகாப்பதற்கு அவ்விந்திரனையே அழைக்கின்றோம். அங்ஙனமே அவ்விந்திரனை, சிறிய போர்களிலும் அழைக்கின்றோம். எங்களால் அழைக்கப்பட்ட அவ்விந்திரன் போர்க்களங்களில் எங்களை நன்கு பாதுகாப்பானாக என்பதாம். (3)

## மந்திரம் 4.

२ ३ २ ३ १ २ ३ १ २ ३क२र
412. इन्द्र तुभ्यमिदद्रिवोऽनुत्तं वज्रिन् वीर्यम् ।
२ ३ २ ३ १ २ ३२उ ३ २ ३१ २२उ२३ १२ ३ १ २
यद्ध त्यं मायिनं * मृगं तव त्यन् माययावधीरर्चन्ननु स्वराज्यम् ॥

இருக்கு 1-80-7.

இந்த்ர துப்யமிதத்ரிவோऽநுத்தம் வஜ்ரிந் வீர்யம் ।
யத்த த்யம் மாயிநம் ம்ருகம் தவ த்யந் மாயயாவதீரர்சந்நநு ஸ்வரா
[ஜ்யம் ॥

அந்வயம்.

अद्रिवः, वज्रिन्, इन्द्र!, तुभ्यमित्, यद्ध, स्वराज्यं अनु अर्चन्, वीर्यं,
अनुत्तं, मायिनं, मृगं, त्यं वृत्रं, तव मायया, अवधीः ॥

---

* मृतं तमुत्वमायया, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| अद्रिवः | அத்ரிவ: | மேகவாகனனும் |
| वज्रिन् | வஜ்ரிந் | வச்சிராயுதந் தாங்கியவனுமாகிய |
| इन्द्र ! | இந்த்ர ! | இந்திரனே ! |
| तुभ्यमित् | துப்யமித் | உன்னுடைய |
| यद्ध | யத்த | எவ்வலியினால் உண்மையாய் |
| स्वराज्यं अनु अर्चन् | ஸ்வராஜ்யம் அநு அர்சந் | தனது இராச்சியத்தில் மகிமையைக் காட்டினையோ, |
| वीर्यं | வீர்யம் | (அவ்)வல்லுநத்தன்மை |
| अनुत्तं | அநுத்தம் | பகைவர்களாற் கெடுக்க முடியாததேயாம். |
| मायिनं | மாயிநம் | மாயையையுடையவனும் |
| मृगं | ம்ருகம் | மான்வடிவமெடுத்தவனுமாகிய |
| त्यं वृत्रं | த்யம் வ்ருத்ரம் | அவ் விருத்திராசுரனை |
| तव मायया | தவ மாயயா | நினது மாயையினாலே |
| अवधीः | அவதீ: | கொன்றனை. (இதனால் உனது வீரத்தன்மை கீர்த்திவாய்ந்ததாம்.) |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—4. கோதம ரிஷி.

மேகவாகனனே! வச்சிரந்தாங்கினோய் ! உன்னுடைய வன்மை பகைவர்களாற் கேடுறுததேயாம். உண்மையாய் எவ் வல்லமையால், மாயையுடையவனும் மான் வடிவெடுத்தவனுமாகிய அவ்விருத்திராசுரனை நீயும் தனது மாயையினாலே கொன்றவனா யிருக்கின்றனையோ, இதனால் உன்னுடைய யாதொரு வன்மையுண்டோ அது கீர்த்தியுடையதாகின்றது என்பதாம். (4)

குறிப்பு.—மூலத்தில் ' அத்திரி ' என்பது மேகம் என 1-10-1-ல் நிகண்டும் கூறுகின்றது.

ஈண்டு, மூலத்திலுள்ள துப்யம், என்னும் நான்காம் வேற்றுமை, உன்னுடைய என ஆறும் வேற்றுமையினின்றது.

மந்திரம் 5.

२ ३ १ २ ३२उ ३ २ ३ १ २
413. प्रेह्य भीहि धृष्णुहि न ते वज्रो नियꣳसते ।
१ २ ३२उ ३ २ ३ १२ ३ १ २र ३ २ ३१ २ ३ १ २
इन्द्र नृम्णꣳ हि ते शवो हवो वृत्रं जया अपोऽर्चन्ननु स्वराज्यम् ॥५॥

இருக்கு 1-80-3.

ப்ரேஹ்யபீஹி த்ருஷ்ணுஹி நதே வஜ்ரோ நியம்ஸதே ।
இந்த்ர ந்ரும்ணம் ஹிதே ஶவோ ஹநோ வ்ருத்ரம் ஜயா அபோऽர்சந்
[அநு ஸ்வராஜ்யம் ॥

அந்வயம்.

हे इन्द्र !, प्रेहि, अभीहि, धृष्णुहि, ते, वज्रः, न नियंसते, ते शवः, नृम्णं, हि, स्वराज्यं अनु अर्चन्, वृत्रं हनः, अपजयाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! நீ. |
| प्रेहि | ப்ரேஹி | நன்கு போர் செய்வாயாக. |
| अभीहि | அபீஹி | நேர்முகமாய்ப்போய்க் கொல்லத் தக்கோர்களைக் கொல்வாயாக. |
| धृष्णुहि | த்ருஷ்ணுஹி | அப் பகைவரை யழித்தவிடத்து |
| ते | தே | உன்னுடைய |
| वज्रः | வஜ்ர: | வச்சிராயுதம் |
| न नियंसते | ந நியம்ஸதே | பகைவரினின்று தடுக்கமுடியாத தாகின்றது. |
| ते | தே | உனது |
| शवः | ஶவ: | வலியானது |
| नृम्णं | ந்ரும்ணம் | மநிதர்களைக் குனியச் செய்வதாம். |
| हि | ஹி | இதனால் |
| स्वराज्यं अनु अर्चन् | ஸ்வராஜ்யம் அநு அர்சந் | தனது இராச்சியத்தில் மகிமையைக் காட்டி |
| वृत्रं हनः | வ்ருத்ரம் ஹந: | விருத்திராசுரனைக் கொல்வாயாக. |
| अपः जयाः | அப: ஜயா: | (அவனால்) தடுக்கப்பட்ட மழையை (யும்) வெற்றிகொள்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—5. கோதம ரிஷி.

இந்திரனே ! நீ இனிது செல்வாயாக. கொல்லத்தக்க பகைஞர்களை யடைவாயாக. அடைந்து அச் சத்துருக்களைக் கொல்வாயாக. உன்னுடைய வச்சிராயுதம் சத்துருக்களாற் றடுக்கமுடியாதது. அவ்வணமே உனது ஆற்றல் மநிதர்களை வணங்கச் செய்வது. ஆகையால் விருத்திராசுரனை, அல்லது, மேகத்தை வெல்வாயாக. அதன்பின்னர் அவனாற்றடைபண்ணப் பட்ட நீரை (மழையை) வெற்றி கொள்வாயாக. விருத்திரனைக்கொன்று அவனாற்றடுக்கப்பட்ட நீரையடைவாயாக என்பதாம். எஞ்சியது விளக்கம்,

## மந்திரம் 6.

२३ १२ ३ १ २ ३ १२ ३ १२

414. यदुदीरत आजयो धृष्णवे धीयते धनम् ।

३ १ २३ २ ३ २ ३ २उ ३ १ २र ३ १ २ ३ १ २

युक्ष्वा मदच्युता हरी कं हनः कं वसौ दधोऽस्मां इन्द्र वसौ दधः ॥

இருக்கு 1-81-3.

𑌯𑌦𑍁𑌦𑍀𑌰𑌤 𑌆𑌜𑌯𑍋 𑌧𑍃𑌷𑍍𑌣𑌵𑍇 𑌧𑍀𑌯𑌤𑍇 𑌧𑌨𑌮𑍍 ।

𑌯𑍁𑌕𑍍𑌷𑍍𑌵𑌾 𑌮𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌾 𑌹𑌰𑍀 𑌕𑌂 𑌹𑌨𑌃 𑌕𑌂 𑌵𑌸𑍌 𑌦𑌧𑍋ऽ𑌸𑍍𑌮𑌾𑌂 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 [𑌵𑌸𑍌 𑌦𑌧𑌃 ॥

### அங்வயம்.

यत्, आजयः, उदीरते, धृष्णवे, धनं, धीयते, इन्द्र, मदच्युता, हरी, युङ्क्ष्वा, कं, वसौ दधः, वसौ, दधः ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| यत् | 𑌯𑌤𑍍 | எப்போது |
| आजयः | 𑌆𑌜𑌯𑌃 | உயுத்தம் |
| उदीरते | 𑌉𑌦𑍀𑌰𑌤𑍇 | தொடங்கப்படுகின்றதோ, அப்போது |
| धृष्णवे | 𑌧𑍃𑌷𑍍𑌣𑌵𑍇 | பகைஞரை வெல்கின்றவருக்கு |
| धनं | 𑌧𑌨𑌂 | தனம் |
| धीयते | 𑌧𑍀𑌯𑌤𑍇 | இருப்பாக வைக்கப்படுகின்றது. |
| इन्द्र ! | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திரனே ! நீ |
| मदच्युता | 𑌮𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌾 | பகைவர்களின் கருவத்தை யொழிக்கின்ற |
| हरी | 𑌹𑌰𑍀 | பரிகளை, |
| युङ्क्ष्वा | 𑌯𑍁𑌙𑍍𑌕𑍍𑌷𑍍𑌵𑌾 | இரதத்திற் பூட்டுவாயாக. |
| कं | 𑌕𑌂 | எவனையேனு மொருவனைக் |
| हनः | 𑌹𑌨𑌃 | கொல்கின்றாய். |
| कं | 𑌕𑌂 | எவனையேனு மொருவனை |
| वसौ दधः | 𑌵𑌸𑍌 𑌦𑌧𑌃 | தனமுள்ளவனுக்குகின்றாய். ஆதலின் எனது அரசனைத் |
| वसौ | 𑌵𑌸𑍌 | தனத்தின்கண் |
| दधः | 𑌦𑌧𑌃 | நிலைக்க வைப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—6. கோதம ரிஷி.

ஈண்டு, இரகுகண புத்திரனாகிய கோதமரின் ஆசிரியர், "குரு சிரிஞ்சயர்கள்" என்னும் அரசர்களுக்குப் புரோகிதராயிருந்தனர். அவ்வரசர்களுக்குப் பிறர்களோடு போர் நடக்குமிடத்து இவ்விருடியானவர் இம் மந்திரத்தால் இந்திரனைத் துதித்துத் தன்னுடைய அரசனுக்கு வெற்றியுண்டாமாறு வேண்டினர் என்னும் இவ்விதிகாசமுள்ளது. மற்றும், "கோதமர் இரகுகணர் இருவரும் குரு சிருச்சயர்களுடைய புரோகிதராயிருந்தனர்." என அவ்வரசனுக்கு அவ்விருடி புரோகிதராயிருந்தமை வாஜசனேய மறை யோதுவோர்களால் கூறப்பட்டு முள்ளது. மந்திரப் பொருள்:— எக்கால் போர்கள் உண்டாகின்றனவோ அப்போது எவர் சத்துருவை வெல்கின்றாரோ, அவர்க்குத் தனங்கொடுக்கப்படுகின்றது வெல்வோர்க்குத் தனமுண்டாகின்றதென்பது பொருள். இந்திரனே! உன்னை அத்தன்மைய உயுத்தங்கள் தொடங்கினபோது, சத்துருக்களுடைய கருவத்தைத் தொலைக்கப்பட்ட உன்னுடைய குதிரைகளிரண்டையும் நினது இரதத்திற் பூட்டுவாயாக. பூட்டிக்கொண்டு நின்னைவழிபடாத வேந்தர்கள் எவர்களேனு மிருப்பார்களேல் அவர்களைக் கொல்வாயாக. எவர்களேனும் நின்னை வழிபடில் அவர்களைத் தனத்தில் நிலைக்க வைப்பாயாக. இதனால் வெற்றி தோல்விகளை நீயே செய்விக்கின்றாய் என்பது பெற்றாம். ஆதலின் இந்திர! எனது இராச சம்பந்திகளைத் தனத்தில் இருக்க வைப்பாயாக. அதாவது (வெற்றி தோல்விகட்கு நீயே காரணமாதலின் எனது வேந்தனுக்கு வெற்றியுண்டாக்கி அவனைத் தனவானாகச் செய்வாயாக என்பது திரண்ட பொருள்.) (6)

## மந்திரம் 7.

२३१ २ ३ १२ ३ १ २
415. अक्षन्नमीमदन्त ह्यव प्रिया अधूषत ।
१ २३ १२ ३ २ ३ १२ ३२उ ३क २र ३ १ २
अस्तोषत स्वभानवो विप्रा नविष्टयामती योजा न्विन्द्र ते हरी ॥७॥

இருக்கு 3-82-2.

அக்ஷந்நமீமதந்த ஹ்யவ ப்ரியா அதூஷத ।
அஸ்தோஷத ஸ்வபாநவோ விப்ரா நவிஷ்டயாமதீ யோஜா ந்விந்த்ர தே [ஹரீ ॥

அந்வயம்.

हे इन्द्र!, अक्षन्, हि, अमीमदन्त, प्रियाः अवाधूषत, स्वभानवः, विप्राः, नविष्टयामती, अस्तोषत, ते हरी, नु, योज ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திரனே! நீ |
| अक्षन् | அக்ஷந் | கொடுத்த அன்னத்தை வேள்வித் தலைவர்கள் அருந்தி |
| हि | ஹி | உண்மையாய்க் |
| अमीमदन्त | அமீமதந்த | களிப்புற்றார்கள். |
| प्रिया: अवाधूषत | ப்ரியா: அவாதூஷத | சுவையி லின்படைந்து கூறமுடியாதவர்களாய்க் களிப்பினால் தலையசைத்த பின்னர் |
| स्वभानव: | ஸ்வபாநவ: | தமதொளியால் விளங்கின |
| विप्रा: | விப்ரா: | அறிவு மிகுந்த வேட்போர்கள் |
| नविष्टयामती | நவிஷ்டயாமதீ | மிகப்புதிய தோத்திரங்களால் |
| अस्तोषत | அஸ்தோஷத | துதித்தனர். (ஆதலின்) |
| ते हरी | தெ ஹரீ | நினது குதிரைகளை |
| नु | நு | விரைவில் |
| योज | யொஜ | இரதத்திற் பூட்டுவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—7. கோதம ரிஷி.

இந்திரனே! நின்னாற் கொடுக்கப்பட்ட அன்னங்களை வேள்வித்தலைவர்கள் அருந்தினார்கள். அருந்தி உண்மையாய்க் களிப்புற்றவர்களாயிருக்கின்றார்கள். அதனால் உடம்பைக் குலுக்கினார்கள். அதாவது சுவை மிகுந்ததையுண்டதாற் களிப்பு மிகுந்து பேசமுடியாதவர்களாய்த் தேகத்தை யசைத்தார்கள் என்பதாம். பின்னர், தமது பிரகாசத்தால் விளங்கின அறிவுமிகுந்த வேட்போர்கள் வியப்பாகிய புதிய துதியால் இனிது துதித்தார்கள். ஆதலின் இந்திர! நின்னுடைய அரி, என்னு மிரண்டு குதிரைகளையும் விரைவில் இரதத்திற் பூட்டுவாயாக என்பதாம். (7)

## மந்திரம் 8.

२ ३ १ २ ३२उ ३ १२३ १२
416. उपो षु शृणुही गिरो मघवन् माऽतथा इव ।
३ १ २ ३१ २ ३ २३ २३ १ २ ३ २उ ३क २र ३ १ २
कदा नः सूनृतावतः कर इदर्थयास इधोजा न्विन्द्र ते हरी ॥८॥

இருக்கு 1-82-1.

உபொ ஷு ஶ்ருணுஹீ கிரொ மகவந் மாऽதயா இவ ।
கதா ந: ஸூந்ருதாவத: கர இதர்தயாஸ இதொஜா ந்விந்த்ர தெ
[ஹரீ ॥

அந்வயம்.

हे मघवन् इन्द्र !, गिरः, उप उ, सुश्रृणुहि, अतथा इव मा, सूनृतावतः, नः, कदाकरः, अर्थयास इत्, ते हरी, नु, योज ॥

பதவுரை

| | | |
|---|---|---|
| हे मघवन् इन्द्र ! | ஹே மகவந் இந்த்ர ! | தனமுடைய இந்திரனே! |
| गिरः | கிரஃ | உன்னுடைய துதிகளை |
| उप उ | உப உ | அருகில் வந்து |
| सुश्रृणुहि | ஸு-ஶ்ருணு-ஹி | இனிது கேட்பாயாக. |
| नः | நஃ | எங்களை |
| अतथा इव मा | அததா இவ மா | முன்னுள்ள தன்மையில் மாறு படாமலே |
| सूनृतावतः | ஸூ-ந்ருதாவதஃ | மெய்மை வாக்குடன், துதிவாக்கு களையுமுடையவர்களாக |
| कदाकरः ? | கதாகரஃ ? | எக்காற் செய்குவையோ ? (அறியேம்) |
| अर्थयास इत् | அர்த்தயாஸ இத் | எங்களுடைய துதிகளை ஏற்றுக் கொள்கின்றாய், ஆதலின் |
| ते हरी | தே ஹரீ | நினது குதிரைகளை |
| नु | நு | விரைவில் |
| योज | யோஜ | இரதத்திற்பூட்டுவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—8. கோதம ரிஷி.

தனமுடைய இந்திரனே! நீ எங்களுடைய தோத்திரங்களை அருகில் வந்து நன்கு கேட்பாயாக. முன்பு எவ்வாறிருந்தனையோ, அதினின்றும் மாறுபாடாகாதே. முன்னர் எங்கட்கு அநுக்கிரக புத்திபுடைய வனாயிருந் தனையன்றோ, அவ்வண்ணத்தனாகவேயிருப்பாய் என்பதாம். மற்றும், எங்களைச் சத்தியவாக்குடையார்களாகவும், இனிய தோத்திரமாகிய வாக்குடையார் களாகவும் எப்போது செய்குவையோ ? (அறியேம்.) நீயும் எங்களாற்றுதிக் கப்பட்டதை ஏற்றுக் கொள்கின்றாயே யன்றி தள்ளிலாய். இதனால் இந்திரனே ! உனது குதிரைகளை விரைவில் இரதத்திற்பூட்டுவாயாக என்பது பெற்றாம்.

(8)

## மந்திரம் 9.

३ १ २ ३ २ १ २र ३ १ २ ३ २

417. चन्द्रमा अप्स्वा ३ न्तरा सुपर्णो धावते दिवि ।

१ २ ३ १ २ ३ १ २ ३ १ २

न वो हिरण्यनेमयः पदं विन्दन्ति विद्युतो वित्तं मे अस्य रोदसी॥

இருக்கு 1-84-7.

சந்த்ரமா அப்ஸ்வா ந்தரா ஸுபர்ணோ தாவதே திவி |

ந வோ ஹிரண்யநேமய: பதம் விந்தந்தி வித்யுதோ வித்தம் மே
[அஸ்ய ரோதஸீ ||

அந்வயம்

अप्सु, अन्तः, सुपर्णः, चन्द्रमाः, दिवि, आधावते, हिरण्यनेमयः, विद्युतः, वः, पदं, अग्रं, नविन्दन्ति, रोदसी मे, अस्य, वित्तम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अप्सु | அப்ஸு | வானிலுள்ள நீர் மயமாகிய மண்டலங்களில் |
| अन्तः | அந்த: | உள்ளிருக்கின்ற |
| सुपर्णः | ஸுபர்ண: | சுழும்நை, என்னுஞ் சூரிய கிரணங்களோடு கூடிய |
| चन्द्रमः | சந்த்ரம: | சந்திரன் |
| दिवि | திவி | வானுலகில் |
| आधावते | ஆதாவதே | ஒரு தன்மையாய் விரைவிற் சென்றனன். அவனோடு கூடியுள்ள |
| हिरण्यनेमयः | ஹிரண்யநேமய: | பொன்னொத்த நோக்குடைய |
| विद्युतः | வித்யுத: | ஒளியுள்ள கிரணங்களே ! |
| वः | வ: | உங்களுடைய |
| पदं | பதம் | திருவடி யென்னும் |
| अग्रं | அக்ரம் | நுனியாகிய பாகத்தை |
| नविन्दन्ति | நவிந்தந்தி | எனது புலன்களடைகின்றில. |
| रोदसी | ரோதஸீ | வானுலக மண்ணுலக அபிமானி தேவதைகளே ! நீங்கள் |
| मे | மே | என்னுடைய |
| अस्य | அஸ்ய | இத் தோத்திரத்தை |
| वित्तं | வித்தம் | அறிவீர்களாக. |

சாயண பாடியம்.

**கண்டம்—7.** இருக்கு—9. திரித ரிஷி.

வானிலுள்ள நீர் மயமண்டலத்தின் நடுவிலுள்ள, அழகிய பொன்மய திருஷ்டிகள், அல்லது, கிரணங்கள், சுபர்ணம் கிரணமென நிருத்தம் 1-5-15ல் கூறியுள்ளது. அதாவது:—சுழும்நை என்னுங் கிரணங்களோடு கூடிய சந்திரன் வானுலகில் ஒரு தன்மையாகவே செல்கின்றான். அத்தன்மைய சந்திரனுடைய கிரணங்களே! அதாவது:—பொன்மயத்திற்கொத்த வரம்புடைய, அல்லது, பிரியமாகிய நடுப்பாகத்தைபுடைய, மிக விளங்குகின்ற (மின்னுகின்ற) கிரணங்களே! உங்களுடைய பாதங்களென்னும் நுனிப்பாகங்களே எனது புலன்கள் கிணறுமறைத்தலின் அடைந்தில. இது உரித்தல்ல ஆதலின் கிணற்றினின்று என்னைத் தூக்கிவிடுவீர்களாக. மற்றும், வான்மண்களே! நீங்கள் என்னுடைய இத் தோத்திரத்தை அறிவீர்களாக.

## மந்திரம் 10.

१ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २

418. प्रतिप्रियतमꣳ रथं वृषणं वसुवाहनम् ।

३ १ २ ३ २ ३ १२ ३ २ ३ २ ३ १२ ३ १२

स्तोता वामश्विना वृषिं स्तोमेभिर्भूषति प्रतिमाध्वी मम श्रुतꣳ हवम्॥

இருக்கு 5-75-1.

ப்ரதிப்ரியதமம் ரதம் வ்ருஷணம் வஸுவாஹநம் |
ஸ்தோதா வாமஶ்விநா வ்ருஷிம் ஸ்தோமேபிர்பூஷதி ப்ரதிமாத்வீ மம
[ஶ்ருதம் ஹவம் ||

அங்வயம்.

अश्विनौ !, वाम् , प्रियतमं, वृषणं, वसुवाहनं, रथं, स्तोता, ऋषिः, स्तोमेभिः,
प्रति प्रति भूषति, माध्वी श्रुतम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **अश्विनौ !** | அஶ்விநௌ ! | அசுவினி குமாரர்களே ! |
| **वाम्** | வாம் | உங்களுடைய |
| **प्रियतमं** | ப்ரியதமம் | மிகவன்மையுள்ளதும் |
| **वृषणं** | வ்ருஷணம் | பயனைப் பொழிவதும் |
| **वसुवाहनं** | வஸுவாஹநம் | தனத்தைச் சுமப்பதுமாகிய |

* स्तोमेन प्रति भूषति, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| रथं | 𑌰𑌥𑌂 | இரதத்தை, |
| स्तोता | 𑌸𑍍𑌤𑍋𑌤𑌾 | துதிப்போராகிய |
| ऋषि | 𑌋𑌷𑌿 | இருடிகள் |
| स्तोमेभिः | 𑌸𑍍𑌤𑍋𑌮𑍇𑌭𑌿𑌃 | தோத்திரங்களால் |
| प्रति प्रति भूषति | 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌭𑍂𑌷𑌤𑌿 | அலங்கரிக்கின்றார்கள். (ஆதலின்) |
| माध्वीः | 𑌮𑌾𑌧𑍍𑌵𑍀𑌃 | மதுவித்தையை புணர்ந்தோர்களே! நீங்கள் |
| श्रुतं | 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 | (அதைக்) கேட்பீர்களாக. |

சாயண பாடியம்

கண்டம்—7. இருக்கு—10. அவசியு ரிஷி.

அசுவினிகுமாரர்காள்! மிகப் பிரியமுள்ள உங்களுடைய இரதத்தை, துதிப்போராகிய இருடிகள் தோத்திரக் கொத்துகளால் அலங்கரிக்கின்றார்கள். அது எவ்விதமாகிய இரதமெனின்? பயனைப் பெய்வதும், தனங்களைத் தாங்குவதுமாம். இத்தன்மையை இரதத்தை (இங்கு) வரும்பொருட்டுத் துதிக்கின்றார்கள் என்பது பொருள். ஆதலின் மது வித்தையை புணர்ந்தோர்களே! நீங்கள் அத் துதியைக் கேட்பீர்களாக என்பதாம், (10)

ஏழாவது கண்டம்

முற்றும்.

---

## எட்டாவது கண்டம்

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—8.

எட்டு மந்திரங்களாலானது.

தேவதைகள், 1, 2, 7, அக்கினி. 3, உஷா. 4, சோமன். 5, 6, இந்திரன். 8, விசுவே தேவர்கள். சந்தம், 1, 7, பங்க்தி மேல் பிருகதி. சுரம், 1, 7, பஞ்சமம். 8, மத்தியமம்.

மந்திரம் 1.

१ २ ३१ २
419. आ ते अग्न इधीमहि द्युमन्तं देवाजरम् ।
२३ २ ३ १ २ ३ २ ३१ २ ३ १२र ३ २ ३ १२
यद्ध स्या ते पनीयसी समिद्दीदयति द्यवीषथं स्तोतृभ्य आभर ॥१॥

இருக்கு 5-6-4.

𑌆 𑌤𑍇 𑌅𑌗𑍍𑌨 𑌇𑌧𑍀𑌮𑌹𑌿 𑌦𑍍𑌯𑍁𑌮𑌨𑍍𑌤𑌂 𑌦𑍇𑌵𑌾𑌜𑌰𑌮𑍍 ।
𑌯𑌦𑍍𑌧 𑌸𑍍𑌯𑌾 𑌤𑍇 𑌪𑌨𑍀𑌯𑌸𑍀 𑌸𑌮𑌿𑌦𑍍𑌦𑍀𑌦𑌯𑌤𑌿 𑌦𑍍𑌯𑌵𑍀𑌷𑌂 𑌸𑍍𑌤𑍋𑌤𑍃𑌭𑍍𑌯 𑌆 𑌭𑌰॥

### அங்வயம்.

हे अग्ने देव!, द्युमन्तं, अजरं, ते, आ इधीमहि, यद्ध, पनीयसी, ते, स्या, समित्, द्यवि, दीदयति, स्तोतृभ्यः, इषं, आभर ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अग्ने देव!** | 𑌹𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇 𑌦𑍇𑌵 ! | அக்கினி தேவனே ! |
| **द्युमन्तं** | 𑌦𑍍𑌯𑍁𑌮𑌨𑍍𑌤𑌂 | ஒளியுடையவனும் |
| **अजरं** | 𑌅𑌜𑌰𑌂 | கிழத்தன்மையற்றோனுமாகிய |
| **ते** | 𑌤𑍇 | உன்னை |
| **आ इधीमहि** | 𑌆 𑌇𑌧𑍀𑌮𑌹𑌿 | எல்லா வகையானும் ஒளி மிகுவோனாய்ச் செய்கின்றோம். |
| **यद्ध** | 𑌯𑌦𑍍𑌧 | உண்மையாய்ப் |
| **पनीयसी** | 𑌪𑌨𑍀𑌯𑌸𑍀 | போற்றத்தக்க |
| **ते स्या** | 𑌤𑍇 𑌸𑍍𑌯𑌾 | உன்னுடைய அந்த |
| **समित्** | 𑌸𑌮𑌿𑌤𑍍 | ஒளியானது |
| **द्यवि** | 𑌦𑍍𑌯𑌵𑌿 | வானுலகிற் |
| **दीदयति** | 𑌦𑍀𑌦𑌯𑌤𑌿 | பளபளப்பாயிருக்கின்றது. |
| **स्तोतृभ्यः** | 𑌸𑍍𑌤𑍋𑌤𑍃𑌭𑍍𑌯𑌃 | துதிப்போர்களான எங்கட்கு நீ |
| **इषं** | 𑌇𑌷𑌂 | அன்னத்தைக் |
| **आभर** | 𑌆𑌭𑌰 | கொடுப்பாயாக. |

### சாயண பாடியம்.

*கண்டம்—8. இருக்கு—1. வசுசுருத ரிஷி.*

*அக்கினி தேவனே ! பிரகாசமுடையவனும், கிழப்பருவமற்றோனுமாகிய நின்னைப் பலவாற்றானும் (யாம்) வளர்க்கின்றோம். உண்மையிற் போற்றத்தக்க உன்னுடைய அந்த ஒளிப்பிழம்பானது வானுலகில் விளங்குகின்றது. மற்றும், தோத்திரம் பண்ணுகின்ற எங்கட்கு நீ அன்னத்தைக் கொடுப்பாயாக,*

(1)

## மந்திரம் 2.

१ २२ ३ १ २
420. आग्निं न स्ववृक्तिभिर्होतारं त्वा वृणीमहे ।
३१ २ ३१ २ ३ २ ३ १२ ३१ २ ३ १२ ३ २
*शीरं पावकशोचिषं वि वो मदे यज्ञेषु स्तीर्णबर्हिषं विवक्षसे ॥ २ ॥

இருக்கு 10-21-1.

ஆக்நிம் ந ஸ்வவ்ருக்திபிர்ஹோதாரம் த்வா வ்ருணீமஹே ।
ஶீரம் பாவகஶோசிஷம் வி வோ மதே யஜ்ஞேஷு ஸ்தீர்ணபர்ஹி-
[ஷம் விவக்ஷஸே ॥

### அந்வயம்.

(हे अग्ने!,) न, स्ववृक्तिभिः, होतारं, वः, यज्ञेषु, स्तीर्णबर्हिषं, शीरं, पावकशोचिषं, त्वा अग्निं, विमदे, आवृणीमहे, विवक्षसे ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे अग्ने!) | (ஹே அக்நே!) | (அக்கினியே!) |
| न | ந | இவ்வேளை |
| स्ववृक्तिभिः | ஸ்வவ்ருக்திபிঃ | தன்னாற் செய்யப்பட்ட தோத்திரங்களால் |
| होतारं | ஹோதாரம் | தேவர்களை யழைப்போனும், அல்லது, ஓமத்தைச் செய்வோனுமாகிய |
| वः | வঃ | உனது |
| यज्ञेषु | யஜ்ஞேஷு | வேள்களில் |
| स्तीर्णबर्हिषं | ஸ்தீர்ணபர்ஹிஷம் | எவர்க்குத் தருப்பையாசனம் விரித்துள்ளதோ, அத்தன்மையதும் |
| शीरं | ஶீரம் | ஔடத முதலியவைகளில் நிறைந்துள்ளதும் |
| पावकशोचिषं | பாவகஶோசிஷம் | பரிசுத்தப்படுத்து மொளியுடையதுமாகிய |
| त्वा अग्निं | த்வா அக்நிம் | அக்கினியென்னு முன்னைச் |
| विमदे | விமதே | சோமமருந்தலால் மிகுந்த களிப்புண்டாக்குதற் பொருட்டு |
| आवृणीमहे | ஆவ்ருணீமஹே | ஒருமையோடு ஆராதிக்கின்றோம். |
| विवक्षसे | விவக்ஷஸே | அக்கினி தேவனே! நீ பெரியோனா யிருக்கின்றாய். |

*यज्ञाय स्तीर्ण बर्हिषं विवो मदे शीर पावक शोचिषं विवक्षते, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—2. விமதரிஷி.

அக்கினியே! யாம் இப்போது, தானுகவே செய்யப்பட்ட குற்றமற்ற தோத்திரங்களால் தேவர்களை யழைப்போனும், அல்லது, ஓமக்கிரியைகளைச் செய்வோனுமாகிய 'அக்கினி என்னும் நின்னை ஒருமையுடன் ஆராதிக்கின்ருேம். எவ்வண்ணமாகிய அக்கினியை யெனின்? வேள்விகளில் எதன் பொருட்டுத் தருப்பையாசனம் விரித்து வைக்கப்பட்டிருக்கின்றதோ, அத்தன்மையதை. மற்றும், பச்சிலை முதலியவைகளில் யாண்டும் நிறைந்திருக்கின்றதை. பரிசுத்தஞ் செய்யும் பிரபையுடையதை. ஆராதிக்கின்ருேம் என்பதனோடு சேர்த்துக்கொள்க. அக்கினியே! நீயும் மகாணு யிருக்கின்ருய். அல்லது, வேள்வி சம்பந்தமாகிய சோமரசத்தை அருந்தலாலுண்டாகிய பல வகைக் களிப்பின்பொருட்டு உன்னை யாராதிக்கின்ருேம் என்று கூட்டிக் கொள்க.

மூலத்தில் அக்கினிம், என்னும் இரண்டாம் வேற்றுமை அக்கினியே! என விளியாயிற்று. ஈண்டு விமத மென்பது ஒரு இருடியின் பெயராதலுன் யாம் எனத் தம்மையே கொண்டனர். (2)

## மந்திரம் 3.

३१ २ ३ १ २३१२ ३२ ३१२

421. महे नो अद्य बोधयोषो राये दिवित्मती ।

१ २ ३ १ २ ३१२ ३ १ २२३ १ २

यथाचिन्नो अबोधयः सत्यश्रवसि वाय्ये सुजाते अश्वसूनृते ॥ ३ ॥

இருக்கு 5-71-1.

மஹெ நொ அத்ய் பொயயொஷொ ராயெ திவித்மதீ ।
யயாசிந்நொ அபொயயஃ ஸத்யஶ்ரவஸி வாய்யெ ஸுஜாதெ அஶ்வ
[ஸூந்ருதெ ॥

அந்வயம்.

दिवित्मती, उषः!, अद्य, नः, महे राये, यथाचित्, अबोधयः, नः, बोधयः, सुजाते, अश्वसूनृते, वाय्ये, सत्यश्रवसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| दिवित्मती | திவித்மதீ | ஒளியுடைய |
| उषः! | உஷஃ! | உஷாதேவியாரே! நீர் |
| अद्य | அத்ய | இவ்வேள்வித்தினத்தில் |
| नः | நஃ | எங்களை |

| | | |
|---|---|---|
| महे राये | 𑌮𑌹𑍇 𑌰𑌾𑌯𑍇 | மிகுந்த தனத்தின்பொருட்டு |
| यथाचित् | 𑌯𑌥𑌾𑌚𑌿𑌤𑍍 | எவ்வாறு |
| अबोधयः | 𑌅𑌬𑍋𑌧𑌯𑌃 | அறிவுறித்தினீரோ,(அவ்வாறே) |
| नः | 𑌨𑌃 | எங்கட்கு |
| बोधयः | 𑌬𑍋𑌧𑌯𑌃 | அறிவை விளங்கச் செய்வீராக. |
| सुजाते ! | 𑌸𑍁𑌜𑌾𑌤𑍇 ! | நற்பிறப்புடையாரே ! |
| अश्वसूनृते ! | 𑌅𑌶𑍍𑌵𑌸𑍂𑌨𑍃𑌤𑍇 ! | உண்மையாய் அன்புடன் துதித்தற்குரியாரே ! நீர் |
| वाय्ये | 𑌵𑌾𑌯𑍍𑌯𑍇 | வாயுவின் புத்திரனாகிய |
| सत्यश्रवसि | 𑌸𑌤𑍍𑌯𑌶𑍍𑌰𑌵𑌸𑌿 | சத்திய சிரவசனென்னும் எனக்கு அநுக்கிரகிப்பீராக. |

### சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—3. சத்தியசிரவ ரிஷி.

மிகுந்த ஒளியுடைய உஷா தேவியாரே! நீர் எங்கட்கு இவ்வேள்வித் தினத்தில் தனலாபத்தின் பொருட்டு அறிவுறுத்துவீராக. (விளக்குவீராக என்பது மது) விளக்கமானவிடத்து வேள்வி வாயிலாகத் தனத்தைத் தேடல் முடியுமாதலின் என்க. எவ்வாறு முன்பு (போனவைகளில்) விளக்கினீரோ, அவ்வாறே இப்போதும் அறிவுறுத்துவீராக என்பது பொருள். அழகிய சென்மத் தோற்றமுடையீர்! உண்மை யன்புடைய தோத்திரத்திற்குரியவரே! அத்தன்மைய தேவியாரே! நீர் வாயு புத்திரனென்னும் சத்திய சிரவசனாகிய எனக்கு அநுக்கிரகம் புரிவீராக என்பதாம். (3)

### மந்திரம் 4.

३२ ३ १२ ३ २ ३ १२ ३१ २र
422. भद्रं नो अपि वातय मनो दक्षमुत क्रतुम् ।
१२ ३ १ २र ३ २ ३ २ ३ २ ३ २ ३ १ २र३ १२
अथा ते सख्ये अन्धसो वि वो मदे *रणा गावो न यवसे विवक्षसे॥

இருக்கு 10-25-1.

𑌭𑌦𑍍𑌰𑌂 𑌨𑍋 𑌅𑌪𑌿 𑌵𑌾𑌤𑌯 𑌮𑌨𑍋 𑌦𑌕𑍍𑌷𑌮𑍁𑌤 𑌕𑍍𑌰𑌤𑍁𑌮𑍍 ।
𑌅𑌥𑌾 𑌤𑍇 𑌸𑌖𑍍𑌯𑍇 𑌅𑌨𑍍𑌧𑌸𑍋 𑌵𑌿 𑌵𑍋 𑌮𑌦𑍇 𑌰𑌣𑌾 𑌗𑌾𑌵𑍋 𑌨
[𑌯𑌵𑌸𑍇 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌸𑍇 ॥

அந்வயம்.

हे सोम !, विवक्षसे, अन्धसः, विमदे, नः, मनः, दक्षं, अपि उत, क्रतुं, भद्रं, वातय, अथा, यवसे, रणा, गावः, न ते, सख्ये ॥

---

* रणन् गावो, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम ! | ஹெ ஸொாஉ ! | சந்திரனே ! நீ |
| विवक्षसे | விவக்ஷஸெ | மகானுயிருக்கின்ருய். ஆதலின் |
| अन्धसः | அஂஸஸஃ | சோம சம்பந்தமான பொருட்களுக்கு |
| विमदे | விஉதெ | மிகக் களிப்பைக் கொடுக்குமிடத்து நீ |
| नः | நஃ | எங்களுடைய |
| मनः | உநஃ | மனத்தையும் |
| दक्षं अपि | உக்ஷம் அவி | அந்தரான்மாவையும் |
| उत | உத | மற்றும் |
| क्रतुं | க்ரதும் | மெய்யுணர்வையும் |
| भद्रं | ஹஉ்ரம் | மங்களம் |
| वातय | வாதய | உடையதாகச் செய்வாயாக. |
| अथा | அயா | மற்றும், துதிப்போர்கள் |
| यवसे रणा गावः न | யவஸெ ரணா ஗ாவஃ ந | கோக்கள் புல்லில் இரமிப்பன போன்று |
| ते | தெ | உன்னுடைய |
| सख्ये | ஸஂவெஷ | மித்திரத் தன்மையில் இரமிப்போர்களாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—4. விமதரிஷி.

சோமனே! நீ எங்களுடைய மனம், நலத்தைக் கருதுவதாகிய மங்கலத்தை யடையுமாறு செய்வாயாக. எங்கட்கு நல்லெண்ண முண்டாமாறு செய்வாயாக என்பதாம். அவ்வாறே, எங்கும் நிறைந்துள்ள அந்தரான்மாவையும் நற்செய்கையுடையதாகச் செய்வாயாக. மற்றும், உண்மையுணர்வை நல்ல நிச்சயமென்னும் மங்களமுடையதாகச் செய்வாயாக. பின்னர், துதிப்போனுல் துதித்தற்குரிய உன்னைத் துதிக்குந்தன்மை, ஆராதித்தற்குரியதால் ஆராதிக்குந்தன்மையாகிய மித்திரத் தொழிலில் இரமிப்போனுகுக. ஈண்டு இரமிப்போனுக என்பது எஞ்சியது. அதிலுவமை:—விருப்புள்ள கோக்கள் நற்புல்லில் பிரியப்படுகின்றன போன்றெனல். யாது இருக்குமிடத்திதனின்? சோமரசமென்னும் அன்ன சம்பந்தமாகிய பொருள்களில் சோமரசத்தாலுண்டாகின்ற பலவகையான களிப்பாகிய நிமித்தமிருக்குமிடத்து. யாதினு லிவ்வண்ணமெனின்? நீ மகானுயிருக்கின்ருய் ஆதலின் என்க. (4)

## மந்திரம் 5.

१ २ १ २ २ ३ २ ३ १ २२ ३ १२
423. क्रत्वा महाꣳ अनुष्वधं भीम आवावृते शवः ।
१ २ ३ १२ ३ २ ३ २ ३ १ २२ ३ १ २ ३ १२ ३२
श्रिय ऋष्व उपाकयोर्नि शिप्री हरिवां दधे हस्तयोर्वज्रमायसम् ॥

இருக்கு 1-81-4.

க்ரத்வா மஹாம் அநுஷ்வதம் பீம ஆவாவ்ருதே ஶவ: ।
ஶ்ரிய ருஷ்வ உபாகயோர் நி ஶிப்ரீ ஹரிவாம் தமே ஹஸ்தயோர்வ
[ஜ்ரமாயஸம் ॥

அந்வயம்.

क्रत्वा, महान्, भीमः, अनुष्वधं, शवः, आवावृते, ऋष्वः, शिप्री, हरिवान्, उपाकयोः, हस्तयोः, आयसं वज्रं, श्रिये, निदधे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| क्रत्वा | க்ரத்வா | மெய்யுணர்வால், அல்லது, கருமத்தால் |
| महान् | மஹாந் | மிகப் பெரியோனும் |
| भीमः | பீம: | பகைஞரைப் பயப்படுத்துவோனுமாகிய இந்திரன் |
| अनुष्वधं | அநுஷ்வதம் | சோமமாகிய அன்னத்தை யருந்திய பின்னர் |
| शवः | ஶவ: | தனது ஆற்றலை |
| आवावृते | ஆவாவ்ருதே | ஒருமுகப்பட்டுக் காட்டுகின்றான். பின்னர் |
| ऋष्वः | ருஷ்வ: | காணற்குரிய |
| शिप्री | ஶிப்ரீ | நீண்ட மூக்கை, அல்லது, தாடியை யுடையவனும் |
| हरिवान् | ஹரிவாந் | அரியென்னுங் குதிரைகளை யுடைய வனுமாகிய இந்திரன் |
| उपाकयोः हस्तयोः | உபாகயோ: ஹஸ்தயோ: | அருகிலுள்ள இரு கைகளில் |
| आयसं वज्रं | ஆயஸம் வஜ்ரம் | இரும்புமயமாகிய வச்சிராயுதத்தைச் |
| श्रिये | ஶ்ரியே | சம்பத்தின் பொருட்டுத் |
| निदधे | நிதமே | தாங்குகின்றான். |

சாயண பாடியம்.

**கண்டம்—8. இருக்கு—7. கோதம ரிஷி.**

கருமத்தால், அல்லது, மெஞ்ஞானத்தால் எல்லாரினும் மேம்பட்டோனும், சத்துருக்கட்குப் பலங் கொடுப்போனுமாகிய இந்திரன், சோமமாகிய அன்னத்தை யருந்திய பின்னர், தனது வலியை ஒருமுகமாய் வெளிப்படுத்துகின்றான். பின்னர், பார்க்கத்தக்க மூக்கையுடையவனும், அல்லது, முகத்தின் அமைப்பையுடையவனும், குதிரைகளையுடையவனுமாகிய இந்திரன் அருகினின்ற இருபுயங்களிலும் இரும்பு மயமாகிய வச்சிராயுதத்தை, சம்பத்தின்பொருட்டுத் தாங்குகின்றான். சோமரச மருந்தியதாற் களிப்படைந்த பேராற்றலுடைய இந்திரன் பகைஞரை யழிப்பதற்கு வச்சிராயுதமேந்தி நிற்கின்றான் என்பது பொருள். (5)

குறிப்பு.—ஈண்டுச் சுவதா, என்பது அன்னத்தின் பெயரென, 2·7·17·ல் நிருத்தங் கூறுகின்றது.

## மந்திம் 6.

२ ३ १ २र ३ २३१ २ ३ १ २

424. स घा तं वृषणꣳ रथमधितिष्ठाति गोविदम् ।

१ २र ३२ ३१ २ ३ १ २३ २३क २र ३ ३२

यः पात्रं हारियोजनं पूर्णमिन्द्र चिकेतति योजा न्विन्द्र ते हरी॥६॥

இருக்கு 1-83-4.

ஸ வா தம் வ்ருஷணம் ரதமதிதிஷ்டாதி கோவிதம் ।
யஃ பாத்ரம் ஹாரியோஜநம் பூர்ணமிந்த்ர சிகேததி யோஜா ந்விந்த்ர
[தே ஹரீ ॥

அந்வயம்.

स घा इन्द्रः, वृषणं, गोविदं, तं रथं अधितिष्ठाति, यः, हारियोजनं, पूर्णं, पात्रं, चिकेतति, ते, हरी, नु, योज ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **स घा इन्द्रः** | ஸ வா இந்த்ரஃ | அவ்விந்திரன் |
| **वृषणं** | வ்ருஷணம் | மனோவேட்கையைப் பொழியப் பெற்றதும் |
| **गोविदं** | கோவிதம் | கோக்களை யடைவிப்பதுமாகிய |
| **तं रथं अधितिष्ठाति** | தம் ரதம் அதிதிஷ்டாதி | அவ் விரதத்திலேறுவானாக. |

| | | |
|---|---|---|
| यः | யঃ | எந்த இரதம் |
| हारियोजनं | ஹாரியொஜநம் | பொரிமாவுடன் கூடிய |
| पूर्णं | வூர்ணம் | சோமரசம் நிறைந்த |
| पात्रं | வாத்ரம் | பாண்டத்தை |
| चिकेतति | சிகெததி | அறிவுறுத்துகின்றதோ, |
| हे इन्द्र ! | ஹெ இந்த்ர ! | இந்திர ! |
| ते | தெ | உன்னுடைய |
| हरी | ஹரீ | குதிரைகளை |
| नु | நு | விரைவில் |
| योज | யொஜ | அவ் விரதத்திற் பூட்டுவாயாக, |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—6. கோதம ரிஷி.

அவ்விந்திரன், உண்மையாய் மனோவாஞ்சையைப் பெய்வதும், கோக்களைச் சேர்விப்பதுமாகிய இரதத்தி லேறுவானாக. இந்திர! எவ்விரமானது ஆரி, என்னும் பொரிமாவோடு கூடிய சோமரசம் நிறைந்த பாத்திரத்தைத் தெரிவிக்கின்றதோ, அந்த இரதத்திலேறுவாயாக என முன்னுள்ளதோடு அந்வயித்துக் கொள்க. உன்னுடைய குதிரைகளை விரைவில் தேரிற் பூட்டுவாயாக என்பதாம். (6)

## மந்திரம் 7.

२ १ २र ३ ३ २ ३ १ २र ३१ २
425. अग्निं तं मन्ये यो वसुरस्तं यं *यन्ति धेनवः ।
२ ३ १२ ३२उ ३ १ २ ३ २ ३ १२ ३ २ ३ १ २
अस्तमर्वन्त आशवोस्तं नित्यासो वाजिन इषꣳ स्तोतृभ्य आभर॥७॥

இருக்கு 5-6-1.

அக்நிம் தம் மந்யெ யொ வஸுரஸ்தம் யம் யந்தி தெநவঃ ।
அஸ்தமர்வந்த ஆஶவொஸ்தம் நித்யாஸொ வாஜிந இஷம் ஸ்தொ[த்ருப்ய ஆபர ॥

அந்வயம்.

यः, वसुः, अस्तं, यं, धेनवः, यन्ति, अस्तं, आशवः, अर्वन्तः, अस्तं, नित्यासः, वाजिनः तं अग्निं मन्ये, स्तोतृभ्यः, इषं, आभर ॥

* नमन्ति, என்பது இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| | யஃ | எவ்வக்கினி |
| | வஸுஃ | வழிபடுவோர்கட்குத் தனமோ, |
| स्तं | அஸ்தம் | வீடென யாவர்கட்கும் பற்றுக் கோடாமோ, |
| यं | யம் | எவ்வக்கினியை |
| धेनवः | தெநவஃ | கோக்கள் |
| यन्ति | யந்தி | திருப்தி செய்யப் போகின்றனவோ, |
| अस्तं | அஸ்தம் | பற்றுக் கோடாகிய எவ் வக்கினியை |
| आशवः | ஆஶவஃ | வேகமுள்ள |
| अर्वन्तः | அர்வந்தஃ | குதிரைகளடைகின்றனவோ, |
| अस्तं | அஸ்தம் | பற்றுக் கோடாகிய எவ் வக்கினியை |
| नित्यासः | நித்யாஸஃ | நித்தியம் உபாசிக்கின்றவனும் |
| वाजिनः | வாஜிநஃ | அவியைத் தாங்குபவனுமாகிய வேள்வித்தலைவன் அடைகின்றானோ, |
| तं अग्निं मन्ये | தம் அக்நிம் மந்யே | அவ்வக்கினியை யான் துதிக்கின்றேன். |
| स्तोतृभ्यः | ஸ்தோத்ருப்யஃ | துதிக்கின்ற எமக்கு |
| इषं | இஷம் | (அவ்வக்கினி) அன்னத்தைக் |
| आभर | ஆபர | கொடுக்குக. |

## சாயண பாடியம்.

**கண்டம்—8.** இருக்கு—7. வசுசுருத ரிஷி.

எவ் வக்கினி வழிபடுவோர்கட்குத் தனமாயிருக்கின்றதோ, யாவர்கட்கும் வீடுபோல் ஆசிரயமாயுள்ள எவ்வக்கனியை, கோக்கள் பிரியப்படுத்துமாறு அடைகின்றனவோ, மற்றும், யாவர்கட்கும் பற்றுக்கோடாயுள்ள எவ்வக்கினியை விரைவிற்செல்லுஞ் சீலமுள்ள குதிரைகள் அடைகின்றனவோ, அவ்வாறே நித்திய வேள்வி செய்துள்ள அவிகளென்னும் அன்னங்களையுடைய வேள்வித்தலைவர்கள் அடைகின்றார்களோ, அவ் வக்கினியையான் துதிக்கின்றேன். அவ் வக்கினி துதிப்போர்கட்கு அன்னத்தைக் கொடுக்குக என்பதாம்.

(7)

## மந்திரம் 8.

२उ ३ १ २३ १ २र ३ १ २
426. न तमंहो न दुरितं देवासो अष्ट मर्त्यम् ।
३ १ २ १ १२ ३ २ ३ १ २र ३ १२ ३ २ ३ १ २
सजोषसो यमर्यमा मित्रो नयति वरुणो अतिद्विषः ॥ ८ ॥

இருக்கு 10-26-1.

ந தமம்ஹோ ந து³ரிதம் தே³வாஸோ அஷ்ட மர்த்யம் ।
ஸஜோஷஸோ யமர்யமா மித்ரோ நயதி வருணோ அதித்³விஷ꞉ ॥

அந்வயம்.

देवासः, अर्यमा, मित्रः, वरुणः, सजोषसः, अतिद्विषः, यं नयति, तं मर्त्यं, अंहः, न, दुरितं, न, अष्ट ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे देवासः! | ஹே தே³வாஸ꞉! | தேவர்காள்! |
| अर्यमा | அர்யமா | தண்டிக்கின்ற அரியமாதேவதையும் |
| मित्रः | மித்ர꞉ | காப்பாற்றுகின்ற மித்திர தேவதையும் |
| वरुणः | வருண꞉ | பாவத்தை நீக்குகின்ற வருண தேவதையும் |
| सजोषसः | ஸஜோஷஸ꞉ | அன்பினால் ஒன்று கூடியவர்களாய் |
| अतिद्विषः | அதித்³விஷ꞉ | சத்துருக்களை வெற்றிகொள்ளச் செய்து |
| यं नयति | யம் நயதி | எவனை மேற்பதவியிற் சேர்க்கின்றார்களோ, |
| तं मर्त्यं | தம் மர்த்யம் | அம் மனிதனுக்குப் |
| अंहः | அம்ஹ꞉ | பாவம் |
| न | ந | இல்லை. |
| दुरितं | து³ரிதம் | அதனுடைய பயனாகிய துர்க்கதியும் |
| न अष्ट | ந அஷ்ட | (அவனைப்) பற்றுவதில்லை. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—8. அம்மோமுக் வாமதேவ்ய ரிஷி.

தேவர்களே! பகைஞரைத் தண்டிக்கும், அரியமா என்னுந்தேவதை, எவனைக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றதோ, காப்பாற்றுகின்ற மித்திர

தேவதை எவனைக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றதோ! பாவத்தை நீக்கும் வருணதேவதை எவனைக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றதோ! அதாவது இம் மூன்று தேவர்களும் தம்முட் கூடினவர்களாய், அல்லது, பிரியமுடையவர்களாகி, சத்துருக்களைக் கடக்கச் செய்து துதிக்கின்றவனாகிய எவனை மேற் பதவியிற் கொண்டு சேர்க்கின்றார்களோ, (ஒவ்வொருவரைக் குறித்து ஒருமை) அவனை, பாவமும் அதன் பயனாகிய துர்க்கதியும் அணுகுவதில்லை என்பதாம். (8)

## எட்டாவது கண்டம்.

முற்றும்.

---

## ஒன்பதாவது கண்டம்.

---

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—9.

பத்து மந்திரங்களாலானது.

---

தேவதை 1, 6, 10, சோமன். 7, மருத்து. 8, அக்கினி. 9, வாசினம். சந்தங்கள். 1, 3, 4, 5, 7, 10, துவிபதபந்தி. 8, பந்தபந்தி. 9, பரோஷ்ணிக். 2, 3, திரிபதா. அநுஷ்டுப் பிபீலிகாமத்தியா. சுரம். 1, 3, 8, 10, பஞ்சமம். 2, 6, காந்தாரம். 9, ரிஷபம்.

### மந்திரம் 1.

२३ २ ३१ २ ३ २ ३ १ ३ १ २र

427. परि प्र धन्वेन्द्राय सोम स्वादुर्मित्राय पूष्णे भगाय ॥ १ ॥

இருக்கு 6-109-1.

பரி ப்ர த⁴ந்வேந்த்³ராய ஸோம ஸ்வாது³ர்மித்ராய பூஷ்ணே ப⁴கா³ய ॥

அந்வயம்.

हे सोम!, स्वादुः, इन्द्राय, मित्राय, पूष्णे, भगाय, परिप्रधन्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम!** | ஹெ ஸொம ! | சோமரசமே! |
| **स्वादुः** | ஸ்வாது: | இன்சுவையுடைய நீ |
| **इन्द्राय** | இந்த்ராய | இந்திரனுக்கும் |
| **मित्राय** | மித்ராய | மித்திர தேவதைக்கும் |
| **पूष्णे** | பூஷ்ணெ | பூஷாதேவதைக்கும் |
| **भगाय** | ஹமாய | ஐசுவரிய தேவதைக்கும் |
| **परि प्रधन्व** | பரி ப்ரயந்வ | எல்லாப் பாத்திரங்களிலும் நிறைவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—1. திரியர்ண திரிசதஸ்யு ரிஷிகள்.

சோமரசமே! இன்சுவையுள்ள நீ இந்திரன் பொருட்டும், மித்திர பூஷா தேவதைகளின் பொருட்டும், எல்லாப் பாத்திரங்களிலும் நிறைவாயாக என்பதாம். (1)

## ம ந் தி ர ம் 2.

२३१ २ ३ १२ ३ १२ ३ १ २ २१२
428. **पर्यूषु प्र धन्व वाजसातये परि वृत्राणि सक्षणिः ।**
३ २ ३१ २ ३ १ २
**द्विषस्तरध्या ऋणया न *ईरसे ॥ २ ॥**

இருக்கு 9-130-1.

பர்யூஷு ப்ரயந்வ வாஜஸாதயெ பரி வ்ருத்ராணி ஸக்ஷணி: ।
த்விஷஸ்தரத்யா ருணயா ந ஈரஸெ ॥

அந்வயம்.

हे सोम!, सु, वाजसातये, परिप्रधन्व, सक्षणिः, वृत्राणि, परि, नः, ऋणया, द्विषः, तरध्यै, ईरसे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम!** | ஹெ ஸொம ! | சோமரசமே! நீ |
| **सु** | ஸு | இனிது |
| **वाजसातये** | வாஜஸாதயெ | அன்னத்தைக் கொடுத்தற் பொருட்டுப் |
| **परि प्रधन्व** | பரி ப்ரயந்வ | பாண்டங்களில் நிறைவாயாக. |

*ईयसे, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| सक्षणिः | ஸக்ஷணி: | பொறுமையாஞ் சீலமுடைய நீ |
| वृत्राणि | வ்ருத்ராணி | சத்துருக்களிடத்துப் |
| परि | பரி | போரிடுவாயாக. |
| नः | ந: | எங்களுடைய |
| ऋणया | ருணயா | கடனை யொழிக்கின்ற நீ |
| द्विषः | த்விஷ: | சத்துருக்களைக் |
| तरध्यै | தரத்யை | கடப்பதற்கு, அல்லது, கொல்வதற்குப் |
| ईरसे | ஈரஸே | போரிடச் செல்கின்றாய். |

### சாயண பாடியம்.

*கண்டம்—9. இருக்கு—2. திரியர்ண திரிசதஸ்யு ரிஷி.*

சோமரசமே! நீ எங்கட்கு மிகுதியாய் அன்னங்கொடுத்தற் பொருட்டாகவே நாற்புறமு மினிது சூழ்வாயாக. அல்லது, அன்ன இலாபத்தின் பொருட்டுப் போர்க்குச் செல்வாயாக. அன்றியும், அடங்கிய குணமுடைய நீ போரின் பொருட்டு சத்துருக்களை அடைவாயாக. அப்பொருளே கூறப்படுகின்றது:—எங்களுடைய கடன்களை யொழிக்கப்பட்ட நீ சத்துருக்களைக் கடக்க, அல்லது, கொல்லச் செல்கின்றாய். (2)

### மந்திரம் 3.

१२ ३ १ २३२ ३ २ ३ २ ३ २ १ २ २२

429. **पवस्व सोम महान्त्समुद्रः पिता देवानां विश्वाभिधाम ॥ ३ ॥**

இருக்கு 6-106-4.

**பவஸ்வ ஸோம மஹாந்த்ஸமுத்ர: பிதா தேவாநாம் விஶ்வாபிதாம ‖**

அந்வயம்.

हे सोम!, महान्, समुद्रः, पिता, विश्वा, देवानां, धाम, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹே ஸோம! | சோமரசமே! நீ |
| महान् | மஹாந் | பெருந்தன்மை யுடையவனும் |
| समुद्रः | ஸமுத்ர: | இரசமாய் ஒழுகுவோனுமாகின்றாய். |
| पिता | பிதா | அனைவரையுங் காப்பாற்றுகின்ற |

| | | |
|---|---|---|
| **विश्वा** | விஶ்வா | எல்லாத் |
| **देवानां** | தெவாநாம் | தேவர்களுடைய |
| **धाम** | யாம | இடங்களிலும் (உள்ள) |
| **पवस्व** | வவஸ்வ | பாத்திரங்களை நிறையச் செய்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—3. திரியர்ண திரிசதஸ்யு ரிஷி.

சோமரசமே! தேவர்கட்குக் கொடுக்குந் தன்மையாற் பெருந்தன்மை யுடையவனும், பெருகிய இரசங்களா யொழுகப்பட்டவனும், காப்பாற்று வோனுமாகிய நீ, தேவர்களுடைய தேகங்களைக் குறியாக வைத்துக்கொண்டு பாத்திரங்களை நிறையச் செய்வாயாக என்பதாம். (3)

## மந்திரம் 4.

१२ ३२उ ३ २ ३ २ ३ २ ३ १ २र

430. **पवस्व सोम महे दक्षायाश्वो न निक्तो वाजी धनाय ॥ ४ ॥**

இருக்கு 9-109-10.

**வவஸ்வ ஸொம மஹெ தக்ஷாயாஶ்வொ ந நிக்தொ வாஜீ யநாய ॥**

அந்வயம்.

**हे सोम!, अश्वः न, निक्तः, वाजी, महे, दक्षाय, धनाय, पवस्व ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम!** | ஹெ ஸொம! | சோமரசமே! |
| **अश्वः न** | அஶ்வஃ ந | குதிரையைப் போன்று |
| **निक्तः** | நிக்தஃ | நீரால் சுத்தஞ் செய்யப் பெற்று |
| **वाजी** | வாஜீ | வேகமுடையவனுயுள்ள நீ |
| **महे** | மஹெ | மிகுந்த |
| **दक्षाय** | தக்ஷாய | ஆற்றலின் பொருட்டும் |
| **धनाय** | யநாய | தனத்தின் பொருட்டும் |
| **पवस्व** | வவஸ்வ | பாத்திரத்தை நிறையச் செய்வாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—4.

சோமரசமே! குதிரையைப் போன்று விரைவுடையவனும், நீராற் பவித்திரமாக்கப் பெற்றவனுமாகிய நீ பேராற்றலின் பொருட்டும், தனத்தின் பொருட்டும், பாத்திரத்தை நிறையவைப்பாயாக என்பதாம். (4)

## மந்திரம் 5.

१ २ ३ २३१ २ ३ २३१२ ३१ २र

431. इन्दुः पविष्ट चारुर्मदायापामुपस्थे कविर्भगाय ॥ ५ ॥

இருக்கு 9-109-13.

ஐந்துஃ வவிஷ்ட சாருர்மதாயாவாமுவஸ்தெ கவிர்ஹகாய ॥

### அந்வயம்.

चारुः, कविः, इन्दुः, भगाय, मदाय, अपां उपस्थे, पविष्ट ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| चारुः | சாருஃ | மங்களமாகியவனும் |
| कविः | கவிஃ | நுண்ணறிவுடையவனுமாகிய |
| इन्दुः | ஐந்துஃ | சோமரசமே! நீ |
| भगाय | ஹகாய | போற்றத்தக்க தனத்தின் பொருட்டும் |
| मदाय | மதாய | களிப்பின் பொருட்டும் |
| अपां उपस्थे | அவாம் உவஸ்தெ | நீருக்குள் |
| पविष्ट | வவிஷ்ட | நிறைகின்றாய். |

### சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—5. திரியர்ண திரிசதஸ்யு ரிஷி.

மங்களமானவனும், நீண்மதி யுடையோனுமாகிய சோமரசமே! நீ நீரின் மத்தியில் அதாவது அந்தரிட்சத்தில், அல்லது, பாத்திரத்திற், களிப்பின்பொருட்டு நிறைகின்றாய் என்பதாம். (5)

## மந்திரம் 6.

२ ३ १ २ ३१ २ ३ १ २ ३१ २ ३ १ २

432. अनु हि त्वा सुतꣳ सोम मदामसि महे समर्य्यराज्ये ।

१ २ ३ १ २ ३ १ २

वाजाꣳ अभि पवमान प्र गाहसे ॥ ६ ॥

இருக்கு 9-110-2.

அநு ஹி த்வா ஸுதம் ஸோம மதாமஸி மஹே ஸமர்ய்யராஜ்யே ।
வாஜாம் அபி பவமாந ப்ர காஹஸே ॥

### அந்வயம்.

हे सोम !, सुतं, त्वा, अनुमदामसि हि, पवमान, महे, समर्य्यराज्ये, वाजान्, अभिप्रगाहसे ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम ! | ஹே ஸோம ! | சோமரசமே! |
| सुतं | ஸுதம் | பிழிந்தெடுக்கப்பெற்ற |
| त्वा | த்வா | உன்னை |
| अनुमदामसि हि | அநுமதாமஸி ஹி | முறையாய்த் துதிக்கின்றோம். |
| पवमान ! | பவமாந ! | பாதுகாப்பாற்றுவோய் ! நீ |
| महे | மஹே | பெரியை. |
| समर्यराज्ये | ஸமர்யராஜ்யே | மனிதர்களோடு கூடிய |
| वाजान् अभिप्रगाहसे | வாஜாந் அபிப்ரகாஹஸே | தனது இராச்சியத்தைக் காப்பாற்றுதற்குப் பகைஞர்படைகளை நோக்கிச் செல்கின்றாய். |

### சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—6. திரியர்ண திரிசதஸ்யு ரிஷி.

சோமரசமே! பிழிந்தெடுத்துள்ள நின்னை உண்மையில் முறையாகத் துதிக்கின்றோம். பாதுகாக்குஞ் சோமரசமே! நீ பெரியை. மனிதர்களோடு கூடிய இராச்சியத்தைப் பாதுகாப்பாற்றுதற் பொருட்டுச் சத்துருக்களின் ஆற்றலை நோக்கி நன்கு சென்றுகொண்டிருக்கின்றாய் என்பதாம். (6)

## மந்திரம் 7.

१ ३क २र ३ २३ १ २ ३२ ३ २ ३ २ ३ १ २

433. क ईम् व्यक्ता नरः सनीडा रुद्रस्य मर्या अथा स्वश्वाः ॥ ७ ॥

இருக்கு 8-21-1.

ക ഈം വ്യക്താ നരഃ സനീഡാ രുദ്രസ്യ മര്യാ അഥാ സ്വശ്വാഃ ॥

அந்வயம்.

व्यक्ताः, नरः, सनीडा, मर्याः, अथा, स्वश्वाः, रुद्रस्य, ईम्, के? ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| व्यक्ताः | വ്യക്താഃ | காந்தியை யுடையவர்களும் |
| नरः | നരഃ | தலைமையைத் தாங்குவோர்களும் |
| सनीडा | സനീഡാ | ஒத்த இடத்தையுடையார்களும் |
| मर्याः | മര്യാഃ | மனிதர்கட்கு இன்பஞ் செய்வோர்களும் |
| अथा | അഥാ | மற்றும் |
| स्वश्वाः | സ്വശ്വാഃ | சிறந்த குதிரையை யுடையார்களும் |
| रुद्रस्य | രുദ്രസ്യ | இரக்கத்தோடு வேண்டுவோர்கட்கு இதஞ் செய்பவர்களுமான |
| ईम् | ഈം | இத்தன்மையர்கள் |
| के? | കേ? | யாவர்கள்? |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—7. வாசிட்ட ரிஷி.

காந்தியோடு கூடியவர்களும், தலைமையாய்ச் செலுத்துவோர்களும், ஒத்த இடமுடையார்களும், அழுது துன்புற்ற மனிதர்கட்கு நலஞ்செய்வோர்களும், மற்றும், சிறந்த குதிரையையுடையார்களுமான இவ்வண்ணத்தவர்கள் எவர்களிருக்கின்றார்கள்? வடிவ வியப்பினால் இருடியானவர் அற்புதமாகச் சொல்கின்றார் என்பதாம். (7)

## மந்திரம் 8.

२३ २ ३ २ ३ २उ ३ २ ३ २ ३ १ २ ३ १२

434. अग्ने तमद्याश्वं नस्तोमैः क्रतुं न भद्रंᳶ हृदिस्पृशम् ।

३ १ २ ३ १२

ऋध्यामा त ओहैः ॥ ८ ॥

இருக்கு 4-10-1.

𑌅𑌗𑍍𑌨𑍇 𑌤𑌮𑌦𑍍𑌯𑌾𑌶𑍍𑌵𑌂 𑌨 𑌸𑍍𑌤𑍋𑌮𑍈𑌃 𑌕𑍍𑌰𑌤𑍁𑌂 𑌨 𑌭𑌦𑍍𑌰𑌂 𑌹𑍃𑌦𑌿𑌸𑍍𑌪𑍃𑌶𑌮𑍍 ।
𑌋𑌧𑍍𑌯𑌾𑌮𑌾 𑌤 𑌓𑌹𑍈𑌃 ॥

## அந்வயம்.

हे अग्ने!, अद्य, ओहैः, स्तोमैः, अश्वं न, क्रतुं न, भद्रं, हृदिस्पृशं, तं,
ऋध्याम ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अग्ने!** | 𑌹𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇! | அக்கினியே! |
| **अद्य** | 𑌅𑌦𑍍𑌯 | இன்று, வேட்போர் முதலிய யாங்கள் |
| **ओहैः** | 𑌓𑌹𑍈𑌃 | இந்திரன் முதலிய தேவர்களை அடையச் செய்கின்ற |
| **स्तोमैः** | 𑌸𑍍𑌤𑍋𑌮𑍈𑌃 | தோத்திரங்களால், |
| **अश्वं न** | 𑌅𑌶𑍍𑌵𑌂 𑌨 | பரிபோல் அவிகளைக் கொண்டு சேர்ப்பிப்பதும் |
| **क्रतुं न** | 𑌕𑍍𑌰𑌤𑍁𑌂 𑌨 | வேள்வி செய்வான் போன்று (அநுகூலஞ்செய்வதும்) |
| **भद्रं** | 𑌭𑌦𑍍𑌰𑌂 | மங்கலமாகியதும் |
| **हृदिस्पृशं** | 𑌹𑍃𑌦𑌿𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 | மிக அன்புள்ளதும் |
| **तं** | 𑌤𑌂 | கீர்த்தி யுடையதுமாகிய அத்தகைய உன்னை |
| **ऋध्याम** | 𑌋𑌧𑍍𑌯𑌾𑌮 | வளர்க்கின்றோம். |

## சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—8. வாமதேவ ரிஷி.

அக்கினியே! நீ இத்தினத்தில் வேட்போர் முதலிய யாங்கள் இந்திரன் முதலிய தேவர்களை யடைவிக்கத்தக்க தோத்திர மஞ்சரிகளால், கீர்த்திபெற்ற உன்னை இனிது விருத்திபண்ணுகின்றோம். எத்தன்மைய நின்னை யெனின்? சுமை சுமக்கின்ற குதிரை யொப்ப அவிகளைத் தாங்குவோனாகிய தலைவனை யொத்து அனுகூலஞ் செய்வோனை. அங்ஙனமே போற்றற்குரியானை. மற்றும், உள்ளத்தில் அன்பு செய்வானை. விருத்தி பண்ணுகின்றோம் என்பதனோடு சேர்த்துக்கொள்க. (8)

மந்திரம் 9.

३१२ ३ १ २र ३१२ ३१२ ३ २ ३२

435. आविर्मर्य्या आ वाजं वाजिनो अग्मन् देवस्य सवितुः सवम् ।

३ १ २

स्वर्गाँ अर्वन्तो जयत ॥ ९ ॥

ஆவிர்மர்யா ஆ வாஜம் வாஜிநோ அக்மந் தேவஸ்ய ஸவிதுஃ ஸவம்।
ஸ்வர்காம் அர்வந்தோ ஜயத ||

அந்வயம்.

मर्य्याः, आविः, वाजिनः, सवितुः देवस्य, सवं, वाजं, अग्मन्, स्वर्गाँ, अर्वन्तः, जयत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मर्य्याः | மர்யாஃ | மனிதர்கட்கு இனிமை செய்வதும் |
| आविः | ஆவிஃ | பிரகாசமுடையதுமாகிய |
| वाजिनः | வாஜிநஃ | அவியேற்குந் தேவதையானது, |
| सवितुः देवस्य | ஸவிதுஃ தேவஸ்ய | ஏவுந்தேவதைகட்குத் |
| सवं | ஸவம் | தேடற்குரிய |
| वाजं | வாஜம் | அன்னமாகிய சோமரசத்தைப் |
| अग्मन् | அக்மந் | பெற்றுக்கொண்டது. ஆதலின் வேள்வித் தலைவர்காள்! நீவிர் |
| स्वर्गाँ | ஸ்வர்காம் | சுவர்க்கத்தையும் |
| अर्वन्तः | அர்வந்தஃ | குதிரைகளையும் |
| जयत | ஜயத | வெற்றி கொள்வீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—9. வாசிதேவதைகளின் துதி.

மனிதர்கட்கு இனிமையானதும், பிரகாசமுடையமாகிய வாசினம் என்னுந் தேவதையானது, ஏவற்றேவதையினுடைய அன்னமாகிய சோமத்தைப் பெற்றுக்கொண்டது. வேள்வித் தலைவர்காள்! நீவிர் சுவர்க்கத்தையும், குதிரைகளையும் வெற்றிகொள்வீர்களாக என்பதாம் (9)

## மந்திரம் 10.

१२ ३ १ २ ३२ ३ १ २ ३१२ ३ २
436. पवस्व सोम द्युम्नी सुधारो महाँ अवीनामनु पूर्व्यः ॥ १० ॥

இருக்கு 9-109-7.

𑌪𑌵𑌸𑍍𑌵 𑌸𑍋𑌮 𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑍀 𑌸𑍁𑌧𑌾𑌰𑍋 𑌮𑌹𑌾𑌂 𑌅𑌵𑍀𑌨𑌾𑌮𑌨𑍁 𑌪𑍂𑌰𑍍𑌵𑍍𑌯𑌃॥

### அந்வயம்.

हे सोम!, द्युम्नी, सुधारः, पूर्व्यः, महान्, अवीनां, अनुपवस्व ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम!** | 𑌹𑍇 𑌸𑍋𑌮 ! | சோமரசமே! |
| **द्युम्नी** | 𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑍀 | அன்னம், அல்லது, கீர்த்தியை யுடையதும் |
| **सुधारः** | 𑌸𑍁𑌧𑌾𑌰𑌃 | அழகிய தாரையை யுடையதும் |
| **पूर्व्यः** | 𑌪𑍂𑌰𑍍𑌵𑍍𑌯𑌃 | பழமையானதும் |
| **महान्** | 𑌮𑌹𑌾𑌨𑍍 | பெரிதுமாகிய நீ |
| **अवीनां** | 𑌅𑌵𑍀𑌨𑌾𑌂 | ஆட்டின் உரோமங்களினின்றும் |
| **अनुपवस्व** | 𑌅𑌨𑍁𑌪𑌵𑌸𑍍𑌵 | முறையாய் ஒழுகுவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—10. ஐசுவரர்கள், திஷண்யார்கள் ரிஷிகள்.

சோமரசமே! அன்னமுடையதும், அல்லது, கீர்த்தி யுடையதும், 'த்யும்நம்' என்பது அன்னமென யாஸ்க முனிவரும் நிகண்டின் நைகம காண்டம் 5-5-ல் கூறியுள்ளார். அழகிய தாரையையுடையதும், பழமை யானதும், மகத்தாகியதுமாகிய நீ உரோமங்களினின்றும் (வடிக்கும் கம்ப ளியிலிருந்து) முறையாய் நிறைவாயாக என்பதாம். (10)

**குறிப்பு**—ஈண்டு 'த்யும்நம்' என்பது கீர்த்தியாம்.

## ஒன்பதாவது கண்டம்

முற்றும்.

## பத்தாவது கண்டம்.

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—10.

பத்து மந்திரங்களாலானது.

தேவதைகள். 1, 5, 8, 10, இந்திரன். 6, விசுவ தேவர்கள். 7, உஷா. சந்தம், பந்தி. சுரம், பஞ்சமம்.

### மந்திரம் 1.

१ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २

437. विश्वतो दावन् विश्वतो न आभर यं त्वा शविष्ठमीमहे ॥ १ ॥

விஶ்வதோ தாவநு விஶ்வதோ ந ஆஹர யம் த்வா ஶவிஷ்டமீமஹே ॥

அந்வயம்.

विश्वतो दावन्!, शविष्ठं, यं त्वा, ईमहे, विश्वतः, नः, आभर ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विश्वतो दावन्! | விஶ்வதோ தாவநு! | யாண்டுஞ் சத்துருக்களை யழிப்போனும், அன்பர்கட்கு வரங் கொடுப்போனுமாகிய இந்திர! நீ |
| शविष्ठं | ஶவிஷ்டம் | பேராற்றலுடைய |
| यं त्वा | யம் த்வா | யாதொரு நின்னைக் குறித்து |
| ईमहे | ஈமஹே | விரும்பியதை யிரக்கின்றோம். |
| विश्वतः | விஶ்வதஃ | எல்லாவகையானும் |
| नः | நஃ | எங்கட்கு |
| आभर | ஆஹர | விரும்பிய பொருளைக் கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—1.

எல்லாவகையினும் பகைஞரைத் தொலைப்போனும், யாவர்கட்கும் ஈவோனுமாகிய இந்திரனே! நீ, எல்லா விதத்தாலும் எங்கட்கு வேண்டியதைக் கொடுப்பாயாக. மற்றும், சிறந்த வலியுடைய நின்பால் விரும்பிய பொருளை யிரக்கின்றோம் என்பதாம். (1)

### மந்திரம் 2.

३२ ३२उ ३ २ ३ २ ३ १ २ ३ २ ३ २

438. एष ब्रह्मा य ऋत्विय इन्द्रो नामश्रुतो गृणे ॥ २ ॥

ஏஷ ப்₃ரஹ்மா ய ருத்விய இந்த்₃ரோ நாமஶ்ருதோ க்₃ருணே ॥

அந்வயம்.

ऋत्वियः, यः, नामश्रुतः, ब्रह्मा, एषः, गृणे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| ऋत्वियः | ருத்வியஃ | வசந்தம், முதலிய இருதுக்களில் வெளிப்படுகின்ற |
| यः इन्द्रः | யஃ இந்த்₃ரஃ | யாதொரு இந்திரன் |
| नामश्रुतः | நாமஶ்ருதஃ | தனது பெயராற் கீர்த்தியுடைய வனுயிருக்கிறுனே, |
| ब्रह्मा | ப்₃ரஹ்மா | துதிப்போர்களின் மனவிருப்பை நிறைவு பண்ணுபவனுகிய |
| एषः | ஏஷஃ | இத்தன்மையனைத் |
| गृणे | க்₃ருணே | துதிக்கின்றேன், |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—2.

வசந்த காலம் முதலிய இருதுக்களில் தோன்றுகின்றவனுகிய யாதொரு இந்திரன் தனது திருநாமத்தாலே கீர்த்தியுடையவனுகின்றுனே, அத்தகைய இவ்விந்திரன் துதிப்போர்களின் மனம் விரும்பிய பொருளை நிறையச் செய்வோனுகின்றுன். அவ் விந்திரனை யான் துதிக்கின்றேன் என்பதாம். (2)

### மந்திரம் 3.

३ २ ३ १ २ ३१ २ ३ १ २र ३१२ ३ २ ३ १ २

439. ब्रह्माण इन्द्रं महयन्तो अर्कैरवर्द्धयन्नहये हन्तवा उ ॥ ३ ॥

இருக்கு 5-31-4.

ப்₃ரஹ்மாண இந்த்₃ரம் மஹயந்தோ அர்கைரவர்த்₃த₄யந்நஹயே
[ஹந்தவா உ ॥

அந்வயம்.

अहये, हन्तवे, अर्कैः, महयन्तः, ब्रह्माणः, इन्द्रं, अवर्द्धयन् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **अहये हन्तवे** | அஹயெ ஹந்தவெ | விருத்திராசுரனைக் கொல்லுதற் பொருட்டு |
| **अर्कैः** | அர்கை: | போற்றத்தக்க துதிகளால் |
| **महयन्तः** | மஹயந்த: | ஆராதிக்கின்ற |
| **ब्रह्माणः** | ப்ரஹ்மாண: | அந்தணர்கள் |
| **इन्द्रं** | இந்த்ரம் | இந்திரனை |
| **अवर्द्धयन्** | அவர்த்தயந் | வளர்க்கின்றார்கள். |

### சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—3. திரிசதஸ்யு ரிஷி.

போற்றத்தக்க மந்திரங்களாலும், தோத்திரங்களாலும், அவியாகிய அன்னங்களாலும் ஆராதிக்கின்ற அந்தணர்கள் இந்திரனை வளர்க்கின்றார்கள். அதாவது அன்புடையோனாகச் செய்கின்றார்கள் என்பதாம். மூலத்தில் ஹந்தும், எனற் பாலது, ஈற்றேகாரம் பெற்று ஹந்தவே என்றாயிற்று. ஈண்டு விருத்திராசுரனை, கொல்லுந் தொழிற்கு செயப்படு பொருளாகக் கொள்ளலின், பயநிலைக்கு விசேடணமாயிற்று. விருத்திராசுரனைக் கொல்லு தற் பொருட்டு என்பது திரண்ட பொருள். (3)

### மந்திரம் 4.

१२ ३ २-३१ २ ३ २ ३१ २ ३१२

440. **अनवस्ते रथमश्वाय तक्षुस्त्वष्टा वज्रं पुरुहूत द्युमन्तम् ॥ ४ ॥**

இருக்கு 5-31-4.

அநவஸ்தெ ரதமஶ்வாய தக்ஷுஸ்த்வஷ்டா வஜ்ரம் புருஹூத [த்யுமந்தம் ||

### அந்வயம்.

**हे इन्द्र !, अनवः, ऋभवः, ते, अश्वाय, रथं, तक्षुः, पुरुहूत !, त्वष्टा, वज्रं, द्युमन्तं ॥**

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे इन्द्र !** | ஹெ இந்த்ர ! | இந்திரனே ! |
| **अनवः** | அநவ: | மனிதர்களும் |
| **ऋभवः** | ருபவ: | தேவர்களும் |
| **ते** | தெ | உன்னுடைய |
| **अश्वाय** | அஶ்வாய | குதிரையின் பொருட்டு |

| | | |
|---|---|---|
| **रथं** | ரதம் | இரதத்தைச் |
| **तक्षुः** | தக்ஷு: | செய்தார்கள். |
| **पुरुहूत !** | புருஹூத ! | பல்லோராலழைக்கப் பெற்ற இந்திர ! |
| **त्वष्टा** | த்வஷ்டா | விசுவகருமனும் |
| **वज्रं** | வஜ்ரம் | வச்சிராயுதத்தையும் |
| **द्युमन्तं** | த்யுமந்தம் | பிரகாசமுடைய தாய்ச் செய்தனன். |

## சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—4.

மனுடர்களும், தேவர்களும், உன்னுடைய குதிரையின் பொருட்டு (வாகனத்தின் பொருட்டு) இரதத்தைச் செய்தார்கள். பல்லோராலழைக்கப்படுகின்ற இந்திர ! துவஷ்டா, என்னும் விசுவகருமாவும் உன்னுடைய வச்சிராயுதத்தையும் பளபளப்புடையதாகச் செய்தனன் என்பதாம். (4)

## மந்திரம் 5.

२ ३२ ३१ २ ३ २ ३ १ २र ३ १ २ ३ १ २ ३ २

441. **शं पदं मघं रयीषिणो न काममव्रतो हिनोति न स्पृशद्रयिम् ॥ ५ ॥**

ஶம் பதம் மகம் ரயீஷிணோ ந காமமவ்ரதோ ஹிநோதி ந ஸ்ப்ருஶ
[த்ரயிம் ॥

### அந்வயம்.

**रयीषिणः, शं, पदं, मघं, अव्रतः, न हिनोति, कामं, रयिं, न स्पृशत् ॥**

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **रयीषिणः** | ரயீஷிண: | அவியாகிய தனத்தைக் கொடுப்போர்கள் |
| **शं** | ஶம் | இன்பமாகிய |
| **पदं** | பதம் | பதவியையும் |
| **मघं** | மகம் | தனத்தையும் அடைகின்றார்கள். |
| **अव्रतः** | அவ்ரத: | வேள்விமுதலியன செய்யாதோர்களோ, |
| **न हिनोति** | ந ஹிநோதி | தான முதலிய செய்ய முடியாதோர்களாகின்றார்கள். |
| **कामं** | காமம் | தாம் விரும்பிய |
| **रयिं** | ரயிம் | தனத்தைத் |
| **न स्पृशत्** | ந ஸ்ப்ருஶத் | தொடுதற்கும் முடியாமற் போகின்றார்கள். |

சாயண பாடியம்

கண்டம்—10. இருக்கு—6.

அவிகளென்னுந் தனங்களை யளிக்கின்ற சனங்கள் இன்பமாகிய பதவியைப் பெறுகின்றார்கள். தனத்தையும் அடைகின்றார்கள் என்பது எஞ்சியது: இந்திரனைக் குறித்து வேள்வி முதலியன செய்யாதோர்களோ, அவி கொடுக்க முடியாதவர்களாகின்றார்கள் என்பது பொருள். (அவர்கள்) சுக முதலியவைகளை யடையார்கள், தாமும் விரும்பிய இரமிக்கத்தக்க திரவியத்தைத் தொடவுமாட்டார்கள் என்பதாம். (5)

## மந்திம் 6.

२ ३ २ ३ १ २ ३ ३ १ २ ३ १ २ ३ १ २३१२
442. सदा गावः शुचयो विश्वधायसः सदा देवा अरेपसः ॥ ६ ॥

ஸதா₃ கா₃வ꞉ ஶுசயோ விஶ்வதா₄யஸ꞉ ஸதா₃ தே₃வா அரேபஸ꞉ ॥

அந்வயம்.

गावः, सदा, शुचयः, विश्वधायसः, सदा, देवाः, अरेपसः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| गावः | கா₃வ꞉ | இந்திரனைச் சரணடைவோர்கள் |
| सदा | ஸதா₃ | எப்போதும் |
| शुचयः | ஶுசய꞉ | நிருமலர்களும், |
| विश्वधायसः | விஶ்வதா₄யஸ꞉ | உலகனைத்தையும் பரிபாலிக்கத் தக்க ஆற்றலுடையார்களும் |
| सदा | ஸதா₃ | எப்போதும் |
| देवाः | தே₃வா꞉ | தானம், முதலிய குணத்தோடு கூடியவர்களும் |
| अरेपसः | அரேபஸ꞉ | பாவமற்றவர்களும் ஆகின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—6.

இந்திரன் பாற் செல்பவர்கள், அல்லது, இந்திரனைத் துதிப்போர்கள் எப்போதும் உலகனைத்தையும் பாதுகாக்கத்தக்க ஆற்றலுடையவர்களாகவும், (மிகுந்த அன்னமுடையார்களாகவும்) தான முதலிய நற்குணமுடையார்களாகவும் ஆகின்றார்கள் என்பதாம். (6)

## மந்திரம் 7.

१ २ ३ १२ ३ १ २र ३ १ २र
443. आयाहि वनसा सह गावः सचन्त वर्त्तनिं यदूधभिः ॥ ७ ॥

ஆயாஹி வநஸா ஸஹ காவ꞉ ஸசந்த வர்த்தநிம் யதூதபி꞉ ॥

அந்வயம்.

(हे उषः !,) वनसा सह, आयाहि, गावः, वर्त्तनिं, सचन्त, यत्, ऊधभिः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे उषः !) | (ஹே உஷ꞉ !) | (உஷா தேவியே ! நீ) |
| वनसा सह | வநஸா ஸஹ | விரும்புதற்குரிய ஒளியுடன் |
| आयाहि | ஆயாஹி | வருவாயாக. |
| गावः | காவ꞉ | உஷாதேவதையின் வாகனமாகிய கோக்கள் |
| वर्त्तनिं | வர்த்தநிம் | இரதத்தைச் |
| सचन्त | ஸசந்த | சேவிக்கின்றன. |
| यत् | யத் | எக்கோக்கள் |
| ऊधभिः | ஊதபி꞉ | பெரிய முலைக்காம்புகளோடு கூடினவைகளோ ! (அக்கோக்கள் கட்டப்பெற்ற இரதத்தில் வருவாயாக.) |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—7. சம்பாத ரிஷி.

உஷா தேவியே! நீ, போற்றத்தக்க ஒளியோடு வருவாயாக. உஷாவின் வாகனங்களான கோக்கள் இரதத்தைச் சேவிக்கின்றன. குதிரையற்ற இரதத்தில் வருவாயாக என்பதாம். எக் கோக்கள் முலைக் காம்புகளால் உபலக்கணமாய்க் கொள்ளப்பட்ட பருத்த தன்மையை யுடையனவோ, அக்கோக்கள் கட்டப்பெற்ற இரதத்தில் வருவாயாக எனச் சேர்த்துக் கொள்க. (7)

## மந்திரம் 8.

१ २ ३ १ २र ३ २ ३ १ २ ३ २ १२
444. उप प्रक्षे मधुमति क्षियन्तः *पुष्येम रयिं धीमहे त इन्द्र ॥ ८ ॥

இருக்கு 3-82-2.

---

* पुष्यन्तो என்பது இருக்கு.

உப ப்ரக்ஷே மதுமதி க்ஷியந்த: புஷ்யேம ரயிம் தீமஹே இந்த்ர ||

அந்வயம்.

हे इन्द्र !, प्रक्षे, ते उप क्षियन्तः, मधुमति, रयिं, पुष्येम, धीमहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே! |
| प्रक्षे | ப்ரக்ஷே | அரசன் செய்த அகப்பை விசேடத்தினுள் |
| ते उप क्षियन्तः | தே உப க்ஷியந்த: | நினக்கருகிலிக்கின்ற யாம் |
| मधुमति | மதுமதி | மதுர இரசத்தோடு கூடிய |
| रयिं | ரயிம் | இனிய அன்னத்தைப் |
| पुष्येम | புஷ்யேம | பரிமாறுகின்றோம். (மற்றும்) |
| धीमहे | தீமஹே | (உன்னையுந்) தியானிக்கின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—8.

இந்திரனே! (மிகுந்த திருவாளனே!) நீ, அரசனுற் செய்யப்பெற்ற அகப்பை விசேடத்தில், நினக்கருகிலுள்ள யாங்கள் இனிய இன்சுவையோடு கூடிய அன்னத்தைப் பரிமாறுகின்றோம். மற்றும், நின்னையுந் தியானிக்கின்றோம் என்பதாம் (8)

மந்திரம் 9.

१ २ ३२ ३१२ ३ २ २र ३२उ ३ १ २र

445. अर्चन्त्यर्कं मरुतः स्वर्का आस्तोभति श्रुतो युवा स इन्द्रः ॥ ९ ॥

அர்சந்த்யர்க்கம் மருத: ஸ்வர்க்கா ஆஸ்தோபதி ஶ்ருதோ யுவா ஸ இந்த்ர: ||

அந்வயம்

स्वर्काः, मरुतः, अर्कं, अर्चन्ति, युवा, श्रुतः, सः इन्द्रः, आस्तोभति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| स्वर्काः | ஸ்வர்க்கா: | அழகிய தோத்திரத்தை, அல்லது, அன்னத்தையுடைய |
| मरुतः | மருத: | மருத்துக்கள் |
| अर्कं | அர்க்கம் | ஆராதித்தற்குரிய இந்திரனை |

| | | |
|---|---|---|
| अर्चन्ति | அர்சந்தி | அவிகளாலும், தோத்திரங்களாலும் ஆராதிக்கின்றார்கள். |
| युवा | யுவா | கட்டிளமையுடையவனும் |
| श्रुतः | ச்ருதः | கீர்த்தி பெற்றவனுமாகிய |
| सः इन्द्रः | ஸः இந்த்ரः | அவ்விந்திரன் |
| आस्तोभति | ஆஸ்தோபதி | அவனுடைய பகைஞர்களைப் போராடிக் கொல்லுகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—9.

அழகான தோத்திரங்களை, அல்லது, அன்னங்களையுடைய மருத்துக்கள் (வாயு தேவகைகள்) போற்றத்தக்க இந்திரனை அவிகளாலும், தோத்திரங்களாலும் போற்றுகின்றார்கள். எக்காலு மிளைஞனும், கீர்த்தியுடையவனுமாகிய இந்திரன் சத்துருக்களை, போர் செய்து அழிக்கின்றான் என்பதாம். (9)

## மந்திரம் 10.

२ ३ १ २ ३१ २ ३ १ २ ३१ २ ३ २ ३ १२

446. प्र व इन्द्राय वृत्रहन्तमाय विप्राय गाथं गायत यं जुजोषते ॥ १० ॥

சா. வே. 2-2.

ப்ர வ இந்த்ராய வ்ருத்ரஹந்தமாய விப்ராய கா₃த₂ம் கா₃யத யம் [ஜுஜோஷதே ॥

அந்வயம்.

(हे उद्गातारः!,) वृत्रहन्तमाय, विप्राय, इन्द्राय, यं, जुजोषते, गाथं, प्रगायत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे उद्गातारः!) | (ஹே உத்₃கா₃தாரः!) | (சாமவேதமோதுவோர்காள்!) |
| यं | யம் | எந்தத்துதியை (இந்திரன்) |
| जुजोषते | ஜுஜோஷதே | அன்போடு ஏற்றுக் கொள்கின்றானோ, |
| वृत्रहन्तमाय | வ்ருத்ரஹந்தமாய | வியப்புடன் விருத்திராசுரனைக் கொன்றவனும், |
| विप्राय | விப்ராய | நுண்ணறிவாளனுமாகிய |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரனுக்கு |
| गाथं | கா₃த₂ம் | அத் தோத்திரத்தை |
| प्रगायत | ப்ரகா₃யத | நன்கு படிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—10.

சாமமறை பாடுவோர்காள்! நீவிர், அதிசயமாய் விருத்திராசுரனைக் கொன்றவனும், நுண்ணறிவாளனுமாகிய இந்திரன் பொருட்டு, அவ் விந்திரன் எத் தோத்திரத்தை அன்புடன் ஏற்றுக்கொள்கின்றானே, அத் தோத்திரத்தை இனிது படிப்பீர்களாக. (10)

## பத்தாவது கண்டம்

முற்றும்.

---

## பதினோராவது கண்டம்

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—11.

பத்து மந்திரங்களாலானது.

தேவதைகள். 1, 2, அக்கினி. 3, 4, 8, 10, இந்திரன். 5, உஷா. 6. 7, 9, விசுவ தேவர்கள்.

சந்தம், 1, 2, 5, 7, துவிபத பங்தி. 3, 8, பஞ்சதசாக்ஷர காயத்திரி. 10, ஏகபதா அட்டாக்ஷர காயத்திரி. 6, 8, 9, துவிபதா திருஷ்டுப்.

சுரம். 1, 2, 5, 7, பஞ்சமம். 3, 4, 10, ஷட்ஜம். 6, 8, 9, தைவதம்.

#### மந்திரம் 1.

१ २ ३ १ २र ३ २उ ३ १ २

447. अचेत्यग्निश्चिकितिर्हव्यवाड् न सुमद्रथः ॥ १ ॥

இருக்கு 8-56-5.

அசேத்யக்³நிஶ்சிகிதிர்ஹவ்யவாட் ந ஸுமத்³ரத²: ॥

---

* चिकितुः हव्यवाड सः, என்பது இருக்கு.

அந்வயம்.

**हव्यवाट्, चिकितिः, सुमद्रथः न, अग्निः, अचेति ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हव्यवाट्** | ஹவ்யவாட் | அவியைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதும் |
| **चिकितिः** | சிகிதி: | சிறந்த அறிவுடையதும் |
| **सुमद्रथः न** | ஸுமத்ரத: ந | நல்ல அவிகளோடு கூடிய ரதம் போன்றதுமாகிய |
| **अग्निः** | அக்நி: | அக்கினி |
| **अचेति** | அசேதி | அறிகின்றது, அல்லது, அறியப்படுகின்றது. |

சாயண பாடியம்.

*கண்டம்—11. இருக்கு—1.*

அவிகளை யேற்றுச் செல்வதும், சிறந்த அறிவுடையதும், நல்ல அவியோடு கூடியதுமாகிய இரதமொத்த அக்கினி, அனைவர்களாலு மறியப்படுகின்றது. அல்லது, அவிகொடுக்கும் வேள்வித் தலைவனை யறிகின்றது என்பதாம். (1)

## மந்திரம் 2.

२३ २ ३ १२ ३२ ३२३ १ २ ३१२र

**448. अग्ने त्वं नो अन्तम उत त्राता शिवो * भुवा वरूथ्यः ॥ २ ॥**

அக்நே த்வம் நோ அந்தம உத த்ராதா ஶிவோ புவா வரூத்ய: ॥

அந்வயம்.

**हे अग्ने!, वरूथ्यः, त्वं, नः, अन्तमः, उत, त्राता, शिवः भुवः ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अग्ने!** | ஹே அக்நே! | அக்கினியே! |
| **वरूथ्यः** | வரூத்ய: | வழிபடுதற்குரிய |
| **त्वं** | த்வம் | நீ |
| **नः** | ந: | எங்கட்கு |
| **अन्तमः** | அந்தம: | மிக அருகிலிருப்பவனாகவும் |
| **उत** | உத | மற்றும் |
| **त्राता** | த்ராதா | காப்பாற்றுவோனாகவும் |
| **शिवः** | ஶிவ: | சுகந்தருவோனாகவும் |
| **भुवः** | புவ: | ஆவாயாக. |

* भवा, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

**கண்டம்—11. இருக்கு—2. பந்து ரிஷி.**

அக்கினியே! நீ, வழிபடற்குரிய, அல்லது, வேள்விச் சாலைகாளற் சூழப்பெற்ற எங்கட்கு மிக அருகிலிருப்போனும், மற்றும், பாதுகாப்போனும், சுகஞ்செய்வோனும் ஆவாயாக என்பதாம். (2)

## மந்திரம் 3.

२ ३ २ ३ २ ३ २ ३ २ ३ १ २ १२
449. **भगो न चित्रो अग्निर्महोनां दधाति रत्नम् ॥ ३ ॥**

ஹ்கொ ந சித்ரோ அக்நிர்மஹோநாம் தயாதி ரத்நம் ॥

அந்வயம்.

**महोनां, भगो न, चित्रः, अग्निः, रत्नं, दधाति ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **महोनां** | மஹோநாம் | பெரிதுகளுக்குள் |
| **भगो न** | ஹ்கொ ந | இரவியை யொத்ததும் |
| **चित्रः** | சித்ரः | விசித்திரமான குணமுடையதும் அல்லது, போற்றத்தக்கது மாகிய |
| **अग्निः** | அக்நிः | அக்கினியானது, வேள்வி செய்வோர்கட்குச் |
| **रत्नं** | ரத்நம் | சிறந்த தனத்தைக் |
| **दधाति** | தயாதி | கொடுக்கின்றது. |

சாயண பாடியம்.

**கண்டம்—11. இருக்கு—3.**

மகத்துக்களுக்குள் சூரியனைப் போன்று விசித்திர வடிவத்தையுடைய, அல்லது, ஆராதித்தற்குரிய தன்மையையுடைய அக்கினி, வேட்போர்கட்கு இரமணீயமாகிய தனத்தைக் கொடுக்கின்றது என்பதாம். (3)

## மந்திரம் 4.

१ २ ३ १ २ ३ २ ३ १ २२ ३ १ ३ २
450. **विश्वस्य प्रस्तोभ पुरो वासन् यदि वेह नूनम् ॥ ४ ॥**

விஶ்வஸ்ய ப்ரஸ்தோப புரோ வாஸந் யதி வேஹ நூநம் ॥

அந்வயம்.

**विश्वस्य, प्रस्तोभः, यदि वा, इह, नूनं, पुरो, वासन् ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| विश्वस्य | விஶ்வஸ்ய | (அவ்விந்திரன்) எல்லாப் பகைஞரையும் |
| प्रस्तोभः | ப்ரஸ்தோபஃ | நாசஞ்செய்கின்றான். |
| यदि वा | யதி வா | அன்றியும் |
| इह | இஹ | இவ்வேள்வியில் |
| नूनं | நூநம் | உறுதியாக |
| पुरो वासनू | புரோ வாஸநு | பூர்வ இடத்திலிருக்கப்பெற்றோனாய் வேட்போர்களால் நன்கு பூசிக்கப்படுகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—4. சம்வர் ரிஷி.

இந்திரன், சத்துருக்களனைவரையுங் கொல்கின்றான். அஃதன்றியும், இவ் வேள்வியில் நிச்சயமாக பூர்வதேச இடத்தில் இருக்கப்பட்ட அவ் விந்திரன் உண்மையாக வேட்போர்களால் துதிக்கப்படுகின்றான் என்பதாம்.

## மந்திரம் 5.

३२उ ३ २३२३ १ २१ २३१२

451. उषा अप स्वसुष्टमः संवर्त्तयति वर्त्तनिंं सुजातता ॥ ५ ॥

இருக்கு 4-73-1.

உஷா அப ஸ்வஸுஷ்டமஃ ஸம்வர்த்தயதி வர்த்தநிம் ஸுஜாததா ‖

அந்வயம்.

उषा, स्वसुः, तमः, अपसंवर्त्तयति, सुजातता, वर्त्तनिम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| उषा | உஷா | உஷா தேவதை |
| स्वसुः | ஸ்வஸுஃ | தனது சகோதரியாகிய இராத்திரியிலுள்ள |
| तमः | தமஃ | இருளைத் |
| अपसंवर्त्तयति | அபஸம்வர்த்தயதி | தனதொளியாற்போக்குகின்றது. |
| सुजातता | ஸுஜாததா | சிறந்த தனது ஒளியையும் |
| वर्त्तनिं | வர்த்தநிம் | இரதத்திற் சேர்க்கின்றது, |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—5.

இந்த உஷா தேவதையானவள் தனது உடன் பிறந்தாளாகிய இராத்திரியின் சம்பந்தமாகிய இருளைத் தனதொளியாற்றொலைக்கின்றாள். தன தொளியையும் இரதத்தையுமடையுமாறு செய்கின்றாள் என்பதாம். (5)

## மந்திரம் 6.

३२क ३ १२ ३ १ २ ३ १ २ २ ३

452. इमा नु कं भुवना सीषधेमेन्द्रश्च विश्वे च देवाः ॥ ६ ॥

இருக்கு 10-571-1.

இமா நு கம் புவநா ஸீஷதேமேந்த்ரஶ்ச விஶ்வே ச தேவா꞉ ॥

அந்வயம்.

इमाः, भुवनाः, नु, कं, सीषधेम, इन्द्रः, च, विश्वे, देवाश्च ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **इमाः** | இமா꞉ | (காணப்படுகின்ற) இந்த |
| **भुवनाः** | புவநா꞉ | உலகங்களை |
| **नु** | நு | விரைவில் |
| **कं** | கம் | சுகமடைதற் பொருட்டு |
| **सीषधेम** | ஸீஷதேம | வசம் பண்ணுகின்றேன். |
| **इन्द्रः च** | இந்த்ர꞉ ச | இந்திரனும் |
| **विश्वे देवाश्च** | விஶ்வே தேவாஶ்ச | மற்று எல்லாத் தேவர்களும். துதியால் மகிழ்ந்து இக் கருமத்தை முடிப்பார்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11 இருக்கு—6. பௌவன ஆத்த ரிஷி.

காணப்படுகின்ற இப் புவனங்களை விரைவாக வசப்பத்துகின்றேன். அல்லது, இப்பூத சமுதாயங்களனைத்தும் எங்கட்குச் சுகத்தைச் செய்குக. இந்திரனும், தேவர்க ளனைவர்களுந் தோத்திரத்தாற் பிரியமுடையார்களாய் இக் காரியத்தை முடித்துவைப்பார்களாக என்பதாம், (6)

## மந்திரம் 7.

२ ३२ ३ १ २ ३२उ ३ १२ १२
453. वि स्रुतयो यथा पथा इन्द्र त्वद्यन्तु रातयः ॥ ७ ॥

வி ஸ்ருதயொ யயா வயா ஐந்த்ர த்வத்யந்து ராதயஃ ॥

அந்வயம்.

हे इन्द्र !, त्वत्, रातयः, पथा स्रुतयः यथा, वियन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹெ ஐந்த்ர ! | இந்திரனே ! |
| त्वत् | த்வத் | உன்னிடத்திலிருந்து |
| रातयः | ராதயஃ | தானங்கள் (ஈகைகள்) |
| पथास्रुतयः यथा | வயாஸ்ருதயஃ யயா | { பெரும்வழியினின்று சிறுவழிகள் பிரிவதுபோற் |
| वियन्तु | வியந்து | பலவகையாய் விரிந்தோங்குக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—7. கவஷ ஐலுஷ ரிஷி,

இந்திரனே ! நின்னிடத்திலிருந்து (ஐசுவரிய) தானங்கள் (கொடைகள்) பலவிதமாய் விரிந்தோங்குக. அதிலுவமை :—அரச (பெரிய) வழியினின்று (ஆட்செல்லும்) சிறிய வழிகள் பிரிந்து (விரிந்து) போவனபோன்றெனல்.

## மந்திரம் 8.

३ १ २र ३ १२ ३ १ २ ३ १ २ ३ १ २
454. अया वाजं देवहितꣳ सनेम मदेम शतहिमाः सुवीराः ॥ ८ ॥

இருக்கு 6-17-15.

அயா வாஜம் தெவஹிதம் ஸநெம மதெம ஶதஹிமாஃ ஸுவீராஃ ॥

அந்வயம்.

अया, देवहितं, वाजं, सनेम, सुवीराः, शतहिमाः, मदेम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अया | அயா | இத் துதியால் |
| देवहितं | தெவஹிதம் | { இந்திர தேவதை கொடுக்கப்பட்ட |
| वाजं | வாஜம் | அன்னத்தை |

| | | |
|---|---|---|
| सनेम | ஸநேம | யாங்கள் அருந்துவோமாக. |
| सुवीराः | ஸுவீராஃ | அழகிய புத்திரர்களோடு கூடிய யாங்கள் |
| शतहिमाः | ஶதஹிமாஃ | நூற்றுக்கணக்கான பனிக்காலம் (ஏமந்தருது) வரை |
| मदेम | மதேம | களித்திருப்போமாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—8. பரத்துவாச ரிஷி.

இத்தோத்திரத்தினின்று பிராகாசமுள்ள தேவதையால் (இந்திரனால்) கொடுக்கப்பட்ட அன்னத்தை நாங்கள் அநுபவிப் போமாக. மற்றும், அழகிய மக்களோடு கூடின யாங்கள் நூற்றுக் கணக்கான ஏமந்த இருதுகாலம்வரை களிப்படைவோமாக என்பதாம். (8)

## மந்திரம் 9.

३ २ ३ १ ३ २ ३ १२ ३ १ २ ३ १ २

455. ऊर्जा मित्रो वरुणः पिन्वतेडाः पीवरीमिषं कृणुही न इन्द्र ॥

ஊர்ஜா மித்ரோ வருணஃ பிந்வதேடாஃ பீவரீமிஷம் க்ருணுஹீ ந [இந்த்ர ॥

அந்வயம்.

हे इन्द्र !, मित्रः, वरुणः, ऊर्जा, इडाः, पिन्वत, नः, इषं, पीवरीं, कृणुहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| मित्रः | மித்ரஃ | மித்திர தேவதை |
| वरुणः | வருணஃ | வருணதேவதை (என்னும் நீவிர் அனைவர்களும்) |
| ऊर्जा | ஊர்ஜா | ஆற்றலோடு கூடிய |
| इडाः | இடாஃ | அன்னத்தை. |
| पिन्वत | பிந்வத | எங்கட்குக் கொடுப்பீர்களாக. (மற்றும்) |
| नः | நஃ | எங்களுடைய |
| इषं | இஷம் | அன்னத்தை |
| पीवरीं | பீவரீம் | மிகுதியாகச் |
| कृणु हि | க்ருணு ஹி | செய்வீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—9. ஆத்திரேய ரிஷி.

இந்திரனே! மித்திர தேவதை, வருணதேவதை என்னும் நீவிர் அனைவரும் இன்சுவையோடு கூடிய, அல்லது, ஆற்றலோடு கூடிய அன்னங்களை எங்கட்குக் கொடுப்பீர்களாக. மற்றும், மிகுதியான அன்னங்களையும் எங்கட்குக் கொடுப்பீர்களாக என்பதாம். (9)

## மந்திரம் 10.

२ ३ १ २
456. इन्द्रो विश्वस्य राजति ॥ १० ॥

ஐந்த்³ரோ விஶ்வஸ்ய ராஜதி ॥

அந்வயம்.

इन्द्रः, विश्वस्य, राजति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **इन्द्रः** | இந்த்³ர: | இந்திரன் |
| **विश्वस्य** | விஶ்வஸ்ய | உலகனைத்திற்கும் |
| **राजति** | ராஜதி | இறைவனாகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—10. வசிட்ட ரிஷி.

எக்காரணத்தால் இந்திரன் எல்லாப்புவனத்திற்கும் இறைவனாகின்றானோ, அக்காரணத்தால் இந்திரனை முக்கியமாக ஒரு முகப்படுத்தி கூறப்படுகின்றது என, முன் மந்திரத்தோடு அந்வயித்துக் கொள்க. (10)

## பதினோராவது கண்டம்.

முற்றும்.

---

## பன்னிரண்டாவது கண்டம்.

### பிரபாடகம்—5. அத்தியாயம்—4. கண்டம்—12.

பத்து மந்திரங்களாலானது.

தேவதைகள். 1, 3, 4, 10, இந்திரன். 2, சூரியன். 5, விசுவதேவர்கள். 6, மருத்துக்கள். 7, பவமானன். 8, சவிதா. 9, அக்கினி.

சந்தங்கள். 1, 3, 5, 7, 9, அத்யட்டி. 2, 4, 6, அதிசகதி. 10, அதிசக்குவரி.

சுரம், 1, 3, 5, 7, 9, காந்தாரம். 2, 4, 6, 8, 10, நிஷாதம். 8, 10, பஞ்சமம்.

#### மந்திரம் 1.

१२ ११ २र ३२
457. त्रिकद्रुकेषु महिषो यवाशिरं तुविशुष्म-
२१ २र ३१२ ३१ २३२
*स्तृम्पत् सोममपिबद्विष्णुना सुतं † यथावशम् ।
१२ ३२३ २३१२ ३२३१
स ईं ममाद महि कर्म कर्त्तवे महामुरुं
२र ३२३२ ३१ २र ३१ २र
सैनं सश्चद्देवो देवं ‡ सत्य इन्दुः सत्यमिन्द्रम् ॥ १ ॥

த்ரிகத்ருகேஷு மஹிஷோ யவாஶிரம் துவிஶுஷ்ம-
ஸ்த்ரும்பத் ஸோமமபிபத்விஷ்ணுநா ஸுதம் யதாவஶம் ।
ஸ ஈம் மமாத மஹி கர்ம கர்த்தவே மஹாமுரும்
ஸைநம் ஸஶ்சத்தேவோ தேவம் ஸத்ய இந்து꞉ ஸத்யமிந்த்ரம் ॥

அந்வயம்.

महिषः, तुविशुष्मः, तृम्पत्, त्रिकद्रुकेषु, सुतं, यवाशिरं, सोमं, विष्णुना, यथावशं, अपिबत्, सः, महि, कर्म, कर्त्तवे, महां, उरुं, ईं, ममाद, सत्यः, इन्दुः, देवः, सः, सत्यं, देवं, एनं, इन्द्रं, सश्चत् ॥

* तृम्पत्सोम, † यथावशात्, ‡ सत्यमिन्द्रं सत्य इन्दुः, என்பன இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| महिषः | மஹிஷ: | ஆராதிக்கத் தக்கோனும் |
| तुविशुष्मः | துவிஶுஷ்ம: | பேராற்றலுடையோனும் |
| तृम्पत् | த்ரும்பத் | திருப்தியுடையோனுமாகிய இந்திரன் |
| त्रिकद्रुकेषु | த்ரிகத்ருகேஷு | சோதி, கோ, ஆயுள் என்னும் பெயருள்ள முத்தினங்களிலும் |
| सुतं | ஸுதம் | பிழியப் பெற்றுள்ளதும் |
| यवाशिरं | யவாஶிரம் | கோதுமை மாவுடன் கலந்ததுமாகிய |
| सोमं | ஸோமம் | சோமரசத்தை |
| विष्णुना | விஷ்ணுநா | விஷ்ணுவுடன் |
| यथावशं | யதாவஶம் | இச்சித்தவாறே |
| अपिबत् | அபிபத் | அருந்தினன். |
| सः | ஸ: | அருந்திய அச் சோமரசம் |
| महि | மஹி | பெரிய |
| कर्म | கர்ம | விருத்திராசுரனைக் கொல்லுதல் முதலிய கருமத்தைச் |
| कर्तवे | கர்தவே | செய்தற் பொருட்டு |
| महां | மஹாம் | மிகுந்த (மகத்தாகிய) |
| उरुं ईं | உரும் ஈம் | விரிந்த இவ் விந்திரனுக்குக் |
| ममाद | மமாத | களிப்புண்டாக்கியது. |
| सत्यः | ஸத்ய: | மேம்பட்டதும் |
| इन्दुः | இந்து: | பொங்குவதும் |
| देवः | தேவ: | விளக்கமுடையதுமாகிய |
| सः | ஸ: | அச் சோமரசமானது |
| सत्यं | ஸத்யம் | சத்திய வடிவனும் |
| देवं | தேவம் | சோம விருப்புள்ளோனுமாகிய |
| एनं इन्द्रं | ஏநம் இந்த்ரம் | இவ் விந்திரனை |
| सश्चत् | ஸஶ்சத் | வியாபிக்குக. (நிறையச் செய்க.) |

## சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—1. கிருத்சமத ரிஷி.

மகானும், பூசிக்கத் தக்கோனும், பேராற்றலுள்ளோனுமாகிய இந்திரன், திருப்தி யடைந்து, சோதி, கோ, ஆயுள் என்னுஞ் சோமயாக தினங்களிற் பிழிந்தெடுக்கப்பட்டதும், கோதுமை மாவுடன் கலந்ததுமாகிய அச் சோமரசத்தை விஷ்ணுவோடு விரும்பிய வண்ணம் அருந்தினன்.

அருந்திய அச் சோமரசமானது பெரியவனும், வியாபகனுமாகிய இவ் விந்திரனுக்குக் களிப்பையுண்டாக்கியது. மேம்பட்டதும், பொங்கியதும், விளக்கமானதுமாகிய அச் சோமரசம், உண்மைவடிவனும், சோமரச விருப்பனுமாகிய இந்திரனைச் சூழ்ந்து கொள்க என்பதாம். (1)

### மந்திரம் 2.

३ २   ३ २ ३ १ २   ३ १   २   ३   २   ३ २ उ   ३ १ २

458. अयं सहस्रमानवो दृशः कवीनां मतिज्योतिर्विधर्म ।

३ २   ३   १ २ ३ २ ३   १ २   ३ २ ३   १ २   ३   १ २   ३ १   २   ३   २

ब्रध्नः समीचीरुषसः समैरयद्रेपसः सचेतसः स्वसरे मन्युमन्तश्चिता गोः ॥

𑌅𑌯𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑌾𑌨𑌵𑍋 𑌦𑍃𑌶𑌃 𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 𑌮𑌤𑌿𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌧𑌰𑍍𑌮 ।
𑌬𑍍𑌰𑌧𑍍𑌨𑌃 𑌸𑌮𑍀𑌚𑍀𑌰𑍁𑌷𑌸𑌃 𑌸𑌮𑍈𑌰𑌯𑌦𑌰𑍇𑌪𑌸𑌃 𑌸𑌚𑍇𑌤𑌸𑌃 𑌸𑍍𑌵
[𑌸𑌰𑍇 𑌮𑌨𑍍𑌯𑍁𑌮𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌿𑌤𑌾 𑌗𑍋𑌃 ॥

அந்வயம்.

सहस्रमानवः, दृशः, कवीनां, मतिः, विधर्म, ज्योतिः, अयं, ब्रध्नः, समीचीः, अरेपसः, सचेतसः, उषसः, समैरयत्, स्वसरे, मन्युमन्तः, गोः, चिताः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सहस्रमानवः | 𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑌾𑌨𑌵𑌃 | ஆயிர மெண்கொண்ட மனிதர்களை யுடையவனும் |
| दृशः | 𑌦𑍃𑌶𑌃 | பார்க்கத்தக்கோனும் |
| कवीनां | 𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 | நுண்ணறிவாளர்கட்கு |
| मतिः | 𑌮𑌤𑌿𑌃 | மதிப்புடையோனும் |
| विधर्म | 𑌵𑌿𑌧𑌰𑍍𑌮 | விசேடித்துத் தாங்குவோனும் |
| ज्योतिः | 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 | பிரகாசவடிவனுமாகிய |
| अयं ब्रध्नः | 𑌅𑌯𑌂 𑌬𑍍𑌰𑌧𑍍𑌨𑌃 | இச்சூரியன், |
| समीचीः | 𑌸𑌮𑍀𑌚𑍀𑌃 | நிருமலமும் |
| अरेपसः | 𑌅𑌰𑍇𑌪𑌸𑌃 | இருளாகிய பாவமிலாததும் |
| सचेतसः | 𑌸𑌚𑍇𑌤𑌸𑌃 | ஒத்தமனமுமுடைத்தாகிய |
| उषसः | 𑌉𑌷𑌸𑌃 | உஷா தேவதையை |
| समैरयत् | 𑌸𑌮𑍈𑌰𑌯𑌤𑍍 | நன்கு ஏவுகின்றான், பின்னர் |
| स्वसरे | 𑌸𑍍𑌵𑌸𑌰𑍇 | பகலில் |
| मन्युमन्तः | 𑌮𑌨𑍍𑌯𑍁𑌮𑌨𑍍𑌤𑌃 | விளக்கமுள்ள சந்திரன் முதலியோர்கள் |
| गोः | 𑌗𑍋𑌃 | இரவியின் ஒளியால் |
| चिताः | 𑌚𑌿𑌤𑌾𑌃 | விளக்கமற்றோர்களாய் விடுகின்றனர், |

சாயண பாடியம்.

கண்டம்.—12. இருக்கு.—2. கௌராங்கிரச ரிஷி.

ஆயிரக்கணக்கான மனிதர்களென நிற்கின்ற கிரணங்களோடு கூடியதும், அனைவர்கட்கும் காணத்தக்கதும், சூரிய அறிவுடையார்களால் மதிக்கற்பாலதும், அல்லது, துதித்தற்குரியதும், வியப்போடு தாங்குவதும், ஒளி வடிவுடையதுமாகிய இந்த இரவியானது, நிருமலமானதும், இருளென்னும் பாவமற்றதும், சம சித்தமுடையதுமாகிய உஷா தேவதையை இனிது ஏவுகின்றது. பின்னர், பகலில் பிரகாசமுடையவைகளான சந்திரன் முதலியோர்கள் இரவியின் கிரணத்தால் விளக்கமற்றோராகி விடுகின்றனர் என்பதாம். (2)

கோ, என்பது இரவி என நிருக்தம். 2, 6, கூறுகின்றது. (மற்றும்) சுவசரே, என்பது பகலென நிருத்தம் நைகம காண்டம் 1-2-கூறுகின்றது.

மந்திரம் 3.

१ २ ३ १२ ३ २ ३ १ २र<br>
459, एन्द्र याह्युप नः परावतो नायमच्छा<br>
३१ २ ३ १ २ ३२ ३ १ २ ३ १ २<br>
विदथानीव सत्पतिरस्ता राजेव सत्पतिः ।<br>
१ २ ३ १ २ ३२उ ३ २ ३ २<br>
हवामहे त्वा प्रयस्वन्तः सुतेष्वा पुत्रासो न<br>
३ २३ १२ ३ १ २ ३ १२<br>
पितरं वाजसातये मंꣳहिष्ठं वाजसातये ॥ ३ ॥

இருக்கு 3-23-1.

ஏந்த்ர யாஹ்யுப ந꞉ பராவதோ நாயமச்சா<br>
விதயாநீவ ஸத்பதிரஸ்தா ராஜேவ ஸத்பதி꞉ ।<br>
ஹவாமஹே த்வா ப்ரயஸ்வந்த꞉ ஸுதேஷ்வா புத்ராஸோ ந<br>
பிதரம் வாஜஸாதயே மம்ஹிஷ்஠ம் வாஜஸாதயே ॥

அந்வயம்.

हे इन्द्र !, अयं न, सत्पतिः विदथानि इव, अस्ता सत्पतिः राजा इव, परावतः, नः, अच्छा, उपयाहि, पुत्रासः वाजसातये, पितरं न, प्रयस्वन्तः, सुतेषु, वाजसातये, मंहिष्ठं, त्वा, आहवामहे ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹெ இந்த்ர! | இந்திரனே! நீ |
| अयं न | அயம் ந | இவ் வக்கினியும், சோமமும் வந்தது போலவும், |
| सत्पति: विदथानीव | ஸத்பதி: விதயாநீவ | வேட்போர்களைக் காப்பாற்றும் வேள்வித் தலைவன் வேள்விக்கு வருவதொப்பவும். |
| अस्ता सत्पति: राजा इव | அஸ்தா ஸத்பதி: ராஜா இவ | நட்சத்திரங்களைப் பாதுகாப்பாற்றும் சந்திரன் தனதுறைவிடத்திற்கு வருவது போன்றும். |
| परावतः | பராவத: | சுவர்க்கமாகிய தூர தேசத்திலிருந்து |
| नः अच्छा उपयाहि | ந: அச்சா உபயாஹி | எங்கட்கருகில் மேம்பாட்டுடன் வருவாயாக. |
| पुत्रासः वाजसातये पितरं न | புத்ராஸ: வாஜஸாதயெ பிதரம் ந | புதல்வன், அன்னம், அல்லது. ஆற்றலை யடைவதற்குப் பிதாவைக் கூப்பிடுமாறு. |
| प्रयस्वन्तः सुतेषु | ப்ரயஸ்வந்த: ஸுதேஷு | அவியைக் குறித்து ஏற்றுக்கொண்ட யாம் வேள்வித் தலைவர்கள் சோமரசந் தேடியவிடத்து ஒருமுகமாய் |
| वाजसातये मंहिष्ठं त्वा आहवामहे | வாஜஸாதயெ மம்ஹிஷ்டம் த்வா ஆஹவாமஹெ | போரில் வெற்றி யடைதற்பொருட்டு நின்னை யழைக்கின்றோம். |

## சாயண பாடியம்.

**கண்டம்—12.** இருக்கு—3. புருச்சேப ரிஷி.

இந்திரனே! நீ தூரதேசமாகிய சுவர்க்கத்தினின்றும் எங்கட்குச் சமீபத்தில் வருவாயாக. அதிலுவமை:—முன்னிருக்கின்ற அக்கினிபோன்றெனல். அல்லது, பிழிந்தெடுத்த சோமம் போன்றெனல். ஈண்டு, அக்கினி சோமமிரண்டும், பிரகரணம் பற்றி எடுத்துக்கொண்டமையின் இதுவெனச் சுட்டிக் காட்டப்பட்டன. யாண்டும் நகாரம் நிடேதப் பொருளினிற்பினும் ஈண்டு பொருந்துந் தன்மை கொண்டு உவமைப் பொருளினின்றமை காண்க.

அல்லது, தூரதேசத்தில், யாண்டும் எப்போதும் வேள்வியில் நிலைக்கின்றது போன்று, தேவாராதனை செய்கின்ற இத்தேசத்தை (இடத்தை) அடைய வருவாயாக எனினுமாம். அதிலுவமை:-எப்போதும் நிலையாயுள்ள வேட்போர்களைப் பரிபாலிக்கின்ற வேள்வித் தலைவன் போன்றெனல். நீயும்

வேள்வி மனைகட்கு வருவாயாக என்பதாம். அல்லது, நட்சத்திரங்கட்கு இறைவனாகிய சந்திரன் தனதிடத்தை யடையுமாறெனல். அல்லது, அரசன் அரண்மனையை யடைவது போன்றெனல். அன்றியும், அவிகளென்னும் அன்னங்களையுடைய வேள்வித் தலைவர்களான நாங்கள் சோமரசம் பிழிந்தெடுத்த விடத்து உன்னை ஒருமுகமாய் அழைக்கின்றோம் என்பதாம். அழைப்பதிலுவமை:—புதல்வர்கள் அன்ன லாபத்தின் பொருட்டுப் பிதாவை யழைப்பது போன்றெனல். போரை யடைந்து வெற்றிகொள்ளுதற் பொருட்டு, அல்லது, அவிகளை யேற்றுக்கொள்ளுதற் பொருட்டு அழைக்கின்றோம் என முடித்துக்கொள்க. (3)

## மந்திரம் 4.

१ २र ३१ २ ३२ ३ १
460. तमिन्द्रं जोहवीमि मघवानमुग्रंꣳ सत्रा
२र३१२ २ १२ ३ १२
दधानमप्रतिष्कुतंꣳ श्रवाꣳसि भूरि ।
१ २ ३ १ २र ३ १ २ ३२
मꣳहिष्ठो गीर्भिराच *यज्ञियो ववर्त राये
३ १ ३ १ २ ३ २
नो विश्वा सुपथा कृणोतु वज्री ॥ ४ ॥

இருக்கு 8-97-13.

தமிந்த்ரம் ஜொஹவீமி மகவாநமுக்ரம் ஸத்ரா
தயாநமப்ரதிஷ்குதம் ஶ்ரவாம்ஸி பூரி ।
மம்ஹிஷ்டோ கீர்பிராச யஜ்ஞியோ வவர்த ராயே
நோ விஶ்வா ஸுபதா க்ருணோது வஜ்ரீ ॥

அந்வயம்.

मघवानं, उग्रं, सत्रा, भूरि, श्रवांसि, दधानं, अप्रतिष्कुतं, तं इन्द्रं, जोहवीमि, मंहिष्ठः, यज्ञियः, नः गीर्भिः, आववर्त, वज्री, राये, विश्वा, सुपथा, कृणोतु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मघवानं | மகவாநம் | தனமுடையோனும் |
| उग्रं | உக்ரம். | எவைகளாலுந் தாழ்த்தப்படாதோனும், |
| सत्रा | ஸத்ரா | சத்தியமானதும் |
| भूरि | பூரி | மிகுந்ததுமாகிய |

* यज्ञियो ववर्तद, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| श्रवांसि | ஶ்ரவாம்ஸி | வன்மையைத் |
| दधानं | தயாநம் | தாங்கியவனும், |
| अप्रतिष्कुतं | அப்ரதிஷ்குதம் | சத்துருக்களாற் றடையற்றோனு மாகிய |
| तं इन्द्रं | தம் இந்த்ரம் | அவ் விந்திரனைப் |
| जोहवीमि | ஜோஹவீமி | பன்முறை அழைக்கின்றேன். |
| मंहिष्ठः | மம்ஹிஷ்ட: | மிக ஆராதித்தற்குரியவனும் |
| यज्ञियः | யஜ்ஞிய: | வேள்விக்குரியோனுமாகிய இந்திரன் |
| नः गीर्भिः | ந: கீர்பி: | எமது தோத்திரங்களால் |
| आववर्त | ஆவவர்த | வேள்வியில் நோக்குடையவனா யிருக்கின்றான். பின்னர் |
| वज्री | வஜ்ரீ | வச்சிராயுதமேந்திய இந்திரன் |
| राये | ராயே | தனத்தின் பொருட்டு |
| विश्वा | விஶ்வா | எல்லா |
| सुपथा | ஸுபதா | நன்மார்க்கங்களையுஞ் |
| कृणोतु | க்ருணோது | செய்வானாக. (எல்லா வகையாலுந் தனங் கிடைக்குமாறு செய்வானாக என்பதாம்.) |

### சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—4. இரேபா ரிஷி.

முற்கூறிய குணங்களோடு கூடிய இந்திரனை மீண்டும் மீண்டும் அழைக்கின்றேன். எவ்வண்ணத்தனாகிய இந்திரனை யெனின்? மிகுந்த தனமுடையோனும், மேலாகிய ஆற்றலைத் தாங்கியவனும், இதனாலேயே சத்துருக்களாற் றடுக்கமுடியாதோனும் ஆகிய இந்திரனை. அழைக்கின்றேன் என முடித்துக் கொள்க. அன்றியும், ஆராதிக்கத்தக்க சிறப்புடையானும், அல்லது, பெருங்கொடையாளனும், வேள்விக் குரித்தானவனுமாகிய இந்திரன், எமது தோத்திர வாக்குகளால் வேள்விகளில் நன்னோக்குடையனாக இருக்கின்றான். ஆதலின் வச்சிராயுத மேந்திய இந்திரன் தனத்தின் பொருட்டு நன்மார்க்கங்களனைத்தையுஞ் செய்வானாக. அதாவது எல்லாத்திக்குகளிலும் உண்டான தனங்களை நாங்கள் அடையுமாறு செய்வானாக என்பதாம். (4)

### மந்திரம் 5.

२ १२ ३२ ३२ ३ १ २३ १
461. अस्तु श्रौषट् पुरो अग्निं धिया दध आ नु * त्यच्छ-
२र ३ १ २ ३१ २ १ २
र्द्धो दिव्यं वृणीमह इन्द्रवायू वृणीमहे यद्ध

* तच्छर्दो, என்பது இருக்கு.

३ २ २१२३ १२ ३ २३१२
क्राणा *विवस्वते नाभा †सन्दाय नव्यसे ।
२३ २ ३१ २र ३१२ ३ २उ ३ २ ३१२
अध‡प्र नूनमुपयन्ति धीतयो देवाँ अच्छ न धीतयः ॥ ५ ॥

இருக்கு 1-136-1.

𑌅𑌸𑍍𑌤𑍁 𑌶𑍍𑌰𑍌𑌷𑌟𑍍 𑌪𑍁𑌰𑍋 𑌅𑌗𑍍𑌨𑌿𑌂 𑌧𑌿𑌯𑌾 𑌦𑌧 𑌆 𑌨𑍁 𑌤𑍍𑌯𑌚𑍍𑌛𑌰𑍍-
𑌧𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌵𑍃𑌣𑍀𑌮𑌹 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌾𑌯𑍂 𑌵𑍃𑌣𑍀𑌮𑌹𑍇
𑌯𑌦𑍍𑌧 𑌕𑍍𑌰𑌾𑌣𑌾 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑍇 𑌨𑌾𑌭𑌾 𑌸𑌨𑍍𑌦𑌾𑌯 𑌨𑌵𑍍𑌯𑌸𑍇 ।
𑌅𑌧𑌪𑍍𑌰 𑌨𑍂𑌨𑌮𑍁𑌪𑌯𑌨𑍍𑌤𑌿 𑌧𑍀𑌤𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌂 𑌅𑌚𑍍𑌛 𑌨 𑌧𑍀𑌤𑌯𑌃 ॥

அந்வயம்.

हे इन्द्र !, पुरः, अग्निं, धिया दधे, त्यत्, दिव्यं शर्द्धः, नु, आवृणीमहे, इन्द्रवायू, वृणीमहे, यद्ध, विवस्वते नव्यसे, नाभा, सन्दाय, क्राणा, श्रौषट् अस्तु, अधः, (नः,) धीतयः, प्रनूनं, उपयन्ति, देवान् अच्छ न, धीतयः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | 𑌹𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰 ! | இந்திரனே ! யான் |
| पुरः | 𑌪𑍁𑌰𑌃 | முன் உத்தரவேதிகையில் |
| अग्निं | 𑌅𑌗𑍍𑌨𑌿𑌂 | ஆகவனீயமென்னும் அக்கினியைப் |
| धिया | 𑌧𑌿𑌯𑌾 | போற்றல் முதலிய கருமத்தால் |
| दधे | 𑌦𑌧𑍇 | தாங்கியிருக்கின்றேன். |
| त्यत् | 𑌤𑍍𑌯𑌤𑍍 | அந்த |
| दिव्यं शर्द्धः | 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌶𑌰𑍍𑌧𑌃 | திவ்யமாகிய அக்கினியை |
| नु | 𑌨𑍁 | விரைவாக (இப்போது) |
| आवृणीमहे | 𑌆𑌵𑍃𑌣𑍀𑌮𑌹𑍇 | ஒருமையுடன் ஆராதிக்கின்றோம். |
| इन्द्रवायू | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌾𑌯𑍂 | இந்திரன், வாய்வு என்னு மிவ்விருவர்களையும் |
| वृणीमहे | 𑌵𑍃𑌣𑍀𑌮𑌹𑍇 | பிரார்த்திக்கின்றோம். |
| यद्ध | 𑌯𑌦𑍍𑌧 | எவர்கள் |
| विवस्वते नव्यसे | 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑍇 𑌨𑌵𑍍𑌯𑌸𑍇 | தனமுள்ள புதிய தலைவன் பொருட்டு |
| नाभा | 𑌨𑌾𑌭𑌾 | பூமியின் நாபியாகிய வெள்வியில் |

* विवस्वति, † सदायिनव्यसा, ‡ प्रसून उपयन्तु, என்பன இருக்கு.

| सन्दाय | ஸந்தாய | ஒன்றற்கொன்று கூடிக்கொண்டு |
|---|---|---|
| क्राणा | க்ராணா | மனவிருப்பைச் சித்திசெய்து கொள்வோ ராகின்றார்களோ, அவர்களுக்கு |
| श्रौषट् अस्तु | ஶ்ரௌஷட் அஸ்து | இத்துதி கேட்கப்படுவதாகுக. |
| अध: | அத: | பின்னர் |
| (न:) | (ந:) | (எங்களுடைய) |
| धीतय: | தீதய: | தோத்திர முதலிய கருமங்கள் |
| प्रनूनं | ப்ரநூநம் | ஒரு தலையாக |
| उपयन्ति | உபயந்தி | அவர்களை யடைகின்றன. (மற்றும்) |
| देवान् अच्छ न | தேவாந் அச்ச ந | அக்கினி முதலிய தேவர்களை ஒருமையிலடைவதற்கு |
| धीतय: | தீதய: | எமது கருமங்கள். (தக்கதாகின்றன.) |

### சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—5. புருச்சேப ரிஷி.

யான் முன்னுள்ள உத்தரவேதிகையில் ஆகவனீயம் என்னும் அக்கினியைப் போற்றுதல் முதலிய கருமத்தால் ஏற்றுக்கொண்டவனுயுள்ளேன். அத்தன்மைய ஆற்றலையுடைய, அல்லது, ஆற்றலாகிய அக்கினியை, அல்லது, அத்தன்மைய மருத்துக்களின் சங்கமமாகிய வானிற்றோற்றும் ஆற்றலென்னும் அக்கினியை, விரைவில் இப்போது ஒருமுகமாய் ஆராதிக்கின்றோம். அன்றியும், இந்திரனையும் வாயுவையும், பிரார்த்திக்கின்றோம். அவியாகிய தனத்தையுடைய மிகப்புதிய வேள்வித்தலைவன் பொருட்டு பூமியின் நாபித்தானமாகிய தேவாராதனை செய்யுமிடத்தில், (வேட்குமிடத்தில்) அல்லது, வேதிகை வடிவில், அல்லது, எல்லாப்பயன்களின் சம்பந்தமுள்ள வேள்வியில் "வேள்வியை புவனத்தின் நாபியென்று கூறுகின்றார்கள்" என மறை கூறுதலின். (வேள்வி பூமியின் நாபியாம்.) தம்முட் கூடிக்கொண்டு தனமுதலியவைகளை இனிது செய்கின்றவர்களாகின்றார்களோ, அவ் விருவர்களையும் பிரார்த்திக்கின்றோம் எனப் பொருத்துமாறு காண்க. இவ்வண்ணமான காரணத்தால் உங்கட்கு இச் சுருதியின் கேள்வி இருக்குக. அல்லது, நீவிர் கேட்போர்களாகுக. மருத்துக்களின் கணம், அக்கினி, அல்லது, இந்திரன், வாய்வு என்பவர்களே! எங்களுடைய தோத்திர முதலிய கருமங்கள் பின்பு ஒருதலையாக உங்களை யடைகின்றன. அன்றியும், அக்கினி முதலிய தேவர்களை ஒருமுகமாய் அடைவனபோன்று, எங்களுடைய கருமங்கள் அவர்கட் கருகிற் சேர்க்கின்றன என்பதாம். (5)

### மந்திரம் 6.

१ २ ३२ ३१२ ३ १ २ ३१२ ३ १ २३ १ २

462. प्र वो महे मतयो यन्तु विष्णवे मरुत्वते गिरिजा एवया मरुत् ।

१ २र ३ १ २र ३१२३१३ ३ १२३ १२ ३ १२

प्र शर्द्धाय प्रयज्यवे सुखादये तवसे भन्ददिष्टये धुनिव्रताय शवसे॥

இருக்கு 5-87-1.

ப்ரவோ மஹே மதயோ யந்து விஷ்ணவே மருத்வதே கிரிஜா ஏவ [யா மருத் |

ப்ரஶர்த்தாய ப்ரயஜ்யவே ஸுகாதயே தவஸே பந்ததிஷ்டயே துநி [வ்ரதாய ஶவஸே ||

அந்வயம்.

एवया मरुत्, गिरिजाः, मतयः, मरुत्वते, विष्णवे, महे, वः, प्रयन्तु, प्रयज्यवे, सुखादये, तवसे, भन्ददिष्टये, धुनिव्रताय, शवसे, शर्द्धाय, प्र ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| एवया मरुत् | ஏவயா மருத் | ஏவயாமருத்து, என்னும் இருடியின் |
| गिरिजाः | கிரிஜா: | வாக்கிற்றோன்றின |
| मतयः | மதய: | தோத்திரங்கள், |
| मरुत्वते | மருத்வதே | மருத்துக்களோடு கூடியவனும் |
| विष्णवे | விஷ்ணவே | வியாபகனும் |
| महे | மஹே | மகானுமாகிய |
| वः | வ: | இந்திரனென்னும் நின்னை |
| प्रयन्तु | ப்ரயந்து | அடைவனவாகுக. மற்றும் |
| प्रयज्यवे | ப்ரயஜ்யவே | மிகுந்த வேள்வி செய்தற்குரியதும், |
| सुखादये | ஸுகாதயே | அழகிய அணிகளையுடையதும் |
| तवसे | தவஸே | ஆற்றலுடையதும் |
| भन्ददिष्टये | பந்ததிஷ்டயே | தோத்திரமாகிய ஓமமுடையதும் |
| धुनिव्रताय | துநிவ்ரதாய | மேகத்தை நடாத்துந் தொழிலுடையதும் |
| शवसे | ஶவஸே | நடக்குஞ் சீலமுடையதுமாகிய |
| शर्द्धाय | ஶர்த்தாய | வலிவுள்ள மருத்துவிற்கும் (வாயு தேவதைக்கும்) |
| प्र | ப்ர | பிராப்தமாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—6. ஏவயாமருத் ரிஷி.

வாக்கினின்றெழுந்த தோத்திரங்கள் மகத்தாகிய நின்னைச் சேர்வன வாகுக. ஈண்டு, உங்களை யென்னும் பன்மை நின்னையென ஒருமையாயிற்று. வியாபகமென்னும் விஷ்ணுவாகிய இந்திரன் பொருட்டு, அல்லது, விஷ்ணு மூர்த்தியின் பொருட்டும், மருத்துக்களோடு கூடிய இந்திரன் பொருட்டும் துதிகள் சேர்வனவாகுக என்பது திரண்ட பொருள், யாருடைய தோத்தி ரங்களெனின்? ஏவயா மருத்து என்னும் பெயர் பூண்ட இருடியாற் செய்யப் பட்ட துதிகள். அல்லது, இந்த இருடியானவர் துதியை யுண்டாக்குவோ ராகின்றார். மற்றும், துதிகள் அடைவனவாகுக. எவரை யெனின்? வன்மை யுள்ள மருத்துத் தேவதையை. ஏனையவனைத்தும் வன்மைக்கே விசேடணங்க ளாகின்றன. மிகுதியாக ஆராதிக்கத் தக்கதும், அழகிய ஆபரணமுடையதும், ஈண்டுக் காதி (खादि) என்பது அணி விசேடம் "இனிய கரங்களில் காதி யையும், கிருதியையும் நன்கு தரித்தது" எனவும், "அங்கங்களில் இருடி கள் பதங்களில் காதிகள்" எனவும் மறை கூறுதலால் என்க. ஆற்றலுடைய தும், துதியாகிய யாகமுடையதும், மேகத்தைச் செலுத்துந் தொழிலுடை யதும், செல்லுஞ் சீலமுடையதுமாகிய வலியின் பொருட்டு, அதாவது அத் தன்மைய வலியுள்ள மருத்துவின் (வாயு தேவதையின்) பொருட்டுந் துதி கள் சேர்கின்றனவாகுக என்பதாம். (6)

## மந்திரம் 7.

३ २ ३ १ २र ३२उ ३१ २

463. अया रुचा हरिण्या पुनानो विश्वाद्वेषांꣳसि

३१ २ २ ३ २

तरति सयुग्वभिः सूरो न सयुग्वभिः ।

१ २ ३१ २ ३ १ २ ३ १ २र

धारा *पृष्ठस्य रोचते पुनानो अरुषो हरिः

२ ३ २३ १ २ ३ १ २र ३ १ २ ३ १ २

विश्वा यद्रूपा परियास्यृक्वभिः सप्तास्येभिर्ऋक्वभिः ॥ ७ ॥

இருக்கு 1-11-1.

அயா ருசா ஹரிண்யா புநாநோ விஶ்வாத்வேஷாம்ஸி
தரதி ஸயுக்வபி: ஸூரோ ந ஸயுக்வபி: |
தாரா ப்ருஷ்டஸ்ய ரோசதே புநாநோ அருஷோ ஹரி:
விஶ்வா யத்ரூபா பரியாஸ்ய்ருக்வபி: ஸப்தாஸ்யேபிர்க்ருக்வபி: ||

---

* पृष्ठस्य सुतस्य, என்பது இருக்கு.

அந்வயம்.

पुनानः, हरिण्या, अया, रुचा, विश्वा द्वेषांसि, तरति सयुग्वभिः, सूरः न, पृष्ठस्य, धारा, रोचते, पुनानः, हरिः, अरुषः, यत्, सप्तास्येभिः, ऋक्कभिः, ऋक्कभिः, विश्वा, रूपा, परियासि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पुनानः | புநாநஃ | பவித்திரம் பண்ணப்பெற்ற சோமரசமானது |
| हरिण्या | ஹரிண்யா | பச்சை நிறமுடையதும் |
| अया रुचा | அயா ருசா | பிரகாசமுடையதுமாகிய இத்தாரையால் |
| विश्वा द्वेषांसि | விஶ்வா த்வேஷாம்ஸி | துவேஷம் பண்ணப்பட்ட எல்ல இராக்ஷசர்களையும் |
| तरति | தரதி | நாசஞ் செய்கின்றது. |
| सयुग्वभिः | ஸயுக்வபிஃ | கூட்டமான கிரணங்களால் |
| सूरः न | ஸூரஃ ந | இரவி யிருளை யொதுக்குமாறு |
| पृष्ठस्य | ப்ருஷ்டஸ்ய | உலகத்தைத் தாங்கப்பட்ட சோமரசத்தின் |
| धारा | தாரா | தாரையானது |
| रोचते | ரோசதே | விளங்குகின்றது. |
| पुनानः | புநாநஃ | பவித்திரம் பண்ணப்பட்டதும் |
| हरिः | ஹரிஃ | பச்சை நிறமுடையது மாகிய சோமரசம் |
| अरुषः | அருஷஃ | பளபளப்பாயிருக்கின்றது. |
| यत् | யத் | யாதொரு சோமரசம் |
| सप्तास्येभिः | ஸப்தாஸ்யேபிஃ | இரசங் கொண்டுவருகின்ற |
| ऋक्कभिः | ருக்வபிஃ | துதிப்போர்களான |
| ऋक्कभिः | ருக்வபிஃ | ஒளிகளால் |
| विश्वा | விஶ்வா | எல்லா |
| रूपा | ரூபா | வடிவங்களிலும் |
| परियासि | பரியாஸி | வியாபிக்கின்றதோ, (அச்சோமரசம்.) |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—7. அஞைதபாருச்சேப ரிஷி.

பவித்திரமாக்கிய சோமரசம், பச்சை நிறமுடையதும், பிரகாசமுடையதுமாகிய இத்தாரையால், துவேஷஞ்செய்கின்ற இராக்கதர்களை நாசம் பண்ணுகின்றது. அதிலுவமை ;—சேர்ந்துள்ள தனது கிரணங்களால் இரவி

யானது இருளைத்தொலைப்பது போன்றெனல். சேர்ந்துள்ள கிரணங்களால் (सयुग्वभिः) என்பதை இரட்டித்துக் கூறியது அன்பின் பொருட்டாம். அல்லது, தாரையோடுகூடிய சோமரசம், கூடியுள்ள பிரகாசங்களோடு இராக்கதர்களைக் கடக்கின்றது. உலகத்தைத் தாங்குகின்ற அச் சோமரசத்தினுடைய தாரையானது பிரகாசிக்கின்றது. சுத்தம் பண்ணப்பட்டதும், பச்சை நிறமுடையதுமாகிய சோமரசம் ஒளி வீசுகின்றது. யாதொரு அச் சோமரசம், ரசங் கொண்டுவருஞ் சீலமுள்ள துதியாளர்களால், அதாவது ஒளிகளால் எல்லா உருவங்களிலும் வியாபிக்கின்றதோ, அச் சோமரசம் என முடித்துக்கொள்க. (7)

## மந்திரம் 8.

३२३ ३१ २३ १२३क२र ३१२३
464. अभि त्यं देवꣳ सवितारमोण्योः कविक्रतु-
१२ ३१२ ३२३२ ३२ ३२
मर्चामि सत्यसवꣳ रत्नधामभिप्रियं मतिम् ।
३२उ ३२३१ २र ३१२ ३
ऊर्ध्वा यस्यामतिर्भा अदिद्युतत्सवीमनि
१२ ३१२ ३१ २
हिरण्यपाणिरमिमीत सुक्रतुः कृपा स्वः* ॥ ८ ॥

அதர் 7-14-1, 2.—இருக்கு 0-4-25.

அபி த்யம் தேவம் ஸவிதாரமோண்யோ꞉ கவிக்ரது-
மர்சாமி ஸத்யஸவம் ரத்னதாமபிப்ரியம் மதிம் ।
ஊர்த்வா யஸ்யாமதிர்பா அதித்யுதத்ஸவீமனி
ஹிரண்யபாணிரமிமீத ஸுக்ரது꞉ க்ருபா ஸ்வ꞉ ॥

அந்வயம்.

कविक्रतुं, अभिप्रियं, सत्यसवं, रत्नधां, मतिं, सवितारं, त्यं, देवं, अभि अर्चामि, यस्य, भाः, ऊर्ध्वा, ओण्योः, अदिद्युतत्, सवीमनि, अमतिः, सुक्रतुः, हिरण्यपाणिः, कृपा, स्वः, अमिमीत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| कविक्रतुं | கவிக்ரதும் | எல்லாவற்றையு முணர்ந்ததும் |
| अभिप्रियं | அபிப்ரியம் | எல்லா வகையினும் பிரியமுடையதும் |
| सत्यसवं | ஸத்யஸவம் | உண்மையிற் செலுத்துவதும் |

* प्रजाभ्यस्त्वा प्रजाभ्यस्त्वी अनुप्राणन्तु प्रजास्त्वमनुप्राणिहि, என்று யஜுர்வேதத்தில் அதிகபாடமிருக்கின்றது, कृपात् स्वः, என்பது அதர்வணம்.

| | | |
|---|---|---|
| रत्नधां | ரத்நதாம் | அழகிய தனத்தைக் கொடுப்பதும் |
| मतिं | மதிம் | துதிக்கத்தக்கதுமாகிய |
| सवितारं | ஸவிதாரம் | சூரியனென்னும் |
| त्यं देवं | த்யம் தேவம் | அத்தேவதையை |
| अभि अर्चामि | அபி அர்சாமி | இனிது பூசிக்கின்றேன். |
| यस्य | யஸ்ய | எச் சூரியனுடைய |
| भाः | பாஃ | கிரணம் |
| ऊर्ध्वा | ஊர்த்வா | உயர்ந்ததாய் |
| ओण्योः | ஓண்யோஃ | வானுலகு மண்ணுலகங்களிரண்டிலும் |
| अदिद्युतत् | அதித்யுதத் | மிகப் பிரகாசிக்கின்றதோ, |
| सवीमनि | ஸவீமநி | யாது வெளிப்பட்ட விடத்து |
| अमतिः | அமதிஃ | அனைத்தும் நன்கு விளங்குகின்றனவோ, |
| सुक्रतुः | ஸுக்ரதுஃ | அழகிய கருமமுடையதும் |
| हिरण्यपाणिः | ஹிரண்யபாணிஃ | பொற் கையை யுடையதுமாகிய அச் சூரிய தேவதை |
| कृपा | க்ருபா | தயை செய்து |
| स्वः | ஸ்வஃ | சுவர்க்க நிமித்தமாக |
| अमिमीत | அமிமீத | அளந்தது, (இச் சோமரசத்தை அருந்தியது.) |

### சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—8. நகுல ரிஷி.

(சூரிய) சவிதா என்னும் அவ்வுந்தேவனை எல்லாவகையானும் வாக்காற் பூசிக்கின்றேன். எவ்வண்ணத்தனாகிய தேவனை யெனின்? எல்லை யற்றவுணர்வுடையவனும், உண்மையாய்ச் செலுத்துவோனும், இரமணீய தனங்களைக் கொடுப்பவனும், எவ்வகையானும் பிரியத்தோடு கூடியவனும், துதிக்கத்தக்கோனு மானவனை. மற்றும், எச்சூரியனுடைய கிரணங்கள் உயர்ந்த தாகி விண்ணுலக மண்ணுலகிரண்டிலும், மிக வியப்பாய்ப் பிரகாசிக்கின்றதோ, எச் சூரியன் உதித்தவிடத்து அனைவர்களுடைய காந்திகளும் இனிது பிரகாசிக்கின்றனவோ, அழகிய கருமமுடையவனும், பொற்கரமுடையவனுமாகிய அச்சூரியதேவன், கிருபையால் சுவர்க்க நிமித்தமாய் இச்சோமரசத்தை இத்துணை யென்றளந்தனன். அல்லது, அளக்கிலன். மற்றோ, அனைவருடைய சங்கற்பத்தால் இயற்கையில் சுவர்க்க வாசியாதலின் அருந்தினன் என்பதாம்.

## மந்திரம் 9.

३१ २र ३ १ २ ३ १ २ ३१
465. अग्निꣳ होतारं मन्ये दास्वन्तं वसोः सूनुꣳ
२र ३१२ ३ २ ३ २ ३१२
सहसो जातवेदसं विप्रं न जातवेदसम् ।
२ ३ १ २ ३२ ३२ ३ १ २ ३ २
य ऊर्ध्वया स्वध्वरो देवो देवाच्या कृपा
३२ ३ १ २३१२ ३ १ २ ३ १ २ ३ १ २
घृतस्य * विभ्राष्टिमनु शुक्रशोचिष आजुह्वानस्य सर्पिषः ॥ ९ ॥

இருக்கு 1-127-1.

அக்நிம் ஹோதாரம் மந்யே தாஸ்வந்தம் வஸோ: ஸூநும்
ஸஹஸோ ஜாதவேதஸம் விப்ரம் ந ஜாதவேதஸம் ।
ய ஊர்த்வயா ஸ்வத்வரோ தேவோ தேவாச்யா க்ருபா
க்ருதஸ்ய விப்ராஷ்டிமநு ஶுக்ரஶோசிஷ ஆஜுஹ்வாநஸ்ய
[ஸர்பிஷ: ॥

### அந்வயம்.

अग्निं, होतारं, दास्वन्तं, वसोः सहसः सूनुं, जातवेदसं, विप्रं न, जातवेदसं, मन्ये, यः देवः, स्वध्वरः, ऊर्ध्वया, देवाच्या, कृपा, शुक्रशोचिषः, आजुह्वानस्य, सर्पिषः, घृतस्य, विभ्राष्टिम् अनु ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| अग्निं | அக்நிம் | தேவர்களது சேனைகளிலும். வேள்விகளிலும் தலைமையாகவும் |
| होतारं | ஹோதாரம் | எமது வேள்வியில் தேவர்களை யழைப்பதாகலின் ஓமத்தை யுண்டாக்குவதாகவும் |
| दास्वन्तं | தாஸ்வந்தம் | மிகத் தனங்கொடுப்பதாகவும் |
| वसोः सहसः | வஸோ: ஸஹஸ: | அனைவர்களாலும் போற்றத்தக்க ஆற்றலின் |
| सूनुं | ஸூநும் | மகவாகவும் |
| जातवेदसं विप्रं न | ஜாதவேதஸம் விப்ரம் ந | வித்தைகளை யறிகின்ற அந்தணன் போன்றதாகவும் |
| जातवेदसं | ஜாதவேதஸம் | மிகக் கொண்டாடத்தக்கதாகவு முள்ளதை |

* विभ्राष्टि मनुवष्टि वसु, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| मन्ये | மந்யே | (யான்) அக்கினியென உடன்படு கின்றேன். |
| यः देवः | யஃ தேவஃ | அத்தன்மைய குணமுடைய யாதொரு தேவதையானது |
| स्वध्वरः | ஸ்வத்வரஃ | நல்ல வேள்விகளை ஏற்றுக்கொண்டும் |
| ऊर्ध्वया | ஊர்த்வயா | மிக மேலாகிய |
| देवाच्या | தேவாச்யா | தேவாராதனை செய்து கொண்டும் அல்லது, தேவர்கட்குச் (தூது) சொல்லிக் கொண்டும் |
| कृपा | க்ருபா | ஆற்றலாகிய கிருபையால் அல்லது, தேவதைகட்கு, அவி கொண்டு செல்லவேண்டு மென்னும் இச்சையால் |
| शुक्रशोचिषः | ஶுக்ரஶோசிஷஃ | ஒளிமலிந்த பிரகாசமுடையதாகின்றதோ, |
| आजुह्वानस्य | ஆஜுஹ்வாநஸ்ய | அவ்வக்கினி நாற்புறத்தும் வேள்விகட்குச்சென்று |
| सर्पिषः घृतस्य | ஸர்பிஷஃ க்ருதஸ்ய | ஒழுகுகின்ற நெய்யை |
| विभ्राष्टिं अनु | விப்ராஷ்டிம் அநு | நன்கு சாம்பராகிய. விடத்து. (ஏற்றுக்கொள்கின்றது.) |

சாயணய பாடிம்.

கண்டம்—12. இருக்கு—9. புருச்சேப ரிஷி.

தேவருடைய சேனைகளில் முதன்மையதென்றும், எமது வேள்வியைக் குறித்து தேவர்களை யழைப்பதென்றும், அல்லது: ஓமத்தையுண்டாக்குவதென்றும், "அழைப்போனை வேள்வி யியற்றுவோனை" என யாஸ்க முனிவரும் 7-15-ல் கூறியுள்ளார் ஆதலின். "இன்று அழைக்குமக்கினியைப் போற்றுக" என மறை கூறலானும். "அழைக்கு மக்கினியைக் கூப்பிடுக" என்ற பிற வாக்கானும், அக்கினிக்கு தேவர்களை அழைக்குந்தன்மை மிக விளக்கமாமென்க. அக்கினி, தேவர்களை அழைக்கத்தக்கதென உடன்படுகின்றேன் எனக்கொள்க. உடன் படுகின்றேன் என்பதை ஒவ்வொரு விசேடணத்திலு மியைத்துக் கொள்க. அல்லது, மேற் கூறப்படுபவைகள் தோத்திரத்தை மேற் கொண்டவைகள். அதாவது வியப்பாகக் கொடுப்பதும், யாவர்களாலும் போற்றத்தக்கதும், ஆற்றலின் மகவும், ஈண்டு அரணிக்கட்டையிற் கடையுங்காலத்தில் மிகவலியோடு கடையுமிடத்து தீ உண்டாவதால் அதை வலியினுடைய மகவென உபசரிக்கப்பட்டது. தோன்றினவைகளை யுணர்வதும், அல்லது, தோன்றின தனங்களையுடையதும், என்னும் இத்தகைய பொருள்தரும் ஜாதவேதசம், என்னுஞ்

சொற்கு நிருத்தத்தில் யாஸ்கமுனிவர் பலவகையாகவுரை கூறியுள்ளார். அக்கினி, தோன்றின வற்றை யுணர்வது, தோன்றின தனங்களை யுடையது என்பதில் உவமை:—எல்லா வித்தைகளையு முணர்ந்த நுண்ணறிவாளனாகிய அந்தணன் போன்றெனல். அதாவது அத்தன்மைய அந்தணன் மிகமதிக்கப்படுதல் போல உன்னையுந் துதிக்கின்றேன் என்பது பொருள். கூறிய குணங்களோடு கூடிய யாதொரு சூரிய தேவன் உளனோ, அவன், இனிய வேள்விகளைத் தாங்குவோனாகவும், மிக மேம்பட்ட தேவர்களைப் பூசிக்கின்ற, அல்லது, தேவர்களை யெதிர்கொள்கின்ற ஆற்றலென்னும் கிருபையோடு கூடி கூடியவனாயிருந்தும், "தேவர்களை யேற்றுக் கொள்கின்ற கிருபையால்" என்ற யாஸ்கமுனிவர்வாக்கையு முணர்க. அவைகளினின்றும் அவிகளை (தேவஉணவுகளைத்) தாங்கும் புத்தியோடு கூடியவனா யிருந்தும், ஒளிமலிந்து பிரகாசமுடையதும், யாண்டும் அழைக்கப்பட்டதும், ஒழுகுந் தன்மையுடையதுமாகிய நெய்யைச் சாம்பரான பின்னர் அவன் விரும்புகின்றனன். அதாவது, ஏற்றுக்கொள்கின்றனன் என்பதாம். (9)

वसोः, वसुं, என இருக்கிலும், சாமத்திலும் பாடம்.

## மந்திரம் 10.

२३ १ २र ३ १ २ ३ २ ३ २ ३ २ ३ १ ३ ३ २
466. तव त्यन्नर्यं नृतोऽप इन्द्र प्रथमं पूर्व्यं दिवि प्रवाच्यं कृतम् ।
२ ३२ ३ १२ ३ १२ ३ १ २ ३२ ३२
यो देवस्य शवसा प्रारिणा असुरिणन्नपः
२ ३ १ २ ३ १ २ २ १ २ ३ १ २र ३ १ २ ३ १ २र
* भुवो विश्वमभ्यदेवमोजसा विदेदूर्जं शतक्रतु †र्विदेदिषम्॥१०॥

இருக்கு 1-126-1.

തവ ത്യന്നൎയ്യം നൃതൊഽപ ഇന്ദ്ര പ്രഥമം പൂൎവ്യം ദിവി പ്രവാ[ച്യം കൃതം ।
യൊ ദെവസ്യ ശവസാ പ്രാരിണാ അസുരിണന്നപഃ
ഭുവൊ വിശ്വമഭ്യദെവമൊജസാ വിദെദൂൎജ്ജം ശതക്രതുൎവ്വിദെ[ദിഷം ॥

அந்வயம்.

नृतः, इन्द्र!, नर्यं, प्रथमं, पूर्व्यं, कृतं, तव, त्यत्, अपः, दिवि, प्रवाच्यं, देवस्य, असु, शवसा, रिणन्, अपः, अरिणः, विश्वं, अदेवं, ओजसा, अभिभुवः, शतक्रतुः, ऊर्जं, इषं, विदेत् ॥

* भुवद्, † विदादिषम्, என்பன இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| नृतः | நரு தஃ | அனைவரையும் ஆட்டிவைப்போனாகிய |
| इन्द्र ! | இந்த்ர ! | இந்திரனே ! |
| नर्यं | நர்யம் | மனிதர்க்கு இனியதும் |
| प्रथमं | ப்ரதமம் | தலைமையும் |
| पूर्व्यं | பூர்வ்யம் | பழமையுமாகச் |
| कृतं | க்ருதம் | செய்யப்பட்ட |
| तव | தவ | உனது |
| त्यत् अपः | த்யத் அபஃ | கீர்த்தியுடைய அச் செய்கை |
| दिवि | திவி | சுவர்க்கத்தில் |
| प्रवाच्यं | ப்ரவாச்யம் | இனிது புகழத்தக்கதாகின்றது. அச்செய்கை யாதெனின் ? நீ |
| देवस्य | தேவஸ்ய | வெற்றியை விரும்பிய அசுரர்களின் |
| असु | அஸு | பிராணனை |
| शवसा | ஶவஸா | வலியால் |
| रिणन् | ரிணந் | ஒழித்து |
| अपः | அபஃ | அசுரர்களாற் றடுக்கப்பட்ட நீரை (மழையை) ச் |
| अरिणः | அரிணஃ | செலுத்தியதாம். |
| शतक्रतुः | ஶதக்ரதுஃ | அத்தகைய இந்திரன் |
| विश्वं | விஶ்வம் | நிறைந்த |
| अदेवं | அதேவம் | இருளாகிய அசுரனை |
| ओजसा | ஓஜஸா | ஆற்றலால் |
| अभिभुवः | அபிபுவஃ | நாசமாக்குவானாக. |
| ऊर्जं | ஊர்ஜம் | வலியையும் |
| इषं | இஷம் | அவியாகிய அன்னத்தையும் |
| विदेत् | விதேத் | பெற்றுக்கொள்வானாக. |

சாயண பாடியம்.

கண்டம்—12. இருக்கு—10. கிருத்சமத ரிஷி.

அனைவர்களையும் ஆட்டிவைக்கின்ற (செலுத்துகின்ற) இந்திரனே ! நீ மனிதர்கட்கு இனிது செய்வதும், முதன்மையானதும், "பிரதமம் மிக முதன்மை" என்றார் யாஸ்கமுனிவரும். முற்காலத்திலுண்டாகியதும், நின்னாற் செய்யப்பட்டதுமாகிய கீர்த்திமலிந்த நினது கருமம் (செய்கை) சுவர்க்கத்தில் தேவர்களாற் புகழத்தக்கதேயாகின்றது. அஃதென்னையோவெனின்?

தேவர்களை வெல்ல விருப்புள்ள அசுரனுடைய பிராணனைக் கொன்று, நீ, அவனாற்றடுக்கப்பட்ட நீரை (மழையை) ஏவினாய் (கொண்டு வந்தனை) என்பதாம். யாதொரு இச்செய்கை புகழத்தக்கதே யெனப் பொருந்தினமை காண்க. இனிபரோட்சமாய்க் கூறல்:—அவ்விந்திரன் நிறைந்த இருளாகிய அசுரனை ஆற்றலாற் றொலைப்பானாக. மற்றும், இந்திரன் வலியை அடைவானாக. அவியாகிய அன்னத்தையும் அடைவானாக என்பதாம். (10)

## பன்னிரண்டாவது கண்டம்

முற்றும்.

ஸ்ரீமத், இராஜாதிராஜ பரமேசுர வைதிக மார்க்கப் பிரவர்த்தக,
ஸ்ரீவீர புக்கண பூபால சாம்ராஜ்ய துரந்தரராகிய சயணாசாரியர் இயற்றிய
மாதவீய சாம வேதார்த்தப் பிரகாசமென்னுஞ்
சந்த வியாக்கியானத்தில்,

---

## இரண்டாவது ஐந்திர காண்டமும்,

அல்லது

## ஐந்திர பருவமும்,

முற்றும்.

---

சாமவேத சங்கிதை நான்காமத்தியாயம்

முற்றும்.

---

ஓம் சுப்ரமண்யோம்! ஓம் சுப்ரமண்யோம்! ஓம் சுப்ரமண்யோம்!

---

# சாமவேத சங்கிதை

மூன்றுவது

## பவமான காண்டம்.

## ஐந்தாம் அத்தியாயம்

### முதலாவது கண்டம்.

### பிரபாடகம்—5. கண்டம்—1.

பத்து மந்திரங்களாலானது.

தேவதை—பவமானன், சந்தம்—காயத்திரி. சுரம்—ஷட்சம். இருடிகள் ஆங்காங்குக் கூறப்படுவர்கள்.

இவ் வத்தியாயத்தில் சோமரசந் துதிக்கப்படுகின்றது.

#### மந்திரம் 1.

३ १ २ ३१ २र ३ १ २र
467. उच्चा ते जातमन्धसो *दिवि सद्भूम्याददे ।
३२उ ३ २३ १२
उग्रꣳ शर्म महि श्रवः ॥ १ ॥

இருக்கு 9-61-10.

𑌉𑌚𑍍𑌚𑌾 𑌤𑍇 𑌜𑌾𑌤𑌮𑌨𑍍𑌧𑌸𑍋 𑌦𑌿𑌵𑌿 𑌸𑌦𑍍𑌭𑍂𑌮𑍍𑌯𑌾𑌦𑌦𑍇 ।
𑌉𑌗𑍍𑌰𑌂 𑌶𑌰𑍍𑌮 𑌮𑌹𑌿 𑌶𑍍𑌰𑌵𑌃 ॥

அங்வயம்.

हे सोम !, ते, अन्धसः, उच्चा, जातं, दिवि, सत्, उग्रं, शर्म, महि, श्रवः, भूमि आददे ॥

---

* दिविषद्, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹெ ஸொம! | சோமமே! |
| ते | தெ | உன்னுடைய |
| अन्धसः | அந்தஸः | இரசத்தின் தோற்றம் |
| उच्चा | உச்சா | சிறப்புடைய தாய் |
| जातं | ஜாதம் | உண்டாயிற்று. (அதனுல்) |
| दिवि | திவி | வானுலகில் |
| सत् | ஸத் | இருக்கப் பெற்றதும் |
| उग्रं | உக்ரம் | கீர்த்தியுடையதுமாகிய |
| शर्म | ஶர்ம | சுகத்தையும் |
| महि | மஹி | மிகுதியாகிய |
| श्रवः | ஶ்ரவः | அன்னத்தையும் |
| भूमि आददे | பூமி ஆததெ | தரையிற்பிறந்த யாம் அடைகின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—2. அமகீயுர் ரிஷி.

சோமக்கொடியே! நினது ரசம் மேன்மையாய்ப் பிறந்தது, மற்றும், வானுலகிற் பெருமையுள்ள சுகத்தையும், மகத்தாகிய அன்னத்தையும் தரையிற் பிறந்த எமைப்போன்றோர்கள் (அதனுல்) அடைகின்றோர்கள் என்பதாம்.

## மந்திரம் 2.

१२ ३ १२ ३ १ २ ३ १२ १ २३ १२ ३२

468. स्वादिष्ठया मदिष्ठया पवस्व सोम धारया इन्द्राय पातवे सुतः॥२॥

இருக்கு 9-1-1.

ஸ்வாதிஷ்டயா மதிஷ்டயா பவஸ்வ ஸொம தாரயா இந்த்ராய பாதவெ [ஸுதः ॥

அங்வயம்.

हे सोम!, इन्द्राय, पातवे, सुतः, स्वादिष्ठया, मदिष्ठया, धारया, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹெ ஸொம! | சோமரசமே! |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் |
| पातवे | பாதவெ | அருந்துதற் பொருட்டுப் |
| सुतः | ஸுதः | பிழிந்தெடுக்கப்பட்ட நீ |
| स्वादिष्ठया | ஸ்வாதிஷ்டயா | மிக இன்சுவையோடு கூடியதும் |

| | | |
|---|---|---|
| मदिष्ठया | 𑌮𑌦𑌿𑌷𑍍𑌠𑌯𑌾 | மிகக் களிப்பைக்கொடுப்பது மாகிய |
| धारया | 𑌧𑌾𑌰𑌯𑌾 | தாரையால் (துளித்துளியா யொழுகி) |
| पवस्व | 𑌪𑌵𑌸𑍍𑌵 | நிறைவாயாக. |

சாயண பாடியம்

கண்டம்—1. இருக்கு—2. மதுச்சந்த ரிஷி.

சோமரசமே! இந்திரன் அருந்துதற்பொருட்டுப் பிழிந்தெடுக்கப்பட்ட நீ, மிகுந்த இன்சுவையோடு கூடியதும், பெரும் (வியப்பாகிய) களிப்பைத் தருவதுமாகிய தாரையால் நிறைவாயாக என்பதாம். (2)

## மந்திரம் 3.

१ २   ३ १२   ३१ २   ३२
469. वृषा पवस्व धारया मरुत्वते च मत्सरः ।
२ ३ १ २३ १ २
विश्वा दधान ओजसा ॥ ३ ॥

இருக்கு 6-65-10.

𑌵𑍃𑌷𑌾 𑌪𑌵𑌸𑍍𑌵 𑌧𑌾𑌰𑌯𑌾 𑌮𑌰𑍁𑌤𑍍𑌵𑌤𑍇 𑌚 𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 𑌦𑌧𑌾𑌨 𑌓𑌜𑌸𑌾 ॥

அந்வயம்.

हे सोम!, वृषा, धारया, पवस्व, च, मरुत्वते, विश्वा, ओजसा, दधानः, मत्सरः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | 𑌹𑍇 𑌸𑍋𑌮! | சோமரசமே! நீ |
| वृषा | 𑌵𑍃𑌷𑌾 | துதிப்போர்களின் மனவேட்கையைப் பொழிந்துகொண்டு |
| धारया | 𑌧𑌾𑌰𑌯𑌾 | நினது தாரையால் |
| पवस्व | 𑌪𑌵𑌸𑍍𑌵 | கலசத்தில் நிரம்புவாயாக. |
| च | 𑌚 | மற்றும், இந்திரனுக்கு அருப்பணஞ்செய்தவிடத்து |
| मरुत्वते | 𑌮𑌰𑍁𑌤𑍍𑌵𑌤𑍇 | மருத்துவை உதவியாகக்கொண்ட அவ்விந்திரனுக்கு |
| विश्वा | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 | எல்லாத் தனத்தையும் |
| ओजसा | 𑌓𑌜𑌸𑌾 | தனது வலியால் |
| दधानः | 𑌦𑌧𑌾𑌨𑌃 | தாங்கிக்கொண்டு |
| मत्सरः | 𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 | களிப்புண்டாக்குவோனவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—1.   இருக்கு—3.   பிருகு வாருணி ரிஷி.

சோமரசமே ! நீ, தோத்திரஞ் செய்வோர்களின் விருப்பத்தைப் பெய்வோனயிருந்து உன்னுடைய தாரையால் துரோணகலசத்தில் நிரம்புவாயாக. நிரம்பிய நீ, எங்களால் இந்திரனுக்கு கொடுக்கப்பெற்ற காலத்தில் மருத்துவைச் (வாயு தேவதையை) சகாயமாய்க் கொண்ட அவ் விந்திரன் பொருட்டுக் களிப்புண்டாக்குவோனும் ஆவாயாக. எவ்விதத்தனயெனின்? தனது ஆற்றலோடு கூடியவனயிருந்து தோத்திரம் பண்ணுவோர்கட்கு எல்லாத் தனங்களேயேனும், அல்லது, நிறைந்த தனங்களேயேனுங் கொடுத்துக் கொண்டு நீ களிப்புண்டாக்குவோனகுதி என்பது பொருத்தமாமென்க. (3)

## மந்திரம் 4.

२ ३ २ २ १२ ३ १ २ ३   १ २
470.   यस्ते मदो वरेण्यस्तेना पवस्वान्धसा ।
३  १२   ३ २
देवावीरघशंसहा ॥ ४ ॥

இருக்கு 9-6-19.

யஸ்தெ மதொ வரெண்யஸ்தெநா பவஸ்வாந்தஸா ।
தெவாவீரகஶம்ஸஹா ॥

அங்வயம்.

(हे सोम !,) देवावीः, अघशंसहा, वरेण्यः, मदः, ते, यः, (रसः,) तेन, अन्धसा, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे सोम !) | (ஹெ ஸொம !) | (சோமமே! நீ,) |
| देवावीः | தெவாவீঃ | தேவர்களை விரும்புவதும் |
| अघशंसहा | அகஶம்ஸஹா | இராக்கதர்களை நாசம் பண்ணுவதும் |
| वरेण्यः | வரெண்யঃ | மிக மேலானதும் |
| मदः | மதঃ | களிப்பைக் கொடுப்பதுமாகிய |
| ते | தெ | உனது |
| यः | யঃ | யாதொரு |
| (रसः) | (ரஸঃ) | (இரசமுண்டோ,) |
| तेन अन्धसा | தெந அந்தஸா | அந்த ரசத்துடன் |
| चपस्व | பவஸ்வ | கலசத்தினிறைவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—4. அமகீயுர் ரிஷி.

சோமக்கொடியே! நீ, தேவர்களை யிச்சிக்கின்றதும், இராக்கதர்களைத் தொலைப்பதும், அனைவர்களாலும் போற்றத் தக்கதும், களிப்பைத்தருவது மாகிய உனது யாதொரு இரசமுண்டோ, ஆதரிக்கத்தற்குரிய அந்த இரசத்தோடு கலசத்தில் நிறைவாயாக என்பதாம். (4)

## மந்திரம் 5.

३ २उ ३ १ २ ३ १ २ ३ १२

471. तिस्रो वाच उदीरते गावो मिमन्ति धेनवः ।

१२ ३ १ २

हरिरेति कनिक्रदत् ॥ ५ ॥

இருக்கு 9-33-4.

திஸ்ரோ வாச உதீரதே காவோ மிமந்தி தேநவ: ।
ஹரிரேதி கநிக்ரதத் ॥

அந்வயம்.

तिस्रः, वाचः, उदीरते, धेनवः, गावः, मिमन्ति, हरिः, कनिक्रदत्, एति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| तिस्रः | திஸ்ர: | இருக்கு முதலிய வேறுபாட்டால் மூவகையான |
| वाचः | வாச: | துதிகளை |
| उदीरते | உதீரதே | வேட் போர்கள் சொல்கின்றார்கள். |
| धेनवः | தேநவ: | பாலாற்களிப்பிக்கின்ற |
| गावः | காவ: | கோக்கள் |
| मिमन्ति | மிமந்தி | பால் கறத்தற் பொருட்டுக் கதறுகின்றன (அதுபோல்) |
| हरिः | ஹரி: | பசிய சோமரசம் |
| कनिक्रदत् | கநிக்ரதத் | ஒலித்துக் கொண்டு |
| एति | ஏதி | கலசத்திற் செல்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—5. திரித ரிஷி.

இருக்கு, யசுர், சாமம் என்னும் வேறுபாட்டால் மூவகையான தோத்திரங்களை வேட் போர்கள் இனிது படிக்கின்றார்கள். விரைவில் பால் கறக்

கின்ற பாற்பசுக்கள் கறத்தற் பொருட்டுக் கத்துகின்றனபோன்று பசுமை நிறமுடைய சோமரசமுஞ் சத்தமிட்டுக் கொண்டு கலசத்திற் போய் சேர்கின்றது என்பதாம். (5)

## மந்திம் 6.

१ २    ३१ २३ १२ ३ १२
472. इन्द्रायेन्दो मरुत्वते पवस्व मधुमत्तमः ।
३ २ ३   १ २   ३१२
*अर्कस्य योनिमासदम् ॥ ६ ॥

இருக்கு 1-81-3.

இந்த்³ராயெந்தோ³ மருத்வதெ பவஸ்வ மது⁴மத்தம꞉ ।
அர்க்கஸ்ய யொநிமாஸத³ம் ॥

அந்வயம்.

इन्दो !, मधुमत्तमः, अर्कस्य योनिं, आसदं, मरुत्वते इन्द्राय, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्दो ! | ஹெ இந்தோ³ ! | சோமரசமே ! |
| मधुमत्तमः | மது⁴மத்தம꞉ | மிகுந்த இன்சுவை யோடு கூடிய நீ |
| अर्कस्य योनिं | அர்க்கஸ்ய யொநிம் | ஆராதிக்கின்ற வேள்வியாகிய இடத்தைப்பற்றி |
| आसदं | ஆஸத³ம் | விளங்குவதாய் |
| मरुत्वते इन्द्राय | மருத்வதெ இந்த்³ராய | மருத்துக்களோடு கூடிய இந்திரன் பொருட்டுக் |
| पवस्व | பவஸ்வ | கலசத்தி னிறைவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—6. கசியப ரிஷி.

சோமரசமே! மிக்க இன்சுவையுள்ள நீ, ஆராதிக்கின்ற வேள்வி என்னுமிடத்தில் உட்காருவோனும் இந்திரன் பொருட்டுக் கலசத்தை யடைவாயாக என்பதாம். (6)

---

* ऋतस्य, என்பது இருக்கு.

## மந்திரம் 7.

२ १ ३ १२२ ३ १ २२ ३ २
473. असाव्यंशुर्मदायाप्सु दक्षो गिरिष्ठाः ।
३ २उ ३ १२
श्येनो न योनिमासदत् ॥ ७ ॥

இருக்கு 6-62-4.

அஸாவ்யம்ஶுர்மதாயாப்ஸு தக்ஷோ கிரிஷ்டா: ।
ஶ்யேநோ ந யோநிமாஸதத் ॥

அந்வயம்.

गिरिष्ठाः, अंशुः, मदाय, असावि, श्येनः न, अप्सु, दक्षः, योनिं, आसदत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| गिरिष्ठाः | கிரிஷ்டா: | மலைகளில் முளைத்துள்ள |
| अंशुः | அம்ஶு: | சோமம் |
| मदाय | மதாய | களிப்பின் பொருட்டுத் |
| असावि | அஸாவி | தேடப்பட்டிருக்கின்றது. |
| श्येनः न | ஶ்யேந: ந | அன்றிற் பறவை வனம்விட்டுத் தனதிடத்தி லுறைவது போன்று |
| अप्सु | அப்ஸு | நீரில் |
| दक्षः | தக்ஷ: | வாழ்கின்ற (இச்சோமம்) |
| योनिं आसदत् | யோநிம் ஆஸதத் | தனதிடத்தில் நிலைத்திருக்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—7. சமதக்கினி ரிஷி.

மலைகளிற்றோன்றிய சோமம், களிப்பின் பொருட்டுப் பிழியப்பட்டது. அது நீரிலும் (மடுக்களிலும்) வளர்கின்றது. அன்றியும், அன்றிற் புள், வனத்திலிருந்து வந்து தனதிடத்தை யடைவதுபோல, இச் சோமம் தனக்கு யாதொரு இடமுண்டோ, அதை அடைகின்றது என்பதாம். (7)

## மந்திரம் 8.

१२ ३ १२ ३१ २ ३१२
474. पवस्व दक्षसाधनो देवेभ्यः पीतये हरे ।
३ १२ ३२३ १२
मरुद्भ्यो वायवे मदः ॥ ८ ॥

இருக்கு 19-25-1.

𑌪𑌵𑌸𑍍𑌵 𑌦𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑍋 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍀𑌤𑌯𑍇 𑌹𑌰𑍇 ।
𑌮𑌰𑍁𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌵𑌾𑌯𑌵𑍇 𑌮𑌦𑌃 ॥

அந்வயம்.

हे हरे!, दक्षसाधनः, मदः, देवेभ्यः पीतये, मरुद्भ्यः, वायवे, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे हरे! | 𑌹𑍇 𑌹𑌰𑍇 | பாவத்தைப்போக்குகின்ற சோம ரசமே! |
| दक्षसाधनः | 𑌦𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑌃 | ஆற்றலுக்குச் சாதகமாகிய |
| मदः | 𑌮𑌦𑌃 | களிப்பைக் கொடுக்கின்ற நீ |
| देवेभ्यः पीतये | 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍀𑌤𑌯𑍇 | இந்திரன் முதலிய தேவர்கள் அருந்துதற் பொருட்டும் |
| मरुद्भ्यः | 𑌮𑌰𑍁𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | மருத் தேவதைகள் அருந்துதற் பொருட்டும் |
| वायवे | 𑌵𑌾𑌯𑌵𑍇 | வாயு தேவதையின் பொருட்டும் |
| पवस्व | 𑌪𑌵𑌸𑍍𑌵 | கலசத்தில் நிறைவாயாக, |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—8. திடச்யுத ஆகத்திய ரிஷி.

பச்சைநிற முடையோய்! அல்லது, பாவத்தைப் போக்குகின்ற சோம ரசமே! ஆற்றலுக்கு கருவியாகிய களிப்பைத்தருகின்ற நீ பாத்திரத்தில் நிறைவாயாக. எதன் பொருட்டெனின்? இந்திரன் முதலிய தேவர்கள் அருந்துவதற்கும், மருத்துகளும் வாயு தேவதைகளும் அருந்துதற்பொருட்டும். நிறைவாயாக எனமுடித்துக் கொள்க. (8)

## மந்திரம் 9.

१२ ३ १ २ ३ २ ३ २ ३ १ २
475. परि*स्वानो गिरिष्ठाः पवित्रे सोमो अक्षरत् ।
१२ ३ १ २
मदेषु सर्वधा असि ॥ ९ ॥

இருக்கு 9-18-1.

𑌪𑌰𑌿𑌸𑍍𑌵𑌾𑌨𑍋 𑌗𑌿𑌰𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑍇 𑌸𑍋𑌮𑍋 𑌅𑌕𑍍𑌷𑌰𑌤𑍍 ।
𑌮𑌦𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌧𑌾 𑌅𑌸𑌿 ॥

அந்வயம்.

सोमः, पवित्रे, पर्यक्षरत्, गिरिष्ठाः, स्वानः, मदेषु, सर्वधा असि ॥

* सुवानः अक्षरा, என்பன இருக்கு.

### பதவுரை.

| | | |
|---|---|---|
| सोमः | ஸோம: | இச் சோமரசம் |
| पवित्रे | பவித்ரே | சுத்தமாகிய பாத்திரத்தில் |
| पर्यक्षरत् | பர்யக்ஷரத் | நிறைந்து கொண்டிருக்கின் |
| गिरिष्ठाः | கிரிஷ்டா: | மலையிற்றோன்றியதும் |
| स्वानः | ஸ்வாந: | சம்பாதிக்கப்பட்டதுமாம். |
| मदेषु | மதேஷு | அத்தகைய நீ, துதிக்கப்பட்டோர்கள் விஷயத்தில் |
| सर्वधा असि | ஸர்வதா அஸி | எல்லாவகையானும் அன்னத்தையுங்கொடுப்போனாக இருக்கின்றாய். |

### சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—9. கசியபர், அசிதர் ரிஷிகள்.

இச் சோமரசம் பரிசுத்தமாகிய பாண்டத்தில் நிறைந்துகொண் டிருக்கின்றதும், பிழியப்பட்டதும், மலையிலிருப்பதுமாம் என்பது பொருள். அத்தன்மைய நீ, துதிப்போர்களிடத்தில் எல்லாவற்றையுங் கொடுப்போனாய், அல்லது, அன்னத்தையுந் தாங்குவோனாய் இருக்கின்றாய் என்பதாம். (9)

## மந்திரம் 10.

१२ ३ २ ३२ ३ १ २र ३क २र३२
476. परि प्रिया दिवः कविर्वयांसि नप्त्योर्हितः ।
३ १ २ ३ १ २
*स्वानैर्याति कविक्रतुः ॥ १० ॥

இருக்கு 9-9-1.

பரி ப்ரியா திவ: கவிர்வயாம்ஸி நப்த்யோர்ஹித: ।
ஸ்வாநைர்யாதி கவிக்ரது: ॥

### அந்வயம்.

कविः, कविक्रतुः, नप्त्योः हितः, दिवः, प्रिया, वयांसि, स्वानैः, परियाति ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| कविः | கவி: | நுண்ணறிவுடையதும் |
| कविक्रतुः | கவிக்ரது: | புத்தியை வளர்க்கின்றதுமாகிய சோமம் |

* सुवाना, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| हेतः | நவ்தூ ஹித: | பிழியும் பலகைக ளிரண்டின் நடுவில் வைக்கப்பட்டிருக்கின்றது. |
| | திவ: | வானுலகிற் |
| | ப்ரியா | பிரியமுள்ளவைகளாய்ப் |
| वय. | வயாம்ஸி | போகின்ற கற்களை |
| स्वानैः | ஸ்வாநை: | வேள்வி யாற்றுவோர்களால் |
| परियाति | பரியாதி | (அது) பெறுகின்றது. |

சாயண பாடியம்.

**கண்டம்—1.** இருக்கு—10. கசியபர், அசிதர் ரிஷிகள்.

நுண்ணறிவுடையதும், எல்லையற்ற கருமமுடையதுமாகிய சோமம், பிழிந்தெடுக்கும் பலகை யிரண்டின் இடையில் வைக்கப்பட்டது. விருப்புடையவைகளாய் வானுலகஞ் செல்கின்ற கற்களை வேட்போர்கள் வாயிலாக அது அடைகின்றது. அவ்வாறே வேதமந்திரமுங் கூறுகின்றது. (10)

குறிப்பு.—ஈண்டு, மேலே தூக்கி சோமக்கொடியை யிடிக்கின்ற கற்கள் விதந்தோதப்படுகின்றன.

## முதலாவது கண்டம்.

முற்றும்.

---

## இரண்டாவது கண்டம்

## பிரபாடகம்—5. அத்தியாயம்—5. கண்டம்—2.

பத்து மந்திரங்களாலானது.

தேவதை, சோமம். சந்தம், காயத்திரி. சுரம் ஷட்சம்.

### மந்திரம் 1.

१ २र ३ २३ १२ ३ १२
477. प्र सोमासो मदच्युतः श्रवसे नो *मघोनाम् ।
३ २ ३ १२
सुता विदथे अक्रमुः ॥ १ ॥

இருக்கு 9-32-1.

---

* मघोनः, என்பது இருக்கு.

𑌪𑍍𑌰 𑌸𑍋𑌮𑌾𑌸𑍋 𑌮𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌃 𑌶𑍍𑌰𑌵𑌸𑍇 𑌨𑍋 𑌮𑌘𑍋𑌨𑌾𑌮𑍍 ।
𑌸𑍁𑌤𑌾 𑌵𑌿𑌦𑌥𑍇 𑌅𑌕𑍍𑌰𑌮𑍁𑌃 ॥

அந்வயம்.

मदच्युतः, सोमासः, सुताः, मघोनां, नः, विदथे, श्रवसे, प्र अक्रमुः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **मदच्युतः** | 𑌮𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌃 | களிப்பை யூட்டுகின்ற |
| **सोमासः** | 𑌸𑍋𑌮𑌾𑌸𑌃 | சோமரசம் |
| **सुताः** | 𑌸𑍁𑌤𑌾𑌃 | பிழிந்தெடுத்த விடத்து |
| **मघोनां** | 𑌮𑌘𑍋𑌨𑌾𑌂 | அவிகளைக் கைக்கொண்ட |
| **नः** | 𑌨𑌃 | எங்களுடைய |
| **विदथे** | 𑌵𑌿𑌦𑌥𑍇 | வேள்வியில் |
| **श्रवसे** | 𑌶𑍍𑌰𑌵𑌸𑍇 | { அன்னத்தின் பொருட்டு (அல்லது) கீர்த்தியின் பொருட்டுப் |
| **प्र अक्रमुः** | 𑌪𑍍𑌰 𑌅𑌕𑍍𑌰𑌮𑍁𑌃 | பாத்திரங்களை யடைகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—1. ச்யாவாசுவ ரிஷி.

சோமரசம், களிப்பை யூட்டுவதாயும் பிழியப்பட்டதுமாகி அவிகளைக் கொண்டுள்ள எங்களுடைய வேள்வியில் அன்னத்தின் பொருட்டாகவேனும், அல்லது, கீர்த்தியின் பொருட்டாகவேனும் பாத்திரங்களிற் செல்கின்றது என்பதாம். (1)

மந்திரம் 2.

१ २र ३ २ ३ १ २ ३ १२
478. **प्र सोमासो विपश्चितोऽपो *नयन्त ऊर्मयः ।**
१ २ ३ १ २
**वनानि महिषा इव ॥ २ ॥**

இருக்கு 9-33-1.

𑌪𑍍𑌰 𑌸𑍋𑌮𑌾𑌸𑍋 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑍋𑌽𑌪𑍋 𑌨𑌯𑌨𑍍𑌤 𑌊𑌰𑍍𑌮𑌯𑌃 ।
𑌵𑌨𑌾𑌨𑌿 𑌮𑌹𑌿𑌷𑌾 𑌇𑌵 ॥

அந்வயம்.

विपश्चितः, सोमासः, अपः ऊर्मयः, महिषा वनानि इव, प्रनयन्त ॥

---

* नयन्ति, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| विपश्चितः | விபஶ்சிதஃ | புத்தியை வளர்க்கின்ற |
| सोमासः | ஸோமாஸஃ | சோமரசம் |
| अपः ऊर्मयः | அபஃ ஊர்மயஃ | நீரி னலைகள் போன்றும் |
| महिषा वनानि इव | மஹிஷா வநாநி இவ | மிருகங்கள் வனங்களிற் செல்வன போன்றும் |
| प्रनयन्त | ப்ரநயந்த | பாத்திரங்களை யடைகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—2. திரித ரிஷி.

நுண்ணறிவை யுண்டாக்குகின்ற சோமரசம் பாத்திரங்களை யடைகின்றது. எதைப் போலெனின்? நீரினுடைய அலைகள் போன்று என்க. ஈண்டு, நீர் என்பது நீரினுடைய என ஆறும் வேற்றுமையாய்த் திரிந்தது. இது பற்றியே இருக்கோதுவார்களும் 'அபாங்நயந்தீதி' என ஓதுகின்றார்கள். அந்த அலைகள் இடைவிடாது உண்டாகின்றன போன்று என்பதாம். மிருதிக்கண் இவ்வுவமை. அடைவதில் மற்றோருவமை கூறப்படுகின்றது:—அநேக மிருகங்கள் வனத்தை யடைவனபோன்றெனல். அல்லது, தனது ஆசிரயமாகிய பாத்திரத்தினின்றும் ஒழுகுவதற்கு முதலுவமை. இரண்டாவதோ, அப் பாத்திரத்தினின்றுங் கீழிடத்திற் செல்வதன் பொருட்டெனக் கொள்க. (2)

## மந்திரம் 3.

१२ ३ १ २ ३२ ३ १ २ ३२ ३ १ २
479. पवस्वेन्दो वृषा सुतः कृधी नो यशसो जने ।
२ ३ २ ३ १ २
विश्वा अप द्विषो जहि ॥ ३ ॥

இருக்கு 9-61-28.

பவஸ்வேந்தோ வ்ருஷா ஸுதஃ க்ருதீ நோ யஶஸோ ஜநே ।
விஶ்வா அப த்விஷோ ஜஹி ॥

அந்வயம்.

हे इन्दो !, सुतः, वृषा, पवस्व, जने, नः, यशसः, कृधि, विश्वा, द्विषः, अप जहि ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्दो! | ஹே இந்தோ ! | சோமரசமே ! |
| सुतः | ஸுத: | பிழியப்பெற்ற நீ |
| वृषा | வ்ருஷா | மனவிருப்பை நிறையச் செய்வோனாகி |
| पवस्व | பவஸ்வ | தாரையாற் பாத்திரத்தை யடைவாயாக. |
| जने | ஜநே | தேசத்தின் கண் |
| नः | ந: | எம்மைக் |
| यशसः | யஶஸ: | கீர்த்தியுடையவராய்ச் |
| कृधि | க்ருதி | செய்வாயாக. |
| विश्वा | விஶ்வா | எல்லாச் |
| द्विषः | த்விஷ: | சத்துருக்களையும் |
| अप जहि | அப ஜஹி | நாசம் பண்ணுவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—3. அமஹீயுர் ரிஷி.

சோமரசமே! பிழியப்பட்டோனாய் மனவிருப்பைப் பூரணமாக்குகின்ற நீ, தாரையால் நிறைவாயாக. தேசத்தில் எங்களைக் கீர்த்தியுடையோர்களாகச் செய்குதி. மற்றும், எல்லாப் பகைவர்களையு மொழிப்பாயாக என்பதாம். (3)

### மந்திரம் 4.

२ ३ १ २   ३ १ २ ३ १ २
480. वृषा ह्यसि भानुना द्युमन्तं त्वा हवामहे ।
१२   ३ १ २
पवमान स्वर्दृशम् ॥ ४ ॥

இருக்கு 9-65-4.

வ்ருஷா ஹ்யஸி பாநுநா த்யுமந்தம் த்வா ஹவாமஹே |
பவமாந ஸ்வர்த்ருஶம் ||

### அந்வயம்.

(हे सोम !,) हि, वृषा, असि, पवमान !, स्वर्दृशं, भानुना, द्युमन्तं, त्वा, हवामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे सोम !) | (ஹெ ஸொம !) | (சோமமே ! நீ) |
| हि | ஹி | உண்மையாக |
| वृषा | வ்ருஷா | விரும்பிய பயனைப் பொழிவோனக |
| असि | அஸி | இருக்கின்றாய். (இதனால்) |
| पवमान ! | பவமாந ! | பவித்திரஞ்செய்கின்றசோமமே! |
| स्वर्दृशं | ஸ்வர்த்ருஶம் | எல்லா வற்றையுங்காணுகின்ற |
| भानुना | பாநுநா | பிரகாசத்தால் |
| द्युमन्तं | த்யுமந்தம் | விளங்குகின்ற |
| त्वा | த்வா | உன்னை |
| हवामहे | ஹவாமஹெ | வேள்விக்கு அழைக்கின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—4. பிருகு ரிஷி.

சோமமே! நீ, உண்மையில் நிச்சயமாக விரும்பிய பயன்களைப் பெய்வோனுயிருக்கின்றாய். ஆதலின் பவித்திரஞ் செய்கின்ற, அல்லது, நிறைந்த சோமரசமே! எல்லாவற்றையுங் காண்கின்ற ஒளியால் விளங்கும் உன்னை வேள்விக்கு அழைக்கின்றோம். (4)

மந்திரம் 5.

१ २ ३ १२ ३ १ २ ३ २ ३ २

481. इन्दुः पविष्ट चेतनः प्रियः कवीनां *मतिः ।

३१ २र ३ १२

सृजदश्वꣳ रथीरिव ॥ ५ ॥

இருக்கு 9-64-10.

இந்து: பவிஷ்ட சேதந: ப்ரிய: கவீநாம் மதி: ।
ஸ்ருஜதஶ்வம் ரதீரிவ ॥

அந்வயம்.

चेतनः, प्रियः, इन्दुः, कवीनां, मतिः, पविष्ट, अश्वं, रथीः, इव, सृजत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| चेतनः | சேதந: | அறிவைக் கொடுப்பதும் |
| प्रियः | ப்ரிய: | தேவதைகட்குப் பிரியமுடையதுமாகிய |

* मती, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **इन्दुः** | இந்து: | சோமரசம், |
| **कवीनां** | கவீநாம் | வேட்போர்களுடைய |
| **मतिः** | மதி: | துதியாற் |
| **पविष्ट** | பவிஷ்ட | பாத்திரத்தில் நிறைகின்றது. |
| **अश्वं** | அச்வம் | குதிரையை |
| **रथीः इव** | ரதீ: இவ | இரத மூர்வோன் நடத்துவது போன்று |
| **सृजत्** | ஸ்ருஜத் | (ஓடுகின்ற) தாரைகளை யுண்டாக்குகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—5. கசியப ரிஷி.

மெய்ஞ்ஞானத்தைத் தருவதும், தேவதைகட்கு விருப்பை யுண்டாக்குவதுமாகிய சோமரசம், அளவிலாத கருமமுள்ள துதிப்போர்களின் ஸ்தோத்திரத்தாற் பாத்திரங்களில் நிறைகின்றது. இரதத்தி லுள்ளான் குதிரையை நடத்துவது போல (இச் சோமரசம்) அலைகளை யுண்டாக்குகின்றது என்பதாம். (5)

## மந்திரம் 6.

१ २ ३ २ ३ १ २ ३ १ २र ३ २
482. **अस्रृक्षत प्र वाजिनो गव्या सोमासो अश्वया ।**
३ १ २ ३१ २र
**शुक्रासो वीरयाशवः ॥ ६ ॥**

இருக்கு 9-64-4.

அஸ்ருக்ஷத ப்ர வாஜிநோ கவ்யா ஸோமாஸோ அச்வயா |
சுக்ராஸோ வீரயாசவ: ||

அந்வயம்.

**वाजिनः, आशवः, शुक्रासः, सोमासः, गव्या, अश्वया, वीरया, प्रासृक्षत ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **वाजिनः** | வாஜிந: | ஆற்றலுடையதும் |
| **आशवः** | ஆசவ: | வேக முடையதும் |
| **शुक्रासः** | சுக்ராஸ: | ஒளி யுடையதுமாகிய |
| **सोमासः** | ஸோமாஸ: | சோமரசம் |
| **गव्या** | கவ்யா | கோ விருப்பத்தாலும் |

| | | |
|---|---|---|
| **अश्वया** | அஶ்வயா | குதிரை யிச்சையாலும் |
| **वीरया** | வீரயா | புத்திர வேட்கையாலும் |
| **प्रासृक्षत** | ப்ராஸ்ருக்ஷத | வேட்போர்களால் நன்கு உண்டாக்கப்படுகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—6. கசியப ரிஷி.

வலிவுள்ளதும், வேக முடையதுமாகிய சோமரசம், ஆ, வேண்டுமென்னும் விருப்பானும், குதிரை வேண்டுமென்னும் இச்சையாலும், மக்கள் வேண்டுமென்னும் வாஞ்சையாலும் வேட்போர்களால் இனிது உண்டாக்கப் படுகின்றது என்பதாம். (6)

## மந்திரம் 7.

१२ ३१ २३१ २र ३ १२
483. **पवस्व देव आयुषगिन्द्रं गच्छतु ते मदः ।**
३१ २र ३ १२
**वायुमारोह धर्मणा ॥ ७ ॥**

இருக்கு 9-61-16.

பவஸ்வ தேவ ஆயுஷகிந்த்ரம் கச்சது தே மத: ।
வாயுமாரோஹ தர்மணா ॥

அங்வயம்.

(हे सोम !,) देवः, पवस्व, मदः, ते, आयुषक्, इन्द्रं, गच्छतु, धर्मणा, वायुं, आरोह ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **(हे सोम !)** | (ஹே ஸோம !) | (சோமரசமே !) |
| **देवः** | தேவ: | பிரகாசமுடைய நீ |
| **पवस्व** | பவஸ்வ | தாரையாற் பாத்திரத்தில் நிறைவாயாக. மற்றும், |
| **मदः** | மத: | களிப்பைத்தருகின்ற |
| **ते** | தே | உன்னுடைய ரசமானது |
| **आयुषक्** | ஆயுஷக் | அடையு மாறு |
| **इन्द्रं** | இந்த்ரம் | இந்திரனை |
| **गच्छतु** | கச்சது | அடைகுக. |
| **धर्मणा** | தர்மணா | தாங்குகின்ற நீ இரசவடிவத்தால் |
| **वायुं** | வாயும் | வாயுவை |
| **आरोह** | ஆரோஹ | அடைவாயாக, |

### சாயண பாடியம்.

*கண்டம்—2. இருக்கு—7. காசியப ரிஷி.*

*சோமரசமே! பிரகாசமுடைய நீ, தாரையால் நிறைவாயாக. மற்றும், களிப்பைத்தருகின்ற உனது இரசம், அடையும் வண்ணம் இந்திரனைக்குறித்து அடைவதாகுக. இன்னும், நீ தனது தன்மையாகிய இரசத்தால் வாயுவை யும் அடைவாயாக.* (7)

*குறிப்பு.—देवायुषग् , என்பது பாடபேதம்.*

## மந்திரம் 8.

484\. पवमानो अजीजनद्दिवश्चित्रं न तन्यतुम् ।
ज्योतिर्वैश्वानरं बृहत् ॥ ८ ॥

இருக்கு 9-61-61.

வவசானொ அஜீஜநத்³திவஶ்சித்ரம் ந தந்யதும் ।
ஜ்யோதிர்வைஶ்வாநரம் ப்³ருஹத் ॥

### அந்வயம்.

पवमानः, बृहत्, वैश्वानरं ज्योतिः, चित्रं, दिवः, तन्यतुं न, अजीजनत् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| पवमानः | பவமாநঃ | சோமரசம் |
| बृहत् | ப்³ருஹத் | பெரிதாகிய |
| वैश्वानरं ज्योतिः | வைஶ்வாநரம் ஜ்யோதிঃ | வைசுவாநரம் என்னும் ஒளியை |
| चित्रं | சித்ரம் | விசித்திரமாகிய |
| दिवः | தி³வঃ | வானுலகத்திலுண்டாகும் |
| तन्यतुं न | தந்யதும் ந | மின்னல் போன்று |
| अजीजनत् | அஜீஜநத் | உண்டாக்கினது. |

### சாயண பாடியம்.

*கண்டம்—2. இருக்கு—8. அமகிய ரிஷி.*

*சோமரசம், மகத்தாகிய வைசுவாநரம் என்னுஞ் சோதியை, விசித்திரமாகிய வானுலகத்தின் மின்னலைப் போன்றதாக உண்டாக்கியது என்பதாம்.* (8)

## மந்திரம் 9.

१२ ३ २३ १ २ ३ १ २ ३१ २ ३ २
485. *परि स्वानास इन्दवो मदाय बर्हणा गिरा ।
१ २ ३ १२
†मधो अर्षन्ति धारया ॥ ९ ॥

இருக்கு 9-10-4.

வரி ஸ்வாநாஸ இந்தவொ மதாய வர்ஹணா கிரா ।
மதொ அர்ஷந்தி தாரயா ॥

### அந்வயம்.

स्वानासः, इन्दवः, बर्हणा, गिरा, मधोः, धारया, मदाय, पर्यर्षन्ति ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| स्वानासः | ஸ்வாநாஸঃ | பிழியப்பட்டவைகளும் |
| इन्दवः | இந்தவঃ | பிரகாசிக்கின்றவைகளும் |
| बर्हणा | வர்ஹணா | மகத்தாகிய |
| गिरा | கிரா | துதியால் |
| मधोः | மதொঃ | களிப்புண்டாக்குபவைகளுமான சோமரசம் |
| धारया | தாரயா | தாரையால் |
| मदाय | மதாய | தேவர்களின் ஆனந்தத்தின் பொருட்டு |
| पर्यर्षन्ति | வர்யர்ஷந்தி | பவித்திரமாகிய ஆடையுள்ள பாத்திரத்தினின்று கீழே ஒழுகுகின்றது. |

### சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—9. காசியபர், அசிதர் இருடிகள்.

பிழியப்பட்டதும், விளங்குகின்றதும், மகத்தாகிய துதியென்னும் வாக்கால் ஆனந்தத்தை யுண்டாக்குவதுமான சோமரசம், தாரைகளோடு தேவர்களின் களிப்பின் பொருட்டு தசாபவித்திர மென்னும் ஆடையுள்ள பாத்திரத்தினின்று கீழே ஒழுகுகின்றது என்பதாம். (9)

---

* परिसुवानास, †सुता अर्षन्ति, என்பன இருக்கு.

## மந்திரம் 10.

१३ १ २ ३ १ २ ३ १ २र ३ २
486. परिप्रासिष्यदत्कविः सिन्धोरूर्मावधिश्रितः ।
३१ २र ३ १२
कारुं बिभ्रत्पुरुस्पृहम् ॥ १० ॥

இருக்கு 9-14-1.

பரிப்ராஸிஷ்யதத்கவி: ஸிந்தோரூர்மாவதிச்ரித: |
காரும் பிப்ரத்புருஸ்ப்ருஹம் ||

### அந்வயம்.

कविः, सिन्धोः, ऊर्मौ, अधिश्रितः, पुरुस्पृहं, कारुं, बिभ्रत्, परिप्रासिष्यदत् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| कविः | கவி: | அறிவை வளர்ப்பதும் |
| सिन्धोः | ஸிந்தோ: | கடலின் |
| ऊर्मौ | ஊர்மௌ | அலையை |
| अधिश्रितः | அதிச்ரித: | முழுதும் ஒத்ததும் |
| पुरुस्पृहं | புருஸ்ப்ருஹம் | பலரால் விரும்பத்தக்கதும் |
| कारुं | காரும் | துதிப்போர்களைத் |
| बिभ्रत् | பிப்ரத் | தாங்குகின்றதுமாகிய சோம ரசம் |
| परिप्रासिष्यदत् | பரிப்ராஸிஷ்யதத் | பாத்திரத்திற் பொங்கி வழிகின்றது. |

### சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—10. கசியபர், அசிதர் இருடிகள்.

பொங்கி வழிகின்றதும், நுண்ணறிவை யுடையதும், கடலினது அலையின் எல்லையைப் பெற்றுள்ளதும், பலரால் விரும்பப்படுவதும், துதிப்போனைத் தாங்குவதுமாகிய சோமரசம் பொங்குகின்றதென அந்வயித்துக் கொள்க. (10)

குறிப்பு.—कारम्, என்பது பாடபேதம்.

## இரண்டாவது கண்டம்

முற்றும்.

# மூன்றாவது கண்டம்

---

## பிரபாடகம்—6. அத்தியாயம்—5. கண்டம்—3.

பத்து மந்திரங்களாலானது.

---

*சோமம் - தேவதை. சந்தம் - காயத்திரி. சுரம் - ஷட்சம்.*

### மந்திரம் 1.

२ ३ २ ३२३ २३ १ २ ३ १ २
487. उपो षु जातमप्तुरं गोभिर्भङ्गं परिष्कृतम् ।
१ २ ३ १ २
इन्दुं देवा अयासिषुः ॥ १ ॥

இருக்கு 9-61-13.

உபொ ஷு ஜாதமப்துரம் கொபிர்பங்கம் பரிஷ்க்ருதம் ।
இந்தும் தெவா அயாஸிஷு: ॥

அந்வயம்.

सुजातं, अप्तुरं, भङ्गं, गोभिः, परिष्कृतं, इन्दुं, देवाः, उपायासिषुः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सुजातं | ஸுஜாதம் | இனிது தோன்றியதும் |
| अप्तुरं | அப்துரம் | நீராலேவப்படுகின்றதும் |
| भङ्गं | பங்கம் | பகைஞரை யொழிப்பதும் |
| गोभिः | கொபி: | பசுவின் நெய் முதலியவற்றால் |
| परिष्कृतं | பரிஷ்க்ருதம் | சுத்தம் பண்ணப்பட்டதுமாகிய |
| इन्दुं | இந்தும் | சோமரசத்தைத் |
| देवाः | தெவா: | தேவர்கள் |
| उपायासिषुः | உபாயாஸிஷு: | இனிது அடைகின்றார்கள். |

சாயண பாடியம்.

*கண்டம்—3. இருக்கு—1. அமகீயூர் ரிஷி.*

*நல்ல முறையாலுண்டாகியதும், நீரால் செலுத்தப்பட்டதும், சத்துருக்களை நாசப்படுத்துவதும், கோவிகாரமான பால் நெய் முதலியதால் சுத்தம் பண்ணப்பட்டதுமாகிய சோமரசத்தைத் தேவர்கள் (இந்திரன் முதலியோர்கள்) அடைகின்றார்கள் என்பதாம்.* (1)

### மந்திரம் 2.

३ १ २ ३ २उ ३ २ ३ १ २
488. **पुनानो अक्रमीदभि विश्वा मृधो विचर्षणिः ।**
३ २ ३ १ २ ३ १ २
**शुम्भन्ति विप्रं धीतिभिः ॥ २ ॥**

இருக்கு 9-40-1.

𑌪𑍁𑌨𑌾𑌨𑍋 𑌅𑌕𑍍𑌰𑌮𑍀𑌦𑌭𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 𑌮𑍃𑌧𑍋 𑌵𑌿𑌚𑌰𑍍𑌷𑌣𑌿𑌃 ।
𑌶𑍁𑌮𑍍𑌭𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑌂 𑌧𑍀𑌤𑌿𑌭𑌿𑌃 ॥

அந்வயம்

विचर्षणिः, पुनानः, विश्वाः, मृधः, अभ्यक्रमीत्, विप्रं, धीतिभिः, शुम्भन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **विचर्षणिः** | 𑌵𑌿𑌚𑌰𑍍𑌷𑌣𑌿𑌃 | அனைத்தையுங் காண்கின்ற |
| **पुनानः** | 𑌪𑍁𑌨𑌾𑌨𑌃 | புநிதமாகிய சோமரசம், |
| **विश्वाः** | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌃 | எல்லாப் |
| **मृधः** | 𑌮𑍃𑌧𑌃 | பகைவருடைய படைகளை |
| **अभ्यक्रमीत्** | 𑌅𑌭𑍍𑌯𑌕𑍍𑌰𑌮𑍀𑌤𑍍 | முன்னர்ப்போய்ச் சூழ்ந்துகொள்கின்றது. |
| **विप्रं** | 𑌵𑌿𑌪𑍍𑌰𑌂 | கூரிய வறிவுள்ள அச்சோமத்தைப் |
| **धीतिभिः** | 𑌧𑍀𑌤𑌿𑌭𑌿𑌃 | பரிசுத்தமாகிய கிரியைகளால் |
| **शुम्भन्ति** | 𑌶𑍁𑌮𑍍𑌭𑌨𑍍𑌤𑌿 | அலங்கரிக்கின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—2.

காண்கின்ற சோமரசமானது எல்லாச் சத்துருசேனைகளையும் வளைத்துக்கொள்கின்றது. நுண்ணறிவாளியாகிய அச்சோமரசத்தை, சுத்தமாந் தன்மைகளால் (புநிதமாகிய கருமங்களால்) அலங்காரஞ் செய்கின்றார்கள்.

### மந்திரம் 3.

३ २ ३ १२ ३२उ ३ १ २३ १ २२
489. **आविशन् कलशꣳ सुतो विश्वा अर्षन्नभिश्रियः ।**
२३ १ २
**इन्दुरिन्द्राय धीयते ॥ ३ ॥**

இருக்கு 9-62-19.

ஆவிஶந் கலஶம் ஸுதோ விஶ்வா அர்ஷந்நபி⁴ ஶ்ரிய꞉ |
இந்து³ரிந்த்³ராய தீ⁴யதே ||

அந்வயம்.

सुतः, कलशं, आविशन्, विश्वाः, श्रियः, अभ्यर्षन्, इन्दुः, इन्द्राय, धीयते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **सुतः** | ஸுத꞉ | பிழியப்பட்டதும் |
| **कलशं आविशन्** | கலஶம் ஆவிஶந் | கலசத்திற் சென்றதும் |
| **विश्वाः** | விஶ்வா꞉ | எல்லாச் |
| **श्रियः** | ஶ்ரிய꞉ | சம்பத்துக்களையும் |
| **अभ्यर्षन्** | அப்⁴யர்ஷந் | பொழிகின்றதுமாகிய |
| **इन्दुः** | இந்து³꞉ | சோமரசம் |
| **इन्द्राय** | இந்த்³ராய | இந்திரன் பொருட்டு |
| **धीयते** | தீ⁴யதே | (பாண்டத்தில்) வைக்கப்படுகின்றது. |

சாயண பாடியம்.

*கண்டம்—3. இருக்கு—3. சமதக்கினி ரிஷி.*

*பிழிந்தெடுக்கப்பட்ட சோமரசமானது, துரோணம் என்னும் பாத்திரத்திற்புகுந்து, எல்லாச் சம்பத்துக்களையும் யாண்டுங் கொடுத்துக்கொண்டு விளங்குகின்றதாயிருக்கின்றது. (அத்தன்மைய சோமரசம்) இந்திரன் பொருட்டுத் (வடிப்பதற்கு) தசாபவித்திரமென்னும் ஆடையுள்ள பாத்திரத்தில் எசுர்மறையோதுவோர்களால் வார்க்கப்பட்டிருக்கின்றது என்பதாம்.* (3)

## மந்திரம் 4.

१२ ३ २ ३ १ २ ३१२ ३क२र ३२
490. **असर्जि रथ्यो यथा पवित्रे चम्वोः सुतः ।**
१ २ ३ १ २र
**कार्ष्मन् वाजी न्यक्रमीत् ॥ ४ ॥**

இருக்கு 9-36-1.

அஸர்ஜி ரத்²யோ யதா² பவித்ரே சம்வோ꞉ ஸுத꞉ |
கார்ஷ்மந் வாஜீ ந்யக்ரமீத் ||

அந்வயம்.

रथ्यः यथा, चम्वोः, सुतः, पविल्ले, असर्जि, वाजी, कार्ष्मन्, न्यक्रमीत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| रथ्यः यथा | ரத்2யஃ யதா2 | குதிரையை இரதத்தில் விரைவில் பூட்டுவதுபோல் (வேள்வியில்) |
| जम्वोः | அ௫ெவாஃ | இரசம் பிழியும் பலகைகளிரண்டின் நடுவில் வைத்து |
| सुतः | ஸுதஃ | பிழியப்பட்ட சோமரசம் |
| पवित्रे | பவித்ரே | பாத்திரத்தில் |
| असर्जि | அஸர்ஜி | வார்க்கப்பட்டது. அத்தன்மைய |
| वाजी | வாஜீ | விரைவுள்ள சோமரசம் |
| काष्र्मन् | காஷ்மந் | வேள்வியாகிய போரை |
| न्यक्रमीत् | ந்யக்ரமீத் | வளைத்துக் கொள்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—4. பிரபூவசு ரிஷி.

இரத சம்பந்தமுள்ள குதிரை போன்று, அதாவது அக்குதிரையை விடுமாறு வேள்வியில் இரண்டு பலகையின் நடுவில் வைத்துப் பிழிந்தெடுக்கப்பட்ட சோமரசம் பாத்திரத்தில் விடப்பட்டது. அத்தன்மைய வேகமுள்ள சோமரசம் வேள்வியாகிய யுத்தத்தை இயற்கையாய்ச் சூழ்ந்து கொள்கின்றது என்பதாம். (4)

ஈண்டுத், தேவர் மனிதர்களை ஒருவர்க்கொருவர் ஆகர்ஷணித்துக்கொள்ளுமாறு செய்தலின் வேள்வியே போரெனப்பட்டது.

## மந்திரம் 5.

२उ ३ १ २र ३२ ३ २ ३ १२
491. *प्र यद्गावो न भूर्णयस्त्वेषा अयासो अक्रमुः ।
२ २ ३ २उ ३ १ २
घ्नन्तः कृष्णामप त्वचम् ॥ ५ ॥

இருக்கு—9-41-1.

ப்ரயத்3கா3வோ ந பூ4ர்ணயஸ்த்வேஷா அயாஸோ அக்ரமு: |
க்4நந்த: க்ருஷ்ணாமப த்வசம் ||

அந்வயம்.

यत्, भूर्णयः, त्वेषाः, अयासः, कृष्णां त्वचं, अपघ्नन्तः, गावः न, प्राक्रमुः ॥

---

* प्रये गावो, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| यत् भूर्णयः | யத் பூர்ணய: | யாது வேகமுடையதும், |
| त्वेषाः | த்வேஷா: | பிரகாசமுடையதும், |
| अयासः | அயாஸ: | செல்லுஞ் சீலமுடையதும், |
| कृष्णां त्वचं | க்ருஷ்ணாம் த்வசம் | மறைக்கப்பட்ட இருளை |
| अपघ्नन्तः | அபக்னந்த: | (பிழியுங்கால்) நீக்குகின்றது மாமோ, அச்சோமரசம் |
| गावः न | காவ: ந | பசுக்கள் தமது கட்டுத்தறிக்குப் போவனபோன்று |
| प्राक्रमुः | ப்ராக்ரமு: | வேள்வியைத் தொழிற் படுத்துகின்றது. (பிரவிருத்தி செய்விக்கின்றது.) |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருகுக்—5. மேத்யாதிதி ரிஷி.

எது வேகமுடையதும், பிரகாசமுடையதும், செல்லுஞ் சீலமுடையதும், பிழியுங்காலே மறைக்கின்ற இருளை யொதுக்குகின்றதுமாமோ, இத் தன்மைய சோமரசம் வேள்வியைப் பிரவிர்த்திப்பிக்கின்றது. அதிலுவமை:- நீர் போன்றெனல், அதாவது நீர் விரைவிற் கீழே விழுகின்றது போன்று என்பதாம். ஈண்டு மூலத்திப 'கோ' என்னும் பதத்திற்கு, நீர் பொருள். அல்லது, கோக்களையே உவமையாகக் கூறப்படுகின்றது:-தனது கோட்டத்திற்கு (பசுச் சாலைக்கு) பசுக்கள் விரைவிற் செல்கின்றன போன்றெனல். அல்லது, கோ, என்றது துதிவாக்கு. அவ்வாக்கு, துதிக்கத்தக்கதைக் குறித்து விரைவிலடைகின்றது போன்றெனல். வேள்வியைத் தொழிற் படுத்துகின்றதென்பது அதைத் தோத்திரம் பண்ணுகின்றது என்பதாம். (5)

மந்திரம் 6.

३ १ २ ३ १ २ ३ १ २ ३ २
492. अपघ्नन् पवसे मृधः क्रतुवित्सोम मत्सरः ।
३१ २र ३ १२
नुदस्वादेवयुं जनम् ॥ ६ ॥

சா. வே.

அபக்னந் பவஸே ம்ருத: க்ரதுவித்ஸோம மத்ஸர: ।
நுதஸ்வாதேவயும் ஜநம் ॥

அந்வயம்.

हे सोम !, मत्सरः, मृधः, अपघ्नन्, क्रतुवित्, पवसे, अदेवयुं जनं, नुदस्व ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹெ ஸொஉ ! | சோமமே ! |
| मत्सरः | உத்ஸரஃ | களிப்பைத்தருகின்ற நீ |
| मृधः | ஊரயஃ | துன்புறுத்துஞ் சத்துருக்களை |
| अपघ्नन् | அவவுநு | நாசஞ் செய்து |
| क्रतुवित् | கூதுவிக | எனக்கு அறிவையுந்தந்து |
| पवसे | வவஸெ | பாத்திரத்தில் நிறைகின்றாய். அத்தன்மைய நீ |
| अदेवयुं जनं | அதெவயுஂ ஜநஂ | தேவர்களை விரும்பாத இராக்கதர்களை |
| नुदस्व | நுஉஸ்வ | தூரத்தில் ஓட்டுவாயாக. |

### சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—6. நிதங்யு ரிஷி.

சோமமே! களிப்பைக் கொடுக்கின்ற நீ, துன்புறுத்துவோர்களைக் (சத்துருக்களை) கொன்று, எங்கட்கு நல்லுணர்வையுங் கொடுத்துப், பாத்திரத்தில் நிறைகின்றனை. அத்தன்மைய நீ, தேவர்களை ஆதரிக்காத இராக்கத வருக்கத்தை வெளியிற்போகச் செய்வாயாக என்பதாம். (6)

## மந்திரம் 7.

३ १ २ ३ १२ ३ २ ३ २ ३१२
493. अया पवस्व धारया यया सूर्यमरोचयः ।
३ १ २२ ३२
हिन्वानो मानुषीरपः ॥ ७ ॥

இருக்கு—9-63-7.

அயா வவஸ்வ யாரயா யயா ஸுயமரொவயஃ ।
ஹிந்வாநொ ஊநுஷீரவஃ ॥

### அந்வயம்.

(हे सोम !,) मानुषीः, अपः, हिन्वानः, यया धारया, सूर्यं, अरोचयः, अया, पवस्व ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे सोम!) | (ஹெ ஸொஉ !) | (சோமமே!) |
| मानुषीः | ஊநுஷீஃ | மனிதர்கட்கு இதமான |
| अपः | அவஃ | நீரைச் |

| | | |
|---|---|---|
| **हिन्वानः** | ஹிந்வாந: | செலுத்துகின்ற நீ |
| **यया धारया** | யயா தாரயா | எந்தத் தாரையால் |
| **सूर्यं** | ஸூர்யம் | சூரியனைப் |
| **अरोचयः** | அரோசய: | பிரகாசிப்பிக்கின்றனையோ, |
| **अया** | அயா | அத்தகைய இந்தத் தாரையோடு |
| **पवस्व** | பவஸ்வ | பாத்திரத்தில் நிறைவாயாக. |

சாயண பாடியம்.

**கண்டம்—3.** இருக்கு—7. *நிதர்யு ரிஷி.*

*மக்கட் கநுகூலமாகிய நீரைச்செலுத்துகின்ற நீ, எந்தத் தாரையால் சூரியனைப் பிரகாசிப்பிக்கின்றனையோ, அத்தகைய இத்தாரையாற் பாத்திரத்தில் நிறைவாயாக,* (7)

## மந்திரம் 8.

१ २ ३ २उ ३ १ २ ३ २ ३ १ २
**494. स पवस्व य आविथेन्द्रं वृत्राय हन्तवे ।**
३ १ २ ३ २३२
**वव्रिवाꣳसं महीरपः ॥ ८ ॥**

இருக்கு—9-61-22.

ஸ பவஸ்வ ய ஆவிதேந்த்ரம் வ்ருத்ராய ஹந்தவே ।
வவ்ரிவாம்ஸம் மஹீரப: ॥

அந்வயம்.

(हे सोम !,) यः (त्वं,) महीः, अपः, वव्रिवांसं, वृत्राय हन्तवे, इन्द्रं, आविथः, सः, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **(हे सोम !)** | (ஹே ஸோம !) | (சோமமே !) |
| **यः (त्वं)** | ய: (த்வம்) | யாதொரு நீ |
| **महीः** | மஹீ: | மிகுந்த |
| **अपः** | அப: | நீரைத் |
| **वव्रिवांसं** | வவ்ரிவாம்ஸம் | தடை செய்த |
| **वृत्राय हन्तवे** | வ்ருத்ராய ஹந்தவே | விருத்திராசுரனைக் கொல்வதற்கு |
| **इन्द्रं आविथः** | இந்த்ரம் ஆவித: | இந்திரனைக் காத்தாய். |
| **सः** | ஸ: | அத்தகைய நீ |
| **पवस्व** | பவஸ்வ | தாரையாய்ப் பாத்திரத்தில் நிறைவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—8. அமஹீய ரிஷி.

சோமரசமே! நீ, மகத்தாகிய நீரைத் தடுத்த விருத்திராசுரனைக் கொல்வதற்கு இந்திரனைக் காப்பாற்றினாய். அத்தகைய நீ தாரையால் பாத்திரத்தில் நிரம்புவாயாக. இந்திரன் சோமத்தை யருந்தி உன்மத்தனாய் மகத்தாகிய நீரைத் தடுத்த விருத்திராசுரனைக் கொன்றனன் என்பது பொருள்.

## மந்திரம் 9.

३ २ ३ १ २र ३ १ २ ३ २ ३ २
495. अया वीती परिस्रव यस्त इन्दो मदेष्वा ।
३ १२ ३ १ २र
अवाहन्नवतीर्नव ॥ ९ ॥

இருக்கு—9-61-1.

அயா வீதீ பரிஸ்ரவ யஸ்த இந்தோ மதேஷ்வா ।
அவாஹந்நவதீர்நவ ॥

அந்வயம்.

हे इन्दो!, ते, यः, मदेषु, नवतीः नव, अवाहन्, अया, वीती, परिस्रव, ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्दो! | ஹே இந்தோ! | சோமரசமே! |
| ते | தே | உன்னுடைய |
| यः | யஃ | யாதொரு இரசமானது |
| मदेषु | மதேஷு | போர்களில் (களிப்பினால்) |
| नवतीः नव | நவதீஃ நவ | எண்பது தொண்ணூறு (810) அசுரபுரங்களை |
| अवाहन् | அவாஹந் | நாசம் பண்ணியதோ. |
| अया | அயா | இந்த இரசத்துடன் |
| वीती | வீதீ | இந்திரன் உண்ணுதற்பொருட்டுக் |
| परिस्रव | பரிஸ்ரவ | கலசத்திற் பொங்கி வழிவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. அமஹீய ரிஷி.

சோமமே! இந்த ரசத்துடன் இந்திரன் அருந்துதற்பொருட்டுக் கலசத்தில் நிரம்புவாயாக. எவ்வண்ணமாகிய இரசத்தாலென்று ஆசங்கித்துக்கூறப்

படுகின்றது:—உன்னுடைய யாதொரு இரசமானது உயுத்தத்தில் எண்ணூற்றுப்பத்து எண்கள் கொண்ட அசுரசமரபுரிகளை (இராக்கத புரங்களை) நாசம் பண்ணியதோ, அத்தன்மைய இரசத்துடன் எனச்சேர்த்துக்கொள்க. (ஈண்டு இந்தச் சோமரசத்தைக் குடித்துவிட்டு உன்மத்தனாகிய இந்திரன், கூறிய எண் கொண்ட அசுரர்களின் சமரபுரிகளை யழித்தனன் என்பது கொண்டு சோமரசங் கொன்றது எனல் உபசார மென்க.) (9)

## மந்திரம் 10.

१२ ३२ २र ३२उ ३ १२ ३ १ २
496. *परि द्युक्षं† सनद्रयिं भरद्वाजं नो अन्धसा ।
३ १ २ ३१३ २
§स्वानो अर्ष पवित्र आ ॥ १० ॥

இருக்கு—9-52-1.

வரி த்3யுக்ஷம் ஸநத்3ரயிம் ப4ரத்3வாஜம் நோ அந்த4ஸா ।
ஸ்வாநோ அர்ஷ பவித்ர ஆ ॥

அந்வயம்.

द्युक्षं, सनत्, रयिं, वाजं, अन्धसा, नः, परिभरत्, स्वानः, पवित्रे, आ अर्ष ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| द्युक्षं | த்3யுக்ஷம் | விளங்குவதும் |
| सनत् | ஸநத் | கொடுக்கப்படுவதுமாகிய |
| रयिं | ரயிம் | தனத்தையும் |
| वाजं | வாஜம் | அன்னத்தையும் |
| नः | நः | எங்கட்கு |
| परिभरत् | பரிப4ரத் | எல்லா வகையானுஞ் சோமரசங் கொடுக்குக. |
| स्वानः | ஸ்வாநः | (அத்தகைய நீ) பிழியப்பட்டோனாய்க் |
| पवित्रे | பவித்ரே | கலசத்திற் |
| आ अर्ष | ஆ அர்ஷ | பொங்கிவழிவாயாக. |

* परीद्युक्षः, † सनद्रयिः § सुवानो, என்பன இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—10. உத்திய ரிஷி.

விளங்குவதும், கொடுக்கப்படுவதும், அல்லது, சைன்யமும் ஆகிய தனத்துடன் கூடிய ஆற்றலே, அன்னத்துடன் சோமரசம் எங்கட்கு எல்லா வகையானுங் கொடுக்குக என்பது பொருள். இனிப்பிரத்தியட்சமாகிய தோத்திரம்:—சோமரசமே! பிழிந்தெடுக்கப்பட்ட நீ, பாத்திரத்தில் ஒரு முகமாய் நிரம்புவாயாக. (10)

## மூன்றாவது கண்டம்.

முற்றும்.

---

## நான்காவது கண்டம்

---

## பிரபாடகம்—6. அத்தியாயம்—5. கண்டம்—4.

பதினைந்து மந்திரங்களாலானது.

---

சோமம், தேவதை, காயத்திரி, சந்தம், ஷட்சம், சுரம்.

### மந்திரம் 1.

३ २ ३ २ ३ १ २३ २ ३ १ २र३ २
497. अचिक्रदद् वृषा हरिर्महान् मित्रो न दर्शतः ।
१ २र
सꣳसूर्येण * दिद्युते ॥ १ ॥

இருக்கு—9-2-6.

அசிக்ரதத் வ்ருஷா ஹரிர்மஹாந் மித்ரோ ந தர்சத: |
ஸம்ஸூர்யேண தித்யுதே ||

அங்வயம்.

वृषा, हरिः, महान्, मित्रः न, दर्शतः, अचिक्रदद्, सूर्येण सं, दिद्युते ॥

---

* रोचते, என்பது இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| वृषा | வ்ருஷா | மனவிருப்பைப் பொழிவதும் |
| हरिः | ஹரி: | பசுமையானதும் |
| महान् | மஹாந் | பூசிக்கத்தக்கதும் |
| मित्रः न | மித்ர: ந | நண்பன் போன்று |
| दर्शतः | தர்ஶத: | பார்க்கத்தக்கதுமாகிய சோமரசம் |
| अचिक्रदद् | அசிக்ரதத் | ஒலிக்கின்றது. அச்சோமரசம் |
| सूर्येण सं | ஸூர்யேண ஸம் | இரவியோடு |
| चते | திதீ்யுதே | வானுலகில் விளங்குகின்றது. |

சாயண பாடியம்.

ண்டம்—4. இருக்கு—1. மேத்யாதிதி ரிஷி.

வி... ...யெனப் பெய்வதும், பசுமை நிறமுடையதும், ஆரா திக்தற்... ...னைப் போன்று பார்க்கத்தக்கதுமாகிய யாதொரு சோமர... ...ு இரைச்சலிடுகின்றது. அத்தகைய இச்சோமரசம் சூரியனுடன் வானில் விளங்குகின்றது என்பதாம். (1)

மந்திரம் 2.

२ ३ १ २ ३ २ ३ १२ ३ १ २
498. आ ते दक्षं मयोभुवं वह्निमद्या वृणीमहे ।
२ ३ १ २३ १२
पान्तमा पुरुस्पृहम् ॥ २ ॥

இருக்கு—9-65-28.

ஆ தே தக்ஷம் மயோபுவம் வஹ்நிமத்யா வ்ருணீமஹே ।
பாந்தமா புருஸ்ப்ருஹம் ॥

அந்வயம்.

(हे सोम !,) (यष्टारः,) ते, दक्षं, अद्य, आवृणीमहे, मयोभुवं, वह्निं, पान्तं, पुरुस्पृहं ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे सोम !) | (ஹே ஸோம !) | (சோமரசமே !) |
| (यष्टारः) | (யஷ்டார:) | (வேட்போர்களான யாங்கள்) |
| ते | தே | உன்னுடைய |
| दक्षं | தக்ஷம் | ஆற்றலை |
| अद्य | அத்ய | இவ்வேள்வி நாளில் |

| | | |
|---|---|---|
| आवृणीमहे | ஆவ்ருணீமஹே | ஒ... ரோ... லெண... |
| मयोभुवं | மயோபுவம் | சுகத்தைத்... |
| वर्हिं | வர்ஹிம் | தன முதலிய பதும் |
| पान्तं | பாந்தம் | பகைவர்களினி வதும் |
| पुरुस्पृहं | புருஸ்ப்ருஹம் | பல்லோர்கள் மாம், |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—2. பிருகு ரிஷி.

சோமரசமே! வேள்வி யாற்றுகின்ற நாங்கள் உன்னுடைய தனமா ஆற்றலை இவ்வேள்வித் தினத்தில் ஒரு முகப்பட்டுப் போற்றுகின்றோம். எத் தன்மைய ஆற்றலெனின்? சுகத்தை யுண்டாக்குவதும், தன முதலியவைக ளைக் கொடுப்பதும், சத்துருக்களினின்றும் பாதுகாப்பதும், பலரால் விரும் பற்பாலதுமாகியதாம் (அவ்வாற்றலைப் போற்றுகின்றோம் என்று முடித் துக் கொள்க.) (2)

மந்திரம் 3.

१ २ ३ १ २ ३१ २र ३ २३ २
499. अध्वर्यो अद्रिभिः सुतꣳ सोमं पवित्र आनय ।
३ १ २ ३ १ २
*पुनाहीन्द्राय पातवे ॥ ३ ॥

இருக்கு 9-51-2.

அத்₄வர்யோ அத்₃ரிபி₄꞉ ஸுதம் ஸோமம் பவித்ர ஆநய ।
புநாஹீந்த்₃ராய பாதவே ॥

அந்வயம்.

हे अध्वर्यो !, अद्रिभिः, सुतं सोमं, पवित्रे, आनय, इन्द्राय पातवे, पुनाहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अध्वर्यो ! | ஹே அத்₄வர்யோ! | வேட்கின்றோய்! நீ |
| अद्रिभिः | அத்₃ரிபி₄꞉ | கற்களாற் |
| सुतं सोमं | ஸுதம் ஸோமம் | பிழியப்பட்ட சோமரசத்தைக் |

* पुनीहि, என்பது இருக்கு.

| | |
|---|---|
| | கலசத்திற் |
| | கொண்டுவந்து சேர்ப்பாயாக. |
| ...ாய வாதவெ | (மற்றும்) இந்திரன் அருந்துதற் பொருட்டுப் |
| வ...நாஹி | பரிசுத்தஞ் செய்வாயாக. |

சாயண பாடியம்

...ருக்கு—3. உசத்திய ரிஷி.

...ய! கற்களினாற் பிழிந்தெடுக்கப்பட்ட சோமரசத்தைப் பாத்தி...பாயாக. மேலும் இப்பொருளே விளக்கப்படுகின்றது. இந்...ருந்துதற் பொருட்டுப் பரிசுத்தஞ் செய்வாயாக என்பதாம். (3)

## மந்திரம் 4.

२३ २ ३ १ २ ३ १ २ ३१ २२
500. तरत्स मन्दी धावति धारा सुतस्यान्धसः ।
२३ २ ३ १ २
तरत्स मन्दी धावति ॥ ४ ॥

இருக்கு 9-58-1.

தரத்ஸ மந்தீ யாவதி யாரா ஸுதஸ்யாந்ஸஃ ।
தரத்ஸ மந்தீ யாவதி ॥

அந்வயம்.

सुतस्य, अन्धसः, धारा, मन्दी, सः, तरत्, धावति, सः, तरत्, धावति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सुतस्य | ஸுதஸ்ய | பிழியப்பட்ட |
| अन्धसः | அந்ஸஃ | சோமரசத்தினுடைய |
| धारा | யாரா | தாரையானது |
| मन्दी | மந்தீ | இந்திரனுக்குக் களிப்பைக் கொடுக்கின்றது. |
| सः | ஸஃ | அது |
| तरत् | தரக் | பாவத்தினின்றுங் கரையேற்றுவதாய்த் |
| धावति | யாவதி | துரோண கலசத்தை யடைகின்றது. |
| सः | ஸஃ | அது |
| तरत् | தரக் | பாவத்தினின்றுங் கரையேற்றுவதாய்த் |
| धावति | யாவதி | துரோண கலசத்தை யடைகின்றது |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—4. அவத்சார ரிஷி.

அச் சோமரசம், தேவர்கட்குக் களிப்பைக் கொடுக்கிறதும், துதிப்போர்களைப் பாவத்தினின்றுங் கரையேற்றிவிடுகின்றதும், துரோண கலசத்தை யடைகின்றதுமாம். பாவத்தினின்றுங் கரையேற்றுகின்றது துரோணகலசத்தையடைகின்றது, என மூலத்தில் இரட்டித்துக் கூறியது மிகுந்த அன்பின் பொருட்டாம். அல்லது, இம்மந்திரத்திற்கு யாஸ்கமுனிவர் நிருத்தம் 13, 6, ல் கூறியுள்ள பொருளைக் கொள்க. அஃது வருமாறு:—"யாவன் துதிக்கின்றானோ, அவன் எல்லாப் பாவத்தையுங்கடக்கின்றான் களிப்படைகின்றான்" என்பது முதலியனவாம். (4)

## மந்திரம் 5.

१ २ ३१ २ ३१ २ ३१२
501. आ पवस्व सहस्रिणꣳ रयिꣳ सोम सुवीर्यम् ।
३ १ २र
अस्मे श्रवाꣳसि धारय ॥ ५ ॥

இருக்கு 9-63-1.

ஆ பவஸ்வ ஸஹஸ்ரிணம் ரயிம் ஸோம ஸுவீர்யம் ।
அஸ்மே ஶ்ரவாம்ஸி தாரய ॥

அந்வயம்.

हे सोम!, सहस्रिणं, सुवीर्यं, रयिं, आपवस्व, अस्मे, श्रवांसि, धारय ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹே ஸோம! | சோமரசமே! நீ |
| सहस्रिणं | ஸஹஸ்ரிணம் | ஆயிரக்கணக்கான எண் கொண்டதும் |
| सुवीर्यं | ஸுவீர்யம் | மேம்பட்ட வன்மையுடையதுமாகிய |
| रयिं | ரயிம் | தனத்தை (எமக்கு) |
| आ पवस्व | ஆ பவஸ்வ | ஒரு முகமாய்ப் பொழி வாயாக. |
| अस्मे | அஸ்மே | என் விஷயத்தில் |
| श्रवांसि | ஶ்ரவாம்ஸி | அன்னங்களை (யும்) |
| धारय | தாரய | நிலை நிறுத்து வாயாக. |

### சாயண பாடியம்.

**கண்டம்—4. இருக்கு—5.** *நித்துருவி ரிஷி.*

சோமரசமே! நீ, ஆயிரக்கணக்கான (அளவற்ற) நல்ல சத்திகளோடு கூடிய தனத்தை ஒரு முகமாக எமக்குப் பொழிவாயாக. மற்றும், எம்மிடத்தில் அன்னங்களை நிறுத்திவைப்பாயாக என்பதாம். (5)

## மந்திரம் 6.

१२ ३ १२ ३१२ ३१ २र
**502. अनु प्रत्नास आयवः पदं नवीयो अक्रमुः ।**
३१२ ३ १२
**रुचे जनन्त सूर्यम् ॥ ६ ॥**

இருக்கு 9-23-2.

*𑌅𑌨𑍁 𑌪𑍍𑌰𑌤𑍍𑌨𑌾𑌸 𑌆𑌯𑌵𑌃 𑌪𑌦𑌂 𑌨𑌵𑍀𑌯𑍋 𑌅𑌕𑍍𑌰𑌮𑍁𑌃 ।*
*𑌰𑍁𑌚𑍇 𑌜𑌨𑌨𑍍𑌤 𑌸𑍂𑌰𑍍𑌯𑌮𑍍 ॥*

### அந்வயம்.

**प्रत्नासः, आयवः, नवीयः, पदं, अन्वक्रमुः, रुचे, सूर्यं, जनन्त ॥**

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **प्रत्नासः** | 𑌪𑍍𑌰𑌤𑍍𑌨𑌾𑌸𑌃 | பழைமையாகியதும் |
| **आयवः** | 𑌆𑌯𑌵𑌃 | செல்லுஞ் சீலமுடையதுமாகிய சோமரசம் |
| **नवीयः** | 𑌨𑌵𑍀𑌯𑌃 | புதிய |
| **पदं** | 𑌪𑌦𑌂 | இடத்தைச் |
| **अन्वक्रमुः** | 𑌅𑌨𑍍𑌵𑌕𑍍𑌰𑌮𑍁𑌃 | சூழ்ந்துகொண்டது. |
| **रुचे** | 𑌰𑍁𑌚𑍇 | பிரகாசத்தின்பொருட்டு |
| **सूर्यं** | 𑌸𑍂𑌰𑍍𑌯𑌂 | சூரியனைப்போன்ற சோமரசத்தை |
| **जनन्त** | 𑌜𑌨𑌨𑍍𑌤 | உண்டாக்குகின்றார்கள். |

### சாயண பாடியம்.

**கண்டம்—4. இருக்கு—6.**

செல்லுந் தன்மையுள்ள பண்டைக்காலத்திய அநேக குதிரைகள் மிகப் புதிய இடத்தை நன்கு அடைகின்றன என்னும் வழக்கம்பற்றிய உருவகத்தினாற் சோமரசந் துதிக்கப்படுகின்றது. பிரகாசத்தின் பொருட்டு சூரியனை (சூரியன் போன்ற சோமரசத்தை) உண்டாக்குகின்றார்கள் என்பதாம். (6)

## மந்திரம் 7.

१ २    ३ १ २ ३ १    २ २ ३    १ २

503. अर्षा सोम द्युमत्तमोऽभि द्रोणानि रोरुवत् ।

३ १ २ ३ २ ३ २

*सीदन्योनौ वनेष्वा ॥ ७ ॥

இருக்கு 9-65-19.

𑌅𑌰𑍍𑌷𑌾 𑌸𑍋𑌮 𑌦𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌤𑌮𑍋𑌽𑌭𑌿 𑌦𑍍𑌰𑍋𑌣𑌾𑌨𑌿 𑌰𑍋𑌰𑍁𑌵𑌤𑍍 ।
𑌸𑍀𑌦𑌨𑍍𑌯𑍋𑌨𑍌 𑌵𑌨𑍇𑌷𑍍𑌵𑌾 ॥

அந்வயம்.

हे सोम !, द्युमत्तमः, द्रोणानि, अभि रोरुवत्, वनेषु, योनौ, आसीदन्, अर्ष ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम ! | 𑌹𑍇 𑌸𑍋𑌮 ! | சோமரசமே ! |
| द्युमत्तमः | 𑌦𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌤𑌮𑌃 | மிகப்பிரகாசமுடைய நீ |
| द्रोणानि अभि | 𑌦𑍍𑌰𑍋𑌣𑌾𑌨𑌿 𑌅𑌭𑌿 | கலசங்களைக் குறித்து |
| अभि रोरुवत् | 𑌅𑌭𑌿 𑌰𑍋𑌰𑍁𑌵𑌤𑍍 | பன்முறை யொலித்துக்கொண்டு |
| वनेषु | 𑌵𑌨𑍇𑌷𑍁 | வேள்விச்சாலைகளுள் |
| योनौ | 𑌯𑍋𑌨𑍌 | ஓரிடத்தில் |
| आसीदन् | 𑌆𑌸𑍀𑌦𑌨𑍍 | முதன்மையாய் நிலைப்போனாய் |
| अर्ष | 𑌅𑌰𑍍𑌷 | வருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—7. பிருகு ரிஷி.

சோமமே! வியப்பார்ந்த வொளியுடைய நீ, துரோண கலசங்களிற், (பிரயோகமிருதிப்பாடுபற்றிப் பன்மை) குறி வைத்துக்கொண்டு மீண்டும் மீண்டும், அல்லது, மிகுதியாக ஒலி செய்துகொண்டு வருவாயாக. (ஈண்டு, தசாபவித்திரமென்னும் ஒரு பெரும்பாண்டத்தினின்று வெளியேறிய சோமரசம் இடைவிடாத தாரையால் கீழ் விழுந்துகொண்டு உண்மையாய் ஒலியிடுகின்றது என்க.) அதில் திட்டாந்தம்:—வனத்திலுள்ள வேள்விச் சாலைகளில், அல்லது, போற்றத்தக்க வேள்விமனைகளில் உள்ள ஒரு இடத்தில் இருந்தவாறெனல். அல்லது, வனங்களில் பூமியில் முன்னிருந்து கொண்டவாறெனல். சோமரசம் முன்னிருந்தவாறே வேள்விமனைக்குட் செல்கின்றது என இயைத்துக்கொள்க. (7)

* सीदन् श्येनो न योनिना, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| कलशे | கலஶெ | கலசத்திலுள்ளதுமாகிய |
| ईम् इन्दुं | ஈம் இந்தும் | இச்சோமரசத்தை |
| वावशाना: | வாவஶாநா꞉ | இச்சிக்கின்ற |
| गाव: | காவ꞉ | கோக்கள் |
| आयन् | ஆயந் | தமது பாலோடு சேர்ப்பதற்கு வருகின்றன. |

## சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—5. மிருடீகோவாசிட்ட ரிஷி.

துதியாளர்களின் துதியாகிய வாக்கு, எதைச் சுத்தப்படுத்துகின்றதோ, அதாவது தாங்கப்பட்ட வேள்வியின்கண்ணுள்ள சிறப்புடைய சவனத்தின் (வேள்வி நீராடுங் காலத்திற்கு) முன்னரேயே வேள்விகளில் சவன முகத்தில் (நீராடுவதற்கு முன்பு), எப்போது துதிப்போனுடைய வாக்கு சோமரசத்தைத் துதிக்கின்றதோ, அதன் பின்னரேயே சிறந்த தேவர்களின் களிப்பின்பொருட்டு எல்லாவற்றையுங் காப்பாற்றத்தக்க கலசத்திலிருக்கின்ற இச் சோமரசத்தை, தமது பாலுடன் சேர்த்தற் பொருட்டு விருப்பமுடையவைகளான கோக்கள் வருகின்றன என்பதாம். (5)

குறிப்பு.—மூலத்திய வேநத: என்பதற்கு விரும்புகின்ற என்பது பொருளாம். "வேநத: என்பது இச்சைப் பொருளுடையது என்றார் யாஸ்கமுனிவரும். மனதினுடைய, என்றதோ? மதித்தல், துதித்தல், எனவே துதிப்போனுடைய எனவாயிற்று. இங்ஙனமாயவழி துதியாளனுடைய அன்பார்ந்த துதியென்பது திரண்ட பொருளாயினமை காண்க.

## மந்திரம் 6.

३ १ २ ३ १ २३ २ ३ १ २ ३२ ३ १ २
538. साकमुक्षो मर्जयन्त स्वसारो दश धीरस्य धीतयो धनुत्रीः ।
२३ १२३ २ २र ३ १ २ ३ २ ३ २ ३ २
हरिः पर्यद्रवज्जाः सूर्यस्य द्रोणं ननक्षे अत्यो न वाजी ॥ ६ ॥

இருக்கு 9-93-1.

ஸாகமுக்ஷோ மர்ஜயந்த ஸ்வஸாரோ தஶ தீரஸ்ய தீதயோ [தநுத்ரீ꞉ ।
ஹரி꞉ பர்யத்ரவஜ்ஜா꞉ ஸூர்யஸ்ய த்ரோணம் நநக்ஷே அத்யோ [ந வாஜீ ॥

அந்வயம்.

साकमुक्षः, स्वसारः, मर्जयन्त, दश धीतयः, धीरस्य, धनुत्रीः, हरिः, सूर्यस्य जाः, पर्यद्रवत्, अत्यः, वाजी न, द्रोणं ननक्षे ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| साकमुक्षः | ஸாகஉ-க்ஷ: | ஒன்றுகூடித் தெளிப்பதற்கு |
| स्वसारः | ஸ்வஸார: | இங்குமங்குந் திரிகின்ற, விரல்கள் |
| मर्जयन्त | உஜ-ஃயஞ | சோமரசத்தைச், சுத்திசெய்கின்றன. |
| दश धीतयः | உஶ யீ-தய: | அப் பத்துவிரல்களும் |
| धीरस्य | யீரஸ்ய | தேவர்களால் விரும்பப்பட்ட சோமரசத்தைச் |
| धनुत्रीः | ய நு-த்ரீ: | செலுத்திய பின்னர் |
| हरिः | ஹரி: | பசுமை நிறமுடைய சோமரசம் |
| सूर्यस्य जाः | ஸூ-ய-ஃஸ்ய ஜா: | சூரியனுடையதிக்குகளைச் |
| पर्यद्रवत् | வய-ஃஉ்ரவத் | சூழ்ந்து அடைகின்றது. |
| अत्यः | அத்ய: | செல்லுஞ் சீலமுடைய |
| वाजी न | வாஜீ ந | குதிரை போன்ற சோமரசம் |
| द्रोणं ननक्षे | த்ரோணம் நநக்ஷே | கலசத்தில் நிறைகின்றது. |

### சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—6. நோதா ரிஷி.

சோமரசத்தை வார்த்தலாகிய தொழிலைச் செய்ய இங்குமங்கும் இனிது திரிகின்ற விரல்கள், சோமரசத்தைச் சுத்தம் பண்ணுகின்றன. அத்தகைய பத்து விரல்களும். ஆற்றலுடையதும், அல்லது, அறிவுள்ளதும், தேவர்களாற் றியானிக்கப்பட்டதும், அல்லது, விரும்பப்பட்டதுமாகிய சோமரசத்தை ஏவுகின்றன. பின்னர், பசுமை நிறமுடைய சோமரசம் சூரியனாற் றோன்றும் (சூரியனுடைய மனைவியாகிய) திக்கைச் சூழ்ந்து பரவுகின்றது. ஈண்டு இரவியின் ஒளியாலேயே திசை வெளிப்படுகின்றது. ஆதலின், திக்கு அதற்கு மனைவியெனப்பட்டது. மிகச் செல்லுஞ் சீலமுடைய குதிரை போன்றுள்ள சோமரசம் துரோண கலசத்தில் நிரம்புகின்றது. (6)

ஈண்டு, 'சாகமுக்ஷ' என்னுஞ் சொல் தெளித்தலாகிய பொருளிலும், மர்ஜயந்த:, என்பது கழுவுதலாகிய பொருளிலும், நநக்ஷ என்பது நிறைதலென்னும் பொருளிலும் நின்றமை காண்க.

धीतयः (தீதய:) என்பது விரல்கள் என நிகண்டு கூறுகின்றது.

### மந்திரம் 7.

२ ३ १ २ ३ १ २३ २ ३ १ २ ३ २ ३ २३ १ २२

539. अधि यदस्मिन् वाजिनीव शुभः स्पर्द्धन्ते धियः *सूरे न विशः ।

३ १ २ ३ १ २ ३ १ २२ ३ १ २२ ३ १ २ ३ १ २

आपो वृणानः पवते ‡कवीयान् व्रजं न पशुवर्द्धनाय मन्म ॥७॥

இருக்கு 9-94-1.

அதி யதஸ்மிந் வாஜிநீவ ஶுப⁴: ஸ்பர்த்⁴த⁴ந்தே தி⁴ய: ஸூரே ந விஶ:।
ஆபோ வ்ருணாந: பவதே கவீயாந் வ்ரஜம் ந பஶுவர்த்⁴த⁴நாய மந்ம॥

அந்வயம்.

यत्, अस्मिन्, वाजिनि, इव शुभः, सूरे विशः न, धियः अधि स्पर्धन्ते, आपः, वृणानः पशुवर्द्धनाय मन्म, व्रजं न, कवीयान्, पवते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यत् | யத் | எப்போது |
| अस्मिन् | அஸ்மிந் | இச் சோம விஷயத்தில் |
| वाजिनीव शुभः | வாஜிநீவ ஶுப⁴: | குதிரையின் அலங்காரத்தை யொப்பவும் |
| सूरे विशः न | ஸூரே விஶ: ந | இரவியின் கிரணங்களெழுவது போன்றும் |
| धियः | தி⁴ய: | விரல்கள் |
| अधिस्पर्धन्ते | அதி⁴ஸ்பர்த⁴ந்தே | சுத்தஞ் செய்வதற்குமுன் வந்து நிற்கின்றனவோ, (அப்போது இச்சோமரசம்) |
| आपः | ஆப: | வசதீவரி என்னும் நீரை |
| वृणानः | வ்ருணாந: | மறையச் செய்துகொண்டு |
| पशुवर्द्धनाय | பஶுவர்த்³த⁴நாய | கோக்களை வளர்ப்பதற்கு |
| मन्म व्रजं न | மந்ம வ்ரஜம் ந | இடையர்கள் கோச்சாலையை யடைவது போல், |
| कवीयान् | கவீயாந் | துதிப்போர்களை விரும்பிக் |
| पवते | பவதே | கலசத்திற் சேர்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—7. கண்ணுவ கௌர ரிஷி.

ஆடை முதலியவைகளால் குதிரையை அலங்கரிப்பது போலவும், இரவியின் கிரணங்கள் எழுவன போன்றும், இச்சோம விஷயத்தில் எப்போது (அலங்காரம்) உண்டாகின்றதோ, அப்போது விரல்கள் (பத்தும்) யானே

* सूर्येन विशः, ‡ कवीयन्, என்பன இருக்கு.

முன்னர் அதைப் பரிசுத்தம் பண்ணுவேன் என ஒவ்வொன்றும் முன் வந்து நிற்கின்றன. பின்னர் இச் சோமரசம் வசதீவரி என்னும் ஆற்று நீரை மறைத்துக்கொண்டு கலசங்களை யடைகின்றது .எவ் வண்ணமாகியதெனின்? கவியைப் போன்ற நடை யுடையது, அல்லது, கவிகள் என்பது துதிப் போர்கள், அவர்களை விரும்புவது. அதிலுவமை :—பசுக்களைக் காப்போன் பசுச்சாலையை யடைவதுபோன்றெனல். அதாவது தேவர்களைப் பிரியப்படுத் தற்பொருட்டுப் பாத்திரங்களை யடைகின்றது என்பதாம். (7)

## மந்திரம் 8.

१ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ २ ३ २३ २ ३ १ २
540. इन्दुर्वाजी पवते गोन्योघा इन्द्रे सोमः सह इन्वन् मदाय ।
२ ३ २ ३ १ २३ १ २र ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
हन्ति रक्षो बाधते * पर्यरातिं वरिवस्कृण्वन् वृजनस्य राजा ॥८॥

இருக்கு 9-97-10.

இந்து³ர்வாஜீ பவதே கோ³ந்யோகா⁴ இந்த்³ரே ஸோம: ஸஹ இந்வந்
[மதா³ய ।

ஹந்தி ரக்ஷோ பா³த⁴தே பர்யராதிம் வரிவஸ்க்ருண்வந் வ்ருஜநஸ்ய
[ராஜா ॥

அந்வயம்.

इन्दुः, वाजी, गोन्योघाः, इन्द्रे, सहः, इन्वन्, वरिवः, कृण्वन्, वृजनस्य, राजा, सोमः, मदाय, पवते, रक्षः, हन्ति, अरातिं, परि बाधते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| इन्दुः | இந்து³: | நெகிழ்கின்ற தன்மை யுள்ளதும் |
| वाजी | வாஜீ | ஆற்றலுடையதும் |
| गोन्योघाः | கோ³ந்யோகா⁴: | கீழே யொழுகுந் தன்மையுள்ள இரசப்பிழம்பானதும், |
| इन्द्रे | இந்த்³ரே | இந்திரன் நிமித்தமாக |
| सहः | ஸஹ: | வலியைத்தரும் இரசத்தை |
| इन्वन् | இந்வந் | ஏவுவதும், |
| वरिवः | வரிவ: | தனத்தை |
| कृण्वन् | க்ருண்வந் | வேள்வித்தலைவனுக்குக் கொடுப்பதும் |

* पर्यराती वरिवः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **वृजनस्य** | வ்ருஜநஸ்ய | ஆற்றலுக்கு |
| **राजा** | ராஜா | இறைவனுமாகிய |
| **सोमः** | ஸோம: | சோமம், |
| **मदाय** | மதாய | இந்திரனுக்குக் களிப்புண்டாதற் பொருட்டுப் |
| **पवते** | பவதே | பாத்திரத்தில் நிரம்புகின்றது. மற்றும், |
| **रक्षः** | ரக்ஷ: | இராக்கதர்களை |
| **हन्ति** | ஹந்தி | நாசஞ் செய்கின்றது. |
| **अरातिं** | அராதிம் | பகைவர்களை |
| **परि बाधते** | பரி பாததே | நாற்புறத்தும் வாட்டுகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—8. மன்யுவாசிட்ட ரிஷி.

நெகிழ்ச்சியுடையதும், ஆற்றலுடையதும், கீழே யொழுகுந் தன்மை யுடையதும், இரசப் பிழம்பானதும், இந்திரன்பொருட்டு வலியைத் தரும் இரசத்தை யேவுவதுமாகிய சோமம், இந்திரனுக்குக் களிப்பை யுண்டாமாறு பாத்திரங்களில் நிரம்புகின்றது. அன்றியும், பகைவர்களை நாற்புறத்தும் நாசஞ் செய்கின்றது. எத்தன்மைய சோமமெனின்? தனத்தைக் கொடுப் பதும், துதிப்போர்களின் ஆற்றலுக்கு இறையாவதுமாம் என்க. (8)

மந்திரம் 9.

१ २ ३ १ २ ३ १ २र ३ १ २ ३ १२ ३ १ २
541. अया पवा पवस्वैना वसूनि मांश्चत्व इन्दो सरसि प्रधन्व ।
३ २ ३ २ ३ २ ३ २ १ २३१ २ ३ १ २३ १२
*ब्रध्नश्चिद्यस्य वातो न जूतिं पुरुमेधाश्चित्तकवे नरं धात् ॥ ९ ॥

இருக்கு 9-97-52.

அயா பவா பவஸ்வைநா வஸூநி மாம்ஶ்சத்வ இந்தோ ஸரஸி ப்ரதந்வ, [ப்ரத்ந | ப்ரத்நஶ்சித்யஸ்ய வாதோ ந ஜூதிம் புருமேதாஶ்சித்தகவே நரம் [தாத் ||

அந்வயம்.

**हे सोम ! अया, पवा, एना, वसूनि, पवस्व, इन्दो, मांश्चत्वे, सरसि, प्रधन्व, ब्रध्नश्चित् , वातो न, नरं, जूतिं, धात् , पुरुमेधाश्चित् , यस्य, तकवे ॥**

* ब्रध्नश्चिदत्र वातो न जूतः, என்பது இருக்கு.

### பதவுரை.

| हे सोम ! | 𑌹𑍇 𑌸𑍋𑌮 ! | சோமரசமே ! நீ |
|---|---|---|
| अया पवा | 𑌅𑌯𑌾 𑌪𑌵𑌾 | நிறைந்த இத்தாரையால் |
| एना वसूनि | 𑌏𑌨𑌾 𑌵𑌸𑍂𑌨𑌿 | இத் தனங்களைக் |
| पवस्व | 𑌪𑌵𑌸𑍍𑌵 | கொடுப்பாயாக. |
| इन्दो ! | 𑌇𑌨𑍍𑌦𑍋 ! | சோமரசமே ! நீ |
| मांश्चत्वे | 𑌮𑌾𑌂𑌶𑍍𑌚𑌤𑍍𑌵𑍇 | மதிப்புடன் விரும்பத்தக்க |
| सरसि | 𑌸𑌰𑌸𑌿 | வசதீவரி என்னும் நீருள்ள கலசத்திற் |
| प्रधन्व | 𑌪𑍍𑌰𑌧𑌨𑍍𑌵 | சேர்வாயாக. (பின்னர்) |
| ब्रध्नश्चित् | 𑌬𑍍𑌰𑌧𑍍𑌨𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | அனைத்திற்குங் காரணமாகிய இரவி போன்றும் |
| वातो न | 𑌵𑌾𑌤𑍋 𑌨 | வாயு போன்றும் |
| नरं | 𑌨𑌰𑌂 | செலுத்துகின்ற |
| जूतिं | 𑌜𑍂𑌤𑌿𑌂 | வேகத்தைத் |
| धात् | 𑌧𑌾𑌤𑍍 | தாங்கிக்கொண்டோனாய் |
| पुरुमेधाश्चित् | 𑌪𑍁𑌰𑍁𑌮𑍇𑌧𑌾𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | பலவகை யுணர்வுள்ள இந்திரனும் |
| यस्य | 𑌯𑌸𑍍𑌯 | எந்தச் சோமரசத்தை |
| तकवे | 𑌤𑌕𑌵𑍇 | அடைகின்றானோ, (அத்தன்மைய சோமமே! நீ என முடிக்க.) |

### சாயண பாடியம்.

**கண்டம்—7. இருக்கு—9. குத்ச ரிஷி.**

சோமரசமே ! நீ நிரம்புகின்ற இத்தாரையால் இந்தத் தனங்களை யளிப்பாயாக. அவ்வாறே, சோமரசமே! நீ, மதிக்கத்தக்கவர்களின் வசதிவரி என்னும் நீருள்ள கலசத்திற் செல்வாயாக. பின்னர், எல்லாவற்றிற்குங் காரண வடிவாகிய, அல்லது, அறிவுறுத்துவதாகிய இரவியும், வாயுவும் போன்று, பலவித வுணர்வையுடைய இந்திரனும் வேகமாய் எதை அடைகின்றானோ, அத்தன்மைய சோமமே! நீ என முடித்துக்கொள்க. (9)

ஈண்டுச் சோமரசமே! நின்னாற் திருப்திபண்ணப்பட்ட இந்திரனும், சூரியனும், கரும நியந்தாவாகிய புத்திரனை எமக்கு அளிப்பார்களாக என்பது இருக்கின் பாடிய பேதம்.

## மந்திரம் 10.

३१　२र　३१२　३१　२र　३२
542. महत्तत्सोमो महिषश्चकारापां यद्गर्भोऽवृणीत देवान् ।
१२ ३२ ३१ २३ १ २र ३ २३ २३१२
अदधादिन्द्रे पवमान ओजोऽजनयत् सूर्ये ज्योतिरिन्दुः ॥

இருக்கு 9-90-41.

மஹத்தத்ஸோமோ மஹிஷஶ்சகாராபாம் யத்கர்போऽவ்ருணீத தேவாந் ।
அதாதிந்த்ரே பவமாந ஓஜோऽஜநயத் ஸூர்யே ஜ்யோதிரிந்து: ॥

அந்வயம்.

महिषः, अपां गर्भः, सोमः, महत्, तत्, चकार यत्, देवान्, अवृणीत, पवमानः, इन्द्रे, ओजः, अदधात्, इन्दुः, सूर्ये, ज्योतिः, अजनयत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| महिषः | மஹிஷ: | பெருமையுடையதும் |
| अपां गर्भः | அபாம் கர்ப: | நீரின் கருப்பவடிவுமாகிய |
| सोमः | ஸோம: | சோமரசம், |
| महत् | மஹத் | பெரிதாகிய |
| तत् | தத் | அக் கருமத்தைச் |
| चकार यत् | சகார யத் | செய்தது. அஃது யாதெனின் ? |
| देवान् | தேவாந் | தேவர்களை |
| अवृणीत | அவ்ருணீத | இறைஞ்சியதும். மற்றும் |
| पवमानः | பவமாந: | பவித்திரமாகிய சோமம் |
| इन्द्रे | இந்த்ரே | இந்திரன்பால், |
| ओजः | ஓஜ: | சோம மருந்தியதாலுண்டாகும் வலியைத் |
| अदधात् | அதாத் | நிலைநாட்டியதும், அவ்வாறே, |
| इन्दुः | இந்து: | சோமம் |
| सूर्ये | ஸூர்யே | இரவியின்கண் |
| ज्योतिः | ஜ்யோதி: | பிரகாசத்தை |
| अजनयत् | அஜநயத் | உண்டாக்கியது மாமென்க |

சாயணய பாடம்.

கண்டம்—7.　இருக்கு—10.　பராசர ரிஷி.

மகத்தாகிய, அல்லது, பூசிக்கத்தக்க சோமம், பெரிதாய அக்கருமத்தைச் (அச் செய்கையை) செய்தது. அஃது யாதெனின்? நீரின் கருப்பவடிவ

மாந்தன்மையை உண்டாக்கலால், அல்லது, உண்டாக்கப்பட்டதால் நீரின் கருப்பமாகிய அச்சோமம், தேவர்களை நன்கு ஆராதித்ததாகும். மற்றும், பவித்திரமாகிய சோமம், சோமமருந்தியதாலுண்டாகும் ஆற்றலை இந்திரன் கண் நிலைக்கவைத்ததும். அவ்வணமே ஆதித்தனிடத்தில் ஒளியையுண்டாக்கியதுமாமென்க. (இதுவே சோமரசஞ்செய்த பெரியதோர் செய்கையென்றாம்.) (10)

## மந்திரம் 11.

१२ ३ २ ३ २ ३ २ ३ २ २ ३ ३ १ २ ३ १ २ ३ २

543. असर्जि वक्का रथ्ये यथाजौ धिया मनोता *प्रथमा मनीषा ।

२३ १ २ ३ २ ३ २ १ १ ३ २ ३ १२ ३ १ २

दश स्वसारो अधि †सानो अव्ये मृजन्ति वह्निं सदनेष्वच्छ ॥

இருக்கு 91-93-3.

அஸர்ஜி வக்வா ரத்2யே யதா2ஜௌ தி4யா மனோதா ப்ரத2மா மனீஷா ।
த3ஶ ஸ்வஸாரோ அதி4 ஸானோ அவ்யே ம்ருஜந்தி வஹ்னிம் ஸத3னேஷ்வச்ச2 ॥

அந்வயம்.

मनोता, प्रथमा, मनीषा, वक्का, रथ्ये यथा, आजौ, धिया, असर्जि,
दश स्वसारः, सदनेषु, वह्निं, सानो अधि, अव्ये, अच्छ मृजन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मनोता | மனோதா | தேவர்களின் மனத்தைப் பிணிக்கத் தக்கதும், |
| प्रथमा | ப்ரத2மா | முக்கியமானதும் |
| मनीषा | மனீஷா | துதிக்கப்பட்டதும் |
| वक्का | வக்வா | ஒலி செய்கின்றதுமாகிய சோமரசம் |
| रथ्ये यथा | ரத்2யே யதா2 | போரில் குதிரைகளை வகுத்து வைத்திருப்பது போன்று |
| आजौ | ஆஜௌ | வேள்வியில் |
| धिया | தி4யா | துதியுடன் |
| असर्जि | அஸர்ஜி | உண்டாக்கப்படுகின்றது. |
| दश स्वसार: | த3ஶ ஸ்வஸார: | பத்து விரல்களும் |
| सदनेषु | ஸத3னேஷு | வேள்விச் சாலைகளில் (உள்ள பாண்டத்தையும் பிறவற்றையும்) |

* प्रथमो मनीषा, † सदनानि, என்பன இருக்கு.

| | | |
|---|---|---|
| वह्निं | வஹ்நிம் | {இன்பபதத்திற்சேர்க்குஞ்சோம ரசத்தை, |
| सानो अधि | ஸாநோ அதி | உயர்ந்த இடமாகிய |
| अव्ये | அவ்யே | கம்பளியின் கண் |
| अच्छ मृजन्ति | அச்ச ம்ருஜந்தி | நன்கு செலுத்துகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—7. இருக்கு—11. கசியப ரிஷி.

தோத்திரத்துடன், அல்லது, கருமத்துடன் பாத்திரங்களில் ஒலிக்கின்ற சோமரசத்தை வேள்வியின் கண் உண்டாக்குகின்றார்கள். அதிலுவமை:—குதிரைகட்குரிய போரில், குதிரையை வெளிக்கொண்டு வருவது போன்றெனல். எவ்வண்ணத்த சோமரசமெனின்? தேவர்களின் மனம் எதில் பின்னிக்கொண்டிருக்கின்றதோ, அத்தன்மையதாம். அங்ஙனமே, பிராமணம் என்னும் மறையின் பாகமும் "அதின் கண்ணேயே அவர்களுடைய மனங்கள் பின்னப்பட்டுள்ளன" எனக் கூறுகின்றது. மற்றும், முக்கியமானதும், மனதினைச் செலுத்துந் துதியை யுடையதும், அல்லது, துதிப்போனைக் கொண்டு துதியைச் செலுத்துகின்றதுமாம். அன்றியும், பத்தென்னு மெண் கொண்ட விரல்கள், வேள்விச் சாலைகளில் பாத்திரங்களை யொருமுகப்படுத்திக் கொண்டு தாங்கப்பட்ட சோமரசத்தை உயரமாகிய இடத்தில் செம்மறி ஆட்டு மயிர்களாற் செய்த பவித்திரத்திற் (கம்பளியிற்) செலுத்துகின்றன என்பதாம். (11)

ஈண்டு, வக்வா என்னுஞ்சொல், ஒலிப்பொருளிலும், ஆஜி என்பது வேள்விப் பொருளிலும் நின்றமைகாண்க.

மந்திரம் 12.

३ २ ३२ ३२३ १ ३ १ २ ३ १ १२२ २३ १ २

544. अपामिवेदूर्मयस्तर्तुराणाः प्र मनीषा ईरते सोममच्छ ।

३ २ ३१२ ३ २ ३ १ २र ३ २ ३१ २

नमस्यन्तीरुप च यन्ति संचा च विशन्त्युशतीरुशन्तम् ॥ १२ ॥

இருக்கு 9-95.

அபாமிவேதூர்மயஸ்தர்துராணா: ப்ரமநீஷா ஈரதே ஸோமமச்ச |

நமஸ்யந்தீருப ச யந்தி ஸஞ்சா ச விசந்த்யுசதீருசந்தம் ||

அந்வயம்.

अपां ऊर्मयः इव, तर्तुराणाः इत्, सोमं अच्छ, मनीषाः, प्रेरते, उशतीः, नमस्यन्तीः, उशन्तं, (तम्,) उपयन्ति च, संच, आविशन्ति च ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अपां ऊर्मयः इव | அவாம் ஊஉஷுயஃ ஜவ | நீரின்கண் அலைகள் விரைவிலெழுமாறு |
| तर्तुराणाः इत् | தத‍ுராணாஃ ஜக் | கருமத்தில், தேவர்களைத் துதித்தற் பொருட்டு வேகம் பண்ணுகின்ற வேட்போர்கள் |
| सोमं अच्छ | ஸொஉம் அச்ச | சோமரசத்தை முன்னிட்டுத் |
| मनीषाः | உநீஷாஃ | தோத்திரங்களைச் |
| प्रेरते | ப்ரேரதே | செலுத்துகின்றார்கள். |
| उशतीः | உஶதீஃ | தோத்திரங்களும் |
| नमस्यन्तीः | நஉஸ்யந்தீஃ | வணங்கிக் கொண்டு |
| उशन्तं | உஶந்தம் | விரும்புகின்ற |
| (तं) | (தம்) | (அச்சோமரசத்தின்) |
| उपयन्ति च | உவயந்தி அ | அருகிற் செல்கின்றன. |
| सं च | ஸம் அ | (மற்றும்) கொத்துகளாகியும் |
| आविशन्ति च | ஆவிஶந்தி அ | அதிற் புகுகின்றன. |

சாயண பாடியம்

கண்டம்—7. இருக்கு—12. பிரஸ்கண்வ ரிஷி.

வேகமுள்ள நீரலைகளைப் போன்று கருமத்தில் தேவர்களைத் துதித்தற் பொருட்டுத் துரிதஞ்செய்கின்ற வேட்போர்கள், சோமரசத்தை முன்னிட்டுத் தோத்திரங்களால் வழுத்துகின்றார்கள். துதிகளோ, வணங்குவனவாய்ச் சோமத்தை யடைந்து அதனருகில் நிலக்கின்றன. அதாவது அதையே யடைகின்றன என்பதாம். இச்சையுள்ள தோத்திரங்கள் தாம் விரும்புகின்ற சோமரசத்தைச்சேர்ந்து பொருந்துகின்றன என்பதாம். (12)

ஏழாவது கண்டம்.

முற்றும்.

## எட்டாவது கண்டம்.

## பிரபாடகம்—6. அத்தியாயம்—5. கண்டம்—8.

ஒன்பது மந்திரங்களாலானது.

பவமானம் (சோமம்) தேவதை. சந்தம். 1, 6, 9, அநுஷ்டுப். 7, பிருகதீ. சுரம், 1, 6, 8, 9, காந்தாரம் மத்தியமம்.

### மந்திரம் 1.

३ १ २　३ १ २　३ १२　३ १२
545. पुरोजिती वो अन्धसः सुताय मादयित्नवे ।
२ ३ १३　३ १ २　३क२र
अपश्वानꣳ श्नथिष्टन सखायो दीर्घजिह्व्यम् ॥ १ ॥

இருக்கு—9-101-2.

𑌪𑍁𑌰𑍋𑌜𑌿𑌤𑍀 𑌵𑍋 𑌅𑌨𑍍𑌧𑌸𑌃 𑌸𑍁𑌤𑌾𑌯 𑌮𑌾𑌦𑌯𑌿𑌤𑍍𑌨𑌵𑍇 ।
𑌅𑌪𑌶𑍍𑌵𑌾𑌨𑌂 𑌶𑍍𑌨𑌥𑌿𑌷𑍍𑌟𑌨 𑌸𑌖𑌾𑌯𑍋 𑌦𑍀𑌰𑍍𑌘𑌜𑌿𑌹𑍍𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

அந்வயம்.

हे सखायः !, वः, पुरोजिती, सुताय, मादयित्नवे, अन्धसः, दीर्घजिह्व्यम्, श्वानं, अपश्नथिष्टन ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः ! | 𑌹𑍇 𑌸𑌖𑌾𑌯𑌃 ! | நண்பர்களான துதிப்போர்காள் ! |
| वः | 𑌵𑌃 | நீவிர் |
| पुरोजिती | 𑌪𑍁𑌰𑍋𑌜𑌿𑌤𑍀 | எதிரில் வெற்றியையுடையதும் |
| सुताय | 𑌸𑍁𑌤𑌾𑌯 | பிழியப்பட்டதும் |
| मादयित्नवे | 𑌮𑌾𑌦𑌯𑌿𑌤𑍍𑌨𑌵𑍇 | மிகக் களிப்பைத்தருவதுமாகிய |
| अन्धसः | 𑌅𑌨𑍍𑌧𑌸𑌃 | சோமரசத்தின் பொருட்டு, |
| दीर्घजिह्व्यम् | 𑌦𑍀𑌰𑍍𑌘𑌜𑌿𑌹𑍍𑌵𑍍𑌯𑌮𑍍 | நீண்ட நாவுள்ள |
| श्वानं | 𑌶𑍍𑌵𑌾𑌨𑌂 | நாயை |
| अपश्नथिष्टन | 𑌅𑌪𑌶𑍍𑌨𑌥𑌿𑌷𑍍𑌟𑌨 | ஒதுக்குவீர்களாக. |

சாயண பாடியம்.

**கண்டம்—4.** இருக்கு—12. சுவயாசுவ ரிஷி.

*நண்பர்களான, அல்லது, ஒத்த வறிவுடையார்களான துதிப்போர்களே! நீங்கள், பிழியப்பட்டதும், மிகக்களிப்பைத்தருவதும் எதிரிலுள்ள வெற்றியையுடையதுமாகிய சோமரசத்தின் நிமித்தமாய், நீண்ட நாவுடைய நாயை ஓட்டுவீர்களாக. நாய்கள், அல்லது, இராக்கதர்கள், சோமரசத்தை நக்காதவாறு செய்வீர்களாக என்பதாம்.* (1)

## மந்திரம் 2.

३ २ ३ २ ३२उ ३ १२ ३ १ २
546. **अयं पूषा रयिर्भगः सोमः पुनानो अर्षति ।**
१ ३ १ २ ३ १ २३क २र ३ १ २ ३२
**पतिर्विश्वस्य भूमनो व्यख्यद्रोदसी उभे ॥ २ ॥**

இருக்கு—8-101-7.

𑌅𑌯𑌂 𑌪𑍂𑌷𑌾 𑌰𑌯𑌿𑌰𑍍𑌭𑌗𑌃 𑌸𑍋𑌮𑌃 𑌪𑍁𑌨𑌾𑌨𑍋 𑌅𑌰𑍍𑌷𑌤𑌿 ।
𑌪𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌭𑍂𑌮𑌨𑍋 𑌵𑍍𑌯𑌖𑍍𑌯𑌦𑍍𑌰𑍋𑌦𑌸𑍀 𑌉𑌭𑍇 ॥

அந்வயம்.

पूषा, भगः, रयिः, अयं, पुनानः, अर्षति, विश्वस्य, भूमनः, पतिः, सोमः, उभे रोदसी, व्यख्यत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **पूषा** | 𑌪𑍂𑌷𑌾 | பரிபாலிப்பதும் |
| **भगः** | 𑌭𑌗𑌃 | சேவித்தற்குரியதும் |
| **रयिः** | 𑌰𑌯𑌿𑌃 | தனங்கிடைத்தற்குக் காரணமுமாகிய |
| **अयं** | 𑌅𑌯𑌂 | இச்சோமரசம் |
| **पुनानः** | 𑌪𑍁𑌨𑌾𑌨𑌃 | பவித்திரத்தில் (கம்பளியில்) சுத்தம் பண்ணப்பட்டதாய்க் |
| **अर्षति** | 𑌅𑌰𑍍𑌷𑌤𑌿 | கலசத்தை யடைகின்றது. |
| **विश्वस्य** | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 | எல்லா |
| **भूमनः** | 𑌭𑍂𑌮𑌨𑌃 | உயிர்கட்கும் |
| **पतिः** | 𑌪𑌤𑌿𑌃 | இறைவனாகிய |
| **सोमः** | 𑌸𑍋𑌮𑌃 | சோமரசம் |
| **उभे रोदसी** | 𑌉𑌭𑍇 𑌰𑍋𑌦𑌸𑍀 | வானுலகு மண்ணுலகிரண்டையும் |
| **व्यख्यत्** | 𑌵𑍍𑌯𑌖𑍍𑌯𑌤𑍍 | தனதொளியால் விளக்குகின்றது. |

## சாயண பாடியம்.

**கண்டம்—8. இருக்கு—2. யயாதி நாகுஷ ரிஷி.**

அனைத்தையும் பரிபாலிப்பதும், ஆராதிக்கத்தக்கதும், தனத்திற்குக் காரணமுமாகிய இச் சோமரசம், பவித்திரமாகிய கம்பளியிற் சுத்தம் பண்ணப்பட்டுக் கலசத்தை யடைகின்றது. அங்ஙனமே, உலகமனைத்திற்கும் இறைவனாகி (பரிபாலிப்போனாகி)ய சோமரசம் விண்ணுலகு, மண்ணுலகிரண்டையும் தனது பிரகாசத்தால் விளக்குகின்றது. இதனால் இரண்டுலகிற்கு மிறைவனாந் தன்மை குறிக்கப்பட்டது. (2)

## மந்திரம் 3.

३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २
547. **सुतासो मधुमत्तमाः सोमा इन्द्राय मन्दिनः ।**
३ १२ ३ १ २ ३ १ २
**पवित्रवन्तो अक्षरन् देवान् गच्छन्तु वो मदाः ॥ ३ ॥**

இருக்கு—9-101-4.

ஸுதாஸோ மதுமத்தமாः ஸோமா இந்த்ராய மந்திநः ।
பவித்ரவந்தோ அக்ஷரந் தேவாந் கச்சந்து வோ மதாः ॥

### அந்வயம்.

मधुमत्तमाः, मन्दिनः, सुतासः सोमाः, पवित्रवन्तः, इन्द्राय, अक्षरन्, वः, मदाः, देवान्, गच्छन्तु ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| मधुमत्तमाः | மதுமத்தமாः | மிக மதுரமுடையதும் |
| मन्दिनः | மந்திநः | களிப்பைக் கொடுப்பதும் |
| सुतासः सोमाः | ஸுதாஸः ஸோமாः | பிழியப்பட்டதுமாகிய சோமரசம் |
| पवित्रवन्तः | பவித்ரவந்தः | பவித்திரமுடையதாகி |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| अक्षरन् | அக்ஷரந் | (வடிக்கின்ற) பாத்திரத்திற் பொங்குகின்றது. |
| वः | வः | சோமக் கொடிகளே! |
| मदाः | மதாः | களிப்பைத் தரும் உங்களுடைய ரசம் |
| देवान् | தேவாந் | இந்திரன் முதலிய தேவர்களை |
| गच्छन्तु | கச்சந்து | அடைவதாகுக. |

சாயண பாடியம்.

**கண்டம்—8. இருக்கு—3. யயாதி நாகுஷ ரிஷி.**

வியப்புற்ற மதுரத்தன்மையோடு கூடியதும், இது பற்றியே களிப்பைத் தருவதும், பிழியப்பட்டதுமாகிய சோமரசம், பவித்திரஞ் செய்யப்பட்டதாகி இந்திரன் பொருட்டுப் பாத்திரத்தில் நிரம்புகின்றது. இனிப் பிரத்தியட்சமாகிய தோத்திரம்:—சோமக் கொடிகளே! களிப்பின் நிமித்தமான உங்களுடைய இரசம் இந்திரன் முதலியோர்களை அடைகுக என்பதாம். (3)

## மந்திரம் 4.

१ २   ३ १ २ ३   १ २   ३ १ २
548. **सोमाः पवन्त इन्दवोऽस्मभ्यं गातुवित्तमाः ।**
३ २   ३ १ २३ १२   ३क २र   ३ १२
**मित्रा * स्वाना अरेपसः स्वाध्याः स्वर्विदः ॥ ४ ॥**

இருக்கு—9-101-10.

𑌸𑍋𑌮𑌾𑌃 𑌪𑌵𑌨𑍍𑌤 𑌇𑌨𑍍𑌦𑌵𑍋𑌽𑌸𑍍𑌮𑌭𑍍𑌯𑌂 𑌗𑌾𑌤𑍁𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌃।
𑌮𑌿𑌤𑍍𑌰𑌾 𑌸𑍍𑌵𑌾𑌨𑌾 𑌅𑌰𑍇𑌪𑌸𑌃 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌵𑌿𑌦𑌃 ॥

அந்வயம்.

गातुवित्तमाः, मित्राः, स्वानाः, अरेपसः, स्वाध्याः, स्वर्विदः, इन्दवः, सोमाः, अस्मभ्यं, पवन्ते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **गातुवित्तमाः** | 𑌗𑌾𑌤𑍁𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌃 | நன்னெறியையடைவிப்பதும் |
| **मित्राः** | 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌃 | தேவர்கட்கு நட்புடையதும் |
| **स्वानाः** | 𑌸𑍍𑌵𑌾𑌨𑌾𑌃 | இனிது பிழிந்தெடுக்கப்பட்டதும் |
| **अरेपसः** | 𑌅𑌰𑍇𑌪𑌸𑌃 | பாவமிலாததும் |
| **स्वाध्यः** | 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌃 | நன்கு தியானம் பண்ணிவைப்பதும் |
| **स्वर्विदः** | 𑌸𑍍𑌵𑌰𑍍𑌵𑌿𑌦𑌃 | சுவர்க்கத்தை யடைவிப்பதும் |
| **इन्दवः** | 𑌇𑌨𑍍𑌦𑌵𑌃 | பிரகாசிப்பதுமாகிய |
| **सोमाः** | 𑌸𑍋𑌮𑌾𑌃 | சோமரசம், |
| **अस्मभ्यं** | 𑌅𑌸𑍍𑌮𑌭𑍍𑌯𑌂 | எங்கணிமித்தமாய் |
| **पवन्ते** | 𑌪𑌵𑌨𑍍𑌤𑍇 | நிரம்புகின்றது, அல்லது, ஒழுகுகின்றது. |

* सुवानाः, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—4. மநுசாம்வரண ரிஷி.

சிறப்புடன் நன்னெறியை யடைவிப்பதும், பிரகாசிப்பதுமாகிய சோமரசம், எங்கணிமித்தமாக நிரம்புகின்றது. அல்லது, வருகின்றது. எத்தன்மைத்தாகிய சோமரசமெனின்? தேவர்கட்கு நட்பானதும், பிழியப்பட்டதும், பாவமற்றதுமாம். இது கொண்டே அழகிய தியானமுடையதும், எல்லா முணர்ந்ததுமாமென்க. (4)

## மந்திரம் 5.

549. *अभी नो वाजसातमꣳ रयिमर्ष †शतस्पृहम् ।
इन्दो सहस्रभर्णसं तुविद्युम्नं विभासहम् ॥ ५ ॥

இருக்கு—9-65-28.

அபீ நோ வாஜஸாதமம் ரயிமர்ஷ ஶதஸ்ப்ருஹம் ।
இந்தோ ஸஹஸ்ரபர்ணஸம் துவித்யும்நம் விபாஸஹம் ॥

அந்வயம்.

हे इन्दो !, शतस्पृहं, सहस्रभर्णसं, तुविद्युम्नं, विभासहं, वाजसातमं, रयिं, नः, अभ्यर्ष ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्दो ! | ஹே இந்தோ ! | ஒளி மிகுந்த சோமமே ! நீ |
| शतस्पृहं | ஶதஸ்ப்ருஹம் | நூற்றுக் கணக்கானவர்களால் விரும்பத்தக்கதும் |
| सहस्रभर्णसं | ஸஹஸ்ர பர்ணஸம் | ஆயிரக் கணக்கானவர்களைக் காப்பாற்றத் தக்கதும் |
| तुविद्युम्नं | துவி த்யும்நம் | மிகுந்த கீர்த்தியை, அல்லது, அன்னத்தையுடையதும் |
| विभासहं | விபாஸஹம் | மிக்கொளியுடையதும் |
| वाजसातमं | வாஜஸாதமம் | பேராற்றலைத் தருவதுமாகிய |
| रयिं | ரயிம் | மகப்பேற்றையேனும், அல்லது, தனத்தையேனும் |
| नः | நঃ | எங்கட்கு |
| अभ्यर्ष | அப்யர்ஷ | அளிப்பாயாக. |

* अभि, † पुरुस्पृह, विश्वासहम्, என்பன இருக்கு.

## சாயண பாடியம்.

**கண்டம்—8.** இருக்கு—5. அம்பரீஷர், ருஜீசுவான் என்னும் இருவரும் ரிஷிகள்.

பிரகாசமாகிய சோமரசமே! நீ, மிகுந்த வலியையேனும், அல்லது அன்னத்தையேனுங் கொடுக்கத்தக்க தனத்தையும், புத்திரப்பேற்றையும் எங்கட்கு அளிப்பாயாக. அஃது எத்தன்மையதாமெனின்? பலரால் விரும் பத்தக்கதும், பலவகையாய்ப் பரிபாலிக்கத்தக்கதும், பெருங் கீர்த்தியை, அல்லது, மிகுந்த தனத்தையுடையதும், "விளக்குவது கீர்த்தி, அல்லது, அன்னம்" என்றார் நிருத்தத்தில் யாஸ்கமுனிவரும். மிக்கொளியையு மமிழ்த்துவதும், அதாவது மகத்தாகிய ஒளியுடையதுமாம். இத்தன்மைய தனத்தையேனும், அல்லது புத்திரனையேனுந் தருவாயாக எனக் கூட்டிக் கொள்க. (5)

### மந்திரம் 6.

३ १ २ ३१२ ३ १ २२३ १ २
550. अभी नवन्ते अद्रुहः प्रियमिन्द्रस्य काम्यम् ।
३२उ ३ १२ ३१ २ ३१२
वत्सं न पूर्व आयुनि जातꣳ रिहन्ति मातरः ॥ ६ ॥

இருக்கு 9-10-1.

அபீ நவந்தே அத்ருஹ: ப்ரியமிந்த்ரஸ்ய காம்யம் ।
வத்ஸம் ந பூர்வ ஆயுநி ஜாதம் ரிஹந்தி மாதர: ॥

அங்வயம்.

मातरः, पूर्वे, आयुनि, जातं, वत्सं, रिहन्ति न, अद्रुहः, इन्द्रस्य, प्रियं, काम्यं, अभि नवन्ते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मातरः | மாதர: | தாய்களான கோக்கள் |
| पूर्वे | பூர்வே | முதலாவது |
| आयुनि | ஆயுநி | வயதில் |
| जातं | ஜாதம் | பிறந்த |
| वत्सं | வத்ஸம் | கன்றை |
| रिहन्ति न | ரிஹந்தி ந | நக்கிக்கொடுத்தல் போன்று |

| | | |
|---|---|---|
| अद्रुहः | அத்ருஹ: | துரோகமற்றவசதீவரி என்னும் ஆற்று நீர், |
| इन्द्रस्य | இந்த்ரஸ்ய | இந்திரனுக்குப் |
| प्रियं | ப்ரியம் | பிரியமானதும் |
| काम्यं | காம்யம் | அனைவராலும் விரும்பப்படுவதுமாகிய சோமரசத்தை |
| अभि नवन्ते | அபி நவந்தே | அன்புடனடைகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—6. ருஜூருனு, காசியபர் என்னு மிருவர் ரிஷிகள்.

கோக்கள், முதல் வருடத்திற் பிறந்த தமது கன்றை நக்குவன போன்று, துரோக மற்ற 'வசதிவரி' என்னும் ஆற்றுநீர், இந்திரனுக்கு விருப்பமானதும், அனைவராலும் விரும்பப்படுவதுமாகிய சோமரசத்தை அன்போடுஅடைகின்றது என்பதாம். (6)

மந்திரம் 7.

१ २३ १ २ ३ २३ १ २ ३ १ २
551. आ हर्यताय धृष्णवे * धनुष्टन्वन्ति पौंस्यम् ।
३ २उ ३ १ २ ३१ २ ३ १२र ३ १२
शुक्रा वि यन्त्यसुराय निर्णिजे विपामग्रे महीयुवः ॥ ७ ॥

இருக்கு—9-99-1.

ஆ ஹர்யதாய த்ருஷ்ணவே தநுஷ்டந்வந்தி பௌம்ஸ்யம் ।
ஶுக்ரா வி யந்த்யஸுராய நிர்ணிஜே விபாமக்ரே மஹீயுவ:॥

அந்வயம்.

हर्यताय, धृष्णवे, पौंस्यं, धनुरातन्वन्ति, विपां, अग्रे, महीयुवः, शुक्राः, असुराय, निर्णिजे, वियन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हर्यताय | ஹர்யதாய | அனைவரும் விரும்புதற்குரியதும் |
| धृष्णवे | த்ருஷ்ணவே | பகைவரை யடக்குவதுமாகிய சோமத்தின்பொருட்டு |
| पौंस्यं | பௌம்ஸ்யம் | சிறந்த புருடத்தன்மையை விளக்குகின்ற |
| धनुरातन्वन्ति | தநுராதந்வந்தி | தனுவில் நாணேற்றுகின்றார்கள். |

* धनुस्तन्वन्ति शुक्रां व्ययन्त्यसुराय निर्णिजं, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| विप्रां | விப்ராம் | அறிஞர்கட்கு |
| अग्रे | அக்ரே | முன்னர் |
| महीयुवः | மஹீயுவ: | பூசையை விரும்புகின்ற வேட்போர்கள் |
| शुक्राः | ஶுக்ரா: | வெண்மையான பசுவின் பாலே, |
| असुराय | அஸுராய | வன்மையுடைய |
| निर्णिजे | நிர்ணிஜெ | வடிவத்தைச் சுத்திசெய்தற்பொருட்டு |
| वियन्ति | வியந்தி | மறைக்கின்றார்கள். |

சாயணபாடியம்.

கண்டம்—8. இருக்கு—7.

யாவர்களாலும் விரும்பத்தக்கதும், பகைவர்களை யடக்குஞ் சீலமுள்ளதுமாகிய சோமத்திற்கு புருடத்தன்மையை வெளிப்படுத்துகின்ற தனுவில் நாணேற்றுகின்றார்கள். அறிவுமிக்கோர்களின் முன்னர் பூசையை விரும்புகின்ற வேட்போர்கள் வெண்மை நிற ஆவின்பாலை ஆற்றலுள்ள வடிவத்தின் பொருட்டு (சுத்திபண்ணுவதற்கு) மறைக்கின்றார்கள் என்பது பொருள் (1)

குறிப்பு:—சோமரசத்தின் தாரை விழுதற்பொருட்டு விரித்துள்ள பவித்திரமாகிய கம்பளி ஒருவகையாய் அலங்கரிக்கப்படுகின்றது. கட்டிலின்மேல் வாயகன்ற மட்பாண்டம் ஒன்று வைத்து அதைத் துவாரமிட்டு அதிற் கம்பளிக்கயிற்றைத் தொங்கவிடுதலாகிய வழக்கு, சோமம் ஒழுகுதற்பொருட்டெனத் தெரிகின்றது.

## மந்திரம் 8.

२३ १ २ ३१ २र ३१ २ ३ १२
552. परित्यꣳ हर्यतꣳ हरिं बभ्रुं पुनन्ति वारेण ।
२ ३२उ ३ २उ३ १२ ३१ २र
यो देवान् विश्वाꣳ इत्परि मदेन सह गच्छति ॥ ८ ॥

இருக்கு 9-90-7.

பரித்யம் ஹர்யதம் ஹரிம் பப்ரும் புநந்தி வாரேண ।
யோ தேவாந் விஶ்வாம் இத்பரி மதேந ஸஹ கச்சதி ॥

அந்வயம்.

यः, विश्वान् देवान् इत्, मदेन सह, परिगच्छति, हर्यतं, हरिं, बभ्रुं, त्यं, वारेण, परिपुनन्ति ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | யஃ | யாதொரு சோமம் |
| विश्वान् देवान् इत् | விஶ்வாந் தேவாந் இத் | இந்திரன்முதலிய எல்லாத் தேவர்களையும் |
| मदेन सह | மதேந ஸஹ | களிப்பைத்தரும் இரசத்தோடு |
| परिगच्छति | பரிகச்சதி | அடைகின்றதோ, |
| हर्यतं | ஹர்யதம் | அனைவரும் விரும்பத்தக்கதும் |
| हरिं | ஹரிம் | பச்சை நிறமுடையதும், |
| बभ्रुं | பப்ரும் | பொன்மை நிறமுடையதுமாகிய |
| त्यं | த்யம் | அச்சோமத்தை, |
| वारेण | வாரேண | பவித்திரமாகிய கம்பளியினுற் |
| परिपुनन्ति | பரிபுநந்தி | சுத்தப்படுத்துகின்றார்கள். |

### சாயண பாடியம்.

கண்டம்—8. இருக்கு—8. ருசிவ அம்பரிஷர்கள் ரிஷிகள்.

அனைவராலும் விரும்புதற்குரியதும், பசுமை நிறம், பொன்மை நிறமுடையதுமாகிய யாதொரு சோமம் களிப்பை கொடுக்குன்ற இரசத்துடன் இந்திரன் முதலிய தேவர்களை இனிதடைகின்றதோ, அச் சோமரசத்தைப் பவித்திரமாகிய கம்பளியாற் சுத்தப்படுத்துகின்றார்கள். (8)

### மந்திரம் 9.

१ २ ३ १ २र ३ २ ३ १ २३ १ २र

553. *प्र सुन्वानायान्धसो मर्त्तो न वष्ट तद्वचः ।

२३ १२ ३ १ २ ३ २ ३१ २र

अप श्वानमराधसꣳ हता मखं न भृगवः ॥ ९ ॥

இருக்கு 9-101-13.

ப்ர ஸுந்வாநாயாந்தஸோ மர்த்தோ ந வஷ்ட தத்வச:।

அப ஶ்வாநமராதஸம் ஹதா மகம் ந ப்ருகவ: ॥

---

* प्र सुन्वानस्य त्रूत तद्वचः, என்பது இருக்கு.

அந்வயம்.

सुन्वानाय, अन्धसः, तत्, वचः, मर्त्तः, न प्रवष्ट, भृगवः, अराधसं मखं न, श्वानं, अपहत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **सुन्वानाय** | ஸுந்வாநாய | நன்கு பிழியப்பட்ட |
| **अन्धसः** | அந்தஸ: | சோமத்தைத் துதிக்கின்றதும், |
| **तत्** | தத் | கீர்த்தி மலிந்ததுமாகிய |
| **वचः** | வச: | வாக்கை, |
| **मर्त्तः** | மர்த்த: | கருமத்திற்கு இடையூறு செய்கின்றவர்கள் |
| **न प्रवष्ट** | ந ப்ரவஷ்ட | கேட்காதொழிவார்களாக. (மற்றும், துதிப்போர்காள்! நீவிர்) |
| **भृगवः** | ப்ருகவ: | பிருகுவைச் சேர்ந்தோர்கள் |
| **अराधसं मखं न** | அராதஸம் மகம் ந | தட்சணையில்லா வேள்வியை முன்னர் நீக்கியவாறு |
| **श्वानं** | ச்வாநம் | (இங்கு வரும்) நாயை |
| **अपहत** | அபஹத | ஓட்டுவீர்களாக. |

சாயணபாடியம்.

**கண்டம்**—8. இருக்கு—9. பிரசாபதி ரிஷி.

பிழியப்பட்ட சோமரசத்தைத் துதிக்கின்றதும், பெருமை வாய்ந்ததுமாகிய வாக்கை, இடையூறு செய்கின்ற மனிதன்போல்வான் விரும்பாதொழிவானாக. அதாவது கேட்காதொழிவானாக என்பதாம். அவ்வாறே துதிப்போர்களே! நீவிர், அனுகூலச் செய்கையற்ற நாயை ஒதுக்குவீர்களாக. அதிலுவமை:—முன்னர் அராதசம் (தட்சணையற்றது) என்னும் வேள்வியை, பிருகு சம்பந்தமுடையோர்கள் ஒதுக்கியவாறெனல். (9)

## எட்டாவது கண்டம்

முற்றும்.

## ஒன்பதாவது கண்டம்

### பிரபாடகம்—6. அத்தியாயம்—5. கண்டம்—9.

பன்னிரண்டு மந்திரங்களாலானது.

சோமம் - தேவதை. சந்தம் - சகதி. சுரம் - நிஷாதம்.

### மந்திரம் 1.

३२ ३ १२ ३१२ ३ १२ ३२उ ३ २३१२
554. अभि प्रियाणि पवते चनोहितो नामानि यह्वो अधि येषु वर्द्धते ।
१ २ ३ २ ३२उ ३२३ १२ ३२
आ सूर्यस्य बृहतो बृहन्नधिरथं विश्वञ्चमरुहद्विचक्षणः ॥

ஜ. 5-1.

அபி ப்ரியாணி பவதே சநோஹிதோ நாமாநி யஹ்வோ அதி [யேஷு வர்த்ததே ।
ஆ ஸூர்யஸ்ய ப்ருஹதோ ப்ருஹந்நதிரதம் விஷ்வஞ்சமருஹத்வி [சக்ஷண: ॥

அந்வயம்.

येषु, यह्वः, अधिवर्द्धते, बृहन्, विश्वञ्चं, बृहतः, सूर्यस्य, रथं अधि, विचक्षणः, आरुहत्, चनोहितः, प्रियाणि, नामानि, अभिपवते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **येषु** | யேஷு | எந்த நீரில் |
| **यह्वः** | யஹ்வ: | மகத்தாகிய இச்சோமம் |
| **अधिवर्द्धते** | அதிவர்த்ததே | மிக விருத்தியாகின்றதோ, |
| **बृहन्** | ப்ருஹந் | மற்றும், பெரிதாகியதும் |
| **विश्वञ्चं** | விஷ்வஞ்சம் | யாண்டுஞ் செல்கின்றதும் |
| **बृहतः** | ப்ருஹத: | மகத்துமாகிய |
| **सूर्यस्य** | ஸூர்யஸ்ய | இரவியினுடைய |
| **रथं अधि** | ரதம் அதி | இரதத்தின் மீது |

| | | |
|---|---|---|
| विचक्षणः | விசக்ஷணः | உலகைக் காண்பதாகி |
| आरुहत् | ஆருஹத் | ஏறுகின்றதோ, |
| चनोहितः | சநோஹிதः | அருந்துதற்கினிய, அல்லது, இனிய உணவாகிய அச்சோமம் |
| प्रियाणि | ப்ரியாணி | உலகைத் திருப்தி பண்ணுகின்ற |
| नामानि | நாமாநி | நீரை, |
| अभिपवते | அபிபவதே | பலவகையாக அடைகின்றது. |

சாயணபாடியம்.

கண்டம்—9. இருக்கு—1.

அன்னத்தின் பொருட்டு இனியதாகிய, அல்லது, இனியதாகிய அன்னமென்னுஞ் சோமரசம், உலகைப் பிரியப்படுத்தும் நீரைப் பல விதமாய் அடைந்து நிரம்புகின்றது. அந்தரிட்சத்திலுள்ள நீரில், மகத்தாகிய இச்சோமரசம் வளர்கின்றது. நீரின் நடுவில் உண்மையாய்ச் சோமமிருக்கின்றதென்க. பெரிதாகிய அச்சோமம் மகத்தாகிய சூரியனுடைய இரதத்தின் மீது [illegible]கத்தைக் காண்பதாகி ஏறுகின்றது. (இது பற்றியே) "தீயிலிட்ட அவி இ[illegible]ிதாக இரவியை யடைகின்றது" என்றார் மனுவும். (1)

## மந்திரம் 2.

३ १२ १ १२३ २ ३ १२ ३२३२३ १२
555. अचोदसो नोधन्वन्त्विन्दवः *प्र स्वानासो बृह †द्देवेषु हरयः ।
१२ ३ २ ३२३ १२ ३ १२ ३१२ ३१२
§ विचिदश्नाना इषयो अरातयोऽर्यो नः सन्तु सनिषन्तु नो धियः ॥

இருக்கு 9-71-1.

அசோதஸோ நோதந்வந்த்விந்தவः ப்ர ஸ்வாநாஸோ ப்ருஹத்தேவேஷு [ஹரய:]
விசிதஶ்நாநா இஷயோ அராதயோऽர்யோ நः ஸந்து ஸநிஷந்து [நோ தியः]

அந்வயம்.

अचोदसः, हरयः, स्वानासः, इन्दवः, नः, बृहद्देवेषु, प्रधन्वन्तु, अरातयः, नः, अर्यः इषयः, अश्नाना विचित्, सन्तु, सः, धिया, सनिषन्तु ॥

* प्रसुवानासो [illegible] विचनशन्न इषे असितमोऽर्यो नशन्त [illegible] नो [illegible]
என்பன இரு[illegible]

பதவுரை.

| | | |
|---|---|---|
| अचोदसः | அசோதஸ: | பிறரால் ஏவப்படாததும் |
| हरयः | ஹரய: | பாவத்தைப் போக்குவதும், அல்லது, பசுமை நிறமுடையதும், |
| स्वानासः | ஸ்வாநாஸ: | நன்கு தேடப்பெற்றதுமாகிய |
| इन्दवः | இந்தவ: | சோமரசம் |
| नः बृहद्देवेषु | ந: ப்ருஹத்தேவேஷு | அநேக தேவர்கள் கூடியுள்ள எமது வேள்விகளில் |
| प्रधन्वन्तु | ப்ரதந்வந்து | (வந்து) சேர்வதாகுக. |
| अरातयः | அராதய: | தனம் முதலியவைகளை யீயாத |
| नः | ந: | எங்களுடைய |
| अर्यः | அர்ய: | பகைவர்கள் |
| इषयः | இஷய: | அன்னத்தை விரும்பி |
| अश्नानः विचित् | அஸ்நாந: விசித் | உண்ணுதோர்களாகவே |
| सन्तु | ஸந்து | ஆகுக, |
| नः धियः | ந: திய: | தேவ விஷயகமாகிய எமது தோத்திரங்கள் |
| सनिषन्तु | ஸநிஷந்து | தேவர்களை யுடைவனவாகுக, |

சாயணபாடியம்.

கண்டம்—9. இருக்கு—2.

பிறரால் ஏவப்படாத சோமரசம், ... ணிமித்தமாய் நன்கு வருவதாகுக. யாண்டெனின்? தேவர்கள் மிகுதியாய்ச் சூழ்ந்துள்ள வேள்வியின் கண். அல்லது, தேவர்களுடைய அவை நடுவில். எவ்வண்ணமாகிய சோமரசமெனின்? நன்கு பிழிந்தெடுக்கப்பட்டதும் பசுமை நிறமுடையதுமாம். அன்றியும், தனம் முதலியவைகளை யீயாத எங்களுடைய சத்துருக்கள், அன்ன விருப்புடையோர்களாய் அன்னமுண்ணுதவர்களாகவே இருப்பார்களாக. மற்றும், தேவர்கள் விஷயமான எமது தோத்திரங்கள் தேவர்களை யினிது அடைவனவாகுக என்பதாம். (2)

## மந்திரம் 3.

३२उ ३ १ २ १ २ ३ २ ३ १२ ३ १२
556. एष प्र कोशे मधुमाँ ... चिक्रददिन्द्रस्य वज्रो * वपुषो वपुष्टमः ।
३ २ २ १ २ ३ १ २ ३ ३ १ २
§अभ्यृ३ ...श्चुतो वाश्रा अर्षन्ति †पयसा च धेनवः॥

இருக்கு 9-77-1.

---

* वपुषो वपुष्टरः, ... पयशव, என்பன இ... ...த்.

ஏஷ ப்ர கோஶே மது⁴மாம் அசிக்ரதி³ந்த்³ரஸ்ய வஜ்ரோ வபுஷோ
[வபுஷ்டர: ।

அப்⁴யூ³தஸ்ய ஸுது³கா⁴ க்⁴ருதஶ்சுதோ வாஶ்ரா அர்ஷந்தி பய
[ஸேவ தே⁴நவ: ॥

அந்வயம்.

इन्द्रस्य, वज्रः, वपुषः, वपुष्टमः, एषः, मधुमान्, कोशे, प्राचिक्रदत्,
ऋतस्य, सुदुघाः, घृतश्चुतः, वाश्राः, पयसा धेनवः च, अभ्यर्षन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| इन्द्रस्य | இந்த்³ரஸ்ய | இந்திரனுடைய |
| वज्रः | வஜ்ர: | வச்சிராயுதமாகியதும் |
| वपुषः | வபுஷ: | வித்திடுவோர்களுட் |
| वपुष्टमः | வபுஷ்டம: | சிறந்த வித்திடுவதாகியதும் |
| एषः मधुमान् | ஏஷ: மது⁴மாந் | இன்சுவையோடு கூடியதுமாகிய இச் சோமம், |
| कोशे | கோஶே | துரோண கலசத்தில் |
| प्राचिक्रदत् | ப்ராசிக்ரத³த் | ஒலியிடுகின்றது. |
| ऋतस्य | ...ஸ்ய | நிறைந்த பயனுடைய சோம ரசத்தின் |
| | ...: | பயனை யினிது பெய்வதும் |
| | | நீரை விழச் செய்வதுமாகிய |
| | | இரைகின்ற தாரைகள் |
| | ...வ: ச | பால்கறக்கின்ற பசுக்கள்போன்று |
| | | இனிதடைகின்றன. |

பாடியம்.

...சாமரசம், துரோண கலசத்தில் மிக ...மெனின்? இந்திரனுடைய வச்சிரா... என்பதுமதுவென்க. இச் சோம ...வரைக்) கொல்வதற்குச் சாதன ...டது. இச் சோமரச ...றந்த வித்திடுவோனு ...மை யாதலினென்க. ...து" என மறையுங் ...ள் உண்டாகின்றன.

ஒலி... யுதப... ரசமே, மாந் தல... மே, வித... கின்றது. இது பற்றி... கூறுகின்றது

ஈண்டுத் தாரைகள் என்பது எஞ்சிநின்றது. எத்தன்மைய தாரைகளெனின்? பயன்களை இனிது பொழிகின்றவைகளும் நீர் நிறைந்தவைகளுமாம். அல்லது, இரசம் நிறையப்பெற்றவைகளும், பாலோடு கூடிய பசுக்கள் போன்று ஒலிக்கின்றவைகளுமாம் என்பதாம். (3)

## மந்திரம் 4.

१२ ३२ ३१ २२उ ३२ ३१ २र ३१२

557. प्रो अयासीदिन्दुरिन्द्रस्य निष्कृतꣳ सखा सख्युर्न प्रमिनाति सङ्गिरम् ।

१२ ३२३ १२ ३१२ ३१२ ३१२

मर्य्य इव युवतिभिः समर्षति सोमः कलशे *शतयामना पथा ॥

இருக்கு 9-76-1.

ப்ரோ அயாஸீதி3ந்து3ரிந்த்3ரஸ்ய நிஷ்க்ருதம் ஸகா2 ஸக்2யுர்ந
[ப்ரமிநாதி ஸங்கி3ரம் ।
மர்ய்ய இவ யுவதிபி4: ஸமர்ஷதி ஸோம: கலஶே ஶதயாமநா
[பதா2 ॥

அந்வயம்.

इन्दुः, इन्द्रस्य, निष्कृतं, प्रो अयासीत्, सखा, सख्युः, सङ्गिरं. न ...

युवतिभिः मर्य इव, समर्षति, सो...

பதவுரை

| | |
|---|---|
| इन्दुः | இந்து3: |
| इन्द्रस्य | இந்த்3ரஸ்ய |
| निष्कृतं | நிஷ்க்ருதம் |
| प्रो अयासीत् | ப்ரோ அயாஸீத் |
| सखा | ஸகா2 |
| सख्युः | ஸக்2யு: |
| सङ्गिरं | ஸங்கி3ரம் |
| न प्रमिनाति | ந ப்ரமிநாதி |
| युवतिभिः मर्य इव | யுவதி... |
| समर्षति | ஸ... |

* शतयाम्ना, என்ட...

| | | |
|---|---|---|
| सोमः | ஸொமஃ | மற்றும், அச்சோமரசம் |
| शतयामना | ஶதயாமநா | நூறு துவாரங்களோடு கூடிய |
| पथा | பயா | தசா பவித்திரமென்னும் ஆடையின் வழியாய்த் |
| कलशे | கலுஶெ | துரோண கலசத்தில் நிரம்புகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—4. மிருடிகண ரிஷி.

சோமரசம், பவித்திரம் பண்ணப்பட்ட இந்திரனது உதரத்தை நன்கு சேர்கின்றது. நட்பாகிய சோமரசம் மித்திரனாகிய இந்திரனுடைய நல் வயிற்றிற்கோர் துன்பத்தையுமுண்டாக்காதிருக்கின்றது. மற்றும், அச்சோமரசம், பருவ மாதுடன் காளையாகிய புருடன் கலக்குமாறு வசதீவரி யென்னுந் தருணியாகிய நீருடன் இனிது கூடுகின்றது. பிழியுங்கால் அச்சோமரசமும், நூற்றுக் கணக்கான துவாரமுடைய தசாபவித்திரமென்னும் ஆடையின் நுனியால் துரோண கலசத்திற் செல்கின்றது. ஈண்டுச் செல்கின்றது என்பது எஞ்சி நின்றது. அல்லது, ஒரு வாக்கியமாய்க்கொண்டு, புருடன் பருவ மாதுடன் கலத்தல்போன்று நூற்றுக்கணக்கான துவாரங்களை யுடைய ஆடை வழியாய் நீருடன் கலக்கின்றது எனினுமாம். (4)

ரம் 5.

२ ३ १ २ ३ १ २ ३ २ ३ १ २
रसो दक्षो देवानामनुमाद्यो नृभिः ।
२२ ३ २ ३ १ २ ३ २
त्वभिर्वृथा पाजाᳬसि *कृणुते नदीष्वा॥

இருக்கு—9-73-1.

ரஸொ உக்ஷொ டூவா நாஂ ந [ஶாஜொ நரூஹிஃ ।
ஹ்வி திவரு-யா வாஜாஂஸி [க்ருணுதெ நதீஷ்வா ॥

हरिः, दिवः, पवते,
षु, कृणुते ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| धर्त्ता | த்ருதா | அனைவரையுந் தாங்குவதும் |
| कृत्व्यः | க்ருத்வ்யஃ | சுத்தம் பண்ணுதற்குரியதும் |
| रसः | ரஸஃ | இரச வடிவினதும் |
| देवानां दक्षः | தேவாநாம் த³க்ஷஃ | தேவர்கட்கு வலியைக் கொடுப்பதும் |
| नृभिः अनुमाद्यः | ந்ருபி⁴ஃ அநுமாத்³யஃ | வேட்போர்களாற் றுதிக்கத் தக்கதும் |
| हरिः | ஹரிஃ | பசுமை நிறமுடையதுமாகிய சோமரசம் |
| दिवः | தி³வஃ | வானிலுள்ள தசா பவித்திரமுடைய பாண்டத்திலிருந்து |
| पवते | பவதே | புநிதமாய் வருகின்றது. (மற்றும்) |
| सत्वभिः | ஸத்வபி⁴ஃ | பிராணிகளாற் |
| सृजानः | ஸ்ருஜாநஃ | பவித்திரஞ் செய்த |
| अत्यो न | அத்யோ ந | (குதிரை) இனிது செல்வதுபோல் |
| वृथा | வ்ருதா² | முயற்சியின்றியே |
| पाजांसि | பாஜாம்ஸி | தனது துரிதத்தை |
| नदीषु | நதீ³ஷு | வசதீவரி என்னும் ஆற்றுநீரில் |
| कृणुते | க்ருணுதே | செய்துகொள்கின்றது. |

## சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—5. கவி ரிஷி.

எல்லாவற்றையுந் தாங்குகின்ற சோமரசம், அந்தரிட்சத்திலுள்ள (ஏணியின்மேலுள்ள) தசா பவித்திரமென்னும் ஆடை நுனி வாயிலாகச் சுத்தமாய் வருகின்றது. எவ்வண்ணமாகிய சோமரசமெனின்? செயற்பாலதாம். எனின், பவித்திரம் பண்ணத்தக்கது என்பது பொருள். இரச வடிவமானதும். தேவர்கட்கு ஆற்றலைக்கொடுப்பதும். அல்லது, தேவர்களின்பொருட்டு வளர்வதும். அங்ஙனமே, நியந்தாவாகிய வேட்போர்களால் களிப்படைதற்குரியதும். அல்லது, துதிக்கத்தக்கதும், பசுமை நிறத்ததும், மனிதராற் பழக்கப்பட்ட குதிரை வருத்தமின்றிச் செல்வதுபோல் எங்களால் நன்கு திருத்தப்பட்டதுமாம். தன்னுடைய ஆற்றலை (வேகத்தை) வசதீவரி என்னும் நதி நீரில் உண்டுபண்ணுகின்றது. அதாவது நீர் வார்க்கப்படுகின்றது என்பது பொருள். இது சோமரசம் பிழியுங் காலத்திலெனக்கொள்க. (ஆற்று நீர் விட்டு சோமக்கொடியை யிடித்துச் சோமரசம் பிழியப்படுகின்றதென்பது திரண்ட பொருள்.) (5)

மந்திரம் 6.

१ २ ३ १ २ ३२उ ३ १ २ ३ १ १२ ३ २
559. वृषा मतीनां पवते विचक्षणः सोमो अह्नां प्रतरीतोषसां दिवः ।
३ १ २२ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २ ३ १ २
* प्राणा सिन्धूनां कलशाँ अचिक्रददिन्द्रस्य § हार्द्याविशन् मनीषिभिः ॥

இருக்கு 9-66-1.

வ்ருஷா மதீநாம் பவதே விசக்ஷண: ஸோமோ அஹ்நாம் ப்ரதரீ
[தோஷஸாம் திவ: ।
ப்ராணா ஸிந்தூநாம் கலசாம் அசிக்ரததிந்த்ரஸ்ய ஹார்த்யாவிசந்
[மநீஷிபி: ॥

அந்வயம்.

मतीनां वृषा, विचक्षणः, अह्नां, उषसां, दिवः, प्रतरीता, सोमः, पवते, सिंधूनां, प्राणा, मनीषिभिः, इन्द्रस्य, हार्दि आविशन्, कलशान् अभि, अचिक्रदत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मतीनां वृषा | மதீநாம் வ்ருஷா | துதிப்போர்கட்கு மன விருப்பைப் பொழிவதும் |
| विचक्षणः | விசக்ஷண: | சிறப்பாய்க் காண்பதும் |
| अह्नां | அஹ்நாம் | பகற்காலங்களையும் |
| उषसां | உஷஸாம் | உஷாக் காலங்களையும் |
| दिवः | திவ: | விண்ணுலகையும், அல்லது, இரவியையும் |
| प्रतरीता | ப்ரதரீதா | வளர்க்கின்ற |
| सोमः | ஸோம: | சோமரசம் |
| पवते | பவதே | இனிது தேடப்படுகின்றது. (மற்றும்) |
| सिन्धूनां प्राणा | ஸிந்தூநாம் ப்ராணா | நீரின் உயிராகிய, அல்லது, நீரால் நிறைந்த சோமரசம் |
| मनीषिभिः | மநீஷிபி: | தோத்திரங்களோடு |
| इन्द्रस्य | இந்த்ரஸ்ய | இந்திரனுடைய |
| हार्दि आविशन् | ஹார்தி ஆவிசந் | உள்ளத்திற் புக விரும்பி |
| कलशान् अभि | கலசாந் அபி | கலசத்தைச் சூழ்ந்துகொண்டு |
| अचिक्रदत् | அசிக்ரதத் | தாரையாற் புகுமிடத்து ஒலியிடுகின்றது. |

* प्राणा, § आवीविशत्, என்பன இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—6. கவி ரிஷி.

இச்சோமரசம் பிழியப்படுகின்றது. எத்தன்மைய சோமரசமெனின்? துதிப்போர்களுடைய விருப்பைப் பொழிவதும், விசேடமாய்க் காண்பதும், விண்ணுலகை, அல்லது, வானிலுள்ள இரவியை வளர்ப்பதுமாம், மற்றும், பொங்கி வழிகின்ற நீருக்கு நியந்தாவுமாகிய சோமரசம், தாரைகளாற் கலசங்களை யடைய விரும்பித் தொழிற்படுகின்றது. அல்லது, சோமம் கலசங்களைக் குறித்துத் தொழிற்படுகின்றது. யாது செய்துகொண்டெனின்? எப்போதும் தோத்திரங்களால் இந்திரனுடைய உள்ளத்திற்புகுந்துகொண்டு, தொழிற்படுகின்றதென்க. ஈண்டு, எப்போதும் என்பது எஞ்சிநின்றது. அல்லது, தூரத்திருப்பினும் துதிப்போர்களாற் (துதிகளாற்) செல்கின்றது என்பதனோடு பொருத்துக. அதாவது தோத்திரங்களாற் கலசத்திற் செல்கின்றது என்பதாம். (6)

## மந்திரம் 7.

१२ ३ २ ३१ २ ३ १ २ १२ २
560. त्रिरस्मै सप्त धेनवो *दुदुहिरे सत्यामाशिरं †परमे व्योमनि ।
३ २ ३ २ २२ ३ २ ३ १ २ ३ २३१ २२
चत्वार्यन्या भुवनानि निर्णिजे चारूणि चक्रे यदृतैरवर्द्धत ॥

இருக்கு 9-70-1.

த்ரிரஸ்மை ஸப்த தேநவோ து³து³ஹிரே ஸத்யாமாஶிரம் பரமே [வ்யோமநி ।
சத்வார்யந்யா பு⁴வநாநி நிர்ணிஜே சாரூணி சக்ரே [யத்³ருதைரவர்த்³த⁴த ॥

அந்வயம்.

परमे व्योमनि, अस्मैः, त्रिः सप्त, धेनवः, सत्यां, आशिरं, दुदुहिरे, यत्, ऋतैः, अवर्द्धत, अन्या, चत्वारि, भुवनानि, निर्णिजे चारूणि, चक्रे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| परमे व्योमनि | பரமே வ்யோமநி | சிறந்த வேள்வியிலுள்ள |
| अस्मै | அஸ்மை | இச்சோமரசத்தின் பொருட்டு |
| त्रिः सप्त | த்ரி: ஸப்த | இருபத்தொரு |

* दुदुहे पूर्व्ये, என்பது இருக்கு. † पूर्व्ये, என்பது பாடபேதம்.

| | | |
|---|---|---|
| धेनवः | தேநவ: | கோக்கள் |
| सत्यां | ஸத்யாம் | உண்மையாகிய |
| आशिरं | ஆஶிரம் | பால் முதலியவற்றை, |
| दुदुहिरे | துதுஹிரே | கறக்கும் பாத்திரத்தில் நிரப்புகின்றன. (மற்றும் இச்சோமரசம்) |
| यत् | யத் | எப்போது |
| ऋतै. | ருதை: | வேள்விகளால் |
| अवर्द्धत | அவர்த்த | வளர்கின்றதோ, அப்போது, |
| अन्या | அந்யா | மற்றைய |
| चत्वारि | சத்வாரி | நான்கு வகையாகிய |
| भुवनानि | புவநாநி | வசதீவரி, முதலிய நீரை, |
| निर्णिजे | நிர்ணிஜே | சுத்தப்படுத்துதற்பொருட்டு |
| चारूणि | சாரூணி | மங்கள வடிவங்களாய் |
| चक्रे | சக்ரே | ஆக்குகின்றன. |

சாயண பாடியம்,

கண்டம்—9. இருக்கு—7. இரேணு ரிஷி.

வேள்வியிலிருக்கின்ற சோமரசத்தின் பொருட்டு, அல்லது, அந்தரிக்ஷத்தில் இருக்கின்ற சோமரசத்தின் பொருட்டு, அன்னைப்புண்டாக்குகின்ற இருபத்தொன்று எண் கொண்ட கோக்கள், பால் முதலியவற்றை உண்மையாகக் கறக்கின்றன. அல்லது, பன்னிரண்டு மாதம், இருதுக்கள் ஐந்து, மூன்றுலகங்கள், இரவி என்னும் இந்த இருபத்தொன்று வகைகளால் எப்பசுக்களில் பாலை உண்டாக்குகின்றார்களோ, அக் கோக்களே பாலைக் கறக்கின்றன என்பதாம். அன்றியும், இச் சோமரசம் மற்றைய நான்கு வகையாகிய நீரை, அதாவது வசதீவரி மூன்று, ஏகதனு ஒன்று, என்னும் நான்கு வகையாகிய நீரைப் பரிசோதித்தற் பொருட்டு, அதாவது, பாதுகாத்தற் பொருட்டு, மங்கள வடிவமாகச் செய்கின்றன. எக்காலத்தில் இது வேள்விகளால் விருத்தியாயிற்றோ, அக்காலத்திற் செய்கின்றன என்பதுணர்க. (7)

## மந்திரம் 8.

१ २ ३ १२३ १२ ३ १ २र ३ १२ ३ २

561. इन्द्राय सोम सुषुतः परिस्रवापामीवा भवतु रक्षसा सह ।

२ ३ १२ ३ २ ३ १ २ ३ २ ३ १ २

मा ते रसस्य मत्सत द्वयाविनो द्रविणस्वन्त इह सन्त्विन्दवः ॥

இருக்கு 9-85-1.

ஐந்த்ராய ஸோம ஸுஷுத: பரிஸ்ரவாபாமீவா பவது
[ரக்ஷஸாஸஹ ।
மா தே ரஸஸ்ய மத்ஸத த்வயாவினோ த்ரவிணஸ்வந்த இஹ ஸந்த்விந்தவ:॥

அந்வயம்.

हे सोम!, सुषुतः, इन्द्राय, परिस्रव, रक्षसा सह, अमीवा, अप भवतु,
द्वयाविनः, ते, रसस्य, मा मत्सत, इन्दवः, इह, द्रविणस्वन्तः, सन्तु ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम!** | ஹே ஸோம! | சோமமே! |
| **सुषुतः** | ஸுஷுத: | இனிய முறையிற் பிழிந்தெடுக்கப் பெறும் இரசத்தை |
| **इन्द्राय** | இந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| **परिस्रव** | பரிஸ்ரவ | எல்லா வகையானும் ஒழுக விடுவாயாக. |
| **रक्षसा सह** | ரக்ஷஸா ஸஹ | இராக்கதர்களோடு |
| **अमीवा** | அமீவா | நோய்களும் |
| **अप भवतु** | அப பவது | நீங்குக. |
| **द्वयाविनः** | த்வயாவின: | பொய், மெய் என்னும் இரண்டு வகைகளையுடைய பாவிகள் |
| **ते** | தே | உன்னுடைய |
| **रसस्य** | ரஸஸ்ய | இரசத்தின் பாகத்தையுண்டு |
| **मामत्सत** | மாமத்ஸத | களிப்படையாதிருப்பார்களாக. |
| **इन्दवः** | இந்தவ: | உன்னுடைய ரசம் |
| **इह** | இஹ | இவ்வேள்வியில் |
| **द्रविणस्वन्तः सन्तु** | த்ரவிணஸ்வந்த: ஸந்து | என் பொருட்டுத் தனமுடைதாகுக. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—8. வேனுபார்க்கவ ரிஷி.

சோமமே! நீ, இனிது தரும் இரசத்தை இந்திரன்பொ வகையாய் வெளியாக்குவாயாக. உரோகங்கள் நீங்குக. இரசத்தினுடைய களிப்பை யடையாதார்களாகுக. (அவர் மானவர்களெனின்? பொய், மெய் இரண்டையுமுடைய ப பொருள். அன்றியும், உன்னுடைய இரசம் இவ்வேள்வியில டுத் தனமுடையதாகுக என்பதாம்.

## மந்திரம் 9.

१२३ १ २ ३२उ ३ २३ १२३ ३ २ ३१ २र
562. असावि सोमो अरुषो वृषा हरी राजेव दस्मो अभि गा अचिक्रदत्।
३ २उ ३ १ २ ३ १२ ३ १ २र ३१ २ ३ ३२
पुनानो वार*मत्येष्यव्ययँ श्येनो न योनिं घृतवन्त ‡मासदत् ॥

அஸாவி ஸோமோ அருஷோ வ்ருஷா ஹரீ ராஜேவ தஸ்மோ அபி
[கா அசிக்ரதத் |
புநாநோ வாரமத்யேஷ்யவ்யம் ஶ்யேநோ நயோநிம் க்ருதவந்த
[மாஸதத் ||

அந்வயம்

अरुषः, वृषा, हरिः, सोमः, असावि, राजा, इव, दस्मः, गा अभि, अचिक्रदत्, पुनानः, अव्यं वारं, अत्येषि, घृतवन्तं, योनिं, श्येनः न, आसदत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अरुषः | அருஷ: | மிக வொளியுடையதும் |
| वृषा | வ்ருஷா | விருப்பைப் பொழிவதும் |
| हरिः | ஹரி: | பசுமை நிறமுடையதுமாகிய |
| सोमः | ஸோம: | சோமரசம் |
| असावि | அஸாவி | தேடப்பெற்று |
| राजेव दस्मः | ராஜேவ தஸ்ம: | வேந்தன் போல் காணப்படுவதாய் |
| गा अभि | கா அபி | எல்லா வகையினும் நீரைக் குறியாக்கிக்கொண்டு |
| चिक्रदत् | அசிக்ரதத் | தனது இரசத்தைப் பிழியுங்கால் ஒலியிடுகின்றது. (பின்னர்) |
| | புநாந: | பவித்திரமாகிய |
| | அவ்யம் வாரம் | செம்மறியாட்டின் மயிராலாய கம்பளியைக் கொண்டு |
| | அத்யேஷி | வடிகட்டிதடுக்கப் படுகின்றது. (பின்னர்) |
| | க்ருதவந்தம் | நீர் மயமாகிய |
| | யோநிம் | தனது இடத்தை, |
| | ஶ்யேந: ந | பருந்துபோன்று |
| | ஆஸதத் | அடைகின்றது. |

*अत्येषि, ‡ आसदम्, என்பன இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—9. பரத்துவாச வசு ரிஷி.

சோமரசம் பிழியப் பெற்றது. எவ்வண்ணமாகிய சோமரசமெனின்? ஒளியுடையதும், விருப்பைப் பொழிவதும், பசுமை நிறத்ததுமாம். அத்தன்மைய சோமரசம் மன்னனைப்போற் காணத்தக்கதாயிருந்து, நீரைக் குறியாக வைத்துக் கொண்டு தனது இரசத்தை யெடுக்குங்கால் ஒலிக்கின்றது. பின்னர், பவித்திரமாகிய செம்மறியாட்டின் கம்பளியில் புநிதமாகின்றது. சோமரசமே! நீ, கடந்து செல்கின்றனை. பின்னர், பருந்தைப்போல் நீருடைய தனது இடத்தை யடைகின்றாய். அதாவது வசதிவரி என்னும் நீரிலிருக்கின்றாய் என்பது பொருள். (9)

## மந்திரம் 10.

२ ३२ ३ ३ १ २ ३ २ ३ १ २ ३ २३ २उ ३ १२

563. प्र देवमच्छा मधुमन्त इन्दवोऽसिष्यदन्त गाव आ न धेनवः ।

३ १ २ ३ १ २ ३ १२ ३१ २ ३१२ ३ १ २

बर्हिषदो *वचन वन्तः ऊधभिः परिस्रुतमुस्रिया निर्णिजं धिरे ॥

പ്ര ദേവമച്ഛാ മധുമന്ത ഇന്ദവോഽസിഷ്യദന്ത ഗാവ ആ ന ധേനവഃ ।
ബർഹിഷദോ വചനവന്ത ഊധഭിഃ പരിസ്രുതമുസ്രിയാ
[നിർണിജം ധിരേ ॥

அந்வயம்.

धेनवः, गावः, आ न, मधुमन्तः, इन्दवः, देवं अच्छ, प्रासिष्यदन्त, बर्हिषदः, वचनवन्तः, उस्रियाः, ऊधभिः, परिस्रुतं, निर्णिजं, धिरे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| धेनवः | ധേനവഃ | பாலினாற் பிரியப்படுத்துகின்ற |
| गावः | ഗാവഃ | கோக்கள் |
| आ न | ആ ന | தமது கன்றுகளைக்குறித்துப் பாலைப் பொழிகின்றன போன்று, |
| मधुमन्तः | മധുമന്തഃ | மதுர இரசமுடைய |
| इन्दवः | ഇന്ദവഃ | சோமரசம் |
| देवं अच्छ | ദേവം അച്ഛ | இந்திர தேவதையைக் குறித்து |
| प्रासिष्यदन्त | പ്രാസിഷ്യദന്ത | கிரக முதலிய பாத்திரங்களிற் சேர்கின்றது. |

* वचनावन्तः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| बर्हिषद: | ப ஹி ஷத³: | வேள்வியிலுள்ளவைகளும் |
| वचनवन्त: | வ அ நவந்த: | கதறுகின்றவைகளுமான |
| उस्रिया: | உஸ்ரியா: | கோக்கள் |
| ऊधभि: | ஊத⁴பி⁴: | பால் நிறைந்த மடிகளால் |
| परिस्रुतं | பரிஸ்ருதம் | நாற் புறமும் வழிகின்ற |
| निर्णिजं | நிர்ணிஜம் | பாலாகிய சோமரசத்தை |
| धिरे | தி⁴ரெ | இந்திரன் பொருட்டுத் தாங்குகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—10. வத்சப்பிரிய ரிஷி.

களிப்பைத் தரும் இரசத்தோடுகூடிய சோமம், இந்திரனைக் குறித்துப் பாத்திரங்களில் நிரம்புகின்றது. அதிலுவமை:—பாலால் அன்புசெய்கின்ற கோக்கள், கன்றுகளைக் குறித்துப் பாலையொழுகச் செய்வது போன்றெனல். அன்றியும், வேள்வியிலுள்ளவைகளும், கதறுகின்றவைகளுமான அத்தன்மைய கோக்கள். பால் தங்குகின்ற தமது மடிகளால் நாற்புறமும் வழிகின்ற பாலாகிய சோமரசத்தை இந்திரன்பொருட்டுத் தாங்குகின்றன என்பது பொருள். (10)

## மந்திரம் 11.

३ २२र २र ३ १ ३ १ २ ३क २ ३क२र
564. अञ्जते व्यञ्जते समञ्जते क्रतुं रिहन्ति * मध्वाभ्यञ्जते ।
१ २ ३ २ ३ १२ ३ १ २ ३ २
सिन्धोरुच्छ्वासे पतयन्तमुक्षणं हिरण्यपावाः
३ २३ १ २
§ पशुमप्सु गृणते ॥ ११ ॥

அஜ்ஜதெ வ்யஜ்ஜதெ ஸமஜ்ஜதெ க்ரதும் ரிஹந்தி மத்⁴வாப்⁴யஜ்ஜதெ ।
ஸிந்தோ⁴ருச்ச்²வாஸெ பதயந்தமுக்ஷணம் ஹிரண்யபாவா: பஶு
[மப்ஸு க்³ருணதெ ॥

அந்வயம்.

अञ्जते, व्यञ्जते, समञ्जते, क्रतुं, रिहन्ति, मध्वा, अभ्यञ्जते, सिन्धोः, उच्छ्वासे, पतयन्तं, उक्षणं, पशुं, हिरण्यपावाः, अप्सु, गृणते ॥

* मधुनाऽभ्यञ्जते, § पशुमासु, என்பன இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| अञ्जते | அஞ்ஜதே | வேட்போர்கள் சோமரத்தை ஆவின் பால் முதலிய வற்றுடன், கலக்கின்றார்கள். (மற்றும்) |
| व्यञ्जते | வ்யஞ்ஜதே | பலவகையாகக், கலக்கின்றார்கள். |
| समञ्जते | ஸமஞ்ஜதே | நன்முறையிற் கலக்கின்றார்கள். |
| क्रतुं | க்ரதும் | பயன்றருகின்ற சோமரசத்தைச் |
| रिहन्ति | ரிஹந்தி | (தேவர்கள்) சுவைக்கின்றார்கள். (பின்னர்) |
| मध्वा | மத்வா | பசுநெய் யோடு |
| अभ्यञ्जते | அப்யஞ்ஜதே | கலக்கின்றார்கள். (அச்சோமரசத்தையே) |
| सिन्धोः | ஸிந்தோ: | நீருக்குப் பற்றுக் கோடாகிய |
| उच्छ्वासे | உச்ச்வாஸே | உயர்ந்த இடத்தில் |
| पतयन्तं | பதயந்தம் | செல்லுகின்றதாவும் |
| उक्षणं | உக்ஷணம் | அநுபவிக்கத்தக்கதாவும் |
| पशुं | பசும் | காண்பதாவும் |
| हिरण्यपावाः | ஹிரண்யபாவா: | பொன்னாற் பவித்திரஞ்செய்கின்றவர்களான (வேட்போர்கள்) |
| अप्सु | அப்ஸு | வசதீவரியென்னும் நீரின்கண் |
| गृणते | க்ருணதே | கைக்கொள்கின்றார்கள் |

சாயண பாடியம்.

கண்டம்—9. இருக்கு—11. அத்திரி ரிஷி.

வேட்போர்கள், பசுவின் பால் முதலியவற்றுடன் சோமரசத்தைக் கலக்கின்றார்கள். அவ்வாறே, பலவகையாகக் கலக்கின்றார்கள். நன்கு கலக்கின்றார்கள். இரட்டித்தல் துதியின் பொருட்டாதலின் மிகைபடக் கூறலென்னுந் தோடமாகா. அங்ஙனமே, பயனைத் தருஞ் சோமரசத்தை, தேவர்கள் சுவைக்கின்றார்கள். மீண்டும் நெய்யுடன் கலக்கின்றார்கள். இரசத்திற்குப் பற்றுக் கோடாகிய உயர்ந்த இடத்தில் போகப்படுவதாகவும், பார்க்கின்றதாகவும், பொன்னாற் பவித்திரஞ் செய்கின்றவர்களான வேட்போர்கள் அச் சோமத்தையே ஏற்றுக்கொள்கின்றார்கள் என்பதாம். (11)

மந்திரம் 12.

३ १ २ ३ १ २ ३ १ २र ३ १ २ ३ १२
565. पवित्रं ते विततं ब्रह्मणस्पते प्रभुर्गात्राणि पर्येषि विश्वतः ।
१ २ ३२उ ३ १ २ ३ २ ३ १२र ३ १ २र
अतप्ततनूर्न तदामो अश्नुते श्रृतास इद्वहन्तः *सं तदाशत ॥

இருக்கு 9-83-1.

வவித்ரம் தெ விததம் ப்ரஹ்மணஸ்வதெ ப்ரபுர்காத்ராணி
[வயெஷி விஸ்வதঃ ।
அதப்ததநூர்ந தஆமொ அஸ்நுதெ ஸ்ருதாஸ இத்வஹந்தঃ ஸம்
[தஆஸத ॥

அந்வயம்.

ब्रह्मणस्पते! पवित्रं, ते, विततं, प्रभुः, गात्राणि, पर्येषि, विश्वतः, अतप्ततनूः, आमः, नाश्नुते, श्रृतासः इत्, वहन्तः, तत्, समाशत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे ब्रह्मणस्पते ! | ஹெ ப்ரஹ்மணஸ்வதெ ! | மந்திரங்கட்கிறையாகிய சோமமே ! |
| पवित्रम् | வவித்ரம் | புனிதமாகிய |
| ते | தெ | உன்னுடைய அங்கம் |
| विततं | விததம் | யாண்டும் பரவியது. |
| प्रभुः | ப்ரபுঃ | ஆற்றலுடைய நீ |
| गात्राणि | காத்ராணி | அருந்துவோர்களின் அங்கத்தை |
| पर्येषि | வயெஷி | அடைகின்றாய். |
| विश्वतः | விஸ்வதঃ | எல்லா வகையானும் |
| अतप्ततनूः | அதப்ததநூঃ | விரத முதலியவைகளால் வாட்டமற்றதாய் |
| आमः | ஆமঃ | பக்குவமற்ற அங்கத்தை (உனது அவயவம்) |
| नाश्नुते | நாஸ்நுதெ | வியாபிப்பதில்லை. |
| श्रृतास इत् | ஸ்ருதாஸ இத் | பக்குவமாகியே |
| वहन्तः | வஹந்தঃ | வேள்வியைத் தாங்குவதாய் |
| तत् | தத் | பவித்திரமாகிய அப்பாத்திரத்தில் |
| समाशत | ஸமாஸத | நிறைகின்றது. |

* तत्समाशत, என்பது இருக்கு.

சாயணபாடியம்.

கண்டம்—9. இருக்கு—12. பவித்திர ரிஷி.

மந்திரங்கட்கிறைவனாகிய சோமமே! உன்னுடைய அழகிய அங்கம், யாண்டும் நிறைந்திருக்கின்றது. இனிது உண்டாக்கப்பெற்ற அத்தகைய நீ அருந்துவோருடைய அங்கங்களை யடைகின்றாய். எல்லா வகையானும் பவித்திரமாகியதும், விரத முதலியவைகளா லெரிக்கப்படாததுமாகியதை உன்னுடைய அங்கம் பரிபக்குவமிலாததாதலின் வியாபிக்கின்றதில்லை பரிபக்குவமாகியே வேள்வியைத் தாங்குகின்றது. மற்றும், பவித்திரமென்னும் பாத்திரத்திலும் நிறைகின்றது. (12)

## ஒன்பதாவது கண்டம்

முற்றும்.

---

## பத்தாவது கண்டம்.

---

### பிரபாடகம்—6. அத்தியாயம்—5. கண்டம்—10.

பன்னிரண்டு மந்திரங்களாலானது.

---

இந்திரன் - தேவதை. உஷ்ணிக் - சந்தம். ரிஷபம் - சுரம்.

மந்திரம் 1.

२ ३१ ३ ३ २ ३१ २र ३ १२
566. इन्द्रमच्छ सुता इमे वृषणं यन्तु हरयः ।
३२ ३ २३१२ ३१२
* श्रुष्टे जातास इन्दवः स्वर्विदः ॥ १ ॥

இருக்கு 9-58-1.

இந்த்³ரமச்ச² ஸுதா இமே வ்ருஷணம் யந்து ஹரய꞉ ।
ஶ்ருஷ்டே ஜாதாஸ இந்த³வ꞉ ஸ்வர்வித³꞉ ॥

அந்வயம்.

श्रुष्टे, जातासः, इन्दवः, स्वर्विदः, हरयः, सुताः, इमे, वृषणं इन्द्रं, अच्छ यन्तु ॥

---

* श्रुष्टी जातास, என்பது இருக்கு.

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **ध्रुहे** | ஶ்ருஷெ | விரைவில் |
| **जातास:** | ஜாதாஸ: | தேடப்பெற்றதும் |
| **इन्दव:** | இந்தவ: | பாத்திரத்திற் பொங்குகின்றதும் |
| **स्वर्विद:** | ஸ்வவிஂத: | எல்லாமுணர்ந்ததும் |
| **हरय:** | ஹரய: | பசுமை நிறமுடையதும், |
| **सुता:** | ஸுதா: | பிழியப்பட்டதுமாகிய |
| **इमे** | இமெ | இச் சோமரசம் |
| **वृषणं इन्द्रं** | வ்ருஷணம் இந்த்ரம் | விருப்பியதைப் பொழிகின்ற இந்திரனை |
| **अच्छ यन्तु** | அச்ச யந்து | இனிதடைகுக. |

### சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—1. அக்கினிச்சாக்ஷுஷ ரிஷி.

துரிதமாய்த் தேடப்பட்டதும், பாத்திரத்திற் பொங்குகின்றதும், எல்லா முணர்ந்ததும், பசுமை நிறமுடையதும், பிழியப்பட்டதுமான இச் சோமரசம், வேண்டியவைகளைப் பெய்கின்ற இந்திரனை இனிதடைகுக என்பதாம். (1)

## மந்திரம் 2.

१ २ ३ १ २ ३ २ ३ १ २

567. **प्र धन्वा सोम जागृविरिन्द्रायेन्दो परिस्रव ।**

३ २ ३ २ ३ १ २ ३१ २

**द्युमन्तꣳ शुष्ममाभर स्वर्विदम् ॥ २ ॥**

இருக்கு 9-106-4.

ப்ர யந்வா ஸோம ஜாக்ருவிரிந்த்ராயெந்தோ பரிஸ்ரவ |
த்யுமந்தம் ஶுஷ்மமாபர ஸ்வர்விதம் ||

### அந்வயம்.

हे सोम !, जागृविः, प्रधन्व, इन्दो !, इन्द्राय, परिस्रव, द्युमन्तं, स्वर्विदं, शुष्मं, आभर ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम!** | ஹெ ஸோம! | சோமரசமே! |
| **जागृविः** | ஜாக்ருவி: | நனவோடிருக்கின்ற நீ |
| **प्रधन्व** | ப்ரயந்வ | பாத்திரத்தையடைவாயாக, |

| | | |
|---|---|---|
| इन्दो ! | ஐந்தோ ! | சோமமே! நீ |
| इन्द्राय | ஐந்த்ராய | இந்திரன் பொருட்டு |
| परिस्रव | பரிஸ்ரவ | பாத்திரத்தில் நாற்புறமும் வழிவாயாக. (மற்றும்) |
| द्युमन्तं | த்யுமந்தம் | பிரகாசிக்கின்றதும் |
| स्वर्विदं | ஸ்வர்விதம் | சுவர்க்கத்தையடைவிப்பதும் |
| शुष्मं | ஶுஷ்மம் | பகைவரைக் காய்வதுமாகிய ஆற்றலையும் |
| आभर | ஆபர | கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—2. சட்சுமானவ ரிஷி.

சோமரசமே! நனவுடனிருக்குஞ் சீலமுடைய நீ (கலசத்தில்) நிரம்புவாயாக. சோமமே! நீ இந்திரன் பொருட்டுப் பாத்திரங்களில் நாற்புறமும் வழிவாயாக. அன்றியும், விளங்குவதும், சுவர்க்கத்தையடைவிப்பதும், சத்துருவைக் காயத்தக்கதுமாகிய ஆற்றலைக் கொடுப்பாயாக என்பதாம்.

மந்திரம் 3.

१ २ ३ १ २र ३ २ ३ १ २
568. सखाय आ निषीदत पुनानाय प्रगायत ।
२ ३ २ ३ १ २र ३ २
शिशुं न यज्ञैः परिभूषत श्रिये ॥ ३ ॥

இருக்கு 9-104-1.

ஸகாய ஆ நிஷீதத புநாநாய ப்ரகாயத ।
ஶிஶும் ந யஜ்ஞை: பரிபூஷத ஶ்ரியே ॥

அந்வயம்.

हे सखायः!, आ निषीदत, पुनानाय, प्रगायत, शिशुं न, श्रिये, यज्ञैः, परिभूषत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः! | ஹே ஸகாய: ! | நண்பர்களான துதிப்போர்களே! நீவிர் |
| आ निषीदत | ஆ நிஷீதத | துதிப்பதற்கு உட்கார்வீர்களாக. |
| पुनानाय | புநாநாய | பவித்திரம் பண்ணப்பெற்ற சோமரசத்தின் பொருட்டு |
| प्रगायत | ப்ரகாயத | இனிது சாம கானஞ் செய்வீர்களாக. |

| | | |
|---|---|---|
| शिशुं न | ஶிஶும் ந | குழந்தையை அலங்கரிப்பது போல் (இச்சோமத்தை) |
| श्रिये | ஶ்ரியெ | அழகின் பொருட்டு |
| यज्ञैः | யஜ்ஞை: | வேள்வி செய்தற்குரிய அவிகளால் |
| परि भूषत | பரி பூஷத | அலங்கரிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—3. பர்வதர், நாரதர் ரிஷிகள்.

நண்பர்களான துதிப்போர்காள்! வேட்போர்காள்! நீவிர், தோத்திரஞ் செய்தற் பொருட்டு உட்காருவீர்களாக. பின்னர், பவித்திரம் பண்ணப்பட்ட சோமரசத்தைத் துதிப்பீர்களாக. அதை யேத்துமின் என்பதாம். பின்னர், பிழியப்பெற்ற சோமரசத்தை, அழகின் பொருட்டுப் பலவகையாய் அலங்கரிப்பீர்களாக. அதினுவமை:—பிதா குழந்தையை அணிகளால் அலங்கரிப்பது போன்றெனல். (3)

மந்திரம் 4.

१ २ ३ १ २ ३ २३ १ २
569. तं वः सखायो मदाय पुनानमभिगायत ।
२ ३ २ ३ १ २ ३ १ २
शिशुं न *हव्यैः स्वदयन्त गूर्तिभिः ॥ ४ ॥

இருக்கு 9-105-1.

தம் வ: ஸகாயொ மதாய புநாநமபிகாயத ।
ஶிஶும் ந ஹவ்யை: ஸ்வதயந்த கூர்திபி: ॥

அந்வயம்.

हे सखायः!, वः, मदाय, पुनानं, तं, अभिगायत, शिशुं न, हव्यैः, गूर्तिभिः, स्वदयन्त ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सखायः! | ஹெ ஸகாய:! | நண்பர்களான வேட்போர்காள்! |
| वः | வ: | நீவிர் |
| मदाय | மதாய | தேவர்களுடைய களிப்பின் பொருட்டுத் |
| पुनानं | புநாநம் | தேடப்பெற்ற |
| तं | தம் | அச்சோமரசத்தைத் |

* यज्ञैः, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| अभिगायत | அபிகாயத | துதிப்பீர்களாக. (மற்றும்) |
| शिशुं न | ஶிஶும் ந | பால் முதலியவைகளாலும், அணிகளாலும், குழந்தையை அலங்கரிப்பது போல் |
| हव्यैः | ஹவ்யை: | அவி (தேவவுணவு) களாலும் |
| गूर्तिभिः | கூர்திபி: | தோத்திரங்களாலும் |
| स्वदयन्त | ஸ்வதயந்த | அலங்கரிப்பீர்களாக. (இன்சுவையையுண்டாக்குவீர்களாக.) |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—4. பருவதர், நாரர், ரிஷிகள்.

நண்பர்களான வேட்போர்காள்! நீவிர், தேவர்களுடைய களிப்பின் பொருட்டுப் பவித்திரமாக்கிய அச்சோமரசத்தைத் துதிப்பீர்களாக. மற்றும், பால் முதலியவைகளாலும், அணி முதலியவைகளாலும் குழந்தையை அலங்கரிக்குமாறு, அவிகளோடு கூடின தோத்திரங்களால் அச் சோமரசத்தை அலங்கரிப்பீர்களாக. அதாவது இன்சுவையுடையதாகச் செய்வீர்களாக என்பதாம். (4)

மந்திரம் 5.

३ १ २र ३ १ २ ३ २ ३ २३ १ २

570. *प्राणा शिशुर्महीनां हिन्वन्नृतस्य दीधितिम् ।

२ ३ १ २ ३ १ २३ १२ ३ २

विश्वा परि प्रियाभुव दधद्विता ॥ ५ ॥

இருக்கு 9-109-1.

ப்ராணா ஶிஶுர்மஹீநாம் ஹிந்வந்ந்ருதஸ்ய தீதிதிம் ।
விஶ்வா பரிப்ரியா புவ ததத்விதா ॥

அந்வயம்.

प्राणा, महीनां, (अपां,) शिशुः, ऋतस्य, दीधितिं, हिन्वन्, विश्वा, प्रिया, परिभुवत्, द्विता ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| प्राणा | ப்ராணா | வேள்வி செய் (விக்) கின்றதும் |
| महीनां | மஹீநாம் | பூசிக்கத்தக்கதும் |
| (अपां) | (அபாம்) | (நீரினுடைய) |

* ऋाणा, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| शिशुः | ஶிஶு꞉ | குழந்தை போன்றது மாகிய சோமரசம் |
| दीधितिं | தீ₃தி₄திம் | விளங்குகின்ற தனது இரசத்தை |
| ऋतस्य | ருதஸ்ய | வேள்வியின் சம்பந்தமாய்ச் |
| हिन्वन् | ஹின்வன் | செலுத்தி |
| विश्वा प्रिया | விஶ்வா ப்ரியா | அன்புள்ள எல்லா அவிகளையும் |
| परिभुवत् | பரிபு₄வத் | நிறையச் செய்கின்றது.(மற்றும்) |
| द्विता | த்₃விதா | வானுலக மண்ணுலகிரண்டி னிடத்து மிருக்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—5. திரிதி ரிஷி.

வேள்வி செய்கின்றதும், மகத்தாகியதும், அல்லது, பூசிக்கத்தக்கதும் தண்ணீரினுடைய குழந்தை யெனப்படுவதுமாகிய சோமரசம், வேள்வியின் சம்பந்தமாய் விளங்குகின்ற, அல்லது, பிரகாசிக்கின்ற தனது இரசத்தைத் தொழிற்படுத்தி, பிரியமுள்ள அவிகளனைத்தையுஞ் சூழ்ந்து நிறையச் செய்கின்றது. அன்றியும், இருவகையாயுள்ளது. அதாவது வானுலகு மண்ணுலகிரண்டினு மிருக்கின்றது என்பதாம். சோமக் கொடி வளருங்கால் பச்சை நிறமுடையதாகவும், முதிர்ந்தவுடன் மஞ்சள் நிறமுடையதாகவும் இருக்கும் என்பதுங்காண்க. (5)

## மந்திரம் 6.

१२ ३ १ २ ३ २ ३ १२ ३ १ २
571. पवस्व देववीतय इन्दो धाराभिरोजसा ।
२ ३२ ३ १२
आ कलशं मधुमान्त्सोम नः सदः ॥ ६ ॥

இருக்கு 9-106-7.

பவஸ்வ தே₃வவீதய இந்தோ₃ தா₄ராபி₄ரோஜஸா ।

ஆ கலஶம் மது₄மான்த்ஸோம ந꞉ ஸத₃꞉ ॥

அந்வயம்.

हे इन्दो !, देववीतये, ओजसा, धाराभिः, पवस्व, सोम !, मधुमान्, नः, कलशं आसदः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्दो! | ஹெ ஊடுொ! | சோமரசமே! நீ |
| देववीतये | தெவவீதயெ | தேவர்களருந்துதற் பொருட்டு |
| ओजसा | ஓஜஸா | ஆற்றலோடு |
| धाराभिः | யாராலிஃ | தனது தாரைகளால் |
| पवस्व | வவஸ் | பாத்திரத்தில் நிரம்பு வாயாக. |
| सोम! | ஸொச! | (மற்றும்) சோமரசமே! |
| मधुमान् | சயுசாநு | மதுர இரசத்தோடு கூடிய நீ |
| नः | நஃ | எங்களுடைய |
| कलशं आसदः | கலுமம் ஆஸ்தஃ | துரோண கலசத்திலிருப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—6. மநு ரிஷி.

சோமரசமே! நீ, தேவர்களருந்துதற் பொருட்டு ஆற்றலோடு தனது தாரைகளால் நிரம்புவாயாக. சோமரசமே! களிப்பைத்தருகின்ற இரசத்தோடு கூடிய நீ, எங்களுடைய துரோண கலசத்தில் அமர்ந்திருப்பாயாக.

## மந்திரம் 7.

१२ ३२ ३२उ ३ २३ १ २
572. सोमः पुनान ऊर्मिणा*व्यं वारं वि धावति ।
१२ ३ १ २र ३ १ २
अग्रे वाचः पवमानः कनिक्रदत् ॥ ७ ॥

இருக்கு 9-106-10.

ஸொசஃ வுநாந ஊமிணாவ்யம் வாரம் வி யாவதி ।
அ஗்ரெ வாசஃ வவசாநஃ கநிக்ரதத் ॥

அந்வயம்.

पवमानः, वाचः अग्रे, कनिक्रदत्, पुनानः, सोमः, ऊर्मिणा, अव्यं वारं विधावति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पवमानः | வவசாநஃ | பவித்திரமாகிய |
| वाचः अग्रे | வாசஃ அக்ரெ | தோத்திரத்திற்கு முன்னர் |
| कनिक्रदत् | கநிக்ரதத் | மீண்டும் மீண்டும் ஒலித்துக் கொண்டு |

* अव्यो वारम्, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| पुनानः | புநாநஃ | பிழியப்பெற்ற |
| सोमः | ஸோமஃ | சோமரசம், |
| ऊर्मिणा | ஊர்மிணா | தனது தாரையால் |
| अव्यं वारं | அவ்யம் வாரம் | மயிர்க் கம்பளியைப் |
| विधावति | வியாவதி | பலவகையாய்க் கடந்து செல்கின்றது. |

சாயணபாடியம்.

கண்டம்—10. இருக்கு—7. அக்கினி ரிஷி.

பவித்திரம் பண்ணப்பெற்ற சோமரசம், தனது தாரையால் செம்மறியாட்டின் மயிராலாய கம்பளியினின்று பலவகையாகச் செல்கின்றது. எவ்வண்ணமாகிய தெனின்? பவித்திரமாகிய தோத்திரத்தின் முன்பில் மீண்டும் மீண்டு மொலித்துக் கொண்டு நன்கு செல்கின்ற தன்மையதாம். (7)

மந்திரம் 8.

१ २ ३ १२ ३ २३ १ २३ १२

573. प्र पुनानाय वेधसे सोमाय *वच उच्यतें ।

३ १ २२ ३ १ २ ३ १२

भृतिं न भरा मतिभिर्जुजोषते ॥ ८ ॥

இருக்கு 9-93-1.

ப்ர புநாநாய வேயஸே ஸோமாய வச உச்யதே ।

ப்ருதிம் ந பரா மதிபிர்ஜுஜோஷதே ॥

அந்வயம்.

पुनानाय, वेधसे, सोमाय, वचः, प्रोच्यते, मतिभिः, जुजोषते, भृतिं न, प्रभर ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पुनानाय | புநாநாய | (இது துதிப்போன் தன் பொருட்டுச் சொல்லிக்கொள்வது) பவித்திரமாகிய கம்பளியாற் சுத்தம் பண்ணப்பட்டதும் |
| वेधसे | வேயஸே | கருமத்தை நன்கு தாங்குவதுமாகிய |
| सोमाय | ஸோமாய | சோமரசத்தின் பொருட்டுத் |
| वचः | வசஃ | தோத்திரத்தைச் |
| प्रोच्यते | ப்ரோச்யதே | சொல்வாயாக. மற்றும், |

* वच उच्यतम्, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| मतिभिः | மதிபி⁴: | தோத்திரங்களால் |
| जुजोषते | ஜுஜோஷதே | களிப்படைவதின் பொருட்டு |
| भृतिं न | ப்⁴ருதிம் ந | அடிமைக்குத் தனத்தைக் கொடுப்பது போன்று. |
| प्रभर | ப்ரப⁴ர | மிகுந்த துதிகளைக் கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—8. துவிதோ, என்னும் ரிஷி.

இவ்விருடி, தன தான்மாவைக் குறித்துச் சொல்கின்றார்:-பவித்திரத்தா (கம்பளியா) ற் சுத்தம் பண்ணப்பட்டதும், கருமத்தைச் சிறப்புடன் ஏற்றுக் கொள்வதுமாகிய சோமரசத்தின் பொருட்டு, உன்னால் தோத்திரஞ் சொலற்பாலதாம், அன்றியும், தோத்திரங்களாற் பிரியமடைவதின் பொருட்டு மிக நன்கு துதிப்பாயாக. அதிலுவமை;—அடிமையின் பொருட்டுத் திரவிய மளிப்பது போன்றெனல். (8)

## மந்திரம் 9.

१२ ३ १२ ३१ २
574. गोमन्न इन्दो अश्ववत्सुतः सुदक्ष *धनिव ।
१ २ ३ २ ३२ ३ १२
†शुचिं च वर्णमधि ‡गोषु धारय ॥ ९ ॥

இருக்கு 9-97-52.

கோ³மந்ந இந்தோ³ அஶ்வவத்ஸுத: ஸுத³க்ஷ த⁴நிவ ।
ஶுசிம் ச வர்ணமதி⁴ கோ³ஷு தா⁴ரய ॥

அங்வயம்.

हे सुदक्ष !, इन्दो !, सुतः, गोमत्, अश्ववत्, नः, धनिव, शुचिं, वर्णं, गोषु, अधिधारय ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सुदक्ष ! | ஹே ஸுத³க்ஷ ! | பேராற்றலுடைய |
| इन्दो ! | இந்தோ³ ! | சோமரசமே ! |
| सुतः | ஸுத: | நன்கு பிழியப்பட்ட நீ |
| गोमत् | கோ³மத் | கோக்களுடனும் |

* धन्म, † शुचिते, ‡ गोषुदोधरम्, என்பன இருக்கு.

| | | |
|---|---|---|
| अश्ववत् | அஶ்வவத் | குதிரைகளோடும் |
| नः | நஃ | எங்கட்குத் |
| धनिव | யநிவ | தனத்தைக் கொடுப்பாயாக. (பின்னர்) |
| शुचिं | ஶுசிம் | பவித்திரமான, அல்லது, விளங்கப்பட்ட |
| वर्णं | வர்ணம் | நிறத்தையும் இரசத்தையும் |
| गोषु | கோஷு | ஆவின் பாலில் |
| अधि धारय | அதி தாரய | உனக்கு நன்கு அடைவிப்பேன். |

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—9. பருவதர், நாரதர் ரிஷிகள்.

போராற்றலுள்ள சோமரசமே! இனிது பிழிந்தெடுக்கப்பட்ட நீ, வேள்விக்குச் சாதனமாகிய கோக்களோடு திரவியத்தையும் எங்கட்குக் கொடுப்பாயாக. குதிரையையுங் கொடுப்பாயாக. பின்னர், யான் பவித்திரமானதும், விளங்கப்படுவதுமாகிய உனது இரசத்தையும் நிறத்தையும் ஆவின் பால் முதலியுவற்றில் நீ பெற்றுக் கொள்ளும்படி செய்வேன் என்பதாம். (9)

## மந்திரம் 10.

३ १ २ ३१२ ३ १ २र

575. अस्मभ्यं त्वा वसुविदमभि वाणी रनूषत ।

१ २ ३ १ २ ३ १ २

गोभिष्टे वर्णमभि वासयामसि ॥ १० ॥

இருக்கு—9-104-4.

அஸ்மப்யம் த்வா வஸுவிதமபி வாணீ ரநூஷத ।
கோபிஷ்டே வர்ணமபி வாஸயாமஸி ॥

அந்வயம்.

हे सोम!, वसुविदं, त्वा, अस्मभ्यं, वाणीः, अभ्यनूषत, ते वर्णं, गोभिः, अभि वासयामसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम ! | ஹே ஸோம ! | சோமமே ! |
| वसुविदं | வஸுவிதம் | தனத்தைக் கொடுக்கின்ற |
| त्वा | த்வாம் | நின்னையே |
| अस्मभ्यं | அஸ்மப்யம் | எங்கட்குத் தனமுதலியவைகள் கொடுத்தற் பொருட்டு |

| | | |
|---|---|---|
| वाणीः | வாணீ: | எமது வாக்குகள் |
| अभ्यनूषत | அப்யநூஷத | துதிக்கின்றன.(மற்றும்,யாங்கள்) |
| ते वर्णं | தே வர்ணம் | உனது இரசத்தை |
| गोभिः | கோபி: | ஆவின் பால் முதலியவைகளால் |
| अभिवासयामसि | அபிவாஸயாமஸி | நாற்புறத்தும் மறைக்கின்றோம். |

சாயணய பாடிம்.

கண்டம்—10. இருக்கு—10. பருவதர், நாரதர் ரிஷிகள்.

சோமமே! எங்கட்குத் தனமுதலியவைகளைக் கொடுத்தற் பொருட்டு எங்களுடைய வாக்குகள் கொடையாளியாகிய உன்னை இனிது துதிக்கின்றன. உன்னுடைய இரசத்தை, கோக்களின் பால் முதலியவைகளால் யாம் முழுதுமறைக்கின்றோம் என்பதாம். (10)

## மந்திரம் 11.

१२ ३२उ १२ ३१२

576, पवते हर्य्यतो हरिरतिह्वरांसि रंह्या ।

३क २र ३१ २र ३२३१२

* अभ्यर्ष स्तोतृभ्यो वीरवद्यशः ॥ ११ ॥

இருக்கு—9-106-4.

பவதே ஹர்யதோ ஹரிரதிஹ்வராம்ஸி ரம்ஹ்யா ।
அப்யர்ஷ ஸ்தோத்ருப்யோ வீரவத்யச: ‖

அந்வயம்.

हर्य्यतः, हरिः, रंह्या, ह्वरांसि, अतिपवते, वीरवत्, यशः, स्तोतृभ्यः, अभ्यर्ष॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हर्य्यतः | ஹர்யத: | விரும்புதற்குரியதும் |
| हरिः | ஹரி: | பசுமை நிறமுடையதுமாகிய சோமரசம் . |
| रंह्या | ரம்ஹ்யா | மிகுந்த வேகத்தால் |
| ह्वरांसि | ஹ்வராம்ஸி | (கயிறுய்) வளைந்த கம்பளியிற் சென்று |
| अतिपवते | அதிபவதே | புநிதமாக்கப்படுகின்றது. (பிரத்தியட்சம்) சோமமே! நீ |
| वीरवत् | வீரவத் | புத்திரனேடு |

* अभ्यर्षत, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| **यशः** | யஶঃ | கீர்த்தியையும் |
| **स्तोतृभ्यः** | ஸ்தோத்ருப்ய: | துதிப்பவர்கட்குக் |
| **अभ्यर्ष** | அப்யர்ஷ | கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

**கண்டம்**—10. இருக்கு—11. அக்கினிச்சாட்சுஷ ரிஷி.

வேட்கத்தக்க பசுமை நிறமுடையச் அச் சோமரசம், வளைவுபட்ட பவித்திரமாகிய கம்பளியில் மிக வேகமாய் சென்று வெளியேறிச் செல்கின்றது. இனிப், பிரத்தியட்சமாகிய துதி. சோமரசமே! நீ, துதிப் போர்கட்கு புத்திரனோடு கீர்த்தியையுங் கொடுப்பாயாக என்பதாம். (11)

## மந்திரம் 12.

२३ १ २ ३ २३ १ २ ३ १ २
577. परि कोशं मधुश्चुतꣳ सोमः पुनानो अर्षति ।
३ २र ३ १ २ ३ १ २
अभि वाणीर्ऋषीणाꣳ *सप्तानूषत ॥ १२ ॥

இருக்கு—9-103-3.

பரி கோஶம் மதுஶ்சுதம் ஸோம: புநாநோ அர்ஷதி |
அபி வாணீர்ருஷீணாம் ஸப்தாநூஷத ||

அந்வயம்.

पुनानः, सोमः, मधुश्चुतं, कोशं परि अर्षति, ऋषीणां, सप्त वाणीः, अभ्यनूषत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **पुनानः** | புநாந: | பவித்திரம் பண்ணப்பெற்ற |
| **सोमः** | ஸோம: | சோமம் |
| **मधुश्चुतं** | மதுஶ்சுதம் | இன்சுவை மலிந்த தனது இரசத்தை |
| **कोशं परि अर्षति** | கோஶம் பரி அர்ஷதி | கலசத்திற் சேர்ப்பிக்கின்றது. |
| **ऋषीणां** | ருஷீணாம் | இருடிகளின் |
| **सप्त वाणीः** | ஸப்த வாணீ: | எழிசைகொண்ட வாக்குகள் |
| **अभ्यनूषत** | அப்யநூஷத | (இச்சோமத்தை) துதிக்கின்றன. |

* सप्तनूषत, என்பது இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—10. இருக்கு—12. துவித ரிஷி.

பவித்திரமாகிய அச் சோமரசம், மதுர ரசம் மலிந்த தனது இரசத்தைத் துரோண கலசத்திற் சேர்ப்பிக்கின்றது. இருடிகளினுடைய ஏழிசை கொண்ட வாக்குகள் அச்சோமரசத்தைத் துதிக்கின்றன. (12)

## பத்தாவது கண்டம்

முற்றும்.

---

## பதினோராவது கண்டம்

பிரபாடகம்—6. அத்தியாயம் 5. கண்டம்—5.

எட்டு மந்திரங்களாலானது.

பவமானம் (சோமம்) தேவதை. சந்தம். 1, 4, 6, ககுப் யவமத்யா காயத்திரி. 7, 8, பிரகாதம். சுரம், 1, 4, 6, ரிஷபம். 5, ஷட்சம், 7, 8, மத்தியமம்.

### மந்திரம் 1.

१२ ३ १२ ३ १ २ ३ १२ ३ १२
578. पवस्व मधुमत्तम इन्द्राय सोम क्रतुवित्तमो मदः ।
१ २ ३ १२ ३ ३१
महि द्युक्षतमो मदः ॥ १ ॥

இருக்கு 9-108-1.

𑌪𑌵𑌸𑍍𑌵 𑌮𑌧𑍁𑌮𑌤𑍍𑌤𑌮 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌸𑍋𑌮 𑌕𑍍𑌰𑌤𑍁𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑍋 𑌮𑌦𑌃 ।
𑌮𑌹𑌿 𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌷𑌤𑌮𑍋 𑌮𑌦𑌃 ॥

அந்வயம்.

हे सोम !, मधुमत्तमः, क्रतुवित्तमः, महि, द्युक्षतमः, मदः, इन्द्राय, मदः, पवस्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम ! | 𑌹𑍇 𑌸𑍋𑌮 ! | சோமரசமே ! |
| मधुमत्तमः | 𑌮𑌧𑍁𑌮𑌤𑍍𑌤𑌮𑌃 | மிக மதுரத்தன்மையுடையதும் |
| क्रतुवित्तमः | 𑌕𑍍𑌰𑌤𑍁𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌃 | கருமத்தை, அல்லது, நுண்ணறிவைக்கொடுப்பதும் |
| महि | 𑌮𑌹𑌿 | ஆராதித்தற்குரியதும் |
| द्युक्षतमः | 𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌷𑌤𑌮𑌃 | மிகப் பிரகாசிப்பதும் |
| मदः | 𑌮𑌦𑌃 | களிப்பைத் தருவதுமாகிய நீ |
| इन्द्राय | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 | இந்திரன் பொருட்டுக் |
| मदः | 𑌮𑌦𑌃 | களிப்பைக் கொடுப்பதாய் |
| पवस्व | 𑌪𑌵𑌸𑍍𑌵 | நிரம்புவயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—1. கௌரவீதி ரிஷி.

சோமரசமே! மிகச் சிறந்த மதுரத் தன்மையோடு கூடிய நீ, இந்திரனுக்குக் களிப்பைக் கொடுப்பதாகி நிரம்புவாயாக. எவ்வண்ணமாகிய மதுரத் தன்மையெனின்? மிகுந்த கருமத்தையுடையதும், அல்லது, மிக்க நுண்ணறிவை யடைவிப்பதும், மகத்தானதும், அல்லது, ஆராதித்தற்குரியதும், மிகப்பிரகாசிப்பதும், மிகுந்த களிப்புடையதுமாம் என்பதாம். (1)

மந்திரம் 2.

579. अभिद्युम्नं बृहद्यश इषस्पते दीदिहि देव *देवयुम् ।
वि कोशं मध्यमं युव ॥ २ ॥

இருக்கு—9-108-9.

𑌅𑌭𑌿𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌂 𑌬𑍃𑌹𑌦𑍍𑌯𑌶 𑌇𑌷𑌸𑍍𑌪𑌤𑍇 𑌦𑍀𑌦𑌿𑌹𑌿 𑌦𑍇𑌵 𑌦𑍇𑌵𑌯𑍁𑌮𑍍 ।
𑌵𑌿 𑌕𑍋𑌶𑌂 𑌮𑌧𑍍𑌯𑌮𑌂 𑌯𑍁𑌵 ॥

அந்வயம்.

इषस्पते देव !, देवयुं द्युम्नं, बृहत्, यशः, अभि दीदिहि, मध्यमं, कोशं, वियुव ॥

* देवयुः, என்பது இருக்கு.

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इषस्पते ! | ஹெ ஊஷஸ்பதெ ! | அன்னத்திற் கிறைவ ! |
| देव ! | தெவ ! | ஏற்றுதற்குரிய சோமமே ! |
| देवयुं | தெவயும் | தேவர்களடைதற்குரிய வுன்னை யான் துதிக்கின்றேன். (நீ எனக்கு) |
| द्युम्नं | த்யும்நம் | விளங்குவதும் |
| बृहत् | ப்ருஹத் | மிகுந்ததுமாகிய |
| यशः | யஶः | அன்னத்தை |
| अभिदीदिहि | அபிதீதிஹி | ஒருமுகமாய்க் கொடுப்பாயாக. |
| मध्यमं | மத்யமம் | வானிலுள்ள |
| कोशं | கொஶம் | மேகத்தை |
| वियुव | வியுவ | மழையின் பொருட்டுச் சின்ன பின்ன மாக்குவாயாக |

### சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—2. ஊர்த்துவசத்மா ரிஷி.

அன்னத்திற்கிறைவ! துதித்தற்குரிய சோமரசமே! தேவர்களால் விரும்பப்படு முன்னை நாங்கள் துதிக்கின்றோம். ஈண்டுத் துதிக்கின்றோம் என்பது எஞ்சி நின்றது. மிகவிளங்குவதும், பெரிதும், மிகுந்தது மாகிய அன்னத்தை, ஒரு முகப்பட்டு எங்கட்கு நீ இனிது கொடுப்பாயாக. மற்றும், அந்தரிக்ஷத்திலுள்ள மேகத்தை மழையின் பொருட்டுச் செலுத்துவாயாக என்பதாம். (2)

### மந்திரம் 3.

१ २ ३ १ २ ३ २३ १ २र ३ १२ ३ १ २
580. आसोता परिषिञ्चताश्वं न स्तोममप्तुरꣳ रजस्तुरम् ।
३ १२३ १२
†वनप्रक्षमुदप्रुतम् ॥ ३ ॥

இருக்கு—9-108-7.

† वनऋक्षम्, என்பது இருக்கு. वन क्रक्षम्, என்பர் சிலர்

ஆஸோதா பரிஷிஞ்சதாஶ்வம் ந ஸ்தோமமப்துரம் ரஜஸ்துரம் ।
வநப்ரக்ஷமுதப்ருதம் ॥

அங்வயம்.

(हे ऋत्विजः !,) अश्वं न, स्तोमं, अप्तुरं, रजस्तुरं, वनप्रक्षं, उदप्रुतं, आसोत, परिषिञ्चत ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे ऋत्विजः !) | (ஹே ருத்விஜ: !) | (வேட்போர்காள் ! நீவிர்) |
| अश्वं न | அஶ்வம் ந | குதிரை போல் வேகமுள்ளதும் |
| स्तोमं | ஸ்தோமம் | துதித்தற் குரியதும். |
| अप्तुरं | அப்துரம் | வானிலுள்ள நீரைச் செலுத்துவதும் |
| रजस्तुरं | ரஜஸ்துரம் | பிரகாசத்தையேவுவதும் |
| वनप्रक्षं | வநப்ரக்ஷம் | தண்ணீருடன் கலக்கப் பெற்றதும், அல்லது, பாத்திரத்திற் பரந்துள்ளதும் |
| उदप्रुतं | உதப்ருதம் | நீரின் மேல் செல்கின்றதுமாகிய சோமரசத்தைப் |
| आसोत | ஆஸோத | பிழிந்தெடுப்பீர்களாக. (மற்றும்) |
| परिषिञ्चत | பரிஷிஞ்சத | நாற்புறத்தும், வசதிரி என்னும் நீரைத் தெளிப்பீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—3. ருஜிசுவா ரிஷி.

வேட்போர்காள்! நீவிர், சோமத்தைப் பிழிவீர்களாக. அன்றியும், வசதிவரி என்னும் நீரைத் தெளிப்பீர்களாக. எத்தன்மைய சோமமெனின்? குதிரை போன்று விரைவுள்ளதும், துதித்தற்குரியதும், அந்தரிக்ஷத்திலுள்ள நீரைச்செலுத்துவதும், அல்லது, பிரகாசத்தைத் தொழிற் படுத்துவதும், நீரோடு சேர்ந்துள்ளதும், அல்லது, மரப் பாத்திரத்திற் செல்வதும், நீரிற் செல்வதுமாம், இத்தன்மைய சோமரசத்தைப் பிழிவீர்களாக எனச் சேர்த்துக் கொள்க. (3)

## மந்திரம் 4.

३ २३ १ २३ १२ ३१२ ३१ ३
581. एतमु त्यं मदच्युतꣳ सहस्रधारं वृषभं *दिवो दुहम् ।
२ ३ १२३ १ २
विश्वा वसूनि बिभ्रतम् ॥ ४ ॥

9-108-1I.

ஏதமு த்யம் மதச்யுதம் ஸஹஸ்ரதாரம் வ்ருஷபம் திவோ துஹம் ।
விஶ்வா வஸூநி பிப்ரதம் ॥

அந்வயம்.

दिवः, मदच्युतं, सहस्रधारं, वृषभं, विश्वावसूनि, बिभ्रतं, एतं त्यमु, दुहं ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| दिवः | திவঃ | தேவர்களை விரும்புகின்ற வேட்போர்கள், |
| मदच्युतं | மதச்யுதம் | களிப்பைச் செலுத்துவதும் |
| सहस्रधारं | ஸஹஸ்ரதாரம் | ஆயிரக்கணக்கான தாரைகளையுடையதும் |
| वृषभं | வ்ருஷபம் | மனவிருப்பை நிறையச் செய்வதும் |
| विश्वावसूनि | விஶ்வாவஸூநி | தனங்களனைத்தையும் |
| बिभ्रतं | பிப்ரதம் | தாங்குவதுவமாகிய |
| एतं त्यमु | ஏதம் த்யமு | இச்சோமரசத்தையே |
| दुहं | துஹம் | கறக்கின்றார்கள். |

சாயண பாடியம்

கண்டம்—11. இருக்கு—4. கிருதயசா ரிஷி.

தேவர்களை யிச்சிக்கின்ற வேட்போர்கள் இச்சோமத்தைக் கறக்கின்றார்கள். அவ்வாறே "வேட்போர்கள் கறக்கின்றார்கள்" எனப் பிராமணம் என்னும் மறையின் பாகமுங்கூறுகின்றது. எத்தன்மைய சோமமெனின்? களிப்பைச் செலுத்துவதும், எண்ணிலாத் தாரைகளையுடையதும், மனவிருப்பைப் பெய்வதும், எல்லாத் தனங்களையுந் தாங்குகின்றதுமாம் என்பதாம். (4)

* दिवो दुहः, எனவும் பாடம்.

## மந்திரம் 5.

१ २ ३ १ २र३ २ ३ १ २ ३ १ २र
582. स सुन्वे यो वसूनां यो रायामानेता य इडानाम्।
२ ३ १ २ १ २
सोमो यः सुक्षितीनाम् ॥ ५ ॥

இருக்கு 9-108-13.

ஸ ஸுந்வே யோ வஸூநாம் யோ ராயாமாநேதா ய இடாநாம் ।
ஸோமோ ய: ஸுக்ஷிதீநாம் ॥

அந்வயம்.

यः सोमः, वसूनां, यः, रायां, यः, इडानां, यः, सुक्षितीनां, आनेता, सः, सुन्वे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यः सोमः | ய: ஸோம: | யாதொரு சோமம் |
| वसूनां | வஸூநாம் | தனங்களைக் கொண்டு வருகின்றதோ, |
| यः | ய: | யாதொரு சோமம் |
| रायां | ராயாம் | பால் முதலிய கொடுக்குங் கோக்களைக் கொண்டு வருகின்றதோ, |
| यः | ய: | யாதொரு சோமம் |
| इडानां | இடாநாம் | பூமிகளையுங் கொண்டு வருகின்றதோ, |
| यः | ய: | யாதொரு சோமம் |
| सुक्षितीनां | ஸுக்ஷிதீநாம் | சிறந்த மனிதர்களைக் |
| आनेता | ஆநேதா | கொண்டுவருகின்றதோ, |
| सः | ஸ: | அச் சோமம் |
| सुन्वे | ஸுந்வே | வேட்போர்களாற் பிழியப்பட்டது. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—5. ருணவ ரிஷி.

யாதொரு சோமம், தனங்களைக் கொண்டு வருகின்றதோ, யாதொரு சோமம், பால் தருங் கோக்களைக் கொண்டு வருகின்றதோ, யாதொரு சோமம் நல்ல மனிதர்களைக் கொண்டு வருகின்றதோ, அச் சோமம் வேட்போர்களாற் பிழியப்பட்டது என்பதாம். (5)

## மந்திரம் 6.

२ १ २ ३ १२ ३ १ २ ३ १२
583. * त्वं ह्या ३ ङ्ग दैव्यं पवमान जनिमानि द्युमत्तमः ।
३ १ २ ३१२
अमृतत्वाय § घोषयन् ॥ ६ ॥

இருக்கு—9-108-5.

𑌤𑍍𑌵𑌂 𑌹𑍍𑌯𑌾𑌙𑍍𑌗 𑌦𑍈𑌵𑍍𑌯𑌂 𑌪𑌵𑌮𑌾𑌨 𑌜𑌨𑌿𑌮𑌾𑌨𑌿 𑌦𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌤𑌮𑌃 |
𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌘𑍋𑌷𑌯𑌨𑍍 ‖

### அந்வயம்.

हे पवमान !, द्युमत्तमः, त्वं हि, दैव्यं जनिमानि, अमृतत्वाय, अङ्ग, घोषयन् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे पवमान !** | 𑌹𑍇 𑌪𑌵𑌮𑌾𑌨 ! | சோமமே ! |
| **द्युमत्तमः** | 𑌦𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌤𑌮𑌃 | மிக்கொளியை யுடைய |
| **त्वं हि** | 𑌤𑍍𑌵𑌂 𑌹𑌿 | நீயே |
| **दैव्यं जनिमानि** | 𑌦𑍈𑌵𑍍𑌯𑌂 𑌜𑌨𑌿𑌮𑌾𑌨𑌿 | தேவப் பிறப்பை (தேவர்களை) உணர்கின்றாய். |
| **अमृतत्वाय** | 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 | இறவாத தன்மையை யடைய |
| **अङ्ग** | 𑌅𑌙𑍍𑌗 | வேகமாய் |
| **घोषयन्** | 𑌘𑍋𑌷𑌯𑌨𑍍 | வேட்போர்களாற் சத்தத்தை யுண்டாக்குகின்றாய். |

### சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—6. சத்தி ரிஷி.

பவித்திரமாகிய சோமரசமே! வியப்பாகிய ஒளியுடைய நீயே, தேவர்களுடைய பிறப்பை யுணர்கின்றாய். அதாவது தேவர்களை யுணர்கின்றாய் என்பது பொருள். அவர்களைக் குறியாகக் கொண்டு அவர்களுடைய சாகாத் தன்மைக்கு வேகமாய் வேட்போர்களாற் சத்தத்தை (ஒலியாகிய துதியை) உண்டாக்குகின்றாய் என்பதாம். (6)

* त्वंह्यः, गा दैव्या, § घोषयः என்பன இருக்கு. घोषः என்பது சாமம்.

## மந்திரம் 7.

३१ २र ३ २ ३ १२ ३१ २
584. एष स्य धारया सुतोऽ*व्या वारेभिः पवते मदिन्तमः ।
१२१२३१२
क्रीडन्नूर्मिरपामिव ॥ ७ ॥

இருக்கு 9-109-5.

ஏஷ ஸ்ய தாரயா ஸுதோऽவ்யா வாரேபி: பவதே மதிந்தம: |
க்ரீடந்நூர்மிரபாமிவ ||

அந்வயம்.

मदिन्तमः, अपां, ऊर्मिः, इव, क्रीडन्, स्यः, एषः सुतः, अव्याः, वारेभिः, धारया, पवते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| मदिन्तमः | மதிந்தம: | பெருங் களிப்பைக் கொடுக்கின்ற |
| अपां ऊर्मिः इव | அபாம் ஊர்மி: இவ | பிரவாகமாகிய நீரின் அலை போன்று |
| क्रीडन् | க்ரீடந் | விளையாடிக்கொண்டு |
| स्यः | ஸ்ய: | அத்தகைய |
| एषः सुतः | ஏஷ: ஸுத: | பிழிந்த இச் சோமரசம் |
| अव्या वारेभिः | அவ்யா வாரேபி: | பவித்திரமாகிய கம்பளியினது மயிர்களின் வாயிலாக |
| धारया | தாரயா | தாரையோடு |
| पवते | பவதே | கலசத்தில் வீழ்கின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—7. உரு ரிஷி.

பிழியப்பட்ட அத்தகைய இச் சோமரசம், பவித்திரமாகிய செம்மறியாட்டின் மயிர்களின் வாயிலாக தனது தாரையாற் கலசத்தைக் குறித்து நிரம்புகின்றது. எத்தன்மைய சோமரசமெனின்? பெருங் களிப்பைக் கொடுப்பதும், நீரினுடைய அலைக்கூட்டங்களொப்ப இங்குமங்கும் விளையாடிக் கொண்டு நிறைகின்றதுமாம் என்பதாம். (7)

* अव्यो वारेभिः எனவும் பாடம்.

## மந்திரம் 8.

२ ३ २ ३ २ ३ २ ३ १ २र ३ १ २र ३ १ २
585. य उस्रिया *अपिया अन्तरश्मनि निर्गा अकृन्तदोजसा ।
३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २ १ ३ १ २
अभि व्रजं तत्निषे गव्यमश्व्यं वर्मीव धृष्णवारुज ओ३म् वर्मीव
३ १२
धृष्णवारुज ॥ ८ ॥

இருக்கு—9-108-6.

ய உஸ்ரியா அபியா அந்தரஶ்மநி நிர்கா அக்ருந்ததோஜஸா ।
அபி வ்ரஜம் தத்நிஷே கவ்யமஶ்வ்யம் வர்மீவ த்ருஷ்ணவாருஜ ஓ௩ம் வர்மீவ
[த்ருஷ்ணவாருஜ ॥

அந்வயம்.

यः, उस्रियाः, अपियाः, अश्मनि अन्तः, गाः, ओजसा, निरकृन्तत्, गव्यं,
अश्व्यं, व्रजं, अभितत्निषे, धृष्णो, वर्मी इव, आरुज ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यः | யஃ | யாதொரு சோமம், |
| उस्रियाः | உஸ்ரியாஃ | ஓடுகின்றதும் |
| अपियाः | அபியாஃ | அந்தரிக்ஷத்தில் (வானில்) அசுரர்கள் வைத்திருக்கின்றது மாகிய |
| अश्मनि अन्तः | அஶ்மநி அந்தஃ | மேகத்தினடுவிலுள்ள |
| गाः | காஃ | தண்ணீரை |
| ओजसा | ஓஜஸா | (தனது) ஆற்றலால் |
| निरकृन्तत् | நிரக்ருந்தத் | கலக்கி மழையாய்ப் பெய்வித்ததோ, அத்தகைய சோமமாகிய நீ |
| गव्यं | கவ்யம் | அசுரர்கள் கைப்பற்றிய கோக்களின் |
| अश्व्यं | அஶ்வ்யம் | குதிரைகளின் |
| व्रजं | வ்ரஜம் | கூட்டத்தைப் |
| अभितत्निषे | அபிதத்நிஷே | பல வகையாய் வியாபிக்கின்றாய், |

* अप्या अन्तर शमनो என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| घृणो ! | யுருஷோ ! | பகைவர்க்கும் பயங் கொடுக்குஞ் சோமமே ! நீ |
| वर्मीव | வர்மீவ | கவசமணிந்தான் போன்று |
| आरुज | ஆருஜ | அசுரர்களை நாசஞ் செய்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—11. இருக்கு—8. ருசுவா ரிஷி.

நெகிழ்ச்சித் தன்மையுள்ள யாதொரு சோமரசம், வானிலுள்ள அகி முதலிய அசுரர்களாற் கைக்கொள்ளப்பட்டு மேகத்தின் நடுவிலிருக்கின்ற நீரை, ஆற்றலாற் கடிந்து மழையாய் வருஷிக்கச் செய்ததோ, அத்தகைய நீ, அசுரர்களாற் கவரப்பட்ட கோக் கூட்டங்களை நாற்புறமும் வியாபிக்கின்றாய். மற்றும், பகைவரைப் பயமுறுத்துஞ் சோமரசமே! நீ, கவசமணிந்தோன்போல அசுரர்களைக் கொல்வாயாக என்பதாம். (8)

## பதினோராவது கண்டம்

முற்றும்.

---

## ஐந்தாவது அத்தியாயத்தில் பதினோராவது கண்டம்

முற்றும்.

---

## பவமான கண்டமும்

முற்றும்.

---

ஓம் சுப்ரமண்யோம் ! ஓம் சுப்ரமண்யோம் !! ஓம் சுப்ரமண்யோம் !!!

ஓம் சாந்தி ! சாந்தி ! சாந்தி !

---

# சாமவேத சங்கிதை

## நான்காவது ஆரண்ய காண்டம்.

இவ்வாரண்ய காண்டம் சில பிரதிகளிற் காணப்படவில்லை. மூன்றாவது காண்டத்தின் ஈற்றிலுள்ள மந்திரத்தின் முடிவிலுள்ள அடியை இரட்டித்தது கொண்டு பூர்வார்ச்சிகம் என்னும் முதற் பகுதியின் முடிவு ஆண்டே யெனத் தோற்றுகின்றது என்பர் சிலர்.

### முதலாவது கண்டம்.

### பிரபாடகம்—6. அத்தியாயம்—6. கண்டம்—1.

ஒன்பது மந்திரங்களாலானது.

தேவதை.—2, 3, இந்திரன். 4, வருணன். 5, 7, 8, பவமானன். 6, விசுவ தேவர். 9, அன்னம். சந்தம்.—1, பிருகதி. 2, 9, திருஷ்டுப். 3, 7, 8, காயத்திரி. 4, 5, சதுஷ்பதா காயத்திரி. 6, 7, ஏகபதா காயத்திரி. சுரம்—.1, மத்தியமம். 2, 9, தைவதம். 3, 8, ஷட்சம்.

மந்திரம் 1.

२ ३ १२ ३ १२३ १२ ३१२३१२
586. इन्द्र ज्येष्ठं न आभर ओजिष्ठं पुपुरि श्रवः ।
२२२२ ३ १२ ३ १३ २ २
*यद्दिधृक्षेम वज्रहस्त रोदसी †उभे सुशिप्र पप्राः ॥ १ ॥

இருக்கு—6-46-5.

ഇന്ദ്ര ജ്യേഷ്ഠം ന ആഭര ഓജിഷ്ഠം പുപുരി ശ്രവഃ ।
യദ്ദിധൃക്ഷേമ വജ്രഹസ്ത രോദസീ ഉഭേ സുശിപ്ര പപ്രാഃ ॥

அந்வயம்.

वज्रहस्त, सुशिप्र, इन्द्र, यत्, दिधृक्षेम, उभे रोदसी, पप्राः, ज्येष्ठं, ओजिष्ठं, पुपुरि, श्रवः, नः, आभर ॥

---

* ये नेमे चित्र वज्रहस्त, † आभे, என்பன இருக்கு.

பதவுரை.

| | | |
|---|---|---|
| वज्रहस्त | வஜ்ரஹஸ்த | வச்சிராயுதந் தாங்கிய கையனும் |
| सुशिप्र | ஸுஶிப்ர | அழகிய மூக்குடையவனுமாகிய |
| इन्द्र ! | இந்த்ர! | இந்திரனே! நீ |
| यत् | யத் | எதை |
| दिधृक्षेम | தித்ருக்ஷேம | (யான்) கொள்ள விரும்புகின்றேனே, எதை |
| उभे रोदसी | உபே ரோதஸீ | வானுலகு மண்ணுல கிரண்டும் |
| पप्राः | பப்ரா: | பூரணமாய்க்கொள்ளுகின்றதோ, |
| ज्येष्ठं | ஜ்யேஷ்டம் | மிகச் சிறந்ததும் |
| ओजिष्ठं | ஓஜிஷ்டம் | ஆற்றலைத் தருவதும் |
| पुपुरि | பபுரி | திருப்தியைக் கொடுப்பதுமாகிய |
| श्रवः | ஶ்ரவ: | அவ் வன்னத்தை |
| नः | ந: | எங்கட்குக் |
| आभर | ஆபர | கொடுப்பாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—1. பரத்துவாச ரிஷி.

இந்திரனே! நீ, மிகச் சிறந்ததும், வியப்பாகிய வலியைக் கொடுப்பதும், பூரணமாக்குவதுமாகிய அன்னத்தை எங்கட்குத் தருவாயாக. வச்சிராயுதக் கையோய்! அழகிய மூக்குடையோய்! எவ்வன்னத்தை யான் கைக் கொள்ள விரும்புகின்றேனே, எவ்வன்னம் காணப்படும் இவ் வானுலகு மண்ணுல கிரண்டிலும் நிறைந்திருக்கின்றதோ, அவ்வன்னத்தை நீ கொடுப்பாயாக என அந்வயஞ் செய்து கொள்க. (1)

மந்திரம் 2.

२ ३ २ ३ १ २ ३ १र २उ ३र ३ १ २ ३ १२

587. इन्द्रो राजा जगतश्चर्षणीना *मधिक्षमा †विश्वरूपं यदस्य ।

१ २ ३ २ ३ १ २ ३ २ र ३ १२ ३ २

ततो ददाति दाशुषे वसूनि चोदद्राध ‡उपस्तुतं चिदर्वाक् ॥२॥

இருக்கு 7-27-3.

இந்த்ரோ ராஜா ஜகதஶ்சர்ஷணீநா மதிக்ஷமா விஶ்வரூபம் யதஸ்ய।
ததோ ததாதி தாஶுஷே வஸூநி சோதத்ராத உபஸ்துதம் [சிதர்வாக் ॥

---

* अधि अमा, † विषु रूपं, ‡ उपस्तुतः, என்பன இருக்கு.

### அந்வயம்.

इन्द्रः, जगतः, चर्षणीनां, राजा, अधिक्षमा, अस्य, विश्वरूपं, यत्, दाशुषे, ततः, वसूनि, ददाति, उपस्तुतं, राधः, अर्वाक्, चित्, चोदत् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| इन्द्रः | இந்த்ர: | யாதொரு இந்திரன் |
| जगतः | ஜகத: | விலங்கு முதலியவைகட்கும் |
| चर्षणीनां | சர்ஷணீநாம் | மனிதர் கட்கும் |
| राजा | ராஜா | இறைவனோ, மற்றும், |
| अधिक्षमा | அதிக்ஷமா | பூமியின்கண்ணுள்ள |
| अस्य | அஸ்ய | இவனுடைய |
| विश्वरूपं यत् | விச்வரூபம் யத் | எல்லா வகைத் தனங்கட்கும் எவன் இறைவனோ, |
| दाशुषे | தாசுஷே | தான முதலிய செய்யும் வேள்வித் தலைவனுக்குத் |
| ततः | தத: | அதிலிருந்து |
| वसूनि | வஸூநி | தனங்களை |
| ददाति | ததாதி | எவன் கொடுக்கின்றானோ, அவ்விந்திரன் |
| उपस्तुतं | உபஸ்துதம் | நன்கு துதிக்கத்தக்க |
| राधः | ராத: | தனத்தை |
| अर्वाक् चित् | அர்வாக் சித் | எம்மனோர்க்குச் |
| चोदत् | சோதத் | செலுத்துவானாக. (கொடுப்பானாக.) |

### சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—2. வசிட்ட ரிஷி.

யாதொரு இந்திரன் சங்கமமாகிய விலங்கு முதலியவைகட்கு இறைவனாகின்றானோ, மற்றும், மனிதர்கட்கும் இறைவனாகின்றானோ, மற்றும், பூமியின்பால் யாதொரு தனமுண்டோ, அதற்கும் இறைவனாகின்றானோ, இது பற்றியே வேள்வித் தலைவன் பொருட்டுத் தனத்தைக் கொடுக்கின்றானோ, அவ் விந்திரன் எம்மனோர்களால் இனிது போற்றுதற்குரிய தனத்தை எங்கட்கு நேராய்ச் செலுத்துவானாக. கொடுப்பானாக என்பது பொருள். (2)

## மந்திரம் 3.

|२ ३२ ३ २ ३ १ २ ३२उ ३ ३क२र

588. यस्येदमा रजो युजस्तुजे जने वनंस्वः ।

१ २ ३ १ २ ३२

इन्द्रस्य रन्त्यं बृहत् ॥ ३ ॥

𑌯𑌸𑍍𑌯𑍇𑌦𑌮𑌾 𑌰𑌜𑍋 𑌯𑍁𑌜𑌸𑍍𑌤𑍁𑌜𑍇 𑌜𑌨𑍇 𑌵𑌨𑌂𑌸𑍍𑌵𑌃 ।

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌬𑍃𑌹𑌤𑍍 ॥

அந்வயம்.

यस्य, रजोयुजः, इदं, स्वः, तुजे जने, वनं, इन्द्रस्य, रन्त्यं, बृहत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| यस्य | 𑌯𑌸𑍍𑌯 | எவனுடைய |
| रजोयुजः | 𑌰𑌜𑍋𑌯𑍁𑌜𑌃 | ஒளி மிகுந்த |
| इदं | 𑌇𑌦𑌂 | இத்தகைய அவி, |
| स्वः | 𑌸𑍍𑌵𑌃 | சுவர்க்கத்தில், அல்லது, யாண்டும் |
| तुजे जने | 𑌤𑍁𑌜𑍇 𑌜𑌨𑍇 | கொடுப்போனாகிய வேள்வித் தலைவன் விஷயத்தில் |
| वनं | 𑌵𑌨𑌂 | போற்றுதற்குரியதோ, |
| इन्द्रस्य | 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 | அவ் விந்திரனுடைய ஈகை |
| रन्त्यं | 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 | மிக இரமணீயமாயும் |
| बृहत् | 𑌬𑍃𑌹𑌤𑍍 | பெரிதாயுமிருக்கின்றது. |

சாயணபாடியம்.

**கண்டம்—1. இருக்கு—3. வாமதேவ ரிஷி.**

தோத்திரத்தோடு கூடிய ஒளி மிகுந்த இந்திரனுடைய முன்னேயுள்ள அவி, சுவர்க்கத்தில், அல்லது, யாண்டும், கொடுப்போன்பால் (வேள்வித் தலைவன் விஷயத்தில்) இனிது போற்றத்தக்கதாம். இதுபற்றியே இந்திரனுடைய கொடை உண்மையாய் மிக இரமணீயமாயும், மிகப் பெரிதாயுமிருக்கின்றது என்பதாம். (3)

**குறிப்பு.**—ஈண்டு மூலத்திய ரஜோயுஜ:, என்பதில் 'ரஜ:' என்பது 'ஒளியாம், "ஜோதி, ரஜ, உவ்யத" என்றார் நிருத்தத்தில் யாஸ்க முனிவரும்.

## மந்திரம் 4.

१२ ३ १ २ ३ १२३ २२२२३२२२२ ३१ २
589. उदुत्तमं वरुण पाशमस्मदवाधमं विमध्यमꣳ श्रथाय ।
१२ ३२ ३१२ २२ ३२ ३ १२
* अथादित्यव्रते वयं तवानागसो अदितये स्याम ॥ ४ ॥

இருக்கு 1-24-5.

உதுத்தமம் வருணபாசமஸ்மதவாதமம் விமத்யமம் ச்ரதாய ।
அதாதித்யவ்ரதே வயம் தவாநாகஸோ அதிதயே ஸ்யாம ॥

அந்வயம்.

हे वरुण !, उत्तमं, पाशं, अस्मत्, उत् श्रथाय, अधमं, अव, मध्यमं, वि, अथ, आदित्य, तव व्रते, वयं, अदितये, अनागसः, स्याम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे वरुण ! | ஹே வருண ! | வருணனே ! நீ |
| उत्तमं | உத்தமம் | (எனது) தலையிற் கட்டியுள்ள |
| पाशं | பாசம் | பாசத்தை (கயிற்றை) |
| अस्मत् | அஸ்மத் | என் பொருட்டு |
| उत् श्रथाय | உத் ச்ரதாய | மேலே தளரச் செய்வாயாக. |
| अधमं | அதமம் | கீழேயுள்ள (காலிற் கட்டியுள்ள) பாசத்தை |
| अव | அவ | கீழே தளரச் செய்வாயாக. |
| मध्यमं | மத்யமம் | நடுவிலுள்ள(நாபியிற்கட்டியுள்ள) பாசத்தை |
| वि | வி | அவிழ்த்துத் தளரச் செய்வாயாக. |
| अथ | அத | பின்னர் |
| आदित्य ! | ஆதித்ய ! | அதிதியின் புத்திரனாகிய வருண! |
| तव व्रते | தவ வ்ரதே | நினது கருமத்தில் |
| वयं | வயம் | சுனசேபர்களான யாங்கள் |
| अदितये | அதிதயே | துன்பமேனும், தடைப்படுத்தலேனு மில்லாதிருத்தற் பொருட்டுப் |
| अनागसः | அநாகஸ: | பிழையற்றவர்களாய் |
| स्याम | ஸ்யாம | ஆவோமாக. |

---

*अथा वयमादित्य व्रते तवाम्, என்பது இருக்கு.

### சாயண பாடியம்.

**கண்டம்—1. இருக்கு—4.** சுனசேப ரிஷி.

வருணனே! நீ, மேலே எனது தலையிற் பிணித்துள்ள பாசத்தை என் பொருட்டு தளர்ச்சி செய்வாயாக. கீழே காலிலுள்ள பாசத்தை தளர்ச்சி செய்வாயாக. நாபியிலுள்ள பாசத்தை அவிழ்த்துத் தளர்ச்சி செய்வாயாக. **பின்னர்,** அதிதியின் புத்திரனாகிய வருண! நின்னுடைய கருமவிஷயத்தில் சுனசேபரின் சம்பந்திகளான யாங்கள், மறுக்காதோரும், பிழையுற்றோர்களு வோம் என்பதாம். (4)

### மந்திரம் 5.

१ २ ३ १र ३ १ २ ३ १र २र ३ १ २

590. **त्वया वयं पवमानेन सोम भरे कृतं विचिनुयाम शश्वत् ।**

१ २ ३ १र २र ३ १ २ ३ १ २ ३ २ ३२

**तन्नो मित्रो वरुणो मामहन्तामदितिः सिन्धुः पृथिवी उत द्यौः ॥**

சாம மந்திரம்.

**𑌤𑍍𑌵𑌯𑌾** 𑌵𑌯𑌂 𑌪𑌵𑌮𑌾𑌨𑍇𑌨 𑌸𑍋𑌮 𑌭𑌰𑍇 𑌕𑍃𑌤𑌂 𑌵𑌿𑌚𑌿𑌨𑍁𑌯𑌾𑌮 𑌶𑌶𑍍𑌵𑌤𑍍 |

𑌤𑌨𑍍𑌨𑍋 𑌮𑌿𑌤𑍍𑌰𑍋 𑌵𑌰𑍁𑌣𑍋 𑌮𑌾𑌮𑌹𑌨𑍍𑌤𑌾𑌮𑌦𑌿𑌤𑌿𑌃 𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 [𑌉𑌤 𑌦𑍍𑌯𑍌𑌃 ‖

### அங்வயம்.

हे सोम !, पवमानेन, त्वया, वयं, भरे, शश्वत्, कृतं, विचिनुयाम, तत्, मित्रः, वरुणः, अदितिः, सिन्धुः, पृथिवी, उत, द्यौः, नः, मामहन्ताम् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम !** | 𑌹𑍇 𑌸𑍋𑌮 ! | சோமமே! |
| **पवमानेन** | 𑌪𑌵𑌮𑌾𑌨𑍇𑌨 | பவித்திரத்தின் (கம்பளியின்) வாயிலாகச் சுத்தம் பண்ணப் பட்ட, |
| **त्वया** | 𑌤𑍍𑌵𑌯𑌾 | உன்னுடைய சகாயத்தால் |
| **वयं** | 𑌵𑌯𑌂 | நாங்கள் |
| **भरे** | 𑌭𑌰𑍇 | போரில் |
| **शश्वत्** | 𑌶𑌶𑍍𑌵𑌤𑍍 | மிகுதியாகச் |
| **कृतं** | 𑌕𑍃𑌤𑌂 | செய்யப் பெற்ற பராக்கிரம முதலியவற்றை |
| **विचिनुयाम** | 𑌵𑌿𑌚𑌿𑌨𑍁𑌯𑌾𑌮 | விசேடமாய்ச் செய்கின்றோம். |
| **तत्** | 𑌤𑌤𑍍 | ஆதலின் |

| | | |
|---|---|---|
| मित्रः | மித்ரஃ | மித்திரனென்னுந் தேவதையும் |
| वरुणः | வருணஃ | வருணனென்னுந் தேவதையும் |
| अदितिः | அதிதிஃ | அதிதி என்னும் பெயர் பூண்ட தேவியும் |
| सिन्धुः | ஸிந்துஃ | கடலும் |
| पृथिवी | ப்ருதிவீ | தரையும் |
| उत | உத | இன்னும் |
| द्यौः | த்யௌஃ | வானுலகும் |
| नः | நஃ | எங்களை |
| मामहन्तां | மாமஹந்தாம் | தன முதலியவைகளைக் கொடுத்துப் பெருமைப் படுத்துவார்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—5. கிருத்சமத : ரிஷி.

சோமரசமே! பவித்திரமாகிய கம்பளியாற் சுத்தம் பண்ணப்பெற்ற உனது உதவியால், போரில் இனிது செய்யத் தக்க காரியத்தை மிக விசேடமாய்ச் செய்கின்றோம். உன்னுடைய உதவியால் கருமங்களைச் செய்கின்றோம். எங்களை, மித்திரன், வருணன், அதிதி தேவதை, சிந்து, பூமி, வான், என்பவர்கள், அதாவது மித்திரன் முதலிய அனைவரும் தன முதலியவைகளைக் கொடுத்தலால் எங்களைப் போற்றுவார்களாக என்பதாம். (5)

குறிப்பு.—भरे என்பது போரின் பெயரென நிருத்தங் கூறுகின்றது.

## மந்திரம் 6.

१ २ २र ३ २उ ३ २

591. इमं वृषणं कृणुतैकमिन्माम् ॥ ६ ॥

சாம மந்திரம்.

இமம் வ்ருஷணம் க்ருணுதைகமிந்மாம் ॥

அந்வயம்.

(हे मित्रादयो देवाः !,) एकं, इमं इत्, वृषणं, कृणुत, मां ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे मित्रादयो | ஹே மித்ராதயோ | மித்திரன் முதலிய |
| देवाः ! | தேவாஃ ! | தேவர்காள்! நீவிர் |
| एकं | ஏகம் | ஈகையிலொன்றேயாகிய |
| इमं इत् | இமம் இத் | இச் சோமரசத்தையே |

| | | |
|---|---|---|
| वृषणं | வ்ருஷணம் | மனவிருப்பப் பொழிவதாகச் |
| कृणुत | க்ருணுத | செய்விப்பீர்களாக. |
| मां | மாம் | என்னையும் பயனை நிறையக் கொடுக்கின்ற கருமத்தோடு கூடியவனாகச் செய்வீர்களாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—6. வாமதேவ ரிஷி.

முன் மந்திரத்தில் எடுத்துக் கொள்ளப்பட்ட மித்திரன் முதலிய தேவர்காள்! நீவிர், கொடைகொடுப்பதில் ஒன்றேயாகிய இச் சோமம் விரும்பியதைப் பொழியுமாறு செய்வீர்களாக. அவ்வாறே என்னையும் பயனை நிறையக் கொடுக்கின்ற கருமங்களோடு கூடியவனாகச் செய்வீர்களாக என்பதாம். (6)

## மந்திரம் 7.

२ ३ १ २ ३ १ २ ३ १२ ३ १ २
592. स न इन्द्राय यज्यवे वरुणाय मरुद्भ्यः ।
३ १२ २२
वरिवोवित्परिस्रव ॥ ७ ॥

இருக்கு 9-61-12.

ஸ ந இந்த்ராய யஜ்யவெ வருணாய மருத்ப்4ய: ।
வரிவொவித்பரிஸ்ரவ ॥

அந்வயம்.

हे सोम!, सः, वरिवोवित्, नः, यज्यवे, इन्द्राय, वरुणाय, मरुद्भ्यः, परिस्रव ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹெ ஸொம! | சோமரசமே! |
| सः | ஸ: | அத்தகைய |
| वरिवोवित् | வரிவொவித் | தனத்தைக் கொடுக்கின்ற நீ |
| नः | ந: | எங்கட்கும், |
| यज्यवे | யஜ்யவெ | பூசிக்கத்தக்க |
| इन्द्राय | இந்த்ராய | இந்திரனுக்கும், |
| वरुणाय | வருணாய | வருணனுக்கும், |
| मरुद्भ्यः | மருத்ப்4ய: | மருத்துக்கட்கும், |
| परिस्रव | பரிஸ்ரவ | தாரையாற் பொங்கியொழுகுவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—7. அமஹீயு ரிஷி.

சோமமே! அத்தகைய திரவியத்தை அடைவிக்கும் நீ, நாங்கள் ஆராதித்தற்குரிய இந்திரன் பொருட்டும், வருணன் பொருட்டும், மருத்துக்க (வாய்வு தேவதைக) ளின் பொருட்டும், தாரையாற் பொங்கிவழிவாயாக என்பதாம். (7)

## மந்திரம் 8.

३ २र २र ३ २उ ३ २ ३ १ २
593. एना विश्वान्यर्य आ द्युम्नानि मानुषाणाम् ।
१ २
सिषासन्तो वनामहे ॥ ८ ॥

ப் ஃவ ந்தி (9)

இருக்கு—9-61-19

ஏநா விஶ்வாந்யர்ய ஆ த்³யும்நாநி மாநுஷாணாம் ।
ஸிஷாஸந்தோ வநாமஹே ॥

அந்வயம்.

एना, मानुषाणां, विश्वानि, द्युम्नानि, अर्यः, सिषासन्तः, आ वनामहे ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **एना** | ஏநா | இச் சோமத்தால் |
| **मानुषाणां** | மாநுஷாணாம் | மனிதர்கட்கு வேண்டிய |
| **विश्वानि** | விஶ்வாநி | எல்லா |
| **द्युम्नानि** | த்³யும்நாநி | அன்னங்களையும் |
| **अर्यः** | அர்ய: | அடைகின்றவர்களாகவும், |
| **सिषासन्तः** | ஸிஷாஸந்த: | அருந்த இச்சிக்கின்றவர்களாயுமாகி |
| **आ वनामहे** | ஆ வநாமஹே | சோமத்தை ஆராதனை செய்கின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—8. அமஹீயு ரிஷி.

இச் சோமரசத்தால், மனிதர்களின் சம்பந்தமான அன்னங்களை அடையச் செல்கின்றவர்களாகவும், உண்ண விரும்புகின்றவர்களாகவும் உள்ள நாங்கள், சோமத்தை வழிபடுகின்றோம் என்பதாம். (8)

## மந்திரம் 9.

३१२ ३२ ३२ ३ १२३१ २ ३१२ ३ १ २

594. अहमस्मि प्रथमजा ऋतस्य पूर्वं देवेभ्यो अमृतस्य नाम ।

२ ३ १२३ २उ ३१२ ३२उ ३११ २

यो मा ददाति स इदेवमावदहमन्नमदन्तमद्मि ॥ ९ ॥

சாம மந்திரம்.

𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑌿 𑌪𑍍𑌰𑌥𑌮𑌜𑌾 𑌋𑌤𑌸𑍍𑌯 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑍋 𑌅𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮।

𑌯𑍋 𑌮𑌾 𑌦𑌦𑌾𑌤𑌿 𑌸 𑌇𑌦𑍇𑌵𑌮𑌾𑌵𑌦𑌹𑌮𑌨𑍍𑌨𑌮𑌦𑌨𑍍𑌤𑌮𑌦𑍍𑌮𑌿 ॥

அந்வயம்.

अहं, देवेभ्यः, पूर्वं, अमृतस्य, ऋतस्य, प्रथमजा, नाम, अस्मि, यः, मां, ददाति, सः इत्, एवं, आवत्, अन्नं, अदन्तं, तं, अहं अन्नं, अद्मि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अहं | 𑌅𑌹𑌂 | (அன்னத்தை அதிட்டித்துள்ள தேவதை கூறல்.) அன்னமாகிய யான் |
| देवेभ्यः | 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 | அக்கினி, வருணன் முதலிய தேவதைகளினின்றும் |
| पूर्वं | 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 | முன்னேயுள்ளவன். |
| अमृतस्य | 𑌅𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 | மரணமற்ற |
| ऋतस्य | 𑌋𑌤𑌸𑍍𑌯 | சத்தியமாகிய பரமான்மாவிற்குச் சம்பந்தமாய் |
| प्रथमजा | 𑌪𑍍𑌰𑌥𑌮𑌜𑌾 | முன்னருண்டாகப் பட்ட |
| नाम | 𑌨𑌾𑌮 | கீர்த்தியுடைய பொருளாக |
| अस्मि | 𑌅𑌸𑍍𑌮𑌿 | (யான்) இருக்கின்றேன். |
| यः | 𑌯𑌃 | யாதொருவன் |
| मां | 𑌮𑌾𑌂 | அன்னமாகிய என்னை |
| ददाति | 𑌦𑌦𑌾𑌤𑌿 | அதிதிகட்குக் கொடுக்கின்றானோ, |
| सः इत् | 𑌸𑌃 𑌇𑌤𑍍 | அவனை |
| एवं | 𑌏𑌵𑌂 | இவ்வாறு |
| आवत् | 𑌆𑌵𑌤𑍍 | எல்லா வுயிர்களையுங் காப்பாற்றுகின்றான். |
| अन्नं अदन्तं | 𑌅𑌨𑍍𑌨𑌂 𑌅𑌦𑌨𑍍𑌤𑌂 | பிறருக்கு ஈயாத |
| तं | 𑌤𑌂 | அவனை (உலோபியை) |
| अहं अन्नं | 𑌅𑌹𑌂 𑌅𑌨𑍍𑌨𑌂 | அன்ன தேவதையாகிய யான் |
| अद्मि | 𑌅𑌦𑍍𑌮𑌿 | உண்கின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—1. இருக்கு—9. ஆன்மா ரிஷி.

அன்னதேவதை கூறுகின்றது:- அன்ன தேவதையாகிய யான், அக்கினி, வருணன் முதலிய தேவதைகளினின்றும் முன்னரே யுள்ளேன். நாசமற்றதும், சத்தியமுமாகிய பரப்பிரமத்தின் சம்பந்தமுள்ளதும், முன்றோன்றியதும், கீர்த்தியுடையதுமாகிய பொருளாகவே யிருக்கின்றேன். உண்மையில் யாதொருவன் அன்ன வடிவமாகிய என்னை அதிதி முதலியோர்கட்குக் கொடுக்கின்றானோ, அவனே இவ்வாறு காணப்படுகின்ற எல்லா வுயிர்களையுங் காப்பாற்றுகின்றான். யாதொருவன் பிறவுயிர்கட்கு அன்னமளிக்காது தானுகவே உண்கின்றானோ, அந்த உலோபியை அன்ன தேவதையாகிய நான் அருந்திவிடுகின்றேன். அதாவது கெடுக்கின்றேன் என்பது பொருள். (9)

## முதலாவது கண்டம்

முற்றும்.

---

## இரண்டாவது கண்டம்.

---

### பிரபாடகம்—6. அத்தியாயம்—6. கண்டம்—2.

ஏழு மந்திரங்களாலானது.

---

தேவதை.—1, 3, 4, 7, இந்திரன். 5, சோமம். 5, விசுவே தேவர்கள். 6, வாயு. சந்தம்.—1, 3, 4, 6, காயத்திரி. 2, சகதி. 5, திருஷ்டுப். 7, அநுஷ்டுப். சுரம்.—1, 3, 4, 6, ஷட்சம். 2, நிஷாதம். 5, தைவதம். 7, காந்தாரம். இருடிகள் ஆங்காக்குக் கூறப்படுவார்கள்.

மந்திரம் 1.

२ ३ १२ ३ २ ३ १ २
595. त्वमेतदधारयः कृष्णासु रोहिणीषु च ।
१२ ३ २ ३ १ २
परुष्णीषु रुशत्पयः ॥ १ ॥

இருக்கு—9-9 !-14.

த்வமேதத³தா⁴ரய: க்ருஷ்ணாஸு ரோஹிணீஷு ச ।
பருஷ்ணீஷு ருஶத்பய: ॥

அந்வயம்.

हे इन्द्र !, त्वं, कृष्णासु, रोहिणीषु, च, परुष्णीषु, रुशत्, एतत्, पयः, अधारयः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்³ர ! | இந்திரனே ! |
| त्वं | த்வம் | நீயே |
| कृष्णासु | க்ருஷ்ணாஸு | கரிய நிறமுடைய பசுக்களிடத்தி லும் |
| रोहिणीषु च | ரோஹிணீஷு ச | செந்நிறமுடைய பசுக்களிடத் தும் |
| परुष्णीषु | பருஷ்ணீஷு | பலநிறப் புள்ளிகளையுடைய பசுக்களிடத்தும் |
| रुशत् | ருஶத் | பிரகாசமுள்ள வெள்ளிய |
| एतत् पयः | ஏதத் பய: | இப் பாலை |
| अधारयः | அதா⁴ரய: | நிலை நிறுத்தி யிருக்கின்றாய். |

சாயணபாடியம்.

**கண்டம்—2. இருக்கு—1.** சுருதகக்ஷ ரிஷி.

இந்திரனுடைய வன்மையே கூறப்படுகின்றது :—இந்திர ! நீ, கருமை நிறமுடைய பசுக்களிடத்தும், செம்மை நிறமுடைய கோக்களின் கண்ணும், பலநிறப் புள்ளியுள்ள ஆக்களிடத்தும், விளங்கப்பட்ட வெண்மை நிற முடையதாய்க் காணப்படும் பாலை நீயே தாங்குகின்றாய். ஆதலின் நின்னு டைய ஆற்றலைப் போற்றுகின்றேன் என்றல் பொருத்தமாயிற்று என்ப துணர்க. (1)

பருஷ்ணி, பன்னிறமுடையது என்றார் யாஸ்க முனிவரும்.

மந்திரம் 2.

१ २ ३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ २
596. अरूरुचदुषसः पृश्निरग्रिय उक्षामिमेति भुवनेषु वाजयुः ।
३ १ २ ३ १ २ ३ १ २ ३ २ ३ २ ३ १ २
मायाविनो ममिरे अस्य मायया नृचक्षसः पितरो गर्भमादधुः ॥

இருக்கு 9-83-3.

அரூருசதுஷஸ: ப்ருச்னிரக்ரிய உக்ஷா மிமேதி புவநேஷு [வாஜயு: |
மாயாவிநோ மமிரே அஸ்ய மாயயா ந்ருசக்ஷஸ: பிதரோ கர்ப [மாதது: ||

அந்வயம்.

उषसः, पृश्निः, अग्रियः, अरूरुचत्, उक्षा, भुवनेषु, वाजयुः, मिमेति, मायाविनः, अस्य, मायया, ममिरे, नृचक्षसः, पितरः, गर्भं, आदधुः ।

பதவுரை.

| | | |
|---|---|---|
| उषसः | உஷஸ: | உஷாக்காலத்தின் சம்பந்தியான |
| पृश्निः | ப்ருச்நி: | { ஆதித்தன் என்னும் பெயருங் கொண்ட |
| अग्रियः | அக்ரிய: | முக்கியமாகிய சோமரசம் |
| अरूरुचत् | அரூருசத் | { இயற்கையாய் விளங்குகின்றதும், விளக்குகின்றதுமாம். மற்றும், |
| उक्षा | உக்ஷா | நீர் கொடுக்கும் மேகம் போன்று, |
| भुवनेषु | புவநேஷு | உலகங்களில் |
| वाजयुः | வாஜயு: | { ஆற்றல், அன்னம் என்பவைகளைக் கொடுக்க விழைந்து |
| मिमेति | மிமேதி | கர்ச்சிக்கின்றது. |
| मायाविनः | மாயாவிந: | மிக்குணர்வுடைய தேவர்கள் |
| अस्य | அஸ்ய | இச் சோமத்தின் |
| मायया | மாயயா | மெய்யுணர்வின் வழியாக |
| ममिरे | மமிரே | { உற்பத்தி பண்ணுகின்றார்கள். (அவ்வாறே) |
| नृचक्षसः | ந்ருசக்ஷஸ: | மனிதரை நோக்குகின்றவர்களான |
| पितरः | பிதர: | { பாதுகாப்போர்கள், அல்லது, பிதிர்கள் |
| गर्भं | கர்பம் | கருப்பத்தைப் |
| आदधुः | ஆதது: | பச்சிலைகளிற் றாங்குகின்றார்கள். |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—2. பவித்திர ரிஷி.

உஷாவின் (காலை வெளிச்சத்தின்) சம்பந்தமுடைய ஆதித்தன் என்னும் பெயருள்ள முக்கியமாகிய சோமம், (ஈண்டு ஆதித்தன் என்னும் பெயர் கொண்ட என்பதிலுள்ள ஆதித்தனென்னுஞ் சொல் சேர்க்கப்பட்டது) தானாகவே மிக விளங்குகின்றது. அச்சோமம், நீராகப் பொழிவதாகி (மழை

யாய் நின்று) மிகப் பேரொலிசெய்கின்றது பூதசமுதாயங்களில் (உயிர் வருக்கங்களுள் அவைகட்கு அன்னங்கொடுக்க விரும்பி, நுண்ணுணர்வுடைய தேவர்கள் இச்சோமத்தின் உணர்வுடையர்களாய் (உலகை) உற்பத்தி செய்கின்றார்கள். சோமரசத்தின் ஒவ்வொரு பாகத்தை யருந்தியதால் அக்கினி முதலிய தேவர்கள், தனது செயலால் உலகையுண்டு பண்ணுகின்றார்கள் என்பது பொருள். அத்தகைய இச்சோமரசத்தின் உணர்வால், மனிதர்களைக் ...ண்போர்களான பாது காப்போர்கள் (தேவர்கள்) அல்லது, பிதிர்க்கள் ...ங்கிரசர்கள்) கொடி செடிகளிற் கருப்பத்தைத் தாங்குகின்றார்கள். அச் ...மமே சூரியன் வடிவாய்த் துதிக்கப்படுகின்றது. சூரிய கிரணத்தின் ...டர்பு பற்றியே சந்திரனுக்கு வளர்ச்சியாமாதலின். அல்லது, இந்த ...ாவும், (உஷாக்கால தேவதையும்) சவிதாவும், (இரவியும்) இனிது விளங்குகின்றது, அல்லது, விளக்குகின்றது. மற்றனைத்தும் சமம் (முற் கூறிய தற்கு) ஒப்பாமென்றுணர்க.) அதன் சம்பந்தமுள்ளவைகளும், மனிதர்களைப் பார்க்கின்றவைகளும், உலகத்தைக் காப்பாற்றுகின்றவைகளுமான கிரணங்கள், மழையின்பொருட்டுக் கருப்பத்தைத் தாங்குகின்றன என்பன பொருள்.

குறிப்பு:—ப்ருஶ்நி: என்பது ஆதித்தன் என யாஸ்கமுனிவர் நிருத்தத்திற் கூறியுள்ளார்.

## மந்திரம் 3.

२ ३ २उ ३ २ ३ १ २ ३ १ २ ३ १ २

597. इन्द्र इद्धर्यो सचा संमिश्ल आ वचोयुजा ।

१ २ ३ १ २ ३ १ २

इन्द्रो वज्री हिरण्ययः ॥ ३ ॥

இருக்கு 1-7-2.

ஐந்த்³ர ஐத்³த⁴ர்யோ: ஸசா ஸம்மிஶ்ல ஆ வசோயுஜா ।
ஐந்த்³ரோ வஜ்ரீ ஹிரண்யய: ॥

அந்வயம்.

वचोयुजा, हर्योः, सचा, आसंमिश्लः, इन्द्र इत्, इन्द्रः, वज्री, हिरण्ययः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वचोयुजा | வசோயுஜா | சொல் மாத்திரத்தால் இரதத்திற் பூட்டப்படுவதாகிய |
| हर्योः | ஹர்யோ: | அரி, என்னுங் குதிரைகளில் |
| सचा | ஸசா | வந்து சேர்ந்து |
| आसंमिश्लः | ஆஸம்மிஶ்ல: | (யாண்டும் நலத்தை) அடைவிப்பவன் |
| इन्द्र इत् | ஐந்த்³ர ஐத் | இந்திரன் ஒருவனேயாகின்றான், |

| | | |
|---|---|---|
| इन्द्रः | ஊந்த்ர: | அவ்விந்திரன் |
| वज्री | வஜ்ரீ | வச்சிராயுத மேந்தியுள்ளான். மற்றும், |
| हिरण्ययः | ஹிரண்ய்ய: | எல்லா அணிகளையுமணிந்தவனுயிருக்கின்றான். |

சாயணபாடியம்.

கண்டம்—2. இருக்கு—3. மதுச்சந்தர், வைசுவாமித்திரர் ரிஷிகள்.

அரி, என்னும் பெயருடைய இந்திரனொருவனே குதிரைகளுடன் (வந்து நலத்தை) எவ்விடத்துஞ் சேர்ப்பவன் ஆகின்றான். எவ்வண்ணமான குதிரைகளெனின்? இந்திரனுடைய சொல்மாத்திரத்தினுனே இரதத்தைப் பூட்டிக்கொள்பவைகள். (நன்கு பழக்கினவைகள் என்று பொருள்) இவ்விந்திரன், வச்சிராயுதமுடையான். மற்றும், பொன்மயமான எல்லாப் பூடணங்களையுமுடையோன் என்பதாம். (3)

## மந்திரம் 4.

२ ३ १ २ ३ १ २
598. इन्द्र वाजेषु नोऽव सहस्रप्रधनेषु च ।
३ २ ३ १ २ ३ १ २
उग्र उग्राभिरूतिभिः ॥ ४ ॥

இருக்கு 1-7-4.

ஊந்த்ர வாஜெஷு நொऽவ ஸஹஸ்ரப்ரதநெஷு ச ।
உக்ர உக்ராபிரூதிபி: ॥

அந்வயம்.

उग्रः, हे इन्द्र !, उग्राभिः, ऊतिभिः, वाजेषु सहस्रप्रधनेषु, च, नः, अव ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| उग्रः | உக்ர: | பராக்கிரமமுடையோனுகிய |
| हे इन्द्र ! | ஹெ ஊந்த்ர ! | இந்திரனே ! நீ |
| उग्राभिः | உக்ராபி: | அடங்காத பேரொளிகளையுடைய |
| ऊतिभिः | ஊதிபி: | பாது காப்பாற்றல்களினுல் |
| वाजेषु | வாஜெஷு | பொதுவான போர்களிலும் |
| सहस्रप्रधनेषु च | ஸஹஸ்ரப்ரதநெஷு ச | ஆயிரம், யானை பரிகளையுடைய பெரும் போர்களிலும் |
| नः | ந: | எங்களைப், |
| अव | அவ | பாது காப்பாற்றுவாயாக, |

## சாயண பாடியம்.

*கண்டம்—2. இருக்கு—4.*

இந்திரனே! சத்துருக்கட்குப் பயப்படாத நீ, எங்களுடைய சத்துருக்களின் விரோதமாந்தன்மைகளால் வரும் பயத்தையொழித்து சிறிய உயுத்தங்களில் எங்களைப் பாதுகாப்பாயாக. அவ்வாறே, ஆயிரக்கணக்கான யானைகள், பரிகளுள்ள, (யானை முதலிய வற்றின் இலாபத்தோடுகூடிய) மகாயுத்தங்களிலும் எங்களைப் பாதுகாப்பாயாக என்பதாம். (4)

### மந்திரம் 5.

१ २ ३ १ २ १ २ ३ १ २र ३ १ ३ १ २

599. प्रथश्च यस्य सप्रथश्च नामानुष्टुभस्य हविषो हविर्यत् ।

३ १ २र ३ २ ३ १ २ ३ १ २र ३ १ ३

धातुर्द्युतानात् सवितुश्च विष्णोरथन्तरमाजभारा वसिष्ठः ॥ ५ ॥

இருக்கு 10-181-1.

𑌪𑍍𑌰𑌥𑌶𑍍𑌚 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌪𑍍𑌰𑌥𑌶𑍍𑌚 𑌨𑌾𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌭𑌸𑍍𑌯 𑌹𑌵𑌿𑌷𑍋
[𑌹𑌵𑌿𑌰𑍍𑌯𑌤𑍍 ।
𑌧𑌾𑌤𑍁𑌰𑍍𑌦𑍍𑌯𑍁𑌤𑌾𑌨𑌾𑌤𑍍 𑌸𑌵𑌿𑌤𑍁𑌶𑍍𑌚 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑌥𑌨𑍍𑌤𑌰𑌮𑌾𑌜𑌭𑌾𑌰𑌾
[𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑌃 ॥

### அந்வயம்.

यस्य, प्रथः नाम, च, सप्रथः, वसिष्ठः, अनुष्टुभस्य, हविषः, यत्, हविः, रथन्तरं, धातुः, च, द्युतानात्, सवितुः विष्णोः, आजभार ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| यस्य | 𑌯𑌸𑍍𑌯 | எந்த வசிட்ட முனிவருக்கு |
| प्रथः नाम | 𑌪𑍍𑌰𑌥𑌃 𑌨𑌾𑌮 | பிரதன், என்னும் புத்திரன் உளனே, |
| च | 𑌚 | மற்றும், யாதொரு பரத்துவாசருக்கு |
| सप्रथः | 𑌸𑌪𑍍𑌰𑌥𑌃 | சப்பிரதன், என்னும் புத்திரன் உள்ளானே. அவ்விருவரில் |
| वसिष्ठः | 𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑌃 | பிரதன் என்னும் எனது பிதாவாகிய வசிட்ட முனிவர், |
| अनुष्टुभस्य | 𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌭𑌸𑍍𑌯 | அநுஷ்டுப் என்னுஞ் சந்தப்பாட்டுடன் கூடியதும் |
| हविषः | 𑌹𑌵𑌿𑌷𑌃 | தருமமென்பதுமாகிய |

| | | |
|---|---|---|
| यत् | யத் | யாதொரு |
| हविः | ஹவி: | அவியை (தேவவுணவை) அடைவிக்கும் |
| रथन्तरं | ரதந்தரம் | இரதந்தரம் என்னுஞ் சோமரசத்தை, |
| धातुः च | தாது: ச | தாதா, என்னுந் தேவதையிடத்திலிருந்தும், |
| द्युतानात् | த்யுதாநாத் | விளங்குகின்றவரும் |
| सवितुः विष्णोः | ஸவிது: விஷ்ணோ: | எல்லாவற்றையு முண்டாக்குகின்றவருமான விஷ்ணுவினிடத்தினின்றும், |
| आजभार | ஆஜஹார | பெற்றுக்கொண்டனர். |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—5. பிரத ரிஷி.

வசிட்டருக்கு பிரதன் என்னும் ஒரு புத்திரனிருந்தனன். பரத்துவாசருக்குச் சப்பிரதன் என்னும் ஒருபுத்திரனுள்ளான், அவ்விருவர்களுள் வசிட்டராகிய எனது தந்தையார். அநுஷ்டுப், என்னுஞ் சந்தத்தோடு கூடியதும், தருமமெனப் பெயருள்ளதும், அவியைத் தரப்பட்டதுமாகிய இரதந்தரம், என்னும் யாதொரு சோமரசமுண்டோ, அதை, தாதா என்னுந் தேவதையிடத்திலிருந்தும், (மற்றும்) பிரகாசமுடையவரும், எல்லாவற்றையும் உண்டு பண்ணுபவருமாகிய விஷ்ணுவினிடத்தி னின்றும் பெற்றுக்கொண்டனர் என்பதாம். (5)

## மந்திரம் 6.

३ १ २ ३ १२३ २ ३ १ २
600. नियुत्वान्वायवागह्ययंꣳ शुक्रो अयामि ते ।
१ २ ३ २ ३ २
गन्तासि सुन्वतो गृहम् ॥ ६ ॥

இருக்கு 2-41-2.

நியுத்வாந்வாயவாகஹ்யயம் ஶுக்ரோ அயாமி தே ।
கந்தாஸி ஸுந்வதோ க்ருஹம் ॥

அந்வயம்

हे वायो !, नियुत्वान्, आगहि, अयं शुक्रः, ते, अयामि, सुन्वतः, गृहं, गन्तासि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे वायो !** | ஹெ வாயொ ! | வாயுவே ! |
| **नियुत्वान्** | நியுத்வாந் | வாகனத்தோடுகூடிய நீ |
| **आगहि** | ஆ கஹி | வருவாயாக. |
| **अयं शुक्रः** | அயம் ஶுக்ர: | விளங்குகின்ற இச் சோமரசம் |
| **ते** | தெ | நின் பொருட்டு |
| **अयामि** | அயாமி | நியமத்துடன் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஏனெனின்? |
| **सुन्वतः** | ஸுந்வத: | சோமரசம் பிழிகின்ற நீ |
| **गृहं** | க்ருஹம் | வேள்வித் தலைவனுடைய வீட்டிற்குப் |
| **गन्तासि** | கந்தாஸி | போகின்றவனா யிருக்கின்றாய். (ஆதலின் என்க.) |

சாயணபாடியம்.

கண்டம்—2. இருக்கு—6. கிருத்சமத ரிஷி.

வாயு தேவதையே! நீ அவ் வாகனங்களுடன் வருவாயாக. பிரகாசிக்கின்ற இச் சோமரசம் நின் பொருட்டு நியதமாய்க் கொள்ளப்பட்டிருக்கின்றது. சோமரசத்தைப் பிழிகின்ற வேள்வித்தலைவன் வீட்டிற்குச் சென்றுக்கொண்டிருக்கின்றா யாதலின் வருவாயாக என்க. (6)

## மந்திரம் 7.

१ २र ३१२ ३ १ २

601. **यज्ञायथा अपूर्व्य मघवन् वृत्रहत्याय ।**

१ २ ३ १२ ३ १२ ३ १ २र

**तत्पृथिवीमप्रथयस्तदस्तभ्ना उतो दिवम् ॥ ७ ॥**

இருக்கு 8-89-5.

யஜ்ஜாயதா அபூர்வ்ய மகவந் வ்ருத்ரஹத்யாய ।
தத்ப்ருதிவீமப்ரதயஸ்தத³ஸ்தப்⁴நா உதோ திவம் ॥

அந்வயம்.

अपूर्व्य !, मघवन्, वृत्रहत्याय, यत्, जायथाः, तत्, पृथिवीं, अप्रथयः उत, दिवं, अस्तभ्नाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अपूर्व्य ! | அபூர்வ்ய ! | அநாதியாயுள்ள |
| मघवन् ! | மகவந் ! | தனத்திற்கிடமாகிய இந்திரனே! |
| वृत्रहत्याय | வ்ருத்ரஹத்யாய | விருத்திராசுரனைக் கொல்லுதற் பொருட்டு |
| यत् | யத் | எப்போது நீ |
| जायथाः | ஜாயதா: | வெளிப்பட்டிருந்தனையோ, |
| तत् | தத் | அப்போது |
| पृथिवीं | ப்ருதிவீம் | பூமியை, |
| अप्रथयः उत | அப்ரதய: உத | கீர்த்தியுடையதாகவும், வன்மையுடையதாகவுஞ் செய்தனை, மற்றும், |
| दिवं | திவம் | வானுலகை (யும்) |
| अस्तभ्नाः | அஸ்தப்னா: | நன்கு நிலைக்கச் செய்தனை. |

சாயண பாடியம்.

கண்டம்—2. இருக்கு—7. நிருமேத புருமேதர்கள் ரிஷிகள்.

நின்னில் வேறிலாத, அதாவது தானாய் நின்ற, எனவே அநாதியாகிய என்பது திரண்ட பொருளாயிற்று. அநாதியாய்த் தனமுடைய இந்திரனே! நீ விருத்திராசுரனைக் கொல்லுதற் பொருட்டு எப்போது வெளிப்பட்டிருந்தனையோ, அப்போதே பூமியை கீர்த்தியுடைய தாயும், உறுதியுடையதாயுஞ் செய்தனை. மற்றும், வானுலகையும், அந்தரிக்ஷத்தினின்றும் நிலையுடையதாகச் செய்தனை. இத்தன்மைய வீரத்தன்மை, நினையொழித்து வேறெவர்க்கும் உண்டாகிறதில்லை என்னும் பொருள் தோன்றவே மூலத்தில் அபூர்வ்யம் எனக் கூறப்பட்டது. (7)

## இரண்டாவது கண்டம்.

முற்றும்.

---

## மூன்றாவது கண்டம்.

### பிரபாடகம்—6. அத்தியாயம்—6. கண்டம்—3.

பதின்மூன்று மந்திரங்களாலானது.

தேவதை:—1, பிரசாபதி. 2, 3, பவமானம். (சோமம்.) 4, 6, 13, அக்கினி. 7, இராத்திரி. 8, வைசுவாநரன். விசுவதேவர். 10, இலிங்கோத்தர். 11, இந்திரன். 12, சுருவான்மா. சந்தம்:—1, 7, அநுஷ்டுப். 2, 3, 5, 6, 9, 11, 13. திருஷ்டுப். 4, காயத்திரி. 8, சகதி. 10, மகாபந்தி. சுரம்:—1, 7, காந்தாரம். 1, 3, 5, 6, 9, 11, 13, தைவதம். 4, ஷட்சம். 8, நிஷாதம். 10, பஞ்சமம்.

### மந்திரம் 1.

२ ३ १ ३ २ ३ १ २र ३२ ३ १२र

602. मयि वर्चो अथो यशोऽथो यज्ञस्य यत्पयः ।

३ २ ३ १२ ३ १ २र

*परमेष्ठी प्रजापतिर्दिवि द्यामिव दृꣳहतु ॥ १ ॥

இருக்கு 6-69-3.

மயி வர்சோ அதோ யஶோऽதோ யஜ்ஞஸ்ய யத்பய꞉ ।
பரமேஷ்டீ ப்ரஜாபதிர்திவி த்யாமிவ த்ருꣳஹது ॥

அந்வயம்.

परमेष्ठी, प्रजापतिः, दिवि, द्यां इव, मयि, वर्चः, दृंहतु, अथो, यशः, अथो, यज्ञस्य, यत्, पयः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| परमेष्ठी प्रजापतिः | பரமேஷ்டீ ப்ரஜாபதி꞉ | மேலுலகத்திலிருப்பவராகிய பிரசாபதியானவர் |
| दिवि | திவி | விளங்குகின்ற சுவர்க்கத்ததில் |
| द्यामिव | த்யாமிவ | ஒளிவிடுங் காந்தி போன்று |
| मयि | மயி | எனதுடம்பில் |

*तन्मयि प्रजापतिर्दिवि, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| वर्चः | வர்ச்ச: | பிரமவொளியை |
| दृंहतु | த்ருஂஹது | வளர்ப்பாராக. அன்றியும், வலியுறுத்துவாராக. |
| अथो | அதொ | மற்றும், |
| यशः | யஶ: | கீர்த்தியை வளர்ப்பாராக. அல்லது, வலியுறுத்துவாராக. |
| अथो | அதொ | மற்றும், |
| यज्ञस्य | யஜ்ஞஸ்ய | வேள்வியினுடைய |
| यत् पयः | யத் பய: | யாதொரு அவியாகிய அன்னமுண்டோ, அதையும் வளர்ப்பாராக. அல்லது, வலியுறுத்துவாராக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—1. வாமதேவ ரிஷி.

மேலுலகில் நிலைத்திருப்பவராகிய பரமேட்டி யென்னும் பிரசாபதியானவர், விளங்குகின்ற சுவர்க்கத்தில் ஒளிராநின்ற காந்தியைப் போன்று எனது தேகத்தில் பிரம வொளியை வளர்ப்பாராக. மற்றும், கீர்த்தியையும் வளரச் செய்வாராக. அன்றியும், வேள்வி சம்பந்தமாகிய, இதனாலேயே சிறப்புடைய அவியென்னும் அன்னத்தையும் வளரச் செய்வாராக என்பதாம். (1)

## மந்திரம் 2.

२ ३ २ ३ १ २ ३ २ ३ २र २र ३ १२

603. सन्ते पयाꣳसि समुयन्तु वाजाः संवृष्णान्यभिमातिषाहः ।

३ १२ ३ १ २ ३१र २र ३ १ २

आप्यायमानो अमृताय सोम दिवि श्रवाꣳस्युत्तमानि धिष्व ॥

இருக்கு 9-106-4.

ஸந்தே பயாꣳஸி ஸமுயந்து வாஜா: ஸம்வ்ருஷ்ணாந்யபிமாதி [ஷாஹ: ।

ஆப்யாயமாநோ அம்ருதாய ஸோம திவி ஶ்ரவாꣳஸ்யுத்தமாநி [திஷ்வ ॥

அந்வயம்.

हे सोम!, अभिमातिषाहः, पयांसि, ते, संयन्तु, वाजाः, वृष्णानि, आप्यायमानः, अमृताय, आ, उत्तमानि, श्रवांसि, दिवि, धिष्व ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सोम! | ஹெ ஸொம! | சோமமே! |
| अभिमातिषाहः | அபிமாதிஷாஹঃ | சத்துருவை நாசஞ் செய்கின்ற |
| पयांसि | பயாம்ஸி | பால் |
| ते | தெ | உனக்குக் |
| संयन्तु | ஸம்யந்து | கிடைக்குக. அவ்வாறே, |
| वाजाः | வாஜாঃ | அவியாகிய அன்னங்கள் (உன்னை அடைவனவாகுக.) |
| वृष्णानि | வ்ருஷ்ணாநி | வீரியங்களு மடைகுக. மற்றும், |
| आप्यायमानः | ஆப்யாயமாநঃ | நிறைந்த சோமமே! நீ |
| अमृताय | அம்ருதாய | தனது, மரணமிலாத் தன்மைக்கு |
| आ | ஆ | எல்லா வகையானும் வளர்ந்து |
| उत्तमानि | உத்தமாநி | மேலானவைகளும் |
| श्रवांसि | ஶ்ரவாம்ஸி | யாம் உண்ணுதற் குரியவைகளு மான அன்னங்களைச் |
| दिवि | திவி | சுவர்க்கத்தில் |
| धिष्व | திஷ்வ | தாங்கிக்கொள்கின்றாய், |

## சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—!. கௌதம ரிஷி.**

சோமமே! பகைவர்களைக் கொல்கின்ற உன்னை, வெண்ணை யெடுக்க வேண்டுமென நியதம்பம் பண்ணிய பால் நன்கு அடைகுக. அவ்வாறே, அவியாகிய அன்னங்களும் நின்னை இனிதடைகுக. வீரியங்களும் அடைகுக. சோமமே! நீ, தனது மரண மிலாமைக்கு எல்லாவகையானும் பெருகுவோனாகி எங்களா லநுபவிக்கத் தக்க அவியாகிய சிறந்த அன்னங்களைச் சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்கின்றாய் என்பதாம். (2)

## மந்திரம் 3.

२ ३ १र २र ३ २ ३ २ ३ १ २ ३ २

604. त्वमिमा ओषधीः सोम विश्वास्त्वमपो अजनयस्त्वं गाः ।

२र २र ३ २ १ २ ३ १ २र ३ २र

त्वं * आतनोरुर्वा ३ न्तरिक्षन्त्वञ्ज्योतिषा वि तमो ववर्थ ॥ ३ ॥

இருக்கு 1-91-22.

த்வமிமா ஓஷதீঃ ஸோம விஶ்வாஸ்த்வமபோ அஜநயஸ்த்வம் காঃ ।

த்வமாதநோ ருர்வா ந்தரிக்ஷந்த்வஞ்ஜ்யோதிஷா வி தமோ வவர்த ॥

* आततन्थ, என்பது இருக்கு.

அங்வயம்.

हे सोम !, त्वं, इमाः, विश्वाः, ओषधीः, अजनयः, त्वं, अपः, त्वं, गाः, उरु, अन्तरिक्षं, त्वं, आतनोः, तमः, त्वं, ज्योतिषा, विववर्थ ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे सोम !** | 𑌹𑍇 𑌸𑍋𑌮! | சோமமே ! |
| **त्वं** | 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| **इमाः विश्वाः** | 𑌇𑌮𑌾𑌃 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌃 | இவ் வெல்லாப் |
| **ओषधीः** | 𑌓𑌷𑌧𑍀𑌃 | பச்சிலைகளையும் |
| **अजनयः** | 𑌅𑌜𑌨𑌯𑌃 | உண்டாக்கினாய். |
| **त्वं** | 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| **अपः** | 𑌅𑌪𑌃 | கொடி செடிகட்குக் காரணமாகிய நீரையு முண்டாக்கினாய். |
| **त्वं** | 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| **गाः** | 𑌗𑌾𑌃 | கோக்கள் முதலிய விலங்குகளை யுண்டாக்கினாய். |
| **उरु** | 𑌉𑌰𑍁 | விரிந்த |
| **अन्तरिक्षं** | 𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌂 | வானை |
| **त्वं** | 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| **आतनोः** | 𑌆𑌤𑌨𑍋𑌃 | பரவுமாறு செய்தாய். அதிலுள்ள |
| **तमः** | 𑌤𑌮𑌃 | இருளையும் |
| **त्वं** | 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| **ज्योतिषा** | 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾 | தனதொளியால் |
| **वि ववर्थ** | 𑌵𑌿 𑌵𑌵𑌰𑍍𑌥 | ஒழித்துவிட்டனை. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—3. கௌதம ரிஷி.

சோமமே ! நீ, இத் தரையின்கண்ணுள்ள பச்சிலைகளனைத்தையு முண்டாக்கியவனாயிருக்கின்றாய். அவ்வாறே, கொடிசெடிகட்குக் காரணமாகிய மழைநீரையு முண்டாக்கினாய். அதுபோன்றே, எல்லா விலங்குகளையு முண்டாக்கினாய். விரிந்த வானையும் பரவச் செய்தாய். அவ் வானில் எமது பார்வையை மறைக்கின்ற யாதொரு அந்தகார முண்டோ, அதையும் தனதொளியால் நாசப்படுத்தினை என்பதாம். (3)

### மந்திரம் 4.

३ १ २   ३ १ २   ३ १ २ ३ २३ १ २

605. **अग्निमीडे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् ।**

१ २   ३ १ २

**होतारं रत्नधातमम् ॥ ४ ॥**

இருக்கு 9-9-1.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌮𑍀𑌡𑍇 𑌪𑍁𑌰𑍋𑌹𑌿𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌮𑍃𑌤𑍍𑌵𑌿𑌜𑌮𑍍 ।
𑌹𑍋𑌤𑌾𑌰𑌂 𑌰𑌤𑍍𑌨𑌧𑌾𑌤𑌮𑌮𑍍 ॥

அந்வயம்.

**यज्ञस्य पुरोहितं, होतारं, ऋत्विजं, रत्नधातमं, अग्निं देवं, ईडे ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **यज्ञस्य पुरोहितं** | 𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍋𑌹𑌿𑌤𑌂 | வேள்வியின் அங்கமாகிய ஓமத்தை முடிப்பதும், அல்லது, ஆகவனீய வடிவத்தால் வேள்வியின் பூர்வத்திலிருப்பதும், |
| **होतारं** | 𑌹𑍋𑌤𑌾𑌰𑌂 | வேள்வியின் பொருட்டுத் தேவர்களையழைப்பதும், |
| **ऋत्विजं** | 𑌋𑌤𑍍𑌵𑌿𑌜𑌂 | வேட்பதும் |
| **रत्नधातमं** | 𑌰𑌤𑍍𑌨𑌧𑌾𑌤𑌮𑌂 | வேள்வியாகிய தனத்தைத் தாங்கிக்கொள்வதும், அல்லது, காப்பாற்றுவதுமாகிய |
| **अग्निं देवं** | 𑌅𑌗𑍍𑌨𑌿𑌂 𑌦𑍇𑌵𑌂 | அக்கினி தேவதையைத் |
| **ईडे** | 𑌈𑌡𑍇 | துதிக்கின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—4. விசுவாமித்திரரின் புத்திரராகிய மதுச்சந்தர் ரிஷி.

அக்கினி யென்னுந் திருநாமமுடைய தேவனைத் துதிக்கின்றேன். இம் மந்திரம் ஓதாவின்றற் (இருக்கோதுவானுற்) கூறப்பட்டதா மாதலின் ஹோதாவா (இருக்கோதுவோனு)கிய நான் துதிக்கின்றேன் என்பது பெற்றும். எவ் விதமாகிய அக்கினியை யெனின்? வேள்வியில் புரோகிதனை. (முன், இதஞ்செய்வோனை, அல்லது, இருப்பவனை,) வேந்தனுக்கு அவனுடைய புரோகிதன் இனியவை தேடுமாறு, தீயும், வேள்வியில் விரும்பிய ஓமத்தைத் (தீயோம்பலை) தேடுவதா மாதலின் இப்பெயரென்க. அல்லது, வேள்வியின் பூர்வபாகத்தில் ஆகவனீயம் என்னும் பெயரால் இருக்கப்பட்டவனை. மற்றும், எத்தன்மைய அக்கினிதேவனை யெனின்? வேட்போனாகிய

வனே. வேள்விகளில் ஹோதா வென்னும் வேட்போன் அக்கினியே யாதலி னென்க. அவ்வாறே "அக்கினியே தேவர்களுடைய ஹோதா" என மறை யுங் கூறுகின்றது. மற்றும், எத் தன்மைய அக்கினிதேவனே யெனின்? வேள் வியாகிய தனங்களை வியப்பாகத் தாங்குகின்றவனே. அல்லது, காப்பாற்று கின்றவனே. (துதிக்கின்றேன் என முடிக்க.) அக்கினி என்னுஞ் சொல்லை, யாஸ்க முனிவர் நிருத்தத்திற் பலவகையாய்ப் பொருட் படுத்தியிருக்கின்ற னர் அதை ஆண்டுக் காண்க. (4)

## மந்திரம் 5.

१ २ ३ २र ३ २ ३ २ ३ १ २३२र २र
606. तेऽमन्वत प्रथमं *नाम गोनां त्रिः †सप्त परमं नाम जानन् ।
१ २३ २३क२र३ २ ३ १ २ ३ २र २र ३ १ २
‡ता जानतीरभ्यनूषत क्षा आविर्भुवन्नरुणीर्यशसा गावः ॥ ५ ॥

இருக்கு 4-1-16.

தெऽமந்வத ப்ரथமं நாம கொநாம் த்ரிஃ ஸப்த பரமं நாம ஜாநந் ।
தா ஜாநதீரப்யநூஷத க்ஷா ஆவிர்புவந்நருணீர்யஶஸா [காவஃ ॥

அந்வயம்.

हे अग्ने!, ते, प्रथमं, गोनां, नाम, अमन्वत, परमं, त्रिः, सप्त, नाम, जानन्, ताः, जानतीः, क्षाः, अभ्यनूषत, यशसा, अरुणीः, गावः, आविर्भुवन् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे अग्ने! | ஹே அக்நே! | அக்கினியே! |
| ते | தே | நின்னைத் துதிக்கின்ற அங்கிரசர்கள், |
| प्रथमं | ப்ரथமம் | முதலில் |
| गोनां | கொநாம் | வாக்குகளுள் |
| नाम | நாம | துதிக்குச் சாதனமாகிய ஒலி மாத்திரத்தை |
| अमन्वत | அமந்வத | உணர்ந்தார்கள். பின்னர், வாக்கின் சம்பந்தமான |
| परमं | பரமம் | மேலாகிய |

* नाम धेनोः, † सप्त मातुः परमाणि विन्दन्, ‡ तज्जानती रभ्यनूषत व्रा आवि भवदरुणी यशसा गोः, என்பன இருக்கு.

| | | |
|---|---|---|
| त्रिःसप्त | த்ரிஃ ஸப்த | இருபத்தொரு எண்கொண்ட |
| नाम | நாம | தோத்திரமாயகி நாமத்தை, அல்லது, சந்தங்களை, |
| जानन् | ஜாநந் | அறிந்தார்கள். |
| ताः जानतीः | தாஃ ஜாநதீஃ | அத் தோத்திரங்களை யுணர்ந்து |
| क्षाः | க்ஷாஃ | பிரசைகள் |
| अभ्यनूषत | அப்யநூஷத | உஷாக்காலத்தில் துதித்தார்கள். பின்னர், |
| यशसा | யஶஸா | இரவியின் ஒளியோடு |
| अरुणीः | அருணீஃ | விளக்க முடையனவாய் |
| गावः | காவஃ | அவ் வாக்குகள் |
| आविर्भुवन् | ஆவிர்புவந் | வெளிப்பட்டன. |

## சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—5. வாமதேவ ரிஷி·**

அக்கினியே! தோத்திரஞ் செய்கின்ற அங்கிரசர்கள், (இருடிகள்) வாக்கின் சம்பந்த முடைய தோத்திரத்தின் காரணமாகிய ஒலிமாத்திரத்தை முதலில் உணர்ந்தார்கள். பின்னர், அவ் வாக்கின் சம்பந்தமான இருபத்தொரு எண்கொண்ட துதிசாதனங்களான மேலான தோத்திரங்களை, அல்லது, சந்தங்களை யுணர்ந்து கொண்டனர். (அச் சந்தங்களோ, காயத்திரி முதற்கொண்டு சகதி என்பதீருக ஏழு. அதி சகதி தொடங்கி அதிதிருதி யீருக ஏழு. கிருதி முதற்கொண்டு, உத்திருதியீருக ஏழு. இவ் வண்ணம் இருபத்தொன்றும்.) இவ் வாறுன வடமொழிச் சந்தங்களோடு கூடிய மந்திரங்களால் அக்கினியைத் துதித்தார்கள் என்பதாம். அவ் வணத்தையும் உஷாக்காலத்தி லுணர்ந்து துதித்தார்கள் என்க. பின்னர், இரவியின் ஒளியோடு அருண நிறமான (பிரகாசமுள்ள) வாக்குகள் வெளிப்பட்டன. அல்லது, அவ் வங்கிரசர்கள் முதலில் சுரபியின் நாமதேயத்தைச் சொன்னார்கள். பின்னர் தனது தனவடிவமானவைகளும், கள்வராற் கொண்டுபோனவைகளுமான இருபத்தொரு இரத்தினங்களை யடைந்தார்கள். பின்னர், சொன்னதைக் கேட்ட கோக்கள், பெருஞ் சத்தமிட்டன. அப்போது உஷா வெளிப்பட்டது என்பதுமாம். (5)

## மந்திரம் 6.

३ २ २२ २२ ३ १ २ ३ २ ३ २ ३क२२
607. समन्या यन्त्युपयन्त्यन्याः समानमूर्वं नद्यस्पृणन्ति ।
२ ३ १ २ १ २ ३ १ २ १ १२ २ २३ १ २ ३ १ २
तमूशुचिं शुचयो दीदिवांसम *पान्नपातमु †पयन्त्यापः ॥ ६ ॥

இருக்கு 2-35-3.

𑌸𑌮𑌨𑍍𑌯𑌾 𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌾𑌃 𑌸𑌮𑌾𑌨𑌮𑍂𑌰𑍍𑌵𑌂 𑌨𑌦𑍍𑌯𑌸𑍍𑌪𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 ।
𑌤𑌮𑍂𑌶𑍁𑌚𑌿𑌂 𑌶𑍁𑌚𑌯𑍋 𑌦𑍀𑌦𑌿𑌵𑌾𑌂𑌸𑌮𑌪𑌾𑌨𑍍𑌨𑌪𑌾𑌤𑌮𑍁𑌪𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑌃 ॥

### அங்வயம்.

अन्याः, आपः, संयन्ति, अन्याः, उपयन्ति, समानं, नद्यः, ऊर्वं, पृणन्ति,
तमु, अपान्नपातं, शुचिं, दीदिवांसं, शुचयः, उपयन्ति ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| अन्याः | 𑌅𑌨𑍍𑌯𑌾𑌃 | வேறொரு மழையின் |
| आपः | 𑌆𑌪𑌃 | நீர் |
| संयन्ति | 𑌸𑌂𑌯𑌨𑍍𑌤𑌿 | தரையில் விழுகின்றது. |
| अन्याः | 𑌅𑌨𑍍𑌯𑌾𑌃 | முன்னமே தரையின்பாலுள்ள மற்றொரு நீர் |
| उपयन्ति | 𑌉𑌪𑌯𑌨𑍍𑌤𑌿 | அதிற் கலந்து விடுகின்றது. அவ்வெல்லா நீரும் |
| समानं | 𑌸𑌮𑌾𑌨𑌂 | ஒன்றுகூடி |
| नद्यः | 𑌨𑌦𑍍𑌯𑌃 | ஆறுகிக் |
| ऊर्वं | 𑌊𑌰𑍍𑌵𑌂 | கடலின் நடுவிலுள்ள வடவானலத்தைத் |
| पृणन्ति | 𑌪𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 | திருப்தி பண்ணுகின்றன. |
| तमु | 𑌤𑌮𑍁 | அத்தகைய |
| अपान्नपातम् | 𑌅𑌪𑌾𑌨𑍍𑌨𑌪𑌾𑌤𑌮𑍍 | நீரின் பௌத்திரனாகிய |
| शुचिं | 𑌶𑍁𑌚𑌿𑌂 | நிருமலப் |
| दीदिवांसं | 𑌦𑍀𑌦𑌿𑌵𑌾𑌂𑌸𑌂 | பிரகாசமுடையதை, |
| शुचयः | 𑌶𑍁𑌚𑌯𑌃 | சுத்த நீர் |
| उपयन्ति | 𑌉𑌪𑌯𑌨𑍍𑌤𑌿 | இனிது அடைகின்றது. |

* अपान्नपातं, † परितस्थुरापः, என்பன இருக்கு.

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—6. கிருத்சமத ரிஷி.

ஒருவகையாகிய மழைநீர், பூமியை யடைகின்றது. முன்னர் அதி லுள்ள மற்றொருவகை நீர் அதிற் கலந்துகொள்கின்றது. அத்தகைய எல்லா நீரும் ஒன்று சேர்ந்து ஆறாகிக் கடலின் நடுவிலுள்ள வடவாக்கினியைத் திருப்தி பண்ணுகின்றது. நீரின் பௌத்திரனாகியதும், நிருமலமானதும், பிர காசிப்பதுமாகிய அதையே சுத்த நீர் அடைகின்றது. அதாவது இது மின்ன லென்னும் அக்கினிவடிவாய் மேகத்திலிருந்துகொண்டு, எம்மை உண்டாக் கியது என்னும் புத்தியால் வடவாக்கினி வடிவமாக இருக்கப்பட்ட அதை வழிபடுகின்றது என்பது பொருள். அல்லது, ஒருவிதமான நீர், வேட் போர் சோமரச மெடுக்கச் செய்துள்ள குழியிலிட்ட சோமரச முதலியவை களிற் றெளிக்கப்பட்ட 'வசதீவரி' என்னு நீருடன் சேர்ந்துக்கொண்டது. அந்த 'வசதீவரி' என்னும் நீரும், மற்றொரு நீருடன் கலந்தது. இவைகள் ஒன்றுகூடி வேள்வியை நிறைவேற்றுவதாய் அதில் உண்டாகும் மழை வாயி லாக ஆறுகளாகி வடவானலத்தைத் திருப்தி பண்ணுகின்றன என்பது முதலியன சமுமாம். (6)

## மந்திரம் 7.

१र २र ३ १ ३ २ १र२र ३१ २र
608. आप्रागाद्भद्रा युवतिरह्नः केतून्त्समीर्त्सति ।
१ २ ३ २ ३१ २ ३ १ २ ३ १ २ ३ १ २
अभूद्भद्रा निवेशनी विश्वस्य जगतो रात्री ॥ ७ ॥

ஆப்ராகாத்₃ப₄த்₃ரா யுவதிரஹ்ந꞉ கேதூந்த்ஸமீர்த்ஸதி ।
அபூ₄த்₃ப₄த்₃ரா நிவேஶநீ விஶ்வஸ்ய ஜக₃தோ ராத்ரீ ॥

அந்வயம்.

भद्रा, युवतिः, आप्रागात्, अह्नः, केतून्, समीर्त्सति, भद्रा, रात्री, विश्वस्य, जगतः, निवेशनी अभूत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| भद्रा | ப₄த்₃ரா | சுகந் தருவதும் |
| युवतिः | யுவதி꞉ | இருளைப் புணரச் செய்வதுமாகிய இரவு, |
| आप्रागात् | ஆப்ராகா₃த் | எதிராய் வருகின்றது. |
| अह्नः | அஹ்ந꞉ | சந்திரனுடைய |

| | | |
|---|---|---|
| केतून् | கெதூ௩ | கிரணத்துடன் |
| समीप्संति | ஸமீப்ஸந்தி | இனிது சேரவிரும்புகின்றது. இதனால் |
| भद्रा | ஹத்ரா | மங்களமாகிய |
| रात्री | ராத்ரீ | இரவு |
| विश्वस्य | விஶ்வஸ்ய | எல்லா |
| जगतः | ஜகதঃ | உலகங்களையும் |
| निवेशनी अभूत् | நிவெஶநீ அஹூத் | உறங்கவைப்பதாகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—7. வாமதேவ ரிஷி.

இரவியின் வெப்பத்தைத் தணித்துக் களிப்பைத் தருகின்ற இருளைக் கலக்கச் செய்யும் இரவு எதிராய் வருகின்றது. சந்திரனுடைய கிரணங்களை இனிது புணர விரும்புகின்றது, இதனாலேயே மங்களமாகிய இரவு உலகனைத்தையும் நித்திரையில் விழச்செய்வதாகின்றதென்க. பகலில் அதன் தொழிலாற் றுன்படைந்த பிராணிகளனைவரையும் தனது பற்றுக் கோடுகளில் தூங்கவைக்கின்றது என்பதாம். (7)

## மந்திரம் 8.

३२ ३ १ २ ३ २ ३ २र ३ ३ ३ १ २ ३ १ २३१ २

609. *प्रक्षस्य वृष्णो अरुषस्य नू†महः प्र नो वचो विदथा जातवेदसे।

३ १२ ३१र २र३ २ ३ १ २ ३ १२३१२

वैश्वानराय मतिर्नव्यसे शुचिः सोम इव पवते चारुरग्नये ॥ ८ ॥

இருக்கு—9-8-1.

ப்ரக்ஷஸ்ய வ்ருஷ்ணோ அருஷஸ்ய நூமஹঃ ப்ர நோ வசோ [வித஥ா ஜாதவெதஸெ ।

வைஶ்வாநராய மதிர்நவ்யஸெ ஶுசிঃ ஸோம இவ பவதெ [சாருரக்நயெ ॥

அந்வயம்.

(हे वैश्वानर!,) प्रक्षस्य, वृष्णः, अरुषस्य, महः, नु, नः, वचः, विदथा, वैश्वानराय, प्र, नव्यसे, जातवेदसे, अग्नये, शुचिः, चारुः, मतिः, सोमः इव, पवते ॥

---

* पृक्षस्य, † सतः प्रनु वोच, ‡ जातवदसे, § नव्यसीं, என்பன இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे वैश्वानर !) | (ஹெ வைஶ்வாநர !) | (வைசுவாநரனே !) |
| प्रक्षस्य | ப்ரக்ஷஸ்ய | வியாபகனும், அல்லது, அவியாகிய அன்னமுடையவனும். |
| वृषणः | வ்ருஷ்ணஃ | விரும்பியதைப் பொழிபவனும், |
| अरुषस्य | அருஷஸ்ய | பிரகாசமுடையவனும், |
| महः | மஹஃ | போற்றத் தக்கவனுமாகிய உனது ஆற்றலை, அல்லது, ஒளியை |
| नु | நு | விரைவாகத் துதிக்கின்றேன். இதுபற்றி |
| नः | நஃ | எங்களுடைய |
| वचः | வசஃ | வாக்குகள் |
| विदथा | விதயா | வேள்வியில் |
| वैश्वानराय | வைஶ்வாநராய | அக்கினியின் பொருட்டு |
| प्र | ப்ர | அடைகின்றன. (துதிக்கின்றன.) |
| नव्यसे | நவ்யஸெ | மிகப் புதியதும் (அவியால் வளர்ந்ததும்), |
| जातवेदसे | ஜாதவெதஸெ | உண்டான பிராணிகளனைத்தையு முணர்ந்ததுமாகிய |
| अग्नये | அக்நயெ | அக்கினியின் பொருட்டுச் |
| शुचिः | ஶுசிஃ | சுத்தம் பண்ணப்பட்டதும் |
| चारुः | சாருஃ | இன்பங் கொடுப்பதும் |
| मतिः | மதிஃ | மனனம் பண்ணத் தக்கதுமாகிய தோத்திரம் |
| सोम इव | ஸொம இவ | சோமரசம் பாத்திரத்திற் பொங்கியெழுகின்றது போல் |
| पवते | பவதெ | எனதகத்தி லியற்கையாய் எழுகின்றது. |

## சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. பரத்துவாச ரிஷி.

நிறைந்ததும், அல்லது, அவியாகிய அன்னத்தை யுடையதும், விரும்பியதைப் பெய்வதும், விளங்குவதுமாகிய வைசுவாநராக்கினியினுடைய போற்றத் தக்க ஆற்றலை, அல்லது, பிரகாசத்தை விரைவிற் றுதிக்கின்றேன். இதனாலேயே எனது வாக்கு வேள்வியிற் றுதிக்கின்றதென்க. அதாவது உண்டான பிராணிகளை யுணர்ந்த, அல்லது, தனமுடைய அக்கினியைக் குறித்து (எமது வாக்குத்) துதிக்கின்றதென்பது பொருள். மேற் கூறிய பொருளை அன்பின் பொருட்டு வேறோராற்றாற் கூறப்படுகின்றது ;-

மிகப் புதிய (அவியால் வளர்ந்த) அக்கினியின் பொருட்டு, நிருமலமான வைகளும், அல்லது, துதிப்போர்களைச் சுத்தப்படுத்துபவைகளும், மங்கள கரமானவைகளும், மனனம் பண்ணத் தக்கவைகளுமான துதிகள், என்னிடத்திலிருந்து எழுகின்றன. எவை போலெனின்? தசாபவித்திரமுள்ள வடிக்கும் ஆடையையுடைய பாத்திரத்தினின்றும், சோமரசம் பொங்கியெழுவது போல எழுகின்றது என்பதாம். (8)

## மந்திரம் 9.

१ २ ३ १ २र ३२ ३२र ३ ३ ३र २र १ २
610. विश्वे देवा मम शृण्वन्तु *यज्ञमुभे रोदसी अपान्नपाच्च मन्म ।
२ ३१ २ २ १ ३ २ ३ ३ २ २
मा वो वचांसि परिचक्ष्याणि वोचं सुम्नेष्विद्वो अन्तमा मदेम ॥

இருக்கு 9-52-14.

விஶ்வே தேவா மம ஶ்ருண்வந்து யஜ்ஞமுபே ரோதஸீ அபாந்
[பாச்ச மந்ம ।
மாவோ வசாம்ஸி பரிசக்ஷ்யாணி வோசம் ஸும்நேஷ்வித்வோ
[அந்தமா மதேம ॥

அந்வயம்.

विश्वे, देवाः, मन्म, मम, यज्ञं, शृण्वन्तु, अपान्नपात्, उभे, रोदसी, परिचक्ष्याणि, वचांसि, वः, मावोचं, वः, अन्तमाः, सुम्नेषु इत्, मदेम ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विश्वे | விஶ்வே | எல்லாத் |
| देवाः | தேவாः | தேவர்களும், |
| मन्म | மந்ம | மதித்தற்குரிய |
| मम | மம | என்னுடைய |
| यज्ञं | யஜ்ஞம் | பூசையை, அல்லது, அவியை |
| शृण्वन्तु | ஶ்ருண்வந்து | ஏற்றுக் கொள்வார்களாக. |
| अपान्नपात् | அபாந்நபாத் | அந்தரிக்ஷம் அக்கினி (என்னும்) |
| उभे | உபே | இரண்டு வகையாகிய |
| रोदसी | ரோதஸீ | வானுலக, மண்ணுலக தேவதைகள் உள்ளத்திற் கொள்வார்களாக. |
| परिचक्ष्याणि | பரிசக்ஷ்யாணி | தள்ளத் தக்கனவாய |

* यज्ञिया, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| वचांसि | வசாம்ஸி | வசனங்களை |
| वः | வஃ | உங்கட்குச் |
| मावोचं | மாவொசம் | சொல்லமாட்டேன். (இனிய துதியையே கூறுகின்றேன். இதனால்) |
| वः | வஃ | உங்களை |
| अन्तमाः | அந்தமாஃ | மிகச்சமீபித்துள்ள யாங்கள் |
| सुम्नेषु इत् | ஸும்நேஷு இத் | நீங்கள் கொடுத்துள்ள சுகத்தின் கண்ணேயே |
| मदेम | மதேம | களிப்புறுகின்றோம். |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—9. பரத்துவாச ரிஷி.

எல்லாத் தேவதைகளும், மனனஞ் செய்யத்தக்க எனது பூசைகளை, அல்லது, அவிகளை ஏற்றுக்கொள்வார்களாக. மத்திய வுலகிலுள்ள அக்கினியும், வானுலகு மண்ணுலகும், என்னுடைய தோத்திரத்தை மனதிற் கொள்வனவாகுக. இனிப்பிரத்தியட்சமாகிய தோத்திரம்:—தேவர்காள்! உங்கட்கு, தள்ளத்தக்க வாக்குகளைப் (தோத்திரங்களை) படிக்கமாட்டேன். மற்றோ, இனிய தோத்திரங்களையே படிப்பேன். இதனால், உங்கட்கு மிக்க அருகில் இருப்பவர்களான யாங்கள், உங்களாற் கொடுக்கப்பட்ட சுகங்களிலேயே இருந்துக்கொண்டு களிப்படைவோமாக. (9)

மந்திரம் 10.

१ २ ३ १ २ ३ १र २र ३ २
611. यशो मा द्यावापृथिवी यशो मेन्द्रबृहस्पती
३ १ २ ३ १ २ ३ १र
यशो भगस्य विन्दतु यशो मा प्रतिमुच्यताम् ।
३ २ २ ३ २ ३ १ २ ३ १ २
यशस्व्या ३ स्याः सꣳसदोऽहं प्रवदिता स्याम् ॥ १० ॥

யஶோ மா த்³யாவாப்ருதி²வீ யஶோ மேந்த்³ரப்³ருஹஸ்பதீ
யஶோ ப⁴க³ஸ்ய விந்த³து யஶோ மா ப்ரதிமுச்யதாம் ।
யஶஸ்வ்யா ஸ்யா꞉ ஸம்ஸதோ³ঽஹம் ப்ரவதி³தா ஸ்யாம் ॥

அந்வயம்.

हे देव !, द्यावापृथिवी, यशः, मा, विन्दतु, इन्द्रबृहस्पती, यशः, मा, भगस्य, यशः, मा, मा प्रतिमुच्यतां, अस्याः, संसदः, यशः, अहं, यशस्वी, प्रवदिता, स्याम् ॥

பதவுரை.

| हे देव ! | ஹே தேவ ! | தேவனே ! |
|---|---|---|
| द्यावापृथिवी | த்யாவாப்ருதிவீ | வானுலக மண்ணுலகங்களிலுள்ள |
| यशः | யஶ: | கீர்த்தியானது |
| मा | மா | எனக்குக் |
| विन्दतु | விந்தது | கிடைக்குக. |
| इन्द्रबृहस्पती | இந்த்ரப்ருஹஸ்பதீ | இந்திர பிருகற்பதிகட்குள்ள |
| यशः | யஶ: | கீர்த்தியும் |
| मा | மா | எனக்குக் கிடைக்குக. |
| भगस्य | பகஸ்ய | ஆதித்தனுடைய |
| यशः | யஶ: | கீர்த்தியும் |
| मा | மா | எனக்குக் கிடைக்குக. |
| मा प्रतिमुच्यतां | மா ப்ரதிமுச்யதாம் | இப்பெருங் கீர்த்தி எப்போதும் எம்மிடத்து நீங்காதிருக்குக. |
| अस्याः | அஸ்யா: | இந்தச் |
| संसदः | ஸம்ஸத: | சபையின் |
| यशः | யஶ: | கீர்த்தியுங் கெடாதிருக்குக. |
| अहं | அஹம் | யான் |
| यशस्वी | யஶஸ்வீ | கீர்த்தி யுடையவனும் |
| प्रवदिता | ப்ரவதிதா | பெரும் பேச்சாளனும் |
| स्यां | ஸ்யாம் | ஆவேனாக. |

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—10. வாமதேவ ரிஷி.

வானுலக மண்ணுலகங்களின் கீர்த்தியானது துதிப்போனாகிய எனக்குக் கிடைக்குக. மற்றும், இந்திர, பிருகற்பதிகளின் கீர்த்தியும் எனக்குக் கிடைக்குக. இன்னும், ஆதித்தனுடைய கீர்த்தியும் எனக்குக் கிடைக்குக. பெருங் கீர்த்தியானது எம்மைவிட்டு நீங்காதிருக்குக. இச் சங்கத்தின் கீர்த்தியுங் கெடாதிருக்குக. யாண்டும் யான் கீர்த்தியுடையவனும் மிகப் பேசுவோனும் ஆவேனாக. (10)

## மந்திரம் 11.

१ २ ३ २ ३क२र ३ १ २ ३ १ २ ३ १ २ १ २ ३ २

612. इन्द्रस्य नु वीर्याणि प्रवोचं यानि चकार प्रथमानि वज्री ।

२ ३ २ ३ २ ३ २ ३ २ ३ १ २ ३ १ २

अहन्नहिमन्वपस्ततर्द प्रवक्षणा अभिनत्पर्वतानाम् ॥ ११ ॥

இருக்கு 1-32-1.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌨𑍁 𑌵𑍀𑌰𑍍𑌯𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑍋𑌚𑌂 𑌯𑌾𑌨𑌿 𑌚𑌕𑌾𑌰 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌨𑌿 𑌵𑌜𑍍𑌰𑍀 ।
𑌅𑌹𑌨𑍍𑌨𑌹𑌿𑌮𑌨𑍍𑌵𑌪𑌸𑍍𑌤𑌤𑌰𑍍𑌦 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑌣𑌾 𑌅𑌭𑌿𑌨𑌤𑍍𑌪𑌰𑍍𑌵𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 ॥

அந்வயம்.

वज्री, प्रथमानि, यानि, वीर्याणि, चकार, नु, (तस्य) इन्द्रस्य वीर्याणि, प्रवोचं, अहिं, अहन्, अनु, अपः, ततर्द, पर्वतानां, वक्षणाः, प्राभिनत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वज्री | 𑌵𑌜𑍍𑌰𑍀 | வச்சிராயுத மேந்திய இந்திரன் |
| प्रथमानि | 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌨𑌿 | முன்னுள்ள, அல்லது, முதன்மையான |
| यानि | 𑌯𑌾𑌨𑌿 | எந்தப் |
| वीर्याणि | 𑌵𑍀𑌰𑍍𑌯𑌾𑌣𑌿 | பராக்கிரம காரியங்களைச் |
| चकार | 𑌚𑌕𑌾𑌰 | செய்தனனோ, |
| नु | 𑌨𑍁 | விரைவில் |
| (तस्य) इन्द्रस्य | (𑌤𑌸𑍍𑌯) 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 | அவ் விந்திரனுடைய |
| वीर्याणि | 𑌵𑍀𑌰𑍍𑌯𑌾𑌣𑌿 | பராக்கிரமங்களைச் |
| प्रवोचं | 𑌪𑍍𑌰𑌵𑍋𑌚𑌂 | சொல்கின்றேன். (அதாவது) |
| अहिं | 𑌅𑌹𑌿𑌂 | மேகத்தைக் |
| अहन् | 𑌅𑌹𑌨𑍍 | கடிந்தனன். |
| अनु | 𑌅𑌨𑍁 | பின்னர் |
| अपः | 𑌅𑌪𑌃 | நீரைச் |
| ततर्द | 𑌤𑌤𑌰𑍍𑌦 | செலுத்தினன். (தரையில் வீழ்த்தினன்) |
| पर्वतानां | 𑌪𑌰𑍍𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 | மலைகளின் மேல். |
| वक्षणाः | 𑌵𑌕𑍍𑌷𑌣𑌾𑌃 | ஓடுகின்ற நதிகளை |
| प्राभिनत् | 𑌪𑍍𑌰𑌾𑌭𑌿𑌨𑌤𑍍 | கரையைக் கெல்லி, ஓடச் செய்தனன். (என்பதாம்.) |

### சாயண பாஷ்யம்.

கண்டம்—3. இருக்கு—11. இரணியத்தூப ரிஷி.

வச்சிராயுத மேந்திய இந்திரன், முன்னிருந்த, அல்லது, முக்கியமான எந்தப் பராக்கிரம முடைய காரியங்களைச் செய்துள்ளானோ, அவ் விந்திர னுடைய பராக்கிரம காரியங்களை விரைவிற் சொல்கின்றேன். அவைகள் யாவைகளெனின்? அவைகளைக் கூறுவாம்:—மேகத்தைப் பிளந்தனன். அஃதோர் பராக்கிரம காரியமாம். பின்னர், நீரைத் துன்புறுத்தினன். அதாவது பூமியில் வீழ்த்தினன். இஃது இரண்டாவது பராக்கிரம காரிய மாம். மலைகளின் சம்பந்தமாய்ச் செல்கின்ற ஆறுகளை இருகரைகளையும் கெல்லுவதினால் மிகப் பெருகச் செய்தனன். இஃதோ, மூன்றாவது பராக் கிரம காரியமா மென்க. (11)

### மந்திரம் 12.

३ १२ ३ ३ १ ३ १ २ ३ २ ३ १ २३ १३ ३ २
613. अग्निरस्मि जन्मना जातवेदा घृतं मे चक्षुरमृतं म आसन् ।
३ १२३ १र २र ३ १र २र३ १ २ ३ १२ ३ १ २
त्रिधातुरर्को रजसो *विमानोऽजस्रं ज्योतिर्हविरस्मि सर्वम् ॥१२॥

இருக்கு—3-26-7.

அக்³நிரஸ்மி ஜந்மநா ஜாதவேதா³ க்⁴ருதம் மே சக்ஷுரம்ருதம் ம [ஆஸந் ।
த்ரிதா⁴துரர்கோ ரஜஸோ விமாநோऽஜஸ்ரம் ஜ்யோதிர்ஹவி [ரஸ்மி ஸர்வம் ॥

அந்வயம்.

(हे कुशिक!,) अग्निः, अहं, जन्मना एव, जातवेदा, अस्मि, मे, चक्षुः, घृतं, अमृतं, मे, आसन्, अर्कः, त्रिधातुः, रजसः, विमानः, अजस्रं, ज्योतिः, हविः, सर्वं, अस्मि,

(அல்லது)

अग्निः, अस्मि, जन्मना, जातवेदाः, घृतं मे चक्षुः, अमृतं, मे, आसन्, त्रिधातुः, अर्कः, रजसः, विमानः, अजस्रं, ज्योतिः, सर्वं हविः, अस्मि ॥

* विमानो धर्मो என்பது இருக்கு.

## பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे कुशिक !) | (ஹே குஶிக !) | விசுவாமித்திரமுனிவரின் பிதாவாகிய குசிக ரிஷியே! போக்கிய மென்னும் அன்னம், |
| अग्निः | அக்நி: | போக்தாவாகிய அக்கினி, என்னுமிவற்றுள் |
| अहं | அஹம் | அக்கினியாகிய நான், |
| जन्मना (एव) | ஜந்மநா (ஏவ) | பிறப்பினின்றே |
| जातवेदा अस्मि | ஜாதவேதா அஸ்மி | ஆன்ம வடிவாய் யிருக்கின்றேன். (கேட்டல் முதலியன இன்றிப் பிரம சாக்ஷாத்காரமுடையேன்.) |
| मे | மே | எனது |
| चक्षुः | சக்ஷு: | நேத்திரம் |
| घृतं | க்ருதம் | மிக விளங்குகின்றது. |
| अमृतं | அம்ருதம் | கருமபயன் |
| मे | மே | என்னுடைய |
| आसन् | ஆஸந் | வாயிலிருக்கின்றது. (யானே போக்தா.) |
| अर्कः | அர்க: | வாயுவும் நானாயிருக்கின்றேன். |
| त्रिधातुः | த்ரிதாது: | மூவகைப் பிரிவினுள், வாயு வடிவத்தால் |
| रजसः | ரஜஸ: | அந்தரிக்ஷத்திற்கு |
| विमानः | விமாந: | அதிட்டானமும் நானா யிருக்கின்றேன். |
| अजस्रं | அஜஸ்ரம் | என்றுமுள்ள |
| ज्योतिः | ஜ்யோதி: | வானுலகிற்கு அதிட்டானமாகிய, இரவியும் நானா யிருக்கின்றேன். |
| हविः | ஹவி: | போக்கியப் பொருள்கள் |
| सर्वं | ஸர்வம் | அனைத்தும் |
| अस्मि | அஸ்மி | நானா யிருக்கின்றேன். |

அல்லது

| | | |
|---|---|---|
| अग्निः | அக்நி: | யான் அக்கினியாக (தேவர்கட்கு அவியைச் சேர்ப்பிப்பவனாக) |

| | | |
|---|---|---|
| अस्मि | அஸ்மி | இருக்கின்றேன். |
| जन्मना | ஜந்மநா | பிறந்த காலத்தினின்றே |
| जातवेदाः | ஜாதவேதா: | ஞானமுடையோனு யிருக்கின்றேன். அல்லது, தோன்றின பொருள்களனைத்தையுந் தன தான்மசொரூபமாய்க் காணுஞ் சர்வான்மாவாயிருக்கின்றேன். ஏனெனின்? |
| घृतं मे चक्षुः | க்ருதம் மே சக்ஷு: | தீயில் விட்ட நெய்யென, எனது கண் பிரகாசிக்கின்றது. |
| अमृतं | அம்ருதம் | கெடாத ஒளியாகிய அமுதம் |
| मे | மே | என்னுடைய |
| आसन् | ஆஸந் | முகமா யிருக்கின்றது. |
| त्रिधातुः अर्कः | த்ரிதாது: அர்க்க: | மூவகைப் பிரிவாயுள்ள பிராணனும் நானு யிருக்கின்றேன். |
| रजसः | ரஜஸ: | அந்தரிக்ஷத்தைப்பற்றி |
| विमानः | விமாந: | விசேடமாய்ப் பரிணமிக்கும் வாயுவும் நானு யிருக்கின்றேன். |
| अजस्रं | அஜஸ்ரம் | இடையறுது வெப்பந்தரும் |
| ज्योतिः | ஜ்யோதி: | இரவியும் நானு யிருக்கின்றேன். விரிப்பதிலென்? |
| सर्वं हविः अस्मि | ஸர்வம் ஹவி: அஸ்மி | நெய், புரோடாச, முதலிய தேவவுணவுகள் எல்லாம் நானுயிருக்கின்றேன் என்க. |

### சாயண பாடியம்.

**கண்டம்—3. இருக்கு—2. விசுவாமித்திரர் ரிஷி.**

இம் மந்திரமும், மேல்வரும் மந்திரமும் அக்கினியைத் துதிக்கின்றனவாம். அதில் இம் மந்திரம், எல்லா வடிவமாய் அக்கினியைத் துதித்தலாம். இவ் வுலகம், (அன்னம்) போக்கிய வடிவாகவும், போத்துரு (புசிப்போன்) வடிவாகவும் இருவகைப்பட்டதாம். அவ்வாறே, "இதுவே அன்னமும், அன்னமுண்போனுமாம். சோமமே அன்னம், அக்கினியே அன்னமுண்போன்" என மறையுங் கூறுகின்றது. ஆண்டுப் போக்திரு வருக்க வடிவமாய் அன்னத்தையுண்பது அக்கினியாம். அவ் வக்கினியும், அக்கினி, வாயு, ஆதித்தன், என்னும் (தனையுள்ளடக்கிய மூவகை) வேற்றுமையால், மூவகையாகிய மண்ணுலகம், அந்தரிக்கவுலகம், வானுலகம் என்பவைகளை அதிட்டித்து நிற்கின்றது. அவ்வாறே "அது தன்னை மூவகையாக்கியது இரண்டாவது இரவி மூன்றுவதுவாயும்" என வாசசனேய மென்னும் மறையுங் கூறுகின்றது. அவற்றுள், அவ் வக்கினியாகிய நான் பிறப்பிலிருந்தே சாதவேதா

வாக (அதாவது கேட்டன், முதலியன இன்றியே இயற்கையில் சாக்ஷாத்கா ரம் பண்ணிய பரமான்ம வடிவாக) இருக்கின்றேன் என்பதாம். உலகத்தை விளக்குகின்ற பிரகாச வடிவம் எனது நேத்திரம் இப்போது மிக ஒளிர்கின் றது. திவ்யமாகிய கரும பலம் முதலிய விடய போகங்கள் எனது முகத்தில் (வாயில்) இருக்கின்றன. எல்லாப் போக்தா வருக்க வடிவங்களுந் தானாய் இருத்தலின் என்க. இவ்வாறு தனதான்மாவிற்குப் பூமியின் அதிட்டானத் தன்மையைக் கூறிவிட்டு, வாயு வடிவாய் அந்தரிட்சத்திற்கு அதிட்டானத் தன்மை கூறத் தொடங்கப்படுகின்றது:—மூலத்தில் அர்க்கன் என்பது முதலியனவற்றால். ஈண்டு அர்க்கன் என்றது வாயுவாம் "அதுவே அர்க்க னுடைய அர்க்கத் தன்மை" என மறையுங் கூறுதலின் என்க. அப் பிரா ணன் நானாயிருக்கின்றேன். அதாவது மூவகையாகத் தன்னைப் பிரித்து அவற்றுள் வாயு வடிவால் அந்தரிட்சத்திற்கு அதிட்டாதாவாயிருக்கின்றேன் என்பதாம். அவ்வாறே, ஆதித்தன் வடிவால் வானுலகிற்கு அதிட்டானத் தன்மை கூறப்படுகின்றது (மூலத்தில்) "கெடாத சோதி" என. அதாவது வானுலகிற்கு அதிட்டான மென்னும் நித்தியப் பிரகாசனாகிய ஆதித்தனும் நானாயிருக்கின்றேன் என்பதாம். இவ்வாறாய போக்தா வடிவமாய்த் தன் னைச் சிந்தித்துக்கொண்டு, போக்கிய வடிவாயும் சிந்திக்கின்றார்.—மூலத்தில் யாதொரு அவிகள், என்பது முதலியவற்றால். பிரசித்தியான போக்கியங் கள் (அன்னங்கள்) அனைத்தும் நானாயிருக்கின்றேன் என்பதாம்.

அல்லது, நான் அக்கினியா யிருக்கின்றேன். அதாவது தேவர்கட்கு அவி களைச் சேர்ப்பிக்கின்றே னாதலின் ஒளி முதலிய குணமுடையனா யிருக்கின் றேன் என்பதாம். மற்றும், பிறப்பினின்றே ஞானமுடையவனா யிருக்கின் றேன் என்பதாம். தோன்றிய கணத்திலேயே எல்லா முணர்ந்தோனா யிருக் கின்றேன் என்க. அல்லது, தோன்றின வனைத்தையும் தனதான்மாவாய் உணர் கின்றது சாதவேதாவாம். அதாவது எல்லா வடிவா யிருக்கின்றேன் என்ப தாம். அஃதெவ்வா றெனின்? கூறப்படுகின்றது:—பிரசித்தியாகிய நெய், எனது நேத்திரமாயிருக்கின்றது. அதாவது நேத்திரம் போன்றதா மென் பதாம். என்னை? உலகில் கண்ணும் பிரகாசிக்கின்றது; ஆவின் நெய்யும் (தீயாகிய) என்பால் விடப்படின் என்னைப் (அக்கினியாகிய என்னை) பிரகாசிப் பிப்பதாயிருக்கின்றது, ஆதலின் என்க. ஒளியென்னும் அமுதமானது, அதாவது கெடாத பிரகாசம், எனது வாயில் இருக்கின்றது. பிராணன், அபானன், என்னும் மூவகையா யுள்ளதும், போற்றத் தக்கதுமாகிய பிரா ணனும் நானாயிருக்கின்றேன். அவ்வாறே அந்தரிக்ஷத்தினுடைய, விமா னம்=விசேடமா யுண்டாக்குவது, என்னும் வாயுவும் நானாயிருக்கிறேன். மற்றும், இடைவிடாது வெப்பந்தருஞ் சூரியனும் நானாயிருக்கின்றேன். விரிப்பதி லென்? நெய், புரோடாச முதலிய இந்த அவி வடிவத்தால்

உபலக்கணமா புணரப்பட்ட அவ் வனைத்தும் நானுயிருக்கின்றேன் என்பதாம். "உண்மையில் இவ் வனைத்தும் பிரமம்" என மறையுங் கூறுகின்றதா மாதலின் என்க. அவ் வக்கினியை எல்லா வடிவமாகக் கூறியதால் அக்கினியே பரப்பிரமம் எனப்பட்டது. (காண்க.) (12)

## மந்திரம் 13.

२ ३ २ ३१२ २२ ३१२ २२ ३१२ २२३ १२

614. पात्यग्निर्विपो अग्रं पदं वेः *पाति यह्वश्चरणं सूर्यस्य ।

२ ३ १ २ ३१ २ ३१२ २२ ३ १ २ ३ १२ ३ २

पाति नाभा सप्तशीर्षाणमग्निः पाति देवानामुपमादमृष्वः ॥ १३ ॥

இருக்கு 3-5-5.

வாத்யக்நிர்விபொ அக்ரம் பதம் வெ: வாதி யஹ்வச்சரணம் [ஸூர்யஸ்ய ।

வாதி நாபா ஸப்தசீர்ஷாணமக்நி: வாதி தெவாநா முபமாத [ம்ருஷ்வ: ॥

அந்வயம்.

अग्निः, वेः, विपः, अग्रं, पदं, पाति, यह्वः, सूर्यस्य, चरणं, पाति, नाभा, सप्तशीर्षाणं, पाति, ऋष्वः अग्निः, देवानां उपमादं, पाति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अग्निः | அக்நி: | அக்கினி தேவதை |
| वेः | வெ: | யாண்டும் நிறைந்த |
| विपः | விப: | பூமியின் சம்பந்தமாய் |
| अग्रं | அக்ரம் | முக்கியமாயுள்ள |
| पदं | பதம் | இடத்தைக் |
| पाति | வாதி | காப்பாற்றுகின்றது. |
| यह्वः | யஹ்வ: | மகத்தாகிய அக்கினி, |
| सूर्यस्य | ஸூர்யஸ்ய | இரவியின் |
| चरणं | சரணம் | வழியாகிய அந்தரிட்சத்தைக் |
| पाति | வாதி | காப்பாற்றுகின்றது. |
| नाभा | நாபா | அந்தரிட்சத்தில் (வானில்) |
| सप्तशीर्षाणं | ஸப்தசீர்ஷாணம் | மருத் கணத்தைக் |

* पाति प्रियं रिपो अग्रे, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| पाति | வாதி | காப்பாற்றுகின்றது. |
| ऋष्व: अग्नि: | ருஷ்வ: அக்நி: | காணற்குரிய இவ் வக்கினி |
| देवानां उपमादं | தேவாநாம் உபமாதம் | தேவர்கட்குக் களிப்பைக்கொடுக்கும் வேள்வியைக் |
| पाति | வாதி | காப்பாற்றுகின்றது. |

### சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—14. விசுவாமித்திர ரிஷி.

அக்கினி, யாண்டும் நிறைந்துள்ள பூமியின் சிறந்த இடங்களைக் காப்பாற்றுகின்றது. மகத்தாகிய அக்கினி, இரவியின் மார்க்கமாகிய அந்தரிக்ஷத்தைக் காப்பாற்றுகின்றது. அந்தரிட்சத்தின் நடுவில் மருத் கணத்தைக் காப்பாற்றுகின்றது. பார்க்கத்தக்க இவ் வக்கினி, தேவர்கட்குக் களிப்பையுண்டாக்கும் வேள்வியைக் காப்பாற்றுகின்றது என்பதாம். (13)

## மூன்றாவது கண்டம்

முற்றும்.

---

## நான்காவது கண்டம்.

---

## பிரபாடகம்—6. அத்தியாயம்—6. கண்டம்—1.

பன்னிரண்டு மந்திரங்களாலானது.

---

தேவதைகள் :—2, அக்கினி. 3, கிருது. 3, 6-புருடன். 7, சிருட்டா. 8, வான், மண். 9, 11, இந்திரன். 10, ஆன்மா. 13, கோ. சந்தம் :—1, 2, பந்தி. 3, 7, 9, 10, அநுஷ்டுப். சுரம் :—1, 2, பஞ்சமம். 4, 7, 9. 10, காந்தாரம். 7, 11, 12, தைவதம். இருடிகள் ஆங்காங்கு கூறப்படுவார்கள்.

### மந்திரம் 1.

१ २ ३ १ २३ २ ३ १ २

615. भ्राजन्त्यग्ने समिधान दीदिवो जिह्वा चरत्यन्तरासनि ।

२र २र ३ १२ ३ २ २र २र ३१ २

स त्वन्नो अग्ने पयसा वसुविद्रयिं वर्चो दृशेऽदाः ॥ १ ॥

𑌭𑍍𑌰𑌾𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑍇 𑌸𑌮𑌿𑌧𑌾𑌨 𑌦𑍀𑌦𑌿𑌵𑍋 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 𑌚𑌰𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌾𑌸𑌨𑌿 ।
𑌸 𑌤𑍍𑌵𑌂 𑌨𑍋 𑌅𑌗𑍍𑌨𑍇 𑌪𑌯𑌸𑌾 𑌵𑌸𑍁𑌵𑌿𑌦𑍍𑌰𑌯𑌿𑌂 𑌵𑌰𑍍𑌚𑍋 𑌦𑍃𑌶𑍇𑌽𑌦𑌾𑌃 ॥

அந்வயம்.

समिधान, दीदिवः, अग्ने!, भ्राजन्ती, आसनि, अन्तः, जिह्वा, चरति, अग्ने!, वसुवित्, सः त्वं, नः पयसा, रयिं, दृशे, वर्चः, अदाः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| समिधान | 𑌸𑌮𑌿𑌧𑌾𑌨 | வேட்போர்களால் ஒளி மிக வளர்க்கப்பட்டதும், |
| दीदिवः | 𑌦𑍀𑌦𑌿𑌵𑌃 | எவற்றினும் மேலாய்ப் பிரகாசிப்பதுமாகிய |
| अग्ने ! | 𑌅𑌗𑍍𑌨𑍇 ! | அக்கினியே! (உனது) |
| भ्राजन्ती | 𑌭𑍍𑌰𑌾𑌜𑌨𑍍𑌤𑍀 | பிரகாசமாகிய |
| आसनि अन्तः | 𑌆𑌸𑌨𑌿 𑌅𑌨𑍍𑌤𑌃 | வாயின் நடுவிலுள்ள |
| जिह्वा | 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 | நாக்கு |
| चरति | 𑌚𑌰𑌤𑌿 | (அவியைப்) புசிக்கின்றது. |
| अग्ने ! | 𑌅𑌗𑍍𑌨𑍇 ! | அக்கினியே! |
| वसुवित् | 𑌵𑌸𑍁𑌵𑌿𑌤𑍍 | தனத்தை யடைவிக்கின்ற, |
| सः त्वं | 𑌸𑌃 𑌤𑍍𑌵𑌂 | அத்தகைய நீ |
| नः पयसा | 𑌨𑌃 𑌪𑌯𑌸𑌾 | எமக்கு அன்னத்தோடு |
| रयिं | 𑌰𑌯𑌿𑌂 | இரமணீய தனத்தையும் |
| दृशे | 𑌦𑍃𑌶𑍇 | பார்க்கத்தக்க |
| वर्चः | 𑌵𑌰𑍍𑌚𑌃 | ஒளியையும், அல்லது, ஒளித் தன்மையையுந் |
| अदाः | 𑌅𑌦𑌾𑌃 | தருவாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—1. வாமதேவ ரிஷி.

வேட்போர்களால் ஒளியெழ வளர்க்கப்பட்டதும், எல்லாவற்றினும் மேலாய் விளங்குவதுமாகிய அக்கினியே! பிரகாசமுள்ள வாயின் நடுவின் கண்ணுள்ள (உனது) நாக்கு, அவிகளை (தேவவுணவுகளை) உண்கின்றது. தனத்தைச் சேர்ப்பிக்கின்ற அத்தகைய அக்கினியே! நீ, அன்னத்துடன் இரமித்தற் குரிய தனத்தையும், காணற்குரிய ஒளியையும், அல்லது, ஒளித் தன்மையையும் எங்கட்குக் கொடுப்பாயாக என்பதாம். (1)

## மந்திரம் 2.

३ २र २र ३ २र २र

616. वसन्त इन्नु रन्त्यो ग्रीष्म इन्नु रन्त्यः ।

३१र २र ३१२ ३१र २र ३ १र २र

वर्षाण्यनु शरदो हेमन्तः शिशिर इन्नु रन्त्यः ॥ २ ॥

𑌵𑌸𑌨𑍍𑌤 𑌇𑌨𑍍𑌨𑍁 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑍋 𑌗𑍍𑌰𑍀𑌷𑍍𑌮 𑌇𑌨𑍍𑌨𑍁 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 ।

𑌵𑌰𑍍𑌷𑌾𑌣𑍍𑌯𑌨𑍁 𑌶𑌰𑌦𑍋 𑌹𑍇𑌮𑌨𑍍𑌤𑌃 𑌶𑌿𑌶𑌿𑌰 𑌇𑌨𑍍𑌨𑍁𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 ॥

### அங்வயம்.

वसन्तः इन्नु, रन्त्यः, ग्रीष्म इन्नु, रन्त्यः, वर्षाणि अनु, शरदः, हेमन्तः, शिशिरः इन्नु, रन्त्यः ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| **वसन्तः इन्नु** | 𑌵𑌸𑌨𑍍𑌤𑌃 𑌇𑌨𑍍𑌨𑍁 | இளவேனிற் காலம் |
| **रन्त्यः** | 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 | இரமித்தற் குரியது. |
| **ग्रीष्म इन्नु** | 𑌗𑍍𑌰𑍀𑌷𑍍𑌮 𑌇𑌨𑍍𑌨𑍁 | முதுவேனிற் காலம் |
| **रन्त्यः** | 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 | இரமித்தற் குரியது. |
| **वर्षाणि अनु** | 𑌵𑌰𑍍𑌷𑌾𑌣𑌿 𑌅𑌨𑍁 | மழை காலத்தின் பின்னர் |
| **शरदः** | 𑌶𑌰𑌦𑌃 | குளிர் காலமும் |
| **हेमन्तः** | 𑌹𑍇𑌮𑌨𑍍𑌤𑌃 | முன்பனிக் காலமும் |
| **शिशिर इन्नु** | 𑌶𑌿𑌶𑌿𑌰 𑌇𑌨𑍍𑌨𑍁 | பின்பனிக் காலமும் |
| **रन्त्यः** | 𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 | இரமிக்கத் தக்கனவாம். |

### சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—2. வாமப்தவ ரிஷி.

சித்திரை, வைகாசியாகிய வசந்தரிதுகாலமே இரமிக்கத்தக்கதாகின்றது. ஆனி, ஆடியாகிய கிரீஷ்மரிதுவே இரமித்தற் குரியதாம், ஆவணி புரட்டாசியாகிய மழைக்காலரிதுவே இரமிக்கத்தக்கதாம். அதன் பின்னர், ஐப்பிசி, கார்த்திகைகளான அவயவங்களையுடைய சரத்காலரிது இரமிக்கத் தக்கதாம். மார்கழி தையாகிய ஏமந்தரிதுவே இரமிக்கத்தக்கதாகின்றது. மாசி பங்குனியாகிய சிசிரருதுவே இரமிக்கத்தக்கதாம். (2)

குறிப்பு:—ஈண்டு, இருது வென்பது ஈசுர னென்பர் சிலர்.

## மந்திரம் 3.

॰ ३१२३ १२ ३२ ३१२
617. सहस्रशीर्षाः पुरुषः सहस्राक्षः सहस्रपात् ।
१२ २२ ३१२३१२ २३
*स भूमिं †सर्वतो वृत्वात्यतिष्ठद्दशांगुलम् ॥ ३ ॥

இருக்கு 10-90-4.

ஸஹஸ்ரஶீர்ஷா: புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத் ।
ஸ பூமிம் ஸர்வதோ வ்ருத்வாத்யதிஷ்டத்தஶாம்குலம் ॥

அந்வயம்.

पुरुषः, सहस्रशीर्षाः, सहस्राक्षः, सहस्रपात्, सः, भूमिं, सर्वतः, वृत्वा, दशांगुलं, अत्यतिष्ठत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| पुरुषः | புருஷ: | விராட் புருடன் (பெரும் பொருளாகிய இறைவன்) |
| सहस्र शीर्षाः | ஸஹஸ்ரஶீர்ஷா: | எண்ணிலாச் சிரசுகளையுடையானும், |
| सहस्राक्षः | ஸஹஸ்ராக்ஷ: | அளவிலாக் கண்களுடையானும், |
| सहस्रपात् | ஸஹஸ்ரபாத் | அளவற்ற பாதங்களை யுடையானுமாவன். |
| सः | ஸ: | அப் புருடன் |
| भूमिं | பூமிம் | அண்டமாகிய தரையை |
| सर्वतः | ஸர்வத: | எல்லா வகையானுஞ் |
| वृत्वा | வ்ருத்வா | சூழ்ந்துகொண்டு |
| दशांगुलं | தஶாம்குலம் | பத்துவிரற்கடை அளவுள்ள இருதயத்தைக் |
| अत्यतिष्ठत् | அத்யதிஷ்டத் | கடந்து இனிது நிலைத்திருக்கின்றனன். |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—3. நாராயண ரிஷி.

எல்லா வுயிர்களின் சமட்டியாகிய (கூட்டமாகிய) விராட் எனயாதொரு புருடன் உள்ளானே, அவன், ஆயிரமென்னு மெண்ணால் உபலக்கணமாயறியப்பட்ட எண்ணமுடியாத தலைகளையுடையவன் என்பது பொருள்.

---

* सभूमिं विश्वता धृत्वा, என்பது இருக்கு.

† सर्वतः स्पृत्वा, என்பதும், யஜுர் सहस्र शीर्षा என்பதும், யஜுர்

எல்லாவுயிர்களுக்குண்டான தலைகளனைத்துமே இவனுக்கு ஆயிரந்தலைகளா மென்க. அவன் அவ்வுடல்களினுள் ளிருக்கின்றானாதலின் தலைகளெல்லாம் அப் புருடனுடையவைகளேயாம் என்பதாம். இவ்வாறே, ஆயிரங்கண்களுடைமையும், ஆயிரங் கால்களுடைமையுமா மென்பதுங் கண்டுகொள்க. அப்புருடன் பிரமாண்டமாகிய வுருண்டை வடிவப் பூமியை நாற்புறமுஞ் சூழ்ந்து வளைந்துகொண்டு பத்துவிரற்கடை யளவுள்ளதோரிடத்தைத் தாண்டியிருக்கின்றான். அதாவது பத்துவிரற்கடை என்றது உபலக்கணமாம் ஆதலின் பிரமாண்டத்தினின்றும் வெளியிலும் எங்கும் வியாபித்திருக்கின்றான் என்பது பொருள். (3)

## மந்திரம் 4.

१ २ ३ २उ ३ १ २ ३ १ ३ ३ १ २ ३ १ २

618. त्रिपादूर्ध्व उदैत्पुरुषः पादोऽस्येहाभवत् पुनः ।

२ ३ २ ३क २र ३ २ ३ २

तथा विष्वङ् व्यक्राम द् * शनाऽनशने अभि ॥ ४ ॥

10-90-4.

𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵 𑌉𑌦𑍈𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌯𑍇𑌹𑌾𑌭𑌵𑌤𑍍 𑌪𑍁𑌨𑌃।
𑌤𑌥𑌾 𑌵𑌿𑌷𑍍𑌵𑌙𑍍 𑌵𑍍𑌯𑌕𑍍𑌰𑌾𑌮𑌦𑍍 𑌶𑌨𑌾𑌽𑌨𑌶𑌨𑍇 𑌅𑌭𑌿 ॥

அந்வயம்.

त्रिपात् पुरुषः, ऊर्ध्वः, उदैत्, अस्य, पादः, इह, पुनः, अभवत्, तथा, विष्वङ्, व्यक्रामत्, अशनानशने, अभि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| त्रिपात् पुरुषः | 𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | மூன்று பாதங்களை யுடைய அப் புருடன் |
| ऊर्ध्वः उदैत् | 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌃 𑌉𑌦𑍈𑌤𑍍 | உலகத்தின்குணதோஷங்களுக்கு வேறாய் மேம்பட்டவனாக இருக்கின்றான். |
| अस्य | 𑌅𑌸𑍍𑌯 | இப் புருடனுடைய |
| पादः | 𑌪𑌾𑌦𑌃 | ஒருகூறு |
| इह | 𑌇𑌹 | இம் மாயையின்கண் |
| पुनः | 𑌪𑍁𑌨𑌃 | அடிக்கடி |
| अभवत् | 𑌅𑌭𑌵𑌤𑍍 | வெளிப்படுகின்றது. |
| तथा | 𑌤𑌥𑌾 | அவ்வாறே |

* साशनानशने, என்பது இருக்கிலும் எசுரிலும் பாடம்,

| | | |
|---|---|---|
| विष्वङ् | 𑌵𑌿𑌷𑍍𑌵𑌙𑍍 | பலவகை வடிவாய் |
| व्यक्रामत् | 𑌵𑍍𑌯𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑍍 | வியாபிக்கின்றது. |
| अशनानशने अभि | 𑌸𑌾𑌶𑌨𑌾𑌨𑌶𑌨𑍇 𑌅𑌭𑌿 | மற்றும், உண்ணல் முதலிய செய்கைகளையுடைய பிராணிகளாகவும், அவைகளில்லாத மலை, ஆறு முதலிய அசேதனங்களாகவும் உலகிற் பரந்தது. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—4.

பந்தத்தின் றொடர்பற்றவனும், மிகுந்த வடிவமுள்ளவனும், மூன்று பாதங்களை யுடையவனுமாகிய இப் புருடன், அஞ்ஞான காரியத்தினின்றுந் தோன்றிய வடிவனாயிருந்தும், அதிலுள்ள குண தோடங்களுடன் றொடர்பற்று மேம்பட்டவனாயிருக்கின்றான். இவனுடைய யாது ஒரு கூறுண்டோ, அது, மாயையிற் றோன்றுகின்றது. அதாவது ஆக்க லழித்தல்களால் மறித்தும் மறித்தும் வருகின்றது என்பதாம். இவ்வுலகம் பரமான்மாவினது ஓர் கூறாந் தன்மை, “இவ்வனைத்தையும் யான் வியாபித்துள்ளேன், ஒரு கூறால் உலகம் நிலைத்திருக்கின்றது” எனப் பகவானாகிய கண்ணபிரானாலுங் கூறப்பட்டிருக்கின்றது. மாயையின்பாற் றோன்றிய பின்னரோ, தேவ, மநுட, பசு, பக்ஷி முதலிய வடிவத்தாற் பலவகையாய் வியாபித்திருக்கிருக்கின்றனன். யாது செய்துகொண்டெனின்? பசி முதலியவைகளைக் குறியாகச் செய்கொண்டு நிறைந்திருக்கின்றனன். அவைகளை யுடைய சேதனசமுதாயமும்; அவைகளில்லாதனவாய மலை, யாறு முதலியவைகளும் என்ன, விருவகையாக உள்ளவாறுண்டாக்கி, இப் புருடனே பலவகையாய்த் தோற்றுமாறு செய்துகொண்டு வியாபித்தனன் என்பதாம். (4)

மந்திரம் 5.

१२३ २उ ३ २३२उ ३ १ २

619. पुरुष एवेदꣳ सर्वं यद्भूतं यच्च भाव्यम् ।

१ २ ३ १ ३३ १२ ३ १२ ३१२ ३ २

पादोऽस्य सर्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि ॥ ५ ॥

இருக்கு 10-90-2.

𑌪𑍁𑌰𑍁𑌷 𑌏𑌵𑍇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌭𑌾𑌵𑍍𑌯𑌮𑍍 ।

𑌪𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 𑌦𑌿𑌵𑌿 ॥

அந்வயம்.

इदं, सर्वं, पुरुषः एव, यत्, भूतं, च, यत्, भाव्यं, सर्वाभूतानि, अस्य, पादः, अस्य, त्रिपात्, अमृतं, दिवि ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| इदं | இதம் | (நிகழ் காலத்துள்ள) இவ்வுலகம் |
| सर्वं | ஸர்வம் | அனைத்தும் |
| पुरुषः एव | புருஷ: ஏவ | புருடனே யாகின்றான் |
| यत् | யத் | யாது, |
| भूतं | பூதம் | இறந்த காலத்திற் தோன்றி யிருந்ததோ, |
| च | ச | மற்றும், |
| यत् | யத் | யாது, |
| भाव्यं | பாவ்யம் | வருங்காலத்திற் றோன்றுவதோ, அவ் வனைத்தும் புருடனே யாகின்றான். |
| सर्वाभूतानि | ஸர்வாபூதானி | முற்காலத்திலுள்ள சராசரப் பொருள்கள் |
| अस्य | அஸ்ய | இப்புருடனுடைய |
| पादः | பாத: | நான்காவது கூறும். |
| अस्य | அஸ்ய | இப் புருடனின் |
| त्रिपात् | த்ரிபாத் | மூன்று பாதங்களும் (மீந்த வடிவம்) |
| अमृतं | அம்ருதம் | மரணமற்றதாயிருந்து, |
| दिवि | திவி | ஒளிவடிவத்தில் நிலைத்திருக்கின்றது. |

## சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு.—5

நிகழ் காலத்திய இவ்வுலகனைத்தும் புருடனே யாவன். சென்ற காலத்திற்றோன்றிய.வுலகமும், வருங்காலத்திற் றோன்று முலகமுமாகிய அனைத்தும் புருடனே யாவன். நிகழ் காலத்திலுள்ள பிராணிகளனைத்தும் சராசர வடிவமாகிய புருடனுடைய கூறுகளானதே போன்று, போன சால, வருங்கால மென்னும்இருவகையாலானதுங் காணற்பாலது என்பது கருத்து. அவ் விருவகையே விளக்கப்படுகின்றது:—இப் புருடனுக்கு மூன்று காலத்திலுள்ள பிராணிகளனைத்தும் நான்காவது கூறுகும். எஞ்சிய இப்புருடனுடைய முப்பாதமானதோ? கேடிலாததாய்ப் பிரகாசம் மலிந்த சுயம் பிரகாச வடிவத்தில் நிலைத்திருக்கின்றது. ஈண்டு, நிலைத்திருக்கின்றது என்பது எஞ்சி நின்றது. எப்போதும் " உண்மையானதும் அறிவானதும் அந்த மற்றதும் பிரமமாம் " என்பதால் பிரமத்திற்கு இவ் வளவெனுந் தன்மை யின்மையானுல் பாதம் நான்கெனப் பகருதல் முடியாததாமாயினும்; இவ் வுலகம் பிரம வடிவத்தை நோக்க மிகச் சிறியதாம் எனக்கூறும் வேட்கையாற் பாதங்கொன்று உபசாரமாய்க் கூறப்பட்டது என்பதுணர்க. (5)

## மந்திரம் 6.

१ २ ३ २उ ३ १ २३ १२
620. *तावानस्य महिमा †ततो ज्यायांश्च पूरुषः ।
३ १२३ १ २र ३ १र २र ३ १२
उतामृतत्वस्येशानो यदन्नेनातिरोहति ॥ ६ ॥

இருக்கு 9-61-12.

தாவாநஸ்ய மஹிமா ததோ ஜ்யாயாம்ஸ்ச பூருஷ꞉ ।
உதாம்ருதத்வஸ்யேஶாநோ யதந்நேநாதிரோஹதி ॥

அந்வயம்.

तावान्, अस्य, महिमा, पूरुषः, ततः च, ज्यायान्, उत, अमृतत्वस्य, ईशानः, यत्, अन्नेन, अतिरोहति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| तावान् | தாவாநு | முக்காலத்திய வுலகங்கட்கும் பற்றுக் கோடாதல் முதலிய அவ்வளைத்துமே. |
| अस्य | அஸ்ய | இப் புருடனுடைய |
| महिमा | மஹிமா | ஆற்றல் விசேடமாம். (உண்மை வடிவமன்று) |
| पूरुषः | பூருஷ꞉ | உண்மையாகிய புருடனே, |
| ततः च | ததஃ ச | ஆற்றலென்னும், அம் மகிமையினின்றும் |
| ज्यायान् | ஜ்யாயாநு | மிக மேம்பட்டோனுவன் |
| उत | உத | மற்றும், |
| अमृतत्वस्य | அம்ருதத்வஸ்ய | தேவத் தன்மைக்கு |
| ईशानः | ஈஶாந꞉ | மாயை வாயிலாக இறைவனுவன். |
| यत् | யத் | (யாதினுலெனின்?) |
| अन्नेन | அந்நேந | சீவர்களின் பயனுகிய நிமித்தத்தால் |
| अतिरोहति | அதிரோஹதி | காரணமாய் நிற்கும் நிலைமையை விட்டு உலகமாந் தன்மையை யடைகின்றனன், ஆதலின் என்க. |

* रातावानस्य, † अतो ज्यायां என இருக்கும், எசுரு மோதுகின்றது.

## சாயண பாடியம்

**கண்டம்—4. இருக்கு—6.**

*சென்ற காலத்திலிருந்ததும், நிகழ் காலத்திலிருக்கின்றதும், வருங் காலத்தி லுண்டாகுவதுமாய உலகம் முதலியவற்றிற்கு, யாதொரு ஆதார ஞதற் றன்மையுண்டோ, அது முதலிய வனைத்துமே இப்பரம புருடனுடைய ஆற்றல் விசேடமாம். அவனுடைய உண்மை வடிவமன்று. உண்மையாகிய புருடனே, அந்த மகிமைகளி னின்றும் மிக வியப்பானவன் என்பது பொருள். மற்றும், தனது மாயையால் தேவத் தன்மைக்கு இறைவனுவான் என்க. எக் காரணத்தால் பிராணிகளின் போக்கிய வடிவ அன்னமென்னு நிமித்தத்தால் காரணமாய் நிற்கும் தனது அவத்தையை விட்டு, காணப்படும் உலகமாகின்ற அவத்தையை யடைகின்றானே, அக் காரணத்தால், பிராணிகளினுடைய கரும போகத்தின் பொருட்டு, உலகமாய் நிற்குமவத்தை யுடன்பாடாதலின், இது அவனுடைய உண்மை நிலை அன்றென்பதுணர்க.* (6)

### மந்திரம் 7.

१ २ ३ १ २ ३ २ ३ २ ३ १२
621. ततो विराडजायत विराजो अधि पूरुषः ।
२ ३१र २र ३२उ ३१ २ ३२
स जातो अत्यरिच्यत पश्चाद्भूमिमथो पुरः ॥ ७ ॥

இருக்கு 10-6-5.

*ததோ விராடஜாயத விராஜோ அதி பூருஷ: ।*
*ஸ ஜாதோ அத்யரிச்யத பஶ்சாத்பூமிமதோ புர: ॥*

அங்வயம்.

ततः, विराट्, अजायत, विराजो अधि, पूरुषः, जात, सः, अत्यरिच्यत, पश्चात्, भूमिं, अथो, पुरः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| **ततः** | *தத:* | *அவ் வாதிபுருடனினின்று* |
| **विराट्** | *விராட்* | *பிரமாண்டமாகிய வுடம்பு* |
| **अजायत** | *அஜாயத* | *உண்டானது.* |
| **विराजो अधि** | *விராஜோ அதி* | *விராட், என்னும் அத் தேகத்தின் கண்* |
| **पूरुषः** | *பூருஷ:* | *பரபுருடன் உள்ளவாறு தோன்றினன்.* |

| | | |
|---|---|---|
| जातः सः | ஜாதஃ ஸஃ | உற்பன்னமாகிய அப் புருடன் |
| अत्यरिच्यत | அத்யரிச்யத | விராட்டினின்றும் வேறான தேவ, மனுட பட்சிகளாயினன். |
| पश्चात् | பச்சாத் | பின்னர், |
| भूमिं | பூமிம் | பூமியை யுண்டாக்கினன். |
| अथो | அதோ | பூமியை யுண்டாக்கிய பின்னர் |
| पुरः | புரஃ | பிராணிகளின் தேகத்தை யுண்டாக்கினன். |

சாயணபாடியம்.

கண்டம்—4. இருக்கு—7.

இக் கண்டத்தின் நான்காவது மந்திரத்திற் கூறிப்போந்த "பல்லுருவாய் வியாபித்தனன்" என்னும் பொருளே ஈண்டும் விரிக்கப்படுகின்றது:—அப் பரம புருடனிடத்தின்று விராட்டென்னும் பிரமாண்டமாகிய வுடம்பு உண்டானது. பலவகைப் பொருள்கள் இதில் விளங்கப்படுதலின் இது விராட் எனப்பட்டது. பின்னர், விராட்டென்னு அந்தத் தேகத்தையே அதிகரணமாக்கிக்கொண்டு அவ்வுடம்பை அபிமானிப்பவனாகிய ஒரு புருடன் றோன்றினன். வேத முடிகளனைத்தானு முணரப்படும் அத்தகைய இவனே பரமான்மாவாவன். அவனே பல வுருவமாய்ப் புகுந்து பிரமாண்டத்தை யபிமானிக்கும் தேவதையாகிய சீவான்மாவும் ஆயினன். இவைகள் அதர்வண வேதத்தினுடைய உத்தரதாப நீய வுபநிடதத்தில் மிக வெளிப்படையாய்க் கூறப்படுகின்றன" அஃது வருமாறு:—அத்தகைய இவன் மாயையினாலே பூதங்களையும், இந்திரியங்களையும், விளங்குகின்ற தேவதைகளையும், கோசங்களையுஞ் சிருட்டித்துப் புகுந்துகொண்டு, மூடன், மூடன், (சீவன் சீவன்) என வழங்கப்பட்டிருக்கின்றனன்" என்பதாம். உண்டாகிய அவ் விராட் புருடன், விராட்டினும் வேறான, தேவர், மனிதர், விலங்கு முதலியவைகளாயினன். தேவர்கள் முதலிய சீவத்தன்மையை யடைவதன் முன்னர் பூமியை யுண்டாக்கினன். ஈண்டுப் பூமியை யுண்டாக்கினன் என்பது எஞ்சி நின்றது, பூமியை யுண்டாக்கிய பின்னர் அவர்களுடைய தேகங்களை யுண்டாக்கினன். எழுவகைத் தாதுக்களால் நிறைந்திருத்தலின் உடம்பு புரியெனப்பட்டது. (7)

## மந்திரம் 8.

१ २ ३ १ २ ३ १र २र ३ १ २ ३ १र २र
622. *मन्ये वां द्यावापृथिवी सुभोजसौ ये अप्रथेथाममितमभियोजनम् ।
१ २ ३ १ २ ३१र २र ३ १ २
द्यावापृथिवी भवतं स्योने ते नो मुञ्चतमंहसः ॥ ८ ॥

அதர்—4-26-1.

மந்யே வாம் த்யாவாப்ருதிவீ ஸுபோஜஸௌ யே அப்ரதேதாமமித [மபியோஜநம் |
த்யாவாப்ருதிவீ பவதம் ஸ்யோநே தே நோ முஞ்சதமம்ஹஸঃ ||

அந்வயம்.

हे द्यावापृथिवी! वां, सुभोजसौ, मन्ये, अमितं, योजनं, अभ्यप्रथेथां,
हे द्यावापृथिवी!, स्योने, भवतं, ये ते, नः, अंहसः, मुञ्चतम् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे द्यावापृथिवी! | ஹே த்யாவாப்ருதிவீ! | வானுலக மண்ணுலகங்களின் தேவதைகாள்! |
| वां | வாம் | உங்களிருவரையும் |
| सुभोजसौ | ஸுபோஜஸௌ | எம்மை இனிது பாதுகாக்கத் தக்கார்களென |
| मन्ये | மந்யே | யான் உணர்கின்றேன். |
| अमितं | அமிதம் | (நீவிர்) அளவற்ற |
| योजनं | யோஜநம் | தன முதலியவைகளை |
| अभ्यप्रथेथां | அப்யப்ரதேதாம் | யாண்டும் விருத்தி பண்ணுவீர்களாக. |
| हे द्यावापृथिवी! | ஹே த்யாவாப்ருதிவீ! | வானுலக மண்ணுலகங்களின் தேவர்காள்! (நீவிர் எமக்கு) |
| स्योने | ஸ்யோநே | சுக வடிவர்களாக |
| भवतं | பவதம் | ஆவீர்களாக. |
| ये ते | யே தே | எவ் வானுலக மண்ணுலகங்கள் உள்ளனவோ, அவைகள் |
| नः | நঃ | எங்களைப் |
| अंहसः | அம்ஹஸঃ | பாவங்களினின்றும் |
| मुञ्चतं | முஞ்சதம் | விடுவிப்பன வாகுக. |

* मन्ये वांद्यावा........मभिता योजनानि प्रतिष्ठे ह्यभवतं वसूनां ते नो என்பது அதர்வணம்.

சாயண பாடியம்.

கண்டம்—3. இருக்கு—8. வாமதேவர் ரிஷி.

வானுலக மண்ணுலகங்கட்கு அபிமானிகளான தேவர்காள்! உங்களிருவரையும் இனிது எம்மைப் பரிபாலிக்கத் தக்கவர்களென யானுணர்கின்றேன். வானுலக மண்ணுலகங்களுக்குரிய தேவர்காள்! நீவிர் அளவற்ற தன முதலியவைகளை மிக விருத்தி பண்ணுவீர்களாக. வானுலக மண்ணுலகங்களின் தேவர்காள்! நீவிர் எங்களுடைய சுக காரியத்தில் தோற்றுவீர்களாக. அவ் வானுலக மண்ணுலகங்களின் தேவர்கள் எங்களைப் பாவங்களினின்று நீக்குவார்களாக என்பதாம். (૪)

குறிப்பு.—யோஜனம், என்பது தனம்.

## மந்திரம் 9.

१२ ३ १२ ३ १ २ ३ २ ३ १ २
623. हरी त इन्द्र श्मश्रूण्युतो ते हरितौ हरी ।
१ २ ३ १२ ३ १ २ ३ १ २
तन्त्वा स्तुवन्ति कवयः पुरुषासो वनर्गवः ॥ ९ ॥

ஹரீ த இந்த்ர ஶ்மஶ்ரூண்யுதோ தே ஹரிதௌ ஹரீ ।
தந்த்வா ஸ்துவந்தி கவய: புருஷாஸோ வநர்க்வ: ॥

அந்வயம்.

हे इन्द्र !, ते, श्मश्रूणि, हरी, उतो, ते, हरी, हरितौ, वनर्गवः, कवयः, पुरुषासः, तं, त्वा, स्तुवन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! |
| ते | தே | உனது |
| श्मश्रूणि | ஶ்மஶ்ரூணி | மீசை தாடிகள் |
| हरी | ஹரீ | பச்சைநிற முடையனவாம். |
| उतो | உதோ | மற்றும், |
| ते | தே | உன்னுடைய |
| हरी | ஹரீ | குதிரைகள் |
| हरितौ | ஹரிதௌ | பச்சைநிற முடையவைகள். |
| वनर्गवः | வநர்க்வ: | கோக்களிடத்து, அல்லது, மறைமொழிகளின் கண் அன்புள்ள |
| कवयः | கவய: | நுண்ணுணர் வுடையோர்களான |

| | | |
|---|---|---|
| पुरुषासः | புருஷாஸ: | புருடர்கள், |
| तं | தம் | கீர்த்தியுள்ள, அத்தகைய |
| त्वा | த்வா | உன்னைத் |
| स्तुवन्ति | ஸ்துவந்தி | துதிக்கின்றார்கள். |

சாயணபாடியம்.

**கண்டம்—4. இருக்கு—9.**

உன்னுடைய மீசைகளுந் தாடிகளும் சோமரச மருந்தலாற் பச்சை நிறமுடையனவாம். அவ்வாறே, "இந்திரனது தாடி மீசைகள் பச்சை நிறங்களால் மூடியுள்ளன" என மறையுங் கூறுகின்றது. மற்றும், உன்னுடைய குதிரைகளும் பச்சை நிறமுடையனவாம். கோக்களை வழிபடுகின்ற மேதாவிகள், அல்லது, மறைமொழியி லன்புள்ள மேதாவிகள் என்னும் புருடர்கள்; அத்தகைய உன்னைத் துதிக்கின்றார்கள் என்பதாம். இம்மந்திரம் அதர்வணத்திற் சிறிது பாடபேதத்தை யுடையது. (9)

## மந்திரம் 10.

२उ३ १ २ ३ २ ३ २ ३ १ २ ३२

624. यद्वर्चो हिरण्यस्य यद्वा वर्चो गवामुत ।

३ २ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २

सत्यस्य ब्रह्मणो वर्चस्तेन मा सꣳसृजामसि ॥ १० ॥

யத்வர்சோ ஹிரண்யஸ்ய யத்வா வர்சோ கவாமுத ।

ஸத்யஸ்ய ப்ரஹ்மணோ வர்சஸ்தேன மா ஸꣳஸ்ருஜாமஸி ॥

அந்வயம்.

हिरण्यस्य, यत्, वर्चः, वा, गवां, यत्, वर्चः, उत, सत्यस्य, ब्रह्मणः, वर्चः तेन, मां, संसृजामसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हिरण्यस्य | ஹிரண்யஸ்ய | இனியது செய்யும் இரமணீய தனத்திற்கு |
| यत् | யத் | யாதொரு |
| वर्चः | வர்ச: | காந்தியுண்டோ, |
| वा | வா | மற்றும், |
| गवां | கவாம் | கோக்கட்கு |
| यत् | யத் | யாதொரு |

| | | |
|---|---|---|
| वर्चः | வர்ச: | காந்தியுண்டோ, |
| उत | உத | இன்னும் |
| सत्यस्य | ஸத்யஸ்ய | உண்மையாகிய |
| ब्रह्मणः | ப்³ரஹ்மண: | வேதத்திற்கு, அல்லது, பிரமத்திற்கு |
| वर्चः | வர்ச: | யாதொரு காந்தியுண்டோ, |
| तेन | தேந | அதனோடு (அவைகளை) |
| मा | மா | எம்மை (யாம்) |
| संसृजामसि | ஸம்ஸ்ருஜாமஸி | கூட்டுமாறு (அடையுமாறு) வேண்டுகின்றோம். |

சாயணபாடியம்.

கண்டம்—4. இருக்கு—10. வாமதேவ ரிஷி.

இனியதைச் செய்யும் இரமணீயமென்னுந் திருநாமமுள்ள தனத்திற்கு யாதொரு காந்தி யிருக்கின்றதோ, அல்லது, இப் பெயருள்ள கோக்கட்கு யாதொரு காந்தி யுண்டோ, மற்றும், அனைவராலும் உடன்பட்ட பிரமத்திற்கு யாதொரு, சாந்தியுண்டோ அவைகளோடு கூடுமாறு (அவைகளை யடையுமாறு) வேண்டுகின்றோம். யாங்கள் தனமுடையோர்களாயும், கோக்களுடையோர்களாயும், கல்வி யுடையோர்களாயும் ஆவோமாக என்பது உட்கிடை. (10)

## மந்திரம் 11.

२३ १२ ३ २ ३ २ ३क २३१ २

625. सहस्तन्न इन्द्र दद्ध्योज ईशे ह्यस्य महतो विरप्शिन् ।

२ ३ १ ३ १र २र ३ १ २ ३ २३ १ २ ३ १ २

क्रतुन्न नृम्णꣳ स्थविरञ्च वाजं वृत्रेषु शत्रून्त्सहना कृधी नः ॥

ஸஹஸ்தந்ந இந்த்³ர த³த்³த்⁴யோஜ ஈஶே ஹ்யஸ்ய மஹதோ விரப்ஶிந் ।
க்ரதுந்ந ந்ருண்ணம் ஸ்த²விரஞ்ச வாஜம் வ்ருத்ரேஷு ஶத்ரூந்த்ஸஹநா [க்ருதீ⁴ ந: ॥

அந்வயம்.

हे विरप्शिन्!, इन्द्र!, सहः, तत्, ओजः, नः, दद्धि, हि, अस्य, महतः, ईशे, नः, क्रतुं न, नृम्णं, च, स्थविरं, वाजं, कृधि, नः, शत्रून्, वृत्रेषु, सहना ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे विरप्शिन् ! | ஹே விரப்ஶிந் ! | துதிப்போர்கட்கு ஆசி மொழி கூறுவோய் ! |
| इन्द्र ! | இந்த்ர ! | இந்திரனே ! |
| सहः | ஸஹ: | பகைவரை யடக்குதற் குரிய |
| यत् | யத் | அத்தகைய கீர்த்தியுள்ள |
| ओजः | ஓஜ: | (உனது) ஆற்றலை, |
| नः | ந: | எங்கட்குக் |
| दद्धि | தத்தி | கொடுப்பாயாக. |
| हि | ஹி | ஏனெனின்? நீ |
| अस्य महतः | அஸ்ய மஹத: | இப் பேராற்றலுக்கு |
| ईशे | ஈஶே | இறைவனாகின்றாய். ஆதலின் என்க. |
| नः | ந: | (மற்றும்) எங்கட்கு |
| क्रतुं न | க்ரதும் ந | வேள்வியைப் போன்று |
| नृम्णं | ந்ரும்ணம் | தனத்தையும் |
| च | ச | மற்றும், |
| स्थविरं | ஸ்தவிரம் | மிகப் பெரிய |
| वाजं | வாஜம் | வன்மையையும் |
| कृधि | க்ருதி | (உண்டாகச்) செய்வாயாக. அவ்வாறே, |
| नः | ந: | எங்களுடைய |
| शत्रून् | ஶத்ரூந் | சத்துருக்களை வாட்டுதற்குரிய |
| वृत्रेषु | வ்ருத்ரேஷு | உபாயங்களைத்தேடும் விஷயத்தில் |
| सहना | ஸஹநா | அநுகூலஞ் செய்வாயாக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—11.

இனிய ஆசிமொழி கூறும் இந்திர! பகைவர்களை யடக்கத்தக்க உனது ஆற்றலை எங்கட்குக் கொடுப்பாயாக. யாதினா லெனின்? நீ, இப் பேராற்றலுக்கு இறைவனாகின்றா யாதலி னென்க. இந்திர! நீ எங்கட்கு வேள்வியைப் போல் தனத்தையும், மிகச் சிறந்த வலிப் பெருக்கையுங் கொடுப்பாயாக. மற்றும், எங்களுடைய சத்துருக்களை யடக்கு முபாய விஷயத்தில் எமக்கு அநுகூலஞ் செய்வாயாக. (சத்துருவை யடக்கத்தக்க உபாயத்தைச் செய்வாயாக என்பதாம்.) (11)

விசேடமாய் வெளிப்பட்ட ஆசிமொழி யுடையான் 'விரப்சீ' எனப் படுவன்,

## மந்திரம் 12.

३१२ ३१२ ३२३ १ २ ३ २ ३ १ २

626. सहर्षभाः सहवत्सा उदेत विश्वा रूपाणि बिभ्रतीर्द्व्यूध्नीः ।

३२ ३ २३१ २ ३ २ ३१२ २२ ३ २ ३१२

उरुः पृथुरयं वो अस्तु लोक इमा आपस्सुप्रपाणा इहस्त ॥ १२ ॥

ஸஹர்ஷபா: ஸஹவத்ஸா உதேத விஶ்வா ரூபாணி பிப்ரதீ[ர்த்வ்யூத்னீ: ।

உரு: ப்ருதுரயம் வோ அஸ்து லோக இமா ஆபஸ்ஸுப்ரபா[ணா இஹஸ்த ॥

அந்வயம்.

(हे गावः !,) विश्वा, रूपाणि, बिभ्रतीः, सहर्षभाः, सहवत्साः, द्व्यूध्नीः, उदेत, उरुः, पृथुः, अयं, लोकः, वः, अस्तु, इह, इमाः आपः, सुप्रपाणाः स्त ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| (हे गावः !) | (ஹே காவ: !) | (கோக்களே ! நீங்கள்) |
| विश्वा | விஶ்வா | எல்லா |
| रूपाणि | ரூபாணி | உருவங்களையும் |
| बिभ्रतीः | பிப்ரதீ: | தாங்கிக் கொண்டவர்களாயும் |
| सहर्षभाः | ஸஹர்ஷபா: | இடபங்களோடு கூடினவர்களாயும் |
| सहवत्साः | ஸஹவத்ஸா: | கன்றுடன் கூடினவர்களாயும் |
| द्व्यूध्नीः | த்வ்யூத்னீ: | இருவகையான மடிகளையுடையவர்களாயும் |
| उदेत | உதேத | திருவுடையர்களாயும் வருவீர்களாக. |
| उरुः | உரு: | நீண்டு |
| पृथुः | ப்ருது: | விரிந்துள்ள |
| अयं लोकः | அயம் லோக: | இவ்வுலகம் |
| वः | வ: | உங்கணிமித்தமாய் |
| अस्तु | அஸ்து | ஆகுக. |
| इह | இஹ | இப் பூமியில் |
| इमा आपः | இமா ஆப: | இந்த நீர் |
| सुप्रपाणाः | ஸுப்ரபாணா: | இன்புடன் மிக அருந்தத் தக்கதாய் |
| स्त | ஸ்த | இருக்குக. |

சாயண பாடியம்.

கண்டம்—4. இருக்கு—12.

இடங்களோடும், கன்றுகளோடுங் கூடின கோக்களே! நீங்கள் காலை மாலை களில் இருவகை மடிகளையுடையவர்களாயும், பலவகை வடிவங்களை யுடையவர் களாயுமாகி, ஐசுவரியங்களை நிறையக்கொண்டு வருவீர்களாக. இன்னும், மிக விரிந்த இவ்வுலகம் உங்களுடையதாக இருக்குக. இந்த நீர் இப்பூமியில் (இவ்விடத்தில்) இனிது பாதுகாக்கத் தக்கதாகுக. அதாவது நீங்க ளித்தன் மையராய்த் தழைத்தோங்கி வாழ்வீர்களாக என்பதாம். (12)

குறிப்பு—ஈண்டு மூலத்தில், உரு, பிருது, என்னும் இருசொற்களாலும் நீளம், விரிவு, கூறப்பட்டன.

## நான்காவது கண்டம்.

முற்றும்.

---

## ஐந்தாவது கண்டம்.

---

## பிரபாடகம்—6. அத்தியாயம்—6. கண்டம்—5.

பதினான்கு மந்திரங்களாலானது.

---

தேவதைகள் :—1, அக்கினி. பவமானம், சோமம். 2, சூரியன். சந்தம்:—2, சகதி. 3, திருஷ்டுப். 1, 4, 14, காயத்திரி. சுரம் :—1, நிஷாதம். 3, தைவதம். 1, 4, 14, ஷட்சம். இருடிகள் ஆண்டாண்டுக் கூறப்படுவார்கள்.

### மந்திரம் 1.

२ ३ १ २ ३ २ ३ २ १२
627. अग्न आयूंषि पवस आसुवोर्जमिषञ्च नः ।
३१ २ ३१२
आरे बाधस्व दुच्छुनाम् ॥ १ ॥

இருக்கு 9-66-9.

𑌅𑌗𑍍𑌨 𑌆𑌯𑍂𑌂𑌷𑌿 𑌪𑌵𑌸 𑌆𑌸𑍁𑌵𑍋𑌰𑍍𑌜𑌮𑌿𑌷𑌂 𑌚 𑌨𑌃 ।
𑌆𑌰𑍇 𑌬𑌾𑌧𑌸𑍍𑌵 𑌦𑍁𑌚𑍍𑌛𑍁𑌨𑌾𑌂 ॥

அந்வயம்.

**हे अग्ने!, आयूंषि, पवसे, नः, ऊर्जं, च, इषं, आसुव, दुच्छुनां, आरे, बाधस्व ॥**

பதவுரை.

| | | |
|---|---|---|
| **हे अग्ने!** | 𑌹𑍇 𑌅𑌗𑍍𑌨𑍇 ! | பவமானமாகிய அக்கினியே! நீ |
| **आयूंषि** | 𑌆𑌯𑍂𑌂𑌷𑌿 | எமது, ஆயுட்களை, அல்லது, அன்னங்களை |
| **पवसे** | 𑌪𑌵𑌸𑍇 | விருத்தி பண்ணுகின்றாய். |
| **नः** | 𑌨𑌃 | எங்களுடைய |
| **ऊर्जं** | 𑌊𑌰𑍍𑌜𑌂 | அன்னரசத்தாலுண்டாகும் வன்மையையும் |
| **च** | 𑌚 | மற்றும், |
| **इषं** | 𑌇𑌷𑌂 | அன்னத்தையும் |
| **आसुव** | 𑌆𑌸𑍁𑌵 | ஒருமுகமாய் ஏவுவாயாக. |
| **दुच्छुनां** | 𑌦𑍁𑌚𑍍𑌛𑍁𑌨𑌾𑌂 | தீயதான நாயைப் (துரத்துவது) போன்று இராக்கதர்களைத் |
| **आरे** | 𑌆𑌰𑍇 | தூரமாகவே |
| **बाधस्व** | 𑌬𑌾𑌧𑌸𑍍𑌵 | வருத்தப்படுத்துவாயாக(ஒதுக்குவாயாக.) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—1. வைகாநசர் ரிஷி.

சோமமாகிய அக்கினியே! நீ, எங்களுடைய ஆயுட்களை, அல்லது, இப் பெயருள்ள அன்னங்களை விருத்தி பண்ணுவாயாக. அதாவது அன்ன ரசமும் (வன்மையும்) அன்னமும் ஒருமுகமாய் எங்கட்கு, வருமாறு செய்வாயாக என்பதாம். மற்றும், எங்களினின்று இராக்கதர்களைத் தூரமாகவே (நிற்குமாறு) பீடிப்பாயாக என்பதாம். (1)

ஈண்டு, மூலத்தில் 'துச்சுநாம்' என்பது இராக்கதர் பெயராம்.

## மந்திரம் 2.

३ २ ३१ २ ३ २र ३१२ ३१२ ३ १ २

628. विभ्राड् बृहत्पिबतु सोम्यं मध्वायुर्दधद्यज्ञपतावविहुतम् ।

१२ ३ १ २ ३१२ ३ १ २ ३ १ २ ३ १र २र

वातजूतो यो अभिरक्षति त्मना *प्रजाः पिपर्त्ति बहुधा विराजति॥

இருக்கு 10-107-1, யஜுர் 33-30.

விஹ்ராட் ப்ருஹத்பிபது ஸோம்யம் மத்வாயுர்தத⁴த்³யஜ்ஞபதாவவி [ஹ்ருதம் ।

வாதஜூதோ யோ அபி⁴ரக்ஷதி த்மநா ப்ரஜா: பிபர்த்தி ப³ஹுதா⁴ [விராஜதி ॥

அந்வயம்.

विभ्राड्, यज्ञपतौ, अविहुतं, आयुः, दधत्, सोम्यं, बृहत्, मधु, पिबतु,

यः, वातजूतः, त्मना, अभिरक्षति, प्रजाः, पिपर्त्ति, बहुधा विराजति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विभ्राड् | விப்⁴ராட் | விசேடமாய்ப் பிரகாசிக்குஞ் சூரியன், |
| यज्ञपतौ | யஜ்ஞபதௌ | வேள்வித் தலைவன் விஷயத்தில் |
| अविहुतं | அவிஹ்ருதம் | இடையூறின்றிய |
| आयुः | ஆயு: | ஆயுளை, அல்லது, அன்னத்தை |
| दधत् | த³த⁴த் | நிலைநாட்டியபின் |
| सोम्यं | ஸோம்யம் | சோமத்தினாலாகிய |
| बृहत् | ப்³ருஹத் | சிறந்த |
| मधु | மது⁴ | மதுவை |
| पिबतु | பிப³து | அருந்துவானாக. |
| यः | ய: | யாதொரு சூரியன் |
| वातजूतः | வாதஜூத: | இராசிச் சக்கரத்தைச் செலுத்தும் வாயுவாற் செலுத்தப் பெற்றோனாய், |
| त्मना | த்மநா | தானாகவே |
| अभिरक्षति | அபி⁴ரக்ஷதி | கிரணத்தால் உலகனைத்தையுங் காப்பாற்றுகின்றானோ, |

* प्रजाः पुपोष, என்பது இருக்கு.

| | | |
|---|---|---|
| प्रजाः | ப்ரஜா: | பிரசைகளை |
| पिपर्ति | பிபர்த்தி | மழை முதலியவைகளால் வலுப் படுத்துகின்றானே, |
| बहुधा | பஹுதா | பலவகைப் பட்டு |
| विराजति | விராஜதி | விசேடமாய் விளங்குகின்றானே, (அச் சூரியன் அருந்துவானாக என முடிக்க) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—2.

இது விப்ராணன் என்னுஞ் சூரிய புத்திரன் கண்டதாம். இதுவே ரிஷியா மெனத்தோன்றுகின்றது. விசேடமாய்ப் பிரகாசிக்கின்ற அச்சூரியன், சோமரசமுடைய சிறந்த மதுவை அருந்துவானாக. என் செய்து கொண்டெனின்? வேள்வித் தலைவன் விஷயத்தில் தடையற்ற ஆயுளை, அல்லது, அன்னத்தை விருத்தி செய்து கொண்டு அருந்துவானாக. யாதொரு சூரியன் வாயுவினாற் செலுத்தப்பட்டு, தானாகவே உலகனைத்தையும் பாதுகாக்கின்றானே, (இராசிச்சக்கரம் வாயுவினாற் செலுத்தப்படுதலின் சூரியனுக்கும் வாயுவினாற் செலுத்தப்பட்டதன்மையாமென்க) சிறப்பாய்ப் பிரகாசிக்கின்ற அச்சூரியன், மழை முதலிய வற்றைக் கொடுக்குந் தன்மையாற் பிரசைகளைப் போஷிக்கின்றான், அல்லது, பரிபாலிக்கின்றான் என்பதாம். (2)

மந்திரம் 3.

३ २ ३ २ ३ १२ ३१ २ ३ १ २ ३२ ३ १२ ३ २

629. चित्रं देवानामुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः ।

२ ३ १ २ ३ २ ३ १ २ ३ १ २ ३ १र ॰२र २ ३ १

आप्रा द्यावापृथिवी अन्तरिक्षꣳ सूर्य आत्मा जगतस्तस्थुषश्च ॥

இருக்கு 1-11-51.

சித்ரம் தேவாநாமுதகாதநீகம் சக்ஷுர்மித்ரஸ்ய வருணஸ்யாக்நே:|
ஆப்ரா த்யாவாப்ருதிவீ அந்தரிக்ஷம் ஸூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்
[துஷஸ்ச ||

அந்வயம்.

देवानां, अनीकं, मित्रस्य, वरुणस्य, अग्नेः, चक्षुः, चित्रं, उदगात्,

द्यावापृथिवी, अन्तरिक्षं, आप्राः, सूर्यः, जगतः, च, तस्थुषः, आत्मा ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| देवानां | தெவா நாம் | தேவர்களுடைய, அல்லது, கிரணங்களினுடைய |
| अनीकं | அநீகம் | ஒளிப்பிழம்பானதும், |
| मित्रस्य | மித்ரஸ்ய | மித்திர தேவதைக்கும் |
| वरुणस्य | வருணஸ்ய | வருணனுக்கும் |
| अग्नेः | அக்நேஃ | அக்கினிக்கும் |
| चक्षुः | சக்ஷுஃ | நேத்திரமானதும், |
| चित्रं | சித்ரம் | வியப்பைத் தரத்தக்கதுமாகிய சூரிய மண்டலம் |
| उदगात् | உதகாத் | உதயமாகி |
| द्यावापृथिवी | த்யாவாப்ருதிவீ | வானுலக மண்ணுலகங்களையும், |
| अन्तरिक्षं | அந்தரிக்ஷம் | அந்தரிக்ஷத்தையும். |
| आप्राः | ஆப்ராஃ | தன் கிரணத்தாற் பூரணமாக்கிக் கொண்டு |
| सूर्यः | ஸூர்யஃ | அத்தகைய இரவி |
| जगतः | ஜகதஃ | சங்கமப் பொருள்கட்கும் |
| च | ச | மற்றும், |
| तस्थुषः | தஸ்துஷஃ | தாவரப் பொருள்கட்கும் |
| आत्मा | ஆத்மா | ஆன்மாவானது. |

## சாயணபாடியம்.

கண்டம்—5. இருக்கு—3. குச்ச ரிஷி.

கிரணங்களினுடைய, அல்லது, பிரசித்தியான தேவர்களுடைய பிரபைகளின் சமுதாயமானதும், வியப்பைத்தரத்தக்கதுமாகிய சூரிய மண்டலம், உதயாசலத்தை அடைந்தது. அஃது எத்தன்மையதெனின்? மித்திர தேவதை, வருண தேவதை, அக்கினி தேவதைகள் என்னுமிவர்களின் நேத்திரமாம். இஃது உபலக்கணம், இதனால் உபலட்சிதமான உலகங்களை விளக்குகின்ற நேத்திரம் போன்றதாமென்க. அல்லது, இந்திரியம் போன்றதாமெனினுமாம். மற்றும், உதயமாகி, வானுலகையும், அந்தரிக்ஷ உலகையும், மண்ணுலகையும் தனது கிரணத்தால் முழுதும் பூரணமாக்குகின்றது. இத்தன்மையாகிய மண்டலத்தின் நடுவிலுள்ள சூரியன், அந்தரியாமியாந்தன்மையால் அனைத்தையுஞ் செலுத்தும் பரமான்மா வாகின்றான். ஜங்கமப் பொருட்கும், தாவரப் பொருட்கும் ஆன்மாவு மாவன். அதுவே தாவர ஜங்கமங்களாகிய காரிய வர்க்க மனைத்திற்கும் வடிவாம். காரணத்தினின்றுங் காரியம் வேறாகாது. அவ்வாறே "தோன்றிய சப்த முதலியவைகளினின்று அஃது அன்னிய மாகா" என்பது (வியாச) இருடியாற் செய்யப்பட்ட

சூத்திரமுங் கூறுகின்றது. அல்லது தாவர, சங்கம வடிவம் என்றதற்கு, எல்லாப் பிராணிகளின் சமுதாயத்திற்குச் சீவான்மா என்பது பொருளாம். சூரியன் உதித்தபோது இரவில் இறந்தன போன்றுள்ள உலகனைத்தும், மறித்துஞ் சேதனத்தோடு கூடியதாய்க் காணப்படுகின்றன. அங்ஙனமே, "யாதொரு இது இருளைப் போக்குகின்றது, எல்லா வற்றிற்கும் உயிர்களைக் கொடுத்துக்கொண்டு உதயமாகின்றது" என மறையுங் கூறுகின்றது என்பதாம். (3)

## மந்திரம் 4.

१र २र ३ ३ १ ३ २ १ २ ३ २
630. आयङ्गौः पृश्निरक्रमीदसदन्मातरं पुरः ।
३ १२ ३ १ २
पितरं च प्रयन्त्स्वः ॥ ४ ॥

யஜுர் 3-6.

ஆயங்கௌ: ப்ருச்நிரக்ரமீதஸதந்மாதரம் புர: |
பிதரம் ச ப்ரயந்த்ஸ்வ: ||

அந்வயம்.

गौः, पृश्निः, अयं, आ अक्रमीत्, पुरः, मातरं, असदत्, पितरं, च, प्रयन्, स्वः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| गौः | கௌ: | செல்லுஞ் சீலமுள்ளதும் |
| पृश्निः | ப்ருச்நி: | ஒளியால் வியாபிக்கப் பெற்றதுமாகிய |
| अयं | அயம் | இச் சூரியன் |
| आ अक्रमीत् | ஆ அக்ரமீத் | உதயாசலத்தை வளைந்து கொண்டனன். பின்னர், |
| पुरः | புர: | கிழக்குத் திக்கில் |
| मातरं | மாதரம் | உயிர்களை யுண்டாக்கும் பூமியை |
| असदत् | அஸதத் | அடைந்துகொண்டிருக்கின்றனன். பின்னர் |
| पितरं | பிதரம் | பரிபாலிக்கின்ற விண்ணுலகையும் |
| च | ச | அந்தரிக்ஷத்தையும் |
| प्रयन् | ப்ரயந் | அடைகின்றவனும், |
| स्वः | ஸ்வ: | அழகிய போக்குடையவனுமாகின்றான். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—4. சார்ப்பராக்ஞி ரிஷி.

செல்லுஞ் சீலமுடையவனும், ஒளி நிறைந்தவனுமாகிய இச் சூரியன், உதயாசலத்தை யடைந்து விட்டனன். அடைந்து, கிழக்குத் திக்கில் எல்லாப் பிராணிகளையும் நிருமாணஞ் செய்யும் பூமியையும் அடைந்தனன். பின்னர், பரிபாலிக்கும் விண்ணுலகையும் அடைந்தனன். விண்ணுலகையும் என்ற உம்மையால் அந்தரிக்ஷமுங் கொள்ளற்பாலதாம். இனிது விரைவிற் செல்கின்ற அழகிய போக்குடையவனுகின்ருன். அல்லது, விண்ணுலகைச் செலுத்துகின்றனன் என்பதாம். (4)

## மந்திரம் 5.

३ १२ ३ २र ३ १२ ३ २

631. अन्तश्चरति रोचनास्य प्राणादपानती ।

२र ३ १ २र

व्यख्यन्महिषो दिवम् ॥ ५ ॥

இருக்கு 1-189-2.

அந்தஶ்சரதி ரோசநாஸ்ய ப்ராணாதபாநதீ ।
வ்யக்யந்மஹிஷோ திவம் ॥

அந்வயம்

अस्य, रोचना, अन्तः, प्राणात्, अपानती, चरति, महिषः, दिवं, व्यख्यत् ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| अस्य | அஸ்ய | இச் சூரியனுடைய |
| रोचना | ரோசநா | கிரணம் |
| अन्तः | அந்தஃ | உடம்பினுள், |
| प्राणात् | ப்ராணாத் | முக்கியப் பிராணிகளினுடைய ஐந்து விருத்திகளினின்று நாடிவாயிலாக வாயுவை மேலே கொண்டுபோய், |
| अपानती | அபாநதீ | அவ் வாயுவை நாடிவாயிலாகக் கீழ்முக மாக்குகின்றது. |
| चरति | சரதி | உடம்பிற்குட்பிராணவடிவாய் நிற்கும் ஒளியையுடைய |
| महिषः | மஹிஷஃ | மகானுகிய சூரியன் |
| दिवं | திவம் | அந்தரிக்ஷத்தைப் |
| व्यख्यत | வ்யக்யத் | பிரகாசிப்பிக்கின்ருன். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—5. சார்ப்பராக்ஞி ரிஷி.

இச் சூரியனுடைய ஒளியானது, உடம்பின் நடுவில் முக்கியப் பிராண வடிவாயிருக்கின்றது. என் செய்துகொண்டிருக்கின்றதெனின்? முக்கியப் பிராணனுக்கு, பிராணன் அபானன் முதலிய ஐந்து விருத்திகளாம். அவற்றுள், பிராணன் றன்மையோ? நாடிகளால் மேலே வாய்வு எழுதலாம். அத்தன்மைய பிராணனுக்கு பின்னர், அபானன் தன்மையோ? நாடிகளால் வாயுவைக் கீழ்முகமாய்க் கொண்டுவருதலாம். என்னுமிதைச் செய்துக் கொண்டிருக்கின்றது என்க. அல்லது, வானிற்குந் தரைக்கும் நடுவில் இச் சூரியனுடைய காந்தி செல்கின்றது. என்செய்து கொண்டெனின்? உதயத்தின் பின்னர் மாலையில் அத்தமிக்கின்றது (ஒடுங்குகின்றது) என்னும் இத்தன்மைய காந்தியோடு கூடியதா யுதித்தொடுங்கிக்கொண்டு செல்கின்றது. இதுபற்றியே மகானாகிய சூரியன் உதித்தொடுங்குவதற்கு இடையில் அந்தரிட்சத்தைப் பிரகாசிப்பிக்கின்றனன் எனப்படுகின்றான் என்பதாம். (5)

மந்திரம் 6.

३ २उ ३ १२ ३ १ २३१२

632. त्रिंशद्धाम विराजति वाक् पतङ्गाय धीयते ।

२ ३ २ ३२३ १२

प्रति वस्तोरह द्युभिः ॥ ६ ॥

இருக்கு 10-183-3.

த்ரிꣳஶத்தா⁴ம விராஜதி வாக் பதங்கா³ய தீ⁴யதே ।

ப்ரதி வஸ்தோரஹ த்³யுபி⁴: ॥

அந்வயம்.

वस्तोः, त्रिंशद्धाम, द्युभिः, अह, विराजति, वाक्, पतङ्गाय, प्रतिधीयते ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| वस्तोः | வஸ்தோ: | பகற் காலத்தின் |
| त्रिंशद्धाम | த்ரிꣳஶத்தா⁴ம | முப்பது நாழிகை வரையிலும் |
| द्युभिः | த்³யுபி⁴: | கிரணங்களுடன் |
| अह | அஹ | ஐயமின்றிச் |
| विराजति | விராஜதி | (இரவி) சிறப்பாய் விளங்குகின்றது. அப்போது, |

| | | |
|---|---|---|
| वाक् | வாக் | வேதவாணி (மறை மொழி) யானது |
| पतङ्गाय | பதங்காய | சூரியன் பொருட்டு |
| प्रतिधीयते | ப்ரதிதீயதே | ஒவ்வொருவர் வாயிலுங் கொள்ளப் (சொல்லப்) படுகின்றது. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—6. சர்ப்பராக்ஞி ரிஷி.

ஒரு தினத்தின் கூறுகளான (பகலிரவுகளின் அம்சங்களான) முப்பது முகூர்த்தம் (நாழிகை) வரையிலும் ஒளியுடன் கூடியே சூரியன் நன்கு விளங்குகின்றான். அச் சூரியன் பொருட்டு, துதிப்போர்களால் ஒவ்வொருவரின் வாயிலுந் துதியாகிய வாக்குக் கொள்ளப்படுகின்றது. (வாயால் வாழ்த்துகின்றார்கள் என்பதாம்.) அல்லது, மூலத்தில் வஸ்தோ: என்றது, ஒரு பகற்போதாம். முப்பது தாமம் என்றது நாழிகைகள். இத்துணைப் போதிலேயே கிரணங்களோடுகூட இச் சூரியன் இனிது விளங்குகின்றான் என்பதாம். அப்போதும் மறையாகிய வாக்குகளே அச் சூரியன் பொருட்டுத் துதிப்போர்கள் வாயிற் கொள்கின்றார்கள். அதாவது அவ் வாக்கினால் முதலிற் சேவிக்கின்றார்கள் என்பதாம். அவ்வாறே, "வானில் தேவன் முற்பகலில் இருக்கு மறைமொழிகளா லேற்றப்படுகின்றான், நடுப்பகலில் எசுர் வேதம் நிற்கின்றது. அத்தமன காலத்தில் சாம மறை மொழிகளாற் போற்றப்படுகின்றான், மூன்று வேதங்களால் அடைகின்றான்" (செல்கின்றான் சூரியன்) என மறையுங் கூறுகின்றது. இந்த மந்திரத்தில் சர்ப்பராக்ஞரின் ஆன்மத் துதியெனக் கொள்ளுங்கால் அவர் ஆன்மாவைச் சூரியவடிவாய்த் துதிக்கின்றார் என வுணர்க. (6)

குறிப்பு.—மூலத்தில், (அஹ,) என்றது தேற்றப் பொருடந்து நின்றது. தாமம் என்றதோ, முகூர்த்தமாம். மூலத்தில், (பதங்கம்) என்பது செல்லுந் தன்மையாற் சூரியனாவன்.

## மந்திரம் 7.

२ ३ २ २ ३ २ ३ १ २ ३ १ २
633. अप त्ये तायवो यथा नक्षत्रा यन्त्यक्तुभिः ।
१ २ ३ १ २
सूराय विश्वचक्षसे ॥ ७ ॥

இருக்கு 1-05-2.

அப த்யே தாயவோ யதா நக்ஷத்ரா யந்த்யக்துபி: ।
ஸூராய விஶ்வசக்ஷஸே ॥

அந்வயம்.

विश्वचक्षसे, सूराय, त्ये, तायवः, यथा, नक्षत्रा, अक्तुभिः, अपयन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| विश्वचक्षसे | விஶ்வசக்ஷஸே | எல்லாவற்றையும் விளக்குகின்ற |
| सूराय | ஸூராய | சூரியன் பொருட்டு (அவனெழுங் காலங்கண்டு) |
| त्ये | த்யே | கீர்த்தி வாய்ந்த |
| तायवः यथा | தாயவ: யதா | திருடர்கள் போன்று |
| नक्षत्रा | நக்ஷத்ரா | நக்ஷத்திரக் கூட்டங்கள் |
| अक्तुभिः | அக்துபி: | இரவுடன் |
| अपयन्ति | அபயந்தி | மறைந்து விடுகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—7. பிரற்கண்ணுவ ரிஷி.

வெளிப்படையான திருடர்கள் போல, தேவர்களின் கிருகங்களாகிய நக்ஷத்திரங்கள், "தேவர்களின் வீடுகள் நக்ஷத்திரங்கள்" என, ஏனைய மறைமொழியாலும் நக்ஷத்திரங்கள் தேவர்களின் வீடுகளெனப்படுகின்றன. அல்லது, இவ் வுலகிலுள்ள மனிதர்களில், சுவர்க்க மடைந்தவர்கள் எவர்களோ, அவர்கள் நக்ஷத்திர வடிவங்களாகத் தோற்றுகின்றார்கள் எனினுமாம். அவ்வாறே "எவன் ஈண்டு ஆராதிக்கின்றானோ, அவன் இவ் வுலகை யொழித்து நக்ஷத்திரங்களின் கேடிலாத் தன்மையை யடைகின்றான்" என மறையுங் கூறுகின்றது. அல்லது, புண்ணியசாலிகளினுடைய காந்திகள் நக்ஷத்திர வடிவங்களாய்க் காணப்படுகின்றன. அங்ஙனமே, "எவைகள் நக்ஷத்திரங்களோ, இவைகள் புண்ணியவான்களுடைய காந்திகள்" என மறையுங் கூறுகின்றது. யாஸ்க முனிவரோ, நக்ஷத்திரங்கள் என்பதை அடைவுப் பொருள்களுடையன இவைகளல்ல நக்ஷத்திரங்கள்" எனக் கூறுகின்றார். இத் தன்மைத்தான நக்ஷத்திரங்கள் இரவுடன் மறைந்து விடுகின்றன என்பது பொருள். ஈண்டு உலகத்தை விளக்குஞ் சூரியன்வருவதைக் கண்டு என்பது எஞ்சி நின்றது. நக்ஷத்திரங்களும், திருடர்களும், இரவுடன்கூட சூரியன் வருகின்றான் என வியாகூலப்படுகின்றார்கள் என்பது கருத்து. (7)

குறிப்பு.—மூலத்தில் (தாயு:) என்பது திருடன் பெயராம். நிகண்டில் ('தாயுஸ்தஸ்கர') என அப்பெயர்களுட் பாடமாமாதலின். ('அக்து:') என்பது இரவின் பெயர். நிகண்டில் நகைம காண்டம் 1, 7, 4-ல் சர்வரி (அக்து:) என அப்பெயர்களுட் பாடமாமாதலின் என்றாம்.

## மந்திரம் 8.

१२ ३२ ३ २ ३ २ ३ २ ३ १२

634. *अदृश्रन्नस्य केतवो विरश्मयो जनाँ अनु ।

१२ ३ १ २

भ्राजन्तो अग्नयो यथा ॥ ८ ॥

இருக்கு 1-50-3.

அத்₃ருஶ்ரந்நஸ்ய கேதவோ விரஶ்மயோ ஜநாம் அநு |
ப்₄ராஜந்தோ அக்₃நயோ யதா₂ ||

அந்வயம்.

भ्राजन्तः, अग्नयः यथा, केतवः, अस्य (सूर्यस्य,) रश्मयः, जनान्, अनुव्यदृश्रन्॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| भ्राजन्तः | ப்₄ராஜந்த: | பிரகாசிக்கின்ற |
| अग्नयः यथा | அக்₃நய: யதா₂ | அக்கினிக் கொப்பாக |
| केतवः | கேதவ: | விளங்குகின்ற |
| अस्य (सूर्यस्य) | அஸ்ய (ஸூர்யஸ்ய) | இச் சூரியனுடைய |
| रश्मयः | ரஶ்மய: | கிரணங்கள், |
| जनान् | ஜநாந் | சனங்களனைவரையும் |
| अनुव्यदृश्रन् | அநுவ்யத்₃ருஶ்ரந் | முறையாய் விளக்குகின்றன. |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—8. பிரக்கண்வ ரிஷி.

நன்கு (உலகை) விளக்குகின்ற இச் சூரியனுடைய கிரணங்கள், சனங்களனைவரையும் முறையாய் விளக்குகின்றன. அதாவது உலகனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றன என்பது பொருள். அதிலுவமை :— சொலிக்கின்ற அக்கினி போன்றெனல். (8)

## மந்திரம் 9.

३१ २ ३ १२ ३ १२

635. तरणिर्विश्वदर्शतो ज्योतिष्कृदसि सूर्य ।

२ ३ १ २ ३२

विश्वमाभासि रोचनम् ॥ ९ ॥

இருக்கு 1-50-4.

---

* अदृश्रमस्य, என்பது இருக்கு.

தரணிர்விஶ்வதர்ஶதோ ஜ்யோதிஷ்க்ருதஸி ஸூர்ய ।
விஶ்வமாபாஸி ரோசநம் ॥

அந்வயம்.

हे सूर्य !, तरणिः, विश्वदर्शतः, ज्योतिष्कृत् असि, विश्वं, रोचनं, आभासि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सूर्य ! | ஹே ஸூர்ய ! | சூரியனே ! நீ |
| तरणिः | தரணிঃ | பிறரால் செல்ல முடியாத பெரும் வழியிற் செல்கின்றவனுயிருக்கின்ருய். அல்லது, வழிபடுவோர்களை வியாதிகளினின்றுந் தாண்ட வைக்கின்ருய். |
| विश्वदर्शतः | விஶ்வதர்ஶதঃ | பாவத்தைப் போக்குதற்கு நின்னை உலகந் தரிசிக்கின்றது. அல்லது, பொருளெல்லாவற்றையும் விளக்குகின்ருய். |
| ज्योतिष्कृत् असि | ஜ்யோதிஷ்க்ருத் அஸி | சந்திரன் முதலியவைகளிலுள்ள கிரணங்கட்குக் கருத்தனுயிருக்கின்ருய். |
| विश्वं | விஶ்வம் | உலகனைத்தையும் |
| रोचनं | ரோசநம் | விளக்கிக் கொண்டு |
| आभासि | ஆபாஸி | நீயும் நன்கு பிரகாசிக்கின்ருய். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—9. பிரக்கண்வ ரிஷி.

சூரியனே ! நீ, பிறரால் செல்லமுடியாத பெரு மார்க்கத்திற் செல்கின்றவனுயிருக்கின்ருய். அவ்வாறே, "யோசனை (நான்கு கோசம்) யீரிரண்டு இருநூறு யோசனைதூரம் அரை நிமிஷத்தாற் செல்பவனைக்குறித்து வணக்கம்" என மிருதியும் கூறுகின்றது. அல்லது, வழிபடுவோர்களை வியாதிகளினின்று தாண்டச் செய்கின்ருய். அவ்வாறே, "ஆரோக்கியம் ஆதித்தனில் நின்று தருவாயாக." என மிருதியுங் கூறுகின்றது. அங்ஙனமே, எல்லாப் பிராணிகளாலுந் தரிசித்தற் குரியோனுவன். இரவியின் றரிசனம், சண்டாளன் முதலியோர்களைக் கண்டதாற் றேன்றும் பாவத்தைப் போக்கக் காரண மாதலினென்க, அவ்வண்ணமே, ஆபத்தம்பரும். "தரிசனத்

தில் சோதிகளினுடைய தரிசனம்" என்றார். அல்லது, எல்லாவற்றையுங் காணச் செய்வோன். அவ்வாறே பிரகாசங்கட்குக் கருத்தன். அதாவது :— எல்லாப் பொருள்களையும் பிராசிப்பவன் என்பதாம். அல்லது, சந்திரன் முதலியவைகள் இரவில் அத்தமன மானவிடத்து, சந்திரன் முதலியவை களிற் சூரிய கிரணங்கள் பிரதிபலித்து இருளைப் போக்குகின்றன. அஃது எவ்வாறெனின்? வாசலிலுள்ள கண்ணாடியின்மேல் பட்ட சூரிய கிரணம் வீட்டிற் குள்ளிருக்கும் இருளைப் போக்குகின்றது போன்றும். இவ்வாறு மாதலின் உலகத்தை விளக்கி அந்தரிட்சத்தைப் பிரகாசிப்போனு யிருக் கின்றாய் என்க. அல்லது, சூரியனே! அதாவது அந்தரியாமியாந் தன்மை யால் எல்லா வற்றையுஞ் செலுத்தும் பரமான்மாவே! நீ, பிறவிக் கடலி னின்று கரையேற்றுவோனு யிருக்கின்றாய். எக்காரணத்தால் எல்லா மோட்ச வேட்கையாளர்களாலுஞ் சாட்சாத் கரித்தற் குரியவனு யிருக்கின் றனையோ, அக் காரணத்தா லெனமுடித்துக் கொள்க. அதிட்டான சாக்ஷாத்கார மான விடத்து (பற்றுக் கோடாகிய உண்மைப் பொருளை யுள்ள வாறுணர்ந்த விடத்து) ஆரோபிதம் (கற்பனைப் பொருள்) நீங்குகின்றது. சூரியன் முதலியவைகட்குக் கருத்தா நீயே யாவாய் என்பதாம். அது வும், "சந்திரன் மனம், உண்மையாயின, இந்திரியங்கள் சூரியன் உண்டா யின" என மறையிற் கூறப்படுகின்றது. இத் தன்மைய நீ, சித்துவடிவமாந் தன்மையால் காணப்படும் பொருளனைத்தையும் இனிது விளங்குமாறு செய்துக்கொண்டு விளங்குகின்றவனு யிருக்கின்றாய் என்பதாம். மற்றொரு காரணத்தால் இவ்வணங் காணப்படுகின்ற தன்று. அவ்வாறே "விளங்கு கின்ற அதைப் பின்பற்றியே அனைத்தும் விளங்குகின்றன, அதனுடைய காந்தியால் இது விளங்குகின்றது" என மறையுங் கூறுகின்றது என்ற வாறு. (9)

## மந்திரம் 10.

३ २ ३ २ ३ १ २ ३ १र २र३ १ २
636. प्रत्यङ् देवानां विशः प्रत्यङ्ङुदेषि मानुषान् ।
३ २उ ३क ३ २
प्रत्यङ् विश्वꣳ स्वर्दृशे ॥ १० ॥

இருக்கு—1-50-5.

ப்ரத்யங் தேவாநாம் விஶ: ப்ரத்யங்ஙுதேஷி மாநுஷாந் ।
ப்ரத்யங் விஶ்வம் ஸ்வர்த்ருஶே ॥

அந்வயம்.

हे सूर्य!, देवानां, विशः, प्रत्यङ् उदेषि, मानुषान्, प्रत्यङ्, विश्वं, स्वर्दृशे, प्रत्यङ् ॥

## பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सूर्य! | 𑌹𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯 ! | சூரியனே ! நீ |
| देवानां | 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 | தேவர்களுக்குள் |
| विशः | 𑌵𑌿𑌶𑌃 | மருத்து என்னுந் தேவதைக்கும் |
| प्रत्यङ् उदेषि | 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌙𑍍 𑌉𑌦𑍇𑌷𑌿 | நேர்முகமாய் உதிக்கின்றாய். |
| मानुषान् | 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌨𑍍 | மனிதர்கட்கும் |
| प्रत्यङ् | 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌙𑍍 | நேர்முகமா யுதிக்கின்றாய், |
| विश्वं | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 | எல்லா |
| °स्वर्दृशे | 𑌸𑍍𑌵𑌰𑍍𑌦𑍃𑌶𑍇 | விண்ணுலகங் காண்பதற்கும் |
| प्रत्यङ् | 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌙𑍍 | எதிர்முகமாய் நிற்கின்றாய். (யாண்டும் எதிர்முகமாகவே யெழுகின்றாய் என்க.) |

## சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—10. *பிரக்கண்வ ரிஷி.*

சூரியனே ! நீ, தேவர்களுக்குள் மருத்துக்கள் என்னுந் தேவதைகளைக் குறித்தும் எதிர்முகமா யெழுகின்றாய். ஈண்டு (விச:) என்பது மருத்துக்களாவார்கள். என்னை ? " மருத்துக்கள் தேவர்களுக்குள் விசர்கள் " என வேனைய மறையு மோதலினென்க. அவ்வணமே, மனிதர்களைக் குறித்தும் எதிர்முகமா யெழுகின்றாய். அவர்களும் ' எங்கட் கெதிரிலேயே சூரிய னுதிக்கின்றான் ' என வெண்ணுகின்றார்கள் என்பதாம். உலகமடைந்த அவ்வாறே விண்ணுலகம் பார்ப்பதற்கும் எதிர்முகமா யெழுகின்றாய். சுவர்க்கத்திலுள்ளார் தமக்கும் எதிராய்க் காணுமாறு உதிக்கின்றாய் என்பதாம். இவ்வாற்றால், எவர்கள் பார்க்கின்றார்களோ, அவர்களனைவரும் தத்தமக்கெதிராய்ச் சூரியனைப் பார்க்கின்றார்கள் என்னும் பொருள் கூறப்பட்டதென்பதுணர்க. அவ்வாறே, " ஆதலின், யாவரும், எமக்கெதிராயுதிக்கின்றது (எமக்கு எதிர்முகமா யுதிக்கின்றது) இரவி என எண்ணுகின்றார்கள் " என் மறையுங் கூறுகின்றது என்பதாம். (10)

## மந்திரம் 11.

१ २ ३ १ २ ३ २ ३ २ ३ १ २
637. येना पावक चक्षसा भुरण्यन्तं जनाँ अनु ।
१ २३ १ २
त्वं वरुण पश्यसि ॥ ११ ॥

இருக்கு 1-50-6.

யெநா பாவக சக்ஷஸா ஹுரண்யந்தம் ஜநாம் அநு ।
த்வம் வருண பஶ்யஸி ॥

அந்வயம்.

हे पावक !, वरुण !, त्वं, जनान्, भुरण्यन्तम्, येन चक्षसा, अनुपश्यसि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे पावक ! | ஹெ பாவக ! | அனைத்தையும் பவித்திரமாக்குவோய் ! |
| वरुण ! | வருண ! | பிரியமிலாததை விலக்குவோனாகிய சூரியனே ! |
| त्वं | த்வம் | நீ |
| जनान् | ஜநாந் | பிராணிகளைத் |
| भुरण्यन्तम् | ஹுரண்யந்தம் | தாங்கிக் கொண்டு. அல்லது, பாது காத்துக் கொண்டு (இவ்வுலகை) |
| येन चक्षसा | யெந சக்ஷஸா | எந்தப் பிரகாசத்தால் |
| अनुपश्यसि | அநுபஶ்யஸி | முறையாய்ப் பிரகாசிப்பிக்கின்றனையோ, அப் பிரகாசத்தை வணங்குகின்றேன். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—11. பிரக்கண்வ ரிஷி.

எல்லாவற்றையுஞ் சுத்தப்படுத்துவோய்! வேண்டாததை விலக்குவோய்! சூரிய! நீ, பிராணிகளைத் தாங்கிக்கொண்டு, அல்லது, பரிபாலித்துக்கொண்டு, எந்தப் பிரகாசத்தினால் இவ் வுலகை விளக்குகின்றனையோ, அப் பிரகாசத்திற்கு வணக்கஞ் செய்கின்றேன் யான் என்பதாம். (11)

## மந்திரம் 12.

१ २र३१२ ३२३१२ ३१२

638. *उद्द्यामेषि रजः पृथ्वहा मिमानो अक्तुभिः ।

२ ३१२

पश्यञ्जन्मानि सूर्य ॥ १२ ॥

இருக்கு 1-50-7.

உத்த்யாமேஷி ரஜ: ப்ருத்வஹா மிமானோ அக்துபி: |
பஶ்யஞ்ஜந்மானி ஸூர்ய ||

அந்வயம்.

हे सूर्य !, अहा, अक्तुभिः, मिमानः, जन्मानि, पश्यन्, पृथु, रजः, द्यां, उदेषि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सूर्य ! | ஹே ஸூர்ய ! | சூரியனே ! நீ, |
| अहा | அஹா | பகலை |
| अक्तुभिः | அக்துபி: | இரவுகளுடன் |
| मिमानः | மிமாந: | அளக்கின்றாய். (அவ்வாறே) |
| जन्मानि | ஜந்மானி | பிறப்பையுடைய பிராணிகளை |
| पश्यन् | பஶ்யந் | பிரகாசிப்பித்துக் கொண்டு |
| पृथु | ப்ருது | மிக விரிந்த |
| रजः | ரஜ: | விண்ணுலகைக் குறித்தும் |
| द्यां | த்யாம் | அந்தரிக்ஷ வுலகத்தைக் குறித்தும் |
| उदेषि | உதேஷி | உதிக்கின்றாய். |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—2. பிரக்கண்வ ரிஷி.

இரவியே! நீ, விரிந்த விண்ணுலகையும், ஈண்டு மூலத்தில் (ரஜ:) என்றது உலகமாம் "உலகங்கள் ரஜங்கள் எனப்படுகின்றன" என யாஸ் முனிவரின் நிருத்த வாக்காலுங் காண்க. அந்தரிக்ஷ வுலகையும், உதித்து

* विद्यामेषि, என்பது இருக்கு.

விளக்குகின்றாய். யாதுசெய்து கொண்டெனின்? பகல்களை, இரவுகளுடன் அளந்துகொண்டு உதிக்கின்றாய். பகலிரவுகளின் வேறுபாடு இரவி செல்கின்றதைப் பற்றியதா மாதலினென்க. அவ் வாறாகவே, பிறப்பையுடைய பிராணிகளின் சமுதாயங்களையும் பிரகாசிப்பித்துக் கொண்டு. (உதித்து விளக்குகின்றாய் என்பதுடன் சேர்த்துக்கொள்க.) (12)

## மந்திரம் 13.

१ २ ३ २ ३ २३ २ ३ २२ ३क२र

639. अयुक्त सप्त शुन्ध्युवः सूरो रथस्य नप्त्र्यः ।

१ २ ३ १२

ताभिर्याति स्वयुक्तिभिः ॥ १३ ॥

இருக்கு 1-50-9.

அயுக்த ஸப்த ஶுந்த்⁴யுவ꞉ ஸூரோ ரத²ஸ்ய நப்த்ய꞉ ।

தாபி⁴ர்யாதி ஸ்வயுக்திபி⁴꞉ ॥

அங்வயம்.

सूरः, शुन्ध्युवः, रथस्य, नप्त्यः, सप्त, अयुक्त, स्वयुक्तिभिः, ताभिः, याति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| सूरः | ஸூர꞉ | எல்லா வற்றையுஞ் செலுத்துகின்ற சூரியன் |
| शुन्ध्युवः | ஶுந்த்⁴யுவ꞉ | சுத்தம் பண்ணுகின்றவைகளும் |
| रथस्य नप्त्यः | ரத²ஸ்ய நப்த்ய꞉ | இரதத்தைக் கவிழ்க்காதவைகளுமான |
| सप्त | ஸப்த | ஏழு பரிகளையும் |
| अयुक्त | அயுக்த | தனது இரதத்திற் பூட்டினன். |
| स्वयुक्तिभिः | ஸ்வயுக்திபி⁴꞉ | தன்னாற் பூட்டப்பெற்றதான |
| ताभिः | தாபி⁴꞉ | அக் குதிரைகளின் வாயிலாக. |
| याति | யாதி | வேள்வி செய்யு மிடத்தை யடைகின்றான். (ஆதலின் அவி கொடுக்கற் பாலதென்க.) |

சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—13. பிரக்கண்வ ரிஷி.

எல்லாவற்றையுஞ் செலுத்துகின்ற சூரியன், சுத்தப் படுத்துகின்ற ஏழு பெண் குதிரைகளைத் தனது இரதத்திற் பூட்டிவிட்டனன், அவைகள் எவ் வண்ணமான குதிரைகளெனின்? எவைகளைப் பூட்டினால் இரதங் கவிழ்க்கப்படாத தாமோ, அத் தன்மைத் தானவைகள் என்க. இதனு லிரதத்திற் பூட்டப்பெற்ற பெண் குதிரைகள் வாயிலாக வேள்விச் சாலையை யடைகின்றான் ஆதலின் அவன் பொருட்டு அவிகொடுக்கத் தக்கது என்பதாம். (13)

மந்திரம் 14.

३१ २ ३ २ ३ ३ २ १२

640. सप्त त्वा हरितो रथे वहन्ति देव सूर्य ।

३ १ २

शोचिष्केशं विचक्षण ॥ १४ ॥

இருக்கு 1-50-8.

ஸப்த த்வா ஹரிதொ ரயெ வஹந்தி தெவ ஸூர்ய ।
ஶொசிஷ்கெஶம் விசக்ஷண ॥

அந்வயம்.

हे सूर्य देव!, विचक्षण, सप्त, हरितः, रथे, शोचिष्केशं, त्वा, वहन्ति ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे सूर्य देव ! | ஹெ ஸூர்ய தெவ ! | பிரகாசமுடைய சூரியனே ! |
| विचक्षण ! | விசக்ஷண ! | அனைத்தையும் விளக்குவோய் ! |
| सप्त | ஸப்த | ஏழு |
| हरितः | ஹரிதঃ | குதிரைகள், அல்லது, கிரணங்கள் |
| रथे | ரயெ | இரதத்திலிருப்போனும் |
| शोचिष्केशं | ஶொசிஷ்கெஶம் | கிரணமென்னுங் கேசமுடையோனுமாகிய |
| त्वा | த்வா | உன்னைத் |
| वहन्ति | வஹந்தி | தாங்குகின்றன. |

## சாயண பாடியம்.

கண்டம்—5. இருக்கு—14. பிரக்கண்வ ரிஷி.

பிரகாசமாகிய சூரிய! அனைத்தையும் விளக்குவனவும், ஏழென்னு மெண்கொண்டவைகளுமான நினது குதிரைகள், அல்லது, இரதத்தைக் கவருகின்ற கிரணங்கள், நின்னைத் தாங்கிச் செல்கின்றன. எத்தன்மைய னாகிய நின்னை யெனின்? இரதத்தில் இருக்கப்பட்டவனை. 'ஈண்டு இருக்கப் பட்டவன்' என்பது எஞ்சி நின்றது. அவ்வாறே கிரணங்களையே கேசங்கள் போன்றுடையானை. (தாங்குகின்றன என்பதனோடு சேர்த்துக்கொள்க.)

வித்தியாதீர்த்த மகேசுரர் மறைப்பொருளை விளக்கலால்
மாயிருள் தொலைத்து புருடார்த்தங்கள் நான்கையும் அளிப்பாராக.

---

சாயணாசாரியர் இயற்றிய சாமவேதார்த்தப் பிரகாச பாடியம்

முற்றும்.

---

வேதாகம ஞான விநோதன் றிருவடி வாழ்க.

வனத்திலுள்ளார்களே ஓதுதற்குரிய ஆறுமத்தியாயமும்

முடிந்தது.

---

சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!! சுப்ரமண்யோம்!!!

# மகா நாம்நியார்ச்சிக விளக்கம்

மேல்வரும் இவ் வார்ச்சிகமானது, சந்த ஆர்ச்சிக மென்னும் பூர்வார்ச்சிகத்திலுஞ் சேரவில்லை. உத்தரார்ச்சிகத்திலுஞ் சேரவில்லை. மற்றே, யாண்டும் பூர்வார்ச்சிகத்தின் ஈற்றிற் காணப்படுகின்றது, சாயண பாடியத்திலும் அவ்வாறே யிருக்கின்றது. ஆனால் இது ஐந்தா நாளில் இருக்குமறை யோதுவானுடைய வேள்வியாக வகுக்கப்பட்டிருக்கின்றது. இது சிலரால் கொள்ளப்படாததுமாம். இதற்கு ரிஷி பிரசாபதியாவர். இது மூன்று கண்டங்களை யுடையனவா யிருத்தலின் மூவுலகத்து நிறைந்த ஆன்மாவாகிய இந்திரனே இதற்குத் தேவதையாவன் என்ப துணர்க.

இதை மகாநாம்நி யென்றும், சாக்குவரி யென்றுங் கூறுகின்றனர். 'சாக்குவரி' என்னுஞ் சந்த விசேடத்திற்கு எழுத்துக்கள் ஐம்பத்தாறும். அதன் முறை வருமாறு:— காயத்திரிச் சந்தந் தொடங்கி, அதிதிருதி யீறுகவுள்ள சந்தங்கட்கு இருபத்து நான்கு (24) எழுத்துக்கள் முதற்கொண்டு நான்கு நான்கு எழுத்துக்கள் மிகுதியா மிடத்து உஷ்ணிக் முதலிய சந்தங்கள் எனப்படுகின்றன. இவ்வண்ணம் எழுத்துக்கள் மிகுமிடத்து 56. எழுத்துகள் கூடில் சாக்குவரி என்னுமொரு சந்த விசேட (பாட்டு விசேட) மாகின்றது, இம்மந்திரங்களில் எழுத்துக்கள் ஐம்பத் தாறினும் மிகுதிப்பாடு உள்ள தென்னையோ வெனின்? அது உபசர்க்கம், பாதம் என்பனகூடினதாலே யன்றி இயற்கையில் அல்ல வென்றுணர்க. அதில் முதலாவதிலுள்ள இரண்டு பாதமும் உபசர்க்கமாம். இரண்டாவதின் நடுவிலுள்ள இரண்டு பாதமும்உபசர்க்கமாம். எஞ்சிய ஏழுபாதங்களாலும், எட்டு எழுத்துக்களாலுமாகி ஐம்பத்தாறு எழுத்துக்கள் கொண்டு முடிவது சாக்குவரிச் சந்தமென்பது காண்க.

## ஈண்டுச் சந்தங்களின் முறையாமாறு

சந்தங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காயத்திரி | .... | ... | சந்தம் | எழுத்துக்கள் | 24 |
| உஷ்ணிக் | .... | .... | ,, | ,, | 28 |
| அநுஷ்டுப் | .... | .... | ,, | ,, | 32 |
| பிருகதி | .... | .... | ,, | ,, | 36 |
| பங்தி | .... | .... | ,, | ,, | 40 |
| திருஷ்டுப் | .... | .... | ,, | ,, | 44 |
| சகதி | ... | .... | ,, | ,, | 48 |

அதிச் சந்தங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| அதி சகதி .... | ... | சந்தம் | எழுத்துக்கள் | 42 |
| சக்குவரி .... | .... | ,, | ,, | 56 |
| அதிசக்குவரி ... | ... | ,, | ,, | 60 |
| அஷ்டி .... | .... | ,, | ,, | 64 |
| அதியஷ்டி .... | .... | ,, | ,, | 68 |
| திருதி .... | ... | ,, | ,, | 72 |
| அதி திருதி .... | ... | ,, | ,, | 67 |

விச்சந்தங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| கிருதி .... | ... | சந்தம் | எழுத்துக்கள் | 80 |
| பிரகிருதி ... | .... | ,, | ,, | 84 |
| ஆகிருதி ... | .... | ,, | ,, | 88 |
| விகிருதி .... | .... | ,, | ,, | 92 |
| சம்ற் கிருதி ... | ... | ,, | ,, | 96 |
| அதி கிருதி ... | .... | ,, | ,, | 100 |
| உத்கிருதி ... | ... | ,, | ,, | 104 |

இம் மந்திரங்களில் கோடிட்டிருப்பவைகள் பாத உபசர்க்கங்களெனக் கொள்க. இது சாயண பாடியத்திலுள்ளவற்றில் மிகுச் சுருக்கமாய்க்காட்டப் பட்டது.

# மகா நாம்நியார்ச்சிகம்

## மந்திரம்

### முதலாவது மூன்று.

३ १   ३ २   ३१२   ३ १ २

641. विदा मघवन् विदा गातुमनुशंसिषो दिशः ।

१ २   ३ २ २

शिक्षा शचीनाम्पते पूर्वीणां पुरूवसो ॥ १ ॥

விதா மகவந் விதா காதும நுசம்ஸிஷோ திசஃ ।

சிக்ஷா சசீநாம்பதே பூர்வீணாம் புரூவஸோ ॥

३२उ   ३ १ २ ३   २   २

642. आभिष्ट्वमभिष्टिभिः स्वाऽ३ न्नांशु ।

१ २   ३ १ २ ३ १ २   ३ १ २   ३ २

प्रचेतन प्रचेतयेन्द्र द्युम्नाय न इषे ॥ २ ॥

ஆபிஷ்ட்வ மபிஷ்டிபிஃ ஸ்வாऽ३ ந்நாம்சு ।

ப்ரசேதந ப்ரசேதயேந்த்ர த்யும்நாய ந இஷே ॥

३२उ ३ २ ३१र २र
643. एवा हि शक्रो राये वाजाय वज्रिवः ।
१२ ३२३ १ २ ३२३
शविष्ठ वज्रिन्नृञ्जसे मंहिष्ठ वज्रिन्नृञ्जसे ।
१२ ३ २ ३ ३१२
आयाहि पिब मत्स्व ॥ ३ ॥

---

ஏவா ஹி ஶக்ரோ ராயே வாஜாய வஜ்ரிவ: ।
ஶவிஷ்ட² வஜ்ரிந்ந்ருஞ்ஜஸே மம்ஹிஷ்ட² வஜ்ரிந்ந்ருஞ்ஜஸே ।
ஆயாஹி பிப³ மத்ஸ்வ ॥

அந்வயம்.

हे मघवन्!, विदाः, गातुं, विदाः, दिशः, अनुशंसिषः, पूर्वीणां, शचीनांपते!, हे पुरुवसो!, त्वं, आभिः अभिष्टिभिः, शिक्ष, स्वः न, अंशुः, हे प्रचेतन!, प्रचेतय, हे इन्द्र! नः, द्युम्नाय, इषे, हे वज्रिन्!, शक्रः, वज्रिवः, शविष्ठः, मंहिष्ठः, एवहि, राये, वाजाय, ऋञ्जसे, हे वज्रिन्!, आयाहि, पिब, मत्स्व ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे मघवन् | ஹே மக⁴வந் | தனமுடைய இந்திர ! நீ |
| विदाः | விதா³: | அனைத்தையு முணர்கின்றவன். |
| गातुं | கா³தும் | வேள்வித் தலைவன் அடையத் தக்க இடத்தையும் |
| विदाः | விதா³: | அறிகின்றவன். (ஆதலின்) |
| दिशः | தி³ஶ: | நல்வழியை |
| अनुशंसिषः | அநுஶம்ஸிஷ: | அறிவிப்பாயாக. |
| पूर्वीणां | பூர்வீணாம் | நிறைந்த |
| शचीनांपते ! | ஶசீநாம்பதே ! | அறிவு கருமங்களுக்கு இறைவ ! |
| हे पुरुवसो ! | ஹே புரூவஸோ ! | மிகுந்த தனமுடையோய் ! |
| त्वं | த்வம் | நீ |
| आभिः अभिष्टिभिः | ஆபி⁴: அபி⁴ஷ்டிபி⁴: | இப்போது செய்கின்ற வேண்டுகோட்களால் |
| शिक्ष | ஶிக்ஷ | (எமக்கு) தனத்தைக் கொடுப்பாயாக. |
| स्वः न | ஸ்வ: ந | சுவர்க்கம் போன்று |
| अंशुः | அம்ஶு: | வியாபகனாகிய |

| | | |
|---|---|---|
| हे प्रचेतन ! | ஹே ப்ரசேதந! | பேரறிவுடையோய்! நீ |
| प्रचेतय | ப்ரசேதய | எமது பக்தியை அறிவாயாக, |
| हे इन्द्र ! | ஹே இந்த்ர! | இந்திரனே! நீ |
| नः | ந: | எங்கட்கு |
| द्युम्नाय | த்யும்நாய | கீர்த்தி, அல்லது, தனத்தின் பொருட்டு அநுகூலத்தன் ஆவாயாக. |
| इषे | இஷே | அன்னத்தின் பொருட்டும் அநுகூலத்தன் ஆவாயாக |
| हे वज्रिन् ! | ஹே வஜ்ரிந்! | வச்சிரந் தாங்கியோய்! நீ |
| शक्रः | ஶக்ர: | சக்கிராயுத மேந்தியவனும் |
| वज्रिवः | வஜ்ரிவ: | பாவத்தை யொழிப்போனும் |
| शविष्ठः | ஶவிஷ்ட: | சிறந்த வலியுடையானும் |
| मंहिष्ठः एव हि | மம்ஹிஷ்ட: ஏவ ஹி | போற்றத் தக்கோனுமே யாகின்றாய். (இத்தகைய நீ) |
| राये | ராயே | தனத்தின் பொருட்டும் |
| वाजाय | வாஜாய | அன்னத்தின் பொருட்டும் |
| ऋञ्जसे | ருஞ்ஜஸே | எம்மால் வழிபடப் பெறுகின்றாய் |
| वज्रिन् ! | வஜ்ரிந்! | வச்சிர முடையோனே! நீ |
| ऋञ्जसे | ருஞ்ஜஸே | எம்மால் வழிபடப்படுகின்றாய் |
| आयाहि | ஆயாஹி | எமது வேள்விக்கு வருவாயாக. (வந்து) |
| पिब | பிப | சோமரசத்தை யருந்துவாயாக. (அருந்திக்) |
| मत्स्व | மத்ஸ்வ | களிப்புறுவாயாக. |

சாயண பாடியம்.

(இம் மூன்று மந்திரங்களும் குளகம்) ஈண்டு "வித³த்³வஸோ" என்பது முதலிய முற்பகுதியால் இருபதங் கூறப்படுகின்றது. 'வஸோ' என்பது தனமாதலின் தனமுடைய இந்திர! நீ, உணர்கின்றவன் என்பதாம். இதில் அறியத் தக்க செயப்படு பொருளின் விசேடங் கூறப்படாமையின் அனைத்தையும் உணர்வாயாக எனப் பொருள் படுகின்றது. இவ் வாற்றால் நீ முற்று முணர்கின்றவனாதலின் வேள்வித் தலைவன் அடையத் தக்க இடத்தையு முணர்வாயாக. (என்பது பெற்றாம்.) அல்லது, நின் பொருட்டுச் செய்கின்ற துதியாளிகளின் தோத்திரங்களை யுணர்வாயாக எனினுமாம். ஈண்டு 'கா³தும்' என்னும் மூலத்திய சொல், கீதம் என்னும் பொருண் மேனின்றது. அதன் பின்னர், வேள்வித் தலைவன் சுவர்க்கத்திற்குச் செல்கின்ற நல்ல மார்க்கங்களையும் அறிவிப்பாயாக. என்னு மிது உபசர்க்கத்தின் கூறெனப்படுகின்றது,

இனி, "ஶிக்ஷாஶசீநாம்" என்பது முதலிய பிற்பகுதியால் 'சாக்குவரம்' என்னு மொரு பாடல் விசேடங் கூறப்படுகின்றது. ஈண்டு 'ஶசீ' (சசி) என்பது கருமம், அல்லது, நுண்ணிய மதியாம். ஆதலின் அநேக கருமங்கட்கிறைவ! அல்லது, அநேக நுண்ணிய மதிக்கிறைவ! எனவாயிற்று. மிகுந்த தனமுடையோய்! இந்திரனே! நீ, இப்போது செய்கின்ற எமது தோத்திரங்களை முன்னிட்டுத் தனங்களைக் கொடுப்பாயாக என்பதாம். 'ஶிக்ஷ' (சிட்ச) என்பதற்கு (ஈகை) தானம் பொருள் என்று நிகண்டு 3-10-8 வது சூத்திரங் கூறுகின்றது. மிகுந்த தனமுடையோய்! என்னும் விளியால் தனம் வருவிக்கப்பட்டது.

'ஸ்வாஞாம்ஶா' என்றற் றொடக்கத்துப் பகுதியால் உபசர்க்கங் கூறப்படுகின்றது. இதில் 'ஸ்வ:, ந, ஸம்ஶா:' என மூன்று சொற்கள் இருக்கின்றன. நகாரம் உவமைப் பொருண் மேனின்றது. 'ஸம்ஶா' என்றது நிறைவாம். சுவர்க்கம் போன்று நிறைந்திருக்கின்ற இந்திர! என்பது திரண்ட பொருள். சிறந்த அறிவுடைய இந்திரனே! நீ, எங்களுடைய பக்தியை அறிந்து கொள்வாயாக என்பதாம்.

இனி, "த்யும்நாய ந ஊஷெ' என்பது முதலிய பகுதியால் இரண்டு பாகமுங் கூறப்படுகின்றது. 'த்யும்நம்' என்பதற்குக், கீர்த்தி, அல்லது, அன்னம் பொருளென யாஸ்க முனிவரின் நிருத்தங் கூறுகின்றது. கீர்த்தியின் பொருட்டு, அல்லது, தனலாபத்தின் பொருட்டு நீ உதவி செய்வாயாக என்பதாம். நீ தனங் கொடுப்பதில் வல்லுந ராதலின் தனங் கொடுப்பாயாக என்பது திரண்ட பொருள்.

இனி, "ராயெவாஜாய வஜ்ரிவ:" என்றற் றொடக்கத்துப் பகுதியால், சாக்குவர பாகங் கூறப்படுகின்றது. வச்சிராயுத மேந்திய இந்திர! அல்லது, செல்கின்ற இந்திர! நீ, தன லாபத்தின் பொருட்டும், அன்ன லாபத்தின் பொருட்டும் மகிழ்ச்சி யுடையோனுகுவை. ஈண்டு மகிழ்ச்சியுடையோனுகுவை என்பது எஞ்சி நின்றது. அற்புத வலியையுடையோய்! வச்சிராயுத முடைய இந்திர! நீ, எங்களால் தன லாபத்தின் பொருட்டுச் சாதிக்க (வழிபட) ப்படுகின்ருய். அல்லது, வியங்கோள் விகுதியாய்க் கொண்டு, எங்களைத் தனமுதலிய ஐசுவரிய முடையார்களாய்ச் செய்வாயாக எனினுமாம். வள்ளலாகிய போற்றத் தக்கோய்! எங்களால் நீ சாதிக்க (வழிபட) ப்படுகின்ருய்.

"சூயாஹி விபஊஸ்வ" என்பது முதலிய பகுதியால் அபரபாகங் (மற்ருெரு பாகங்) கூறப்படுகின்றது. நீ, இவ் வண்ணத்த ராதலின், எங்களுடைய வேள்விக்கு வருவாயாக. வந்து சோமரசத்தை யருந்துவாயாக, அருந்திக் களிப்புறுவாயாக என்பது பொருள். (12. 3)

## மந்திரம்

## இரண்டாவது மூன்று

३ २ ३ २ ३ २ ३ २ ३ १ २ ३ १ ३ २ ३ १ २

644. विदा राये सुवीर्य्यम्भवा वाजानां पतिर्वशाँ अनु ।

१ २ ३ २ ३ २र २र ३ १ २

मंहिष्ठ वज्रिन्नृञ्जसे यः शविष्ठः शूराणाम् ॥ १ ॥ (४)

விதா³ ராயெ ஸுவீர்யம்ப⁴வா வாஜாநாம் பதிர்வஶாம் அநு |

மம்ஹிஷ்ட² வஜ்ரிந்ந்ருஞ்ஜஸெ ய꞉ ஶவிஷ்ட²꞉ ஶூராணாம் ||

१र २र ३ १ २ ३ २उ ३ २

645. यो मंहिष्ठो मघोनामंशुर्न्न शोचिः ।

१ २ ३ १ २ ३ १ २ ३र २र

चिकित्वो अभि नो नयेन्द्रो विदे तमु स्तुहि ॥ २ ॥ (५)

யொ மம்ஹிஷ்டோ² மகோ⁴நாமம்ஶுர்ந ஶொசி꞉ |

சிகித்வொ அபி⁴ நொ நயெந்த்³ரொ விதெ³ தமு ஸ்துஹி ||

२ ३ २ ३ २उ ३१२ ३ १ २३१२

646. ईशे हि शक्रस्तमूतये हवामहे जेतारमपराजितम् ।

१ २ ३२३ २ ३ २३ १ २ ३ २३२

स नः स्वर्षदति द्विषः क्रतुश्छन्द ऋतं बृहत् ॥ ३ ॥ (६)

ஈஶெ ஹி ஶக்ரஸ்தமூதயெ ஹவாமஹெ ஜெதாரமபராஜிதம் |

ஸ ந꞉ ஸ்வர்ஷத³தி த்³விஷ꞉ க்ரதுஶ்ச²ந்த³ ருதம் ப்³ருஹத் ||

### அந்வயம்.

हे इन्द्र!, सुवीर्यं, विदाः, राये, वाजानां, पतिः, भव, वशान्, अनु, भव, हे मंहिष्ठ!, वज्रिन्!, शूराणां शविष्ठः ऋञ्जसे, यः, मघोनां, अंशुः न, शोचिः, हे चिकित्वः!, नः, नय, इन्द्रः, तमु, विदे, अभिस्तुहि, हि, शक्रः, ईशे, अपराजितं, जेतारं, तं इन्द्रं, ऊतये, हवामहे, सः, नः, द्विषः, अतिस्वर्षत् क्रतुः, छन्दः, ऋतं, बृहत् ॥

### பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र! | ஹெ இந்த்³ர ! | இந்திரனே ! நீ |
| सुवीर्यं | ஸுவீர்யம் | நல்ல வீரத்தை |
| विदाः | விதா³꞉ | அடையுமாறுசெய்வாயாக. |

| | | |
|---|---|---|
| राये | ராயெ | தனத்தைப் பாதுகாப்பதின் பொருட்டு |
| वाजानां | வாஜாநாம் | சேனைகட்குத் |
| पतिः | பதிஃ | தலைவன் |
| भव | பவ | ஆவாயாக. |
| वशान् | வஶாந் | விரும்பின பொருள்களைக் |
| अनु | அநு | குறித்துப் |
| भव | பவ | (கிடைக்குமாறு) பாவிப்பாயாக. |
| हे मंहिष्ठ ! | ஹெ மம்ஹிஷ்ட ! | பேராற்றலுடையோய் ! |
| वज्रिन् ! | வஜ்ரிந் ! | வச்சிர மேந்தினோய் ! |
| शूराणां | ஶூராணாம் | வீரர்களுக்குட் |
| शविष्ठः | ஶவிஷ்டஃ | எவன் சிறந்த வீரனாய் |
| ऋञ्जसे | ருஞ்ஜஸெ | வழிபடப் பெறுகின்றானோ, |
| यः | யஃ | யாதொருவன் |
| मघोनां | மகொநாம் | தனமுடையார்களுக்குட் போற்றத்தக்கானோ, |
| अंशुः न | அம்ஶுஃ ந | சூரியன் போன்று |
| शोचिः | ஶொசிஃ | புநிதஞ் செய்கின்றவனோ, |
| हे चिकित्वः ? | ஹெ சிகித்வஃ ! | பேரறிவுடையோய் ! |
| नः | நஃ | எங்கட்குத் |
| नय | நய | தன முதலியவைகளை கொடுப்பவனோ, |
| इन्द्रः | இந்த்ரஃ | சிறந்த ஐசுவரிய முடையவனோ, |
| तमु | தமு | அவ் விந்திரனையே |
| विदे | விதெ | அனைவரும் மிகுந்த தனமுடையானென அறிகின்றனர் |
| अभिस्तुहि | அபிஷ்டுஹி | (எனது ஆன்மாவே நீ) அவனைத் துதிப்பாயாக. |
| हि | ஹி | ஏதனால் |
| शक्रः | ஶக்ரஃ | பேராற்றலுடையோனாய். |
| ईशे | ஈஶெ | அனைத்தையுஞ் செலுத்துகின்றவன் எவனோ, அதனால் |
| अपराजितं | அபராஜிதம் | பிறரால் வெல்லப்படாதோனும் |
| जेतारं | ஜெதாரம் | பகைவரை வெல்லுஞ் சீலமுடையானுமாகிய |
| तं इन्द्रं | தம் இந்த்ரம் | அவ் விந்திரனை |
| ऊतये | ஊதயெ | எமது பாதுகாப்பின் பொருட்டு |

| | | |
|---|---|---|
| हवामहे | ஹவாமஹெ | யாம் அழைக்கின்றோம். |
| सः | ஸ: | அவ் விந்திரன் |
| नः | ந: | எமது |
| द्विषः | த்விஷ: | துவேஷிகளை |
| अतिस्वर्षत् | அதிஸ்வர்ஷத் | முழுது மொழிப்பானாக. |
| क्रतुः | க்ரது: | (எமது) கருமங்களும், |
| छन्दः | ச2ந்த3: | சந்தங்களும், |
| ऋतं | ருதம் | சோமரசமும், |
| बृहत् | ப்3ருஹத் | பெருகுக. |

சாயண பாடியம்

ஈண்டு "விஶ்வாஸாயெஸஹ்வீயஞ்" என்றற் றொடக்கத்துப் பகுதியால் இரண்டாவது இருக்கில் முதலாவதாகிய இருபதங் கூறப்படுகின்றது. இந்திர! நீ நற்புத்திரனைப் பெறுமாற்றலை, அல்லது, போர் முதலியவைகளில் தோல்வி யடையாத வீரத்தைக் கொடுப்பாயாக. சேனைகளுக்கு, அல்லது, வன்மைகளுக்கு நீ இறைவனாகின்றாய். வேண்டிய பொருளை, அல்லது, உன்வசமாயிருக்கின்ற வேள்வித் தலைவனை (நலமாகுமாறு) பாவிப்பாயாக.

இனி, "ஶஂஹிஷ்ட வஜ்ரிந்" என்பது முதலிய பகுதியால், தனது பாகங் கூறப்படுகின்றது. அற்புத வன்மை யுடையோய்! நீ, தனமுடையார்களுட் சிறந்த வள்ளலாதலின், தனத்தின் பொருட்டு நாங்கள் நின்னை வழிபடுகின்றோம் என்பதாம்.

"ஸஂபாஹுஶோசிஃ" என்றற் றொடக்கத்துப் பகுதியால் உபசர்க்க பாகங் கூறப்படுகின்றது. சூரியனொளி போன்று முழுச் சோதி யுடையவன், பரிசுத்தன். இனிப், பிரத்தியட்சமாகிய தோத்திரம்:—சூரியவுணர்வுடைய இந்திர! நீ, எங்கட்கு தனத்தைக் கொடுப்பாயாக.

இனி, "உக்ராவிஶேதஶஹ்ஸூஹி" என்பது முதலிய பகுதியால் இரண்டு பாகங்களு மொருங்கே கூறப்படுகின்றது. இந்திரன், மேம்பட்ட ஐசுவரிய முடையவன் என, அனைவராலும் அறியப்படுகின்றான். அவ் விந்திரனையே துதிப்பாயாக வென இந்த இருடியானவர் தன தான்மாவையே கட்டளை யிட்டுக்கொள்கின்றார். சத்துருவைக் கொல்கின்ற இந்திரன் அனைத்தையுஞ் செலுத்துகின்றானாதலின், அவனையே துதிப்பாயாக வென இயைபுபடுகின்றது காண்க.

“ ஸாதயே ஹவாமஹே ” என்றற் றொடக்கத்துப் பகுதியால் சாக்குவ்ர மென்னு மொரு பாடல் விசேடங் கூறப்படுகின்றது. அவ் விந்திரனை, எங்களுடைய பாதுகாப்பின் பொருட்டு அழைக்கின்றோம் என்பதாம். எவ்வண்ணத்தனை யெனின்? போர்களிற் சத்துருவை வெல்லுஞ் சீல முடையானை. இதனால், பிறரால் தோல்வி யடையாத அவ் விந்திரன் எங்களுடைய பகைவர்களை முழுதா மொழிப்பானாக என்பது பெற்றாம். அல்லது, எங்களைத் சத்துருக்களினின்றுங் கடக்கச் செய்வானாக எனினுமாம். அது பற்றியே “ ஸ ந: பர்ஷத் ” என அநேகம் இருக்கோதுவார்கள் கூறுகின்றன ரென்க.

இனி, “ க்ருதாஹூங் ஈதம்வ்ருஹஸ் ” என உபசர்க்க பாகங் கூறப்படுகின்றது. சத்துருக்களைக் கொன்றதன் பின்னர், எங்களால் அநுட்டிக்கத் தக்க கருமங்களும், காயத்திரி முதலிய சத்திரம் என்னுங் கீதங்களும், சோமரசமும், அல்லது, உண்மையாகிய கரும பயனும் பெருகுவதாகுக. ஈண்டு ஆகுக என்பது எஞ்சி நின்றது (4-5-6)

## மந்திரம்

### மூன்றுவது மூன்று

२ ३ १२ ३ १२ ३ १ २ ३ १ २

647. इन्द्रं धनस्य सातये हवामहे जेतारमपराजितम् ।

१ २ ३ २ ३ २ ३ १ २ ३ २ ३ १ २

स नः स्वर्षदतिद्विषः स नः स्वर्षदतिद्विषः ॥ १ ॥ (७)

இந்த்ரம் தநஸ்ய ஸாதயே ஹவாமஹே ஜேதாரமபராஜிதம் ।

ஸ ந: ஸ்வர்ஷததித்³விஷ: ஸ ந: ஸ்வர்ஷததித்³விஷ: ॥

१२ ३ १ २ ३ २र २र

648. पूर्वस्य यत्ते अद्रिवोंऽशुर्म्मदाय ।

३ २र २र ३१ २

सुम्न आधेहि नो वसो पूर्तिः शविष्ठ शस्यतें ।

३ २उ ३ २ २१र २र ३ १२

वशी हि शक्रो नूनन्तन्नव्यं सन्न्यसे ॥ २ ॥ (८)

பூர்வஸ்ய யத்தே அத்³ரிவோம்ஶுர்மதா³ய ।

ஸும்ந ஆதே⁴ஹி நோ வஸோ பூர்த்தி: ஶவிஷ்ட² ஶஸ்யதே ।

வஶீ ஹி ஶக்ரோ நூநந்தந்நவ்யம் ஸந்ந்யஸே ॥

३१२ २२ ३ २ १
649. प्रभो जनस्य वृत्रहन्त्समर्य्येषु ब्रवावहै ।
२ ३ २उ ३ १ २ ३ १ २ ३ २ ३ १२
शूरो यो गोषु गच्छति सखा सु शेवो अद्वयुः ॥ ३ ॥ (९)

പ്രഭൊ ജനസ്യ വൃത്രഹന്ത്സമര്യെഷു ബ്രവാവഹൈ ।
ശൂരൊ യൊ ഗൊഷു ഗച്ഛതി സഖാ സുശെവൊ അദ്വയുഃ॥

அங்வயம்.

जेतारं, अपराजितं, इन्द्रं, धनस्य सातये, हवामहे, सः, नः, द्विषः, अतिस्वर्षत्, हे अद्रिवः !, पूर्वस्य, ते, यत्, हे इन्द्र !, अंशुः, मदाय, हे वसो !, नः, सुम्ने, आधेहि, हे शविष्ठ !, (तव) पूर्त्तिः, शस्यते, हि, शक्रः, वशी, नव्यं, नूनं, सन्न्यसे, हे प्रभो !, हे वृत्रहन् !, जनस्य अर्येषु, सम्ब्रवावहै, शूरः, गोषु, सखा, सुशेवः, अद्वयुः ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| जेतारं | ജെതാരം | பகைவரை வெல்வோனும் |
| अपराजितं | അപരാജിതം | பிறரால் வெல்லப்படாதோனுமாகிய |
| इन्द्रं | ഇന്ദ്രം | இந்திரனை, |
| धनस्य | ധനസ്യ | தனத்தினுடைய |
| सातये | സാതയെ | இலாபத்தின் பொருட்டு |
| हवामहे | ഹവാമഹെ | அழைக்கின்றோம். |
| सः | സഃ | அவ் விந்திரன் |
| नः | നഃ | எங்களுடைய |
| द्विषः | ദ്വിഷഃ | துவேஷிகளை |
| अतिस्वर्षत् | അതിസ്വർഷത് | (அவன்) முழுதும் நாசஞ் செய்வானாக. |
| हे अद्रिवः ! | ഹെ അദ്രിവഃ ! | மலைகளை யுடைய இந்திர ! |
| पूर्वस्य | പൂർവസ്യ | பழைமையாகிய |
| ते | തെ | உனக்கு |
| यत् | യത് | யாதொருதனமுண்டோ, அதைக் கொடுப்பாயாக. |
| हे इन्द्र ! | ഹെ ഇന്ദ്ര ! | இந்திரனே ! |
| अंशुः | അംശുഃ | சோமக் கொடித் துணுக்குகளின் இரசம் |

| | | |
|---|---|---|
| मदाय | மதாய | மதத்தின் பொருட்டு ஆகின்றது. |
| हे वसो ! | ஹே வஸோ ! | வாழ்வதற்குக் காரணமானாய் ! |
| नः | ந: | எங்களைச் |
| सुम्ने | ஸும்நே | சுகத்தில் |
| आधेहि | ஆதேஹி | நிறுத்துவாயாக. |
| हे शविष्ठ ! | ஹே ஶவிஷ்ட ! | பேராற்ற லுள்ளோய் ! |
| (तव) पूर्त्तिः | (தவ) பூர்த்தி: | (நினது) ஈகை |
| शस्यते | ஶஸ்யதே | அனைவராலும் போற்றப்படுகின்றது. |
| हि | ஹி | எக்காரணத்தால் |
| शक्रः | ஶக்ர: | வல்லுநனே, |
| वशी | வஶீ | அனைத்தையுஞ் செலுத்துகின்றனையோ, அக் காரணத்தால் |
| नव्यं | நவ்யம் | புதியோனாகிய வுன்னை |
| नूनं | நூநம் | உறுதியாக |
| सम्म्यसे | ஸம்ந்யஸே | (மனதில்) நிலைநாட்டுவேனாக. |
| हे प्रभो ! | ஹே ப்ரபோ ! | சனங்களுக்குத் தலைவ ! |
| हे वृत्रहन् ! | ஹே வ்ருத்ரஹந் ! | விருத்திராசுரனைக் கொன்றோய் ! |
| जनस्य | ஜநஸ்ய | மனிதரின் |
| अर्येषु | அர்யேஷு | வேள்வி முதலிய கருமங்களில் |
| संब्रवावहै | ஸம்ப்ரவாவஹை | (நாமிருவரும்) கூடிப் பேசுவோமாக. |
| शूरः | ஶூர: | வல்லுநன் |
| गोषु | கோஷு | பசுக்களைக் கொண்டுவரு மிடத்தில் |
| सखा | ஸகா | நண்பனானவன் |
| सुशेवः | ஸுஶேவ: | முழுச் சுகங் கொடுப்பவன். |
| अद्वयुः | அத்வயு: | ஒருவனே சத்திய வடிவனானவன். |

## சாயண பாடியம்.

ஈண்டு "உத்ரம் ய நஸ்ய" என்றற் றொடக்கத்து மந்திரக் கூற்றால் மூன்றாவது இருக்கின் முதலாவது இருபதங் கூறப்படுகின்றது. தன

லாபத்தின் பொருட்டென்க. எஞ்சியது வெளிப்படை. (ஈண்டு வெளிப் படை யென்பது பகைவரை வெல்வோனும், பிறரால் வெல்லப்படா தோனுமாகிய இந்திரனைத் தனலாபத்தின் பொருட்டு அழைக்கின்றோம் என்பதாம்.)

இனி, "ஸ ந: ஸுக்ஷத்ர: ஸுதிக்ஷ:" என்பது முதலிய மந்திரப் பகுதி யாற் சாக்குவர பாகங் கூறப்படுகின்றது. அவ் விந்திரன், எங்களுடைய துவேஷிகளை யொழிப்பானாக. பிறர் தாம் துவேஷப்படுகின்றிலர். அங் ஙனமாயினும், எங்களால் அவர்கள் துவேஷிக்கத் தக்கார்கள். ஆதலின் அவர்களை நாசஞ் செய்வாயாக. யாண்டும் வேதங்களில் "எவன் எங் களைத் துவேஷிக்கின்றானோ" "எவனை நாங்கள் துவேஷிக்கின்றோமோ" என்பது முதலியவைகளில் துவேஷிப்போன் துவேஷிக்கத் தக்கான் என் பவர்களை விநாசப்படுத்துமாறு வேண்டப்படுகின்றமை காண்க. மலையுடை யோய்! ஈண்டு 'அத்ரி' என்றது மலை. இந்திரன் மலைகளைச் சிதைத்தவனாத லின் இந்திரனுக்கும் மலைகளுக்கும் சிதைத்தல், சிதைக்கப்படுதலாலாகிய சம் பந்தமாம். அல்லது, ஆதரித்தலினால், அல்லது, அசுரர்களைக் காத்ததால், அல் லது, தான் பிறரால் கவரப்படாமையால் 'அத்திரி' என்றது வச்சிரமாம். அதை யுடையான் எனினுமாம். இந்திர! பழைமையாகிய உன்னுடைய தனம் யாதொன் றுண்டோ, அதை எங்கட்குக் கொண்டுவந்து கொடுப் பாயாக. ஈண்டுக் கொடுப்பாயாக என்பது எஞ்சி நின்றது.

மற்றும், "ஸம்பா உக்ஷாய," என்பது முதலிய மந்திரக் கூற்றால் அபரபாகம் (மற்றொரு பாகம்) கூறப்படுகின்றது. இந்திரனே! நீ, சோமக் கொடியின் யாதொரு துண்டுகள் உண்டோ அவைகளினுடைய இரசம் (நினது) களிப்பின் பொருட்டு ஆகுக. எங்களாற் கொடுக்கப் பெற்ற சோமரசம் உனது மதத்தின் பொருட்டா மாதலின் வாழ்வதற்குக் காரண மாகிய இந்திர! நீ, எங்களைச் சுகத்தில், அல்லது, தனத்தில் நிறுத்துவா யாக.

"வர்த்திஷ்: பவிஷபவஸ்யதே," என்பது முதலிய மந்திரக் கூற் றால் தனது பாகமும், பிறபாகங்களும் ஒருங்கே கூட்டிக் கூறப்படுகின்றன. போற்ற லுடைய இந்திர! உன்னுடைய கொடை, அனைவராலும் போற்

றப்படுகின்றது. நீ வல்லுநன், அனைத்தையுஞ் செலுத்துவோன், ஆதலின் உனது நன்கொடை போற்றப்படுகின்றதென்க. அல்லது, தனத்தை யேற்றுக் கொள்வோன். நன்கொடையில் ஆற்றல் மிக்கோன். ஆதலின் நினது வள்ளற் றன்மை போற்றப்படுகின்றதென்க.

"நூ ஒந ஞுஷவஸ்ு," என்பது முதலிய மந்திரக் கூற்றால் சாக்குவர பாகங் கூறப்படுகின்றது. சனங்களனைத்திற்கு மிறைவ! விருத்திரனாகிய பகைவனைக் கொன்றோய்! பழையோனாகாத (புதியனாகிய) தன்மை வாய்ந்த இந்திரனாகிய உன்னை, யான் ஒருதலைபாக நன்கு நிலைநாட்டுவேன். அதாவது இவ் வேள்விக் கருமத்தில் அவிகளை யுண்போனாகத் தாபிப்பேன் என்பது பொருள். அல்லது, இந்திர! பிறரால் கேடுறாதபடி எங்களால் வழிபடப்படுகின்றாய் எனினுமாம். மற்றும், வேள்விக் கருமங்களில் நாமிருவரும் பேசிக்கொள்வோமாக. எல்லா வேள்வித் தலைவர்கட்கும் இந்திரன் வெளிப்படுகின்றான் என்பதைக் குறிப்பிடுவதற்கு கூடிப் பேசுந் தன்மையா மென்றுணர்க.

"ஶூ ஒரா யொமொஷு" என்றற் றொடக்கத்து மந்திரக் கூற்றால் உபசர்க்க பாகங் கூறப்படுகின்றது. இந்திரன் வல்லுநன், சத்துருக்களிடத்திலிருந்து பசுக்களைக் கொண்டு வருவதற்குச் செல்கின்றவனாகின்றான், அவன் எத் தன்மைய னெனின்? பெரு நட்பாளனும், இது கொண்டேமுழுச் சுகங் கொடுப்போனும், மெய்ம்மை பொய்மைகள் என்னும் இரண்டற்றோனும், அதாவது சத்திய வடிவன் என்பது பொருள். அல்லது, உள்ளத்திலோ, அல்லது, வாக்கிலோ, வேறுபாடிலாதோனும், அல்லது, தனக்கொப்பில்லாத் தனியனுமாவன். மற்றும், இவற்றால் வேள்வித் தலைவனுக்கும் இந்திரனுக்கு முள்ள, பேச்சுமுறைமை கூறப்படுகின்றது. இந்திர! வேள்வித் தலைவன் தட்சணையாகப் பசுக்களை யளிக்குமிடத்து உதாரனாய் எழுகின்றான். எவ்வண மெனின்! "எல்லா வற்றையுங் கொடுக்கின்றேன்" என, அல்லது, கலப்பதன்பொருட்டுப் பால் கொண்டு வருவதற்குப் பசுக்களிடத்துச் செல்கின்றான் எனவுமாம். எனது குணத்தை நீ தேவர்களுக்குட் சொல்வாயாக. இந்திரனாகிய நான், தோத்திரங்களில் நண்பனா யிருந்து இந்திரன் சுகங் கொடுக்கின்றான் என, நினது குணத்தை, ஏனைய துதியாளிகளிடத்துச் சொல்கின்றேன் என்பதாம். இவ்வாறு மந்திரங்கட்கு உரைகூறப்பட்டது. (7-8-9)

## ஐந்தாவது புரீஷபதங்கள்

३ २ ऽऽऽऽऽऽ २ ३ १ २ ३ १ २
650. एवाह्ये ऽ३ऽ३ऽ३ व एवाꣳ ह्यग्ने एवाहीन्द्र ।
३ १ २ २ २ ३ १ २ २ २
एवाहि पूषन् एवाहि देवाः ॥ ४ ॥ (१०)

ஏவாஹொ ஊஊஊ வ ஏவாம் ஹ்யக்னே ஏவாஹீந்த்ர ।
ஏவாஹி பூஷந் ஏவாஹி தேவா: ॥

அந்வயம்.

हे इन्द्र !, एवाहि, हे अग्ने !, एवाहि, हे इन्द्र !, एवाहि, हे पूषन् !, एवाहि, हे देवाः !, एवाहि ॥

பதவுரை.

| | | |
|---|---|---|
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | இந்திரனே ! நீ |
| एवाहि | ஏவாஹி | உண்மையாய் இத்தன்மையனே யாவாய். அல்லது, வேள்வியைக் குறித்து வருகுதி. |
| हे अग्ने ! | ஹே அக்னே ! | தேவர்களுக்குள் முதல்வ ! |
| एवाहि | ஏவாஹி | உண்மையில் இக்குணத்தனே நீ, அல்லது, வேள்விக்கு வருவாயாக. |
| हे इन्द्र ! | ஹே இந்த்ர ! | உயர் திருவாள ! |
| एवाहि | ஏவாஹி | இத்தகைய குணமுடையவனே நீ, அல்லது, வேள்விக்கு வருவாயாக. |
| हे पूषन् ! | ஹே பூஷந் ! | உலகைப் பரிபாலிப்போய் ! |
| एवाहि | ஏவாஹி | இத்தன்மைய குணமுடையவனே நீ, அல்லது, வேள்விக்கு வருவாயாக. |
| हे देवाः ! | ஹே தேவா: ! | தேவர்களின் வடிவத்தோய் ! |
| एवाहि | ஏவாஹி | இத்தன்மைத்தாய குணமுள்ளவனே நீ, அல்லது, வேள்விக்கு வருவாயாக. |

## சாயண பாஷியம்.

இனி புரீஷ பதங்களுக்கு உரை கூறப்படுகின்றது. அவைகளனைத்தும் ந்திரனைப் பற்றியவைகளேயாம். அத்தன்மைய குணமுடைமையின் ங்க. ஈண்டுள்ள மூன்றாவது அக்கினி முதலிய சொற்களாலும் இந்திரனே வழைத்துப் போற்றப்படுகின்றான் என்பதாம்.

அவற்றுள், "ஏவாஹ்யேவா" என முதலாவது பதங் கூறப்படுகின்து:—இந்திரனே நீ, உண்மையாய் இத்தன்மைய குணமுடையவனே கின்றாய். அல்லது, 'ஏவ' என்னுஞ் சொல் 'நட' எனப் பொருள் படலின் து வேள்வியைக் குறித்தே வருபவனாகுவை எனவுமாம். மறித்தும் ரித்தும் கூறியுள்ள தேற்றம் அன்பின் பொருட்டாமென்க.

"ஏவாஹ்யக்நே" என இரண்டாவது பதங் கூறப்படுகின்றது:—அக் கினியே! அதாவது, தேவர்கட்கெலாம் முன் செல்வோய்! அல்லது, அக் கினி வடிவோய்! இந்திர! நீ, உண்மையில் இத்தன்மைய குணமுடைய னேயாகின்றாய். அல்லது, வேள்வியை முன்னிட்டு வருபவனுவாய் என் தாம்.

"ஏவாஹீந்த்ர" என மூன்றாவது பதங் கூறப்படுகின்றது. இந்திரனே! மிகுந்த ஐசுவரிய முடையோனாகின்றாய். அல்லது, ஒளியால் உலகை ளக்கலின் இந்திரன், அல்லது, உலகனைத்தையும் முதலிற் பார்த்தலின் இந் ரனாகின்றாய். "இதைப் பார்த்தனன் ஆதலின் இந்திரன் என்னும் பெயர்" ன ஐதரேய வுபனிடதமுங் கூறுகின்றது. இத்தன்மைய குணமுடைய னேயாவாய். அல்லது, வேள்விக்கு வருபவனுவாய்.

"ஏவாஹி பூஷந்நிதி" என நான்காவது பதங் கூறப்படுகின்றது. லகைப் பாதுகாப்போனும், அல்லது, சூரிய வடிவனுமாகிய இந்திர! நீ இத்தன்மைய குணமுடையவனேயாவாய். அல்லது, வேள்விக்கு வருபவ னாகுவை.

"ஏவாஹி தேவா ஊதி" என ஐந்தாவது பதங் கூறப்படுகின்றது. தேவர்காள்! அதாவது இந்திரன் முதலியோர்களே! நீவிர், எல்லாத் தேவர்

களின் வன்மை வடிவாய் இந்திரன் இருக்குங்கால் இந்திரனையே அநேகமு
அழைக்கப்படுகின்றது. இந்திரனே! நீ, இத்தன்மைய குணமுடையவ
யாகின்றாய், அல்லது, எனது வேள்வியைக் குறித்து வருவோனுவாய். (

வித்தியாதீர்த்த மகேசுரர் வேதப் பொருளை விளக்குவதால் உள்ளத் திரு
யோதுக்கிப் புருடார்த்தங்கள் நான்கையுங்
கொடுப்பாராக.

மகா நாம்நியார்ச்சிகம்

முற்றும்.

சந்த ஆர்ச்சிகமாகிய பூர்வார்ச்சிகமும்

முடிந்தது.

சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!! சுப்ரமண்யோம்!

வேதாகம ஞான விநோதன் திருவடி வாழ்க.

எவரெடி பிரஸ், நெ. 34, ஹண்டர்ஸ் ரோட், சூளை, மதராஸ்,

